# ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்

விளக்கியவர்

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்



प्रज्ञानं ब्रह्म

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

திருப்பராய்த்துறை-639 115, திருச்சி மாவட்டம்

1993

3-4

# முகவுரை

பரம்பொருள் ஒன்று; அதற்குப் பெயர்கள் பல. சிவன், விஷ்ணு, அம்பிகை, கணபதி, கார்த்திகேயன், சூரிய நாராயணன் ஆகிய ஆறு மூர்த்திகள் ஆறு மதங்களுக்கு உரிய தேவதைகள் ஆகின்றார்கள். எனினும் சொரூபத்தில் இந்த ஆறு தெய்வங்களும் ஒன்றேயாம். இவர்களுள் ஒவ்வொருவருக்கும் ஆயிரம் திருநாமங்கள் அமைந்திருப்பது பாராட்டுதற்குரியதாம். 'ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றும் இல்லார்க்கு ஆயிரம் திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ' என்பது ஆப்த வாக்கியம்.

அலைந்து திரியும் பாங்குடையது மனது. அத்தகைய மனதைக் கட்டிப்பிடிப்பதற்கு உற்ற உபாயங்களாக அமைந்திருப்பவை அந்தந்த தெய்வத்துக்குரிய சஹஸ்ர நாமங்களாம். மனதை அதன் போக்கில் விட்டு விடவேண்டும். அப்படிச் செய்வதால் மகிழ்வுடன் தன் செயலில் அது ஈடுபடுகிறது. அப்படி விடுதலிலும் கோட்பாடு ஒன்று உண்டு. வழிபடுகடவுளின் வெவ்வேறு மகிமைகளை மாறி மாறிச் சொல்லுவதன் வாயிலாக அம்மனது தன்னையறியாது நல்வழியில் திரும்புகிறது. இங்ஙனம் தன் போக்கிலேயே மனது தெய்வீக நல்லுணவை ஏற்று வருகிறது.

பண்படாத பாமரன் ஒருவனுக்குத் தன் குழந்தையின் திறமைகளையெல்லாம் எடுத்துச் சொல்லுமிடத்து மகிழ்வுடன் அச்சொற்களுக்கு அவன் செவி சாய்க்கிறான். அதே பாங்கில் கீழ்நிலையில் உள்ள மனதுக்குத் தன் தெய்வத்தைப் பற்றிய மகிமைகளையெல்லாம் விஸ்தரித்து விளக்குங்கால் அவைகளைக் கேட்பதில் அது படிப்படியாகப் பண்பாடு அடைகிறது. இதுவே பரம்பொருளுக்குரிய நாமார்ச்சனையில் அடங்கியுள்ள சிறப்பாம்.

பரவஸ்து வேறு, பிரபஞ்சம் வேறு அன்று. பஞ்சேந்திரியங்கள் எனப் பகரப்படும் புறக்கருவிகள் வாயிலாகவும், மனம் புத்தி எனப் பகரப்படும் அந்தக்கரணங்கள் வாயிலாகவும் ஒரு பொருள் நுகரப்படுமிடத்து அது இப்பிரபஞ்சம் எனப் பெயர் பெறுகிறது. அதே பொருளை ஞானக்கண் கொண்டு காணு

மிடத்து அது கடவுள் எனப் பெயர் பெறுகிறது. ஆதலால் கடவுளைக் காண விரும்புகிறவர்கள் தங்கள் அந்தக்கரணத்தை அல்லது மனதைத் தூயதாகத் திருத்தியமைக்கக் கடமைப்பட்டிருக்கின்றனர். மனது தூயதாக ஆக பிரபஞ்சத்தின் காட்சி மேலானதாகத் திருந்தியமைகிறது. ஆத்ம சாதகன் விக்ரக ஆராதனையில் துவங்குகிறான். அவன் பண்பாட்டில் மேலே வருவதற்கேற்ப ஜடப்பொருளால் அமைந்த விக்ரகம் உயிர் ததும்பியதாக அவனுக்குக் காட்சி தருகிறது. இந்தப் பேறு அதனை ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் பெற்றுள்ளார்.

அறிந்துள்ள ஒன்றின் துணைகொண்டு மேலும் அறிய வேண்டியவைகளை எளிதில் அறிந்து கொள்ளலாம். அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம். பெற்ற தாயை ஜங்கமமாய் உள்ள உயிர்கள் அனைத்தும் நன்கு அறிகின்றன. அந்தத் தாயிணக்கத்தைத் தொடர்ந்து கடைப்பிடிப்பது மனிதனுக்கே சாத்தியம். அப்படிச் செய்வதால் அவனுடைய மனது தூயதாகத் திருந்தியமைகிறது. மனது தூயதாவதற்கு ஏற்ப பிரபஞ்சத்தின் காட்சியும் பரம்பொருள் காட்சியாகத் திருந்தியமைகிறது. முற்றிலும் பண்பட்டுள்ள மனதுக்கு ஞானக்கண் என்னும் பெயர் வழங்கப்பட்டுள்ளது. மானுட ஜன்மத்தை நல்வழியில் திருப்பி வாழ்வாங்கு வாழ்ந்து வருபவர்களுக்கு ஞானக்கண் பெறுவது மிக எளிதாம்.

வாழ்வைத் திண்ணியதாகவும் பயன்படுவதாகவும் ஆக்க வல்லது யோக சாஸ்திரம். அத்தகைய யோக சாஸ்திரங்களுள் தலை சிறந்ததாகத் திகழ்வது பகவத்கீதை. அதே விதத்தில் மனதைப் பண்படுத்துவதில் லலிதா சஹஸ்ர நாமத்துக்கு நிகரான நூல் ஏதும் இல்லை. நாள்தோறும் நூறு நாமங்களையாவது பொருளுணர்ந்து பாராயணம் பண்ணுமிடத்து ஆத்ம பரிபாகம் தானாகவே படிப்படியாக வந்தமைகிறது. அவரவர் கடைப்பிடிக்கவேண்டிய சாதனை முறைகளும் இந்த நாமங்களுள் அடங்கியிருக்கின்றன. அன்னையின் அருளை முன்னிட்டு அவைகளை ஏற்று ஆத்ம சாதகர்கள் பயனடைந்து வருவார்களாக!

சுவாமி சித்பவானந்த

श्रीचक्रम्

# SRI CHAKRAM



बिन्दुत्रिकोणवसुकोणदशारयुग्म मन्वस्रनागदलसंयुतषोडशारम् ।
वृत्तत्रयं च धरणीसदनत्रयं च श्रीचक्रमेतदुदितं परदेवतायाः ॥

# ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்

**श्री माता—ஸ்ரீ மாதா-அருள் அன்னை.** 1

உள்ளது ஒரு பொருள். ஞானியினுடைய காட்சியில் அப் பொருள் தெய்வமாக இலங்குகிறது. மற்ற உயிர் வகைகளின் காட்சியில் அதே பொருள் உலகமாக இலங்குகிறது. ஆக, கடவுள் வேறு உலகம் வேறு அன்று. காண்போனுடைய பரிபாகத்துக்கேற்ப ஒருபொருள் பரவஸ்துவாகவோ பிரபஞ்சமாகவோ காட்சி கொடுத்து வருகிறது.

உலகிலுள்ள உயிர்வகைகளைத் தோற்றுவித்து வளர்த்து வருவது தாயின் செயல். தாய்மையின் அரிய பெரிய செயலை ஸ்தாவர உலகில் விதைகளை உண்டுபண்ணுவதில் காணலாம். வண்டு, புழு, பூச்சி முதலிய ஜங்கமங்கள் அவ்வவற்றின் இனத்தை உண்டுபண்ணுவதில் எடுத்துக்கொள்கின்ற ஊக்கத்தினின்று தாயின் அரிய செயல் இன்னொரு போக்கில் வெளியாகிறது. பறவைகள் கூடு கட்டி, முட்டையிட்டு, அடைகாத்து, குஞ்சைத் தோற்றுவிப்பதிலும் தாய்ப் பறவை தானே உணவை உண்டு சிறிது செமித்து குஞ்சின் வாயில் ஊட்டுவதினின்றும் தாயின் தெய்விகச் செயல் வெளியாகிறது. அமைதியுற்று வாழ்வனவும் துஷ்டத்தனம் வாய்ந்தவைகளும் ஆகிய விலங்குகள் குட்டிபோட்டுப் பாலூட்டிப் பண்புடன் அவைகளை வளர்ப்பதினின்றும் அவ் விலங்குகளிடம் வாய்த்துள்ள தாய்மையின் தெய்விகம் வெளியாகிறது. இனி, மானுட வர்க்கத்தைப் பற்றிப் பேசவேண்டிய அவசியமில்லை. இனத்தைப் பெருக்குதலும் தெய்வ வழிபாடும் மானுட உலகில் கிட்டத்தட்ட ஒரே சிறப்பைப் பெறுகின்றன. காலமெல்லாம் தாயைப் பேணுவது மானுட உலகில் தெய்வ வழிபாட்டுக்கு நிகரானது.

உலகிலுள்ள உயிர்வகைகளுக்குள் தாய்க்கும் சேய்க்கும் உள்ள இணக்கம் கிட்டத்தட்ட தெய்வ இணக்கத்துக்கு நிகராகிறது. ஆதலால் மானுட உலகில் தெய்வ வழிபாடு தாய் வழிபாட்டில் துவங்குகிறது. இனி, தாயாகத் திகழும் தெய்வமோ அந்தந்தப் படித்தரத்தில் அமைந்துள்ள உயிர் வகைகளுக்கு ஏற்ற முறையைக் கையாண்டு அவைகளைப் பேணி வருகின்றது.

அருள் துறையில் தேவையுள்ள உயிர் வகைகளுக்கு அத் துறையிலும் ஏற்ற பாதுகாப்பையும் வசதிகளையும் நல்கி அன்ன வர்களை அன்னை பராசக்தி பரிபாலித்து வருகிறாள். இதற்கு அண்மையில் இம்மண்ணுலகில் தோன்றி முற்றிலும் அன்னை யின் அருளைச் சார்ந்திருந்த ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ச தேவரின் திவ்விய வாழ்க்கை சிறந்ததோர் எடுத்துக்காட்டாகிறது.

ஆக, உயிர்களைத் தோற்றுவிப்பதில் துவங்கி அருளாளர் களாக மாற்றியமைப்பது ஈறாக இவ்வரிய பெரிய செயல்களைச் செய்யும் தாயான தத்துவமாக இலங்குகின்ற பரவஸ்துவுக்கு ஸ்ரீ மாதா என்னும் பெயரை எடுத்த எடுப்பில் வழங்குவது முற்றிலும் பொருத்தமானது.

**श्री महाराज्ञी ஸ்ரீ —மஹாராக்ஞீ** २

மாட்சிமை தங்கிய பேரரசி.

பராசக்தியானவள் அண்டங்களனைத்துக்கும் தாயாக இருக் கும் அதே வேளையில் அண்டங்களனைத்தையும் முறையாக ஆண்டு வருகின்ற இறைவியாகவும் இலங்குகின்றாள். உலகில் உள்ள தாய்மார்கள் தங்களுடைய செல்வர் செல்விகளை அன்போடு பரா மரிக்கின்றனர். அதன் விளைவாகச் சிறுவர்கள் முறைதவறி நடந்துகொண்டால் அவர்களைக் கண்டிப்பதில்லை. ஆனால் அண்ட நாயகியின் பாங்கு அத்தகையதன்று. அருளன்பும் தீவிரக் கண் டிப்பும் ஒன்றுகூடியவளாக அவள் இலங்குகின்றாள். அவள் ஆட்சிமுறை தவறாதவள். கோல் வளையாள் என்பது அவளுக்கு அமைந்துள்ள சிறப்புப் பெயர். அவளுடைய செங்கோல் நிய மனத்தினின்று யாரும் தப்பித்துக்கொள்ள முடியாது. 'அன்று கொல்வான் அரசன்; நின்று கொல்லும் தெய்வம்' என்பது ஒரு பழமொழி. இது முற்றிலும் உண்மையன்று. அரசனுடைய ஆட்சிமுறையினின்று மறைமுகமாக மீறி நடந்து தப்பித்துக்கொள் வது சாத்தியம். ஆனால் பராசக்தியின் திட்டத்தினின்று இம்மி அளவாவது யாருமே தப்பித்துக்கொள்ள முடியாது. எல்லார் உள்ளங்களிலும் அவள் 'மனசாட்சியாக இலங்குகின்றாள். ஆகையால் நெஞ்சை ஒளித்தொரு வஞ்சகம் பண்ணுவது யாருக் குமே சாத்தியப்படாது. 'தன்னெஞ்சறிவது பொய்யற்க; பொய்த்தபின் தன்னெஞ்சே தன்னைச் சுடும்' என்பது மறை

மொழி. பொய் சொல்கின்ற அதே வேளையில் மனத்தெளிவு மாசுபடுகிறது. அப்படி மாசுபடிவது ஆண்டு வருகின்ற இறைவி தரும் தண்டனையாம். மக்கள் இடையிடையே துன்பத்துக்கு ஆளாகின்றார்கள். துன்பம் வருகிற வேளையில் அதை ஆராய்ந்து பார்த்தால் அதற்கேற்ற காரணம் கிடைக்கும். நல்வழியினின்று மனிதன் எப்பொழுதாவது பிசகுவானாகில் அப்பொழுதே துன்பம் வந்து அவனைத் தாக்குகின்றது. அங்ஙனம் அப்போதைக்கப் போது துன்பத்தைக் கொடுத்து அம்பிகை மக்களைத் திருத்தி அமைக்கின்றாள். ஆகவே, நலன் அடைய விரும்புகிற எல்லாரும் நல்வழியினின்று பிசகலாகாது. பேரரசியின் ஆட்சியிலுள்ள திட்டம் இத்தகைய உறுதிப்பாடுடையதாம்.

**श्रीमत् सिंहासन ईश्वरी—ஸ்ரீமத் ஸிம்ஹாஸன ஈச்வரீ** ३

ஸிம்மாசனத்தில் வீற்றிருக்கும் பரதேவதை.

ஆதிக்கத்துக்கு அறிகுறியாக அமைவது சிம்மாசனம். தெய்வம் அமர்ந்திருப்பது சிம்மாசனத்தின்மீது. உலகை ஆண்டுவரும் அரசன் அமர்ந்திருப்பது சிம்மாசனம். மிருகங்களுக்கெல்லாம் வேந்தனாயிருப்பது சிம்மம். அத்தகைய சிம்மம் அம்பிகைக்கு வாகனமாய் அமைந்திருக்கிறது. ஆற்றல் மிகப் படைத்திருக்கும் மூர்த்தி ஒருத்தியே சிம்மத்தைக் கட்டியாளமுடியும். வல்லமை வாய்ந்த சிம்மத்தின்மீது ஊர்ந்து செல்வதற்கு நிகர் சிம்மாசனத்தில் வீற்றிருப்பது. பேராற்றல் அனைத்துக்கும் உறைவிடமாயிருப்பவள் பேரரசியாகிய பராசக்தி. வல்லமையில் அவளுக்கு ஒப்பு உயர்வு இல்லை எனும் கோட்பாட்டிற்கு அவள் சிம்மாசனத்தின்மீது வீற்றிருப்பது நல்ல விளக்கமாகிறது.

**चिदग्निकुण्ड संभूता—சிதக்னிகுண்ட ஸம்பூதா** ४

பேரறிவு என்னும் தீச் சுடரினின்று தோன்றியவள்.

பிரபஞ்சத்தின் அமைப்பு ஜடசக்தியாயிருப்பது. அது தன் தவத்தின் வாயிலாகச் சித் சக்தியாக மாறியமைந்து கொண்டிருக்கின்றது. இயற்கையின் பாங்கு இத்தகையது. இதற்கு அறிகுறியாக மூலப்பிரகிருதியாகிய குமரி, நாட்டின் தென்முனையில் தவம் புரிந்துகொண்டிருக்கின்றாள். முற்றிலும் சித்சொரூபியாகப் பரிண

மித்து சிவத்தில் ஒன்றுபடுவது அவள் குறிக்கோள். ஆதலால் அதே குறிக்கோளை ஜீவகோடிகள் அனைத்தும் பின்பற்றுகின்றன.

**देवकार्य समुद्यता**—தேவகார்ய ஸமுத்யதா ரு

இந்திரியங்களைப் பண்படுத்துதலில் கண்ணும் கருத்துமாய் இருப்பவள்.

தேவர்கள் என்னும் சொல் இந்திரியங்களைக் குறிக்கின்றது. ஒன்றன்பின் ஒன்ருக இந்திரியங்கள் முறையாகச் செயல்புரிவதன் வாயிலாக ஜீவர்கள் கீழ்நிலையினின்று மேல்நிலைக்குப் பரிணமித்து வருகின்றனர். ஊறு அல்லது ஸ்பரிச உணர்ச்சி ஒன்றுதான் ஸ்தாவர உலகம் அல்லது மரம், செடி, கொடிகளுக்கு உரியதாம்.

அந்த ஓர் இந்திரியத்தின் துணைகொண்டு நிலைத்திணையாகிய மரம், செடி, கொடிகள் நிறை வாழ்வு வாழ்ந்து வருவது வியப்புக்குரிய விஷயமாம். படிப்படியாக இந்திரியங்கள் ஒன்றன்பின் ஒன்ருகப் பரிணமித்துவருமிடத்து உயிர்களின் தரமும் மேலோங்குகிறது. மானுட நிலையை எட்டும்பொழுது ஐந்து இந்திரியங்களும், அறிவும் நிறைவுநிலை எய்துகின்றன. அன்னை பராசக்தி இந்த நிறைவு நிலையைக் குறிக்கோளாகக் கொண்டுள்ளாள்.

**उद्यद्भानु सहस्राभा**—உத்யத்பானு ஸஹஸ்ராபா சு

எண்ணிக்கையிடைங்காத சூரியப் பிரகாசத்தை உடையவள்.

இந்திரியங்கள் அதிகரிப்பதற்கு ஏற்ப ஞான ஒளி ஒவ்வொரு ஜீவனிடத்தும் மேலோங்குகிறது. இங்ஙனம் ஞானப் பிரகாசத்தில் உச்சநிலை எய்துவது ஜீவாத்மாக்களின் குறிக்கோள் என்பதை அவர்களின் பிரதிநிதியாக இருக்கும் அன்னை பராசக்தி தன் சொருபத்தில் வைத்து விளக்குகின்ருள்.

**चतुर्बाहु समन्विता**—சதுர்பாஹு ஸமன்விதா எ

நான்கு கரங்களை உடையவள்.

இரண்டு கரங்களோடு கூடியவன் மனிதன். இரண்டு கரங்களைப் பயன்படுத்தி மனிதன் செயற்கரிய செயல்களையெல்லாம்

செய்து சாதிக்கிறான். அன்னை பராசக்தியோ மனிதனால் செய்து சாதிக்கமுடியாத அரியபெரிய காரியங்களையெல்லாம் மிக எளிதில் சாதிக்க வல்லவள் என்பதை அவள் படைத்துள்ள நான்கு கரங்கள் விளக்குகின்றன.

நான்கு என்னும் எண்ணிக்கையில் கிருத யுகம், திரேதா யுகம், துவாபர யுகம், கலியுகம் ஆகிய காலத்தின் நான்கு கூறுகள் அடங்கியிருக்கின்றன. அதே விதத்தில் நான்கு திக்குகளுக்குச் சின்னமாகவும் அவை அமைந்திருக்கின்றன. மானுடச்செயல்கள் அனைத்தும் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கு உறுதிப் பொருள்களை உடைத்திருக்கின்றன. எல்லாக் காரியங்களிலும் எல்லா இடங்களிலும் எல்லாவிதமான அரிய பெரிய செயல்களும் அன்னை பராசக்தியின் அருளால் நிகழ்ந்து வருகின்றன என்னும் கோட்பாட்டை அவள் படைத்துள்ள நான்கு கரங்கள் விளக்குகின்றன.

**रागस्वरूप पाशाढ्या** — ராகஸ்வரூப பாசாட்யா ८

பற்றுதல் என்னும் பாசத்தை உடைத்திருப்பவள்.

தோன்றி வருகிற உயிர்வகைகள் தங்களுடைய தோற்றத்துக்கு அனுகூலமாயிருக்கும் தாயினிடத்தும் ஏனைய உயிர்வகைகளிடத்தும் வைக்கின்ற பற்றுதலை இந்த நாமம் குறிப்பிடுகிறது. பாசம் என்னும் பந்தம் இல்லாவிட்டால் உயிர்வகைகள் முன்னேற்றம் அடையமாட்டா. எல்லாப் படித்தரங்களிலும் இருக்கின்ற உயிர்வகைகள் அவ்வவற்றின் முன்னேற்றத்துக்கு ஏதுவாயிருக்கும் மற்ற உயிர்களிடத்து ஆழ்ந்த பற்றுதல் வைத்து வருகின்றன. அத்தகைய பற்றுதல் உயிர்வகைகளின் தோற்றத்துக்கும் இருப்புக்கும் வளர்ச்சிக்கும் இன்றியமையாததாம்.

**क्रोधाकार अङ्कुश उज्ज्वला**—க்ரோதாகார அங்குச உஜ்ஜ்வலா.

வெறுப்பு என்னும் அங்குசத்தை ஆயுதமாக உடைத்திருப்பவள்

எல்லாப் படித்தரங்களிலும் உள்ள உயிர் வகைகள் அனைத்துக்கும் சத்துருக்கள் அமைந்திருக்கின்றன. இது இயற்கையின்

கூறு. எதிரிகளாக இருப்பவைகளைச் சமாளிப்பது வாழ்க்கைக் குரிய இன்றியமையாத பயிற்சியாம். உதவி பண்ணுகிற உயிர் களோடு இணங்கி வாழ்வது ராகம். உயிருக்குக் கேட்டை விளை விக்கும் எதிரிகளோடு போராடுதல் வாழ்வுக்கு இன்றியமையாத பயிற்சியாம். எதிரிகளால் எத்தனை தடவை வெல்லப்பட்டாலும் அத்தனை தடவை மீண்டும் மீண்டும் பிறப்பெடுத்து அந்தச் சத்ருக் களைச் சமாளித்துப் பழகுதல் வாழ்க்கைக்கு இன்றியமையாத பயிற்சியாம். ஆகவே அன்னை பராசக்தி உயிர்களை ஈன்றெடுத்துப் பயிற்சி கொடுத்து அவை யாவற்றையும் முன்னணிக்குக்கொண்டு வருவதற்கு இன்றியமையாத ஆயுதங்களாயிருக்கின்ற பாசத்தை யும் அங்குசத்தையும் இரண்டு கரங்களில் ஏந்தியுள்ளாள்.

**मनोरूप इक्षु कोदण्डा**-மனோரூப இக்ஷு கோதண்டா ௧௦

மனோ தத்துவம் என்னும் கரும்பை வில்லாகக் கொண்டிருப்பவள்.

நிலத்திணை அல்லது ஸ்தாவரங்களின் அமைப்பில் அன்ன மய கோசம், பிராணமய கோசம் ஆகிய இரண்டும் இடம் பெறு கின்றன. மனது அல்லது மனோமயகோசம் ஸ்தாவர உலகில் இன்னும் பின்னணியில் இருக்கிறது. இன்ப துன்பங்களை உணர வல்லது மனது. அந்த உணர்ச்சி படிப்படியாக ஜங்கம உலகம் அல்லது நடமாட்டம் உடைய உயிர்களுக்கிடையில் வடிவெடுக் கிறது. அங்ஙனம் மனிதன் வளர்ச்சிக்குத் துணையாயிருப்பது நலம் செய்யும் உயிர்வகைகளிடத்துப் பற்றுதலும் தீங்கு செய்யும் உயிர் களிடத்து வெறுப்பும் வடிவெடுப்பதன் வாயிலாகவேயாம். மனோ தத்துவம் மானுட உலகில் உயர்ந்த நிலைக்கு வருகிறது. ஆதலால் மனதை உடையவன் மனிதன் என அவன் விளக்கப்படுகிறான்.

கரும்பின் அடிப்பகுதியில் தித்திப்பு அதிகமாகவும் நுனிப் பகுதியில் அது குறைவாகவும் இருப்பது அதன் பாங்காகும். கரும்பின் அடிப்பகுதி முன்னே தோன்றியது. கரும்பின் எந்தப் பகுதி அதிகநாள் வளர்ந்து வருகிறதோ அந்தப் பகுதிக்குச் சுவை அதிகம். இதினின்று மனோதத்துவத்துக்கு நல்ல விளக்கம் ஒன்று கிடைக்கிறது. உலகில் நெடுநாள் வாழ்ந்திருந்த மனதுக்கு அனுபவம் என்னும் சுவை நானகை வந்தமைகிறது. இக்கோட்

பாட்டை விளக்குதற்கே அன்னை பராசக்தி கரும்பை வில்லாக ஏந்தியிருக்கின்றாள். உலகில் நெடுநாள் வாழ்ந்திருந்த முதியோர்களின் மனது கரும்பின் அடிப்பாகத்துக்கு ஒத்திருக்கிறது. அண்மையில் பிறந்துள்ள சிறுவர்களின் மனது கரும்பின் நுனிப் பகுதியோடு ஒத்ததாம்.

**पञ्चतन्मात्र सायका — பஞ்சதன்மாத்ர ஸாயகா** ११

ஐந்து இந்திரியங்களை அம்பாகக் கொண்டவள்.

ஐந்து இந்திரியங்களாவன: சுவைத்தல், காணுதல், தொட்டுணர்தல், கேட்டல், முகர்தல். இந்த ஐந்துவித இந்திரிய நுகர்ச்சிக்கு அடிப்படையாய் இருப்பது மனது. வில் இருந்தால்தான் அம்பெய்வது சாத்தியம். அதே விதத்தில் மனதின் துணை கொண்டு சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்று ஐந்து 'விதங்களில் ஐந்து இந்திரியங்கள் தொழில் புரிகின்றன. அயர்ந்த உறக்கம் போன்ற நிலையில் மனது ஒடுங்கி இருக்கின்றபொழுது ஐந்து இந்திரியங்களும் செயலற்றுப் போகின்றன.

இனி, ஆத்ம சாதனத்தில் இந்திரியங்களின் வாயிலாக வெளி உலகுக்குச் செல்கின்ற மனது ஐந்து இந்திரியங்களையும் தெய்வீகம் வாய்ந்தவைகளாகக் கருத வேண்டும். கோயில் வழிபாட்டில் இக்கோட்பாடு நன்கு அமைந்திருக்கிறது. உண்பதற்கு வழங்கப்படுகின்ற பிரசாதத்தை ஈசனுடைய அருளோடு கூடியது என்று கருதி ஏற்றுக் கொள்ளுதல் முறை. காணப்படுகிற விக்கிரகத்தை ஜடப்பொருளாகக் கருதாது கடவுள் மயமாகக் கண்டு பழகுதல் வேண்டும். வட்டமிட்டு வணங்குதல் வாயிலாகக் கடவுள் ஆங்குள்ள விக்கிரகத்தில் மட்டும் அமைந்திருப்பதன்று, காணப்படுபொருள் அனைத்தும் கடவுளின் புறத்தோற்றம் என்னும் எண்ணத்தைப் படிப்படியாக மனதில் ஏற்றிப் பழகவேண்டும். கடவுளுக்குச் சாத்திய பூமாலை, சந்தனம் முதலியன வழிபடுபவர்களுக்கு வழங்கப்படுகின்றன. ஊறு அல்லது ஸ்பரிச உணர்ச்சிக்கு முகாமையாய் இருப்பவை பூமாலை, சந்தனம் முதலியன. அவைகளை அணிந்துகொள்ளும்பொழுது அல்லது பூசுகின்ற பொழுது ஈசுவரனுடைய அருளை உள்ளத்தில் ஆழ்ந்து ஏற்றுக் கொள்ளுதல் அவசியம். கோயிலுக்குள்ளே உண்டாகும் ஓசைகள் அனைத்தும் கடவுள் சம்பந்தமானவைகளாக இருத்தல் வேண்டும்.

கோயிலினுள் கடவுள் சம்பந்தமான ஓசையைக் கேட்கின்ற காது புறவுலகில் நல்லவைகளைக் கேட்பதில் பயன்படுத்தப்பட வேண்டும். பயன்படாத புன்மொழிகளுக்குச் செவிசாய்த்தல் கூடாது. இனி, உலகத்தவர் நறுமணம் கமழும் வாசனைத் திரவியங்களைச் சுகபோகத்தோடு இணைத்துக் கையாளுகின்றனர். மற்று, கோயிலிலோ சாம்பிராணி தூபம் போன்ற நறுமணம் கடவுள் நாட்டத்தை வளர்த்தல் பொருட்டேயாம். இங்ஙனம் மனதானது ஐந்து இந்திரியங்களோடு கூடிப் புறவுலகைப் பொருள்படுத்து மிடத்து அச்செயலில் தெய்விகம் திகழ்கின்ற அளவு அது முன்னேற்றத்துக்குத் துணையாகிறது. அவிவேகம் தலையெடுக்குமளவு அச்செயல் உலக பந்தத்தில் ஜீவனை ஆழ்த்துகிறது.

இங்ஙனம் முதல் பதினொரு நாமங்களில் சிருஷ்டியின் அமைப்பும் அதன் நோக்கமும் நன்கு விளக்கப்படுகின்றன. கடவுள் வழிபாட்டுக்கென்றே பிரபஞ்ச வாழ்வைப் பயன்படுத்துவர் மேலோர்.

**निजारुण प्रभापूर मज्जत् ब्रह्माण्ड मण्डला ११**

நிஜாருண ப்ரபாபூர மஜ்ஜத் ப்ரஹ்மாண்டமண்டலா 12

அன்னை பராசக்தி சிவப்பு நிறவடிவினள். அத்தகைய சிவப்பு அண்டமெங்கும் வியாபித்திருக்கிறது.

வழிபாட்டில் திருநீறும் திருமண்ணும் வெள்ளை நிறம். அது புருஷ தத்துவத்துக்குச் சின்னமாகிறது. அவைகளோடு சேர்ந்து வரும் குங்குமம் சக்தியின் சின்னம்.

**चम्पकाशोक पुन्नाग सौगन्धिक लसत्कचा १३**

சம்பகாசோக புன்னாக செளகந்திக லஸத்கசா 13

சம்பகம், அசோகம், புன்னாகம், செளகந்திகம் இவைகளின் புஷ்பங்களுடன் சோபிக்கிற, கூந்தலை உடையவள்.

இயற்கையின்கண் அமைந்துள்ள நறுமணங்கள் அனைத்தும் உண்மையில் அன்னை பராசக்தியின் விபூதிகளாம்.

**कुरुविन्द मणिश्रेणी कनत्कोटीर मण्डिता १४**

குருவிந்த மணிச்ரேணீ கனத்கோடீர மண்டிதா 14

பத்மராக மணிகள் வரிசையாய்ப் பதிக்கப்பட்டு ஒளி வீசும் அழகிய கிரீடத்தை அணிந்தவள்.

இயற்கையில் அமைந்துள்ள பிரகாசம் பொருந்திய ரத்தினங்கள் அனைத்தும் அன்னை பராசக்தியின் விபூதிகளாம்.

**अष्टमी चन्द्र विभ्राजत् अलिकस्थल शोभिता १५**

அஷ்டமீ சந்த்ர விப்ராஜத் அலிகஸ்தல சோபிதா 15

பாதி நிலாப் போன்ற அழகிய நெற்றியை உடையவள்.

**मुखचन्द्र कलङ्काभ मृगनाभि विशेषका १६**

முகசந்த்ர களங்காப ம்ருகநாபி விசேஷகா 16

நிறை நிலாவில் கரும்படிவங்கள் தென்படுவதற்கு நிகராக அன்னை பராசக்தியின் முகவிலாசத்தில் கஸ்தூரி திலகம் திகழ்கின்றது.

**वदनस्मर माङ्गल्य गृह तोरण चिल्लिका १७**

வதனஸ்மர மாங்கல்ய க்ருஹ தோரண சில்லிகா 17

அன்னையின் புருவங்கள் மன்மதனுடைய வீட்டு வாயிலில் கட்டப்பட்டிருக்கும் தோரணங்கள் போன்று கவர்ச்சிகரமாக இருக்கின்றன.

அழகுக்கு இருப்பிடம் அன்னையின் புருவங்கள் இரண்டுமாம்.

**वक्त्र लक्ष्मी परीवाह चलन् मीनाभ लोचना १८**

வக்த்ர லக்ஷ்மீ பரீவாஹ சலன் மீனப லோசனா 18

அன்னையின் அழகிய முகவிலாசம் என்னும் தடாகத்தின்கண் விளையாடித் திரியும் மீன்களுக்கு நிகரான கண்களை உடையவள்.

மீனாக்ஷி என்பது அன்னை பராசக்திக்கு அமைந்துள்ள நாமங்களுள் ஒன்றாகும். மீன் யாண்டும் கண் சிமிட்டுவதில்லை. அதே பாங்கில் அன்னை பராசக்தி யாண்டும் உயிர்கள் அனைத்திடத்தும் மூடாத கண்பார்வையை வைத்திருக்கிறாள் என்பது இதன் பொருள்.

**नवचम्पक पुष्पाभ नासादण्ड विराजिता** १९
நவ சம்பக புஷ்பாப நாஸா தண்ட விராஜிதா 19

அலரும் தறுவாயிலிருக்கும் அழகிய செண்பகப் புஷ்பத்தை ஒத்திருக்கும் மூக்கை உடையவள்.

**ताराकान्ति तिरस्कारि नासाभरण भासुरा** २०
தாரா காந்தி திரஸ்காரி நாஸாபரண பாஸுரா 20

நட்சத்திரங்களைத் தோற்கடிக்கவல்ல அழகிய மூக்குத்தியை உடையவள்.

**कदम्बमञ्जरी क्लृप्त कर्णपूर मनोहरा** २१
கதம்ப மஞ்ஜரீ க்லப்த கர்ணபூர மனோஹரா 21

அழகிய கடம்பப் புஷ்பத்தைக் காதில் அணிந்திருப்பவள்.

**ताटङ्क युगलीभूत तपन उडुपमण्डला** २२
தாடங்க யுகலீபூத தபன உடுப மண்டலா 22

சந்திரனையும் சூரியனையும் இரண்டு காதுகளுக்குரிய தோடுகளாக அணிந்திருப்பவள்.

**पद्मराग शिलादर्श परिभावि कपोलभूः** २३
பத்ம ராக சிலா தர்ச பரிபாவி கபோலபூ: 23

பத்மராகத்தால் செய்யப்பட்டுள்ள கண்ணாடிக்கு மிக்கதான அழகு வாய்ந்த கன்னத்தை உடையவள்.

**नवविद्रुम बिम्बश्री न्यक्कारि दशनच्छदा** २४
நவ வித்ரும பிம்பஸ்ரீ ன்யக்காரி தசனச்சதா 24

புதிய பவளம், கோவைப் பழம் ஆகியவைகளுக்கு மிக்கதான சிவந்த உதடுகளை உடையவள்.

**शुद्ध विद्याङ्कुर आकार द्विजपङ्क्ति द्वयोज्ज्वला** २५
சுத்த வித்யாங்குர ஆகார த்விஜ பங்க்தி த்வயோஜ்ஜ்வலா

அன்னையின் பல் வரிசைகள் இரண்டும் சுத்த ஞானம் முளைத்திருப்பது போன்று மிளிர்கின்றன.

कर्पूर वीटिका आमोद समाकर्षि दिगन्तरा २६

கர்ப்பூர வீடிகா ஆமோத ஸமாகர்ஷி திகந்தரா 26

அன்னை தின்னும் தாம்பூலத்தினின்று வருகின்ற நறுமணமானது பிரபஞ்சம் முழுதையும் கவரவல்லதாம்.

निजसंलाप माधुर्य विनिर्भत्सित कच्छपी २७

நிஜஸல்லாப மாதுர்ய விநிர்பத்ஸித கச்சபீ 27

சரஸ்வதியின் வீணைக்குக் கச்சபி என்பது பெயர். அத்தகைய வீணையையும் தோற்கடிக்க வல்ல இனிய குரலை உடையவள்.

मन्दस्मित प्रभापूर मज्जत्कामेश मानसा २८

மந்த ஸ்மித பிரபாபூர மஜ்ஜத் காமேச மானஸா 28

அம்பிகையின் புன்சிரிப்பில் வசப்பட்டவராகக் காமேசுவரர் சிவனார் அமைந்துள்ளார்.

अनाकलित सादृश्य चिबुक श्रीविराजिता २९

அனாகலித ஸாத்ருச்ய சிபுக ஸ்ரீவிராஜிதா 29

வாக்தேவதைகள் உட்பட யாராலும் வர்ணிக்க முடியாத முகவாய்க்கட்டின் அழகு படைத்திருப்பவள்.

कामेश बद्ध माङ्गल्य सूत्र शोभित कन्धरा ३०

காமேச பத்த மாங்கல்ய ஸூத்ர சோபித கந்தரா 30

காமேசுவரர் கட்டிய மங்கல நாணுடன் பிரகாசிக்கும் கழுத்தினள்.

कनकाङ्गद केयूर कमनीय भुजान्विता ३१

கனகாங்கத கேயூர கமனீய புஜான்விதா 31

தங்கத்தோள்வளைகளை அணிந்திருப்பவள்.

रत्न ग्रैवेय चिन्ताक लोल मुक्ताफलान्विता ३२

ரத்ன க்ரைவேய சிந்தாக லோல முக்தாபலான்விதா 32

அசைகின்ற முத்துக்களுடன் கூடிய ரத்தினப் பதக்கம் பொருந்திய அட்டிகை அணிந்தவள்.

कामेश्वर प्रेमरत्न मणि प्रतिपण स्तनी ३३
காமேச்வர ப்ரேமரத்ன மணிப்ரதிபண ஸ்தனீ 33

காமேசுவரருடைய உள்ளத்தைக் கவரவல்ல ஸ்தன பாரங்களை உடையவள்.

नाभ्यालवाल रोमालि लता फल कुचद्वयी ३४
நாப்யாலவால ரோமாலி லதாபல குசத்வயீ 34

நாபி என்னும் பாத்தியிலிருந்து முளைத்து மேலே வந்த கொடிக்கு நிகரான ரோமத்தினின்று பழுத்த கனி போன்ற இரண்டு ஸ்தனபாரங்களை உடையவள்.

लक्ष्यरोम लताधारता समुन्नेय मध्यमा ३५
லக்ஷ்யரோம லதாதார்தா ஸமுன்னேய மத்யமா 35

மிக மெல்லிய இடையை உடையவள்.

स्तनभार दलन्मध्य पट्टबन्ध वलित्रया ३६
ஸ்தனபார தலன் மத்ய பட்டபந்த வலித்ரயா 36

மூன்று மடிப்புக்களை வயிற்றில் உடையவள்.

अरुणारुण कौसुम्भ वस्त्र भास्वत् कटीतटी ३७
அருணாருண கௌஸும்ப வஸ்த்ர பாஸ்வத் கடீதடீ 37

சிவப்புப் பட்டாடையுடன் விளங்குகிற இடையை உடையவள்.

रत्न किङ्किणिका रम्य रशना दाम भूषिता ३८
ரத்ன கிங்கிணிகா ரம்ய ரசனா தாம பூஷிதா 38

இரத்தினச் சதங்கைகளோடு விளங்கும் ஒட்டியாணம் அணிந்தவள்.

कामेश ज्ञात सौभाग्य मार्दव ऊरुद्वय अन्विता ३९
காமேச க்ஞாத ஸௌபாக்ய மார்தவ ஊருத்வய அன்விதா

மேனியில் காமேசுவரருடைய செம்பாதி மயமானவள்.

माणिक्य मुकुटाकार जानुद्वय विराजिता ४०
மாணிக்ய முகுடாகார ஜானுத்வய விராஜிதா 40

மாணிக்க முகுடம் போன்ற முழந்தாள்களை உடையவள்.

इन्द्रगोप परिक्षिप्त स्मर तूणाभ जङ्घिका ४१
இந்த்ரகோப பரிக்ஷிப்த ஸ்மர தூணாப ஜங்கிகா 41

அம்பிகையின் முழங்கால்கள் மன்மதனுடைய அம்பறுத்தூணி போன்ற அழகிய வடிவுடையவையாம்.

गूढ गुल्फा—கூட குல்பா ४२

உருண்டு திரண்ட குதிகளை உடையவள்.

कूर्मपृष्ठ जयिष्णु प्रपदान्विता ४३
கூர்மப்ருஷ்ட ஜயிஷ்ணு ப்ரபதான்விதா 43

ஆமையின் முதுகு போன்று வளைந்திருக்கும் புறங்கால்களை உடையவள்.

नखदीधिति संछन्न नमज्जन तमोगुणा ४४
நகதீதிதி ஸஞ்சன்ன நமஜ்ஜன தமோகுணா 44

தன்னை வணங்கும் பக்தர்கள் உள்ளத்திலுள்ள அக்ஞான இருளைத் தன் கால் நகங்களில் உள்ள காந்தியால் அகற்றுபவள்.

पदद्वय प्रभाजाल पराकृत सरोरुहा ४५
பதத்வய ப்ரபாஜால பராக்ருத ஸரோருஹா 45

தாமரையினும் மிக்க அழகு வாய்ந்த பாதங்களை உடையவள்.

शिञ्जान मणिमञ्जीर मण्डित श्रीपदाम्बुजा ४६
சிஞ்ஜாந மணி மஞ்ஜீர மண்டித ஸ்ரீபதாம்புஜா 46

ஒலிக்கும் ரத்தினப் பரல்கள் கொண்ட சிலம்புகளை அணிந்திருக்கும் அழகிய பாதங்களை உடையவள்.

**मरालीमन्दगमना**—மராளீமந்தகமனு ௪௭

அழகிய அன்ன நடை உடையவள்.

**महालावण्य शेवधिः**—மஹாலாவண்ய சேவதி: ௪௮

அழகுக்குக் களஞ்சியமாய் இருப்பவள்.

**सर्वारुणा**—ஸர்வாருணு — ஆடை, ஆபரணம், நிறம் ௪௯
ஆகிய அனைத்திலும் சிவப்பு நிறமானவள்.

**अनवद्याङ्गी**—அனவத்யாங்கீ ௫௦

உடல் அமைப்பிலும் உறுப்புக்கள் அமைப்பிலும் குறைவில்லா நிறைநிலை உடையவள்.

**सर्वाभरण भूषिता**—ஸர்வாபரண பூஷிதா ௫௧

விதவிதமான நகைகளை உடையவள்.

இயற்கையின் அமைப்பே இக்கோட்பாட்டுக்குச் சான்றுகும்.

**शिवकामेश्वर अङ्कस्था**—சிவகாமேச்வர அங்கஸ்தா ௫௨

பிரபஞ்சத்தைப் படைப்பதற்கு எண்ணம் கொண்ட காமேசுவரருடைய இடது தொடையின்மீது அமர்ந்திருந்து அச்செயலுக்கு அவருக்குத் துணைபுரிகின்றவள்.

**शिवा**—சிவா—சிவன் என்னும் சொல் மங்களத்தைக் ௫௩
குறிக்கிறது. அது பெண்பாலாக வடிவெடுக்குமிடத்துசிவா. அல்லது சிவை என்பதாம்.

**स्वाधीन वल्लभा**—ஸ்வாதீன வல்லபா ௫௪

கருத்தில். அம்பிகைக்கும் சிவனுருக்கும் வேற்றுமையற்ற பண்பை உடையவள்.

**सुमेरु मध्यशृङ्गस्था**—ஸுமேரு மத்யச்ருங்கஸ்தா ௫௫

மேருமலையின்சிகரத்தில் இருப்பவள். ஜீவாத்மனுக்கு ஹிருதய கமலம் மேருமலையாகிறது. அதன் நடுவில் இருப்பவள் அம்பிகை.

**श्रीमन्नगर नायिका**—ஸ்ரீமன்னகர நாயிகா ௫௬

ஸ்ரீநகரம் என இயம்பப் பெறுகிற பிரபஞ்சத்துக்குத் தலைவியாக இருப்பவள்.

அண்டத்திலிருப்பது பிண்டத்திலும் இருக்கிறது. எனவே, மானுட சரீரம் என்னும் பிண்டத்திலும் அவள் இனிது வீற்றிருக்கிருள்.

**चिन्तामणिगृह अन्तस्था**—சிந்தாமணி க்ருஹ அந்தஸ்தா ௫௭

சிந்தாமணியில் இனிது வீற்றிருப்பவள்.

நல்லெண்ணங்களின் தொகை சிந்தாமணி எனப்படுகிறது. நல்லெண்ணங்களே வடிவெடுத்துள்ள பக்தனுடைய திருமேனியில் அன்னை பராசக்தி இனிது வீற்றிருக்கிருள்.

**पञ्च ब्रह्मासन स्थिता**—பஞ்ச ப்ரஹ்மாஸன ஸ்திதா ௫௮

சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், ஈசானன், சதாசிவம் ஆகிய ஐந்து மூர்த்திகளைக் கொண்டு அமைந்துள்ள ஆசனத்தின் கண் எழுந்தருளியிருப்பவள்.

அன்னை பராசக்தியின் சான்னித்தியமும் இந்தப் பஞ்ச மூர்த்திகளின் கிருத்தியங்களும் இணைபிரியாதவைகள். சான்று ஒன்றின் மூலம் இக்கோட்பாட்டை விளக்குதல் அவசியம். மின் விளக்கு, மின் ஒலி பெருக்கி, மின் விசிறி, சமைப்பதற்குரிய மின் அடுப்பு, தணுப்பை உண்டுபண்ணுவதற்குரிய மின்யந்திரம் ஆகியவைகள் விதவிதமான செயல்களைப் புரிகின்றன. அப்படி அவைகள் செயல்புரிவதற்கு மூல சக்தியாயிருப்பது மின்சக்தி. அதே பாங்கில் அன்னை பராசக்தி பிரபஞ்ச நடைமுறைக்கு இன்றியமையாதவர்களாயிருக்கின்ற இந்தப் பஞ்சமூர்த்திகளுக்கு வல்லமையைத் தந்தருள்கின்ருள்.

**महापद्माटवी संस्था**—மஹாபத்மாடவீ ஸம்ஸ்தா ௫௯

தாமரைக் காட்டில் நன்கு உறைந்திருக்கிறவள்.

புஷ்பங்களுள் தலைசிறந்தது தாமரை. மானுட சரீரத்தின் உச்சந்தலையில் உள்ள சஹஸ்ராரம் என்னும் ஞான பூமிக்குச்

சின்னமாயிருப்பது ஆயிரம் இதழ்களை உடைய தாமரைப்பூ. தாமரைக் காடு என்னும் பதம் இவ்வுண்மையை விளக்குகிறது. எங்கும் நிறைபொருளாகிய பராசக்தி தன்னுடைய திவ்வியமான சான்னித்தியத்தை இத்தகைய தாமரைக் காட்டில் தெளிவுபட விளக்கிக்கொண்டிருக்கிருள்.

**कदम्बवन वासिनी**—கதம்பவனவாஸினீ ६०

கதம்ப வனத்தில் வசிப்பவள்.

இயற்கையில் செழிப்பு வாய்ந்த இடங்களெல்லாம் சக்தியின் சான்னித்தியத்துக்கு நல்ல எடுத்துக்காட்டுகளாகின்றன.

**सुधासागर मध्यस्था**—ஸுதாசாகர மத்யஸ்தா ६१

அமிர்தக் கடலின் நடுவில் வீற்றிருக்கிறவள்.

மரணமிலாப் பெருவாழ்வு அமிர்தசாகரம் எனப்படுகிறது. அன்னை தானே அப்பெருநிலை வடிவினளாக அமைந்துள்ளாள்.

**कामाक्षी**—காமாக்ஷீ ६२

கவர்ச்சிகரமான கண்பார்வை உடையவள்.

அன்னை பராசக்தி தன் கடைக்கண் பார்வையால் பக்தர்களுக்குத் தேவையாயிருப்பவைகளை மிக எளிதில் பூர்த்திபண்ணி வைக்கிருள்.

**कामदायिनी**—காமதாயினீ ६३

பக்தர்கள் விரும்புகிறதை எடுத்து வழங்குகிறவள்.

**देवर्षिगण संघात स्तूयमान आत्मवैभवा** ६४

தேவர்ஷிகண ஸங்காத ஸ்தூயமான ஆத்மவைபவா 64

தேவர்களாலும் ரிஷிகளாலும் யாண்டும் போற்றிப் பாராட்டப்படுபவள்.

**भण्डासुर वधोद्युक्त शक्तिसेनासमन्विता** ६५

பண்டாஸுர வதோத்யுக்த சக்திசேனு ஸமன்விதா 65

பண்டாசுரனுடைய அழிவுக்கு ஏற்ற சேனைகளை யாண்டும் ஆயத்தமாக வைத்திருக்கிறவள்.

ஜீவர்களிடத்து அக்ஞானத்தின் விளைவாகப் பலப்பல கேடுகள் வந்தமைந்திருப்பதை இயற்கையின்கண் காணலாம். இக்கேடுகள் அனைத்தும் உருவகப்படுத்தப்பட்டுப் பண்டாசுரன் எனப் பகரப்பெறுகின்றன. யாது காரணத்தாலோ அங்ஙனம் மக்களிடத்து வந்தமைகின்ற அக்ஞான இருளை அகற்றுதற்குப் போதிய வசதிகளையும் பிரமாணங்களையும் இயற்கையின்கண் காணலாம். இவ்வசதிகளே சேனைகள் எனப்பகரப்பெறுகின்றன. ஆக, இயற்கைத் தாயுடன் பக்திபூர்வமான நல்லிணக்கம் வைப்பதற்கு ஏற்ப ஆத்ம சாதகன் பண்டாசுரன் என்னும் அக்ஞான இருளினின்று விடுதலை பெறுகிறான்.

**संपत्करी समारूढ सिन्धुर व्रजसेविता ६६**

**ஸம்பத்கரீ ஸமாரூட ஸிந்துர வ்ரஜஸேவிதா— 66**

சம்பத்கரீ தேவதையால் ஆதரிக்கப்பட்ட யானைகளால் போற்றப்படுபவள்.

பழங்காலத்தில் நான்கு படைகள் நடைமுறையில் வந்திருந்தன. அவையாவன: ரத, கஜ, துரக, பதாதி. அதாவது தேர், யானை, குதிரை, காலாட்படை. இவைகளுள் அம்பிகையின் யானைப் படைக்குத் தலைவியாய் இருப்பவள் சம்பத்கரீ. தத்துவமயமாகப் பார்க்குமிடத்துத் திண்ணிய மனதும் சீலமும் சேர்ந்து படைகளாகின்றன. அவைகளை நல்வழியில் நடாத்தும் திறமையும் ஒழுக்கமும் வாய்க்கப் பெற்றவள் சம்பத்கரீ என்னும் அம்பிகையின் அம்சமாம்.

**अश्वारूढ अधिष्ठिताश्व कोटि कोटिभिः आवृता ६७**

**அச்வாரூட அதிஷ்டிதாச்வ கோடி கோடிபி: ஆவ்ருதா 67**

அச்வாரூட தேவதையால் பரிபாலிக்கப்பட்ட எண்ணிக்கையிலடங்காத குதிரைகளால் சூழப்பட்டிருப்பவள்.

யானைப் படைக்கு அடுத்தபடியாக வருவது குதிரைப் படை. இப்படைக்குத் தலைவியாய் இருப்பவள் மந்த்ரிணீ. இந்திரியங்களின் செயல்களைத் தத்துவ மயமாக ஆராய்ந்து பார்க்குமிடத்து அவையாவும் குதிரைப் படையோடு இணைக்கப்பட்டிருக்கின்றன.

இந்திரியங்களுக்கெல்லாம் தலைமை வகிப்பது மனது. அந்த மனதின் உருவகமே மந்த்ரிணீ என்னும் பெயர் பெற்றுள்ளாள்.

**चक्रराज रथारूढ सर्वायुध परिष्कृता ६८**

சக்ரராஜ ரதாரூட ஸர்வாயுத பரிஷ்க்ருதா 68

ஸ்ரீ சக்கரத்தின் மீது எல்லாவித ஆயுதங்களுடன் வீற்றிருப்பவள்.

ஸ்ரீ சக்கரம் என்பது இப்பிரபஞ்சமாம். பிரபஞ்சம் என்னும் பெரிய தேரிலே அமர்ந்திருந்து அகிலாண்டமெங்கும் நிகழ்ந்து வருகின்ற கிருத்தியங்களுக்கு ஏற்ற ஆயுதங்கள் சொரூபமாகவும் அவள் மிளிர்வது அவளுடைய மகிமையாம். இதில் பரஞானத்தைப் பெறுவதற்கான ஆயுதங்களும் ஏனைய உபகரணங்களும் யாண்டும் நிறைந்திருக்கின்றன. ஆதலால் ஆத்மசாதனத்தில் முறையாக ஈடுபட்டு வருபவர்களுக்குக் குறையேதும் இல்லை.

**गेयचक्र रथारूढ मन्त्रिणी परिसेविता ६९**

கேயசக்ர ரதாரூட மந்த்ரிணீ பரிஸேவிதா 69

கேய சக்கரம் எனும் ரதத்தில் ஏறியிருக்கும் மந்த்ரிணி தேவியால் ஸேவிக்கப்பட்டவள்.

**किरिचक्र रथारूढ दण्डनाथा पुरस्कृता ७०**

கிரிசக்ர ரதாரூட தண்டநாதா புரஸ்க்ருதா 70

கிரி சக்கரம் என்னும் தேரில் ஏறியிருக்கும் தண்டநாதா அல்லது வாராஹியால் வழிகாட்டப்பட்டவள்

**ज्वाला मालिनिकाक्षिप्त वह्निप्राकार मध्यगा ७१**

ஜ்வாலா மாலினிகாக்ஷிப்த வஹ்னிப்ராகார மத்யகா 71

ஜ்வாலாமாலினி சக்தியால் அமைக்கப்பட்ட அக்னி மண்டலத்தின் மத்தியில் இருப்பவள்.

**भण्डसैन्य वधोद्युक्त शक्तिविक्रम हर्षिता ७२**

பண்டசைன்ய வதோத்யுக்த சக்தி விக்ரம ஹர்ஷிதா 72

பண்டாசுரனுடைய சேனைகளை அழிப்பதில் ஊக்கம் படைத்திருந்த சக்தியிடம் மகிழ்வுகொண்டவள்.

**नित्या पराक्रमाटोप निरीक्षण समुत्सुका ७३**

**நித்யா பராக்ரமாடோப நிரீக்ஷண ஸமுத்ஸுகா 73**

நித்யா தேவதைகளின் வல்லமையைப் பார்ப்பதில் ஊக்கம் படைத்திருப்பவள்.

அம்பிகை யாண்டும் சாஸ்வதமாக இருந்து வருகிறுள். அவளுடைய மகிமைகள் அவளுக்குப் பணிவிடை செய்யும் சிறு தேவதைகளாகக் கருதப்படுகின்றன. எனவே நித்யா எனும் சொல் எப்பொழுதுமே இருந்து வருகின்ற ஆத்ம சக்தி எனப் பொருள்படுகிறது. பராக்ரமாடோபா என்பது தன்னைத்தானே புதுப்பித்துக்கொள்ளுதல் எனப்படுகிறது. ஆத்ம சாதகர்கள் அந்தர்முக திருஷ்டியில் ஆத்ம சொரூபத்தில் திளைத்திருக்கும் போதெல்லாம் தங்களைத் தாங்களே புதுப்பித்துக் கொள்கிறுர்கள். உறக்கத்தின் வாயிலாக அனைவருமே தங்களைத் தாங்களே புதுப்பித்துக் கொள்கிறுர்கள். ஆனல் தியானுவஸ்தையில் அந்தர்முக திருஷ்டியில் போகின்றவர்கள் தங்களைப் புதுப்பித்துக் கொள்வதுமல்லாது பெருநிலையையும் எய்தி வருகின்றனர். சிசுக்கள் உடல் வளர்ச்சி அடைந்து வருவதைப் பார்த்துப் பெற்ற தாய் பெருமகிழ்ச்சி அடைவதற்கு ஏற்ப அகிலாண்ட நாயகியாகிய அன்னை பராசக்தி ஆத்ம சாதகர்கள் அந்தர்முக திருஷ்டியில் ஆத்மபோதம் அடையப்பெற்று முன்னேறி வருவதைப் பார்த்துப் பெருமகிழ்வு எய்துகிறுள் என்பது இதன் பொருள்.

**भण्डपुत्र वधोद्युक्त बाला विक्रमनन्दिता ७४**

**பண்டபுத்ர வதோத்யுக்த பாலா விக்ரமநந்திதா 74**

தன் குழந்தையான பாலா தேவி பண்ட புத்திரர்களை அழிப்பதில் காட்டிய பராக்கிரமத்தைப் பார்த்து மகிழ்ந்தவள்.

**मन्त्रिण्यम्बा विरचित विषङ्गवध तोषिता ७५**

**மந்த்ரிண்யம்பா விரசித விஷங்கவத தோஷிதா 75**

மந்த்ரிணி தேவி நிகழ்த்திய விஷங்க வதத்தைக் கண்டு மகிழ்ந்தவள்.

**विशुक्र प्राणहरण वाराही वीर्यनन्दिता** ७६

விசுக்ர ப்ராணஹரண வாராஹீ வீர்யநந்திதா 76

விசுக்ரனை மாய்த்த வாராஹியின் பராக்கிரமத்தை மெச்சினவள்.

**कामेश्वर मुखालोक कल्पित श्रीगणेश्वरः** ७७

காமேச்வர முகாலோக கல்பித ஸ்ரீகணேச்வரா 77

காமேசுவரருடைய முகத்தைத் தரிசித்ததன் விளைவாகக் கணேசனைத் தோற்றுவித்தவள்.

அன்னை பராசக்தி காமேசுவரராகிய சிவனுருடைய முகத்தைப் பார்த்தாள். அதன் விளைவாக ஸ்ரீ கணேச்வரரை அவள் சிருஷ்டித்தாள் என்பதுஇதன்பொருள். புருஷன், பிரகிருதி ஆகிய இருதத்துவங்களின் கூட்டுறவால் ஜகத்தும் ஜீவர்களும் தோற்றத்துக்கு வருகிறுர்கள் என்பது கோட்பாடு. அப்படி வந்துள்ள ஜீவர்களுள் தலையாய ஸ்தானம் வகிப்பவர் ஸ்ரீகணேசன். அவர் ஓங்கார மூர்த்தியாக இலங்குகின்றுர். ஞானத்துக்கு இருப்பிடம்அவர். அவரைச் சரியாக அறிந்துகொள்ளுமிடத்துச் சிவனும் சக்தியுமே சரியாக அறிந்துகொள்ளப்படுகின்றனர். உடலும் உயிரும் ஒன்று சேர்ந்திருப்பது ஜீவஅமைப்பு. உடல் சக்தியின் கூறு. உயிர் சிவத்தின் கூறு. உயிர் இல்லாவிட்டால் உடல் வெறும் பிணம். உடல் இல்லாவிட்டால் உயிர் தன்னை விளக்கமுடியாது. சிவசக்தியாக இரண்டு சொருபங்களும் கணேச மூர்த்தியில் இனிது இடம் பெறுகிறுர்கள். கணேசனை வழுத்துவதன் மூலம் சிவனுர் வழுத்தப் பெறுகிறுர். அம்பிகையின் வழிபாடும் அதில் அடங்கியிருக்கிறது. மேலும் ஜீவர்கள் அனைவருக்கும் செய்கின்ற வழிபாடும் கணேச பூஜையில் இடம் பெறுகிறது. கணேசரை வழுத்திய பிறகே மற்ற தேவதைகளை வழுத்தவேண்டும் என்னும் ஐதிகம் இதில் வெளியாகிறது. அத்தகைய திருக்குமாரனைத் தோற்றுவித்த பகவதிதேவி தன் கடமையைத் தன் பதிக்கும் பிரபஞ்சத்துக்கும் இனிது இயற்றியவள் ஆகின்றுள். இனிது இயற்றப்பட்ட செயல் எப்பொழுதும் இன்பத்தைத் தருகிறது. பார்வதி புத்திரனுகிய கணேசன் தோன்றவே அன்னை பராசக்தி பேரானந்த முற்றிருந்தது பொருத்தமாம்.

महागणेश निर्भिन्न विघ्नयन्त्र प्रहर्षिता ७८

மஹாகணேச நிர்பின்ன விக்னயந்த்ர பிரஹர்ஷிதா 78

மஹா கணேசரால் விக்னம் என்கின்ற யந்திரம் பழுதுபட்டுப் போவதைப் பார்த்துப் பரம திருப்தி யடைந்தவள்.

இந்த நாமத்தில் சிறந்த வாழ்க்கைத்தத்துவம் ஒன்று அமைந் திருக்கிறது. மஹா கணேசன் அம்பிகைக்கு மூத்த மகன். அவன் ஞான சொரூபி. ஜீவர்கள் அனைவரும் அம்பிகைக்குப் புதல்வர் களும் புதல்விகளும் ஆகின்றனர். அத்தகைய ஜீவர்களுள் நல்லறிவு படைத்திருப்பவர்கள் எல்லாரும் மகா கணபதியின் அம்சங்களாகின்றனர். கணபதியை மட்டும் அம்பிகையின் அறி வுச்செல்வனாக அமைத்துக்கொண்டு ஏனைய உயிர்களைப் புறக் கணித்துவிடலாகாது. அறிவு படைத்துள்ள உயிர்களுக்கெல்லாம் முன்மாதிரியாய் இருப்பவன் கணேசன். அறிவில் சிறந்தவர்கள் எல்லாரும் வாழ்வை இனிது நடாத்த வல்லவர்கள் ஆகின்றனர்.

விக்கினங்கள் அல்லது தடைகள் நிரம்ப அமையப்பெற்றிருப் பது உலக வாழ்க்கை. அத்தடைகளை மீள முயலுவதால் அறிவு வளர்ச்சி தானாக உண்டாகிறது. சான்று ஒன்றின் மூலம் இக் கோட்பாட்டை விளக்குவோம். பிறப்பெடுக்கிற உயிர்களுக்குப் பசி உண்டாகிறது. அது முதல் விக்னம். பசியைப் போக்க உயிர்கள் முயலுகின்றன. அம்முயற்சி அறிவு வளர்ச்சியில் கொண்டு சேர்க்கிறது. உணவை எங்கிருந்து எவ்வாறு பெறு வது என்னும் கேள்வி பிறக்கிறது. அறிவு வளர்ச்சிக்கேற்றவாறு அதற்கு விடை கிடைக்கிறது. அறிவு என்னும் ஆயுதத்தைக் கையாண்டு விக்கினம் என்னும் எதிர்ப்பு ஆயுதத்தை மீளுவது வாழ்க்கையின் குறிக்கோளாகிறது. தடையை மீளுகிற ஒவ்வொரு தடவையும் நமக்கு மகிழ்வு உண்டாகிறது. நம்மை ஈன்றெடுத் துள்ள பராசக்திக்கும் அச்செயல் மகிழ்வூட்டுகிறது. ஆக, அறிவை நன்கு பயன்படுத்தி வாழ்வில் முன்னேற்றம் அடைகின்ற ஜீவர்கள் எல்லாரும் அம்பிகைக்குப் பெருமகிழ்வு ஊட்டி வருகிறார்கள்.

भण्डासुरेन्द्र निर्मुक्त शस्त्र प्रत्यस्त्र वर्षिणी ७९

பண்டாஸுரேந்த்ர நிர்முக்த சஸ்த்ர ப்ரத்யஸ்த்ர [வர்ஷிணீ 79

பண்டாசுரன் எய்த பாணங்களுக்கு எதிர்ப்புப் பாணங்களைப் பொழிந்தவள்.

கதை, கழி போன்றவைகளைக் கையில் வைத்துக்கொண்டே எதிரிகளைத் தாக்குகிறோம். அத்தகைய ஆயுதங்களுக்குச் சஸ்திரங்கள் என்று பெயர். கல், அம்பு, துப்பாக்கிக் குண்டு ஆகியவைகளைப் புறத்தில் போகச்செய்து எதிரிகளைத் தாக்குகிறோம். பிரயோகிப்பவர்களுடைய கையிலின்று புறத்தில் சென்று நாசம் செய்யும் ஆயுதங்களுக்கு அஸ்திரங்கள் என்று பெயர்.

அக்ஞானமானது உருவகப்படுத்தி பண்டாசுரன் என்று ஈண்டு இயம்பப்பெறுகிறது. கேடுகள் அனைத்துக்கும் அடிப்படைக் காரணமாய் இருப்பது அக்ஞானம். நோய் என்பது ஒரு பொல்லாங்கு. அறியாமையினால் நாம் பெரிதும் நோயை வரவழைத்துக் கொள்கின்றோம். வியாதி என்னும் சஸ்திரத்தை அக்ஞானம் என்னும் பண்டாசுரன் கிளப்புகிறான். அந்நோயைப் போக்குவதற்கான உபாயங்களை ஆராய்ச்சியின் வாயிலாகக் கண்டுபிடிக்கின்றோம். எண்ணிறந்த நோய் வகைகள் உயிர்களுக்கு உண்டாகின்றன. அந்நோய்களையெல்லாம் நீக்குவதற்கான உபாயங்களும் இயற்கைத் தாயினிடத்து இருக்கின்றன.

நோய்க்கு இடம் கொடாதிருப்பது நல்ல வாழ்க்கை முறையாகும். நல்ல வாழ்க்கை முறையை எதிர்த்தும் நோய்கள் தோன்றுகின்றன. அந்நோய்களை அகற்றுதற்கான உபாயங்களைக் கையாளுதல் பிரத்தியஸ்திரமாகிறது. உயிர்கள் அனைத்திற்கும் பிரபஞ்ச வாழ்க்கையில் சத்துருக்கள் இருக்கின்றன. அந்தச் சத்துருக்களின் ஆக்கிரமிப்பைச் சாமர்த்தியமாகச் சமாளிப்பதும் முறியடித்து ஓட்டுவதும் பிரத்தியஸ்திரப் பிரயோகமாகும். இங்ஙனம் இயற்கை முழுதிலும் தீங்கும் தீங்கைத் தவிர்ப்பதற்கான முறைகளும் நிறைந்திருக்கின்றன.

தீங்கை ஏன் முதலில் அம்பிகை உண்டுபண்ணவேண்டும்? பிறகு அவைகளை அகற்றுதற்கான உபாயங்களை ஏன் வழங்க வேண்டும் என்னும் கேள்வி எழலாம். தீங்கு இல்லாவிட்டால் வாழ்வில் போராட்டமில்லை. போராட்டமில்லாவிட்டால் நல்ல பயிற்சியில்லை. பயிற்சியில்லாவிட்டால் வாழ்க்கையில் முன்னேற்றமில்லை. இப்பிரபஞ்சம் முழுதிலும் தீங்கு ஒன்றும் இல்

லாது நலனே நிறைந்திருக்குமாகில் உயிர்களனைத்தும் பிறப் பெடுத்தபடியே முயற்சியற்றுக் கிடக்கும். அதனல் முன்னேற்றத் தையும் அவைகள் காணமாட்டா. தீமை என்கிற சஸ்திரமும், தீமையைக் களைதல் என்கின்ற பிரத்தியஸ்திரமும் மாறி மாறி வேலை செய்யாவிட்டால் உலக வாழ்வில் உற்சாகம் இல்லாது போய்விடும். இவ்விரண்டுக்குமிடையில் போராட்டத்தின் வாயிலாக அம்பிகை உயிர்களை உயர்நிலைக்கு எடுத்து வரு கின்ருள்.

**करांगुलि नखोत्पन्न नारायण दशाकृती ८०**

**கராங்குலி நகோத்பன்ன நாராயண தசாக்ருதீ 80**

நாராயணனுடைய பத்து அவதாரங்களும் அம்பிகை யினுடைய நகக்கண்களினின்று தோன்றி வரும்படி செய்தவள்.

தசாவதாரங்களுள் பல ஏற்கனவே நிகழ்ந்தவைகள் என் றும், ஒரு சில இனி நிகழப்போகின்றவைகள் என்றும் புராணங் கள் கூறுகின்றன. ஆனல் இயற்கையின் நடைமுறையைச் சரி பாக ஆராய்ந்து பார்க்குமிடத்து அவ் அவதாரங்கள் சர்வ கால மும் இயற்கையில் நிறைந்திருக்கின்றன என்பது புலப்படும். அவதாரம் என்னும் சொல்லுக்கு உயர்நிலையினின்று கீழ்நிலைக்கு இறங்கிவருதல் என்னும் பொருள் அமைந்திருக்கிறது. பஞ்ச பூதங்களுள் அப்பு என்னும் பூதம் உருவெடுத்தபொழுது மச்சியா வதாரம் உண்டாயிற்று. பத்து அவதாரங்களுள் அது முதலா வது அவதாரமாகும். நீர்வாழ்வன அனைத்தும் ஒன்றுகூடி மச்சியாவதாரமாகிறது. அது சதா இயற்கையில் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. ஆக, அன்ருெருகால் நிகழ்ந்த மச்சியா வதாரம் என்பதைச் சர்வகாலமும் நிகழ்ந்து வருகின்ற மச்சியா வதாரங்கள் என்று இயற்கைத் தாயின் செயலை இருக்கிறபடி ஏற்றுக்கொள்ளவேண்டும்.

கூர்மாவதாரம் இரண்டாவதாக வந்தமைகிறது. கூர்மம் என்பது ஆமை. அதனிடத்து ஒரு சிறப்பு உண்டு. நீரில் பிறந்து நீரிலே வாழ்ந்திருக்கின்ற ஆமையானது இடையிடையே நிலத் துக்கும் வரமுடியும். சிருஷ்டியில் நீருக்குப் பிறகு உருவெடுத்தது

நிலம். நீரிலே வாழ்ந்திருப்பவைகளுள் சில நிலத்தில் வாழ வேண்டும் என்று ஆங்குக் குடியேறியது இயல்பு. நீர், நிலம் ஆகிய இரண்டிலும் வாழக்கூடிய ஜந்துக்கள் சில இருக்கின்றன. ஆமை, நண்டு, தவளை, முதலை ஆகியவைகளை முக்கியமானவைகளாகக் கூறலாம். இவையாவுக்கும் பொதுப் பெயர் கூர்மம். பரிணமத்தில் மீன்களைவிட இந்த ஜீவஜந்துக்கள் ஒரு படி மேலே வந்திருக்கின்றன. இது முன்னேற்றத்தின் அறிகுறி.

வராகம் அல்லது பன்றி உருவெடுத்தது மூன்றாவது அவதாரம் ஆகும். இப்பொதுப் பெயருக்கு ஒத்த முறையில் எருமை, நீர்யானை, கல்யானை, நீர்நாய் முதலியன இருக்கின்றன. இவைகள் பெரிதும் நிலத்திலே வசித்திருந்தாலும் நீரினிடத்தும், சதுப்பு நிலத்தினிடத்தும் பற்றுதல் வைத்திருக்கின்றன. நிலத்தில் வாழ்ந்து இவைகள் முன்னேற்றமடைந்து வருகின்றன.

நரசிம்மம் என்பது நான்காவது அவதாரம். நரனும் சிங்கமும் சேர்ந்து அமைந்தது நரசிம்மம். மனிதனும் விலங்கும் ஒன்றுபட்ட உயிராகிறது நரசிம்மம். மனுஷத் தன்மையும் விலங்குத் தன்மையும் சேர்ந்துள்ள உயிருக்கு நரசிம்மம் என்று பெயர். மக்களில் பெரும்பான்மையோரை நரசிம்ம மூர்த்திகள் எனலாம். ஏனென்றால் அவர்களிடத்து விலங்குத் தன்மைகளும், மனுஷத் தன்மைகளும் சேர்ந்து புதைந்து கிடக்கின்றன. பரிணமத்தில் மனிதனுடைய பாங்கு இவ்வடிவத்தில் உருவெடுக்க ஆரம்பித்துள்ளது.

வாமன அவதாரம் ஐந்தாவதாக அமைகிறது. குட்டை மனிதன் என்பது இதன் பொருள். பண்பாடடையாத மனிதன் என்பது இதன் கருத்து. பண்பாடடையாத மனிதன், காட்டுமிராண்டி, மனிதக் குரங்கு ஆகிய ஜந்துக்களை வாமன அவதாரத்தில் சேர்க்கலாம். மனிதனுடைய வடிவம் எடுத்திருந்தும் மனுஷத்தன்மை இன்னும் இவ்வுயிர்கள்பால் உயர்நிலைக்கு வரவில்லை.

பரசுராமன் ஆறாவது அவதாரமாகிறான். இதில் மனுஷத் தன்மைகளெல்லாம் நன்கு உருவெடுத்துவிட்டன. உடலமைப்பிலும் உள்ளத்தின் அமைப்பிலும் இந்த மூர்த்தி உயர்நிலைக்கு வந்துள்ளான். ஆயினும் குரோதம், சீற்றம் போன்ற குறைநிலைகள் சில இவ்வடிவத்தில் தெளிவாகத் தென்படுகின்றன.

தசரதராமன் ஏழாவது அவதாரமாகிறுன். நரோத்தமன் அல்லது நிறைமனிதனுக்கு இம்மூர்த்தி எடுத்துக்காட்டு ஆகிறுன்.

மனிதன் போன்று தென்படினும் அவன் பரமாத்மாவே. எட்டாவது அவதாரமாகிய கிருஷ்ணனிடம் இப்பெருநிலையைக் காண்கிறோம்.

இந்த மகோன்னத நிலையை சுயப்பிரயத்தனத்தால் மனிதன் பெறமுடியும் என்னும் கோட்பாட்டை ஒன்புதாவதாக அமைந்துள்ள புத்தாவதாரம் விளக்குகிறது. ஜீவர்கள் எல்லாரும் பலப்பல படித்தரங்களில் உள்ள பரமனின் அவதாரங்களாம். சுயப்பிரயத்தனத்தால் அவர்கள் பரிபூரணத்தை எட்டலாம்.

பிரளயத்தில் இத்தோற்றங்கள் அனைத்தும் ஒடுங்குகின்றன என்னும் உண்மையைக் கல்கி என்னும் பத்தாவது அவதாரம் விளக்குகிறது. அன்னை பராசக்தியின் சான்னித்தியத்தில் இந்தப் பத்து அவதாரங்களும் சர்வகாலமும் இடம் பெற்று வருகின்றன. ஜீவகோடிகளின் தொகையே தசாவதாரம். அவை யாவும் அம்பிகையில் அடங்கியிருக்கின்றன.

**महा पाशुपत अस्त्राग्नि निर्दग्ध असुरसैनिका ८१**

மஹாபாசுபத அஸ்த்ராக்னி நிர்தக்த அஸுரஸைனிகா

மஹா பாசுபத அஸ்திரத்தால் அசுரப்படைகளைக் கொளுத்துபவள்.

**कामेश्वरास्त्र निर्दग्ध सभण्डासुर शून्यका ८२**

காமேச்வராஸ்த்ர நிர்தக்த ஸபண்டாஸுர சூன்யகா 82

காமேசுவர அஸ்திரத்தால் பண்டாசுரனை மாய்த்தவள்.

**ब्रह्मोपेन्द्र महेन्द्रादि देवसंस्तुत वैभवा ८३**

ப்ரஹ்மோபேந்த்ர மஹேந்த்ராதி தேவஸம்ஸ்துத வைபவா 83

பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய தேவர்களால் போற்றப்பட்டவள்.

**हरनेत्राग्नि सन्दग्ध काम सञ्जीवनौषधिः** ८४

ஹரநேத்ராக்னி ஸன்தக்த காம ஸஞ்சீவனௌஷதி: 84

சிவனுருடைய நெற்றிக்கண்ணினுல் சாம்பலாக்கப் பட்ட மன்மதனுக்கு மறுபடியும் உயிர்கொடுத் தவள்.

**श्रीमद्वाग्भव कूटैक स्वरूप मुखपङ्कजा** ८५

ஸ்ரீமத் வாக்பவ கூடைக ஸ்வரூப முகபங்கஜா 85

வாக்பவம் அல்லது வசீகரமான ஞான அறிகுறி களோடு கூடிய முகத்தை உடையவள்.

**कण्ठाधः कटिपर्यन्त मध्यकूट स्वरूपिणी** ८६

கண்டாத: கடிபர்யந்த மத்யகூட ஸ்வரூபிணீ 86

அன்னை பராசக்தியின் வடிவத்தில் கழுத்திலிருந்து இடுப்பு வரை உள்ள பகுதிக்கு மத்திய கூடம் என்று பெயர்.

**शक्तिकूट एकतापन्न कट्यधोभाग धारिणी** ८७

சக்திகூட ஏகதாபன்ன கட்யதோபாக தாரிணீ 87

பராசக்தியின் வடிவத்தில் இடுப்புக்குக் கீழ் இருக் கும் பகுதிக்கு சக்திகூடம் என்று பெயர்.

**मूलमन्त्रात्मिका** — மூலமந்த்ராத்மிகா ८८

மூலமந்த்ரமயமாயிருப்பவள்.

**मूलकूटत्रय कलेबरा** — மூலகூடத்ரய கலேபரா ८९

மூலமந்த்ரத்தின் மூன்று கூடங்களைச் சரீரமாக உடையவள்.

**कुलामृत एकरसिका** — குலாம்ருத ஏகரஸிகா ९०

சஹஸ்ராரத்திலிருந்து வடிகின்ற அமிர்தத்தைப் பானம் பண்ணுவதில் மகிழ்வடைகின்றவள்.

**कुलसङ्केत पालिनी** — குலஸங்கேத பாலினீ ९१

குலத்தை ஒட்டிய அடிப்படைக் கோட்பாடுகளை முறையாகக் காப்பவள்.

அம்பாளுடைய வழிபாட்டு முறைகள் குலம் எனப் பகரப் பெறுகின்றன.

**कुलाङ्गना** — குலாங்கனா ९२

குலமாது ஒருத்திக்குரிய பண்புகளை நன்கு காப்பவள்.

**कुलान्तःस्था** — குலாந்த:ஸ்தா ९३

குலம் என்னும் திரிபுடியில் அறிவு மயமாயிருப்பவள்.

காண்போன் காணுதல், காணப்படுபொருள் ஆகிய மூன்றும் சேர்ந்து வேதாந்த பரிபாஷையில் திரிபுடி எனப்படுகின்றன. அம்மூன்றனுள் நுண்ணறிவு மயமாயிருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

**कौलिनी** — கௌலினீ ९४

சிவசக்தி மயமாயிருப்பவள்.

**कुलयोगिनी** — குலயோகினீ ९५

குலத்தோடு நன்கு கூடியிருப்பவள்.

காண்போன், காணுதல், காணப்படுபொருள் ஆகியவை ஒன்றுகூடி குலம் என்னும் பெயர் பெறுகின்றன. அளப்பவன், அளவை, அளக்கப்படுபொருள் எனவும் திரிபுடி பொருள்படுகிறது. பிரபஞ்சத்தை முறையாக அளத்தல், அப்படி அளக்கும் செயலில் பிழை போகாதிருத்தல், அதன் விளைவாக ஒவ்வொரு பொருளும் தன் தன் தரத்துக்கேற்ற பிரகாரம் அமைந்திருப்பதும் பிரபஞ்சத்தின் மஹிமையாம். அம்பிகையின் வல்லமையே இம்மஹிமைக்குக் காரணமாகிறது.

**अकुला** — அகுலா ९६

குணங்களுக்கெல்லாம் அதீதநிலையில் இருப்பவள்.

ஏழு ஞான பூமிகளுள் முதல் ஆறு பூமிகளும் குலத்தோடு சம்பந்தப்பட்டவை. ஏழாவது ஞானபூமியாகிய சஹஸ்ராரம் முற்றிலும் சிவசொருபமாய் இலங்குகிறது. அந்த நிலையிலும் சக்தியானவள் சிவத்தோடு அபேதமாய் இலங்குகின்றாள்.

**समयान्तःस्था** — ஸமயாந்த:ஸ்தா ௯௭

சமயத்தினுள் வீற்றிருப்பவள்.

சமயம் என்றால் என்ன என்பதை நாம் அறிந்துகொள்ள வேண்டும். இந்து மதத்தில் ஆறு சமயங்கள் இருக்கின்றன. அவைகள் முறையே சைவம், வைஷ்ணவம், சாக்தம், காணபத்தியம், கௌமாரம், சௌரம் என்று சொல்லப்படுகின்றன. ஜைன மதம் பௌத்தமதம் ஆகியவைகள் இந்தியாவில் உருவெடுத்தவைகள் எனினும் வேதத்துக்கு அவைகள் புறச்சமயங்கள் எனப் பகரப்பெறுகின்றன. ஏனென்றால் இந்த இரண்டு சமயங்களும் வேதத்தைப் பிரமாணமாக அங்கீகரிப்பதில்லை. வெளிநாடுகளிலிருந்து இந்தியாவுக்குள் வந்துள்ள பாரசீகமதம், யூதமதம், இஸ்லாமிய மதம், கிறிஸ்துவமதம் ஆகியவைகளும் சமயங்கள் எனப்படுகின்றன. இவையாவுக்கும் பொதுப்பெயர் சமயம் என்பதாம். ஒழுங்குப்பாடான வாழ்க்கை முறை என்பது அதன் பொருள்.

ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்

என்பது மறைமொழி. மனிதனை உயர்நிலைக்கு எடுப்பதன் பொருட்டே ஒவ்வொரு சமயமும் அமைந்திருக்கிறது. எந்த உயிருக்கு எந்த உணவு பொருத்தமானதோ, எது உடல் அமைப்புக்கு முற்றிலும் ஒத்ததோ அதை உண்டு அவ்வுயிர் வாழ்வில் முன்னேற்றம் அடைந்து வருகிறது. அத்தனைவித உணவு வகைகளை அன்னை அமைத்து வைத்திருப்பது அவளுடைய அருளுக்கு அறிகுறியாகும். அதே பாங்கில் சமயங்கள் பலவற்றை அருள்கூர்ந்து அன்னை அமைத்து வைத்திருக்கின்றாள். மக்களுடைய மனப்பான்மைக்கும் ஐதிகத்துக்கும் ஏற்ப அவரவர்க்கு உகந்த சமயத்தை இனிது அனுஷ்டிக்கலாம். முறையாக அனுஷ்டித்தால் அவர்கள் முன்னேற்றம் அடைவது திண்ணம்.

ஏனென்றால் அம்பிகையினுடைய சான்னித்தியமே ஒவ்வொரு சமயத்திலும் இருக்கிறது. இவ்வுண்மையை அறிகின்றவர்கள் தங்களுக்கு ஒவ்வாத சமயங்களை அலட்சியப்படுத்தலாகாது. அப்படி அலட்சியப்படுத்துவது அன்னை பராசக்தியையே அலட்சியப்படுத்துவதற்கு ஒப்பாகும். அன்னையை எல்லாச் சமயங்களிலும் காண்பதே ஒருவித வழிபாடாகும்.

**समयाचार तत्परा — சமயாசார தத்பரா** ௯௮

சமய அனுஷ்டானத்தில் ஆழ்ந்து கருத்து செலுத்துகிறவள்.

ஆசாரம் என்பது நல்லொழுக்கம். அநாசாரம் என்பது கூடா ஒழுக்கம். ஆசாரம் என்னும் சொல்லினின்று சரிதம் அல்லது முறையான வாழ்க்கை என்ற பதம் வந்துள்ளது. சமயம் ஒன்றில் அமைந்துள்ள சிறப்பு அதை அனுஷ்டிப்பவர்களின் வாயிலாக விளங்குகிறது. நல்லுணவை உண்டு செமித்து ஜீரணம் பண்ணுகிறவர்கள் உடல் வளர்ச்சி அடைகின்றனர். உணவின் சிறப்பு உடல் வளர்ச்சியினின்று வெளியாகிறது. அங்ஙனம் சமயத்தின் சிறப்பு அதைப் பின்பற்றி ஒழுகுகின்றவர்கள் அடையும் விழுப்பத்தினின்று வெளியாகிறது.

யாரோ ஒருவனுக்குச் சரியாக உணவு சமைக்கத் தெரியவில்லை என்பதை முன்னிட்டுச் சமைப்பதை நிறுத்திவிட முடியாது. ஏனென்றால் உணவில்லாது உடல் வாழ்க்கை நிகழாது. அரை குறையாகச் சமைத்த உணவையாவது மனிதன் உண்டே ஆகவேண்டும். பின்பு உணவைப் படிப்படியாக நல்லுணவாகத் திருத்தி அமைக்கவும் மனிதன் கடமைப்பட்டிருக்கின்றான். உணவு உடலுக்கு எவ்வளவு இன்றியமையாததோ, சமயம் உள்ளத்துக்கு அவ்வளவு இன்றியமையாதது. சமயத்தை அனுஷ்டித்து மனிதன் சிறுமையுறுகிறான் என்றால் அம்மனிதன் சமயத்தைச் சரியாக அறிந்துகொண்டவனுமல்லன்; சரியாக அனுஷ்டிப்பவனும் அல்லன். முன்னேற்றம் அடையாதவன் தன் அனுஷ்டானத்தில் ஏதோ குறை இருக்கிறது என்பதை அலசி ஆராய்ந்து அதை நிறைநிலையாகத் திருத்தியமைக்கக் கடமைப்பட்டிருக்கிறான். இந்த இருதரத்தாரும் சமயத்தைச்சரியாக அறிந்துகொண்டவர்கள் அல்லர்.

தத்பரா என்னும் பதம் அதில் கண்ணும் கருத்துமாய் இருப்பவள் என்று பொருள்படுகிறது. உலகத் தாய் ஒருத்தி தன் குழந்தைக்கு உணவுகொடுத்து அதை நன்கு வளர்ப்பதில் கண்ணும் கருத்துமாய் இருப்பதற்கு ஒப்ப அன்னை பராசக்தி தன் சிருஷ்டியிலுள்ள ஜீவகோடிகள் அனைத்தும் முன்னேற்றம் அடைவதில் கண்ணும் கருத்துமாய் இருக்கின்றாள். இவ்வுண்மையை அறிந்து அன்னையின் திட்டத்தைப் பணிவுடன் சார்ந்திருப்பவர்களுக்கு நல்வழி விரைவில் விளங்குகிறது. அன்னவர் முன்னேற்றம் அடைவதும் திண்ணம். உயிர்களை ஓம்புதலில் பராசக்தி ஈடுபட்டிருக்கிறாள். அவள் திட்டத்தைச் சார்ந்து இனிது ஒழுக மக்கள் கடமைப்பட்டிருக்கின்றனர்.

**मूलाधार एक निलया** — மூலாதார ஏக நிலயா ९९

மூலாதாரத்தைத் தன் முக்கியமான இருப்பிடமாகக் கொண்டிருப்பவள்.

மானுட சரீரத்தில் ஆறு ஆதாரங்கள் இருக்கின்றன. அவைகளுக்கு ஆறுபடை வீடுகள் என்றும், ஆறுமுகங்கள் என்றும் ஷட்சக்கரங்கள் என்றும் பெயர்கள் வந்திருக்கின்றன. அவ் ஆறினுள் உடலின் அடிப்பாகத்தில் ஆதாரமாய் இருப்பது மூலாதாரம். உடலெங்கும் வியாபித்திருக்கிற சக்தி சிறப்பாக மூலாதாரத்தில் அமைந்திருக்கிறது. சமயம் இங்ஙனம் புகட்டுகிறது. இதை அறிகிற ஆத்ம சாதகன் மூலாதாரத்தை இனிது காப்பாற்றக் கடமைப்பட்டிருக்கின்றான்.

உபமானம் ஒன்றின் வாயிலாக இவ்வுண்மையை விளக்குவது அவசியம். நீராவியை உண்டுபண்ணும் Boiler அல்லது கொதிக்க வைக்கும் உலை என்பதொன்று இருக்கிறது. வேண்டிய அளவு நீர் இட்டு அவ்வுலையில் தீ ஏற்றிக் கொதிப்பை உண்டுபண்ணினால் நீரானது ஆவியாக மாறி அவ்வுலையினுள்ளேயே அடைபட்டிருக்கிறது. ஆவியின் வண்ணம் அதிகரிக்குமளவு அதற்கு வலிவு அதிகமாகிறது. இம்மியளவு ஆவியும் சிதறுண்டுபோகாது கட்டிப்பிடித்து வைத்திருப்பது அவ்வுலையின் சீர் அமைப்பாகும்.

நீராவி உலைக்கு ஒப்ப மானுட சரீரத்தில் மூலாதாரம் அமைந்திருக்கிறது. ஆங்கு உருவெடுக்குகின்ற ஆன்ம சக்தி பிந்துவாக

மாறியமைகிறது. காம நோய்க்கு ஆளாகும் மாந்தர் பிந்து நாசம் செய்து சக்தியைக் குலைக்கின்றனர். பிந்து தாரணம் அல்லது தீவிரமான புலனடக்கம் பயிலுவதன் வாயிலாக மூலாதார சக்தியை ஆன்ம சக்தியாக வளர்க்கின்றான். அந்தச் சக்தியைத் தூய மனதுடனும் ஆழ்ந்த பக்தியுடனும் தெள்ளிய விவேகத்துடனும் காப்பாற்ற வேண்டும். காப்பது விரதம் என்னும் கோட்பாடு இந்த மூலாதார சக்திக்கே சிறப்பாக உரியதாகிறது. தீவிரமான பிரம்மச்சரிய விரதத்தின் வாயிலாக மூலாதார சக்தியைக் காப்பது அவசியம். அப்படிக் காக்கின்ற ஆத்ம சாதகன் அன்னையின் சான்னித்தியத்தை அந்த ஆதாரத்தின்கண் அனுபூதியில் காண வல்லவனாகிறான்.

**ब्रह्मग्रन्थि विभेदिनी — ப்ரஹ்மக்ரந்தி விபேதினீ** १००

*பிரம்ம கிரந்தி முடிச்சை அவிழ்த்தெடுப்பவள்.*

பிரம்மதேவன் படைப்புக் கடவுள். கிரந்தி என்பது முடிச்சு. பிறவிப் பெருங்கடலிலே ஜீவர்களை அவன் முடிபோட்டுக் கட்டி வைத்திருக்கிறான். எத்தனை கோடிகள் பிறவி எடுப்பதாக இருந்தாலும் சலிப்படையாது அவை யாவையும் தொடர்ந்து எடுக்க ஜீவர்கள் ஆயத்தமாய் இருக்கிறார்கள்.

மூலாதாரத்தில் பிரம்மச்சரியத்தின் வாயிலாக அம்பிகையின் ஆராதனை நிகழுமிடத்து அவள் அந்த ஆதாரத்தில் குண்டலினி சக்தியாக உருவெடுக்கின்றாள். குண்டலினி என்பது சுருண்டு படுத்திருக்கின்ற பாம்பு எனப் பொருள்படுகிறது. பாம்பை யாண்டும் சக்தியின் சின்னமாகக் கருதுவது ஐதிகம். குண்டலினி சக்தி மூலாதாரத்தைப் பிளந்துகொண்டு சுஷும்னை நாடி வழியாக மேல்நோக்கிப் போகிறது. எப்பொழுது அச்சக்தி மூலாதாரத்தினின்று மேலே போகிறதோ அப்பொழுதே பிரம்ம கிரந்தி என்னும் பிறவி முடிச்சு அறுத்தெறியப்படுகிறது. பிறவிப் பிணியில் உழலும் சிறுமைக்கு அந்த யோகி பிறகு வருவதில்லை. இந்த மந்த்ரத்தின் பொருள் இதுவேயாகும்.

**मणिपूरान्त रुदिता — மணிபூராந்த ருதிதா** १०१

*மணிபூரம் என்னும் ஆதாரத்தில் எழுந்தருளியிருப்பவள்.*

**विष्णुग्रन्थि विभेदिनी** — விஷ்ணுகிரந்தி விபேதினீ ९०२

விஷ்ணு முடிச்சை உடைத்து அப்பால் செல்பவள்.

**आज्ञाचक्र अन्तरालस्था**—ஆக்ஞாசக்ர அந்தராலஸ்தா १०३

ஆக்ஞா சக்கரத்தின் கண் எழுந்தருளியிருப்பவள்.

**रुद्रग्रन्थि विभेदिनी** — ருத்ரகிரந்தி விபேதினீ १०४

ருத்ர முடிச்சைத் தாண்டி அப்பால் செல்பவள்.

**सहस्रार अम्बुजारूढा** — ஸஹஸ்ரார அம்புஜாருடா १०५

ஸஹஸ்ராரம் அல்லது ஆயிரம் இதழ்களை உடைய தாமரையிலே எழுந்தருளியிருப்பவ்ள்.

**सुधासार अभिवर्षिणी** — ஸுதாஸார அபிவர்ஷிணீ १०६

ஸுதா என்னும் அமிர்தத்தை ஸஹஸ்ராரத்தினின்று பொழியும்படி செய்பவள்.

ஸுதா என்னும் சொல் அமிர்தத்தைக் குறிக்கிறது. சாரம் என்பது தெளிந்தநிலை. தெள்ளியெடுத்த அம்ருதம் என்பது அதன் பொருள். சிவசக்தி ஐக்கியம் ஸகஸ்ராரத்தில் நிகழுங் கால் அங்கிருந்து சொட்டுகிற அம்ருத தாரை மேனி முழு துக்கும் மேதை அல்லது பேரறிவுப் பேரொளியை நல்குகிறது. ஆத்ம சாதகனுக்குச் சமாதி நிலை கூடுகிறது. பிறகு உடலைப் பற்றிய உணர்வு இல்லை. உண்டியைப்பற்றிய உணர்வு இல்லை. பிரபஞ்ச வாழ்வு என்னும் வியவஹாரங்களில்லை. எல்லாம் அதீதம் ஆகிறது. உடலும் பிறகு ஒழிந்துபட்டுப் போகிறது. சிதானந்தப் பரவெளியில் ஜீவன் லயமாகிறுன்.

உடல் ஒழிந்துபட்டுப் போவது மலமாகப் புறக்கணிக்கப்படு கிற பாங்கில் அன்று. கற்பூரம் எரிந்து சுடர்ஆகி மறைவது போன்றது சமாதி நிலையில் மானிட உடல் மறைவது. அம்ருத தாரையானது உடல் முழுதுக்கும் ஆத்ம ஜோதியை நல்குகிறது. அந்தத் தேஜோமய ஆனந்தத்தில் உடல் உணர்வு ஒழிகிறது. கற்பூரம் போன்று உடலும் பூதங்களுள் ஒடுங்குகிறது.

**तटिल्लता समरुचिः** — தடில்லதா ஸமருசி: ௧०७

மின்னல் கொடிபோன்று பிரகாசிக்கிறவள். மின்னல் கொடிக்கு நிகரான சோபை உடையவள்.

பிரபஞ்சத்திலுள்ள வஸ்துக்கள் பரிபக்குவம் அடைந்து வருவதற்கேற்ப சோபை அல்லது ஒளியைப் பெறுகின்றன. அடுப்புக்கரி வைரமாகிற பொழுது அது மின்னுகிறது. கல், மரம், உலோகம் முதலியவைகளை மினுக்கெடுக்குமிடத்து அவைகளில் முகம் தெரிகிறது. காப்பது விரதம் என்னும் கோட்பாட்டுக்கு ஒப்ப ஆத்ம சாதகன் ஐம்பொறிகளைப் புலன்களில் செல்லவிடாது காப்பானாகில் அவனுடைய அமைப்பிலும் ஆத்ம ஜோதி உருவெடுக்கிறது. பளீரென்று வீசுகிற மின்னல் தான் இருக்கும் இடத்தையும் விளக்குகிறது; இருளில் மறைந்து கிடக்கிற பொருள்களையும் விளக்குகிறது. தியான அவஸ்தையில் மின்னல் கொடிக்கு ஒப்பச் சக்தியின் சான்னித்தியத்தைத் தன்னுள் ஆத்ம சாதகன் தரிசிக்கிறான்.

**षट्चक्र उपरिसंस्थिता** — ஷட்சக்ர உபரிஸம்ஸ்திதா ௧०८

ஆறு ஆதாரங்களுக்கும் மேலே ஏழாவது ஞான பூமியில் சுயஞ்ஜோதி மயமாக வீற்றிருப்பவள்.

**महाशक्तिः** — மஹாசக்தி: ௧०९

பேராற்றல் படைத்தவள்.

**कुण्डलिनी** — குண்டலினீ ௧௧०

மூன்றரை வட்டமிட்டிருக்கும் பாம்பு போன்று மூலாதாரத்தில் இருக்கும் ஆத்ம சக்தி.

**बिसतन्तु तनीयसी** — பிஸதந்து தனீயஸீ ௧௧௧

தாமரை நூல் போன்று காட்சிக்கு எளிதில் அகப்படாதவள்.

**भवानी** — பவானீ ௧௧२

பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கவும் அதில் ஜீவர்களுக்கு உயிர் கொடுக்கவும் வல்லவள்.

பவ: என்பது சிவனர் பெயர். அது ஆண்பால். பவானீ என்பது அம்பிகையின் பெயர். அப்பெயர் பெண்பால். சிவனர் அஷ்டமூர்த்தியாகவும் இலங்குகின்றூர். அஷ்டமூர்த்திகளில் ஒன்று ஜல மூர்த்தி. ஜலம் இல்லாவிட்டால் ஜீவர்கள் உயிர் வாழமாட்டார்கள். ஆதலால் சிவனும் சக்தியும் நீர் சொருபமாக இருந்துகொண்டு உயிர்களை ஓம்பி வருகிறூர்கள். பவ: என்னும் பெயரும் பவானி என்னும் பெயரும் ஜல மூர்த்திகள் எனவும் பொருள்படுகின்றன.

**भावनागम्या — பாவனுகம்யா** १११३

பாவனையின் வாயிலாக அடையப்பெறுபவள்.

பாவனை என்பது உள்ளத்தில் உண்டாகும் தெய்வீக உணர்ச்சி. பாவனைக்கேற்றவாறு சாதனம் சாத்தியமாகிறது. ஆத்மசாதகன் மனதைக் கட்டியாளப் பயிலவேண்டும். அவனுடைய மனது புறத்தில் அலைந்து திரியாது உள்ளத்தினுள்ளேயே அடங்கிக் கிடந்தால் மட்டும் போதாது. பகவத் சிந்தனையில் அது ஆழ்ந்து ஊறியிருக்கவேண்டும். கண்ணனுடைய சிந்தனையில் ஆழ்ந்து மூழ்கியிருந்த கோபிமார் ஒவ்வொருத்தியும் ஒரு கிருஷ்ணன் ஆனுள். இதுவே பாவனையின் பயனுகும். ஓயாதே உள்குதல் எனவும் பாவனை பொருள்படுகிறது. அப்படி உள்குவார் உள்ளத்தில் அம்பிகை ஒளிர்கின்றூள். இதுவே பாவனுகம்யா என்பதன் பொருள்.

**भवारण्य कुठारिका — பவாரண்ய குடாரிகா** ११४

பிறவிப் பெருவனமாகிய காட்டை அழிக்கும் கோடரி போன்றவள்.

பரிபக்குவம் அடைந்த ஜீவர்கள் பிறவிக்காட்டில் அலைந்து திரிந்தது போதும் என்று விண்ணப்பிக்கின்றனர். சிறுவர்களைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்து வைத்தவர்களே கல்வி பூர்த்தியான பிறகு பள்ளிக்கூடத்தினின்று பிரித்தெடுப்பது போன்று அன்னை பராசக்தி ஜீவர்களைப் பவ ஆரண்யத்தில் முதலில் விட்டு வளர்க்கின்றூள். ஆங்குப் பெறவேண்டிய அனுபவத்தைப் பெற்ற பிறகு ஜீவர்களை அந்த ஆரண்யத்தினின்று பிரித்தெடுத்துத் தன்மயமாக்குகின்றூள். படிப்படியாகப் பக்குவம் ஆகிவருகின்ற ஜீவ

னுக்கு எந்தப் படித்தரத்தில் எது தேவையோ அதை அவள் எடுத்து வழங்குவது அவளுடைய கருணையாகிறது.

**भद्रप्रिया** — பத்ரப்ரியா ११५

நல்லார்க்கு இனியவள்.

**भद्रमूर्तिः** — பத்ரமூர்த்தி: ११६

மங்களமான வடிவினள்.

**भक्तसौभाग्य दायिनी** — பக்த ஸௌபாக்ய தாயினீ ११७

பக்தர்களுக்கு நலன்கள் யாவையும் வழங்குபவள்.

**भक्तिप्रिया** — பக்திப்ரியா ११८

பக்தியில் பிரியமுள்ளவள்.

**भक्तिगम्या** — பக்திகம்யா ११९

பக்தி நெறியால் அடையப்படுபவள்.

**भक्तिवश्या** — பக்திவச்யா १२०

பக்திக்கு வசமாகிறவள்.

**भयापहा** — பயாபஹா १२१

பயத்தைப் போக்குகிறவள்.

பயம் எங்கிருந்து எப்படி உண்டாகிறது என்பதை ஆராய்ந்து பார்க்கவேண்டும். பயத்துக்குப் பிறப்பிடம் அக்ஞானம். அக்ஞானத்தினின்றே தான்வேறு மற்ற உயிர்கள் வேறு என்னும் பாகுபாடு வருகிறது. மற்ற உயிர்களைத் தனக்கு வேற்றார்களாகக் கருதுவது அக்ஞானத்தின் செயல். பிற உயிர்களுக்குத் தீங்கு செய்ய நினைப்பதும் அக்ஞானத்தின் விளைவு. தீங்கின் வாயிலாகப் பிற உயிர்களின்மீது துன்பம் திணிக்கப்படுகிறது. அறியாமையில் உழல்பவன் பிற உயிர்கள்மீது துன்பத்தைத் திணித்துவிட்டுப் பிறகு அதில் அவன் திருப்தி அடைகிறான். தன்னிலும் எளிய நிலையில் இருக்கும் உயிர்களுக்கு அங்ஙனம் தீமை செய்வது சாத்தியம். அத்தகைய மனிதன் தன்னிலும் வலிய உயிர்களைச் சந்திக்கின்றான். அந்த வலிய உயிர்கள் தனக்

குத் தீங்கு செய்யும் என்றும் சந்தேகப்படுகிருன். தான் தீங்கு செய்து பழகியிருப்பதனுல் மற்ற உயிர்களும் தனக்குத் தீங்கு செய்யும் என்னும் ஐயம் வருகிறது. அந்த ஐயத்தைத் தொடர்ந்து பயம் வருகிறது. பிறவுயிர்களுக்குப் பயத்தை ஊட்டுபவனே பிறவுயிர்கள் தனக்குப் பயத்தை ஊட்டும் என்று எண்ணி அஞ்சு கிருன். ஆனல் அம்பிகை வழிபாட்டில் ஆழ்ந்து ஊறியிருப்பவ னுக்குத் தன்னுயிர் மன்னுயிர் என்னும் வேற்றுமையில்லை. அண் டங்கள் எங்குமிருக்கும் அனந்தங்கோடி உயிர்களெல்லாம் அம்பி கையின் குழந்தைகள்; அம்பிகையின் சொரூபங்கள். அத்தகைய பரந்த கண்கொண்டு காண்கின்றவன் எந்த உயிர்க்கும் தீங்கு செய்வதில்லை. எந்த உயிராவது தனக்குத் தீங்கு செய்யும் என்று பயப்படுவதுமில்லை. பயம் என்னும் நோய் அக்ஞானத்தில் உதித்தது. அம்பிகை வழிபாடு செய்பவனுக்கு அந்நோய் அகலு கிறது. அனைத்தையும் அம்பிகையின் சொரூபமாகக் கண்டு அவன் அபயத்தில் நிலைத்திருக்கிருன். பயம் நீங்குவது அம்பிகை வழிபாட்டின் விளைவாம்.

**शाम्भवी — சாம்பவீ** १२२

**இனிமையை நல்குபவள்.**

சம்பு அல்லது சாம்பவர் என்பது சிவனருக்கு அமைந்த திருநாமமாகும். அத்திருநாமம் பெண்பாலாக வடிவெடுக்கிற பொழுது அது சாம்பவீ என்பதாகிறது. மகிமையும், இளமையும், இனிமையும் ஒன்று சேர்ந்து திகழ்வது சாம்பவரின் விபூதியாம். சாம்பவீயாக இலங்குகின்ற அம்பிகையும் யாண்டும் இளம் கன்னியா சொரூபத்திலேயே இலங்கிக் கொண்டிருக்கிருள். அத் தகைய அம்பிகையை வணங்குகின்றவர்களும் மன அமைப்பில் இளமையே வடிவெடுத்தவர் ஆகின்றனர். பரவஸ்து பழுதுபட்டுப் போகாதது. அது யாண்டும் புத்தம் புதியதாய் இருக்கிறது. பரவஸ்துவே பெண்பாலாகவும் திகழ்கிறது. அந்நிலையில் அவள் சாம்பவீ என்னும் பெயர் பெற்றுள்ளாள். பக்தனுக்கு இனிமையை நல்குபவள் சாம்பவீ.

**शारदा आराध्या — சாரதா ஆராத்யா** १२३

**சாரதையினுல் ஆராதிக்கப்படுகிறவள்.**

சரஸ்வதிக்கு அமைந்துள்ள நாமங்களில் ஒன்று சாரதை என்பதாம். கலைச்செல்வியாகிய சரஸ்வதி தன் கலைகளையெல்லாம் மூலப்பிரகிருதித் தாயினிடமிருந்து பெறுகின்றாள். இரண்டொரு உபமானங்களைக்கொண்டு இதை விளக்குவது அவசியமாகிறது. சூரியகிரணம் மூலநிலையில் கட்புலனாவதில்லை. அது முப்பட்டைக் கண்ணாடியின் வழியாகச் சிதறடையும்பொழுது ஏழு நிறங்களாக விளங்குகிறது. ஏழு நிறங்களும் மூலவெளிச்சத்தின் ஏழு கலைகளாம். அக்கலைகள் சரஸ்வதி சொரூபம். வெளிச்சத்தின் மூலநிலை ஆதிசக்தியின் சொரூபம். அதே பாங்கில் ஓசைக்கு அப்பாலுள்ள அமாத்திரப் பிரணவமாக இருக்கின்றாள். அவள் ஓசை வடிவெடுத்து வரும்பொழுது சப்த ஸ்வரங்களாகத் திகழ்கின்றாள். சப்த ஸ்வரங்கள் சரஸ்வதி சொரூபம். உச்சரிக்கப்படாத ஓசை ஆதிசக்தி சொரூபம். மூலப்பிரகிருதியைச் சார்ந்திருந்தும், உபாசித்தும் வாணிதேவி தன் கலைகளையெல்லாம் விளக்குபவள் ஆகின்றாள்.

சரத்காலம் என்பது ஆறு பருவங்களுள் ஒன்று. மழைபெய்து ஓய்ந்துபோன பிறகு வரும் காலத்துக்குச் சரத் ருது என்று பெயர். அத்தகைய சரத்காலத்தில் சிறப்பாக வழிபடப்படுகின்றவள் சாரதா ஆராத்யா என்னும் பெயர் பெற்றுள்ளாள். சரத் காலத்திலே நன்கு ஆராதிக்கப் பெறுகிறவள் என்பது இதன் பொருள்.

**शर्वाणी — சர்வாணீ** ௧௨௪

நில வடிவத்தில் இருப்பவள்.

சர்வ: என்பது சிவனுக்குரிய பெயர்களில் ஒன்று. அவர் அஷ்டமூர்த்தியாய் இலங்குகிறார். அந்த எட்டு மூர்த்திகளுள் பூமி வடிவத்தில் இருப்பவர்க்கு சர்வ: என்று பெயர். அச்சொல் பெண்பாலாக வடிவெடுக்குமிடத்து சர்வாணீ என்பதாகிறது. இந்நிலையில் சிவமும் சக்தியும் ஒன்றே. அகிலாண்டங்களாய் வடிவெடுத்துள்ள அன்னை பராசக்தி நாம் வசிக்கும் நிலமாகவும் இலங்குகின்றாள். ஆதலால் நிலவுலகை அம்பிகை சொரூபமாகக் கருதுவது நல்ல ஆராதனையாகிறது.

**शर्मदायिनी—சர்மதாயினீ** ௧௨௫

இன்பத்தையும் பாதுகாப்பையும் நல்குபவள்.

சர்மம் அல்லது சர்மன் என்னும் சொல்லுக்குப் பொருள் சுகம் என்பதாம். உயிர்களுக்கு அம்பிகை சுகத்தைக் கொடுத்துக் கொண்டிருப்பதால் அவளுக்கு இப்பெயர் வந்துள்ளது. உலகிலுள்ள உயிர் வகைகள் சுகத்தை அனுபவியாவிடில் அவைகள் வாழ்க்கையில்பற்று வைக்கமாட்டா. அகப்படுகிற இன்பத்தை முன்னிட்டே உயிர்களனைத்தும் வாழ்வில் பெரும் பற்றுதல் வைத்திருக்கின்றன. இந்த இன்பம் உண்மையில் அம்பிகையிடமிருந்து வருகிறது. ஆதலால் இன்பத்தை அனுபவிக்கின்ற ஆத்ம சாதகர்கள் அது அம்பிகையிடமிருந்து வருகிறது என்று அறியுங்கால் அந்த இன்பத்தில் அவர்கள் தெய்விகம் காண்பார்கள்.

**शाङ्करी—சாங்கரீ** १२६

நன்மையைச் செய்ப்வ்ள்.

சங்கரன் என்னும் சொல்லுக்கு இலக்காய் இருப்பவர் சிவன். நலனையே செய்து கொண்டிருப்பவர் என்பது அச்சொல்லுக்குப் பொருள். அவர் பெண்பாலாகக் கருதப்படுகிற இடத்து சங்கரீ என அப்பதம் மாறுகிறது. அன்னை பராசக்தி உலகுக்கு நலனையே செய்து கொண்டிருக்கிறாள். கேடுகள் பல திரும்பத் திரும்ப நமக்கு வந்து வாய்ப்பதை அனுபவத்தில் காண்கிறோம். குறுகிய நோக்கத்தில் பார்க்குமிடத்துச் செயல் ஒன்று கேடாகத் தென்படுகிறது. பரந்த நோக்குடன் பார்க்குமிடத்துக் கேடு போன்று தென்படுவதிலும் நலன் அமைந்திருப்பது விளங்கும். ஆதலால் நலன், கேடு ஆகிய எல்லாச் செயல்களும் ஜீவர்களைப் பண்படுத்துதற்கே அமைந்திருக்கின்றன. அச்செயல்களெல்லாம் அம்பிகையின் பெரும் திட்டத்தில் இடம் பெறுகின்றன. அதை முன்னிட்டு அம்பிகை சாங்கரீ அல்லது நலனையே செய்பவள் என்று போற்றப்படுகிறாள்.

**श्रीकरी — ஸ்ரீகரீ** १२७

திருவை உருவாக்குகிறவள்.

ஸ்ரீ அல்லது திரு என்னும் பதத்துக்குப் பொருள்கள் பல இருக்கின்றன. அவற்றுள் முக்கியமாய் இருப்பவைகளைச் சம்பத்து, மங்களம், அழகு, காம்பீர்யம், ஒளி என்றெல்லாம் இயம்பலாம். தெய்வ சாந்நித்தியமும் தெய்வ அனுக்கிரகமும்

எங்கு இருக்கின்றனவோ ஆங்கு இந்த மகிமைகளெல்லாம் நிறைந்திருப்பது வெளிப்படை. எனவே அம்பிகை ஸ்ரீகரீ என்று அழைக்கப்படுகிருள்.

**साध्वी — ஸாத்வீ** ౧౨౮

**யாண்டும் பதிவிரதையாக இருப்பவள்.**

தத்துவ பூர்வமாகப் பார்க்குமிடத்து இந்த அடைமொழி அம்பிகைக்கு முற்றிலும் பொருத்தமானது என்பது விளங்கும். சிவம் வேறு சக்தி வேறன்று; இரண்டும் ஒன்றே. சக்தி சிவத்துக்கு அபின்னமானது. சிவத்துக்குப் புறம்பாகச் சக்திக்கு வியக்தி கிடையாது. சில சான்றுகள் வாயிலாக இவ்வுண்மையை விளக்கலாம். மொழியில் உயிரெழுத்து, மெய்யெழுத்து ஆகிய இரண்டுவித எழுத்துக்கள் இருக்கின்றன. உயிரெழுத்து சிவ சொரூபம். மெய்யெழுத்துச் சக்திசொரூபம். உயிர் எழுத்தைச் சார்ந்தாலொழிய மெய்யெழுத்துக்குப் பொருளும் இல்லை: தனக்குரிய ஒலியை விளக்கவும் இயலுவதில்லை. தன் இயல்பை விளக்குதற்கு யாண்டும் அது உயிரைச் சார்ந்து இருக்கிறது. கணிதத்தில் ஒன்று என்னும் இலக்கம் சிவசொரூபம். பூஜ்யம் சக்தி சொரூபம். ஒன்றைச் சார்வதால் பூஜ்யத்திற்கு மதிப்பு வருகிறது. தனிப் பூஜ்யத்திற்கு மதிப்பு இல்லை. இயற்கையில் ஏழு நிறங்கள் சூரிய வெளிச்சத்தின் சிதைவுகள். சூரிய வெளிச்சம் சிவனுக்கு நிகர். சூரிய வெளிச்சத்தைச் சார்ந்திருந்து ஏழு நிறங்கள் மிளிர்கின்றன. அக்னியைச் சார்ந்திருந்து வெப்பம் வெளிப்படுகிறது. சூரியனைச் சார்ந்திருந்து வெளிச்சம் விளங்குகிறது. அங்ஙனம் சிவனைச் சார்ந்திருந்தே அம்பிகை மகிமை மிகப் படைத்தவளாகின்ருள். ஆதலால் அவள் ஸாத்வீ என்று சாற்றப்பெறுகின்ருள். தன் தலைவனாகிய சிவனுருடன் பாகம் கொண்டிருப்பதால் அம்பிகை ஸாத்வீ ஆகின்ருள். இது கிடைப்பதற்கு அரியபெரிய பேறுகும்.

**शरत् चन्द्रनिभ आनना — சரத் சந்த்ரனிப ஆனனு** ౧౨౯

**சரத் காலத்தில் முற்றிலும் தூயதாய்த் திகழ்கிற சந்திரனுக்கு நிகரான முகத்தை உடையவள்.**

மழை பெய்து ஓய்ந்துபோயிருக்கும் புரட்டாசி மாதத்தை சரத் காலம் என்கிருேம். அப்பொழுது வானத்தில் மேகம் தென்

படுவதில்லை. அது முற்றிலும் நீலநிறமாய் இருக்கிறது. மேகம் சிறிதளவும் இல்லாது தெளிந்த வெட்டவெளியில் இரவிலே திகழ்கின்ற திங்களுக்குத் தனி எழில் உண்டு. அம்பிகையின் முகவிலாசம் அத்தகையது. இனிமையும் குளிர்ச்சியும் சாந்தமும் பேரின்பமும் நிறைந்துள்ள அத்தகைய முகவிலாசத்தைப் பாவனை பண்ணுவது சிறந்த தியானமாகும். வானத்தில் மேகங்களெல்லாம் நீங்கப்பெற்றிருப்பது போன்று ஆத்ம சாதகனுடைய உள்ளத்தினின்று எண்ணங்களெல்லாம் ஒதுக்கப்பட்டிருத்தல் வேண்டும். எண்ணங்களெல்லாம் ஒதுக்கப்பட்ட உள்ளம் ஸ்படிகம் போன்று தூயதாயிருக்கிறது. அத்தகைய பான்மை படைத்தவனுக்கு இந்த முகவிலாசத்தின் இனிமை விளங்கும்.

**शातोदरी — சாதோதரீ** ௧௩௦

மெல்லிய இடையை உடையவள்.

ஸ்தூலமாகப் பொருள்படுத்துமிடத்து அம்பிகைக்கு இப்பெயர் பொருந்துகிறது. ஏனென்றால் மெல்லிய இடையை உடைத்திருப்பது பெண்பால் ஒருத்திக்கு அழகு நிறைந்த வாய்ப்பாகும்.

அம்பிகை ஹிம்வானுடைய புதல்வி. ஹிமாசலத்திற்கு ஹிமவான் என்பது மற்றொரு பெயர். இமயமலை இங்ஙனம் உருவகப் படுத்தப்படுகிறது. அம்மலையில் எண்ணிறந்த குகைகள் இருக்கின்றன. ஒவ்வொரு குகையும் உதரம் அல்லது வயிறு எனப் பொருள்படுத்தப்படுகிறது. சத + உதரன் = சதோதரன். நூறு வயிறுகளை உடையவன் அல்லது கணக்கற்ற வயிறுகளை உடையவன் என்பது ஹிமவானுக்கு அமைந்துள்ள ஒரு பெயராகும். அத்தகைய ஹிமவானுடைய புதல்வியாதலால் அம்பிகைக்குச் சாதோதரீ என்னும் பெயர் வந்துள்ளது. தத்துவார்த்தமாகப் பார்க்குமிடத்து அகிலாண்டங்களையும் தன்னுள் அடக்கி வைத்திருப்பவள் என்பது இதன் பொருளாகும். வயிற்றுக்குள் விரும்பிய உணவையெல்லாம் போட்டு வைத்திருப்பது போன்று சரம், அசரம் ஆகிய அனைத்தும் அம்பிகையின் சொருபத்தில் அடங்கி இருக்கின்றன.

**शान्तिमती — சாந்திமதீ** ௧௩௧

சாந்தமே உருவெடுத்திருப்பவள்.

மனம் கொந்தளித்துக்கொண்டிருப்பது மக்களின் இயல்பு. விருத்திகள் அதிகரிக்கும் அளவிற்கு மனதில் கொந்தளிப்பு அதிகரிக்கிறது. விருத்திகள் குறையும் அளவிற்கு மனக்கொதிப்பு அடங்குகிறது. மனக்கொதிப்பு ஒடுங்கும் வேளையெல்லாம் அமைதி உண்டாகிறது. அந்த அமைதியைச் சாந்தி என்கிறோம். மேலாம் கருத்துக்கள் மனதில் இடம் பெறுகிறபொழுது சாந்தி தானாக அமைகிறது. வேத வேதாந்த ஆராய்ச்சிகளைச் செய்யும் பொழுது துவக்கத்திலும் முடிவிலும் சாந்தி பாடம் ஓதப்படுகிறது. அந்தப் பாடத்தில் அடங்கியிருக்கும் கருத்தை மனதில் வாங்கும்பொழுதே மனதில் சாந்தி உண்டாகிறது. சாந்தியை நாடுவது சான்றோர் இயல்பு. சாந்தி நிலவும்பொழுது பரஞானம் உருவெடுக்கிறது. பரஞானம் நாடுபவர்கள் எல்லாரும் சாந்தியில் நிலைபெற்றிருக்க வேண்டும். குழந்தைகள் செய்கிற குற்றங்களையெல்லாம் பொருள்படுத்தாது பெற்றெடுத்த தாய் சாந்த முகத்துடன் தன் குழந்தைகளைப் பார்க்கின்றாள். அறிந்தோ அறியாமலோ பக்தர்கள் செய்கிற குற்றங்களையெல்லாம் பொருள்படுத்தாது அம்பிகை சாந்தமே வடிவெடுத்தவளாக இருந்து பக்தர்களைப் பரிபாலிக்கின்றாள். ஆதலால் அவளுக்கு சாந்திமதீ என்னும் பெயர் வந்துள்ளது. அம்பிகையின் சாந்த சொரூபத்தைத் தியானிக்கின்றவர்களுக்கெல்லாம் சாந்தி கிட்டுகிறது.

**निराधारा — நிராதாரா** **१३२**

**புறப்பொருள் எதையும் தனக்கு ஆதாரமாகத் தேடவேண்டிய அவசியம் இல்லாதவள்.**

இயற்கையை ஆராய்ந்து பார்க்குமிடத்து உண்மை ஒன்று வெளியாகிறது. சிறிய பொருள் ஒன்றுக்கு மற்றொரு பெரிய பொருள் ஆதாரமாகிறது. அசையும் பொருள் ஒன்றுக்கு அசையாத பொருள் ஆதாரமாகிறது. அம்பிகையோ எங்கும் வியாபித்திருக்கின்றாள். அவளுக்கு அன்னியமாகப் பொருள் ஒன்றும் இல்லை. அவளுடைய வியாபகத்தை ஆகாச தத்துவத்தின் வாயிலாக நாம் அறிந்துகொள்ள முடியும். நிலம், நீர், நெருப்பு, காற்று ஆகிய நான்கு பூதங்களுக்கு ஆகாசம் ஆதாரமாயிருக்கிறது. ஆனால் எங்கும் வியாபகமாய் உள்ள ஆகாச தத்துவமோ தனக்குத்தானே ஆதாரமாய் இருக்கிறது. அதைத் தாங்குதற்கு

அதற்கு அன்னியமாக வேறு ஒரு பொருள் இல்லே. அம்பிகை தானே அத்தகைய ஆகாசம் ஆகியிருக்கின்ருள். ஆதலால் அவள் நிர் ஆதாரா என்று இயம்பப்பெறுகிருள். அம்பிகையின் இப்பேரியல்பை தியானிக்கின்றவர்களுக்குச் சித்தவிருத்தி அற்றுப்போகிறது. மனம் தாஞக ஒடுங்குகிறது; அல்லது அகண்டாகாரத்தில் அது தனது சிறிய இயல்பை இழக்கிறது. அம்பிகையின் அகண்டாகாரமே எஞ்சி நிற்கிறது.

## निरञ्जना — நிரஞ்ஜஞ ১৩৩

மாசு படியாதவள்.

சிறியது ஒன்று மாசுபடியும் தன்மை உடையதாகும். ஆனல் கடலே மாசுபடுத்த முடியாது. அதில் போடப்படுகிற அஞ்ஜனம் அல்லது அழுக்கானது நிரஞ்ஜனமாகிறது; அதாவது அழுக்கற்ற தாகிறது. அழுக்கடையும் பாங்குடைய பிரபஞ்சத்தையும் அதி லுள்ள உயிர்களேயும் அழுக்கற்றவைகளாக்கும் பேரியல்பு அம்பிகைக்கு உண்டு. ஆதலால் அவள் நிரஞ்ஜஞ என்று இயம் பப்பெறுகிருள்.

## निर्लेपा — நிர்லேபா ১৩৪

மேற்பூச்சு இல்லாதவள்.

மக்கள் தங்களுக்கும தங்களால் கையாளப்படுகின்ற பல பொருள்களுக்கும் மேற்பூச்சுப் போடுகிருர்கள். ஆனல் இயற்கைத் தாயினிடத்து இத்தகைய செயல் செல்லாது. தங்கள் மேனியின் மீது சந்தனம், மஞ்சள், வாசனேப்பொடி முதலியவற்றை மக்கள் பூசிக்கொள்கிருர்கள். உடலே அலங்கரித்தல் பொருட்டு அவர்கள் அங்ஙனம் செய்கின்றனர். வழிபாட்டுக்காக மக்கள் தெய்வத்தின் விக்கிரகத்தைச் செதுக்கி வைத்திருக்கின்றனர். அவ்விக்கிரங் களுக்குச் சந்தனக்காப்பு, மஞ்சள்காப்பு, முதலியன போடுவ துண்டு. மரத்தால் செய்யப்படுகிற தட்டுமுட்டுச் சாமான்கள், கதவு, ஜன்னல் முதலியவைகளுக்கு மினுக்கு எண்ணெய் பூசி அம் மரத்தின் அமைப்புக்கு அதிகப்படியான சோபை தருகிருர்கள். இப்படிச் செய்வது பாராட்டத்தக்க செயல். இனி, தாமிரம், பித்தளேபோன்ற மட்டமான உலோகங்களுக்குத் தங்கம், வெள்ளி முதலியவற்றை முலாம் பூசி அலங்கரிக்கின்றனர். இத்தகைய

செயல்கள் யாவும் லேபனம் அல்லது மேற்பூச்சுப் போடுதல் என்னும் செயலுக்கு இலக்காகின்றன. இயற்கைத் தாய்க்கு அவை தேவையில்லை. தங்கத்துக்கு முலாம் பூசுவதில்லை. அதன் மூல அழகே அதற்குப் போதுமானது. களிமண்ணில் செய்த பழம் ஒன்றிற்குப் பொருத்தமான நிறம் பூசுகிறோம். ஆனால் உண்மையான பழத்துக்கு நிறம் பூசுவதுபொருந்தாது. பார்க்குமிடமெங்கும் உயிர் ஓவியமாக அம்பிகை இலங்குகின்றாள். அவளுக்கு மினுக்குப் பூசுதல் பொருள் அற்றது. அவள் யாண்டும் தன்மயமாய் இருக்கின்றாள். இயற்கைத் தாயினிடத்துக் கர்மம் நிகழ்ந்து கொண்டிருக்கிறதெனினும் அக்கர்மத்தில் அவள் கட்டுப்படாதவள். அவளுடைய சோபையை அதிகப்படுத்துதற்கு மேற்பூச்சு எதுவும் தேவையில்லை.

**निर्मला** — நிர்மலா १३५

அழுக்குப்படியாதவள்.

தேவையில்லாதது ஒன்று மனிதனோடு சம்பந்தப்பட்டிருக்கும் பொழுது அது மலம் அல்லது அழுக்கு என்று பெயர் பெறுகிறது. தண்ணீரில் நனைந்த களிமண் நிலத்தில் கிடக்கிறது. நிலத்துக்கு அதன் வாயிலாகச் சிறப்பு உண்டாகிறது. ஆனால் அக்களிமண் மனிதனுடைய துணியில் வந்து தோய்ந்தால் அது அழுக்கு எனப்படுகிறது. இடம் மாறியமைந்த அமைப்பை முன்னிட்டு அது அழுக்காயிற்று. மனிதன் உண்ணும் உணவு உண்ணும் வேளையிலேயே மலம் என்று அழைக்கப்படுவதில்லை. ஏனென்றால் அது அவனோடு பொருத்தமாக இணைக்கப்படுகிறது. பொருத்தமற்ற பொருள் அம்பிகையின் பேரமைப்பில் எங்குமே இல்லை. ஆணவம், கர்மம், மாயை ஆகியவை மும்மலங்கள் என்று கூறப்படுகின்றன. அம்பிகையோ அணுவுக்கு அணுவாய் அப்பாலுக்கு அப்பாலுமாய் இருப்பதால் அணுத்துவம் அல்லது ஆணவம் அவளுக்கு மலமாகாது. அம்பிகையின் உபாசனையில் ஆழ்ந்து ஈடுபடுகின்றவருக்கும் மலம் ஏதுமில்லை.

**नित्या** — நித்யா १३६

யாண்டும் இருந்தபடி இருப்பவள்.

காலத்தில் அடிபடாது நிலைத்திருப்பது நித்திய வஸ்து. நாமரூபங்கள் நித்தியமாய் இருப்பதில்லை. மேகம், மூடுபனி, உறைபனி, மழைத்துளி, ஆறு யாவும் நாமரூபங்களைச் சார்ந்திருக்கின்றன. ஆயினும் இத்தனை நிலைகளில் நீரானது தனது நீர்மையை இழந்துவிடுவதில்லை. அம்பிகை தன் மூலநிலையில் பரப்பிரம்மனுக்கு அபின்னமானவள். எனவே அவள் நித்திய வஸ்து.

**निराकारा— நிராகாரா** १३७

வடிவம் எடுக்காதவள்.

ஆகாரம் என்னும் சொல்லுக்குப் பொருள் வடிவு என்பதாம். வடிவத்தோடு தென்படுகின்ற தேவிக்கு உண்மையில் வடிவம் இல்லை. நிராகாரா என்பதற்குப் பொருள் மூர்த்தியாக வடிவம் எடுக்காதவள் என்பதாம். சுத்த சைதன்யம் அவளுக்கு மூலநிலை. அந்நிலையில் அவள் நிராகாராவாக இலங்குகின்றாள். நீராவியை நிராகாரப் பொருள் எனலாம். பின்பு நீர், உறைபனி, மழைத்துளி, மேகம் முதலியவற்றைச் சாகாரம் எனலாம். அம்பிகையின் நிஜ நிலை நிர்ஆகாரா என்பதாம்.

**निराकुला—நிராகுலா** १३८

குழப்பமற்றவள்.

ஆகுலா என்றாள் குழப்பம் உடையவள் என்று பொருள். நிராகுலா என்றால் குழப்பமற்றவள் என்பது பொருள். தெளிந்த நீர் நிறைந்த தடாகம் ஒன்று அசைவற்றிருக்கிறது. அப்பொழுது அதில் நம் பிம்பத்தைக் காணலாம். அத்தடாகத்தில் அலை வீசுமாகில் சேறு படிந்து குழம்பிய நிலை எய்துகிறது. பிம்பம் ஒன்றும் தென்படாது. அகக்குழப்பம் வந்துவிட்டால் நலம், கேடுகளைப் பற்றிய ஞாபகசக்தி மறைகிறது. பித்துப் பிடித்தவனுக்கு நிகராக மனிதன் நடந்துகொள்கிறான். அம்பிகையோ அகத்தெளிவே வடிவெடுத்தவள். அவளுடைய சொரூபம் பஞ்சபூதங்கள் மயமாகவும் இருக்கின்றது. அம்பிகைக்கு மேனியாக இருக்கின்ற அவை அல்லோலகல்லோலமாய் இருப்பதற்கிடையில் அவள் முற்றிலும் கலக்கமற்றவளாயிருக்கிறாள். அம்பிகை உபாசனை பண்ணுகின்றவர்களுக்கு அவளுடைய அமைதி நிலை பெரும் பாடம் புகட்டுகிறது.

निर्गुणा—நிர்குணா १३९

குணங்களுக்கு அப்பாற்பட்டவள்.

சத்துவம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்கள் மயமாகப் பிரபஞ்சம் இருக்கிறது. பரவஸ்து ஏககாலத்தில் சகுண வஸ்துவாகவும் நிர்குண வஸ்துவாகவும் இருக்கிறது. சகுணவஸ்துவைச் சக்தி என்றும் நிர்குண வஸ்துவைப் பரப்பிரம்மம் என்றும் பகர்வது ஐதிகம். ஆனால் பிரம்மமும் சக்தியும் இரண்டு வஸ்துக்கள் அல்ல. ஒரே வஸ்து ஏககாலத்தில் இரண்டு நிலைகளிலும் உள்ளது. ஆதலால் அம்பிகையை நிர்குணா என்று நவிலுவது முறை.

निष्कला—நிஷ்களா १४०

அவயவங்கள் அல்லது உறுப்புக்கள் அமையப் பெறாதவள்.

அம்பிகைக்குப் பெண்பால் வடிவம் தருவதை நடைமுறையில் காண்கிறோம். அவயவங்களோடு கூடியிருக்கின்றபொழுது அவள் நமக்குக் கட்புலனாகின்றாள். அவளுடைய யதார்த்த சொரூபம் நிஷ்களா அல்லது அவயவங்கள் அற்றவளாயிருப்பதாம்.

शान्ता—சாந்தா १४१

அமைதியே வடிவெடுத்தவள்.

பிரபஞ்ச சொரூபமாக இலங்கும் அம்பிகை சதா இயங்கிக் கொண்டிருக்கின்றாள். எது இயங்குகின்றதோ அது இயற்கை. இயற்கைத் தாயாக அல்லது ஜகன்மாதாவாக இருக்கும் அம்பிகையிடம் அனந்தங்கோடி செயல்களைக் காண்கின்றோம். செயல்கள் உள்ள இடத்தில் சாந்தி இல்லை. சாந்தி உள்ள இடத்தில் செயல் இல்லை. பராசக்தியின் ஒரு சிறு பகுதி அசைவு, அலைச்சல், அமளி இப்படியெல்லாம் தாண்டவமாடுகிறது. சக்தியின் பெரும்பகுதி அசைவற்று மூலநிலையில் இருந்தபடி இருக்கிறது. ஆதலால் அன்னை பராசக்தி சாந்தா என்று இயம்பப்பெறுகிறாள்.

निष्कामा—நிஷ்காமா १४२

காமம் அல்லது ஆசை ஏதும் இல்லாதவள்.

தேவை ஒன்றுமேயில்லாத பெருநிலையை மானுடன் ஒருவன் எட்டிவிடுவானாகில் அவன் முற்றிலும் அவா அற்றவனாகின்றான். அத்தகைய பெருநிலை பிரத்தியக்ஷமாக அன்னை பராசக்தியிடம் இருக்கிறது. அவள் குறையில்லா நிறைநிலையில் இருக்கின்றாள். நிஷ்காமநிலை பரப்பிரம்ம சொரூபமாம்.

निरुपप्लवा—நிருபப்ளவா १४३

அழிவற்றவள்.

உபப்பிளவா என்னும் சொல் தௌர்பாக்கிய விபத்து எனப் பொருள்படுகிறது. பஞ்சபூதங்களுள் ஆகாசம் நீங்கலாக ஏனைய நான்கு பூதங்களை முன்னிட்டுப் பெரும் துயரம் உயிர்களுக்கு உண்டாகிறது. பூகம்பம் உயிர்களை அல்லற்படுத்துகிறது. பிரவாகம் அல்லது நீர்ப்பெருக்கு பெரும் துன்பத்தை உண்டுபண்ணுகிறது. காட்டுத் தீயின் கொடுமை எத்தனையோ உயிர்களை அழிக்கிறது, புயல்காற்று உண்டாகிறது; பெரும் சேதத்தை உண்டுபண்ணுகிறது. இத்தகைய அல்லல்களுக்கு ஆளாகி உயிர்வகைகள் அடிக்கடி அழிந்துபட்டுப் போகின்றன. பிரபஞ்சத்திலுள்ள அனைத்தும் அழிந்துபட்டுப்போம் பாங்குடையவைகளாய் இருக்கின்றன. ஆனால் யாவற்றுக்கும் ஆதிமூலமாய் இருக்கும் அன்னை பராசக்தியோ நிர்உபப்பிளவா. யாண்டும் ஒரே பாங்கில் அழிவற்றவளாய் அவள் இயங்கிவருகின்றாள். அழிவற்ற நிலை அன்னையின் சான்னித்தியத்தில் இருக்கிறவர்களுக்குச் சொந்தமாம்.

नित्यमुक्ता—நித்யமுக்தா १४४

யாண்டும் யாதொன்றிலும் கட்டுண்ணாது இருப்பவள்.

பிரபஞ்சத்தில் இருக்கிற ஜடப்பொருள்கள் யாவும் கட்டுண்டு கிடக்கின்றன. பிரபஞ்சத்தில் வாழ்ந்துவரும் ஜீவகோடிகள் அனைத்தும் கட்டுண்டு கிடக்கின்றன. முக்தி அல்லது விடுதலை அவைகளுக்கு இம்மியளவும் இல்லை. பந்தம் அல்லது தளை அல்லது கட்டுண்டு கிடக்கும் பாங்கு பிரகிருதியில் உள்ள அனைத்துக்கும் பொதுவாம். அவைகளுக்கிடையில் மனிதனுடைய நிலையை ஆராய்வோம். மனிதன் முக்தி அடையப்பெற்றவன் அல்லன்.

விடுதலைக்கும் அவனுக்கும் வெகுதூரம். அவன் எப்படியெல்லாம் கட்டுண்டு கிடந்து கஷ்டப்படுகிறான் என்பதைக் கணக்கில் எடுப்போம். பிறந்தவுடன் சிசு அழுகிறது. ஏனென்றால் அது பசியில் கட்டுண்டு கிடக்கிறது. நோய்வரும்பொழுது மனிதன் வருந்துகின்றான். ஏனென்றால் உடலிருக்கும் வரையில் அவன் நோய்க்கு ஆளாகின்றான். அதினின்று அவன் விடுதலை அடைந்தவன் அல்லன். விருத்தாப்பியம் வருகிறது. பல துன்பங்களுக்கு அது காரணம். அத்துன்பங்களினின்று அவன் விடுவிக்கப்பட்டவன் அல்லன். இறுதியில் மரணம் வருகிறது. எவ்வுயிர்க்கும் மரணம் இன்பம் தருவதன்று. இவ்வாறெல்லாம் ஜனன மரணத்திலும், பலதரப்பட்ட துன்பங்களிலும் மனிதன் தளைக்கப்பட்டிருப்பதால் அவனை முக்த புருஷன் என்று மொழியலாகாது. அன்னை பராசக்தியோ இந்திரியங்களுக்கு அப்பால் பட்டவள். அவளைத் தளைப்பதற்கு ஒன்றுமில்லை. ஆதலால் அவள் நித்திய முக்தாவாக மிளிர்கின்றாள்.

**निर्विकारा — நிர்விகாரா** १४५

விகாரம் ஏதும் இல்லாதவள்.

அகத்தின் அழகு முகத்தில் தெரியும் என்பது கோட்பாடு. அகம் என்பது உள்ளம். முகம் ஸ்தூல சரீரத்தின் முக்கியமான பகுதி. மனம் அமைதியுற்றிருக்கின்ற பொழுது அதன் அறிகுறி முகத்தில் தெரிகிறது. மனதில் சோகமோ சினமோ உருவெடுக்கும் பொழுது அதற்கேற்ற அறிகுறிகளை முகத்தில் காண்கிறோம். அத்தகைய மாறுபாடுகளை விகாரங்கள் என்கின்றோம். முகம் பார்க்கும் கண்ணாடியை ஒப்பமாக அமைத்தால் முகத்தின் பிம்பம் உள்ளபடி கண்ணாடியில் தென்படுகிறது. அப்படியல்லாது முகம் பார்க்கும் கண்ணாடிகளை வெவ்வேறு விசித்திர முறைகளில் அமைத்தால் ஒவ்வொரு கண்ணாடியிலும் முகத்தின் பிரதிபிம்பம் வெவ்வேறு விகாரங்களுடன் தென்படும். யதார்த்த நிலையினின்று திரிவுபட்டிருப்பது விகாரமாகிறது. அன்னை பராசக்தி யாண்டும் தன்மயமாய் இருக்கின்றாள். விகாரப்படவேண்டிய அவசியம் அவளுக்கில்லை.

ஆத்மசாதகர்கள் இக்கோட்பாட்டை அம்பிகையினிடமிருந்து அறிந்து தங்கள் மனதிலே விகாரம் ஏதும் வாராது அமைதியுற்றி

ருக்கச் செய்தல்வேண்டும். அப்படிச் செய்வது அம்பிகைக்குரிய சிறந்த ஆராதனையாகும்.

**निष्प्रपञ्चा** — நிஷ்ப்ரபஞ்சா १४६

பிரபஞ்சத்துக்கு அப்பாற்பட்டவள்.

அகிலாண்டங்களையும் தொகுத்துப் பிரபஞ்சம் என்கிறோம். சிருஷ்டியில் எத்தனை எத்தனை உலகங்கள் இருக்கின்றனவோ அவையாவையும் தொகுத்துக் கூறுமிடத்து அத்தொகையைப் பிரபஞ்சம் என்கிறோம். ஜீவர்களாகிய நாம் பிரபஞ்சத்தில் வசித்து வருகிறோம். நம்மையும் நம்மைச் சூழ்ந்துள்ள உயிர் வகைகளையும், உலகத்தின் ஒரு பகுதியையும் நாம் கண்கூடாகக் கண்டு வருகிறோம். நம் காட்சிக்கு எட்டாத உலகங்களும், உயிர் வகைகளும் எண்ணிறந்தவைகள். இங்ஙனம் எங்கும் வியாபித்துள்ள அகிலாண்டங்களுக்கும், அனந்தங்கோடி உயிர்வகைகளுக்கும் ஆதாரமாய் இருப்பவள் அன்னை பராசக்தி. அப்படி ஆதாரமாய் இருப்பதற்கிடையில் தான் பிரபஞ்சமாகப் பரிணமிக்கவில்லை. இரண்டொரு சான்றுகளைக்கொண்டு இவ்வுண்மையை அறிந்துகொள்வோம். மங்கிய வெளிச்சத்தில் சுருண்டுகிடக்கும் கயிறு பாம்பு எனப்பொருள்படுத்தப் படுகிறது. பாம்பு என்னும் மயக்கத்துக்கு ஆதாரமாய் இருப்பது கயிறு. பாம்பாகத் தென்பட்டுக்கொண்டிருக்கிற வேளையிலும் அது பாம்பு அன்று. பாம்பு என்னும் கற்பனை கயிற்றின்மீது ஆரோபிக்கப்படுகிறது. அதே பாங்கில் பிரபஞ்சம் என்னும் கற்பனை பராசக்தியின்மீது அஞ்ஞானத்தில் இருப்பவர்களால் ஆரோபிக்கப்படுகிறது.

வானவெளி நீலநிறமாகக் காட்சி கொடுக்கிறது. ஆயினும் உண்மையில் வெட்டவெளி நீலநிறமானதன்று. நிறம் ஏதும் அதற்கில்லை. இல்லாத நீல நிறம் வெட்டவெளியின்மீது ஆரோபிக்கப்படுகிறது. அங்ஙனம் ஆதியும் அந்தமும் உடைய பிரபஞ்சம் ஆதியும் அந்தமும் இல்லாத அம்பிகையின்மீது ஆரோபிக்கப்படுகிறது. பிரபஞ்சமாக அவள் காட்சி கொடுத்துக்கொண்டிருப்பதற்கிடையில் உண்மையில் தன்மயமாகவே இருக்கின்றாள். ஆதலால் அவள் நிஷ்பிரபஞ்சா என்று பகரப்பெறுகின்றாள்.

निराश्रया — நிர்ஆச்ரயா १४७

ஆச்ரயம் ஒன்றும் இல்லாதவள்.

ஆச்ரயம் என்னும் சொல்லுக்கு ஏற்புடைமை, இருக்குமிடம், தங்குமிடம் என்னும் பொருள்கள் அமைந்துள்ளன. துணியின் மீது சாயத்தை ஏற்றுகிறோம். அச்செயலில் சாயத்துக்கு ஆச்ரயமாய் இருப்பது துணி. அப்பாங்கில் அம்பிகை பிரபஞ்சத்துக்கோ அதிலுள்ள உயிர்வகைகளுக்கோ ஆச்ரயமானவள் அல்லள். கண்ணாடியில் பிம்பம் தென்படுகிறது. பிம்பத்துக்கு ஆச்ரயமாகக் கண்ணாடி கருதப்படுகிறது எனினும் உண்மையில் அக்கண்ணாடி பிம்பத்தைத் தன்பால் வாங்கிக்கொள்ளவில்லை. பிம்பத்துக்கு இருப்பிடம் போன்றும் தங்குமிடம் போன்றும் கண்ணாடி தென்படுகிறது. உண்மையில் அது இருப்பிடமுமன்று; தங்குமிடமும் அன்று. அகிலாண்டங்களுக்கு ஆச்ரயமாக அல்லது இருப்பிடமாக அம்பிகை தென்படுகின்றாள். உண்மையில் அவள் தனக்குப் புறம்பாக உள்ள எதையும் ஏற்றுக்கொள்ளவில்லை. அவளுக்குப் புறம்பாக ஒன்றுமே இல்லை. ஆதலால் அவள் நிர் ஆச்ரயா என்று இயம்பப்பெறுகிறாள்.

नित्यशुद्धा — நித்யசுத்தா १४८

யாண்டும் சுத்தமாக இருப்பவள்.

உலகப் பொருள்களுக்கிடையில் சிலவற்றைச் சுத்தமானவைகள் என்றும், மற்றவைகளை அசுத்தமானவைகள் என்றும் நாம் பாகுபடுத்துகின்றோம். புறம்பாயுள்ள பொருள் ஒன்று மற்றொரு பொருளோடு சேர்கின்றபொழுது சுத்தமாய் இருப்பது அசுத்தமாய்த் திரிவுபடுகிறது. மற்று, பொருள் ஒன்று யாண்டும் தன்மயமாகவே இருக்குமாகில் நித்திய சுத்தம் என்னும் அடைமொழி அதற்குப் பொருந்துகிறது. அன்னை பராசக்திக்குப் புறம்பாக மற்றொரு பொருள் இல்லை. அவளே அனைத்துமாய் இருக்கின்றாள். என்னென்ன கோலங்களில் அவள் காட்சிகொடுத்தாலும் அவளுக்குப் புறம்பாக ஏதும் வந்து அவளைச் சாரவில்லை. சாருதற்கான புறப்பொருளும் இல்லை. ஆதலால் அவள் நித்திய சுத்தா என இயம்பப் பெறுகிறாள்

**नित्यबुद्धा — நித்யபுத்தா** ૧૪૯

எப்பொழுதும் பேரறிவு சொரூபமாய் இருப்பவள்.

தான் இருப்பதைத் தானே அறியும் திறமை ஆத்மாவுக்கு உண்டு. அதற்கு ஸ்வபோதம், ஆத்மபோதம், தன்னைத்தானே அறிதல் என்னும் அடைமொழிகள் வழங்கப்பட்டிருக்கின்றன. ஆலய வழிபாட்டில் நந்தாவிளக்கு, அணையாவிளக்கு, தூண்டா விளக்கு என்னும் சொற்களின் வாயிலாக இவ்வுண்மை மக்களுக்குப் புகட்டப்படுகிறது. கோயிலில் வைக்கப்பட்டுள்ள அணையா விளக்கு தாற்காலிகமாக அணையாதும், தூண்டப்பெறுதும், நந்தாதும் இருந்துவருகிறது. நித்திய ஜாக்ரதாவஸ்தை அல்லது தடைப்படாத விழிப்பு என்றும் இது பொருள்படுகிறது. உறக்கத்தில் உடலும் உள்ளமும் ஒடுங்குகின்றன. ஆனல் அவைகள் உணர்ச்சியற்றுப் போகின்றன. ஆத்மா உறங்குவதில்லை. ஆதலால் நித்திய ஜாக்ரதா அவஸ்தை என்னும் அடைமொழி அதற்கு அமைந்துள்ளது. பரதேவதையாகிய அம்பிகை முற்றிலும் ஆத்மசொருபம். தற்போதத்திலிருந்து ஆத்மசொருபம் பிசகுவதில்லை. யாண்டும் வாலறிவு வடிவமாய், பேரறிவுப் பொருளாய், பேருணர்வாய் அம்பிகை இருப்பதால் அவள் நித்தியபுத்தா என்று பகரப் பெறுகிருள்.

**निरवद्या — நிர்அவத்யா** ૧૫૦

அவத்யம் ஏதும் இல்லாதவள்.

அக்ஞானத்தினின்று விளையும் சிறுமைகள் அனைத்தும் அவத்யம் என இயம்பப் பெறுகின்றன. போற்றுதற்குத் தகுதியற்றது, இணக்கங்கொள்ளுதற்கு உதவாதது, பெருநிலையில் எடுத்து வைப்பதற்குப் பொருந்தாதது ஆகியவைகள் அவத்யம் என்னும் குற்றத்துக்கு உட்பட்டவைகளாகின்றன. நல்லறிவு ஓங்குதற்கு ஏற்ப மனிதன் கீழ்மையினின்று மேன்மைக்குத் தன்னை உயர்த்துகின்றான். முன்னேற்றம் அடைதற்கேற்ப அவன் மேன்மையிலேயே நிலைபெறுபவனுகின்றான். அம்பிகையோ நிறைவில் நிலைத்திருப்பவள். குறை ஒன்றும் அவள்பாலில்லை. போற்றுதற்குரிய பெருமைகளே அவளிடத்து மிளிர்கின்றன. ஆதலால் அவள் நிர் அவத்யா என்னும் அடைமொழிக்கு ஏற்றவள் ஆகின்றாள்.

निरन्तरा — நிரந்தரா १५१

இடைவெளி இல்லாதவள்.

இரண்டு கோளங்களுக்கிடையில் வெளி இருக்கிறது. ஆனால் ஆகாசத்தில் இடைவெளி கிடையாது. வெட்டவெளியாக அது பொருள்களுக்கு உள்ளும் புறமும் பிளவுபடாது வியாபித்திருக்கிறது. அங்ஙனம் பராசக்தியே அனைத்துமாயிருக்கின்றாள். கோளங்களாய் இருப்பவளும் அவளே. ஆகாசமாய் இருப்பவளும் அவளே. நீக்கமற நிறைபொருளாய் இருப்பவள் அவளே. அவளுடைய சொரூபத்துக்கு முடிவில்லை. தன்னுடைய அமைப்பைப் பராசக்தி மறைத்து வைப்பதுமில்லை. ஒன்றை மறைத்து வைப்பதற்கு அதற்குப் புறம்பான மற்றொரு வஸ்து இருக்கவேண்டும். சக்தியினின்று வேறுபட்டிருக்கின்ற வஸ்து ஏதும் இல்லை. அவளே எங்கும் வியாபகமாய், யாவுமாய் இருப்பதால் அவள் நிரந்தரா என்று அழைக்கப் பெறுகிறாள்.

निष्कारणा — நிஷ்காரணா १५२

காரணம் இல்லாதவள்.

காரண காரியமாகப் பிரபஞ்சம் அமைந்துள்ளது. ஒரு பொருளை மற்றொரு பொருளினின்று பிரித்துப்பார்க்குமிடத்து அப்பிரிவுக்குக் காரணம் சொல்கிறோம். புஷ்பம் ஒன்றுக்குக் காரணம் அதைத் தோற்றுவித்துள்ள செடி. அப்புஷ்பத்தைச் செடியினின்று பிரித்து வைத்துக் காரணகாரியப்படுத்துகிறோம். கடலில் அலையொன்று தோன்றுவதற்குக் கடலும் காற்றும் காரணங்களாகின்றன. கடலினின்று அலை காரியப்பட்டிருப்பதால் அலைக்குக் காரணம் ஒன்றிருக்கிறது. மூலப்பிரகிருதியாகிய பராசக்தி யாண்டும் தன்னில் தானாய் இருப்பதால் அவள் நிஷ்காரணா எனப் படுகிறாள்.

निष्कलङ्का — நிஷ்களங்கா १५३

குற்றம் இல்லாதவள்.

களங்கம் என்றால் குற்றம். குற்றத்தை விகாரப்பட்டுள்ள பொருள்களில் காண்கிறோம். களங்கமில்லாத மனது என்று கூறுமிடத்து அம்மனதானது தன் பேரியல்பினின்று பிசகுவ

தில்லை எனப் பொருள்படுகிறது. ஒன்று களங்கமற்றது என்று கூறுமிடத்து அது குறையில்லா நிறைநிலையில் இருக்கிறது. பிரகிருதித் தாயைக் களங்கமுறப் பண்ணுதற்கு அவளுக்குப் புறம்பாகப் பொருள் ஒன்றுமில்லை.

**निरुपाधिः — நிர் உபாதி: १५४**

உபாதி ஒன்றுமே இல்லாதவள்.

விகாரப்படும் தன்மை உபாதி எனப்படுகிறது. நீரினிடத்து விதவிதமான விகாரங்கள் இருக்கின்றன. ஆவியாய் இருக்கும் பொழுது அது கட்புலனாவதில்லை. கார்மேகமாகவும் வெண்மேகமாகவும் அது மாறியமைகிறது. பின்பு உறைபனியாகவும் மழைத்துளியாகவும் அது மாறியமைகிறது. இப்படி மாறுபட்ட நிலைகள் நீரினுடைய உபாதிகளாகின்றன. மனிதனுக்கு அயர்ந்த உறக்கத்தில் உபாதி ஒன்றுமில்லை. தன் மூலநிலையில் முழுப்பொருளாக அவன் இருக்கிறான். அந்நிலையானது முழுமுதற் பொருளாகிய பராசக்தியினிடத்து யாண்டும் மாறாது மிளிர்ந்துகொண்டிருக்கிறது. அவள் யாண்டும் தன்னில் தானாய் இருக்கின்றாள். ஆதலால் அவள் நிர் உபாதி என்று இயம்பப்பெறுகிறாள்.

**निरीश्वरा — நிரீச்வரா १५५**

யாருடைய ஆளுகைக்கும் அடிமைப்படாதவள்.

சிவனுக்குப் பாரியையாய் அம்பிகை அமைந்துள்ளாள் என்பது ஐதிகம். அப்படியிருக்க அவளை ஆளுதற்கு வேறு யாரும் இல்லை என்று இயம்புவது எங்ஙனம்? சிவனும் சக்தியும் இரண்டு வஸ்துக்களாகார். பொருள் ஒன்று; அந்த ஒரே பொருளை இரண்டு பாங்குகளில் நாம் பார்க்கிறோம். பாலும் அதன் வெண்மையும் அபேதமாய் இருப்பதுபோன்று சிவமும் சக்தியும் அபேதம். அத்தகைய ஏகவஸ்துவின் ஆதிக்கத்தில் சராசரங்கள் அனைத்தும் அடங்கியிருப்பதால் அவள் நிரீச்வரா என்று கூறப்பெறுகிறாள்.

**नीरागा — நீராகா १५६**

ஆசை இல்லாதவள்.

ராகம் என்ற சொல்லுக்கு ஆசை அல்லது பற்றுதல் என்று பொருள். தன்னிடத்து இல்லாத பொருள் ஒன்றைப் பெற முயலுமிடத்து அம்முயற்சியானது ராகம் என்றும் பற்றுதல் என்றும் ஆசை என்றும் பொருள்படுகிறது. அம்பிகை ஆசைப்படுதற்கு ஒன்றுமில்லை. அவள் அகண்ட வஸ்து. விகாரப்பட்டிருக்கும் அனைத்தும் அவளுடைய தோற்றம். விகாரங்கள் யாவற்றுக்கும் அப்பாலும் அவள் இருக்கின்றாள். அம்பிகையின் ஆசையற்ற நிலையை அறிதற்கு ஆத்ம சாதகன் தானே ஆசையற்றவனாக வேண்டும். அம்பிகையினிடம் அவன் அநு ராகம் கொள்ள வேண்டும். உலகப் பொருள்களில் வைத்துள்ள பற்றுதலுக்கு ராகம் என்று பெயர். தெய்வத்திடம் வைக்கும் பற்றுதலுக்கு அனுராகம் என்று பெயர். அனுராகமே பக்தியாகப் பரிணமிக்கிறது. பக்தியே பிரேமை பக்தியாகிறது. பிரேமை பக்தியே மஹாபாவமாக மிளிர்கிறது. அந்நிலையில் ஆசைக்கு இடமில்லை. அந்நிலையை எட்டுகிற ஆத்ம சாதகன் அன்னை பராசக்தி நிராகாவாக அதாவது ஆசை ஏதும் இல்லாதவளாக இலங்குகிறாள் என்பதை அறிய வருகிறான்.

**रागमथनी** — ராக மதனீ ௧௫௭

பற்றுதலைப் போக்கடிக்கின்றவள்.

ஜீவாத்மாக்கள் சிற்றுயிர்களாய் இருந்து பேருயிர்களாகப் பரிணமித்து வருகின்றன. உயிர்களின் வளர்ச்சிக்குப் பற்றுதல் முற்றிலும் அவசியம். ஜீவபோதத்தின் உச்சநிலையை மனிதன் எட்டுகிறான். அதை எட்டும் வரையில் உலகப்பற்று மிகுந்திருக்க வேண்டும். உலக வாழ்க்கையினின்று பெறவேண்டிய அனுபவங்களையெல்லாம் பெற்றானபிறகு மனிதன் ஞானக் கனியாக உயர்வடைந்து பரத்தில் ஒன்றுபடவேண்டும். உலகப் பற்று என்னும் ராகம் அறவே நீங்கப்பெற்ற நிலையே வைராக்கியம் என்று விளக்கப்படுகிறது. வைராக்கியம் இல்லாதவனுக்குப் பரஞானம் இல்லை. பக்குவம் அடைந்துள்ள பக்தனுடைய ராகத்தை முற்றிலும் போக்கி வைராக்கியத்தை நிலை நாட்டி அவனைப் பரத்துக்கு உரியவனாக அம்பிகை பக்குவப்படுத்துகின்றாள். ஆதலால் அவளுக்கு ராக மதனீ என்னும் பெயர் வந்துள்ளது.

**निर्मदा** — நிர்மதா १५८

மதம் பிடியாதவள்.

கோடி சூரியப் பிரகாசம் உடையவள் அம்பிகை. அவள் அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகி. தனக்குப் புறம்பாக அவள் எதையும் காண்கிறதில்லை. ஆதலால் அவள் தற்பெருமை கொள்ளுதற்கு அவகாசமில்லை. தன் நிறை நிலையில் அவள் இனிது நிலைத்துள்ளாள். ஆகவே அவள் நிர்மதா என அழைக்கப்பெறுகிறாள்.

**मदनाशिनी** — மதநாசினீ १५९

மதத்தை ஒழித்துத் தள்ளுபவள்.

சூழ்நிலைக்கு ஏற்ப சிற்றுயிர்களும் பேருயிர்களும் தம் தம் போக்கில் கர்வம் பிடித்திருக்கின்றன. அவற்றின் கர்வத்தை ஒழிப்பதற்கான பிரதிபந்தங்களும் இயற்கையில் அமைந்திருக்கின்றன. உயிர்வகைகளின் முன்னேற்றத்துக்குக் கர்வபங்கம் அவசியமாகிறது. மதநாசம் என்னும் செயலை அம்பிகை எல்லாப் படித்தரங்களிலும் செய்து வருகின்றாள். அவள் கிருபை கூர்ந்து மதநாசினியாக இருந்து உயிர்களைத் திருத்தியமைத்து வருகின்றாள்.

**निश्चिन्ता** — நிச்சிந்தா १६०

கவலை இல்லாதவள்.

சிற்றுயிர்கள் பரிணமித்து மேல்நிலைக்கு வரவரக் கவலை அதிகரிக்கிறது. கவலைகள் அனைத்துக்கும் மூலகாரணம் அக்ஞானம். அம்பிகையின் உபாசனையில் ஈடுபடுதற்கு ஏற்ப அக்ஞானம் அகலுகிறது. நிகழ்கின்ற செயல்களனைத்தும் அம்பிகையின் திருவிளையாடல் என்னும் நல்லறிவு வருகிறது. அம்பிகை கவலையற்றிருந்து அகிலாண்டங்களைத் தோற்றுவிக்கவும், நிலைநிறுத்தவும், ஒடுக்கவும் செய்கின்றாள். மனிதன் தன் அற்ப வாழ்வைக் குறித்து எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி ஏங்கிக் கிடக்கின்றான். நிச்சிந்தாவாக இருக்கின்ற அம்பிகையின் பாரமார்த்திகப் பெருநிலையானது அம்பிகை உபாசகனுக்கே சொந்தமாகிறது.

निरहङ्कारा — நிரஹங்காரா १६१

அஹங்காரம் இல்லாதவள்.

அகங்காரமற்றிருக்கும் சைதன்யம் பரமாத்மா; அகங்கார மயமாயிருக்கும் சைதன்யம் ஜீவாத்மா. தான் அல்லாததைத் தான் என அபிமானிப்பது அகங்காரம். ஜீவாத்மா சேதனம் படைத்திருக்கிறது. ஜகத் ஜடமாக அல்லது அசேதனமாக இலங்குகிறது. ஜகத்தின் விகாரங்களைத் தன் தேகமாக ஜீவாத்மா அபிமானிக்கிறது. மனிதன் தன் உடலுக்கு வருகிற பிறப்பு இறப்பை முன்னிட்டுத் தனக்குத் தோற்றமும் அழிவும் இருப்பதாக எண்ணி அல்லற்படுகிறான். ஆனால் உடலுக்கும் உள்ளத்துக்கும் ஆதாரமாய் இருக்கும் ஆத்ம சைதன்யத்தில் எந்த விகாரமும் உண்டாவதில்லை. தன்னை ஆத்ம சொரூபம் என அறிகின்றவன் அகங்காரமற்றவன்.

அம்பிகை தன்னிடமிருந்து அகிலாண்ட கோடிகளையும் தோற்றுவித்தான பிறகு அவைகளிடம் அபிமானம் கொள்ளாதிருக்கின்றாள். ஆதலால் அவள் நிரஹங்கார சொரூபிணியாக நிலைத்திருக்கின்றாள். அகங்காரம் அகலுமளவு ஆத்ம சாதகனிடம் அம்பிகை உபாசனை அதிகரிக்கிறது. அகங்காரமற்றவளாயிருக்கும் அவளருளால் அகங்காரத்தை அகற்ற ஆத்ம சாதகன் முயல வேண்டும்.

निर्मोहा — நிர்மோஹா १६२

மோஹம் அல்லது மயக்கம் கொள்ளாதவள்.

பேதபுத்தி படைத்திருப்பவர்களிடத்து மோஹம் உருவெடுக்கிறது. தனக்கு உரியதல்லாததைத் தனக்குரியதாக்க முயலுவது மோஹம். அறியாமையினால் மனிதனுக்கு மோஹம் வருகிறது. அம்பிகைக்கோ அகிலாண்டங்களும் சொந்தம். அனந்தங்கோடி உயிர்களும் சொந்தம். சொந்தம் படைத்திருப்பதற்கிடையில் அவள் முற்றிலும் தன்மயமாயிருக்கிறாள். தன் பொருள்களைத் தான் பெறவேண்டும் என்னும் மயக்கம் கொள்ள வேண்டிய அவசியம் அவளுக்கில்லை. தன் உடைமைகளைப் பற்றிய பேத புத்தியும் அவளிடத்தில்லை. ஆகவே அவள் நிர்மோஹா என்று மொழியப்பெறுகிறாள்.

**मोहनाशिनी — மோஹநாசினீ** १६३

மோஹத்தை அல்லது மயக்கத்தை அழிப்பவள்.

மோஹம் இருக்கிற ஆத்மாவுக்கு ஜீவாத்மன் என்னும் பெயர் வருகிறது. தனக்குத் தனி வியக்தி இருக்கிறதென்ற மயக்கத்தின் விளைவாக அது பிறவிகள் பல எடுத்து வருகிறது. ஒவ்வொரு பிறவியிலும் தன்னுடைய வியக்தியை அது கொஞ்சங் கொஞ்சமாக மாற்றியமைக்கிறது. அதற்கேற்பக் கீழான பிறவி மேலான பிறவியாக மாறியமைகிறது. கர்மமும் ஜீவ வியக்திக் கேற்றபடி மேலானதாக மாறியமைகிறது. விவேகம் படைத்த மானுடப் பிறவியை எட்டியான பிறகு ஜீவனுடைய வியக்தியும் கர்மமும் பொருளற்றவை என அம்பிகையின் அருளால் அறியப் படுகின்றன. அம்பிகையின் அருளால் அந்த மயக்கமும் துடைத்துத் தள்ளப்படும் பொழுது ஜீவன் பரத்தில் ஒன்றுபடுகிருன்.

**निर्ममा — நிர்மமா** १६४

மமகாரம் இல்லாதவள்.

தான் அல்லாத உடலைத் தான் என்று கருதுவது அஹங்காரம். இது என்வீடு, இவர்கள் என் உற்ருர் உறவினர் என்னும் கருத்துக்களெல்லாம் மமகாரத்தின் வெவ்வேறு வடிவங்களாம். அஹங்கரிக்கிற உடலே சர்வகாலமும் மாறி அமைந்து மறைந்து பட்டுப் போவது போன்று மமகாரமும் மாறியமைந்து முடிவில் மறைந்துபட்டுப் போகின்றது. அவ்வாறு பற்று ஒழிதற்கு ஜீவன் பல பிறவிகள் எடுத்து மனபரிபாகம் அடைய வேண்டும். அம்பிகை உபாசனை பண்ணுகிற பக்தனுக்கு அவள் எங்ஙனம் அகிலாண்டங் களையும் உடைத்திருப்பதற்கிடையில் அவைகளிடத்து மமகாரம் கொள்ளாதிருக்கிருள் என்பது நல்லதோர் எடுத்துக் காட்டாம்.

**ममताहन्त्री — மமதாஹந்த்ரீ** १६५

மமகாரத்தைப் போக்கடிப்பவள்.

ஜீவாத்மனைப் பிடித்திருக்கின்ற உபாதிகளுள் மமகாரம் மிகக் கொடியது. மனிதனேடு மனிதன் சண்டையிடுகின்ருன். உயிர் வகைகளுக்கிடையில் சண்டை சச்சரவு ஏன் வருகிற தென்று ஆராய்ந்து பார்க்கவேண்டும். ஒரு ஜீவனுக்குரிய

பொருளை மற்றொரு ஜீவன் தனக்குரியதாக்கப் பார்க்கிறான். அது போராட்டமாக வடிவெடுக்கிறது மமகாரத்தை முன்னிட்டே உலகமெங்கும் வியவகாரங்கள் வளர்ந்து வருகின்றன. பொருள் கள் தனக்குரியவை என்று கருதுவது மயக்கம். பொருள்கள் பராசக்திக்குரியவைகள் என்று கருதுவது விவேகம். அவற்றைத் தனக்குரியனவாகக் கருதுவதன்மூலம் மனிதன் வில்லங்கத்தை வரவழைத்துக் கொள்கிறான். 'தாயே, எல்லாம் உன் உடைமையே' என்று அம்பிகையிடம் பிரார்த்தனை பண்ண வேண்டும்; மனப் பற்றை ஒழித்தல் வேண்டும். மமகாரத்தைப் பக்தனுடைய உள்ளத்தினின்று அறவே துடைத்துத் தள்ளும் ஆற்றல் அம்பிகையிடத்திருப்பதால் அவள் மமதாஹந்த்ரீ என்று பக்தர்களால் போற்றப் பெறுகிறாள்.

**निष्पापा — நிஷ்பாபா** ௧௬௬

பாபம் ஒன்றும் இல்லாதவள்.

பாபம் பொல்லாதது என்று மக்களால் நிராகரிக்கப்படுகின்றது. எது பாபம் என்று கேட்டால் அதற்கு விளக்கங்கள் பல வருகின்றன. பாபத்துக்கு விளக்கம் தருவதில் சமயங்களுக்கிடையில் கருத்துவேற்றுமை இருக்கிறது. தத்துவ ஆராய்ச்சியில் பாபத்துக்கு விளக்கம் பொருத்தமாக வந்துள்ளது. மனம், மொழி, மெய் ஆகிய திரிகரணங்களில் மனிதனைக் கீழ்மைப் படுத்துவது எதுவோ அது பாபம். திரிகரணங்களில் மனிதனை மேன்மையுறச் செய்வது எதுவோ அது புண்ணியம் அல்லது பாபமற்ற நிலை. அம்பிகையைப் பாபமுறச் செய்வதற்கு ஒன்றுமே இல்லை. அகிலாண்டங்களும் அவளுக்கு மேனி. அவளுடைய அமைப்பில் அனைத்தும் பொருத்தமான இடம் பெற்றிருக்கின்றன. அவளைச் சிறுமைப்படுத்துதற்கு ஒன்றுமேயில்லை. ஆதலால் அவள் நிஷ்பாபா என்று போற்றப்பெறுகிறாள்.

**पापनाशिनी — பாபநாசினீ** ௧௬௭

பாபத்தைப் போக்கடிப்பவள்.

தத்துவ பூர்வமாகப் பார்க்குமிடத்து ஜீவநிலைக்கு ஆத்மன் இறங்கியிருப்பதே பாபமாகிறது. பாபத்தைப் போக்குவதே

வாழ்க்கையின் குறிக்கோள். பாபத்தைப் பற்றியே ஓயாது எண்ணிக்கொண்டிருப்பது பாபத்தைப் போக்குதற்கு உற்ற உபாயமாகாது. அறியாமையினல் செய்த பாபத்தை எண்ணி எண்ணி ஏங்கியிருத்தலாகாது. மீண்டும் அப்பாபத்தை நான் செய்யேன் என்று ஆழ்ந்து சங்கல்பித்துக்கொண்டு செய்த பாபத்தை மறந்துவிட வேண்டும். சூரியோதயம் வரும்பொழுது இருள் எங்ஙனம் தானுக மறைந்துபட்டுப் போகிறதோ அங்ஙனம் அம்பிகை உபாசனையில் ஆழ்ந்து ஈடுபட்டிருப்பவர்களுக்குப் பாபத்தைப்பற்றி எண்ணி ஏங்கியிருக்க அவகாசமில்லை. அம்பிகையின் அருளுக்குப் பாத்திரமானவர்களுக்குப் பாபம் இம்மியளவும் இல்லை. ஆதலால் அம்பிகை பாபநாசினீ எனப் போற்றப் பெறுகிருள்.

**निष्क्रोधा — நிஷ்க்ரோதா** १६८

**கோபம் இல்லாதவள்.**

தடைப்பட்ட ஆசையே கோபமாக வடிவெடுக்கிறது. ஆசைக்கு அடிப்படைக் காரணம் அக்ஞானம். பரஞானம் அடையப்பெற்ற பெரியோர்களுக்கு ஆசையில்லை. அன்னை பராசக்திக்கும் ஆசையில்லை. ஆசைப்படவேண்டிய அவசியம் அவளுக்கில்லை. தன்னிடத்தில்லாத ஒன்றைப் பெறுவதற்கு ஆசைகொள்வது இயல்பு. அன்னை பராசக்தியிடம் அனைத்தும் பரிபூரணமாய் நிறைந்திருக்கின்றன. ஆதலால் ஆசையோ அதன் எதிர்மறைத் தோற்றமாகிய குரோதமோ அல்லது கோபமோ அம்பாளிடத்தில்லை.

**क्रोधशमनी — க்ரோதசமனீ** १६९

**கோபத்தைத் துடைப்பவள்.**

விருப்பு வெறுப்பின் மூலமாகவே ஜீவர்கள் பிறவிப் பெருங் கடலைப் பெருக்கிக்கொண்டு வருகின்றனர். காமம் இருக்கும் வரையிலும் குரோதமும் இருக்கும். விருப்புக்கும் வெறுப்புக்கும் அடிமைப்பட்டுள்ள மனிதன் பரஞானம் அடையப் பெருன். பரஞானம் அடைதற்குச் சித்த விருத்தி ஒடுங்கவேண்டும். மனதற்ற நிலையில் மனதின் விகாரங்களாகிய காமம், குரோதம் முதலிய

குறைபாடுகள் எழமாட்டா. மனோநாசத்தைக் குறித்துப் பிரார்த்திக்கின்றவர்களுடைய அந்தக்கரணத்தை அம்பிகை துடைத்துத் தள்ளுவதால் அதைத் தொடர்ந்து குரோதமும் மாயமாய் மறைந்து போகிறது.

**निर्लोभा** — நிர்லோபா ௧௭௦

உலோபம் இல்லாதவள்.

தான் படைத்துள்ள பொருள் தனக்குப் போதவில்லை என்னும் மனப்பான்மை உலோபம். தன்னிடத்திருப்பதை யாருக்கும் பகிர்ந்து கொடுக்க மனம் வராதநிலை உலோபம். ஈகையை அறியாத பான்மை உலோபம். அம்பிகையினிடத்து அத்தகைய குறுகிய மனப்பான்மை இல்லை.

**लोभनाशिनी** -- லோபநாசினீ ௧௭௧

பக்தர்களிடத்து உலோபம் உருவெடுத்தால் அதைத் துடைத்துத் தள்ளுபவள்.

உலோபம் மனதைப் பிடித்துள்ள அழுக்குகளுள் மிகக் கொடியது. சித்த சுத்தி உண்டாவதற்குத் தன்னிடமிருப்பவைகளையெல்லாம் கரவாது வழங்கிக்கொண்டேயிருக்கவேண்டும். கேணியில் நீர் இறைப்பதற்கேற்பப் புதிய நீர் ஊறுவது போன்று வழங்கிக்கொண்டேயிருப்பவனுக்குப் புதிய செல்வம் வளர்கிறது. அம்பிகையினிடத்துப் பக்தி பூண்டிருப்பவர்கள் தம்மிடம் உள்ள அனைத்தையும் பிற உயிர்களுக்கு எடுத்து வழங்கிக்கொண்டே இருக்கின்றனர். ஞானம், செல்வம், ஆற்றல் ஆகிய சம்பத்துக்கள் அனைத்தும் பரநலனுக்கென்றே பயன்படுத்தப்படுகின்றன. அப்படிச் செய்வதால் பக்தர்கள் உள்ளத்தினின்று உலோபம் அழிந்துபட்டுப்போகிறது. அதற்கு அம்பிகையின் அருள் துணை புரிவதால் அவள் லோபநாசினீ என்று போற்றப் பெறுகிறாள்.

**निःसंशया** — நிஸ்ஸம்சயா ௧௭௨

சந்தேகம் இல்லாதவள்.

ஒரு விஷயத்தை முற்றிலும் அறிந்துகொள்ளாத நிலையில் இருப்பவர்களுக்கு சம்சயம் அல்லது சந்தேகம் வருவது இயல்பு.

அன்னை பராசக்தி எல்லார் உள்ளத்திலும் மனசாட்சியாக மிளிர்ந்துகொண்டிருக்கிறாள். நெஞ்சை ஒளித்து ஒரு வஞ்சக மில்லை என்பது கோட்பாடு. எந்த ஜீவன், எத்தகைய பரிபாகம் அடைந்திருப்பவன், என்ன நோக்கத்துடன் எக்காரியத்தில் ஈடு படுகிறான் என்று ஞானத்தாய் சந்தேகப்பட வேண்டிய அவசிய மில்லை.

ஜீவகோடிகள் அனைத்தினுடைய அமைப்பை அவள் உள்ள படி அறிகின்றாள். மக்களுள் பெரும்பான்மையோருக்குத் தங்க ளுடைய மன அமைப்பே உள்ளபடி விளங்குவதில்லை. தங்க ளுடைய செயலையும், தீர்மானத்தையும் பற்றிக் குழம்பியவர் களாய் அவர்கள் இருக்கிறார்கள். அன்னவர்களின் தரத்தையும் அகிலாண்ட நாயகி உள்ளபடி அறிகின்றாள். ஆதலால் அவள் சந்தேகம் ஏதும் இல்லாதவள் என்று இயம்பப் பெறுகிறாள்.

**संशयघ्नी — ஸம்சயக்னீ** **१७३**

சம்சயத்தை அகற்றுபவள்.

யார் ஒருவர் சந்தேகத்தையெல்லாம் நிவர்த்திசெய்து நிறை ஞான சொரூபமாக இருக்கிறாரோ அவரே மற்றவர்களுடைய சந்தேகத்தை அகற்ற வல்லவராய் இருக்கிறார். குரு ஸ்தானம் வகிக்கின்றவர்கள் சந்தேகங்களையெல்லாம் தாண்டியவராய் இருப்பது அவசியமாகிறது. அன்னை பராசக்தி அத்தகைய நிறைஞானிகளின் சொரூபமாக இலங்குகின்றாள். சந்தேகத்திலும் மயக்கத்திலும் உழல்பவர்களுடைய குறைநிலையைப் போக்கி நிறைஞான நிலையை ஸ்தாபிக்கின்றாள். ஆதலால் அவள் ஸம் சயக்னீ என்று துதிக்கப்படுகிறாள்.

**निर्भवा — நிர்பவா** **१७४**

பிறப்பில்லாதவள்.

சக்தியும் சிவமும் ஒன்று. அந்த ஒரு பொருளில் இரண்டு அம்சங்களையும் இணைத்துப் பார்க்குமிடத்து அப்பொருளை அர்த்த நாரீசுவரன் என அழைக்கிறோம். அதே பொருளை சுத்த சக்தி யாகவோ சுத்த சிவமாகவோ காண்பதும் முறை. மெய்ப் பொரு ளுக்கு ஆதியந்தமில்லை. ஆதலால் அது பிறவாதது, இறவாதது.

அக்காரணத்தை முன்னிட்டே அம்பிகை நிர்பவா என்று போற்றப் பெறுகிறாள்.

**भवनाशिनी** — பவநாசினி ௧௭௫

பிறவியைப் போக்கடிப்பவள்.

ஜனன மரண வாயிலாக ஜீவர்கள் தங்கள் தேகங்களைப் புதுப்பித்து வருகின்றனர். உடலைப் புதுப்பிப்பதன் வாயிலாகவே சிற்றுயிர்கள் பேருயிர்களாகப் பரிணமிக்கின்றன. மனிதனுக்கு மனபரிபாகம் வருமிடத்துப் பிறப்பெடுப்பது பிணியாக அவனுக்குத் தோன்றுகிறது. பிறவிப் பெருங்கடலைத் தாண்ட அவன் முயலுகிறான். தன் ஞான வேட்கையை அவன் அம்பிகையிடமும் சமர்ப்பிக்கிறான். பக்குவம் அடைந்துள்ள ஜீவர்களின் பந்தபாசங்களை அம்பிகை துடைத்துத் தள்ளுகின்றாள். சம்சார சாகரத்தைக் கடப்பதற்கும் முக்தி என்னும் கரை ஏறுதற்கும் அவள் துணைபுரிகின்றாள். எனவே அம்பிகை பவநாசினி எனப் போற்றப்பெறுகிறாள்.

**निर्विकल्पा** — நிர்விகல்பா ௧௭௬

விகல்பம் இல்லாதவள்.

இல்லாதது இருப்பதுபோன்று தென்படுமிடத்து அதற்கு விகல்பம் என்று பெயர். விருப்பு, வெறுப்பு போன்ற பாங்குகளைக் கோணல்கள் எனலாம். அவை மனதின் விகல்பங்களாகின்றன. விகல்பமடைந்த மனதைக்கொண்டு புற உலகைப் பார்க்குமிடத்து அதில் நலன்களும் கேடுகளும் தென்படுகின்றன. மனதை நிர்விகல்பமாக்கினால் புறப்பொருள் திரிவு படாது மெய்க்காட்சி அளிக்கிறது. அகம், புறம் ஆகிய இருநிலைகளிலும் திரிவு படாத மெய்ப்பொருளே இலங்குகிறது. பார்க்கிறவனுடைய மனதின் விகல்பத்தால் பார்க்கப்படுபொருள் விகல்பமுடையதாகக் காட்சி கொடுக்கிறது. அதற்கிடையிலும் அது நிர்விகல்ப வஸ்து. ஆதலால் அம்பிகை நிர்விகல்பா என்று இயம்பப் பெறுகிறாள்.

**निराबाधा** — நிர் ஆபாதா ௧௭௭

துன்புறுத்தப்படாதவள்.

வலிவு படைத்த ஒரு ஜீவன் வலிவற்ற ஒரு ஜீவனைத் துன்புறுத்த முடியும். ஆனால் வலிவற்ற ஒரு ஜீவன் வலிவுடையவனைத் துன்புறுத்த முடியாது. அகண்டமாயுள்ள பராசக்தி கண்ட துண்டங்களாய் உள்ள ஜீவர்களால் ஒருபொழுதும் பாதிக்கப்படுவதில்லை. அவள் எப்போதும் தன்மயமாய் இருக்கின்றாள். ஆதலால் அவள் நிர் ஆபாதா என இயம்பப்பெறுகிறாள்.

**निर्भेदा — நிர்பேதா** १७८

பேதமில்லாதவள்.

வெவ்வேறு பாங்குடைய இரு வஸ்துக்கள் ஒன்றோடொன்று பேதப்படுகின்றன. அவை இரண்டும் ஒரே சொரூபத்தில் இடம் பெறும்பொழுது அவற்றுக்கிடையில் பேதமில்லை. அண்டமெங்கும் பேதத்தைக் காண்கிறோம். எங்கும் சஞ்சரிக்கின்ற காற்றிலும் பேதம் இருக்கிறது. சிருஷ்டி என்னும் சொல்லுக்குப் பொருளே பேதப்படுத்துதல் என்பதாம். அகிலாண்டங்களையும் அன்னை பராசக்தியின் சொரூபமாகத் தொகுத்துப் பார்க்குமிடத்து இந்தப் பேதங்கள் யாவும் மறைந்துபட்டுப் போகின்றன. ஆதலால் அவள் நிர்பேதா என்று கூறப்பெறுகிறாள்.

**भेदनाशिनी — பேதநாசினீ** १७९

பேதத்தை அகற்றுபவள்.

பேதம் என்பது வேற்றுமை. பேதத்தை உண்டுபண்ணுவதால் சிருஷ்டி நிகழ்கிறது. பிரபஞ்சம் முழுதும் பேத சொரூபம். ஜீவர்கள் பேதத்தை அடிப்படையாகக்கொண்டு கீழ்நிலையினின்று மேல்நிலைக்குப் பரிணமித்து வந்துள்ளார்கள். மேல் நிலைக்கு வந்துள்ள ஜீவர்கள் பரநாட்டம் கொள்கின்றனர். பரம்பொருளை அடைய விரும்புகின்ற அவர்கள் தங்களிடமுள்ள பேதங்களைக் களைந்தாக வேண்டும். ஒவ்வொரு ஜீவனிடத்துமுள்ள உபாதியே பந்தபாசமாகிறது. இறுதியில் ஜீவன் நாடுவது உபாதி ஒன்றுமற்ற சத்சித் ஆனந்தம் என்னும் பரம்பொருளையாம். பரம்பொருளாகிய அகண்ட சச்சிதானந்தத்தை எட்டிய ஜீவர்களே பரிபூரணத்தை அடைந்தவர்கள் ஆகின்றனர். பேதத்தை வளர்த்த காலத்தை அவர்கள் கடந்

தாய் விட்டது. இனி, பரத்தில் அவர்கள் அபேதத்தை அடைதல் வேண்டும். அங்ஙனம் வேண்டுகின்ற பக்தர்கள்பால் உபாதியின் வாயிலாக அமைந்துள்ள பேதங்களை அம்பிகை துடைத்துத் தள்ளுகின்றாள்.

**निर्नाशा** — நிர்நாசா ௧௮௦

அழிவில்லாதவள்.

மூலப்பிரகிருதியாக இருக்கின்ற அம்பிகை தோற்றத்தில் இல்லை. பிரளயத்தில் சக்தியின் கூறு எதையும் காணமுடியாது. அந்நிலையில் அவளைச் சூன்யம் என்று சொல்லலாகாது. அவள் தோன்றா நிலையில் இருக்கின்றாள். கடலினின்று ஆவியாக மேலே போன நீர் அழிந்துபட்டுப் போகவில்லை. மேகமாகவும் மழையாகவும் வடிவம் எடுக்கும்பொழுது அது தோற்றத்துக்கு வருகிறது. அதே பாங்கில் மூலப் பிரகிருதியாகிய அம்பிகை சிருஷ்டி காலத்தில் தோற்றத்துக்கு வருகின்றாள். அவள் பஞ்சபூதங்களாகவும் பிரபஞ்சமாகவும் ஆகின்றாள். அனந்தங் கோடி ஜீவர்களாகப் பரிணமிக்கின்ற அவள் கல்பாந்தரத்தில் பழையபடி தோன்றா நிலைக்குப் போகின்றாள். இங்ஙனம் ஆதி அந்தமில்லாது அவள் தோன்றா நிலையிலும் தோன்றிய நிலையிலும் மாறி மாறி இருந்து வருகின்றாள். ஆனால் அவள் அழிந்துபட்டுப் போவதில்லை. ஆதலால் அவள் நிர்நாசா என நவிலப் பெறுகிறாள்.

**मृत्युमथनी** — ம்ருத்யுமதனீ ௧௮௧

மரணத்தைத் துடைத்துத் தள்ளுபவள்.

ஜீவர்களுக்கும் அம்பிகைக்குமிடையில் முக்கியமான வேற்றுமை ஒன்று உண்டு. அம்பிகை தோன்றி இருந்து மறைகின்றாள். ஜீவர்களோ ஜனனமரணமென்னும் விகாரங்களுக்கு உட்படுகின்றனர். பிறப்பெடுத்துள்ள ஒரு ஜீவன் இறந்தே ஆகவேண்டும். மரணத்தின் வாயிலாக ஜீவன் கீழ்நிலையினின்று மேல் நிலைக்குப் பரிணமித்து வருகின்றான். கீழ்நிலையிலுள்ள உடலைப் பயன்படுத்தியான பிறகு அதைத் துடைத்துவிட்டு அதைவிட நல்ல புதிய உடலை ஒரு ஜீவன் மீண்டும் எடுக்கிறான். இங்ஙனம் கணக்கற்ற மரணங்களின் வாயிலாக மேல்நிலைக்கு வந்துள்ள

ஜீவன் கடைசியில் பரம்பொருளில் ஒன்றுபட முயலுகிறான். மரணமிலாப் பெருநிலையை அவன் நாடுகிறபொழுது ஜீவ உபாதியையும் அதற்கு ஏதுவாயிருக்கும் பிறப்பையும் அம்பிகை துடைத்துத் தள்ளுகின்றாள். முற்றிலும் பரிபாகம் அடைந்துள்ள ஜீவர்கள் கடைசியாக எடுத்த பிறவி துடைக்கப்படுவதால் அச்செயலைச் செய்கின்ற அம்பிகை ம்ருத்யுமதனீ என மொழியப் பெறுகிறாள்.

**निष्क्रिया — நிஷ்கிரியா** १८२

கிரியை அல்லது வினையொன்றும் இல்லாதவள்.

தத்துவ ஆராய்ச்சி பண்ணுமிடத்து ஒரு பொருள் புருஷன், பிரகிருதி என்னும் இரண்டு கூறுகளாகப் பிரிவுபடுகிறது. கிரியா சகிதமாய் இருப்பது பிரகிருதி. கிரியா ரகிதமாய் இருப்பது புருஷன். செயலை முன்னிட்டே பொருளுக்குச் சக்தி என்னும் பெயர் வந்துள்ளது. சலனமடைவதால் பொருள் சக்தியாக மாறுகிறது. ஆக, சக்தி தேவியானவள் யாண்டும் கிரியா சொரூபிணியாக இருந்து வருகின்றாள். அத்தகையவளை நிஷ்கிரியா என்பது எங்ஙனம் பொருந்தும்?

கிருத்தியங்கள் செய்வதற்கிடையில் அவைகளில் கட்டுப்படாதிருக்கும் நிலை ஒன்று உண்டு. நாடகமேடையில் பொருள் மிகப் படைத்திருக்கும் நடிகன் ஒருவன் யாசகனாக நடிக்கின்றான். கெஞ்சிக் கூத்தாடி நாடகமேடையில் யாசகம் வாங்குகின்றான். அச்செயலைச் செய்வதற்கிடையில் அவன் வறியன் அல்லன். யாசகம் பண்ணியவனும் அல்லன்; அவ்வினையில் கட்டுண்டவனும் அல்லன். அதே பாங்கில் அன்னை பராசக்தியானவள் அகிலாண்டங்களிலுள்ள கிருத்தியங்கள் யாவற்றையும் இமைப்பொழுதும் ஓய்வின்றி முறையாகச் செய்து கொண்டிருப்பதற்கிடையில் அக்கிருத்தியங்களில் அவள் கட்டுப்படாதிருக்கின்றாள். தான் கட்டுப்படாதிருப்பதன் வாயிலாக முக்தியை நாடுகிறவர்கள் கர்மத்தில் எங்ஙனம் கட்டுப்படாதிருக்கவேண்டும் என்னும் பாடத்தைப் புகட்டுகின்றாள். வினையாற்றுவதற்கிடையில் வினைக்கு அப்பாற்பட்ட நிலையில் அன்னை பராசக்தி இருப்பது போன்று பக்குவம் அடைந்துள்ள ஜீவாத்மனும் இருக்கமுடியும். நெடுநாள் முயற்சிக்

குப் பிறகு ஜீவாத்மன் அங்கில்லையை எட்டுகிறான். அன்னை பரா சக்தியோ எல்லாக் கிரியைகளையும் செய்து கொண்டிருப்பதற் கிடையில் கிரியை ஒன்றிலுமே கட்டுப்படாதவளாயிருக்கின்றாள். ஆதலால் அவள் நிஷ்கிரியா என்று கூறப்பெறுகிறாள்.

निष्परिग्रहा — நிஷ்பரிக்ரஹா १८३

பொருள் படையாதவள்.

பொருள் என்றால் சொத்து, செல்வம் என்பனவாம். சிவனை யும் சக்தியையும் சீர்தூக்கிப் பார்க்குமிடத்துச் சொத்து ஒன்றுமே இல்லாதவர் சிவன் என்று இயம்புவது பொருந்தும். அதற்கு அறிகுறியாக அவர் சுடுகாட்டில் வசிக்கிறார். சுடலைப் பொடியை அவர் மேனி முழுவதிலும் பூசியிருக்கிறார். மண்டையோட்டைப் பிக்ஷாபாத்திரமாக வைத்திருக்கிறார். ஆதலால் அவரை நிஷ்பரிக்ரஹன், பொருள் இல்லாதவர் என்று இயம்புவது முறை.

உலகில் ஒன்றுமே உன்னுடையதன்று என்னும் பெரிய பாடத்தை ஜீவர்களுக்குப் புகட்டுதல் பொருட்டுச் சிவனாரும் பொருளற்றவராக இருந்து காட்டுகிறார். எவ்வளவுதான் உலகப் பொருள்களைப் பெற்றாலும் அவற்றைப் பிரியாது வைத்திருக்க மனிதனுக்கு இயலாது. பிரிந்துபோம் பொருளில் வாஞ்சை வைக் காதே என்று சிவனார் தம் சொரூபத்தின் வாயிலாகப் புகட்டு கின்றார்.

இல்லத்துக்குத் தலைவியாய் இருப்பவளை இல்லாள் என் கிறோம். இல்லத்தை ஆண்டுகொண்டிருப்பவள் என்பது அதன் பொருள். இனி, ஆடவன் ஒருவனை இல்லான் என்று சொன் னால் ஒன்றுமில்லாதவன் என அச்சொல் பொருள்படுகிறது. அம்பிகை அகிலாண்டத்துக்கும் இல்லாள் ஆக இருக்கின்றாள். சிவனாரோ ஒன்றும் இல்லானாக இருந்து வருகிறார். சம்பத்துக் கள் அனைத்துக்கும் அம்பிகையே அதிஷ்டான தேவதை என்பது உண்மை. அனைத்தையும் அவளே உடைத்திருக்கிறாள் என்ப தும் உண்மை. ஆயினும் அகண்டாகாரத்தில் விரிந்தோடுகின்ற செல்வங்களையெல்லாம் உடைத்திருப்பதற்கிடையில் இவை யாவையும் உடைத்திருக்கிறேன் என்னும் பந்தபாசம் அம்பிகை யிடம் இல்லை. வெயிலில் நடந்துபோம் நாம் நம் நிழலை உடைத்

திருக்கிறோம். ஆனால் அந்நிழல் நம் உடைமை என்னும் உணர்ச்சி நமக்கு வருவதில்லை. அங்ஙனம் செல்வங்களனைத்தும் சக்தியைச் சார்ந்திருக்கின்றன. அவைகளை உடைத்திருக்கிறேன் என்னும் எண்ணம் அம்பிகையின் திருவுளத்தில் இல்லை. ஆதலால் அவள் நிஷ்பரிக்ரஹா எனப் பகரப் பெறுகிறாள்.

ஆத்மபரிபாகம் அடைய முயலுகிற சாதகர்கள் உலகப் பொருள்களில் வைத்துள்ள பற்றுதல்களையெல்லாம் அறவே ஒழித்தாகவேண்டும். அதற்கு அம்பிகையிடத்திருந்தும் சிவனாரிடத்திருந்தும் அவர்கள் பாடம் கற்றாகவேண்டும். அகப்பற்று இல்லாதவளாக அம்பிகை இருக்கின்றாள். அகம், புறம் ஆகிய இரண்டிலும் பற்றற்றவராகச் சிவனார் இருக்கிறார். துறவியர்களுக்குச் சிவனார் சான்றாகின்றார். இல் வாழ்வு வாழ்ந்திருப்பவர்களுக்கு அம்பிகை சான்றாகின்றாள்.

**निस्तुला — நிஸ்துலா.** ௧௮௪

ஒப்பில்லாதவள்.

பொருள்களை ஒன்றோடொன்று சீர்தூக்கிப் பார்த்து அவற்றுக்கிடையில் ஏற்றத்தாழ்வு காண்கின்றோம். அப்படிக் காண்கிற நாம் மேலானதைப் போற்றவும் மட்டமானதைப் புறக்கணிக்கவும் செய்கிறோம். ஒளிவிடும் மணிகளுள் வைரம் முதன்மை பெறுகிறது. அது கரியினின்று உண்டானது எனினும் கடினத்தில் அதற்கு நிகரானது வேறு ஒன்றுமில்லை. ஒளிர்வதிலும் அது முதன்மை பெறுகிறது. மற்ற மணிகள் எல்லாம கற்கள். வைரம் ஒன்றே கரி. எனினும் பண்பை முன்னிட்டு வைரம் முதன்மை பெறுகிறது. அன்னை பராசக்தியோ நிஸ்துலா அல்லது நிகரற்றவள். எந்த நிலையில் வைத்து ஆராய்ந்து பார்த்தாலும் ஆதிசக்திக்கு ஒப்பானது ஒன்றுமில்லை. இனி அதற்கு மிக்கதொன்று அமைவது எங்ஙனம்? பிரபஞ்சப் பொருள்கள் அனைத்துக்கும் மகிமையை வழங்கிக்கொண்டு அவற்றுக்கு அப்பாலும் அன்னை பராசக்தி தன் பாரமார்த்திகப் பெருமகிமையில் மிளிர்ந்துகொண்டிருப்பதால் அவள் நிஸ்துலா எனப் போற்றப் பெறுகிறாள்.

**नीलचिकुरा — நீலசிகுரா** ௧௮௫

நீலநிறமுள்ள கூந்தலையுடையவள்.

நீலநிறமானது ஆழ்ந்ததாகும்பொழுது அது கரிய நிறமாகக் காட்சிகொடுக்கிறது. கரிய நீலம் (blue black) காண்பதற்குக் கவர்ச்சிகரமானது. ஆழ்கடலும் தெள்ளிய வானமும் கரிய நீல நிறமுடையனவாகத் திகழ்கின்றன. அகண்ட வஸ்து அங்ஙனம் கட்புலனாகிறது. வெவ்வேறு நாடுகளிலிருக்கும் மாந்தர்களுக்குக் கூந்தலின் நிறம் வெவ்வேறாக அமைந்துள்ளது. மஞ்சள், சிவப்பு, கருமை ஆகிய இம்மூன்றும் கூந்தலின் நிறங்களுள் முக்கியமானவை. நரைத்துப்போகுமிடத்து இம்மூன்று நிறங்களும் வெளுத்துப் போகின்றன. கூந்தல் அழகில் ஏனைய நிறங்களைவிடக் கரியநீலமே முதன்மை பெறுகிறது. உலகெங்குமுள்ள மாந்தர்கள் எல்லாரும் அம்பிகையின் வெவ்வேறு சொரூபங்களாவார்கள். அந்தந்த வடிவத்தில் அம்பிகை இலங்குகின்றாள் என்றாலும் அவளுடைய கூந்தல் அழகின் உச்சநிலை கரிய நீலத்தில் அமைந்திருக்கிறது. ஆதலால் அவள் நீலசிகுரா என நவிலப் பெறுகின்றாள்.

**निरपाया — நிர் அபாயா** १८६

அபாயம் இல்லாதவள்.

ஜீவகோடிகள் அனைத்தும் திரும்பத் திரும்ப அபாயத்துக்கு ஆளாகின்றன. பிரபஞ்ச வாழ்க்கையில் விபத்தை விலக்க முடியாது. இன்னல்படுவதும் வாழ்க்கையில் ஒருவிதமான பயிற்சியாகிறது. இன்னல்கள் நேரும்போது கடவுள் சிந்தனை ஒரு பக்கம் வருகிறது. அவைகளைத் தவிர்ப்பதற்கான முயற்சி மற்றொரு புறம் எடுத்துக்கொள்ளப்படுகிறது. அம்முயற்சிகளின் மூலமாக உயிர் வகைகள் அனைத்தும் முன்னேற்றமடைகின்றன. மனிதன் அடைகின்ற முன்னேற்றத்தை மிக மேலானது எனலாம். பிறகு அபாயத்தை முன்னிட்டு மனிதன் கடவுளிடம் முறையிடுகின்றான். முறையீடு மனிதனுடைய முன்னேற்றத்துக்குப் பெரிதும் பயன்படுகிறது. பக்தியை அது வளர்க்கிறது. தெய்வத்தைச் சார்ந்திருப்பதற்குத் துயரம் ஒரு தூண்டுதல் ஆகிறது.

பழையன கழிதல், புதியன புகுதல் இயற்கையின் பெருந்திட்டமாகும். இந்தத் திட்டத்துக்கு அதிஷ்டான தெய்வமாய் இருக்கின்ற அன்னை பராசக்திக்கு இன்னலும் அழிவும் இல்லை.

அவள் நித்திய வஸ்து; நாசம் என்பது அவளுக்கில்லை. ஆதலால் அவள் நிர் அபாயா என்று போற்றப்படுகிறாள்.

**निरत्यया — நிர் அத்யயா** ൧൮൭

வரம்பு கடக்காதவள்.

இயற்கை முழுதும் ஒரு நியதிக்குட்பட்டு இயங்கி வருகிறது. அண்டமெங்கும் ஒழுங்குப்பாடே வடிவெடுத்திருப்பது அம்பிகையின் நியதிக்கு அறிகுறியாகும். தாறுமாறான நிகழ்ச்சிகள் இயற்கையில் இல்லை அணுமுதல் அண்டம் வரையில் ஒழுங்குப் பாட்டை அடிப்படையாகக்கொண்டே இயங்கி வருகின்றன. யாண்டும் நியதி வடிவினளாகவே அம்பிகை இயங்குவதால் அவள் நிரத்யயா அல்லது தான் வகுத்து வைத்துள்ள வரம்புக்குத் தானே உட்பட்டவளாக நடந்துகொள்ளுபவள் என்னும் பெயர் பெறுகிறாள்.

**दुर्लभा — துர்லபா** ൧൮൮

எளிதில் அடையப் பெறாதவள்.

சுலபா என்னும் பாங்குக்கு எதிரிடையாய் இருப்பது துர்லபா. எவள் எளிதில் அடையப்பெறுகிறாளோ அவள் சுலபா ஆகின்றாள். எவள் எளிதில் அடையப்பட மாட்டாளோ அவள் துர்லபாவாக இலங்குகின்றாள்.

அன்னை பராசக்தியை அடைதற்கு உயிர்வகைகள் அனைத்தும் முயன்று வருகின்றன. அப்படி முயலுகின்ற ஜீவர்களுள் முதன்மை வகிக்கின்றவர்கள் யோகிகளும் பக்தர்களும் ஆவார்கள். முறையாக முயலுகின்ற யோகிகளுக்கும் பேரன்புடன் முயலுகின்ற பக்தர்களுக்குமே அவளை அடையப் பெறுவது எளிதன்று என்றால் மற்றவர்களுக்கு அது எவ்வளவு சிரம சாத்தியம் என்பது வெளியாகிறது. ஏது எளிதில் அடையப்படுகின்றதோ அது எளிதில் கை நழுவியும் போய்விடுகிறது. எதை மனிதன் படாதபாடுபட்டுச் சம்பாதிக்கின்றானோ அதை அவன் நன்கு பாதுகாத்து வைக்கிறான்.

அம்பிகையின் அருளைப் பெற முயலுகிறவர்கள் பல பிறவிகளில் தவம் புரிந்து தங்களைப் பக்குவப்படுத்துகின்றனர். பக்குவ

மான பிறகு அம்பிகையின் அருளுக்குப் பாத்திரமாகிறார்கள். இந்த நியதிகளையெல்லாம் முன்னிட்டே அம்பிகை துர்லபா என்று போற்றப்படுகிறாள்.

**दुर्गमा** — துர்கமா १८९

அணுக முடியாதவள்.

உயிர்வகைகள் அனைத்தும் ஏதேதோ பாங்குகளில் தங்களைக் காப்பாற்றிக்கொள்ள முயன்று வருகின்றன. முயற்சியில் பெரிதும் வெற்றியும் அடைந்து வருகின்றன. அன்னை பராசக்தியைச் சரியாக அறிந்துகொள்கிறவர்களே தாங்கள் அவ்வன்னையினால் பாதுகாத்து வைக்கப்பட்டிருப்பதாக அறிகிறார்கள். அவ்வுண்மையை அறியாதவர்கள் அன்னையின் மடியில் வசித்திருந்தும் அவளிடமிருந்து விலக்கி நெடுந்தூரத்தில் வைக்கப்பட்டவர்களாக உணர்கிறார்கள். அன்னையை அணுகுதற்குப் பல பிறவிகளில் படாத பாடுபட்டும் வருகின்றனர். ஜீவர்கள் படைத்துள்ள அக்ஞானமே அவர்களை அம்பிகையினிடமிருந்து நெடுந்தூரத்தில் விலக்கி வைத்திருப்பதாக மயக்கத்தை உண்டு பண்ணுகிறது. அந்த மயக்கத்தைப் பெரும்பாடுபட்டு நீக்க வேண்டும். மயக்கம் எளிதில் அகலாதிருப்பதை முன்னிட்டு அம்பிகை எளிதில் அணுக முடியாதவள் என்று இயம்பப்பெறுகிறாள் விலக்க முடியாத மயக்கத்தை விலக்கிய பின்பே அம்பிகை எளிதில் அடையப்பெறுபவளாகிறாள்.

**दुर्गा** — துர்கா १९०

கடக்க முடியாத பாங்கைப் படைத்தவள்.

துர்க்கம் என்றால் கோட்டை. கோட்டையைக் கைப்பற்றுவது எளிதன்று. மும்முரமாக அதற்கு முற்றுகை போடவேண்டும். முற்றுகை போடுகிறவர்கள் அதற்கேற்ற ஆற்றலும் படைத்திருக்க வேண்டும். படைபலம் வாய்ந்த சேனையே கோட்டையொன்றைக் கைப்பற்ற வல்லதாகிறது.

உயிர் வகைகளனைத்தையும் தானே படைத்துக் காத்துத் துடைத்துவரும் அம்பிகை அனந்தங்கோடி பிறவிகளில் தன் ஆதிக்கத்திலேயே உயிர் வகைகளை வைத்திருக்கிறாள். பிறவிப்

பெருங்கடலைத் தாண்டிப் பரமனை அடைவது வாழ்க்கையின் முடிவான குறிக்கோள். ஆனால் அதை அடைவது எல்லார்க்கும் சாத்தியமன்று. பரமனை அடைய ஆசைப்படுபவர்களுள் ஆயிரம் பேரில் ஒருவர் பரமனை அடையப் பெறுவார்களாகில் அது கிடைப்பதற்கரிய பேருகிறது. துர்க்காதேவியின் ஆதிக்கத்தைப் புறக்கணித்துவிட்டுப் பரத்தையடைவது ஜீவர்களுக்குச் சாத்தியமன்று. அவளருளாலே அவள் தாளை வணங்கி விண்ணப்பிக்கின்றவர்களுள் யாரோ ஒரு சிலரை அவள் தன் தளையினின்று விடுவிக்கின்றாள். அப்படி விடுபடுவது அரிய செயலாதலால் தளைமயமாக இருக்கின்ற தேவி துர்கா என்று போற்றப் பெறுகிறாள்.

**दुःखहन्त्री — துக்கஹந்த்ரீ** ૧૯૧

துக்கத்தைப் போக்கடிக்கின்றவள்.

இவ்வுலக வாழ்வு அழுகை மயமாக நிகழ்ந்து வருகிறது. இந்த விதிக்கு விலக்கான ஜீவனை உலகில் காணமுடியாது. அன்னை பராசக்தி வடிவமாக உள்ள பரம்பொருளைச் சிக்கெனப் பிடிக்கவேண்டும். துக்கத்தைத் தவிர்ப்பதற்கு அது ஒன்றே உற்ற உபாயமாகும். அன்னை பராசக்தியின் பேரருளை யார் உறுதியாகப் பற்றிப் பிடித்துக்கொள்கின்றனரோ அன்னவர்களின் துக்கத்தை அவள் அறவே துடைத்துத் தள்ளுகின்றாள். ஆதலால் அவளுக்கு துக்கஹந்த்ரீ என்னும் பெயர் வந்துள்ளது.

**सुखप्रदा — ஸுகப்ரதா** ૧૯૨

சுகத்தைக் கொடுப்பவள்.

துக்கத்தின் வாயிலாக அம்பிகை உயிர்களைச் சுகத்துக்கு ஆயத்தப்படுத்துகிறாள் துக்கமில்லாத சுகம் பிரபஞ்சத்தில் இல்லை. சுகத்தைக் கொடுப்பதன் வாயிலாகச் சன்மார்க்கம், துன்மார்க்கம் ஆகிய இரண்டையும் பாகுபடுத்துதற்கு அம்பிகை சந்தர்ப்பம் கொடுக்கின்றாள் கடைசியாக, சுகம் முழுதும் சத்பொருளாகிய பரத்தினிடத்தே உளது. அசத்தாகிய பிரபஞ்சத்தில் இல்லை என்பதையும் அம்பிகை இறுதியாகக் காட்டியருள்கின்றாள். எனவே, சுகநாட்டமும், அதைக் கொடுத்தருளுதலும் ஆகியசெயல்

களின் வாயிலாக அன்னை பராசக்தி ஜீவர்கள் அனைவரையும் பக்குவப்படுத்தி வருகிறாள்.

दुष्टदूरा — துஷ்டதூரா १९३

துஷ்டர்களால் அடையப்படாதவள்.

அம்பிகை பிரபஞ்ச சொரூபமாக இலங்குகின்றாள். பிரபஞ்ச நடைமுறை ஒழுங்குப்பாட்டை அடிப்படையாகக் கொண்டது. சுகத்தை நாடுதற்கு எடுத்துக்கொள்கின்ற முயற்சிகளுள் வெற்றி தருபவைகள் சத்கருமங்கள். தோல்வியில் தள்ளுபவைகள் அசத் கருமங்களாகின்றன. அசத் கருமங்களில் ஈடுபட்டிருப்பவர்கள் துஷ்டர்கள். எவ்வளவுதான் துன்பம் நேர்ந்தாலும் துஷ்ட கிருத்தியங்களிலிருந்து துஷ்டர்கள் திருந்தியமைய மாட்டார்கள். அத்தகைய கீழோர்க்கு அம்பிகையின் தெய்விகப் பெற்றி புலனாகாது. அவர்கள் இன்னும் நெடுங்காலம் துஷ்டச் செயலில் உழன்று துன்பம் துய்ப்பது அவசியமாகிறது. அத்தகைய கீழ்நிலையில் இருப்பவர்களுக்கும் அம்பிகையின் சொரூபத்துக்கும் வெகுதூரம். ஆதலால் அம்பிகை துஷ்டதூரா என்று போற்றப் பெறுகிறாள்.

दुराचारशमनी — துராசாரசமனீ १९४

துராசாரத்தைப் போக்குபவள்.

நிரந்தரமான சுகத்தைத் தருவது சதாசாரம்; நீண்டதும் கொடியதுமான துக்கத்தைத் தருவது துராசாரம். லோகாசாரங்களுள் நல்லது எது கெட்டது எது என்பதைப் பாகுபடுத்துவது கடினம். இதைப் பாகுபடுத்தத் தெரிந்துகொள்ளாமையினால் மக்களுக்கிடையில் மதவெறி உண்டாகிறது. இன்பம் போன்று தென்பட்டுத் துன்பமாக முடிவது துராசாரம். துராசாரம் என்றைக்கும் துக்கத்தை வளர்க்கக்கூடியது என்னும் பாங்கை அன்னை பராசக்தி சர்வகாலமும் புலப்படுத்திக் கொண்டிருக்கின்றாள். ஆதலால் அவள் துராசாரசமனீ என்று போற்றப் பெறுகிறாள்.

दोषवर्जिता — தோஷவர்ஜிதா १९५

தோஷங்கள் இல்லாதவள்.

குற்றமும் குறைநிலையும் தோஷத்தில் அடங்கியிருக்கின்றன. ஐம்பூதங்களாலாகிய பிரபஞ்சத்தில் தோஷம் ஏதுமில்லை. ஜடநிலையிலுள்ள பிரபஞ்சத்துக்குச் சற்று மேலே ஆராய்ந்து பார்த்தால் பஞ்சேந்திரியங்கள் சொரூபமாகவும், அந்தக்கரணங்கள் சொரூபமாகவும் அம்பிகை இலங்குகின்றாள் என்பது விளங்கும். ஜீவர்கள் படைத்துள்ள கருவி, கரணங்களில் தோஷம் காணலாம். விஸ்வரூபத்தில் இலங்கும் பராசக்தியின் அமைப்பில் கருவி கரணங்களின் தோஷம் இல்லை. அம்பிகை பரம்பொருளின் செம்பாகம் ஆகின்றாள். ஆங்கு அவளுடைய குண விசேஷமே வெளியாகிறது. ஆதலால்தான் அன்னை பராசக்தி யாண்டும் தோஷவர்ஜிதா என்று போற்றப்பெறுகிறாள்.

**सर्वज्ञा — சர்வக்ஞா** १९६

நிறைஞானம் உடையவள்.

அம்பிகை முற்றும் அறிந்தவள்; ஓதாது உணர்ந்தவள். அறிவு யாண்டும் ஞானப் பிரகாச சொரூபமானது. எது பிரகாசம் வாய்த்திருக்கிறதோ அது தன்னைத்தானே விளக்குகிறது. தன்னைச் சூழ்ந்துள்ள மற்ற பொருள்களையும் விளக்குகிறது. ஞான சொரூபிணியாய் இருக்கின்ற அம்பிகை ஜீவகோடிகள் அனைத்தின் அறிவுத் தொகுதி ஆகின்றாள் ஆதலால் அவள் சர்வக்ஞா என்று போற்றப்பெறுகிறாள். அம்பிகையின் பேரறிவைச் சிந்தனை பண்ணுவதற்கும் போற்றுதற்கும் ஏற்ப ஆத்ம சாதகனுடைய அறிவு தெள்ளிய அறிவாகத் திருந்தியமைகிறது.

**सान्द्रकरुणा— ஸாந்த்ரகருணா** १९७

அத்தியந்த கருணை உடையவள்.

உயிர்களுக்கிடையில் நல்லிணக்கத்தை உண்டுபண்ணுவது கருணை கருணையைத் தெய்வ சம்பத்து என்று சொல்லவேண்டும். குறை செல்வத்துக்கிடையில் தாயிடம் வளர்கின்ற ஒரு குழந்தை பெறுகின்ற செழுமையை ஒரு ஸ்தாபனத்தில் நிறை செல்வத்தில் வளர்ந்து வருகின்ற அனாதைச் சிசு ஒன்று பெறாது. உலகில் தாயன்புக்கு நிகர் ஏதும் இல்லை. தாயன்பையே கருணை என்கிறோம். அன்னை பராசக்தி கருணையே வடிவெடுத்தவளாய் இருந்து உயிர்களை ஓம்பி வருகின்றாள். பிரபஞ்சமெங்கும் தென்

படுகின்ற செழுமைக்குக் காரணம் அம்பிகையின் அன்புகனிந்த கருணையாம். ஆதலால் அவள் ஸாந்த்ரகருணா என்று போற்றப் படுகிறாள்.

**समानाधिकवर्जिता — ஸமானாதிகவர்ஜிதா** ௧௯௮

தனக்கு ஒப்புயர்வில்லாதவள்.

உயிர்வகைகளுள் ஒன்றுக்கொன்று நிகரானவைகளையும் மேம்பட்டவைகளையும் உலகில் காண்கின்றோம் எங்குத் திரும்பி எதை ஆராய்ந்து பார்த்தாலும் ஏற்றத்தாழ்வு மயமாகவே பிரபஞ் சத்தில் அனைத்தும் அமைந்திருக்கின்றன. ஆனால் அண்டகோடி களனைத்தையும், ஜீவகோடிகளனைத்தையும் தன்னிடத்திலிருந்தே தோற்றுவித்துப் பிறகு அவை யாவுக்கும் அப்பாற்பட்டவளாக அம்பிகை இலங்குகின்றாள். பரப்பிரம்மமே அவளுக்குப் புறம் பான வஸ்து ஆகாது. ஆதலால் அம்பிகைக்குச் சமானமாக ஒன்றுமே இல்லை என்றால் பின்பு அவளுக்கு மேலானதாக யாது இருக்கப்போகிறது?

**सर्वशक्तिमयी — ஸர்வ சக்தி மயீ** ௧௯௯

எல்லாவித சக்திகளாக இலங்குபவள்.

மஹாசக்தி சொரூபிணியாக அம்பிகை இலங்குகின்றாள். பரதேவதையாகிய அன்னை பராசக்தி மும்மூர்த்திகளுக்குரிய சக்திகளாகவும், கணக்கற்ற தேவர்களுக்குரிய சக்திகளாகவும், நரர்களுக்குரிய சக்திகளாகவும், விலங்குகள் பறவைகளுக்குரிய சக்திகளாகவும் திகழ்ந்துகொண்டிருக்கிறாள். ஆதலால் அம்பி கையை ஸர்வசக்திமயீ என்று சொல்லுவது பொருத்தமானது.

**सर्वमङ्गला — ஸர்வமங்களா** ௨௦௦

எல்லாவிதமான மங்களங்களோடு கூடியவள்.

எது நலன் தருகிறதோ அது மங்களமானது. அம்பிகை யினிடத்திருந்து உலகுக்கு வருகின்ற வாய்ப்புகள் அனைத்தும் நலன் தருபவைகளாம். முறையாகத் தத்துவ ஆராய்ச்சி பண்ணு கிறவர்களுக்குக் கேடு என்று சொல்லப்படுவதில் மறைமுகமாக நலன் இருக்கிறது என்பது புலனாகும். பிரபஞ்சமெங்கும் நிகழ் கின்ற சகலவிதமான செயல்களினின்றும் இறுதியில் நலனே

வாய்ப்பதால் அம்பிகை சர்வமங்களா என்று போற்றப்பெறுகிருள்.

**सद्गतिप्रदा** — ஸத்கதிப்ரதா २०१

நல்ல கதியைக் கொடுப்பவள்.

உயிர்கள் பெறுகிற பேறதனுக்குக் கதி என்று பெயர். உலகில் சில உயிர்வக்கைகள் துர்கதியடைவதைக் காண்கிருேம். அம்பிகையின் பரந்த சரம்ராஜ்யத்தில் துர்கதிக்கு இடம் இருத்தலாகாது. ஆயினும் துர்கதியைக் கண்கூடாகக் காண்கிருேம். திரிலோகேசனுகிய லங்கேசன் இராவணன் இராமனுல் கொல்லப்படுதல் என்னும் துர்கதியடைந்தான். அரக்கர் அனைவரும் அவனுடைய துர்கதிய்யைக் குறித்துத் துயருறுவாராயினர். ஆயினும் இராவணன் அடைந்தது துர்கதியன்று. பொருந்தாத பாங்கும், பொருந்தாத மேனி அமைப்பும் அவனிடமிருந்து துடைத்துத் தள்ளப்படுகின்றன. தசமுகமர்த்தனம் தசமுகரக்ஷணமாகத் திருந்தியமைகிறது. இராவணன் தன்னிடமிருந்த தீமையைக் களைந்துவிட்டு நலத்தை நாடிச் செல்லுதற்கு அவனுடைய முடிவு துணைபுரிந்தது. அழிவு போன்று தென்பட்ட அச்செயலில் புதிய வாழ்வு பிறத்தல் என்னும் நலன் நிறைந்திருக்கிறது. இங்ஙனம் தீங்கு போன்று தென்படுகின்ற எல்லாச் செயல்களின் வாயிலாகவும் உயிர்களுக்கு நல்ல கதியையே அம்பிகை வழங்கிக்கொண்டிருக்கிருள்.

**सर्वेश्वरी** — ஸர்வேச்வரீ २०२

எல்லார்க்கும் ஈஸ்வரீ.

அம்பிகையினுடைய ஆதிக்கத்தை மீறி எந்த உயிரும் கடந்துகொள்ள முடியாது. எவ்வுலகில் எத்தகைய சூழ்நிலையில் எந்த உயிர் வாழ்ந்திருந்தாலும் அந்த உயிர் அம்பிகையின் ஆட்சிக்குப் புறம்பானது ஆகாது. அவளுடைய பராமரிப்பிலேயே ஜீவகோடிகளனைத்தும் பரிபாலிக்கப்படுகின்றன. ஆதலால்தான் அவளை சர்வேச்வரீ என்று போற்றவேண்டும்.

**सर्वमयी** — ஸர்வமயி २०३

யாவுமாய் இருப்பவள்.

தத்துவ விளக்கம் பற்பல பாங்குகளில் வந்தமைகிறது. சாங்க்ய தர்சனப்படி பிரகிருதி இருபத்து நான்கு தத்துவங்களாக வடிவெடுக்கிறது. இருபத்தைந்தாவது தத்துவமாக இருப்பது புருஷன். வேதாந்த தத்துவப்படி ஜகத்தும் ஜீவனும் பரம்பொருளின் விபூதிகளாம். இந்த இரண்டு கூறுகளுடைய பிரகிருதி புருஷனுக்கு அபின்னமானது. பிரகிருதியை சக்தி என்றும் புருஷனை சிவம் என்றும் கூறுவது மரபு. சாக்த சமயப்படி அன்னை பராசக்தியே சக்தியாகவும் சிவமாகவும் இலங்குகின்ருள். சேதன அசேதனமாய், சராசரங்களாய் இருக்கின்ற யாவும் அம்பிகையின் தோற்றங்களாம். அவளுக்கு அன்னியமான பொருள் ஏதுமில்லை. ஆதலால் அவள் ஸர்வமயீ எனப் போற்றப் பெறுகின்ருள்.

**सर्वमन्त्रस्वरूपिणी — ஸர்வ மந்த்ர ஸ்வரூபிணீ** २०४

**எல்லா மந்த்ரங்களின் வடிவங்களாக இலங்குபவள்.**

ஓசையனைத்தும் பராசக்தியின் தோற்றங்களாம். ஓசையினின்று வடிவெடுக்கும் சொற்களில் சில மனிதனை மகோன்னத நிலைக்குக் கொண்டு போகக்கூடியவைகளாக இருக்கின்றன. மனதைப் பண்படுத்தவல்ல சொல்லுக்கு மந்த்ரம் என்று பெயர். ஏதேனும் ஒரு மந்த்ரத்தை உறுதியாகப் பிடித்துக்கொண்டு உச்சரித்து வந்தால் மனம் முற்றிலும் பரிபாகம் அடைகிறது. அம்மந்த்ரங்கள் யாவும் அம்பிகையின் சொரூபங்களாம். ஆதலால் அவள் ஸர்வ மந்த்ர ஸ்வரூபிணீ என்று இயம்பப் பெறுகிருள்.

**सर्वयन्त्रात्मिका — ஸர்வயந்த்ர ஆத்மிகா** २०५

**எல்லாவிதக் கருவிகளாக இருப்பவள்.**

ஏதேனும் ஒரு செயலுக்குப் பயன்படுகின்ற கூட்டுக்கருவி ஒன்று யந்த்ரம் என இயம்பப்பெறுகிறது. நவீன உலகை யந்த்ர உலகம் என்றே இயம்பலாம். இந்த யந்த்ரங்கள் ஜடசக்தியால் இயக்கப்படுகின்றன. அம்பிகை ஜடசக்தியாயிருந்து பல்பல காரியங்களுக்கு உதவி வருகின்ருள்.

தன்னுடைய சித்சக்தியினல் அம்பிகை இயக்குகின்ற யந்த்ரங்கள் சரீரங்கள் என்று சொல்லப்படுகின்றன. அப்படி அமைந்

துள்ள உயிர் ததும்பும் யந்த்ரங்களுள் மானுட சரீரம் என்னும் யந்த்ரம் மிக மேலானதாம். பிரபஞ்சமெங்கும் செயலுக்குப் பயன்படுகின்ற உயிரற்ற யந்த்ரங்கள், உயிருற்ற யந்த்ரங்கள் ஆகிய யாவும் அம்பிகையின் பலப்பல தோற்றங்களாம். ஆதலால் அம்பிகையானவள் ஸர்வயந்த்ர ஆத்மிகா எனப் போற்றப் பெறுகிருள்.

**सर्वतन्त्ररूपा — ஸர்வதந்த்ர ரூபா** ௨௦௬

எல்லாவிதத் தந்த்ரங்களாக அமைந்திருப்பவள்.

பலப்பல யந்த்ரங்களைக் கையாள்வதற்கான உபாயங்களே தந்த்ரம் என்னும் பெயர் பெற்றுள்ளன. அவை யாவும் பலதரப்பட்ட கலைகளாகின்றன. யந்த்ரங்களைச் சரியாக இயக்கிக் கொண்டிருப்பதற்கிடையில் திடீரென்று ஆபத்திற்கேதுவான நெருக்கடி நேரலாம். அவ்வேளையில் ஆபத்தின் கொடுமையைக் குறைப்பதற்கேற்ற புதிய உபாயத்தைக் கையாளுமிடத்தும் அது தந்த்ரம் எனப்படுகிறது. கேட்டினின்று தப்பித்துக்கொள்வதற்கும், நலத்தைத் தங்குதடையின்றிப் பெறுதற்கும், வாழ்வை மேன்மையுறச் செய்தற்கும் கையாளப்படுகின்ற உபாயங்கள் தந்த்ரம் என்னும் கோட்பாட்டில் அடங்குகின்றன.

உடல் வாழ்க்கையை முறையாகக் கொண்டு செலுத்துவது தந்த்ரம். முற்றிலும் இந்திரிய நிக்ரகம் பண்ணுதல் யோகி புரிகிற தந்த்ரமாகிறது. இதன் வாயிலாகப் பாரமார்த்திகப் பெருவாழ்வுக்குத் தகுதியுடையதாக தேகத்தை யோகி திருத்தியமைக்கிருன். தந்த்ரங்களுள் இது தலைசிறந்த தந்த்ரமாகிறது. இத்தனைவிதப் படித்தரங்களில் உள்ள எல்லாவிதத் தந்த்ரவடிவங்களிலும் பராசக்தி திகழ்கிருள். பிரபஞ்சமாக உள்ள யந்த்ரத்தை அன்னை பராசக்தி திறமையுடன் கையாண்டு வருவதால் ஸர்வ தந்த்ர ரூபா என்னும் பெயர் வந்துள்ளது.

**मनोन्मनी — மனோன்மனீ** ௨௦௭

மனதிலே உன்மனயத்தை அல்லது உன்மனீ பாவத்தைக் கொண்டிருப்பவள்.

அம்பிகையின் சக்தி கணக்கற்ற விதங்களில் பிரபஞ்சமெங்கும் செயல்புரிந்து வருகிறது. மனதாக வடிவெடுக்கும் சக்தியிடம் மேன்மை மிளிர்கிறது. என்னென்ன மேலான பாங்குகளில் மனது செயல்புரிய வல்லதோ அந்த மேலான பாங்குகளெல்லாம் மனதினுடைய உன்மனீய பாவமென்று பகரப்படுகின்றன. மனிதன் படைத்துள்ள சிரத்தையும் உன்மனீயம் என இயம்பப் பெறுகிறது. சிரத்தை எவ்வளவுக்கெவ்வளவு மேலானதோ அவ்வளவுக்கவ்வளவு மனிதன் மேன்மையுறுகிறான். ஈசுவர சாக்ஷாத்காரம் ஈறாக எந்தப் பெருநிலையையும் மனோன்மனீயம் படைத்துள்ள மனிதன் எளிதில் பெறுவான். அன்னை பராசக்தியின் மேலான இயல்பே மனோன்மனீயம் என மொழியப்படுகிறது. ஆதலால்தான் அம்பிகைக்கும் மனோன்மனீ என்னும் தெய்விகப் பெயர் வந்துள்ளது.

**माहेश्वरी — மாஹேச்வரீ** ௨०८

மஹேஸ்வரனுடைய சக்தியாய் இருப்பவள்.

பரம்பொருளை நாடி நாம் இங்குமங்கும் ஓடவேண்டியதில்லை. எங்குத் திரும்பி எவ்வுயிரைப் பார்த்தாலும் அவ்வுயிரைப் பரம்பொருளின் தோற்றம் என்று பாவித்து அதனோடு தெய்விக இணக்கம் வைத்தால் அது மகேஸ்வர பூஜையாகிறது. மகேஸ்வர பூஜை வலுப்பதற்கு ஏற்ப ஜீவன் சிவசொரூபமாக மாறியமைகிறான். சக்தியும் சிவமும் ஒன்று. பரவஸ்து சிவசொரூபம்; அப்பரவஸ்துவின் மகிமைகள் சக்தி சொரூபம். அம்பிகையின் மகிமைகளை உள்ளத்தினுள் உணர்வது சிறந்த சக்தி பூஜையாகிறது. அப்பூஜைக்குத் துணையாய் இருப்பவள் மாஹேச்வரீ.

**महादेवी — மஹாதேவீ** ௨०९

பெரியதில் எல்லாம் மிகப்பெரியதாய் இருப்பவள்.

பராசக்தியைவிடப் பெரியபொருள் வேறு ஏதும் இல்லை. எண்ணிறந்த தேவர்களும் தேவிகளும் மகாதேவியின் அம்சங்களாகின்றார்கள். உபாசகன் ஒருவன் தன் உபாசனை மூர்த்தியை ஒப்புயர்வற்றதாகக் கருதுதல் வேண்டும். உண்மையில் இருப்பது ஒரு பொருள். அது பலப்பல பொருள்களாகக் காட்சிகொடுத்துக் கொண்டிருந்தாலும் மூலநிலையில் அது ஒன்றேயாம். அன்னை

பர்ாசக்தியே அனைத்தையும் தன்னகத்து அடக்கிவைத்திருக்கிறாள். ஆதலால் அவளை மகாதேவீ என்று மொழிவது முறை. அன்னையின் உபாசனையில் எல்லாத் தெய்வங்களின் உபாசனைகளும் அடங்கிவிடுகின்றன.

**महालक्ष्मी — மஹாலக்ஷ்மீ** ૨૧૦

ஒப்புயர்வற்ற திருமகள்.

பராசக்தியை மகாதேவீ என்றும் மகாலக்ஷ்மீ என்றும் கருதுவது முறை. தெய்வ சம்பத்து அனைத்தையும் ஒருங்கே உடைத்திருப்பவள் மகாலக்ஷ்மீ. பிரபஞ்ச சம்பந்தமான சொத்துக்களனைத்தும் பொருட் செல்வம். திருமகள் தானே இத்தனைவிதச் செல்வங்களாகத் திகழ்கின்றாள். அருட்செல்வம் என்பது பரத்தை அடைவதற்கு உறுதுணையாய் இருக்கும் விவேகம், வைராக்கியம், பக்தி, ஞானம் முதலியவைகளாம். இத்தகைய பாரமார்த்திகப் பெற்றியாகப் பொலிபவளும் திருமகளேயாம். மகாதேவியாய் இருப்பவள் மகாதேவனுடைய செம்பாதியாக வாமபாகத்தில் அமைந்திருக்கிறாள். மகாலக்ஷ்மீ மகாவிஷ்ணுவின் மார்பில் இடம்பெற்றிருக்கிறாள். ஆதலால் அம்பிகை உபாசனையில் பரமன் உபாசனை அடங்கப்பெற்றிருக்கிறது.

**मृडप्रिया — ம்ருடப்ரியா** ૨૧૧

சிவனுக்குப் பிரியமானவள்.

அகிலாண்டங்களையும் நல்ல நிலையில் காத்து வைத்திருப்பவன் ம்ருடன் அல்லது சிவபெருமான். குணாதீதத்தில் இருக்கிற அப்பரமன் குணசொரூபியாகுமிடத்து சத்துவகுணம் நிரம்பப் பெற்ற ம்ருடன் எனப் பொருள்படுகிறான். அத்தகைய பரமசிவனுக்கு அபின்னமாய் இருக்கும் பராசக்தி ம்ருடப்ரியா எனப் போற்றப்பெறுகிறாள். ஜகத்தில் எப்பகுதியை எங்குத் திரும்பிப் பார்த்தாலும் அது எழில் நிறைந்ததாகவே இருக்கிறது. ஆகையால் ம்ருடப்ரியா எனப் போற்றப்படும் பராசக்தியானவள் தானே தன் பொலிவைக் காத்துவருவதுமல்லாது அப்பொலிவிலே அவள் பெருமகிழ்ச்சியுற்றிருக்கிறாள். அம்பிகையின் பொலிவைப் பாராட்டுவது நல்ல ஆராதனையாகிறது.

**महारूपा — மஹாரூபா** २१२

பெரிய வடிவத்துடன் இருப்பவள்.

நாமரூபமயமாயிருப்பது பிரபஞ்சத்தின் அமைப்பு. ரூபத்துக்கு ஏற்ற நாமத்தைத் தருவது நம் மரபு. யானையொன்றின் வடிவத்தை மகாரூபம் எனலாம். அந்த மகாரூபத்தைக் கிரகித்துக்கொள்ள அதன்மீது ஊர்ந்துசெல்லும் ஓர் எறும்புக்கு இயலாது. அங்ஙனம் அன்னை பராசக்தியின் மகாரூபத்தைக் கிரகித்துக்கொள்ள நமக்கு இயலாது. அகிலாண்டத்தின் தொகை அம்பிகையின் மகாரூபம். நம் அறிவுக்கு எட்டுகிற சிறு பகுதிகளுக்கு நாமம் கொடுத்து நாம் விளக்குகிறோம். நம் அறிவுக்கும் இந்திரியங்களுக்கும் எட்டாத பகுதிகள் அகண்டாகாரத்தில் விரிந்தோடுகின்றன. அவையாவையும் தொகுத்து அம்பிகையின் வடிவமாகக் கருதுமிடத்து அவளே மஹாரூபா அல்லது அளப்பரிய வடிவத்தை எடுத்திருப்பவள் என்று பொருள்படுத்துகிறோம்

**महापूज्या — மஹாபூஜ்யா** २१३

பெரிதும் போற்றப்படுபவள்.

மனிதன் மட்டுமல்லாமல் ஸ்தாவர ஜங்கமங்களாகிய உயிர் வகைகள் அனைத்தும் தத்தம் போக்கிற்கு ஏற்ப தேவாராதனை செய்துவருகின்றன. உணவு தம்முடைய உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாதது என்று உணர்ந்து அபிமானத்தோடு அதைத் தம்மயமாக்குவது ஆராதனை அல்லது பூஜையாகிறது. உயிர் வகைகள் யாவும் தங்களுக்குப் புறம்பாயுள்ள பரவஸ்துவின் விகாரங்களைத் தங்கள் மயமாக்க விரும்புகின்றன. ஆதலால் இடையறாது அகிலாண்டங்களில் பேர் ஆராதனை நிகழ்ந்து வருகிறது. அவையாவும் அம்பிகையின் மகாபூஜையாகின்றன. பஞ்சேந்திரியங்களின் வாயிலாக விரும்பி ஏற்கப்படும் விஷயங்கள் ஆராதனைக்கு நிகராகின்றன. அந்த விஷயங்களைத் தெய்வமயமாக மாற்றவல்லவனாக மனிதன் இருக்கிறான். ஐம்பொறிகளால் புலப்படுத்தப்படுபவைகள் யாவும் தெய்விகம் நிறைந்தவைகள். ஆதலால் அவை ஆராதனை ஆகின்றன. மனதைக்கொண்டு பண்ணுகிற பூஜை மானச பூஜையாகிறது இது மனிதனுக்கே சாத்தியம். மனம் பரத்தில் ஒன்றுபடுங்கால் அது பூஜையின்

உச்சநிலையாம். இங்ஙனம் எல்லா நிலைகளிலுமுள்ள ஸ்தாவர ஜங்கமங்களாகிய உயிர்வகைகள் தாம் படைத்துள்ள கருவிகரணங்கள் வாயிலாகப் பெருநிலையை எட்ட முயன்று வருகின்றன. உயிர்களனைத்தும் எடுத்துக்கொள்கிற முயற்சியே மகாபூஜையாகிறது. அப்பெரிய பூஜைக்கு இலக்காக இருப்பவள் அன்னை பராசக்தி. ஆதலால் அவள் மஹாபூஜ்யா எனப் போற்றப்படுகிறாள்.

**महापातकनाशिनी — மஹாபாதகநாசினீ** २१४

பெரும் கேடுகளையெல்லாம் போக்குபவள்.

ஒவ்வோர் உயிரும் ஏதேனும் ஒரு விதத்தில் குறை நிலையை உணர்கிறது. குறை நிலையே பாதகம் எனப் பகரப்படுகிறது. பாதகத்தை நாசம் செய்பவள் பாதக நாசினீ. பிரதிகூலமான சூழ்நிலையை அனுகூலமான சூழ்நிலையாகத் திருத்தி அமைக்கும் இயக்கம் உயிர்களிடத்தில் இருந்து வருகிறது. இம்முயற்சியை மனிதன் சிறப்பாகச் செய்து வருகிறான். பாதகங்களுள் பெரிய பாதகமாயிருப்பது அக்ஞானம். அறியாமைஒன்றே கேடுகளனைத்துக்கும் அடிப்படைக் காரணமாகிறது. அறியாமையால் அல்லற்படும் உயிர்வகைகள் சிறிது சிறிதாக அறிவை வளர்த்து வருகின்றன. பிரபஞ்சத்தைப் பற்றிய அறிவின் வாயிலாக இக்காலத்திய பௌதிக விக்ஞானம் எத்தனையோ பாதகங்களை அகற்றி வருகிறது. இனி, பரஞானத்தைப் பெறுமிடத்துப் பிறவிப்பிணி என்னும் மகாபாதகம் அகற்றப்பெறுகிறது. இங்ஙனம் எல்லாப் படித்தரங்களிலும் படிப்படியாகப் பாதகம் நீக்கப்பெறுகிறது. இறுதியில் சம்சார சாகரம் என்னும் பாதகம் நீக்கப்பெறுகிறது. இவையாவுக்கும் அம்பிகை பெருநதுணை புரிவதால் அவள் மஹாபாதக நாசினீ என்று போற்றப்பெறுகிறாள்.

**महामाया — மஹாமாயா** २१५

மகாமாயையாய் இருப்பவள்.

மாயை என்பது வாதத்துக்குரிய விஷயமன்று. இருப்பதை இருக்கிறபடி அறிந்துகொள்ளவும் இயம்பவும் வேண்டும் என்பது இதன் கருத்து. இருக்கிறதை இருக்கிறபடி ஏற்றுக்கொண்டு நம் வாழ்வை அதற்கு ஏற்ப நடாத்துதல் வேண்டும்.

யாதொன்று ஒரு கணத்துக்கு முன்பிருந்தது போன்று ஒரு கணத்துக்குப் பின்பு இருப்பதில்லையோ அது மாயை. எது இயங்குகிறதோ அது இயற்கை. ஆதலால் இயற்கை என்னும் சொல்லுக்கும் மாயை என்னும் சொல்லுக்கும் பொருள் ஒன்றேயாம். ஓயாது மாறியமையும் பாங்குடையது இம்மாயப்பிரபஞ்சம். பிறந்தது முதல் மனிதன் வடிவம் மாறி அமைந்துகொண்டிருக்கிறான். பிறகு இறப்பு அல்லது தோன்றா நிலையை அவன் எய்துகிறான். மீண்டும் மற்றொரு வடிவத்தில் வேறோர் இடத்தில் அதே செயலை அவன் புரிகிறான். அகிலாண்டங்களும் அதே பாங்கில் தோன்றி மாறுபாடுடன் இருந்து மறைகின்றன. மீண்டும் பழைய திட்டப்படி அவை தோற்றத்துக்கு வருகின்றன. இப்படி நிலைமாறி அமைந்துவருகிற அகிலாண்டங்களின் தொகை அன்னை பராசக்தி ஆவாள். ஆதலால் அவள் மகாமாயை என மொழியப்பெறுகிறாள்.

**महासत्वा — மஹாஸத்வா** २१६

மிகப் பெரிய சத்வத்தோடு கூடியிருப்பவள்.

உயிர்த்தத்துவமாய் இலங்குவது சத்துவம் எனப்படுகிறது. சிற்றுயிர், பேருயிர் ஆகிய எல்லாவித உயிர்களும் அம்பிகையின் பலதரப்பட்ட தோற்றங்களாம். ஒவ்வொரு பொருளும் உயிரும் உயர்நிலை அடையும்பொழுது அது ஏதேனும் ஒரு விதத்தில் மகா சத்துவமாக வடிவெடுக்கிறது.

தமோகுணம் ஜடசொருபம்; ரஜோகுணம் ஆற்றல் சொருபம். தெய்விகம் வாய்க்கப்பெற்ற சத்துவகுணத்தை எட்டிய ஒன்று பிறகு குணாதீதத்துக்குப் போகவல்லது. பலம் மிகப்படைத்திருப்பது எதுவோ அது சத்வம் நிறைந்தது எனச் சொல்லப்படுகிறது. சத்துவகுணம் ஓங்குகிறவிடத்து மனோதத்துவம் உருவெடுக்கிறது. மனமானது ஜடம், சேதனம் ஆகிய இரண்டுக்கும் இடைநிலையில் இருக்கிறது. மனதை உள்ளிருக்கும் ஆத்ம தத்துவத்தோடு இணைத்தால் அது சேதனமாகவும், பிரபஞ்சத்தோடு இணைத்தால் ஜடமாகவும் ஆகிறது. ஆத்மாவுக்கும் அனாத்மாவுக்கும் இடையில் இணக்கத்தை உண்டுபண்ணுவது மனம். அத்தகைய செயலைச் செய்யவல்லதாக சத்துவ குணமும் இருக்கிறது. மனதை ஒழுங்

குப்படுத்துவதும் சத்துவகுணத்தைப் பேணுவதும் ஆத்ம சாதனத்தின் நோக்கங்களாகின்றன. பண்பட்ட மனதைப் பரத்தில் லயப்படுத்தும்பொழுது ஜீவாத்மனுடைய வாழ்வு பரத்தில் ஒன்று பட்டுப் பூர்த்தியாகிறது.

சத்துவத்துக்குத் திறமை என்பது ஒரு பொருள். உலகக் கிருத்தியங்களை நன்கு நிறைவேற்றுதற்கும் பரமனை அடைதற் பொருட்டு ஜீவன் தன்னைப் பக்குவப்படுத்துதற்கும் திறமை வேண்டும். திறமை படைத்திருப்பவன் எத்தகைய பிரதிகூல மான சூழ்நிலையிலும் திண்டாடுவதில்லை. அன்னை பராசக்தி திறமையே வடிவெடுத்திருப்பதால் அவள் மஹாஸத்வா என்று பாராட்டப் பெறுகிறாள்.

**महाशक्तिः — மஹாசக்தி:** २१७

அளப்பரிய வல்லமையை உடையவள்.

எங்குச் சக்தி முன்னணியில் இருக்கிறதோ அங்குச் சிறப் பனைத்தையும் காணலாம். சக்தியின் துணைகொண்டே மானுடன் சிவத்தை அடையவல்லவனாகிறான். வாழ்க்கை திறம்பட நிகழ் தற்குச் சக்தி இன்றியமையாதது. மகாசக்தி என்று சொல்லு மிடத்துத் தோற்றத்துக்கு வந்துள்ள பராசக்தியின் ஸ்தூல தோற்றமாகிய பிரபஞ்சம் முழுதும் குறிப்பிடப்படுகிறது.

சக்தி என்னும் சொல்லுக்கு ஆயுதம் என்றும் பொருள் உண்டு. சிற்றுயிர்களுக்கு ஆயுதம் உடலமைப்பிலேயே அமைந் திருக்கிறது. மனிதனே தன் செயலுக்கேற்ற எத்தகைய ஆயுதத் தையும் அமைத்து அதைக் கையாள இயலுகிறது. எண்ணிறந்த ஜீவர்களுக்கிடையில் எண்ணிறந்த ஆயுதங்களாக அம்பிகை திகழ்கின்றாள். சமுதாய நடைமுறையில் ஒழுங்குப்பாடு இருக்கு மாகில் அது சக்தியின் தோற்றமாகிறது. அகிலாண்டத்தின் இயக்கமோ ஒழுங்குப்பாட்டை அடிப்படையாகக் கொண்டது. ஆதலால் அகிலாண்ட நாயகிக்கு மகாசக்தி என்னும் பெயர் வந்துள்ளது.

**महारतिः — மஹாரதி:** २१८

உயிர்வகைகளனைத்துக்கும் இன்பத்தை ஊட்டு பவள்.

எந்த ஜீவன் எத்தகைய உடலை எடுத்திருந்தாலும் அந்த உடல் வாழ்க்கையில் அந்த ஜீவன் இன்பத்தை இனிது துய்க்கிறது. அனந்தங்கோடி ஜீவர்கள் துய்த்துவருகிற இன்பத் தொகையாகவும் அதற்கு அப்பாற்பட்டதாகவும் அம்பிகையின் உவகை அமைந்துள்ளது. அந்த உவகை அல்லது மகிழ்ச்சியைப் பாராட்டுவதே ஆராதனையாகும். மகிழ்ச்சி மயமாக மகாமாயை மிளிர்கின்ருள். ஆதலால் அவள் மஹாரதி: என்று பாராட்டப் படுகிருள்.

महाभोगा — மஹாபோகா ११९

உயிர்களனைத்துக்கும் சுகத்தைக் கொடுப்பவள்.

உயிர்கள் யாவும் நாடுகின்ற சுகம் அன்னை பராசக்தியிடமிருந்து வருகிறது. பஞ்சேந்திரியங்களின் துணைகொண்டு பெறுகிற சுகம் போகம் என்னும் பெயர் பெற்றுள்ளது. பஞ்சேந்திரியங்களை ஒதுக்கி வைத்துவிட்டுப் பெறுகிற சுகம் யோகம் எனப்படுகிறது. நிரந்தர சுகம் போகத்தில் ஒருபொழுதும் இல்லை. சுகமாகத் துவக்கித் துக்கமாக எது முடிவுறுகிறதோ அது போகம். உயிர்வகைகளுக்குப் பாடம் கற்பிப்பது அம்பிகையின் முடிந்த நோக்கமாகும். எளிதில் பெறக்கூடிய போகத்தை அவள் நல்குதற்கிடையில் அது வாழ்க்கையின் முடிவான குறிக்கோள் ஆகாது. மனிதன் யூகித்துப் பார்த்து, தனக்குத் துன்பம் கலவாத பேரின்பமே வேண்டும் என்று தனக்குத்தானே பாகுபடுத்தும் வரையில்போகம் அவனுக்குப் பயன்பட்டு வருகிறது. போகத்தில் திருப்தியடைவதே சாதாரண உயிர்களுக்கு வாழ்வின் குறிக்கோளாகிறது. அத்தகைய போகத்தைக் கரவாது வழங்குகிற அம்பிகை மஹாபோகா என்று பாராட்டப்படுகிருள்.

महैश्वर्या — மஹைச்வர்யா २२०

சகலவிதமான ஐசுவரியத்துடன் கூடியிருப்பவள்.

ஆளும் சக்தி உடையவள் என்பது மற்ருெரு பொருள். அண்டங்கள் அனைத்தையும் அன்னை பராசக்தி வல்லமையுடன் ஆண்டு வருகிருள்.

**महावीर्या — மஹாவீர்யா** २२१

அளப்பரிய வீர்யத்துடன் கூடியிருப்பவள்.

செயல் சொருபமாகப் பிரபஞ்சம் உள்ளது. செயல்கள் யாவும் அம்பிகையின் செயல்களாம். எச்செயல் ஜீவர்களுக்கு நலன் தருகிறதோ, எச்செயல் அம்பிகையின் மகிமையை விளக்கு கிறதோ அது வீர்யம். தசரத ராமன் பணிவின் மூலம் பரசு ராமனைத் திருத்தியமைக்கிறான். அது வீர்யம் நிறைந்த செயல். மறைந்திருந்து வாலிக்கு உயிர் பிழைக்க முடியாத துன்பத்தைக் கொடுத்துப் பிறகு சம்வாதத்தின் மூலமாக அவனுடைய மன தைத் திருத்தி அமைத்தது ரகுராமனின் வீர்யம். இலங்கை வேந்தன் இராவணனுடைய பலத்தைப் படிப்படியாகப் பாழ் படுத்துதற்கிடையில் அவனுடைய மனதைத் திருத்தியமைக்க முயன்றது இராமனுடைய வீர்யம். இராவணனைத் திருத்த முடியவில்லை என்றாலும் வீர்யத்தினின்று இராமன் பிசகவில்லை. இது நல்வாழ்க்கைக் கோட்பாடு. உயிர்வகைகளைப் படிப்படி யாகத் திருத்தியமைப்பது அம்பிகையின் பராக்கிரமம். வல்ல மையை நேர்மையாகப் பயன்படுத்துவது வீர்யம். அம்பிகை அகிலாண்டமெங்கும் அச்செயலையே செய்து வருவதால் அவள் மஹாவீர்யா என்று ஆராதிக்கப்படுகிறாள்.

**महाबला — மஹாபலா** २२२

மேலான வல்லமையைப் படைத்திருப்பவள்.

வலிவு படைத்திருப்பவனே வாழ்க்கைக்குத் தகுதியுடைய வன் என்பது கோட்பாடு. உயிர் நல்குவது உறுதிப்பாடு, சாவிற்கு அறிகுறியாவது தளர்வு. பலத்தை வளர்ப்பது சக்தி வழிபாடு. ஆற்றலை வளர்க்குமளவு வாழ்வு பெருவாழ்வாகப் பரிணமிக் கிறது. மகிழ்வோடு மரணத்தை ஏற்றுக்கொள்வது பலவா னுக்கே சாத்தியம். பலத்தை உபாசிப்பது சிறந்த சக்தி உபா சனையாகும். அம்பிகை தானே பலசொரூபிணியாக இருப்பதால் அவள் மஹாபலா என்று போற்றப்படுகிறாள்.

**महाबुद्धिः — மஹாபுத்தி:** २२३

பேரறிவு படைத்தவள்.

உயிர்வகைகளை ஆராய்ந்து பார்த்தால் அவைகள் அனைத்திடத்தும் பல படித்தரங்களில் அறிவு மிளிர்கிறது. அந்த அறிவு அந்தந்த உயிரின் வாழ்க்கை நலத்துக்குப் பயன்படுகிறது. மக்களுள் புத்திகெட்டவன் என்று சொல்லப்படுகின்றவனிடத்தும் ஓரளவு புத்தி இருக்கின்றது. இன்னும் அது அவனிடத்துத் தெளிந்த பாங்கில் அமையவில்லை என்பதே புத்திகெட்டவன் என்பதன் பொருளாகும். மனிதன் படைத்துள்ள அறிவைப் பேரறிவாக வளர்ப்பதே அம்பிகையின் உபாசனையாகும். மஹா புத்தி என்பது புத்தியின் சமஷ்டியாகும். அதைத் தியானிப்பது சீரிய உபாசனை முறையாகும். அறிவைத் தியானிக்கின்றவன் ஆத்மஜோதியைத் தியானிப்பவனாகிறான். ஞானச்சுடர் நிறைந்தவனாகத் தன்னைப் பாவிப்பது பராசக்தியின் உபாசனையாகிறது

**महासिद्धिः — மஹாஸித்தி:** ২২৪

மிகப்பெரிய ஸித்தி சொரூபிணியாய் இருப்பவள்.

எது பக்குவமாயிருக்கிறதோ அது சித்திநிலையை எட்டியதாகும். விரைவில் அழிந்துபட்டுப் போகிற உடலை நெடுங்காலத்துக்கு அழியாது நன்கு காத்து வைக்கும்பொழுது அது காயசித்தி எனக் கூறப்படுகிறது. மனிதனிடத்தில் உள்ள குறை நிலையை நிறைநிலையாகத் திருத்தியமைப்பது சித்தி செய்வதாகிறது. ஜீவவியக்திகள் என்னும் குறைநிலைகளையெல்லாம் கடந்திருப்பவன் சித்தன். பிரபஞ்சத்திலுள்ள சராசரம், சேதனம், அசேதனம் ஆகிய யாவற்றையும் அம்பிகை குறைநிலையினின்று நிறைநிலைக்குத் திருத்தியமைத்துக்கொண்டிருக்கிறாள். அவ்வரிய செயலுக்கு ஓய்வு ஒழிச்சல் இல்லை. ஆதலால்தான் அம்பிகை மஹாஸித்தி: என்று மொழியப்பெறுகிறாள்.

**महायोगेश्वर ईश्वरी — மஹாயோகேஸ்வர ஈஸ்வரீ** ২২৫

அரும்பெரும் யோகேஸ்வரர்களுக்கெல்லாம் ஈஸ்வரியாக இருப்பவள்.

ஆத்மீகத் துறையில் யோகசாதனங்களில் நெடுந்தூரம் முன்னேற்றம் அடைந்தவர்கள் இருக்கிறார்கள். அவ்வாறு யோகத்தில் மேலேறியவர்கள் மஹாயோகேஸ்வரர்கள் எனப் போற்றப்படுகின்றனர். அம்பிகையினிடத்திருந்தே தாங்கள்

படைத்துள்ள பண்புகளெல்லாம் வந்துள என அப்பெருமக்கள் உணர்கின்றனர். அம்பிகையின் சான்னித்தியத்தைப்பற்றிய பேருணர்வில் தங்களை முற்றிலும் மறந்தவர்களாக அவர்கள் இருக்கின்றனர். தங்கள் மூலம் நிகழ்கின்ற நிகழ்ச்சிகள் யாவும் அம்பிகையினுடைய அரும்பெரும் செயல்கள் எனவும் அவர்கள் உணர்கின்றனர். உண்மையில் அம்பிகைதான் எண்ணிறந்த யோகேஸ்வரர்களை உருவாக்கியவள். ஆதலால் அம்பிகைக்கு மஹாயோகேஸ்வர ஈஸ்வரீ என வந்துள்ள பெயர் முற்றிலும் பொருத்தமானதே.

**महातन्त्रा** — மஹாதந்த்ரா २२६

அற்புதமான தந்த்ர சாஸ்திரங்களின் வடிவினள்.

**महामन्त्रा** — மஹாமந்த்ரா २२७

தந்த்ர சாஸ்திரங்களில் சொல்லப்பட்டுள்ள சாதனங்களுக்கு ஏற்ற மந்த்ரங்களின் சொரூபமாக இருப்பவள்.

**महायन्त्रा** — மஹாயந்த்ரா २२८

அற்புதமான யந்த்ரங்கள் அல்லது சக்கரங்களின் மயமாக இருப்பவள்.

சரீரத்துக்கும் யந்த்ரம் என்று பெயர். அன்னை பராசக்திக்குப் பிரபஞ்சம் முழுதும் சரீரமாய் அமைந்திருக்கிறது. ஆத்ம சாதகனுக்குத் தன் உடல் நல்ல யந்த்ரமாக அமைந்திருத்தல் வேண்டும். சாதகன் அதற்கேற்ற வாழ்வு வாழ்ந்து வருவானுகில் அவன் நல்ல ஆத்மசாதகனுகிருன். அன்னை பராசக்தி பிரபஞ்சத்தை நல்ல யந்த்ரமாகக்கொண்டு தன்னுடைய செயல்களையெல்லாம் நன்கு நிறைவேற்றுகிருள். ஆத்ம சாதகன் தன் உடலை நல்ல நிலையில் வைத்திருப்பதன் மூலமாக அத்தகைய அன்னையை வழிபடுகிருன்.

**महासना** — மஹாஸனு २२९

அமர்வதற்கேற்ற பெரிய இடத்தை அமைத்திருப்பவள்.

ஓரளவில் நாம் உட்காரும் இடத்தைப் பார்த்தே நம்முடைய பண்பு எத்தகையது என்பதை அறிஞர்கள் அறிந்துகொள்ளக் கூடும். அகிலாண்டத்தையும் ஆசனமாகக்கொண்டு அதன்மீது அம்பிகை அமர்ந்திருக்கிறாள். பிரபஞ்சம் முழுதும் அம்பிகையின் அமைப்பு ஆதலால் அதில் அவள் வீற்றிருந்துதான் ஆகவேண்டும். மேலும் அதனுடைய ஒழுங்கான நடைமுறையை முன்னிட்டும் அதைக் கண்காணிக்கும் முறையில் அவள் அதில் வீற்றிருக்கிறாள்.

**महायागक्रमाराध्या — மஹாயாகக்ரம ஆராத்யா** २३०

பெரிய யாகத்தை முறையாகச் செய்வதன் மூலம் போற்றப்படுபவள்.

பக்தியையும் ஞானத்தையும் பயன்படுத்தி அம்பிகை வழிபாடு செய்வது உயிர்களனைத்துக்கும் பொதுவானது. அம்பிகை தானே உயிர்கள் அனைத்துக்கும் அன்னையாய் இலங்குகின்றாள். அன்னையோடு சேய் இணக்கம் கொள்வதற்குப் பிறருடைய சிபாரிசோ துணையோ தேவையில்லை. இது பக்தியும் ஞானமும் பூண்ட வழிபாடாகும்.

தனக்குரியதைப் பிறர்க்குரியதாக மனமுவந்து எடுத்து வழங்குதல் யாகம். யார் ஒருவன் தான் தேடிச் சம்பாதித்ததைப் பொது உடைமையாக்குகின்றானோ அவன் யக்ஞமூர்த்தி.

தனக்கென வாழாது பிறர் நலனுக்கென வாழ்ந்திருப்பவன் எஜமானன் அல்லது யக்ஞமூர்த்தி ஆகிறான். தான், தனது என்பனவற்றை அறவே மறந்துவிட்டுப் பிறர்க்கென்று மனமுவந்து வழங்கும் பாங்கு ஓங்குதற்கு ஏற்ப யாகமானது மஹாயாகமாகிறது. சுயநலம் நாடாது பொதுநலனுக்கென்றே வாழ்ந்து வருபவர்கள் அம்பிகையின் திட்டத்தை நிறைவேற்றுகிறார்கள். சுயநலத் தியாகம் எவ்வளவு பெரியதோ வாழ்வு அவ்வளவு பெரியது ஆகிறது. அந்த வாழ்வு ஒழுங்குப்பாட்டுடன் இருக்கும் பொழுது அது கிரமம் நிறைந்ததாகிறது. நல்வாழ்வு வாழும் நல்லார் எல்லாரும் இவ்விதத்தில் அம்பிகையை உபாசித்து அவளுடைய அருளுக்குப் பாத்திரமாகிறார்கள் என்பது இந்நாமத்தின் கருத்து.

**महाभैरवपूजिता — மஹாபைரவ பூஜிதா** २३१

மஹாபைரவரால் பூஜிக்கப் பெறுகிறவள்.

பைரவர் என்னும் சொல்லின் பொருள் சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் ஆகிய முத்தொழில்களை விளையாட்டாகச் செய்து முடிப்பவர் சிவனர் என்பதாம். அதே போன்று பைரவீ என்று அம்பிகை அழைக்கப்படுகின்றாள். பிரபஞ்சமெங்கும் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய நிகழ்ச்சிகள் ஓயாது நிகழ்ந்து வருகின்றன. உயிர்களின் தொகையாக இருப்பவர் பைரவர். உயிர்களனைத்தும் செய்கின்ற செயல்கள் இறைவனுடைய செயல்களாகின்றன. தம் செயல்களைத் தாமே மெச்சுவது உயிர்களின் பாங்கு ஆகும் அப்படி மெச்சுவது அம்பிகையின் வழிபாடாகிறது உலகில் எக்கிருத்தியத்தை யார் போற்றிப் பாராட்டினாலும் அச்செயலின் மூலம் அம்பிகையே பாராட்டப்படுகின்றாள். பாராட்டுகிற சிவசொரூபத்தில் இருப்பவளும் அம்பிகை. பாராட்டுதலை ஏற்றுக்கொள்கின்ற சக்திசொரூபத்தில் இருப்பவளும் அம்பிகை. ஆதலால் அவள் மஹாபைரவ பூஜிதா என்று போற்றப்படுகிறாள்.

**महेश्वरमहाकल्प महाताण्डवसाक्षिणी** २३२

**மஹேஸ்வர மஹாகல்ப மஹா தாண்டவ ஸாக்ஷிணீ 232**

மஹாகல்பம் என்று சொல்லப்படுகிற பெரும் பிரளய காலத்தில் மகேஸ்வரர் புரிகிற மகா தாண்டவத்துக்கு ஸாக்ஷிணியாக இருப்பவள்.

ஜகத்துக்குச் சிருஷ்டிகர்த்தாவாகிய பிரம்மதேவனுக்கு விழிப்பு நிலையும், உறக்க நிலையும் உண்டு. பிரம்மதேவன் விழித்திருக்கிறபொழுது சிருஷ்டி நிகழ்கிறது. அவர் உறங்குகின்றபொழுது பிரளயம் உண்டாகிறது. அப்பொழுது சராசரங்களனைத்தும் தோன்றா நிலைக்குப் போகின்றன. அந்நிலை கல்பம் என்று கூறப்படுகிறது. பிறகு மஹாகல்பம். மஹாகல்ப காலத்தில் மகேஸ்வரர் விழித்திருக்கிறார். யாண்டும் அகண்ட சச்சிதானந்த சொரூபமாக-அவர் இருக்கிறார். அந்நிலையில் சிவமும் சக்தியும் அபின்னம். மஹாகல்ப காலத்தில் மகேஸ்வர-மகேஸ்வரி அபின்ன சொரூபமாயிருக்கும் பரவஸ்து தன்னில் தானாய் இருப்பதற்குச்

சித்சொருபமே சாட்சியாகிறது. அப்பொருளின் ஆனந்த நிலை தாண்டவம் என்று ஈண்டு உபசாரத்துக்காகச் சொல்லப்படுகிறது. தாண்டவம் சிவனுர்க்குரியது; லாஸ்யம் அல்லது லீலை அம்பிகைக்கு உரியது.

தோற்றத்துக்கு வந்துள்ள நிலை சிருஷ்டி. அவ்யக்தம் அல்லது தோன்ரு நிலையோ கால வேறுபாட்டை அனுசரித்துப் பிரளயம் என்றும் கல்பம் என்றும் மஹாகல்பம் என்றும் கூறப்படுகிறது. கடலின் அடிப்பாகம் யாண்டும் தன்மயமாய் இருப்பது போன்று பரவஸ்து யாண்டும் தன்னில் தானுய் இருக்கிறது.

**महाकामेशमहिषी — மஹாகாமேச மஹிஷீ** २३३

மஹாகாமேசனுடைய மஹிஷீ அல்லது பெண் கூருய் இருப்பவள்.

காமம் அல்லது சித்தவிகாரத்தை அடிப்படையாகக் கொண்டே பிரபஞ்சம் தோற்றத்துக்கு வருகிறது. தோற்றத்திற்கு வருகிற பாங்கைப் படைத்துள்ள பரமன் என்பது காமேஸ்வரன் என்னும் சொல்லுக்கு விளக்கமாகிறது. அந்தக்கரண விகாரமே காமம் எனப்படுகிறது. உறங்கும்பொழுது அந்தக்கரண விகாரம் உண்டானல் சொப்பனம் வருகிறது. சொப்பனத்தில் ஜகத்தும், ஜீவனும் புறத்தில் இருப்பவைகள் போன்று அகத்தில் காட்சிகொடுக்கின்றன. அத்தகைய காட்சியை அகிலாண்டங்களில் தோற்றுவிக்க வல்லவன் மஹாகாமேசன்.

பரமனுக்குப் புறம்பாகப் பரமேஸ்வரி இல்லை. ஒரு பொருளே சிவமாகவும், சக்தியாகவும் நிலைபெற்றுள்ளது. பரமனுடைய் கூருகிய அம்பிகை அவனுடைய மஹிஷீ என்று மொழியப் பெறுகிருள்.

**महात्रिपुरसुन्दरी — மஹாத்ரிபுரஸுந்தரீ** २३४

பூரண அழகோடு விளங்கிக்கொண்டிருப்பவள்.

சச்சிதானந்தம் என்பது சொருப லட்சணமாய் இருப்பது போன்று சௌந்தர்யமும் ஒரு விதத்தில் சொருப லட்சணம் ஆகிறது. அழகை ரசிப்பதும் தெய்வத்தை ஆராதிப்பதும்

ஒன்றேயாம். தோன்றியுள்ள அனைத்துமாய் இலங்குபவள் அம்பிகை. திரிபுரங்களாகத் தோன்றியிருப்பவளும் அவளே. பொன்னால் செய்த ஆபரணங்கள் எல்லாம் பொன்மயம். அங்ஙனம் அம்பிகையின் சொரூபத்தைக்கொண்டு அமைந்துள்ள உலகங்கள் யாவும் அம்பிகை மயம். சத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்களை ஆதாரமாகக்கொண்டு முப்புரங்களை அம்பிகை அமைத்துள்ளாள். அகிலாண்டமனைத்தும் திரிபுர சொரூபமாயுள்ளது. ஜாக்ரதம், சொப்பனம், சுஷுப்தி ஆகிய மூன்று அவஸ்தைகளில் காணப்படுவது திரிபுரம். மேலும் ஸ்தூல சரீரம், சூட்சும சரீரம், காரண சரீரம் ஆகியவைகளாக இலங்குவது திரிபுரம். இவை யாவற்றிலும் அழகியாகிய அம்பிகையே இலங்குகிறாள். ஆதலால் அவள் மஹாத்ரிபுரஸுந்தரீ என்று போற்றப்படுகிறாள்.

**चतुः षष्ट्युपचाराढ्या** —சதுः ஷஷ்ட்யுபசாராட்யா २३५

அறுபத்து நான்கு உபசாரங்களோடு ஆராதிக்கப் படுபவள்.

அம்பிகையை அமர்ந்திருக்கப் பண்ணும்பொழுது ஆசனம் படைத்தல் என்னும் உபசாரம் நிகழ்கிறது. பத்ரம், புஷ்பம், சந்தனம், குங்குமம் முதலிய பொருள்களைக்கொண்டு 'அர்க்கியம்' படைக்கும்பொழுது அது ஓர் உபசாரமாகிறது. நீராட்டுவது ஓர் உபசாரம். ஆடை, ஆபரணங்களை விதவிதமாகப் படைத்து அலங்கரிப்பது அத்தனை விதங்களான உபசாரங்களாகின்றது. ஆடல், பாடல், ஜபம், தியானம், அர்ச்சனை முதலியன உபசாரங்களாகின்றன. இவ்வழிபாட்டு முறையை அறுபத்துநான்கு விதங்களில் பெருக்கிக்கொண்டு போகவேண்டும் என்னும் ஐதிகம் வந்துள்ளது. பக்தியில் தீவிரமாக ஈடுபடாதிருப்பவருக்குக் கிரியா விசேஷங்கள் கவர்ச்சிகரமாயிருக்கின்றன. பக்தி ஓங்குமிடத்து உபசாரங்கள் சுருங்குகின்றன. பாமரருக்குப் பக்தியை ஊட்டுதல் பொருட்டு உபசாரங்களை விரிப்பது இழுக்கு ஆகாது.

**चतुः षष्टिकलामयी** — சதுः ஷஷ்டிகலாமயீ २३६

அறுபத்து நான்கு கலைகள் மயமாக இலங்குபவள்.

கலைகளனைத்தும் அபராவித்தை அல்லது பிரபஞ்சத்தோடு கூடியுள்ள ஞானங்களாகின்றன. இவைகளை முறையாகப் பயன்

படுத்துங்கால் பராவித்தை அல்லது பிரம்மஞானத்துக்கு இவை வழிகாட்டுகின்றன. ராகம், தாளத்தோடு இசைபாடுவது ஒரு கலே. அத்தகைய கலேயைப் பக்தி பூர்வமான பஜனையில் பயன் படுத்துவது சிறந்த உபாசனையாகிறது. இங்ஙனம் கலேகளனைத் தையும் அம்பிகை வழிபாட்டுக்கே பயன்படுத்துவது சாலச் சிறந்தது. பண்படாத மக்கள் கலேகளை ஜீவபோதத்தை வளர்ப் பதற்கு எனப் பயன்படுத்துகின்றனர். ஆனல் பண்பட்ட மேன் மக்களோ கலேகள் யாவற்றையும் தெய்வ வழிபாட்டுக்கென்றே பயன்படுத்துகின்றனர்.

அக்காலத்தில் வழக்கத்தில் இருந்து வந்த சில கலேகள் இன்று மறைந்துபட்டுப் போயின. இன்றைக்குப் புதிய கலேகள் வடிவெடுத்து வந்திருக்கின்றன. வானத்தில் விமானத்தைச் செலுத்துகிறவர்கள் அதை விதவிதமாகச் சுழற்ற வல்லவர்களாய் இருக்கின்றனர். இது போன்ற கலேகளில் திறமை வாய்ந்திருப் பது தெய்விக சம்பத்து ஆகும். கலேயைப் போற்றுவது சிறந்த தேவாராதனை.

**महाचतुः षष्टिकोटियोगिनीगणसेविता २३७**

**மஹாசது ஷஷ்டி கோடி யோகினீ கணஸேவிதா 237**

**மிக:மிகத் திறமை வாய்ந்த அறுபத்து நான்கு கோடி யோகினீகளின் கூட்டங்கள் கூடி அவர்களால் சதா சேவிக்கப்படுபவள்.**

பண்பட்ட ஜீவர்களை எல்லா இனங்களிலும் காணலாம். மேல்நிலேயோடு அவ் உயிர்வகைகள் இணைந்திருப்பதால் அவை யாவற்றையும் யோகினீகணங்கள் என்று கூறலாம். ஜீவகோடி களைப் பெண்பாலாகக் கருதுவது ஐதிகம். அவையாவும் வாழ்வில் பற்றுவைத்து அதை வகையுடன் நிறைவேற்றி வருகின்றன. அழகை வெவ்வேறு விதங்களில் தோற்றுவித்து அதில் உயிர்கள் அனைத்தும் மகிழ்ந்திருக்கின்றன. ஆனந்தத்தை விளக்குவது ஒருவித வழிபாடாகும். அறிவை முறையாகப் பயன்படுத்துவதும் வழிபாடாகும். இங்ஙனம் கோடானுகோடி ஜீவர்களெல்லாம் இடையருது அன்னை பராசக்தியை வணங்கிக்கொண்டே இருக் கின்றன. ஆதலால் அம்பிகை பலப்பல விதங்களில் சேவிக்கப் படுபவள் ஆகின்ருள்.

**मनुविद्या — மனுவித்யா** ২৩৮

மனுவினல் அடையப்பெற்ற வித்தை வடிவினள்.

மானுடவர்க்கம் முழுதையும் மனு என்று மொழியலாம். மஹாமேதாவி ஒருவனை மனு எனலாம். ஆட்சியில் திறமை வாய்ந்தவனை மனு எனலாம். பரவித்தையின் முடிவைக்கண்டவனை மனு எனலாம். எல்லாப் படித்தரங்களிலும் இருக்கிற மக்கள் அனைவரும் அபரா, பராமயமாயிருக்கும் வித்தைகளை வளர்த்துக்கொண்டே வருகின்றனர். இக்காலத்திய பௌதிக விஞ்ஞானிகளை மனுக்கள் என்று இயம்பலாம். இதே போன்று எதிர்காலத்து மனுக்கள் வித்தையை வளர்ப்பார்கள். இத்தனை வித்தைகளின் தொகையாய் இருப்பவள் அம்பிகை. ஆதலால் அவள் மனுவித்யா என்று பாராட்டப்படுகிறாள்.

**चन्द्रविद्या — சந்த்ரவித்யா** ২৩৯

சந்திரனால் உபாசிக்கப்பெற்ற வித்யாவடிவினளாய் இருப்பவள்.

வித்தையானது சூரிய அம்சம் பொருந்தியதாகவும், சந்திர அம்சம் பொருந்தியதாகவும் இருக்கிறது. சூரியன் உயிர்த்தத்துவம் ஓங்குதற்கு அவசியமான வெப்பம், வெளிச்சம் ஆகிய இரண்டையும் தருகிறது. சந்திரனே வெளிச்சத்தை மட்டும் தருகிறது. வாழ்க்கைக்கு வெப்பம் அவசியம் எனினும் அதில் சிறிது துன்பமும் இடம்பெறுகிறது. வித்தைகளுள் சிலவற்றைத் துன்பப்பட்டுத்தான் கற்கவேண்டும். சந்திர வெளிச்சத்தில் இனிமை உண்டு; துன்பம் இல்லை. துன்பப்படாது கற்கின்ற வித்தைகள் சந்திரவித்யாமயமாய் இருக்கின்றன. அம்பிகை தானே அத்தகைய இன்பம் நிறைந்த சந்த்ரவித்யா சொரூபிணியாய் இருக்கின்றாள்.

**चन्द्रमण्डलमध्यगा — சந்த்ரமண்டல மத்யகா** ২৪০

சந்திரமண்டலத்தின் மத்தியிலே வீற்றிருப்பவள்.

மானுட சரீரம் ஒப்புயர்வற்ற தேவாலயம் ஆகிறது. மூலாதாரத்தினின்று புருவத்தின் மத்தியில் உள்ள ஆக்ஞை சக்கரம வரை உள்ள ஆறு ஆதாரங்களில் ப்ராசக்தி வீற்றிருக்குங்கால் ஆத்மசாதகன் ஜீவவியக்தியைக் களையாது வைத்திருக்கிறான்.

அன்னை குண்டலினி சக்தி உச்சந்தலையில் சஹஸ்ராரம் என்னும் ஏழாவது சக்கரத்தை எட்டும்பொழுது சக்தியானவள் சிவனோடு ஒன்றுபடுகிறாள். அந்நிலையில் ஜீவன் தன் ஜீவ வியக்தியை இழந்து பரத்தில் ஒன்றுபடுகிறான். இந்தச் சஹஸ்ராரத்துக்குச் சந்திரமண்டலம் என்பது மற்றொரு பெயர். குண்டலினி சக்தி ஆங்கு எழுந்தருளும்பொழுது தன் பூர்ணமகிமையோடு மிளிர் கின்றாள். அந்நிலையில் யதார்த்த நிலையில் உள்ள பரவஸ்து ஒன்றேயாம். இந்தச் சிறந்த கோட்பாட்டை சந்த்ரமண்டல மத்யகா என்னும் நாமம் விளக்குகிறது.

**चारुरूपा** — சாருரூபா २४१

அழகிய வடிவத்தை உடையவள்.

இயல்பாகவே அமைந்துள்ள அழகு 'சாரு' எனப்படுகிறது. அம்பிகையினிடத்து இரண்டுவிதமான அழகும் நிறைந்துள்ளது.

**चारुहासा** — சாருஹாஸா २४२

அழகிய புன்சிரிப்பு உடையவள்.

புன்சிரிப்பு வசீகரமானது. யாரிடத்துப் புன்சிரிப்பு மிளிர்ந் தாலும் அது அம்பிகையின் சான்னித்தியத்துக்கு நிகராகிறது. எல்லாராலும் அது வேண்டப்படுகிறது. இனி சதாசாரம் நிறைந்திருப்பவர்களிடத்து உருவெடுக்கிற புன்சிரிப்போ தெய் விகப்பெற்றி நிறைந்ததாகிறது. அம்பாளிடத்து மிளிர்ந்துகொண் டிருக்கிற புன்சிரிப்பில் தெய்விகம் திகழ்ந்துகொண்டிருக்கிறது என்பது இதன் பொருள்.

**चारुचन्द्रकलाधरा** — சாரு சந்த்ர கலா தரா २४३

அழகிய சந்திர கலையைத் தரித்துக்கொண்டிருப் பவள்.

சர்வாபரணங்களோடு கூடிய பராசக்தி தன் சிரசின் வலப் பக்கத்தில் சூரியகலை என்கிற ஆபரணத்தையும் இடப்பக்கத்தில் சந்திரகலை என்கிற ஆபரணத்தையும் அணிந்திருக்கிறாள். அத் தகைய சந்திரகலை பார்க்கப் பார்க்கப் பரவசமூட்டும் பாங்குடை யது. சூட்சுமநிலையில் ஆத்மசாதகனுடைய சுவாசத்தின் போக்கு வரத்துக்கு விளக்கமாகச் சந்திரகலையும் சூரியகலையும் அமைந்திருக்

கின்றன. இடது நாசி நன்கு திறக்கப்பட்டு அதன்மூலம் சுவாசம் தங்குதடையின்றிப் போய்க்கொண்டிருக்குமாகில் அது சந்திர கலை எனப்படுகிறது. அங்கு அம்பிகையின் சான்னித்தியம் சிறப்புற்று இருப்பதால் அவள் சாரு சந்த்ரகலாதரா என்று போற்றப்படுகிருள்.

**चराचर-जगन्नाथा — சராசர-ஜகந்நாதா** २४४

(சரம்-அசையும் உயிர்; அசரம்-ஸ்தாவரம் அல்லது அசையாத உயிர்.)

ஜங்கமமாகவும் ஸ்தாவரமாகவும் இருக்கும் ஜகத்துக்குத் தலைவியாக இருப்பவள்.

பரிணமித்து வருகிற ஜீவர்கள் முதலில் ஸ்தாவ்ரம் அல்லது நிலைத்திணையாக வாழ்க்கையைத் துவக்குகின்றன. உயிரற்றதாக இருப்பது உயிருற்றதாய் மாறி அமைவது முதன் முதல் மலையில் நிழ்கிறது. ஆகையினல்தான் அம்பிகை மலைமகள் அல்லது பர்வதராஜன் புதல்வி என்று போற்றப்படுகிருள். இயங்குதிணை அல்லது ஜங்கமமாக இலங்குவது பரிணமத்தில் மேல்நிலைக்கு வந்துள்ள ஜீவர்களின் செயலாகும். ஜங்கமங்களுள் மக்களும் தேவர்களும் உயர்திணையாகின்றனர். மற்றவைகள் அஃறிணை எனப்படுகின்றன, இத்தனைவித உயிர் வகைகளை அந்தந்த நிலைகளினின்று உயர்ந்த நிலைகளுக்கு ஓட்டுவதால் அன்னை பராசக்தி அவை யாவற்றுக்கும் தலைவியாகத் திகழ்கிருள். அவளுடைய ஆதிக்கத்தில் படிப்படியாக முன்னேற்றம் அடையாது இடைவழியில் நிரந்தரமாக நிற்பது எந்த உயிர்க்கும் சாத்தியமன்று. மலையில் உற்பத்தியாகும் நதி கடலைப் போய் எட்டும் வரையில் நிற்காது பாய்வது போன்று ஜீவாத்மாவும் பரத்தைப் போய்ச் சேரும் வரையில் பரிணமித்தாகவேண்டும். அம்பிகையின் ஆதிக்கத்தின் சிறப்பு இத்தகையதாம்.

**चक्रराज-निकेतना — சக்கரராஜ-நிகேதனு** २४५

சக்கரங்களுள் தலையானதாகிய ஸ்ரீ சக்கரத்தில் வீற்றிருப்பவள்.

இயற்கையாக அமைந்துள்ள அண்டங்களின் தொகையே ஸ்ரீ சக்கரம் ஆகிறது. தேசம் ஒன்றின் அமைப்புக்குத் தேசப்

படம் விளக்கம் ஆகிறது.. அதே பாங்கில் மனிதனுல் வரையப்பட்ட ஸ்ரீ சக்கரம் அண்டகோடிகளின் அமைப்புக்குச் சிறந்த விளக்கமாகிறது. அகிலாண்டம் இயற்கையாக அமைந்துள்ள விக்ரகம். அதில் அம்பிகை யாண்டும் மாருது வீற்றிருக்கிருள். வரையப்பட்ட ஸ்ரீ சக்கரம் செயற்கையாக அமைந்துள்ள விக்ரகம். இதனுள் அம்பிகையை ஆவாஹனம் பண்ணுவது உசிதம். ஆவாஹனம் பண்ணப்பெருத ஸ்ரீ சக்கரம் வெறும் படமாகிறது. ஆத்மசாதகன் அம்பிகையின் சான்னித்தியத்தை ஸ்ரீ சக்கரத்தில் முதலில் உணர்கிருன். சாதனத்தில் அவன் முன்னேற்றமடையும்பொழுது அந்தச் சான்னித்தியத்தை அண்டமெங்கும் காண்கிருன். அண்டமெங்கும் அன்னையின் சான்னித்தியம் யாண்டும் நீக்கமற நிலைபெற்றிருக்கிறது. ஆதலால் அவள் சக்ரராஜ நிகேதனு என்று இனிது போற்றப்படுகிருள்.

**पार्वती — பார்வதீ** **२४६**

பர்வதராஜனுடைய புதல்வி.

இம்மண்ணுலகில் அமைந்துள்ள மலைகளுள் மிகப் பெரியதாகிய இமயமலைக்குப் பர்வதராஜன் என்னும் பெயர் பொருத்தமாக அமைந்திருக்கிறது. உயிரற்றதாகத் தென்படும் மலையானது உயிருற்றதாகத் திகழ்வதை ஹிமாசலத்தில் காணலாம். அக்காட்சியை முன்னிட்டே அம்பிகைக்குப் பார்வதீ என்று பெயர் வந்துள்ளது. வரைந்துள்ள ஓவியங்கள் உயிரற்றவைகள். அந்த ஓவியங்களையெல்லாம் விடப் பன்மடங்கு சிறந்தவளாகப் பராசக்தி ஹிமாசலத்தில் இலங்குவதால் அவள் உயிர் ஓவியம் என்று இயம்பப்பெறுகிருள். அசேதனமாய் இருப்பது சேதனமாக மாறியமைவது இயற்கையின் பெருந்திட்டம் என்று நவீன விஞ்ஞானமும் இயம்புகிறது. பார்வதீ என்னும் பதம் இக்கோட்பாட்டுக்கு முற்றிலும் பொருத்தமானது.

**पद्मनयना — பத்மநயனு** **२४७**

தாமரைப் புஷ்பம் போன்ற கண்களை உடையவள்.

பரிணமத்தில் மேல்நிலைக்கு வந்திருப்பதற்கு அறிகுறியாயிருப்பது தாமரைக் கண். சிற்றுயிர் வகைகளுக்கிடையிலும் நயனம் நன்ருக அமையப்பெற்றிருக்குமாகில் நிறை வளர்ச்சிக்கு

அது அறிகுறியாகிறது. இனி, ஞானத்துக்குச் சின்னமாயிருப்பது நயனம். ஞான சொரூபியாகிய கிருஷ்ணன் கண்ணன் என்று கூறப்படுகிறான். மேனி அமைப்பில் அம்பிகை உச்சநிலையை எட்டியவள். அவளுடைய நிறைநிலையை மேற்கொண்டு திருத்தியமைக்க முடியாது. தாமரைக் கண் அதற்குச் சான்றாகிறது. ஞானத்தின் சிகரமாய் இருப்பவள் அம்பிகை. அதை முன்னிட்டும் தாமரைக் கண்ணி என்று அவளைக் கூறலாம். ஆதலால் பத்ம நயனா என்னும் சொல் அம்பிகைக்கு முற்றிலும் பொருத்தமான தாம்.

**पद्मराग–सम प्रभा** — பத்மராக ஸம ப்ரபா २४८

பத்மராகம் என்கிற ரத்தினத்துக்கு ஒப்பான பிரபை அல்லது ஒளியை உடையவள்.

பூமியில் அகப்படும் ரத்தினங்களனைத்தும் ஒளி நிறைந்தவைகளாய் இருப்பது வெளிப்படை. அம்பிகையினிடத்துப் பிரபஞ்ச ஒளி, பாரமார்த்திக ஒளி ஆகிய இரண்டுவித ஒளிகளும் நிறைந்திருக்கின்றன. பிரபஞ்ச ஒளி கட்புலனாகிறது. மற்றது முதலில் யூகிக்கப்படுகிறது; பிறகு அது அனுபவத்துக்கு எட்டுகிறது. கண் கூடாகத் தென்படுகின்ற பத்மராகத்தைச் சான்றாக வைத்து அம்பிகையின் பிரபை அல்லது பிரபஞ்ச ஒளி இந்நாமத்தில் விளக்கப்படுகிறது.

**पञ्चप्रेतासनासीना** — பஞ்சப்ரேதாஸன ஆஸீனா २४९

ஐந்து பிரேதங்களாலாகிய ஆசனத்தில் வீற்றிருப்பவள்.

சிவம் ஆனவர் சக்தியினிடத்திருந்து பிரிக்கப்படுவாராகில் அவர் சவத்துக்கு நிகராகிறார். அப்படிச்சவக்கோலத்தில் இருக்கும் ஐந்து மூர்த்திகளைக் கொண்டு அவளுடைய ஆசனம் அமைக்கப் பெற்றிருக்கிறது. பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், ஈசானன் ஆகிய நான்கு மூர்த்திகள் நான்கு கால்களாக இடம் பெறுகின்றனர். அந்த நான்கு கால்களுக்கும் பொதுவாய் உள்ள பலகையின் ஸ்தானத்தில் இருப்பவர் சதாசிவம். இந்த ஐந்து மூர்த்திகளிடத்திருந்து சக்தியைப் பிரித்து எடுக்க முடியாது. பிரித்தெடுக்கமுடியும் என்று கற்பனையாக வைத்துக்கொண்டால் ஐவரும் ஐந்து

சடலங்கள் போன்று ஆகின்றனர். அந்தச் சடலங்களைக் கொண்டு ஆக்கப்பெற்றது அம்பிகையின் ஆசனம். அதில் அவள் வீற்றிருக்கின்றபொழுது ஐவரும் சேதனம் நிறைந்த மூர்த்திகளாகிவிடுகின்றனர். பஞ்சமூர்த்திகளும் பஞ்ச கிருத்தியங்களுக்குக் கர்த்தாக்களாக இருப்பது அம்பிகையின் சான்னித்தியத்தாலேயே என்பது இதன் பொருள். ஆதலால் அம்பிகை பஞ்சப்ரேதாஸன ஆஸீனா என்று போற்றப்படுகிறாள்.

**पञ्चब्रह्म-स्वरूपिणी** — பஞ்ச பிரம்ம ஸ்வரூபிணீ ௨௫௦

ஐந்து மூர்த்திகளின் வடிவத்தில் இருப்பவள்.

பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், ஈசானன், சதாசிவம் ஆகிய மூர்த்திகள் உண்மையில் பிரேதங்களாக மாட்டார்கள். தத்துவத்தைக் கிரகிப்பதற்காகப் பேச்சளவில் அவர்கள் பிரேதங்களாகக் கருதப்படுகின்றனர். உண்மையில் அவர்களையும், அவர்களை ஊடுருவி இருக்கும் சக்தியையும் பிரிக்க முடியாது. தீயினின்று உஷ்ணத்தைப் பிரிக்க முடியாது. அங்ஙனம் பிரம்மத்தினின்று சக்தியைப் பிரிக்கமுடியாது. ஆதலால் அம்பிகை தானே பஞ்ச மூர்த்திகளாகப் பொலிந்துகொண்டிருக்கிறாள். அந்தந்த மூர்த்தியின்செயலும் உண்மையில் அம்பிகையின் செயலாகிறது. ஆதலால் அவள் பஞ்ச பிரம்ம ஸ்வரூபிணீ எனப் போற்றப்படுகிறாள்.

**चिन्मयी** — சின்மயீ ௨௫௧

வாலறிவே வடிவெடுத்தவள்.

சித்மயமாய் இருப்பவள் சின்மயீ. சித் என்பது பேரறிவு அல்லது பரஞானம். மனிதன் நாற்காலியில் உட்கார்ந்திருக்கிறான். உட்கார்ந்திருக்கிறேன் என்னும் பிரக்ஞை அல்லது அறிவு அம்மனிதனுக்கு உண்டு. அது ஆத்ம தத்துவம். இருக்கிறேன் என்னும் உணர்ச்சி நாற்காலிக்கு இல்லை; அது ஜடம். ஆக, மனிதனையும் நாற்காலியையும் சீர்தூக்குவதன் வாயிலாக சித் என்றால் என்ன என்பதை அறிகிறோம். அம்பிகை சித்சொரூபமாக இருப்பதால் அவள் சின்மயீ என்று அழைக்கப்பெறுகிறாள்.

**परमानन्दा** — பரமானந்தா ௨௫௨

பேரின்ப வடிவினள்.

ஜீவர்கள் எல்லாரிடத்தும் ஆனந்தம் இருக்கிறது. ஆனந்தம் பிரம்மம் என்பது ஒரு மஹாவாக்கியம். பின்பு ஜீவர்கள் பெரும் மயக்கம் ஒன்றில் உழல்கின்றனர். தங்களிடத்திருக்கும் ஆனந்தத்தைப் புறப்பொருள்கள்மீது ஆரோபித்து அவைகளைப் பெற முயலுகின்றனர். அவைகளைப் பெறுவதிலும், வைத்திருப்பதிலும் தடைகள் உண்டாகும்பொழுது ஆனந்தத்துக்குத் தடைகள் வந்து விட்டதாக மயங்கி வருந்துகின்றனர். வருந்துவது ஆனந்தத்தின் எதிர்மறைத் தோற்றமாகும். இப்படி இன்பதுன்ப மயமாய் இருப்பது ஜீவர்களின் இயல்பு. பரதேவதையாகிய அம்பிகையோ யாண்டும் பரமானந்த சொரூபிணியாகத் திகழ்கிருள். தடைப்படாத ஆனந்தமே பரமானந்தம் எனப்பகரப்படுகிறது.

ஜீவர்களிடத்திருக்கும் தடைப்படுகிற இன்பம் சிற்றின்பம் எனப் பெயர் பெறுகிறது. அம்பிகையினிடத்திருக்கும் தடைப் படாத இன்பம் பேரின்பம் எனப் போற்றப்படுகிறது. பிரபஞ்ச உணர்வு இடையில் புகுந்து அதைத் தடைப்படுத்துவதில்லை. நம் மீது படிகிற சூரிய வெளிச்சத்தை மேகம் தடைப்படுத்துகிறது. ஆனல் அத்தடையை அந்த மேகம் சூரியனிடத்துச் செலுத்த முடியாது. சூரியப் பிரகாசம் தன்னில் தானய் இருப்பது போன்று அம்பிகையின் பரமானந்தம் தன்னில் தானய் இருக்கிறது.

**विज्ञानघन-रूपिणी — விக்ஞான கன ரூபிணீ** २५३

திரண்ட பேரறிவு வடிவினள்.

உலகுக்குக் காரணமாய் இருக்கும் பஞ்சபூதங்களை அறிகிற வன் பௌதிக விக்ஞானி என்று அழைக்கப்படுகின்ருன். கருவி கரணங்களைக்கொண்டு பிரபஞ்சத்தை அறிந்துகொள்வதை ஞானம் என்கின்றனர் நூலோர். கருவிகரணங்களையும், அவற்றின் மூலம் வருகிற பிரபஞ்ச ஞானத்தையும் ஒதுக்கி வைத்துவிட்டு ஆத்மா தன்னில் தானய் இருப்பதை விக்ஞானம் என்றும் சுத்த சைதன்யம் என்றும் ஆன்ருேர் கூறியுள்ளனர். சூரிய வெளிச்சம் சந்திரன் மீது படிந்து சந்திர வெளிச்சமாக நமக்கு வருகிறது. அங்ஙனம் ஆத்ம சைதன்யம் அந்தக்கரணத்தில் தோய்ந்து அறிவு அல்லது ஞானமாக நமக்கு வருகிறது.

Lens என்னும் கண்ணுடியின் துணைகொண்டு சூரியகிரணங்களை ஒரே இடத்தில் குவியச்செய்தால் அது கிரணகனம் ஆகிறது. திரண்ட பேரொளி என்பது அதன் பொருள். விக்ஞானகனம் என்பது திரண்ட பேரறிவு எனப் பொருள்படுகிறது. மற்று மனுதீதத்துக்குச் சென்றவனுக்குச் சித் என்றும் சித்கனம் என்றும் பாகுபாடு இல்லை. அனுபூதிமான்களே இக்கோட்பாட்டை அறிய வல்லவர் ஆவர். சாதனதசையிலிருப்பவர்களுக்கு விக்ஞான கன ரூபிணீ என்னும் பதம் முற்றிலும் பொருள் புதைந்ததே.

**ध्यान-ध्यातृ-ध्येय-रूपा — த்யான-த்யாத்ரு-த்யேய ரூபா २५४**

திியானரூபமாகவும், தியானம் பண்ணுபவன் ரூபமாகவும் தியானத்துக்கு இலக்காக இருக்கும் பரவஸ்து ரூபமாகவும் இருப்பவள்.

அஷ்டாங்க யோகத்தில் ஏழாவது அங்கமாயிருப்பது தியானம். மனதின் செயல்களுள் மிக உச்சநிலையிலிருப்பது தியானம். ஆத்மசாதகனுடைய அந்தக்கரணத்தில் சிந்தனு சக்தி இடம்பெறுகிறது. தைலதாரை இடையீடில்லாது ஒழுகுவது போன்று எண்ணம் இடையீடில்லாது பரவஸ்துவினிடம் செலுத்தப்படுங்கால் அது தியானமாகிறது. பரத்தில் ஒன்றுபட்டவனை ஞானி என்றும் பரத்தில் ஒன்றுபட முயல்பவனை தியானி என்றும் கூறுவது மரபு. எவ்வளவுக்கெவ்வளவு ஆத்மசாதகன் ஒருவன் ஆழ்ந்து தியானத்தில் ஈடுபடுகிருனே அவ்வளவுக்கவ்வளவு அவன் சாதனத்தில் விரைந்து மேலேறுகிருன்.

அனைத்துமே பரம்பொருளின் தோற்றமாதலால் எதை வேண்டுமானுலும் நாம் எண்ணிக்கொண்டிருக்கலாம் என்று எண்ணுவது பிசகு. அன்ன விசாரம் அல்லது உணவைப்பற்றிய சிந்தனை எல்லா உயிர்களுக்கும் பொதுவானது. ஆதலால் எல்லா உயிர்களும் தியானம் பண்ணுகின்றன என்று சொல்லலாகாது. அன்னத்தைச் சமைக்கிறபொழுது ஒருவன் அதைத் தான் உண்ணும் உணவு என்று எண்ணுது பரமனுக்குரிய நைவேத்தியம் என்று எண்ணுவானுகில் அது தியானமாகிறது. அந்த அன்னத்தையே பரமனுகக் கருதுவானுகில் அது சிறந்த தியானம். கோயிலில் அமைந்துள்ள விக்கிரகத்தைக் கல் என்று கருதாது சின்மய

மென்று கருதுங்கால் அது சிறந்த தியானமாகிறது. சித் என்னும் வஸ்துவின் விகாரங்களாக ஜகத்தும் ஜீவனும் விளங்குகின்றன. அப்படி விளங்கிக்கொண்டிருக்கின்றபொழுதும் சித் சொருபத் தையே நிலைநாட்டுவது சாதனத்தின் முடிந்தநிலை. அம்பிகையின் சொருபத்துக்குப் புறம்பாகத் தியானம் என்னும் செயல் இல்லை; தியானம் பண்ணுகிற ஆத்மசாதகன் அல்லன்; அவனுக்கு இலட்சியமாயிருக்கிற இஷ்ட தேவதையும் அன்று. ஆகையினல் அம்பிகை த்யான, த்யாத்ரு, த்யேய, ரூபா என இயம்பப் பெறு கிருள்.

**धर्माधर्म-विवर्जिता** — தர்மாதர்ம விவர்ஜிதா २५५

தர்மம், அதர்மம் ஆகிய இரண்டோடும் சம்பந்தப் படாதவள்.

பிரபஞ்சத்திலுள்ள சராசரங்களனைத்தும் அவ்வவற்றின் தர்ம சொருபமாயிருக்கின்றன. நீரின் தர்மம் நனைப்பது; தீயின் தர்மம் தகிப்பது. இனி, சேதனமாயுள்ள உயிர்வகைகள் அவ்வவற் றின் முன்னேற்றத்திற்கேற்ற முயற்சியை எடுத்துக்கொள்வது அவ்வவற்றின் தர்மமாகும். பொதுப்பட சிற்றுயிர்கள் தர்மத்தி லின்று பிசகுவதில்லை. அசுரர்கள், சுரர்கள், நரர்கள் ஆகியவர்கள் தங்களுக்குரிய தர்மங்களை முறையாகச் செய்வதுமுண்டு. முறை தவறிச் செய்வ்துமுண்டு; செய்யாது தவிர்ப்பதுமுண்டு. முறை யாகச் செய்யப்படுகிற கர்மம் தர்மம் எனப்படுகிறது. முறை தவறிச் செய்யப்படுகிற கர்மமும், கடமையை நிறைவேற்ருது அலட்சியமாக விட்டுவிடுவதும் அதர்மமாகும். முன்னேற்றத் துக்கு முட்டுக்கட்டையாயிருப்பது அதர்மம். அனுகூலமான கர்மம் தர்மம்; பிரதிகூலமான கர்மம் அதர்மம். இவ்விரண்டிற்கும் இடையிலுள்ள போராட்டமே பிரபஞ்ச வாழ்வு எனப்படுகிறது. பிரபஞ்சம் கர்ம சொருபம். பரவஸ்துவினிடத்துக் கர்மமில்லை. அது கர்மாதீதம்; யாண்டும் தன்மயமானது. ஆதலால்தான் அம்பிகை தர்ம அதர்ம விவர்ஜிதா என்று போற்றப்படுகிருள்.

**विश्वरूपा** — விஸ்வருபா २५६

தோன்றியுள்ள அனைத்துமாய் இலங்குபவள்.

அகிலாண்டத்துக்கும் பொதுவாய் ஏற்பட்டுள்ள பெயர் விஸ்வம். ஆதிசக்திக்கும் பரசிவத்துக்கும் வேற்றுமையில்லை. ஆதிசக்தி மூலப்பிரகிருதியாகிறாள். அவளிடத்திருந்து அண்ட கோடிகளும் ஜீவகோடிகளும் உருவெடுக்கின்றன. ஆக, தோன்றியுள்ள அத்தனையுமாய் இருப்பவள் பரதேவதையாகிய பராசக்தியாதலால் அவள் விஸ்வரூபா எனப் போற்றப்படுகிறாள்.

**जागरिणी — ஜாகரிணீ** २५७

ஜாக்ரதாவஸ்தையிலிருக்கும் ஜீவாத்ம மயமாயிருப்பவள்.

ஜாக்ரதாவஸ்தையில் ஜீவாத்மன் தன்னுடைய ஸ்தூல சரீரத்தைப் பயன்படுத்துகிறான். ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள் ஆகியவைகளையும் பயன்படுத்துகிறான். அவைகளைக் கருவியாகக் கொண்டு புறஉலகோடு தொடர்பு வைக்கிறான். புற உலகோடு வைக்கின்ற தொடர்பு முறையானதாயிருக்குமாகில் அது தர்மம் ஆகும். தொடர்பு முறை தவறியிருக்குமாகில் அது அதர்மம் எனப்படுகிறது. ஆதலால் ஜாக்ரதாவஸ்தையில் தர்மம் அதர்மம், புண்ணியம் பாபம் ஆகியவைகள் நிகழ்த்தப்படுகின்றன. அப்படிப் புரிகின்ற கர்மங்களின் வாயிலாக ஜீவகோடிகள் மேல் நிலைக்குப் போகவும், கீழ்நிலைக்குப் போகவும் செய்கின்றன. இத்தனைவிதமான வியவஹார தசைகள் அம்பிகையினிடத்திருந்தே வந்தவைகளாம். ஆகையினால் அவள் ஜாகரிணீ என்று இயம்பப்பெறுகிறாள்.

**स्वपन्ती — ஸ்வபந்தீ** २५८

சொப்பனாவஸ்தை சொரூபமாயிருப்பவள்.

ஜாக்ரதாவஸ்தையிலிருக்கும் ஜீவாத்மன் ஸ்தூல சரீரம, சூட்சும சரீரம், காரண சரீரம் ஆகிய மூன்று சரீரங்களைக் கொண்டும் கிருத்தியங்கள் புரிகிறான். சொப்பனாவஸ்தையில் ஸ்தூல சரீரம் வேலை செய்வதில்லை. சூட்சும சரீரமும் காரண சரீரமும் வேலை செய்கின்றன. இனி, ஜாக்ரதாவஸ்தையில் காணும் ஜகத்தும் ஜீவர்களும் காண்போனுக்குப் புறம்பானவைகள். சொப்பனாவஸ்தையில் காணும் ஜகத்தும் ஜீவர்களும் காண்

போனுக்குப் புறம்பானவர்களல்லர். காண்போனுடைய மனோ விகாரமே காணப்படுபொருளாகிறது. கனவு காண்பவனுடைய காட்சிக்கு வருகிற நல்லவர்கள், கெட்டவர்கள், ஸத்கர்மம், அஸத் கர்மம் ஆகிய யாவும் கனவு காண்பவனுடைய சித்தவிருத்திக்குப் புறம்பாயில்லை. அவை அவனுடைய மனதைக்கொண்டு அவனால் சிருஷ்டிக்கப்பட்டவை. ஜீவகோடிகள் அனைத்திடத்திருக்கும் சொப்பனவஸ்தை சொரூபமாக அம்பிகை இருப்பதால் அவள் ஸ்வபந்தீ எனப் பாராட்டப்படுகிறாள்.

**तैजसात्मिका** — தைஜஸாத்மிகா २५९

**தைஜஸன் அல்லது ஹிரண்யகர்ப்பன் மயமாய் இருப்பவள்.**

ஜாக்ரதாவஸ்தையிலிருக்கும் ஜீவர்களின் தொகை தைஜஸன் எனப்படுகிறது. அந்த ஜீவகோடிகளின் தொகையாக அம்பிகை இருப்பதால் அவளுக்கு இப்பெயர் வந்துள்ளது.

**सुप्ता** — ஸுப்தா २६०

**சுஷுப்தி அவஸ்தையிலிருப்பவள்.**

சுஷுப்தி அவஸ்தையில் காரண சரீரம் மட்டும் வேலை செய் கிறது. சுஷுப்தி அவஸ்தையிலுள்ள ஜீவகோடிகளின் மயமா கவே அம்பிகை இருக்கிறாள். அந்த ஜீவகோடிகளுக்கு அபின்ன மாக அதாவது அவர்கள் மயமாக அவள் இருக்கிறாள்.

**प्राज्ञात्मिका** — ப்ராக்ஞாத்மிகா २६१

சுஷுப்தி அவஸ்தையிலிருக்கும் ஜீவர்களின் தொகை அல்லது சமஷ்டிக்கு ஈசுவரனென்றும் ஈசுவரி என்றும் பெயர்கள் வந்துள்ளன. சுஷுப்தி அவஸ்தையிலுள்ள அத்தனை ஜீவர்களை யும் அவள் தன்மயமாய் வைத்திருப்பதால் அவள் ப்ராக்ஞாத்மிகா என்று போற்றப்படுகிறாள்.

**तुर्या** — துர்யா २६२

**துரிய ஸ்வரூபமாயிருப்பவள்.**

அநித்தியப் பொருள்களோடு சீர்தூக்கி நித்தியமாயிருக் கின்ற பரவஸ்துவுக்குத் துரியம் என்னும் பதம் வழங்கப்படுகிறது.

மாறி மாறி அமைகின்ற ஜாக்ரதம், சொப்பனம், சுஷுப்தி ஆகிய மூன்று அவஸ்தைகளுக்கும் ஆதாரமாயிருப்பது எதுவோ அது துரியம். ஜாக்ரதாவஸ்தைக்குப் பிரக்ஞையை வழங்குவது துரியம். சொப்பனுவஸ்தைக்குப் பிரக்ஞையை வழங்குவது துரியம். இனி, சுஷுப்திக்கும் ஆதாரமாகவும், பிரக்ஞையை வழங்குகிற பாங்கிலும் துரியம் இருக்கிறது. 'ஒன்றும் தெரியவில்லை. கட்டை போல் தூங்கினேன்' என்று சுஷுப்தியில் இருந்தவன் சொல்லுகிறுன். அங்கிலை மங்கலாக உணரப்பட்டதாகிறது. துரியம் அதற்கு ஆதாரமில்லாது போய்விடுமாகில் பிறகு சுஷுப்தியை விளக்கமுடியாது. திரைப்படத்தில் தோன்றி, இருந்து, மறைகிற படங்கள் யாவும் நனவு, கனவு, அயர்ந்த உறக்கத்துக்கு நிகர். திரை தானே அசைவற்றிருக்கிறது. திரை இல்லாவிட்டால் திரைப்படம் காட்ட முடியாது. அத்தகைய திரைக்கு நிகர் துரியம். அன்னை பராசக்தி துரிய சொருபமாயிருக்கிருள்.

## सर्वावस्था–विवर्जिता — ஸர்வாவஸ்தா விவர்ஜிதா २६३

அவஸ்தைகளனைத்துக்கும் அப்பாற்பட்டவள்.

மனதின் விகாரங்களே அவஸ்தைகள் எனப்படுகின்றன. மனதோ மாறுபடும் தன்மையது. ஆதலால் அவஸ்தைகளுக்குப் போக்கும் வரவும் உண்டு. அன்னை பராசக்தியோ சுத்த சைதன்யம். ஆதலால் அவள் இந்த அவஸ்தைகளுக்கெல்லாம் அப்பாற்பட்டவளாக இருக்கிருள்.

## सृष्टिकर्त्री — ஸ்ருஷ்டி கர்த்ரீ २६४

படைத்தல் என்னும் கிருத்தியத்தைச் செய்பவள்.

அம்பிகை தன்னளவில் கிருத்தியங்களுக்கு அப்பாற்பட்ட துரியம் அல்லது சுத்த சைதன்யம் எனினும் அவளுடைய சன்னிதானத்திலே அவளுடைய மகிமையினுல் கிருத்தியங்கள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. அண்டகோடிகளைச் சிருஷ்டி பண்ணுவது தலைசிறந்த விசுவ கர்மமாகிறது. அம்பிகை யாண்டும் தன்மயமாயிருந்து கொண்டு தன்னுடைய சன்னிதானத்திலேயே அண்டகோடிகளையும் ஜீவகோடிகளையும் தோற்றுவிக்கும் மகிமை படைத்தவளாம். அன்னை பராசக்தி தானே பிரபஞ்சமாகவில்லை.

கிருத்தியம் எதிலும் அவள் ஈடுபடுவதில்லை. ஆயினும் அவளுடைய சன்னிதான விசேஷத்தால் அவள்மீது அண்டகோடிகள் தோற்றத்துக்கு வருகின்றன. அக்காரணத்தை முன்னிட்டு அவளை ஸ்ருஷ்டிகர்த்ரீ என்று இயம்புவதில் தோஷமில்லை. உலகக் காட்சியில் காண்பவர்கள் அது அவளுடைய சிருஷ்டி என்று சொல்லுவதே முறையாகும்.

**ब्रह्मरूपा — பிரஹ்மரூபா** २६५

சிருஷ்டி கர்த்தாவாகிய நான்முக பிரம்மாவின் வடிவத்தில் இருப்பவள்.

புருஷனையும் பிரகிருதியையும் வசதிக்காக இரண்டு மூர்த்திகளென்று பாகுபடுத்துகிறோம். உண்மையில் புருஷனும் அவனுடைய சக்தியும் ஒன்றேயாம். அக்னியும் அதனிடத்திருக்கும் உஷ்ணமும் ஒன்றே. அங்ஙனம் மூர்த்தி ஒன்றெனினும் அம்மூர்த்தியை ஆண்பாலாகவும், அதற்குரிய சக்தியைப் பெண்பாலாகவும் பிரித்து வைத்து இரண்டு மூர்த்திகளாகப் போற்றுவது மரபு.

இப்பிரபஞ்சமே நான்முகக் கடவுளாகிய பிரம்மதேவன் எனப் பொருள்படுத்தப்படுகிறது. இதன்கண் சர்வகாலமும் சிருஷ்டி அல்லது படைத்தல் கிருத்தியம் நிகழ்ந்து கொண்டே இருக்கிறது. ஆதலால் நாம் சர்வகாலமும் பிரம்மதேவனுடைய காட்சியைக் கண்டு கொண்டே இருக்கிறோம். ஆனால் நாம் காண்பதே பிரம்மதேவன் என்று பொருள்படுத்தும் மனப்பரிபாகம் நமக்கு இல்லை

**गोप्त्री — கோப்த்ரீ** २६६

காப்பாற்றுபவர் என்பது இந்நாமத்தின் பொருள்.

**गोविन्द-रूपिणी — கோவிந்தரூபிணீ** २६७

கோவிந்தன் அல்லது விஷ்ணு ரூபமாக இருப்பவள்.

உலகில் நாம் தோற்றத்துக்கு வந்துள்ளது வெளிப்படை. அது பிரம்மதேவனுடைய செயல். உலகிலே நாம் கொஞ்ச காலம் நிலைபெற்றிருப்பதும் வெளிப்படை. அப்படி நாம் காக்கும் தெய்

வத்தை ஆண்பாலாகக் கருதும் பொழுது கோவிந்தன் என்றோ விஷ்ணு என்றோ மொழிகிறோம். அதே தெய்வத்தைப் பெண் பாலாகக் கருதும் பொழுது கோப்த்ரீ என்றோ வைஷ்ணவி என்றோ மொழிகிறோம். காக்கும் செயலைக் கருத்தில் வாங்குகிற பொழுது அதற்குக் கர்த்தாவாக இருக்கும் தெய்வத்துக்கு இப் பெயர் கொடுக்கிறோம். ஒரு மனிதன் எழுதுகின்றபொழுது அவனை எழுத்தாளன் என்கிறோம். எழுதியதை அவன் படிக்கும் பொழுது அவனை வாசகன் என்கிறோம். அதே விதத்தில்தான் தெய்வத்துக்கும் பெயர்கள் வந்திருக்கின்றன.

**संहारिणी** — ஸம்ஹாரிணீ २६८

துடைத்துத் தள்ளுபவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

**रुद्ररूपा** — ருத்ரரூபா २६९

ருத்ரனுடைய வடிவத்திலிருப்பவள்.

துடைத்துத் தள்ளும் தெய்வத்தை ஆணாகக் கருதிப் பேசும் பொழுது நாம் அதற்கு ருத்ரன் என்னும் பெயர் கொடுக்கிறோம்; அதே தெய்வத்தைப் பெண்பாலாகக் கருதுமிடத்து ஸம்ஹாரிணீ என்னும் பெயர் கொடுக்கிறோம் ருத்ரன் என்பதற்கு அழச் செய்பவன் என்பது பொருள். சிருஷ்டி எவ்வளவு அவசியமோ ஸம்ஹாரமும் அவ்வளவு அவசியமானது. பழையன கழிதல் புதியன புகுதல் இயற்கையின் திட்டம். கதறிப்பதறி அழுது கொண்டிருக்கையிலும் துடைக்கவேண்டியதைத் துடைத்தாக வேண்டும்.

செடி ஒன்று முளைத்து வரும்பொழுது விதைக்கு ஸம்ஹாரம் நிகழ்கிறது. ஓரிடத்தில் ஒருவன் மடிகிறான். அப்படி மடிந்த ஜீவன் இன்னோரிடத்தில் பிறக்கிறான். ஆக, ஸம்ஹாரமும், சிருஷ்டியும் இணைபிரியாத செயல்களாம். எந்த ஜீவனாவது சூனியமாகப் போவதில்லை. ஒவ்வொரு ஜீவனும் தோற்றத்துக்கு வந்துள்ள நிலையில் இருக்கிறது அல்லது தோன்றா நிலையில் இருக்கிறது. ஸ்திதி அல்லது இருப்பு யாண்டும் அதற்குச் சொந்தம். அண்டமெங்கும் துடைத்துத் தள்ளப்பட்ட பொருளே

பின்பு புதிய வடிவெடுக்கிறது. ஆக, இயற்கையில் முக்கிருத்தியங்களும் ஒன்றோடொன்று பிணைக்கப்பட்டிருக்கின்றன. அன்னை பராசக்தி மும்மூர்த்திகளின் சொரூபிணியாக இருந்து முக்கிருத்தியங்களையும் இடையறாது செய்து வருகின்றாள். அக்கிருத்தியங்களைப் பாராட்டுவது அம்பிகையின் வழிபாடாகும்.

**तिरोधानकरी — திரோதானகரீ** ２७०

மறைத்து வைத்திருப்பவள்.

ஒரு பொருள் மற்றொரு பொருளாகக் காட்சி கொடுப்பது மறைப்பு என்பதாகிறது. அன்னை பராசக்தி தானே பிரபஞ்சத்தில் அனைத்துமாய் இருக்கிறாள். அஞ்ஞான தசையிலிருக்கும் நமக்கு அன்னையின் காட்சி இல்லை. பிரபஞ்சத்தின் காட்சியே முன்னணியில் இருக்கிறது. மெய்ப்பொருளாகிய அன்னை பராசக்தி வெறும் தோற்றமாகிய பிரபஞ்சமாக இருப்பது அவளுடைய திரோதான வல்லமையினாலேயாம்.

அன்னை பராசக்தி தன்னைப் பிரபஞ்சமாகத் திரிவுபடுத்திக் காட்சி தருகிறாள். நலனும் கேடும் நிறைந்துள்ள பிரபஞ்சமானது ஜீவர்கள் பக்குவமடைவதற்குப் பயிற்சி சாலையாயிருந்து வருகிறது. பிரபஞ்ச அமைப்பே நிலையானது என்னும் எண்ணம் உறுதி பெற்றிருக்குமளவு ஜீவர்கள் அப்பிரபஞ்சத்தையே சார்ந்திருந்து அதன் வாயிலாக மேல் நிலையடைதற்கு முயலுகின்றனர். இதற்காகவென்றே அன்னை பராசக்தி தன்னுடைய திரோதான சக்தியினால் நிஜசொரூபத்தை மறைத்துப் பிரபஞ்ச சொரூபமாக விளங்கிக் கொண்டிருக்கிறாள்.

**ईश्वरी ஈச்வரீ** २७१

ஈசுவரன் மயமாய் இருப்பவள்.

அகிலாண்டங்கள் அனைத்தையும் அம்பிகை ஆண்டு வருகின்றாள். அதற்கிடையில் அண்டகோடிகளுக்கும், ஜீவகோடிகளுக்கும் அவள் தலைவியாகத் திகழ்கிறாள். தங்கள் நிஜசொரூபத்தினின்று மறைக்கப்பட்டிருக்கிற ஜீவர்களுக்கு ஆளும் தெய்வம் ஒன்று அவசியமாகிறது. தங்களுக்கு உற்ற குறைகளையெல்லாம் ஈசுவரியிடம் அவர்கள் முறையிடுகின்றனர். அவர்கள் விண்ணப்

பத்துக்குச் செவி சாய்ப்பதும் தகுதிக்சேற்ற பிரகாரம் குறைபாடு களை அகற்றி வைப்பதும் ஆட்சி பண்ணுகிறவளுடைய கடமையா கிறது. அக்கடமையை அம்பிகை இனிது நிறைவேற்றி வருகிறாள். அண்டங்கள் முறை பிறழாது இயங்குவது அவளது ஆட்சியின் மகிமையாகும். உயிர்களனைத்தும் வினைக்கேற்றவாறும், தகுதிக் கேற்றவாறும் பயனடைந்து வருவதும் அவளுடைய செங்கோல் திறமையை விளக்குகிறது. ஆதலால் திரோதானத்தில் கட்டுண்டு கிடக்கிற ஜீவர்கள் எல்லாராலும் வழுத்துதற்கேற்ற தெய்வமாக அம்பிகை இலங்குகின்றாள். ஆதலால் அவளை ஈச்வரீ என்று இயம்புவது முறை.

## सदाशिवा — ஸதாசிவா ૨૭૨

ஸதாசிவனார் சொரூபமாக இருப்பவள்.

ஆட்சி பண்ணுகின்றபொழுது சிவனார் ஈஸ்வரனாகவும் அம்பிகை ஈஸ்வரியாகவும் இலங்குகிறார்கள். ஸதாசிவ மூர்த்தி கிருத்தியங்களையெல்லாம் கடந்த உயர்நிலையிலிருப்பவராகிறார். கிருத்தியங்களுக்கெல்லாம் அப்பாற்பட்ட நிலையில் அம்பிகை ஸதாசிவா என்று போற்றப்படுகிறாள். அப்பெருநிலையில் இருந்து கொண்டு அம்பிகை ஆத்மபரிபாகம் அடைந்திருப்பவர்களுக்குப் பேருபகாரம் செய்கிறாள்.

## अनुग्रहदा — அனுக்ரஹதா ૨૭૩

அனுக்ரஹத்தைக் கொடுப்பவள்.

தடையைத் தவிர்க்கும் செயல் அனுக்ரஹம் ஆகிறது. ஈசுவரியை உபாசிப்பதற்கேற்ப ஜீவாத்மன் மனபரிபாகம் அடைந்து வருகிறான். மனபரிபாகத்தினின்று ஞானத்தெளிவு உண்டாகிறது. பரதேவதையாகிய ஸதாசிவை தன் பாரமார்த் திகப் பெருநிலையினின்று இம்மியளவும் பிசகுவதில்லை; இமைப் பொழுதும் பிசகுவதில்லை. பொருள் யாண்டும் தன்னில் தானாய் இருப்பது அப்பொருள் படைத்துள்ள நலன் அல்லது மங்களமாம். அப்பரவஸ்துவை அணுகுகிற ஆத்ம சாதகன் தானும் அதே பார மார்த்திகப் பெருநிலையில் இருப்பது சாத்தியம் என உணர்கிறான். அப்படி உணர்ந்தபடி அவன் தன்னில் தானாய் நிறை நிலையை

எய்துகிறான். ஜீவபோதம் என்னும் நிக்ரஹம் துடைத்துத் தள்ளப்படுகிறது. பரபோதம் என்னும் பாரமார்த்திகப் பெருநிலை மீண்டும் எய்தப்பெறுகிறது. செயல் ஒன்றுக்கும் ஆங்கு இடம் இல்லை. அது செய்யாது செய்யும் உபகாரமாகிறது. இப்பெரு நிலை ஆத்ம சாதகனுக்கு அம்பிகையின் சன்னிதானத்தில் நிகழ் வதால் அவள் அனுக்ரஹதா எனப் போற்றப்படுகிறாள்.

**पञ्चकृत्य-परायणा — பஞ்ச க்ருத்ய பராயணா** ௨௭௪

ஐம்பெரும் தொழில்களில் கண்ணும் கருத்துமா யிருப்பவள்.

சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதானம், அனுக்ரஹம் ஆகிய பஞ்சகிருத்தியங்கள் இடையறாது நிகழ்ந்து வருவதை நாம் காணலாம். ஆதி பராசக்தி ஒவ்வொரு செயலுக்கும் ஏற்ற மூர்த்தியாக வடிவெடுக்கிறாள். சிருஷ்டி கர்த்தாவினுடைய சக்தி யாக இலங்கும் பொழுது அவள் பிராஹ்மணீயெனப் போற்றப்படு கிறாள். விஷ்ணுவினுடைய கிருத்தியத்தைச் செய்கின்றபொழுது அவள் வைஷ்ணவீ எனப்படுகிறாள். ருத்ரனுடைய கிருத்தி யத்தைச் செய்கிறபொழுது ருத்ராணீ என அவள் அழைக் கப்படுகிறாள். ஜீவர்களுக்குத் தங்கள் சொந்த சொரூபம் ஞாபகத் தில் இல்லாதபொழுது அது மறைத்தல் என மொழியப்படுகிறது. மேன்மையை மறந்து கீழ்மையில் உழல்கின்ற உயிர்களை அவள் நன்கு ஓம்பி வருகின்றாள். அந்நிலையில் அவளுக்கு ஈஸ்வரீ என்று பெயர். பக்குவமாகிப் பரஞானத்தைப் பெறுகிற ஜீவர்களை அவள் தன்மயமாக்குகிறாள். அச்செயலைச் செய்யும்பொழுது அவள் ஸதாசிவா எனப் போற்றப்படுகிறாள். எனினும் ஆதி பராசக்தி என்னும் நிலையில் அவள் ஏக வஸ்துவாகிறாள். அவளை முறையே போற்றுவது பஞ்ச கிருத்தியங்களுக்கு அப்பாற்பட்ட நிலையை எய்துவதற்கு உற்ற உபாயமாம்.

**भानुमण्डल-मध्यस्था — பானு மண்டல மத்யஸ்தா** ௨௭௫

சூரிய மண்டலத்தின் நடுவிலிருப்பவள்.

பரவஸ்துவானது தன் நிஜ சொரூபத்தை ஜீவர்களிடமிருந்து மறைத்து வைத்துக்கொண்டு பிரபஞ்ச சொரூபமாகத் தன்னை

விளக்கி வருகிறது. அப்பிரபஞ்சத்தின் ஒரு கூறாகிய ஞாயிறு பரவஸ்துவின் பாங்குகளையெல்லாம் பெரிதும் படைத்திருக்கிறது. ஆதலால் கட்புலனாகின்ற சூரியனை முறையாக உபாசிக்கின்ற பொழுது அது பரதேவதை உபாசனைக்கு நிகராகிறது. தங்கத்தட்டுப்போன்று தகதகவெனத் திகழும் உதய சூரியனின் மத்தியில் அம்பிகை அமர்ந்திருப்பதாக ஆத்மசாதகன் கற்பனைபண்ணவேண்டும். அப்படிக் கற்பனைபண்ணப்பட்ட மூர்த்தி தன் ஹ்ருதயத்தில் திகழ்வதைக் காலை சந்தியா நேரத்தில் தியானம் பண்ணவேண்டும். நண்பகல் சந்தியா வேளையில் அப்பரதேவதை வெள்ளை வெளேரென்ற சூரிய வடிவத்தில் தன் உள்ளத்தினுள்ளே ஒளிர்வதாக தியானம் பண்ணுவது அவசியம். மாலை சந்தியாவேளையில் மீண்டும் ஒருமுறை அது தங்கத்தட்டில் திகழ்வதுபோன்று பாவித்து தியானம் பண்ணவேண்டும். இத்தகைய பாவனை சாதனத்தில் முன்னேற்றமடைவதற்குப் பெரும் துணைபுரிகிறது.

**भैरवी — பைரவீ** २७६

பைரவருடைய பத்தினியாகப் பொலிபவள்.

எண்ணிலடங்காத பைரவர்கள் சிவனுடைய சன்னிதியில் இடம் பெறுகின்ற பாங்கில் எண்ணிக்கையிலடங்காத பைரவிகள் அம்பிகையின் பாங்கிமார்களாகப் பொலிகின்றனர். அம்பிகை உபாசனை பண்ணுகிற ஜீவாத்மன் தன்னை ஒரு பைரவியாகப் பாவித்துத் தனக்குத் தலைவியாயிருக்கிற அம்பிகை என்னும் பைரவிக்குப் பணிவிடை பண்ணுவது சிறந்த ஆத்ம சாதனமாகிறது.

பீரு அல்லது பயப்படும் தன்மை வாய்ந்திருப்பவன் ஜீவாத்மன். சாதகன் தன்னை பைரவனாகக் கருதி அம்பிகை உபாசனை பண்ணுவது பயத்தை ஒழிப்பதற்கு உற்ற உபாயமாகும். அதற்குத் துணைபுரியும் அம்பிகை பைரவீ எனப் போற்றப்படுகிறாள்.

**भगमालिनी — பகமாலினீ** २७७

பகம் என்னும் தெய்விகத்தை மாலையாகக் கொண்டிருப்பவள்.

ஞானம், வைராக்யம், வீர்யம், ஐஸ்வர்யம், ஸ்ரீ, கீர்த்தி ஆகிய ஆறு தெய்விகச் சம்பத்துகளின் தொகை பகம் எனப்படுகிறது. பிரபஞ்சத்தைப் பற்றிய ஞானமும், பரவஸ்துவைப்

பற்றிய ஞானமும் சேர்ந்து பொதுவாக ஞானம் எனப்படுகின்றன. பிரபஞ்சப் பொருள்களை நன்கு அறிந்துகொள்ளுமளவு நாம் அவைகளை முறையாகப் பயன்படுத்துகிறோம். பரவஸ்துவை நன்கு அறிந்துகொள்ளுமளவு நமக்கு அப்பரம்பொருளிடத்தும் அதனுடைய தோற்றமாயுள்ள உயிர்களிடத்தும் நல்லிணக்கம் உண்டாகிறது. பரஞானம் மனிதனை அபேதத்தில் கொண்டு சேர்க்கிறது. ஞானம் முறையாக மேலோங்குமளவு மனிதனுடைய வாழ்வும் நிறைவாழ்வாகிறது.

வைராக்யம் என்பது பற்றின்மை. உயிர்வாழ்ந்திருப்பதற்கு இன்றியமையாத காற்றைப் பயன்படுத்துகிற மனிதன் அதில் பற்று வைக்காது இருந்து வருகிறான். இதே பாங்கில் வாழ்க்கைக்கு இன்றியமையாத ஏனைய பொருள்களிலும் மனிதன் பற்று வைக்காதிருக்க முடியும். பரதேவதை உலகில் இத்தனையுமாகி இவையாவிலும் பற்று வைக்காது இருக்கிறாள். பற்று வைக்காததை முன்னிட்டு அவளுடைய பராமரிப்புக்கு இழுக்கு ஏதும் உண்டாவதில்லை. வைராக்யத்தை வளர்க்குமளவு மனிதன் மேன்மையுறுகிறான்.

எச்செயலையும் திறம்படச் செய்தலும் நேர்மையாகச் செய்தலும் வீர்யமாகும். இயற்கையின்கண் நிகழும் நிகழ்ச்சிகளெல்லாம் அன்னையின் பேராற்றலுக்கு எடுத்துக்காட்டாகின்றன. அந்நிகழ்ச்சிகளில் ஒழுங்குப்பாடு நிறைந்திருக்கிறது. மனிதன் தான் புரிகின்ற கிருத்தியங்களை உறுதியோடும், ஒழுங்குப்பாடோடும் நிறைவேற்றுவானாகில் அது வீர்யமாகிறது. வீர்யத்துடன் வினையாற்றுவது தேவாராதனையாகிறது.

ஐஸ்வர்யம் என்னும் சொல்லுக்கு ஆளும் திறமை, செல்வம் படைத்திருத்தல் என்னும் இரண்டு பொருள்கள் இருக்கின்றன. அம்பிகை உலகனைத்தையும் இனிது ஆண்டு வருகின்றாள். பிரபஞ்சமெங்குமுள்ள பொருள்களனைத்தும் அம்பிகைக்கே உரியவைகளாகின்றன. ஆத்ம சாதகன் தன் நித்திய வாழ்வை நன்கு நடாத்துவானாகில் அவன் தன்னையே முறையாக ஆளுபவனாகிறான். மனதில் அவனுக்குக் குறையொன்றும் இல்லை எனில் அவன் நிறை மனது படைத்திருப்பவனாகிறான். அங்ஙனம் நிறை மனது படைத்திருப்பது அவனுடைய ஐசுவரியம்.

ஸ்ரீ என்னும் சொல் திரு எனவும் அழகு எனவும் பொருள் படுகிறது. உலகெங்கும் உள்ள அழகானது அம்பிகையின் சான்னித்தியத்துக்கு அறிகுறியாகும். அழகைப் பாராட்டுவது உயிர்களின் இயல்பு. அழகோடு புனிதமான இணக்கம் வைப்பது ஆராதனை பண்ணுவதற்கு நிகராகிறது. பொருள்களனைத்தும் அம்பிகைக்கே உரியவைகளாம். ஆதலால் அவள் திருமகள் எனப் போற்றப்படுகிறாள். பொருள்களிடத்துப் பற்றேதும் வைக்காது அவைகளைப் பயன்படுத்துபவன் நிறை மனிதனாகிறான். அப்படி அவன் ஆவது அவன் படைத்துள்ள திரு அல்லது செல்வமாம்.

கீர்த்தி என்பது புகழ் எனப் பொருள்படுகிறது. மேலான வைகளையும், நல்லவைகளையும் பாராட்டுதல் புறத்திலிருந்து தூண்டுதலில்லாது நிகழ்கிறது. தெய்விக சம்பத்து இயல்பாகவே போற்றப்படுவதால் அது கீர்த்தி என்னும் பெயர் பெற்றது. இந்த ஆறு மகிமைகள் மூலமாக அம்பிகை யாண்டும் இலங்கிக் கொண்டிருக்கிறாள். ஆதலால் அவளுக்கு பகமாலினீ என்னும் பெயர் வந்துள்ளது.

**पद्मासना — பத்மாஸனா** ２७८

பத்மத்தை ஆசனமாகக் கொண்டிருப்பவள்.

புஷ்பங்களுள் தலைசிறந்ததாயிருப்பது பத்மம். ஆயிரம் இதழ்களையுடைய பத்மம் அல்லது தாமரை பரப்பிரம்ம சொரு பம் என்பது ஐதிகம். யோகியின் உச்சந்தலையில் ஏழாவது ஞானபூமியாக இலங்குவது ஸஹஸ்ரதள பத்மபுஷ்பம். அதில் ஸதாசிவமும் சக்தியும் அபின்னமாய் எழுந்தருளியிருக்கின்றனர். பத்மபுஷ்பம் அன்றலர்ந்ததாய் இருக்குமாகில் அது புதுமைக்கு விளக்கமாகிறது. அன்னை பராசக்தி யாண்டும் புத்தம் புதியவளாக இருக்கிறாள் என்பது இந்த நாமத்தின் கருத்தாகும்.

**भगवती — பகவதீ** २७९

பகம் அல்லது தெய்விக மகிமை ஆறுக்கும் அதிஷ்டான தெய்வமாக இருப்பவள்.

பரவஸ்துவைப் பெண்பாலாகக் கருதுமிடத்து அது பகவதீ என்று போற்றப்படுகிறது. அம்பிகையை மனதில் பாவிக்கின்ற

பொழுது இந்த ஆறு மகிமைகளோடு கூடி நினைப்பது நல்ல ஆராதனையாகிறது.

**पद्मनाभसहोदरी—பத்மநாப ஸஹோதரீ ௨௮௦**

பத்மநாபன் அல்லது விஷ்ணுவுடன் பிறந்தவள்.

தாமரைப் பூப்போன்று அழகிய நாபத்தை உடையவன் பத்மநாபன். புராண வரலாற்றின்படி மஹாவிஷ்ணுவின் இளைய சகோதரியாயிருப்பவள் அம்பிகை. தம் தங்கையை அவர் சிவனுக்குக் கன்னிகாதானம் செய்துகொடுத்தார் என்பது ஐதிகம். அப்படி நெருங்கிய சொந்தம் இருப்பதால் அவர்களை வழுத்துகின்ற பக்தர்களும் சைவம் வேறு, வைஷ்ணவம் வேறு என்று வேற்றுமை பாராட்டாது சமரச உணர்ச்சியை வளர்க்கவேண்டும். தத்துவ ஞானிகளுக்கு இத்தகைய விரிவான பாகுபாடுகளும் பிறகு செயற்கையாக அமைந்துள்ள இணக்கமும் தேவையில்லை. ஆனால் ஞான பரிபாகம் அடையப்பெறாத பாமரர்களுக்கு மூர்த்திகள் பலர் என்பதும் அம்மூர்த்திகளுக்கிடையே உள்ள நெருங்கிய இணக்கமும் புராணக் கதையின் வாயிலாக விளக்கப்பட்டிருக்கின்றன.

**उन्मेषनिमिषोत्पन्न विपन्न भुवनावलिः ௨௮௧**

**உன்மேஷ நிமிஷோத்பன்ன விபன்ன புவனாவலி: 281**

கண்களைத் திறப்பதாலும் மூடுவதாலும் பிரபஞ்சத்துக்கு உற்பத்தியையும் ஒடுக்கத்தையும் உண்டு பண்ணுபவள்.

நித்ய ஜாக்ரதாவஸ்தை என்று பிரம்ம சைதன்யம் போற்றப்படுகிறது. கண் இமையாது இருக்கும் அம்பிகையைக் கண் இமைப்பவளாகச் சொல்லி வைத்திருப்பது தத்துவ ஆராய்ச்சி பண்ணுகிற மக்களின் வசதிக்காகவேயாம். பரவஸ்துவின் சந்நிதானத்தில் ஜகத் தோன்றி, இருந்து ஒடுங்கிவருகிறது. இம்மூன்று கிருத்தியங்களும் இயற்கையில் ஆதி அந்தமில்லாது நிகழ்ந்து வருகின்றன. இயற்கையின் இச்செயல் அம்பிகையின் கண் இமைப்பாக ஆரோபிக்கப்பட்டிருப்பதில் கற்பனை இரசமும் கவிதை இரசமும் ஒன்றுகூடி மிளிர்கின்றன.

**सहस्रशीर्षवदना — ஸஹஸ்ரசீர்ஷவதனா** २८२

**ஆயிரம் தலைகளையும் முகங்களையும் உடையவள்.**

ஒவ்வொரு ஜீவனுக்கும் ஒவ்வொரு தலையும் முகமும் இருக்கின்றன. இவை யாவும் அம்பிகையின் புறத்தோற்றங்களாம். உயிர்வகைகளுள் எதையும் அம்பிகைக்குப் புறம்பானதென்று புறக்கணிக்கலாகாது. நலம், கேடு ஆகிய இரண்டும் பிரகிருதியினின்று வந்தவை. கேட்டினை நாம் சதா தாக்கித் தகர்த்துத் தள்ளவேண்டும். இராமன் படைத்திருந்த சிரசும் முகமும் அம்பிகையினிடத்திருந்து வந்தவைகள். இராவணன் படைத்திருந்த சிரங்களும் முகங்களும் அம்பிகையினிடத்திருந்தே வந்தவைகள். அவ்வுண்மையை முன்னிட்டு இராவண சம்ஹாரத்தை இராமன் புறக்கணிக்கவில்லை. பிரம்மஞானம் அடையும் வரையில தீமையோடு நாம் போராடியாகவேண்டும். அதற்கிடையில் தீமையும் அம்பிகையினிடத்திருந்து வந்தது என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டால் நம் போராட்டத்தில் ஒழுங்குப்பாடு இருக்கும்.

**सहस्राक्षी — ஸஹஸ்ராக்ஷீ** २८३

**எண்ணிக்கையிலடங்காத கண்களை உடையவள்.**

ஜீவகோடிகளனைத்தும் அம்பிகையின் விசுவரூபத்தில் அடங்கப் பெற்றிருக்கின்றன என்னும் கோட்பாட்டின்படி எத்தனை எத்தனை ஜீவர்கள் எத்தனை எத்தனை கண்களைக்கொண்டு பார்க்கின்றனவோ அக்கண்கள் யாவும் அம்பிகைக்குச் சொந்தம் எனப் பொருள்படுத்துவது முறை.

**सहस्रपाद् — ஸஹஸ்ரபாத்** २८४

**எண்ணிக்கையிலடங்காத பாதங்களை உடையவள்.**

அம்பிகையினுடைய நடமாட்டத்துக்குப் புறம்பாகச் செயல் ஒன்றுமில்லை என்னும் உண்மையை இந்நாமம் விளக்குகிறது.

**आब्रह्म-कीट-जननी — ஆப்ரம்ம-கீட-ஜனனீ** २८५

சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மதேவன் முதல் புழு ஈறாக ஜீவகோடிகளனைத்தையும் தோற்றுவித்தவள்.

புழுவினும் நுண்ணிய உயிர்வகைகள் இயற்கையில் உள. நுண்ணியதிலும் நுண்ணியதாயிருப்பதும் ஜீவ வியக்தியின் ஆரம்பதசையிலிருப்பதும் அணு உயிர் ஆகிறது. உயிர்த்தோற்றத்துக்கு அனுகூலமான சூழ்நிலையை அமைத்து வைத்துவிட்டால் அதில் உயிர் உருவெடுத்துவிடுகிறது. அகிலாண்டமெங்கும் வியாபித்து அனந்தங்கோடி ஜீவர்களாயிருப்பவன் பிரம்மா. இயற்கை முழுதும் பிரம்மதேவனுடைய சொரூபம். பரிணமித்து மேல் நிலைக்கு வந்துள்ள ஜீவர்களுள் உயர்ந்த நிலையில் இருப்பவன் பிரம்மா. இத்தகைய பிரம்மதேவன் முதற்கொண்டு புழு அல்லது அணு உயிர் ஈருக உயிர்வகைகள் அனைத்தையும் தோற்றுவித்துக்கொண்டிருப்பவள் அன்னை பராசக்தி.

**वर्णाश्रम-विधायिनी** — வர்ணாச்ரம விதாயினீ ௨௮௬

வர்ணம், ஆச்ரமம் ஆகிய இரண்டையும் ஏற்படுத்தியவள்.

**निजाज्ञारूप निगमा** — நிஜாக்ஞாரூப நிகமா ௨௮௭

வேத வடிவத்தில் இலங்குபவள்.

உயிர்களைப் படிப்படியாகப் பரிணமித்து மேல்நிலைக்கு வரச் செய்வது அன்னை பரர்சக்தியின் பெருந்திட்டமாகும். ஜீவர்கள் இன்னதைச் செய்யவேண்டும்; இன்னதைச் செய்யலாகாது என்னும் நியதிகள் வேத சாஸ்திரங்களில் அமைந்துள்ளன. அந்த அமைப்பு அம்பிகையின் ஆக்ஞை எனப் பேர்ற்றப்படுகிறது. வேதங்கள் சொல்லுகிறபடி ஒழுகுகிறவர்கள் அம்பிகையைப் பின்பற்றுபவர்கள் ஆகின்றனர். எதைச் செய்தால் மனிதன் மனம், மொழி, மெய் ஆகிய திரிகரணங்களில் மேன்மையுறுகிருனே அது அம்பிகையின் ஆக்ஞை. மனிதன் தான் வாழ்கின்ற வாழ்க்கையை முறையாக ஆராய்ச்சி செய்து பார்த்தால் அது அம்பிகையின் ஆணைக்கு உட்பட்டதா அல்லது முரண்பட்டதா என்பதைத் தானே கண்டறிந்துகொள்ளலாம்.

**पुण्यापुण्य-फलप्रदा** — புண்ய அபுண்ய பலப்ரதா ௨௮௮

புண்ணியம், பாபம் ஆகியவைகளினுடைய பலனைக் கொடுப்பவள்.

செய்கின்ற வினைக்கேற்ற வினைப்பயனை வழுவாது அம்பிகை வகுத்து அருள்கிறாள். அம்பிகை வழங்குகின்ற கொடையினின்றே எது புண்ணியம், எது பாபம் என நாம் பாகுபடுத்திக்கொள்ளலாம். இராவணனும் அவனைச் சார்ந்தவர்களும் பாபச் செயல் புரிந்ததன் விளைவாக அழிந்துபோயினர். பீஷ்மரும், துரோணரும், கர்ணனும் கேட்டிற்குத் துணைபுரிந்தார்களெனினும் கேட்டை வளர்ப்பது அவர்களின் குறிக்கோளன்று, கேட்டில் அவர்கள் பற்று வைக்காததால் உய்வடைந்தனர். நிஷ்காமிய கருமம் புரிகிறவர்களைப் பாபமோ, புண்ணியமோ சாரமாட்டா. அம்பிகை கர்மத்துக்கேற்ற பலனை நல்குவதற்கிடையில் கர்மபலனில் பற்று வைக்காதவர்களைத் தன்மயமாக்குகிறாள்.

**श्रुतिसीमन्त–सिन्दूरीकृतपादाब्जधूलिका ২৮৯**

**சுருதிஸீமந்த ஸிந்தூரீக்ருத பாதாப்ஜதூலிகா**

சுருதிகள் என்று சொல்லப்படுகின்ற பெண்பாலர்களுடைய கூந்தலின் வகிட்டில் அமைக்கப்பெற்றிருக்கும் சிந்தூரமானது அம்பிகையினுடைய பாதகமலங்களின் தூளிகைகளாம்.

கருமை நிறம் படைத்த தமோகுணம், சிவப்பு நிறம் படைத்த ரஜோகுணம், வெண்ணிறம் படைத்த சத்துவகுணம் ஆகியவற்றுள் தமோகுணம் ஜடமயமானது. இரஜோகுணத்தில் இயக்கங்களனைத்தும் அடங்கியிருக்கின்றன. சத்வகுணத்தில் உயிர்த் தத்துவம் இடம் பெறுகிறது. ஒரு குணம் மற்றொரு குணமாக மாறியமைவதால் இயற்கையின் செயல் வடிவெடுத்து வருகிறது. கருமை நிறத்தோடு சேர்ந்தது பச்சை நிறம். இயற்கையில் உயிர்த் தத்துவம் பச்சைப் புல்லாக வடிவெடுக்கிறது. அதைப் பசு மேய்ந்து ஜீரணம் செய்து இரத்தமாக மாற்றுகிறது. சிவப்பு நிறமான இரத்தத்திலிருந்து வெண்ணிறமான பால் உண்டாகிறது.

முற்றிலும் சத்துவகுணமயமாயிருப்பவன் பிராம்மணன். சத்வ குணத்தில் சிறிது ரஜஸ் கலந்திருப்பவன் க்ஷத்திரியன். ரஜோ குணத்தில் சிறிது தமஸ் கலந்திருப்பவன் வைசியன். முற்றிலும் தமோகுணமயமாயிருப்பவன் சூத்திரன். குணபேதத்தை முன்

விட்டு இயற்கையில் இந்த நான்கு வருணங்கள் அமைந்துள்ளன. சேதனம் அசேதனம், ஸ்தாவரம் ஜங்கமம் ஆகிய அனைத்திடத்தும் குணபேதத்தையும் அதினின்று வடிவெடுக்கிற வருண பேதத்தையும் காணலாம். மக்களுடைய மன அமைப்பில் நான்கு நிறங்கள் இருக்கின்றன. ஒரு ஜீவன் செய்கின்ற கருமத்தினின்று அவன் எந்த வருணத்தான் என்று பாகுபடுத்தலாம். அம்பிகையினல் சிருஷ்டிக்கப்பட்ட சராசரங்களனைத்தும் வருணபேதத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன.

பிரம்மச்சரிய ஆச்ரமம், கிருஹஸ்த ஆச்ரமம், வானப்பிரஸ்த ஆச்ரமம், சந்நியாச ஆச்ரமம் என ஆச்ரமங்கள் நான்கு இருக்கின்றன. ஜீவர்களின் வாழ்க்கை மானுட நிலையை எட்டிய பிறகு சந்நியாச ஆச்ரமத்தில் பூர்த்தியாகிறது. பண்பட்ட சந்நியாசி பரத்தில் இரண்டறக் கலக்கத் தகுதியுடையவன் ஆகின்ருன். அம்பிகை அமைத்துள்ள இப்பிரபஞ்சத் திட்டம் இங்ஙனம் வருண ஆச்ரமப் பாகுபாடாக யாண்டும் பொலிந்து கொண்டிருக்கிறது. வருணச்ரமப் பாகுபாடு அம்பிகையின் சிருஷ்டியாகிய அகிலாண்டங்களுக்கும் பொதுவானது.

பரதேவதையாகிய அம்பிகை யாருடைய கருவி கரணங்களுக்கும் எட்டாதவள். அப்படியிருந்தும் அவளை வர்ணிக்க வேதங்கள் முயலுகின்றன. வேதங்களாகிய பெண்பாலர்கள் அம்பிகையின் திருவடிகளில் தங்களுடைய சிரசை நாட்டி வணங்கிய பொழுது அம்பாளுடைய பாதங்களில் பூசப்பெற்றிருந்த செஞ்சாந்தானது அவளை வணங்கிய மாதர்களின் கூந்தலுக்கு இடையிலிருந்த வகிட்டில் படியலாயிற்று. வேதங்களுக்கு எட்டாத பரவஸ்துவின் மகிமை ஒரு சிறிதளவு வேதங்களுக்கு எட்டியதாகவும் எட்டாததாகவும் இருக்கிறது என்பது இதன் பொருள்.

**सकलागम संदोह शुक्ति संपुटमौक्तिका** २९०

ஸகலாகம ஸந்தோஹ சுக்தி ஸம்புடமௌக்திகா 290

வேதங்களின் தொகையாகிய முத்துச்சிப்பி எனும் சிமிழுக்குள் வைக்கப்பட்டிருக்கும் முத்தை ஆபரணமாக உடையவள்.

வேதங்களை ஆராய்ந்து பார்க்குமிடத்து அவை அம்பிகை அணிந்திருக்கும் ஆபரணத்தை விளக்குகின்றன. வேதங்கள் முக்குணமயமான இயற்கையை விளக்குகின்றன. இயற்கைக்கு ஆதாரமாயிருக்கும் பரவஸ்துவை விளக்குவதற்கு வேதங்களுக்கு இயலாது. அனுபூதியில் அடையப்பெறுவதை நூலறிவால் அறிந்துகொள்ள முடியாது. அம்பிகையின் ஆபரணத்தை விளக்குவது அம்பிகைக்கு விளக்கமாகாது. பரத்தை நாடுதற்கு வேதங்கள் தூண்டுதல் போடுகின்றன. சரீரம், சரீரி ஆகிய இரண்டையும் சரியாக அறிந்துகொள்ளுதலே நிறைஞானமாகும். அதற்கொப்ப வேதங்கள் என்ன பாங்கில் அம்பிகையை எட்ட இருந்து சுட்டிக்காட்டி வருகின்றன என்பதை ஆத்மசாதகன் அறிந்துகொள்ளவேண்டும். வேதங்களின் பிரயோஜனம் ஏகதேசமேயொழிய பரநாட்டமுடையவர்களுக்கு அது முற்றிலும் பயன்படாது. முத்துப்போன்ற ஆபரணங்களின் சோபை அம்பிகையின் ஆத்மப் பிரபையை ஓங்குவிக்கின்றது.

**पुरुषार्थप्रदा** — புருஷார்த்தப்ரதா २९१

புருஷார்த்தங்களைக் கொடுப்பவள்.

நான்கு புருஷார்த்தங்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்பனவாம். மனிதன் உலகில் அறநெறி பிறழாது வாழவேண்டும். தான் மேன்மையடைவதும் கீழ்மையடைவதும் தனக்குத் தானே ஒருவனுக்கு விளங்குகிறது. மேன்மையுறுவதற்கு உற்ற உபாயம் தர்மம். அறநெறிக்குட்பட்டு முறையாகப் பணம் சம்பாதிக்க மனிதன் கடமைப்பட்டிருக்கிறான். அப்படி முயற்சிபண்ணுகிறவர்களுக்குத் தேவையான செல்வம் வாய்க்கிறது. இன்பத்தை என்ன முறையில் அனுபவிப்பது என்னும் நியதி மனிதனுக்கு உண்டு. நியதியை மீறி நடப்பதற்கேற்ப மனிதன் துன்பத்திற்காளாகிறான். தர்மத்துக்கு ஒத்துள்ள முறையில் இன்பத்தை அனுபவிக்க அன்னை பராசக்தி அனுமதி தருகிறாள். மோக்ஷம் என்பது சம்சாரசாகரத்தினின்று விடுதலை. பல பிறவிகளில் வையக இன்பங்களை அனுபவித்தான பிறகு சில ஜீவர்களுக்கு வைராக்யம் உண்டாகிறது. ஞானத்தில் பக்குவமடைந்த ஜீவாத்மாக்கள் தன் திருவடியை அடைவதற்கு அம்பிகை அனுக்ரஹம்

செய்கின்றாள். ஆக, மக்களுடைய நலன்களுக்காகவென்று அன்னை பராசக்தி புருஷார்த்தங்கள் நான்கையும் வழங்கி வருகின்றாள்.

**पूर्णा — பூர்ணா** २९२

நிறைநிலையிலிருப்பவள்.

கால, தேச, நிமித்தத்தில் கட்டுப்பட்டுள்ள பிரகிருதி சொரூபமாயிருக்கிற பராசக்தி அதே வேளையில் நிறைநிலை பிசகாத பூரணமாக இருப்பதுதான் அவளுடைய மஹிமை. இயற்கைத் தாயை ஆராய்ந்து பார்க்கப் பார்க்க அவளுடைய பூரணம் புலப்படுகிறது. அகிலாண்டமெங்கும் உள்ள நிகழ்ச்சிகள் கால அளவையில் கட்டுப்பட்டிருக்கின்றன. காலம் என்னும் நிறைவை நன்கு பயன்படுத்துகிற ஆத்ம சாதகன் தன் வாழ்வில் நிறைவு காண்பதன் மூலமாகப் பூரணவைப் போற்றுகிறான். அண்டத்தில் அமைந்துள்ள நிறைநிலை ஓர் அணுவிலும் இருக்கிறது. அண்டமெங்கும் உள்ள பொருள்களனைத்திலும் இந்தப் பூரணம் நிலை பெற்றிருக்கிறது. செயல்களனைத்தும் காரண காரியமாக அமைந்துள்ளன. அன்னை பராசக்தி யாண்டும் பூரணவாக இருக்கிறாள் என்பதற்கு இயற்கை முழுதிலுமுள்ள அவளுடைய செயல்களே சான்றுகளாகின்றன. மனிதனுடைய மனது அம்பிகையினுடைய எண்ணத்தில் முற்றும் நிறைந்திருந்தால் அது நிறைமனதாகிறது பூரண நிலையை எட்டிய மனிதனே பூரணவாயிருக்கிற அம்பிகையை நன்கு போற்றுகிறான்.

**भोगिनी — போகினீ** २९३

போக மயமாக இருப்பவள்.

பஞ்சேந்திரியங்களின் உதவியைக்கொண்டு அனுபவிக்கின்ற இன்பத்துக்குப் போகம் என்று பெயர். எல்லாப் படித்தரங்களிலும் உள்ள எல்லா உயிர்களுக்கும் இன்பம் நல்கும் பாங்கு உலகில் அமைந்திருக்கிறது. அப்படி இன்பம் நல்குகின்ற பாங்கே அம்பிகையின் மஹிமையாகும். உயிர்கள் அனைத்துமே ஐம்பொறிகள் வாயிலாகப் போகத்தை நாடிநிற்கின்றன. ஆயினும் போகம் இன்பமாகத் துவங்கித் துன்பமாக முடிவுறுகிறது. போகத்தில்

பற்று வைத்திருக்குமளவு பிறவிப் பிணியை ஜீவாத்மன் பெருக்கிக் கொண்டே போகிறான்: மற்று, ஆத்ம சாதனம் புரிய விரும்பு கின்றவன் போகினிமயமாய் இருக்கின்ற அம்பிகையை யோகினி யாகக் கருதவேண்டும். ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் கையாண்ட முறை அதுவாம்.

## भुवनेश्वरी — புவனேச்வரீ २९४

புவனத்துக்குத் தலைவியாயிருப்பவள்.

பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம் ஆக மூன்று உலகங் கள் புறத்தில் உள. ஜாக்ரதம், சொப்பனம், சுஷுப்தி ஆகிய மூன்று அவஸ்தைகளும் ஜீவர்களிடத்துள்ள மூன்று புவனங் களாம். அம்பிகை தோன்றாத் தெய்வமாக அவைகளுள் ஊடுருவி இருந்து ஆட்சிபுரிந்து வருகிறாள். சான்று ஒன்றின் மூலம் இதை விளக்கலாம். வழிப்போக்கன் ஒருவன் பாதையை ஒட்டியிருக்கும் வீடு ஒன்றினுள் பிரவேசிக்கிறான். அங்கு மக்கள் யாரையும் அவன் காண்கிறானில்லை. ஆயினும் அடுப்பில் தீ எரிந்துகொண் டிருக்கிறது. சமையல் ஆய்க்கொண்டிருக்கிறது. பூஜையறை யில் தீபம் எரிகிறது. தெய்வத்தின் படம் ஒன்றுக்கு மாலை சூட்டப்பட்டிருக்கிறது. இதைப் பார்த்து இவ்வீட்டில் யாரோ குடியிருக்கிறார்கள் என்று அவன் யூகிக்கிறான். அதேபாங்கில் புவனங்களின் நடைமுறையில் ஓர் ஒழுங்குப்பாடு இருக்கிறது. வினைக்கேற்ற வினைப்பயன் என்னும் நியதி பிசகுவதில்லை. அம்பிகை அந்தர்யாமியாய்ப் புவனமெங்கும் இருந்துகொண்டு அந்த முறையாக இயக்கி வருகிறாள்.

## अम्बिका — அம்பிகா २९५

தாயாராக இருப்பவள்.

ஆதரவோடு உயிர்வகைகளை ஈன்றெடுத்து அவைகளை அம்பிகை அன்புடன் பேணி வருகிறாள். எல்லாப் படித்தரங்களி லும் உள்ள உயிர்கள் அனைத்துக்கும் அவளே தாயாய் இருந்து அந்தந்த உயிருக்கேற்ற முறையில் அவள் வளர்த்து வருகிறாள். அம்பிகையின் தாய்மையை ஆத்மசாதகன் தெளிவுற உணர்கிறான். அதற்கு ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் சிறந்த எடுத்துக்காட்டா

கிருர். யாண்டும் அவர் அம்பிகையைச் சார்ந்திருந்தார். அம்பிகையிணல் அவர் பேணப்பட்டவரானர். அவருக்கு ஞானப்பால் ஊட்டிப் பாரமார்த்திகப் பெருமகனுக அவரை வளர்த்து வந்தாள் அம்பிகை. ஆக, எல்லா ஜீவராசிகளுக்கும் அன்னையான பராசக்தி அவை யாவற்றையும் பேரன்புடன் பேணி வளர்த்து வருகிருள். எனவே அவள் அம்பிகை என்னும் நல்லிணக்கத்துக்கு ஏற்ற சொல்லைக்கொண்டு விளக்கப் பெறுகிருள்.

**अनादिनिधना — அநாதி நிதனு** ௨௯௬

**ஆதியும் அந்தமும் இல்லாதவள்.**

ஒரு ஜீவன் தன் வினையை நன்கு நிறைவேற்றுவதற்கு எடுத்துக் கொள்கிற புதிய வடிவம் ஜனனமாகிறது. முன்பு பெற்றிருந்த பழைய வடிவத்தைக் களைவது மரணம். இப்படி உயிர்கள் யாவற்றையும் ஜனன மரணத்தின் வாயிலாக உயர் நிலைக்குக்கொண்டு வந்துகொண்டிருக்கின்ற அம்பிகையோ ஜனன மரணமற்றவளாக இருக்கிருள். அவள் நித்திய வஸ்து. ஆதலால் அநாதி நிதனு என்று அவள் அழைக்கப்படுகிருள்.

**हरिब्रह्मेन्द्रसेविता — ஹரிப்ரஹ்மேந்த்ர ஸேவிதா** ௨௯௭

**ஹரி, பிரம்மன், இந்திரன் ஆகிய தேவர்களால் சேவிக்கப்படுபவள்.**

ஹரி, பிரம்மா, இந்திரன் முதலியோர் தாம்தாம் பெற்றுள்ள மகிமைகளையெல்லாம் அம்பிகையினிடத்திருந்தே பெற்றுள்ளார்கள் என்பது கோட்பாடு. இது சிவனுக்கும் பொருந்துகிறது. வெவ்வேறு மூர்த்திகளாக இருக்கிற எல்லாரும் அவரவர்க்குரிய மகிமை வாய்ந்த சக்திகளை ஆதிசக்தியினிடத்திருந்தே பெற்றுள்ளார்கள். அத்தெய்வங்களுக்கெல்லாம் சைதன்யத்தை ஊட்டுபவள் அன்னை பராசக்தியே ஆவாள்.

**नारायणी — நாராயணீ** ௨௯௮

**சிவனுகவும் விஷ்ணுவாகவும் இலங்கும் பரவஸ்துவே நாராயணீ என்னும் பராசக்தியாகவும் இலங்குகிறது.**

தமையனுகிய நாராயணனும் தங்கையாகிய அம்பிகையும் சொருபத்தில் ஒன்ருயிருப்பதால் அம்பிகை நாராயணீ என்னும் பெயரைப் பெறுகிருள்.

நாராயணன் என்னும் சொல் தன்னிடத்திருந்து உண்டான பஞ்சபூதங்கள் மயமான பிரகிருதியில் ஊடுருவி இருப்பவன் என்றும் பொருள்படுகிறது. சிலந்திப் பூச்சி தன்னிடத்திருந்தே நூலை உண்டுபண்ணி அதில் வலை கட்டுகிறது. அந்த வலையின் மீது அது வசித்திருக்கிறது. அங்ஙனம் பரவஸ்து தன்னிடத்தி ருந்தே தோற்றத்துக்கு வந்துள்ள பிரகிருதியின்கண் எழுந்தருளி யுள்ளது. இக்கோட்பாடு சக்திக்கும் உண்மையாம். ஆதலால் அவள் நாராயணீ என்னும் பெயரைப் பெற்றுள்ளாள்.

**नादरूपा — நாதரூபா** २९९

**ஓசை வடிவினள்.**

பரவஸ்துவுக்கு நாத பிரம்மம் என்னும் பெயர் வந்துள்ளது. நாதமே பிரபஞ்சத்துக்கு வித்தாகிறது. நாத வடிவத்திலுள்ள அம்பிகையைச் சேவித்தால் அவள் அனைத்துமாய் வடிவெடுத் திருப்பதை அறிந்துகொள்ள நமக்கு இயலும்.

'சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரு மாவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே!'

அங்ஙனம் நாமத்தை உறுதியாக ஓதி வரவர அதன் சொரூபம் உள்ளபடி உள்ளத்தில் ஒளிர்கிறது. சாதனங்களுள் இது மிகச் சுலபமானது.

நாம் உண்டுபண்ணக்கூடிய நாதத்தை முறையாகத் தோற்று வித்தால் அது சிறந்த வழிபாடாகிறது. நாதாதீதம் ஜீவாத்மா வினால் கிரஹிக்கப்படாதது. நாதரூபமோ செவி என்னும் இந் திரியத்தின் வாயிலாகக் கிரஹிக்கப்படுகிறது. ஓசையும் மெய்ப் பொருளும் ஒன்றேயாம்.

**नामरूप विवर्जिता — நாமரூப விவர்ஜிதா** ३००

**நாமத்துக்கும் ரூபத்துக்கும் அப்பாற்பட்டவள்.**

பிரபஞ்சம் முழுதும் நாதமும் அதன் ஸ்தூலத் தோற்றமுமாம். எது ஸ்தூலமாகப் பரிணமிக்கிறதோ அதற்கு நாமம் உண்டு.

பொருள்களைப் பதார்த்தம் என்கிறோம். பதமும் அதனுடைய அர்த்தமும் என்பது இதன் வியாக்கியானம். ஆன்றோர்கள் பொருள்களுக்குப் பெயர் தருகின்றபொழுது அவற்றில் உண்டாகிற ஓசையை முதலில் அறிந்தார்கள். அது பதமாகிறது; அதற்கேற்ற பெயரையும் அவர்கள் கொடுத்தார்கள்; அதன் அர்த்தம் பொருளாகின்றது. இங்ஙனம் அமைந்த பெயர்களே பொருத்தமான பெயர்களாம்.

கடல் என்னும் வஸ்து அலைகளின் தொகையாகவும் அலைகளுக்கு அப்பாற்பட்டதாகவும் இருக்கிறது. நாமரூப விவர்ஜிதாவாக இருப்பது அகண்ட வஸ்து. நாமரூப மயமாயிருப்பது கால, தேச, வர்த்தமானத்தில் கட்டுப்பட்டது. நாம ரூபத்தில் கட்டுப்படாதிருப்பதே அம்பிகையின் நிஜசொரூபமாம்.

**ह्रींकारी — ஹ்ரீங்காரீ** ३०१

ஹ்ரீம் என்னும் பீஜமந்த்ர வடிவினள்.

நாதங்களனைத்தும் அம்பிகையின் வடிவங்கள் எனினும் பீஜமந்த்ரமாக அமைந்துள்ள நாதத்துக்குத் தனி மகிமை உண்டு. அதை உச்சரிக்கும் ஜீவாத்மாவை உயர்நிலைக்கு உயர்த்தும் திறமை அந்தப் பீஜமந்த்ரத்துக்கு அல்லது ஓசைக்கு உண்டு. ஹ்ரீ என்னும் பதம் நாணம் அல்லது வெட்கத்தைக் குறிக்கிறது. நாணம் கொள்ளவேண்டிய இடத்தில் அதைக் கொள்ளுங்கால் அது சிறந்த வழிபாடாகிறது. தன்னிடத்துள்ள சிறப்புக்களை எடுத்துரைக்க மறுப்பவன் ஹ்ரி என்னும் தெய்விகம் வாய்க்கப் பெற்றவனாகிறான். 'ஹ்ரியா தேயம்' என்பது உபநிஷத் வாக்கியம். கொடையாளியாயிரு; அக்கொடையை நாணத்தோடு நிறைவேற்று; பகட்டுடன் அதைச் செய்யாதே. அடக்க ஒடுக்கத்துடன் செய்யும் கொடையில் தெய்விகம் திகழ்கிறது. ஒரு பெண் தன்னை விளம்பரப் படுத்திக்கொள்ளுமளவு அவளுடைய மகிமை மங்குகிறது. அன்னை பராசக்தி அகிலாண்டங்களையும் தோற்றுவிப்பதற்கிடையில் தன் நிஜ சொரூபத்தை வெளிக்காட்டாத லஜ்ஜை வடிவினளாக இருக்கிறாள்.

**ह्रीमती — ஹ்ரீமதீ** ३०२

லஜ்ஜையே வடிவெடுத்தவள்.

நல்லுயிர்களிடத்துத் தன்னுடைய பேரியல்பாகிய ஹ்ரீயை வழங்குகின்றவளாகிய அம்பிகை தானே ஹ்ரீ வடிவினள் இருக்கிறாள். ஒரு குடும்பத்துக்குத் தலைவியாய் இருப்பவள் எல்லார் காட்சிக்கும் எட்டுபவளல்லள். அங்ஙனம் உபாசகர்கள் அல்லாதவர்களின் காட்சிக்கு எட்ட அம்பிகை லஜ்ஜை கொள்கிறாள். ஆயினும் தன் உபாசகர்களுக்கு அவள் எளியவளாகிறாள்.

**हृद्या — ஹ்ருத்யா** ३०३

ஹிருதயத்தின்கண் வீற்றிருப்பவள்.

ஆத்ம சாதகர்கள் எல்லாருடைய உள்ளத்திலும் அன்னை பராசக்தியின் சான்னித்தியம் உணரப்படுகிறது. முகம் பார்க்கும் கண்ணாடி ஒன்றைத் தூயதாகத் திருத்தியமைப்பதற்கேற்ப எங்கும் படிகிற சூரிய வெளிச்சம் தெளிவுற அதில் ஒளிர்கிறது. அங்ஙனம் ஹிருதய கமலம் சுத்தியடைவதற்கேற்ப அன்னையின் சான்னித்தியமும் தெளிவுடையதாகிறது. ஹிருதயம் முற்றிலும் தூயதாகத் திருந்தியமையுங்கால் அன்னை பராசக்தியின் சான்னித்தியமும் சிறப்புற்று ஆங்கு ஒளிர்கிறது.

**हेयोपादेयवर्जिता — ஹேயோபாதேய வர்ஜிதா** ३०४

புறக்கணிக்கப்படுவது, ஏற்புடையதாவது ஆகிய இரண்டு நிலைகளிலும் கட்டுப்படாதவள்.

தன் உடலமைப்பிலே சதா வளர்ச்சியடைந்து வருகிற ஜீவாத்மன் உடலில் பழுதுபட்டுப் போன பகுதியைக் கணந்தோறும் ஒதுக்கித் தள்ளிக்கொண்டிருக்கிறான். உணவின் மூலமாக உடலில் புதிய அமைப்பை அவன் உண்டுபண்ணிக் கொண்டே இருக்கிறான். ஆயினும் அவனுடைய ஆத்ம சொரூபம் யாண்டும் இருந்தபடி இருந்துவருகிறது. அந்த ஆத்ம சொரூபமே அம்பிகையின் நிஜ சொரூபமாம். நிஜ சொரூபத்தில் ஏற்றுக் கொள்ளப்படுகிற பகுதியோ ஒதுக்கித் தள்ளப்படுகிற பகுதியோ கிடையாது. அன்னை பராசக்தி யாண்டும் தன்மயமாக இருந்து வருகிறாள்.

**राजराजार्चिता — ராஜராஜ அர்சிதா** ३०५

அரசர்களுக்கெல்லாம் அரசனாய் இருப்பவனால் ஆராதிக்கப்படுகிறவள்.

ஜீவர்களனைவருக்கும் சிவனுர் ராஜன். சிவனுருக்கு ஒப்போ உயர்வோ கிடையாது. அத்தகைய பெரிய வஸ்து தன் சக்தியின் வல்லமையால் அகிலாண்டத்தையும் முறையாக ஆண்டு வருகிறது. அன்னை பராசக்தியின் மஹிமையை உள்ளபடி அறிகிற சிவனுர் அச்சக்தியைத் தம்மில் செம்பாதியாக வைத்துப் பேணி வருகிருர். சக்தியின் பயனை அறிந்தவனே சக்தியை விரயம் பண்ணுது தன்னகத்துக் காத்து வைக்கிருன். எனவே, சிவனுர்தான் சக்தியைச் சரியாக உபாசிப்பவர் ஆகிருர்.

**राज्ञी — ராக்ஞீ** ३०६

ராணியாக இருப்பவள்.

ஆளும் திறமை வாய்க்கப்பெற்றவளை ராணி என்று இயம்புகிருேம். இயற்கையின் நடைமுறையை ஆராய்ந்து பார்த்தால் அதன் ஒழுங்குப்பாடான இயக்கமே அது ஒரு நல்ல ஆட்சிக்கு உட்பட்டிருக்கிறது என்பதை வெளிப்படுத்துகிறது. அது அம்பிகையினுடைய ஆட்சியாகும். அகிலாண்டம் அனைத்தையும் ஆண்டு வருவது பரதேவதையாகிய அன்னை பராசக்தி ஆவாள்.

**रम्या — ரம்யா** ३०७

சந்துஷ்டியை உண்டுபண்ணுப்பவள்.

எது பிரீதிகரமானதோ அது மன மகிழ்ச்சியை உண்டு பண்ணுகிறது. இயற்கையில் நிகழ்கின்ற செயல்களெல்லாம் ரம்யமானவைகளாம். கோரச் செயல்கள் சிலவற்றின் வாயிலாகக் கொடிய உயிர்கள் திருந்தியமைவதால் பராக்கிரமத்தோடு கூடிய அவைகளும் ரம்யமானவைகளாம். அம்பிகையின் மகிமையே ரம்யம் நிறைந்த சேதன அசேதனப் பொருள்களாக மிளிர்ந்து கொண்டிருக்கிறது. அன்னை பராசக்திதான் இத்தகைய ரம்யமான பொருளாகவும், உயிராகவும், செயலாகவும் இலங்கிக் கொண்டிருக்கிருள் என்னும் எண்ணம் அம்பிகையின் வழிபாடு ஆகிறது.

**राजीव-लोचना — ராஜீவலோசனு** ३०८

ராஜீவத்தைப் போன்ற கண்களை உடையவள்.

ராஜீவம் என்னும் பதம் மான் என்றும் மீன் என்றும் தாமரை என்றும் பொருள்படுகிறது. பார்க்கப் பார்க்க மானின் பார்வை பிரீதிகரமாயிருக்கும். அம்பிகையின் பார்வை உயிர்களுக்குப் பரமானந்தத்தை ஊட்டுகிறது. மீன் கண் இமைப்பதில்லை; அதன் பார்வையில் இனிமை ததும்புகிறது. அம்பிகையின் இடையறுத பார்வையால் உலகம் ஓம்பப்படுகிறது. நீண்டும் அகன்றும் இருக்கின்ற கண்ணைத் தாமரைக் கண் என்கிறோம்; அதில் கம்பீரம் திகழ்கிறது. அன்னை பராசக்தியின் இம்மூன்று விதமான பாங்குகளை உடைய கண்கள் அவளுடைய பொலிவுக்கு முகாமையாகின்றன.

**रञ्जनी — ரஞ்ஜனீ** ३०९

மகிழ்வூட்டுபவள்.

அம்பிகையினுடைய சான்னித்தியத்தை உணரும் பொழுதெல்லாம் பக்தர்கள் பேரானந்தமடைகின்றனர். செம்மேனி படைத்த அம்பிகை நிறமொன்றும் இல்லாத ஸ்படிகத்துக்கு ஒப்பாக இருக்கும் சிவனுருக்கு அருகில் வீற்றிருந்து அவரைச் செம்பொருளாகத் தென்படுபவர்போன்று செய்து வைக்கிறுள். செம்பொருள் என்னும் பதம் குற்றமற்றது எனவும் செம்மை நிறம் தீட்டப்பட்டது எனவும் பொருள்படுகிறது. அருகிலுள்ள அம்பிகையின் சன்னிதான விசேஷத்தால் சிவனர் செம்பொருளாகக் காட்சி கொடுத்துக்கொண்டிருக்கிறுர். நிராகாரமாய் இருக்கிற சிவனர் அம்பிகையின் சான்னித்தியத்தால் சாகாரமாக இலங்குகின்றுர்.

**रमणी — ரமணீ** ३१०

விளையாடுபவள்.

உணவு உண்பதற்கு நிகராக விளையாட்டில் ஈடுபடுவதற்கு ஏற்றவாறே உயிர்களுக்குத் திண்ணிய வளர்ச்சி உண்டாகிறது. அன்னை பராசக்தி ஜீவகோடிகளுக்கிடையில் ஆங்காங்குத் தாயாயிருந்து உயிர்களுக்கு விளையாட்டில் மகிழ்வூட்டி அவை யாவற்றையும் பேணி வருகிறுள். பக்தர்களுக்கும் பரம்பொருளுக்குமிடையிலுள்ள யோகம், வியோகம் ஆகியவைகளின் வாயிலாக உண்டாகும் தொடர்வு திருவிளையாடல் எனப்படுகிறது. அத்

தகைய விளையாட்டின் வாயிலாகப் பக்தன் பரதேவதையோடு நெருங்கி இணக்கம் பூணுகிறான்; அவனுடைய பக்தி மேலும் மேலும் வளர்க்கப்படுகிறது.

**रस्या — ரஸ்யா** ३११

சுவையைத் தருபவள்.

சுவையானது பஞ்சேந்திரியங்கள் வாயிலாக ரசிக்கப்படுகிறது. சுவை நிறைந்த உணவு விருப்பத்தோடு ஏற்றுக்கொள்ளப்படுகிறது. காண்பதற்கு இனியதாயிருப்பது கண்ணுக்குச் சுவை தருகிறது. தொட்டு உணர்தலில் பிரீதியை உண்டுபண்ணுவது ஸ்பர்ஸரஸம் நிறைந்ததாகிறது. காதுக்குக் கவர்ச்சிகரமாயிருப்பது சொற்சுவை என்றும் இன்னிசையென்றும் சுரோத்ரானந்தம் என்றும் பெயர் பெறுகிறது. நறுமணம் கவர்ச்சிகரமானது. ஆதலால் அதனிடத்தும் ரஸம் நிறைந்திருக்கிறது.

இனி, உயிர்வகைகளின் ஜீவிதம் ரஸம் நிறைந்ததாகிறது. உயிர்களனைத்தும் தத்தம் வாழ்வை ரசிக்கின்றன. அதன் மூலம் அவை அறிந்தோ அறியாமலோ அம்பிகை வழிபாடு செய்துவருகின்றன. தத்துவத்தை அறிந்து ஜீவிதத்தை ரசிக்கின்றவர்கள் வாழ்க்கையைப் பாரமார்த்திகப் பெருவாழ்வாகத் திருத்தியமைக்கின்றனர். வஸ்துக்கள் அனைத்திடத்தும் அமைந்துள்ள ரஸமே பரப்பிரம்மமாம். இக்கோட்பாட்டின்படி உயிர்களனைத்தும் பரப்பிரம்ம சொருபமாகவும் பிரம்மத்தை அறிகிறவைகளாகவும் இருக்கின்றன. பிரபஞ்சமாகக் கீழ்நிலைக்கு இறங்கிவந்தாலும் பரப்பிரம்மத்தினுடைய ரஸம் கெட்டுப்போவதில்லை. எது உயிரை வளர்த்துத் திருப்தியை உண்டுபண்ணுகிறதோ அது ரஸம். சராசரமனைத்திலும் அன்னை பராசக்தி ரஸமாக ஊடுருவிப் பாய்ந்திருந்து ரஸிக்கும் தன்மையை உயிர்களனைத்துக்கும் ஊட்டி வருகிறாள்.

**रणत्किङ्किणि मेखला—ரணத்கிங்கிணி மேகலா** ३१२

ஒலிக்கின்ற சதங்கைகளுடன் அமைக்கப்பெற்றுள்ள ஒட்டியாணத்தை அணிந்திருப்பவள்.

ஜடபுத்தி படைத்துள்ள மக்கள் பலர் பிறர் அணிந்திருக்கும் ஆடை ஆபரணங்களில் கருத்தைச் செலுத்துகின்றனர். அவர்

களுடைய ரஸிகம் ஜட உலகில் இருக்கிறது. அத்தகைய ஜடப் பொருள்களில் கருத்தைச் செலுத்துவது ஆரம்பதசையில் உள்ள வழிபாடாம்.

**रमा — ரமா** ३१३

இலக்ஷ்மீ வடிவினளாய் இருப்பவள்.

வெளிச்சம் இருக்குமிடத்தில் இருளுக்கு இடம் இல்லை. திருமகள் இருக்குமிடத்தில் தரித்திரத்திற்கு இடமில்லை. செல்வத்துக்கு அதிஷ்டான தெய்வமாகிய திருமகள் திருமாலின் நெஞ்சத்தில் ஒளிர்கிறாள். பக்தர்களோ திருமாலைத் தங்கள் நெஞ்சகத்தில் ஒளிரச் செய்கின்றனர். திருமாலிருக்குமிடமெல்லாம் திருமகளுக்கும் இருப்பிடமாகிறது. மனத்திருப்தியும் நிறைவும் வாய்க்கப்பெற்றவர்கள் உள்ளத்தில் இலக்ஷ்மிதேவி வசித்திருக்கிறாள். அம்பிகை கொடுத்துள்ள சம்பத்து மிகச் சொற்பமானது எனினும் அதை நிறைசெல்வமாகக் கருதி நல்வழியில் பயன்படுத்துதற்கேற்ப செல்வம் தானாக வளர்கிறது. பயன்படுகிற பாங்கில் உள்ள செல்வத்தின் வளர்ச்சியே ரமாதேவியின் சான்னித்தியமாம்.

**राकेन्दुवदना — ராகேந்துவதனா** ३१४

பூரணசந்திரன் போன்ற முகத்தை உடையவள்.

நிறைநிலாப் போன்று இனியதும் வசீகரமானதும் ஆகிய முகம் படைத்திருப்பவன் அகத்தில் நிறைமனதைப் படைத்திருக்கிறான் என்பது வெளிப்படை. நிறைநிலாப் போன்ற முகவிலாசத்தை யாரிடத்தெல்லாம் காண்கின்றோமோ ஆங்கெல்லாம் அம்பாளுடைய சான்னித்தியம் மேலோங்கியிருக்கிறது. அம்பாள் மயமாகத் தன் சொரூபத்தைத் திருத்தியமைக்கப் பக்தன் கடமைப்பட்டிருக்கிறான். அதற்கேற்றவாறு அம்பிகையின் மகிமை பூரணசந்திரன் போன்று அவன்பால் பொலிகிறது.

**रतिरूपा — ரதிரூபா** ३१५

ரதியாக வடிவெடுத்திருப்பவள்.

பாரமார்த்திகப் பெருநிலையில் ஆசையை வளர்க்கும் பரவஸ்து காமேஸ்வரன் என்றும் காமேஸ்வரி என்றும் பெயர்

பெறுகிறது. பஞ்சபூதங்களாலாகிய சரீரத்தைச் சார்ந்துள்ள ஆசையை வளர்ப்பது காமனுடைய செயல். அல்லது ரதியினுடைய செயல். மக்களில் பெரும்பான்மையோர் உடலில் கட்டுண்டவர்களாக உடலையே தங்கள் மயமாகக் கருதுகின்றனர். கீழ்நிலையில் மிக எளிதாக அமைகிற உடலைச் சார்ந்த ஆசையை மேல்நிலைக்குரிய பாரமார்த்திக ஆசையாகத் திருத்தியமைத்தருள்வாயாக என்று ரதிதேவியிடம் பிரார்த்தனை பண்ணிக்கொள்ள வேண்டும். அன்னைபராசக்தியே எண்ணிறந்த ரதிகளின் வடிவங்களில் இலங்குகின்றாள் என்னும் எண்ணத்தை வளர்ப்பதற்கேற்பக் காமம் வெல்லப்படுகிறது.

**रतिप्रिया — ரதிப்ரியா** ३१६

ரதிதேவியினிடம் அன்பு வைத்துள்ளவள்.

அனந்தங்கோடி உயிர்களாக இலங்குபவள் அன்னை பராசக்தி. ஸ்தூல நிலையில் உண்டாகிற கவர்ச்சியானது ஸ்தூல நிலையிலிருக்கிற வாழ்க்கைக்கு முற்றிலும் அவசியமானது. ஆதலால் காமத்துக்கு அடிமைப்படுகிறவர்களனைவரும் கீழான நிலையில் அம்பிகையைப் போற்றுபவர்களாகிறார்கள். அன்னையின் ஆதிக்கத்தில் காமமும் இடம் பெற்றிருக்கிறது. ஆதலால் காமத்துக்கு உட்படுகிறவர்ளெல்லாம் அம்பிகையின் திருவிளையாடல் அந்நிலையில் நிகழ்ந்து வருகிறது என்னும் எண்ணத்தை வளர்ப்பதற்கேற்பக் காமம் வெல்லப்படுகிறது.உலக மக்கள் அம்பிகைதான் காமினியாகவும் வடிவெடுத்திருக்கிறாள் என்னும் கோட்பாட்டை ஞாபகப்படுத்திக் கொள்ளுதற்கேற்ப அவர்கள் படிப்படியாகப் பக்குவமடைகின்றனர்.

**रक्षाकरी — ரக்ஷாகரீ** ३१७

காப்பாற்றுபவள்.

அழிந்துபட்டுப்போம் சூழ்நிலையில் வாழ்ந்துவரும் உயிர்கள் வெவ்வேறு விதங்களில் காப்பாற்றி வைக்கப்பட்டிருக்கின்றன. இது அம்பிகையினுடைய பெருந்திட்டமாகிறது. இயற்கையில் அமைந்துள்ள பலப்பல இடைஞ்சல்களுக்கிடையில் மனிதன் சாகாது தாக்குப்பிடித்து உயிர் வாழ்ந்திருப்பதுதான் ஆச்சரியம்

என்று நவீன மருத்துவ சாஸ்திரம் இயம்புகிறது. இவ்வுண்மை எல்லா உயிர்களுக்கும் பொதுவானதே. அம்பிகை ரக்ஷாகரீயாக இருந்துகொண்டு உயிர்களனைத்தையும் வெவ்வேறு விதங்களில் காப்பாற்றி வருகிறாள்.

**राक्षसघ्नी — ராக்ஷஸக்னீ** ३१८

ராக்ஷஸர்களைத் துடைத்துத் தள்ளுபவள்.

பெருவாரியாகத் தீங்கு செய்யும் வல்லமையோடு தோன்றும் இராக்ஷஸர்களைப் போன்ற கொடிய உயிர் வகைகள் ஏனைய உயிர்வகைகளுக்குப் பெருங்கேடு விளைவித்து வருவது வெவ்வேறு பாங்குகளில் நிகழ்கிறது. அன்னை பராசக்தி தானே அத்தகைய ராக்ஷஸர்களாக வடிவெடுத்து வருகின்றாள். வல்லமையற்ற உயிர்கள் தங்களைக் காத்தருளவேண்டும் என்று வேண்டுகின்ற பொழுது அம்பாள் மீண்டும் தானே அதற்கேற்ற உருவெடுத்து வந்து ராக்ஷஸர்களை மாய்த்துத் தள்ளுகிறாள். கொள்ளை நோய் போன்ற கொடுமைகளையும் கொடிய விபத்துக்களையும் உருவகப் படுத்தி ராக்ஷஸர்கள் என்று இயம்புவது மரபு. ஜீவராசிகளுக்கு உண்டாகும் இத்தகைய இடுக்கண்களை எல்லாம் துடைத்துத் தள்ளும் திட்பம் வாய்ந்தவளாக அன்னை பராசக்தி இலங்கு கின்றாள்.

**रामा — ராமா** ३१९

பெண்பால் மயமான யாவுமாயிருப்பவள்.

ஜீவகோடிகளுள் பெண்பால் மயமாயிருக்கின்ற அனைத்தும் போற்றப்படவேண்டும் என்பது கோட்பாடு. விலங்குகளிடத்தும் பறவைகளிடத்தும் இப்பண்பு நிறைந்துள்ளது. நாகரிகம் படைத்த ஆடவன் பெண்பாலோடு சண்டைக்குப் போகமாட் டான். ஓரிடத்தில் ஆபத்து நேர்ந்துவிட்டால் பெண்பாலர்களை யும் சிசுக்களையும் காப்பாற்றுவது முதற்கடமையென்று கருதப் படுகின்றது. எல்லாப் படித்தரங்களிலும் ஏதேனும் ஒருவிதத் தில் பெண்பால் கண்ணியப்படுத்தப்படுகிறது. பெண்பாலுக்குச் செய்கிற தீங்கு தீவிரமாகக் கண்டிக்கப்படுகிறது. ஒரு குடும்பத் திலிருக்கிற பெண்பாலர்கள் திரும்பத் திரும்பப் பெரும் துயரத் துக்கு ஆளாவார்களானால் அக்குடும்பம் விருத்தி அடைவதில்லை.

பெண்பால் பெரிய நிலையில் வைத்துப் போற்றப்படுவது இயற்கையின் நியதி. இந்த நியதியே அம்பிகைக்குச் செய்கின்ற பெரிய வழிபாடாகிறது.

**रमणलम्पटा** — ரமண லம்படா ३२०

தன் கணவனோடு கூடியிருப்பதில் இச்சை உடையவள்.

தக்க தருணம் வருகின்றபொழுது ஆண் மயமாகவும் பெண் மயமாகவும் அமைந்துள்ள உயிர்களனைத்தும் ஜோடி சேர்கின்றன. மக்கள் உலகில் கணவன், மனைவி என்னும் இணக்கம் புனிதமானது. அவ்விணக்கம் பெண்பாலிடத்திலேயே சிறப்புற்று விளங்குகிறது. ஆடவன் ஒருவன் ஒரு தடவைக்குமேல் மணம் புரிவதுண்டு. அப்படிச் செய்வது முறையன்று என்பதை இராமாவதாரம் விளக்குகிறது. பின்பு, நற்குடியில் பிறந்துள்ள பெண்ணொருத்தி இரண்டு தடவை மணம் புரிவதில்லை. அத்தகையவளிடத்துள்ள தகைமை அன்னை பராசக்தியின் மகிமைக்கு விளக்கமாகிறது. யாண்டும் கணவனுக்கு இன்பமூட்டும் பாங்கிலும் அவனுடைய துயரத்தைத் தன்னுடையதாக எடுத்துக்கொள்ளும் பாங்கிலும் மனைவி திருப்தியுற்றிருக்கிறாள். அத்தகைய பெண்பாலர் அன்னை பராசக்தியின் சொரூபம். அவர்களைப் போற்றுவது அம்பிகை வழிபாட்டுக்கு ஒப்பாகும்.

**काम्या** — காம்யா ३२१

விரும்பப்படுகிறவள்.

ஜீவர்களனைவரும் தாம் தாம் விரும்புகிற நோக்கத்தை நிறைவேற்றி வைக்க முயலுகின்றனர். அத்தனை பேருக்கும் காரிய சித்திக்கு முகாமையாய் இருப்பவள் அம்பிகை. ஒவ்வொரு குழந்தைக்கும் காம்யாவாக விளங்குபவள் அக்குழந்தையைப் பெற்றெடுத்த தாய். தனக்கு வேண்டியதைத் தாயிடம் குழந்தை கேட்கிறது. வேண்டியதைக் கொடாவிட்டால் அது கொடுக்கும்படி போராடுகிறது. வேறு ஒன்றும் செய்ய அக்குழந்தைக்கு இயலாது. அதே பாங்கில் ஜீவகோடிகளனைவரும் அவரவர் இச்சைகளை நிறைவேற்றி வைக்கும்படி பராசக்தியை வேண்டு

வார்களாகில் அது பொருத்தமான முயற்சியாகும். அவரவர்க்கு உரிய தெய்வமாக இலங்குபவளாகிய அன்னை பராசக்தி ஜீவர்களின் விருப்பங்களையெல்லாம் நிறைவேற்றி வைக்க வல்லவளாதலால் அவளுக்குக் காம்யா என்னும் பெயர் வந்துள்ளது.

**कामकलारूपा — காமகலாரூபா** ३२२

**காமக் கலை வடிவினளாக இருப்பவள்.**

புருஷார்த்தங்கள் நான்கனுள் மூன்றாவதாகக் காமம் இடம் பெற்றுள்ளது. காமம் அல்லது ஆசையை அடிப்படையாகக் கொண்டே பிரபஞ்ச வாழ்வு நிலைபெற்றிருக்கிறது. ஒவ்வோர் உயிரும் ஆசையை நிறைவேற்றுவதற்குத் தானாகவே முயற்சி எடுத்துக்கொள்கிறது. அதைப்பற்றிய பலப்பல கலைகள் உயிர்கள் உள்ளத்தில் உருவெடுப்பது மூலப் பிரகிருதியினிடத்திருந்து தோன்றியுள்ள சக்தியின் விளைவாம். காமங்களைப் பூர்த்திபண்ணுதற்கு ஏற்ப ஜீவர்கள் மனபரிபாகம் அடைகின்றனர். இச்சக்தியினிடத்து தெய்விகத்தைக் காண்பது நல்ல சாதனமாகிறது.

**कदम्बकुसुमप्रिया — கதம்பகுஸுமப்ரியா** ३२३

**கதம்பப் புஷ்பங்களில் பிரியம் வைத்திருப்பவள்.**

புஷ்பங்கள் அனைத்துமாய் வடிவெடுத்திருப்பவள் அன்னை பராசக்தி. ஆயினும், குறிப்பிட்ட சில புஷ்பங்கள் அம்பிகைக்கு உகந்தவைகள் என்று இயம்புவது மானுட இயல்பு. ஒவ்வொரு புஷ்பத்திலும் ஒவ்வோர் அதிசயம் அமைந்துள்ளது. இத்துறையில் ஆழ்ந்து அறிவைச் செலுத்துகிறவர்களுக்கு இயற்கைத் தாயின் மகிமை நன்கு விளங்குகிறது.

**कल्याणी — கல்யாணீ** ३२४

**மங்களகரமானவள்.**

சுபத்தை நாடுகின்றவர்களுக்குப் பிரபஞ்சத்தில் சுபத்தை நல்குகின்ற பகுதிகள் ஏராளமாக இருக்கின்றன. பிரபஞ்சம் முழுதிலும் உள்ள உயிர்வகைகள் ஏதேதோ சூழ்நிலைகளை முன்னிட்டும், ஏதேதோ பொருள்களை முன்னிட்டும், ஏதேதோ கால நிலைகளை முன்னிட்டும் சந்துஷ்டியடைகின்றன. சந்துஷ்டி அல்

லது திருப்தி இல்லாவிட்டால் வாழ்க்கையில் இனிமையில்லை. உலகில் உள்ள அனைத்திலும் இனிமை மிளிர்கிறது. இனிமை வேறு அம்பிகை வேறு அன்று. இனிமையை ஓயாது வழங்கிக் கொண்டிருப்பதால் அம்பிகை கல்யாணீ என்று போற்றப்படு கிறாள்.

**जगतीकन्दा — ஜகதீகந்தா** ३२५

உலகுக்கு வேர் போன்று இருப்பவள்.

மரத்தின் வேர் முறையாக அமைந்திருக்கும்பொழுது மரத் தின் மேலே உள்ள கிளைகளையோ அல்லது அடிமரத்தையோ வெட்டுவதால் அவ்வுயிர்க்குப் பங்கம் ஏற்படுவதில்லை. இந்த ஜகத்துக்கு ஆணிவேராயிருப்பவளாகிய அம்பிகையின் சொரூ பத்தை யாரும் அழித்துவிட முடியாது. ஜகத்திலே எண்ணிறந்த அண்டங்கள் தோன்றவும் ஒடுங்கவும் செய்யலாம். அம்பிகை நித்தியவஸ்துவாதலால் ஜகத்தாகத் தோன்றும் தன்மை அழிந்து பட்டுப் போகாது யாண்டும் நிலைபெற்றிருக்கிறது. ஜகத்தோடு தெய்விக இணக்கம் வைப்பது இந்த ஜகத்துக்கு மூலப்பொருளா யிருக்கும் பராசக்திவழிபாடாகும்.

**करुणारस सागरा — கருணாரஸ ஸாகரா** ३२६

கருணை என்னும் ரஸக்கடலை ஒத்தவள்

சிறிதளவாவது கருணைக்குப் பாத்திரமாகிற ஜீவன் ஒருவன் உலகிலுள்ள துன்பங்களைச் சகித்திருக்க வல்லவனாகிறான். தாயன்பைப் படைத்துள்ள குழந்தை ஒன்றுக்கு எத்தனையோ இடுக்கண்கள் நேரிட்டாலும் அத்தனைக்கும் தாயன்பானது மருந்தாகிறது. அன்னை பராசக்தியின் கருணை தாயன்பாகத் துவக்கி மேல்நிலைக்குப் போகிறது. மேலான பாரமார்த்திகப் பெருவாழ்வைப் பெற்றுள்ள பெருமக்களின் பேற்றினைக் கருணா ரஸம் எனலாம்.

ரஸம் என்னும் சொல்லுக்கு நீர் அல்லது ஜலம் என்னும் பொருள் உண்டு. கடல் என்று கூறுமிடத்து அது அளப்பரிய நீர் என்றே பொருள்படுகிறது. நிலத்திலிருப்பதைவிடக் கடலில் அதிகமான நீர் இருப்பதனால்தான் அது நிலவுலகுக்கு மழையாக

வந்து வாய்க்கிறது. அன்னை பராசக்தியின் கருணைதான் மழை யாக வடிவெடுத்திருக்கிறது. உயிர் வாழ்க்கைக்கேற்ற எல்லா விதமான சூழ்நிலைகளாகவும் அது வடிவெடுத்திருக்கிறது. பாது காப்புக்கேற்ற சமுதாய வாழ்வாகவும் அக்கருணையே வடிவெடுத் துள்ளது.

உலகப்பற்றுதலை ஒதுக்கித் தள்ளிவிட்டுப் பரநாட்டம் பூணு கின்ற பரிபக்குவமடைந்துள்ள ஆத்மாக்களிடத்து அம்பிகை அலாதியான கருணை பூணுகிருள்; அதுவே கருணுரஸம் எனப்படு கிறது. குழந்தை ஒன்றுக்குத் தாய் விளையாடுதற்குப் பல பொம்மைகளைக் கொடுத்துதவுகிருள். அத்தகைய சூழ்நிலையை உண்டுபண்ணித் தருவது பெற்ற தாயின் சாமானியமான கருணை. ஒரு நெருக்கடியில் குழந்தை பொம்மைகளையெல்லாம் வீசி யெறிந்துவிட்டுக் கோவென்று அழுகிறது. அப்பொழுது தாயான வள் சாதத்தின் கஞ்சியை வடித்துக்கொண்டிருந்தாலும் அதை அப்படியே அடுப்பில் போட்டுவிட்டுக் குழந்தையின் உதவிக்கு ஓடிவருகிருள். அதே பாங்கில் உலக வாழ்க்கைக்குத் தேவையான வசதிகளையெல்லாம் செய்துவைக்கும் அம்பிகை பரிபக்குவம் வாய்க்கப்பெற்ற ஜீவர்களிடத்துப் பூணும் அலாதியான கருணை யைத் தான் கருணுரஸம் என்று கூறவேண்டும். அன்னை பரா சக்தி இத்தகைய கருணுரஸ ஸாகரமாயிருப்பது அவளுடைய பேரியல்பாம்.

**कलावती — கலாவதீ** ३२७

**கலைகளை உடையவள்.**

வாழ்வானது இனிமையும் அழகும் ஆற்றலும் வாய்ந்ததாகச் செய்வது எதுவோ அது கலை. எல்லாப் படித்தரங்களில் இருக் கிற ஜீவர்கள் எல்லாரிடத்தும் கலைகள் வெவ்வேறு பாங்கில் அமைந்திருக்கின்றன. ஆமையானது அழகான ஜந்து அன்று. ஆனால் தற்பாதுகாப்பு என்னும் கலை அதனிடத்து உச்சநிலைக்கு வந்திருக்கிறது. உயிர்கள் அனைத்திடத்தும் பலப்பல கலைகள் அமைந்திருக்கின்றன. அம்பிகையின் துணைகொண்டு மனிதன் கலைகளைத் திறமையாக வளர்த்து வருகிருன். இவை அனைத்தின் தொகை அம்பிகையின் கலைகளாம். ஆதலால் அன்னை பராசக்தி கலைக் களஞ்சியம் அல்லது கலாவதீ என இயம்பப்பெறுகிருள்.

**कलालापा — கலாலாபா** ३२८

கலைகளையே பேச்சாகப் படைத்திருப்பவள்.

பரிபாகம் அடையாத ஜீவர்களாகிய நாம் பரிபாகம் அடைவதற்கு எடுத்துக்கொள்ளும் முயற்சியைக் கலைகள் பலகற்பது என்று பொருள்படுத்துகிறோம். சரியாக நடந்து பழகுவது ஒரு கலை; நேரே நிமிர்ந்து உட்காருவதும் ஒரு கலை. அதே போன்று பற்றுக் கோடில்லாது நிமிர்ந்து நிற்பதும் நல்ல கலை அல்லது ஒழுங்குப் பாடாகிறது. எழுத்துக்களைச் சரியாக உச்சரிப்பதும் பிழையின்றிப் பேசுவதும் ஒரு கலையாம். மெய், மொழியாகிய இரண்டையும் சரியாகப் பயன் படுத்துமிடத்து அது பற்பல கலைகளாக விரிவடைகிறது. பண்பட்டிருக்கிற ஒருவனை இக்கலை அல்லது ஒழுங்குப்பாட்டின் வாயிலாக அறிந்துகொள்கிறோம். சிவன் தாமே அறுபத்து நான்கு கலைகளை உடையவர் என்பது கோட்பாடு. அவையாவும் அம்பிகையின் வாயிலாக உலகுக்கு வெளியாகின்றன. சிற்றுயிர் பேருயிராகிய ஒவ்வொரு ஜீவனிடத்தும் ஏதேனும் ஓர் ஒழுங்குப்பாட்டைக் காண்கிறோம். இங்ஙனம் உலகிலுள்ள உயிர்களனைத்தின் வாயிலாகக் கலை அல்லது ஒழுங்குப் பாடு மிளிர்ந்து கொண்டிருக்கின்றது. இவை யாவற்றுக்கும் பிறப்பிடம் அம்பிகை.

**कान्ता — காந்தா** ३२९

கட்டழகே வடிவெடுத்தவள்.

எங்கு அழகு பொலிகிறதோ அங்கு தெய்வ சான்னித்தியம் இருக்கிறது. இயற்கை முழுதிலும் வடிவழகு மிளிர்ந்து கொண்டிருக்கிறது. அந்த அழகில் தெய்விகத்தைக் காண்பது வழிபாடு. சிறப்புற்று ஓங்குகிற சில வடிவங்களில் தெய்விக அழகைக் கண்டு ரசித்துப் பழகினால் பிறகு பிரபஞ்சத்திலுள்ள அனைத்திலுமே தெய்விக அழகு பொலிகிறது என்பது புலனாகும். அழகுத் தெய்வத்தைப் போற்றக் கற்றுக்கொண்டுள்ள ஒருவன் சேதனம், அசேதனம் ஆகிய எல்லா வடிவங்களிலும் தெய்விக அழகைக் காண்கிறான். அவன் காட்சியில் இருப்பவள் அழகுத் தெய்வமாகிய அன்னை பராசக்தியே. ஆதலால் அவள் காந்தா என்று கூறப் பெறுகிறாள்.

**कादम्बरीप्रिया — காதம்பரீ பிரியா** ३३०

*காதம்பரீ என்னும் மதுபானத்தில் பிரியம் உள்ளவள்.*

பலதரப்பட்ட கள் அல்லது மதுவர்க்கங்கள் அம்பிகை வழி பாட்டில் இடம்பெறுகின்றன. ஈண்டுக் காதம்பரி என்னும் மது வானது அம்பாளுக்குப் பிரியமானது எனறு சொல்லப்படுகிறது. அதை அம்பிகைக்கு நைவேத்தியமாகப் படைத்து அதில் ஒரு சிறிதளவை அம்பிகையின் பிரசாதமாகச் சாதகன் ஏற்பானுகில் அவன் நெடுநேரம் தியானத்தில் ஆழ்ந்திருக்க முடியும். ஆத்ம சாதனத்துக்குத் துணைபுரிபவையெல்லாம் அம்பிகையின் பிரசாதம் ஆகின்றன. வகை தெரிந்து கையாண்டால் கள் போன்ற எப் பொருளேயும் அம்பிகை வழிபாட்டுக்குப் பயன்படுத்தலாம்.

**वरदा — வரதா** ३३१

*வரங்களேக் கொடுப்பவள்.*

விரும்பிய ஒன்றை விரும்பியவாறு அடையப்பெறுவது வர மாகிறது. ஒரு ஜீவனுடைய அக்ஞான நிலேயில் அவனல் விரும் பப்படுவது புறத்தில் இருக்கிறது.விவேகம் ஓங்குதற்கேற்ப விரும் பும் வரம் அகத்தில் வந்து அமைகிறது. முற்றிலும் வேண்டப் படுகின்ற ஆயுள், ஆரோக்கியம், மகப்பேறு ஆகிய யாவும் இக லோகத்துக்குரிய வரங்களாகின்றன. பாரமார்த்திகத்துக்கேற்ற பக்தி, விவேகம், பரஞானம் ஆகியவைகளேக் குறித்துக் கேட்கும் வரம் தலேத்தரமானதாகிறது. எல்லா ஜீவர்களும் விரும்புகிற எல்லா வரங்களேயும் அம்பிகை கொடுத்து உதவுகிருள். முறை தவறிப் பணம் சம்பாதிப்பதும் திடீரென்று வாய்க்கும் பதவியும் ஆதிக்கமும் ஒருவாறு வரங்களாகின்றன. அவற்றைப் பயன் படுத்தத் தெரியாது மாந்தர் தங்களேத் தாங்களே அழித்துக் கொள்கின்றனர். வரம் கொடுக்கிற அம்பிகையே வரத்தை விலக்கவும் செய்கிருள். அவ்வரத்தின் வாயிலாக உயிர்களுக்கு நல்லறிவு புகட்டுவது அவளுடைய கிருபையாகும். இடையருது ஜீவர்களேயெல்லாம் ஸம்ஹாரம் செய்துவரும் காளிகா தேவி யாகிய அன்னே பராசக்தியோடு நல்லிணக்கம் வைக்க அறிந்து

கொள்கின்றவர்களைச் சிவன்பால் சேர்த்து வைப்பது அவள் கொடுக்கின்ற வரங்களுள் ஒப்பற்றதாம். ஆக, எல்லாப் படித் தரங்களிலும் அம்பிகை வரம் வழங்குகிறவளாக இருந்து வருகிறாள். ஆதலால் அவள் வரதா என்னும் பெயர் பெற்றுள்ளாள்.

**वामनयना — வாமநயனா** ३३२

*அழகான கண்களை உடையவள்.*

பிரபஞ்சத்தில் உள்ள உயிர்வகைகள் அனைத்தும் அம்பிகையினிடத்திருந்து தோன்றியவைகளாகின்றன. அந்தந்த உயிரின் அழகு அது படைத்துள்ள கண்களில் பொலிகிறது. கண்களின் வாயிலாகவே உயிர்களனைத்தினுடைய உயிர்த் தத்துவம் வெளியாகிறது. உயிர்களின் கண்ணாக அல்லது ஆத்ம சொரூபமாக அம்பிகை இலங்குகின்றாள்.

வாமநயனா என்னும் சொல்லுக்கு உண்மையை உள்ளபடி காணுதல் என்பதும் ஒரு பொருள். எப்பொருளிடத்தும் மெய்ப் பொருள் காண்கின்ற கண்களே நல்ல கண்களாகின்றன. அன்னை பராசக்தி தன்னையும் தன் சிருஷ்டி அனைத்தையும் உள்ளபடி காண்கிறாள். ஆதலால் அவள் வாமநயனா அல்லது அழகிய கண்களைப் படைத்தவள் என்று இயம்பப்பெறுகிறாள்.

**वारुणीमद-विह्वला — வாருணீமத விஹ்வலா** ३३३

*வாருணி என்னும் மதுவைப் பருகி ஆனந்தத்தில் திளைத்திருப்பவள்.*

மதுவை முறையாகப் பயன்படுத்தினால் ஆத்ம சாதனத்துக்கு அது பேருதவி புரிகிறது. அம்பிகையின் பிரசாதமாக அளந்தெடுத்து முறையாக ஏற்கப்படும் மதுவால் ஆத்ம சாதகன் பிரபஞ்சத்தை மறந்தவனாகப் பேரானந்தத்தில் திளைத்திருக்கிறான். கட்குடிகாரனுக்கும் அம்பிகையின் பிரசாதமாக மதுபானம் செய்பவனுக்கும் முக்கியமான வேற்றுமை ஒன்று உண்டு. கள் குடிப்பவன் கள்ளுக்கு அடிமையாகி வெறியில் விவேகத்தை இழக்கிறான். கள் குடி இல்லாவிட்டால் அவன் வேலைக்கு உதவுவதில்லை; வாழ்க்கைக்கும் உதவுவதில்லை. ஆனால் அம்பிகையின் பிரசாதமாக மதுவை அளவுடன் ஏற்கும் சாதகனுக்கு ஆழ்ந்த

தியானம் கை கூடுகிறது. கேடு என்னும் எதிர்ச் செயல் அதன் கண் இல்லை. ஆத்ம சாதகன் அடைகிற பேரானந்தம் இந்த நாமத்தின் வாயிலாக அம்பிகையின் மீது ஆரோபிக்கப்படுகிறது. இவை யாவற்றிலும் கட்டுப்படாத பேரானந்தத்திலேயே அம்பிகை யாண்டும் நிலைத்திருக்கிருள்.

**विश्वाधिका — விஸ்வாதிகா** ३३४

விஸ்வத்துக்கு அப்பாற்பட்டவள்.

அம்பிகை பிரபஞ்சமாகவும் பிரபஞ்சத்துக்கு அப்பாற்பட்டவளாகவும் இலங்குகின்ருள். அவளுடைய சொரூபத்தில் மிகச் சிறிய பகுதியே விஸ்வமாக மிளிர்கிறது. அவளுடைய அணுமயமான பகுதி அகிலாண்டங்களாகிறது. அகிலாண்டங்களைக் கிரகிக்க முயலும் மனது அகண்டாகாரத்தில் விரிந்தோடுகிறது. அம்பிகையினுடைய சொரூபம் முழுவதையும் கிரகிக்க யாருக்குத் தான் இயலும்? அவள் விஸ்வத்துக்கு அதிகப்படியாய் இருப்பதை ஓரளவு அறிந்துகொள்ள மனதீதத்துக்குப் போயுள்ள ஆத்ம சாதகர்களுக்கே சாத்தியமாகும்.

**वेदवेद्या — வேதவேத்யா** ३३५

வேதங்களால் அறியப்படுகிறவள்.

வித்யா சொரூபங்களாக இருப்பவை வேதங்கள். ரிக், யஜுர், சாமம், அதர்வம் ஆகிய வேதங்களில் அடங்காத பகுதிகளும் இருக்கின்றன. இன்றைக்கு மனிதன் அறிந்துள்ள பௌதிக விஞ்ஞானம் புதிதாக வளர்க்கப்பட்ட வேதமாகிறது. பிரபஞ்சம் முழுதும் வேதம் எனப்படுகிறது. பிரபஞ்சத்தை அறிவதற்கேற்ப மனிதன் அம்பிகையை அறிந்துகொண்டவனுகிருன். தன் சிற்றறிவுக்கு எட்டியதையெல்லாம் அம்பிகையின் சொருபத்தில் லயப்படுத்துகிறவன் தான்பெற்றுள்ள வேதத்தைக் கொண்டு அம்பிகையை அறிந்தவனுகிருன்.

**विन्ध्याचल निवासिनी — விந்த்யாசல நிவாஸினீ** ३३६

விந்திய மலையில் இனிது வீற்றிருப்பவள்.

அனைத்தும் அம்பிகையின் சொருபமாய் இருக்கும்போது அம்பிகை சிறப்பாக ஒரு பர்வதத்தில் வீற்றிருப்பதன் பொருள்

யாது? புராணங்களில் அம்பிகையின் சில செயல்கள் குறிப்பிட்ட சில இடங்களில் நடைபெற்றதாகச் சொல்லப்பட்டுள்ளது. அந்த நிகழ்ச்சிகளை நினைவுக்குக் கொண்டு வரும்பொழுது அவை நிகழ்ந்த இடமும் ஞாபகத்துக்கு வருவது இயல்பு. விந்தியாசலத்தில் அசுரர்கள் சிலரை அம்பிகை அழித்ததாகப் புராண வரலாறுகள் இருக்கின்றன. இடத்தை முன்னிட்டோ செயலை முன்னிட்டோ அம்பிகையைக் குறித்துச் சாதகனுடைய உள்ளத்தில் ஞாபகமூட்டுவது குறிக்கோள். அதன்படி அம்பிகை விந்திய மலையில் சிறப்பாக வீற்றிருப்பவள் என்று இயம்பப் பெறுகிறாள்.

**विधात्री** — விதாத்ரீ ३३७

உலகைத் தாங்கி இருக்கிறவள்.

உலகுக்குப் பிறப்பிடம் பராசக்தி. உலகைத் தாங்கிக் கொண்டிருப்பவளும் அவளே. தாத்ரீ என்னும் சொல்லுக்கு உணவூட்டுகிறவள் என்னும் பொருள் உண்டு. உலகங்களனைத்தும் உருவெடுப்பது அம்பிகையினிடத்தில்; அவைகள் போஷிக்கப் பெறுவதும் அம்பிகையினாலேயாம். இவ்வுண்மையை உணர்கிற ஆத்ம சாதகர்கள் தங்களுக்குத் தனி வியக்தி ஒன்றுமில்லை என்பதை அறிந்துகொள்கிறார்கள். அலை ஒருபொழுதும் சமுத்திரத்துக்குப் புறம்பானதன்று. அங்ஙனம் ஜீவகோடிகளனைத்தும் அன்னை பராசக்திக்குப் புறம்பானவைகளாகமாட்டா. ஆத்ம சாதகன் ஒருவன் தனி வியக்தியாக வாழ்ந்திருக்கிறபொழுதே அந்த வியக்தியைப் பொருள்படுத்தாது பராசக்தியின் சொரூபத்தில் அதை ஒப்படைத்து விடுவானாகில் அவனுடைய சாதனம் பூர்த்தியாகிறது.

**वेदजननी** — வேத ஜனனீ ३३८

வேதங்களைத் தோற்றுவிக்கிறவள்.

வித்யா சொரூபமாய் உள்ள நான்கு வேதங்களும் பிரபஞ்சத்தைப் பற்றியவை. அவற்றிலிருந்து பல அங்கங்களும் வந்துள்ளன. ஆயுர் வேதம், தனுர் வேதம் போன்ற கிளைகளும் வேதத்தில் அடங்கியிருக்கின்றன. இக்காலத்திய பௌதீக

விஞ்ஞானமும் வேதத்தின் கூறு ஆகும். பிரபஞ்சமே வேதம் என்னும் கொள்கையும் உண்டு. வேதத்தில் இல்லாதது ஒன்று மில்லை என்று கூறுவதன் பொருள் இயற்கையில் எல்லாம் அடங்கியிருக்கின்றன என்பதாம். வேதம் அழியாதது என்னும் கோட்பாடும் உண்டு. இயற்கை அழிந்துபட்டுப் போவதில்லை; தோன்றிய நிலையிலோ தோன்ருத அவ்யக்த நிலையிலோ பிரபஞ்சம் யாண்டும் இருக்கிறது. எல்லா நிலைகளிலும் அது அம்பிகையினிடத்திலேயே இருப்பதனல் அவள் வேத ஜனனீ என்று போற்றப்படுகிருள்.

**विष्णुमाया — விஷ்ணு மாயா** ३३९

மஹா விஷ்ணுவினுடைய மாயாசக்தி சொரூபமாக இருப்பவள்.

பரவஸ்துவிற்கு அபின்னமாகச் சக்தி அல்லது திறமை அமைந்திருக்கிறது. அக்னியைப் பிரம்மம் என்றும் அதன் சுடும் தன்மையை மாயா சக்தி என்றும் வைத்துக்கொள்ளலாம். எங்கும் நிறைந்திருக்கும் ஆகாசம் பண்படாத ஜீவனுக்கு ஜட ஆகாச மாகவும் பண்பட்டுள்ள நிறை ஞானிக்குச் சிதாகாசமாகவும் பொருள்படுகிறது. இந்தச் சிதாகாசமே பரவஸ்து. இதற்கு அபின்னமாக உள்ள மாயாசக்தி தன்னை அனந்தங்கோடி ஜீவர் களாகவும் அனந்தங்கோடி அண்டங்களாகவும் விளக்கிக் கொண் டிருக்கிறது. அந்த விளக்கமே மாயை என்னும் பெயர் பெற் றுள்ளது. மாயா சக்தியைத் தோற்றத்துக்குக் கொண்டுவரும் பொழுதே பரவஸ்துவின் மகிமைகளெல்லாம் வெளியாகின்றன. ஜீவர்களைப் பக்குவப்படுத்தும் பாங்குடையது மாயை. மாயை யைச் சரியாக உபாசிக்கிற ஜீவன் அதனுடைய மகிமைகளையும் அதற்கு ஆதாரமாயிருக்கிற விஷ்ணுவையும் நன்கு அறிய வரு. கிருன். ஆகவே, அன்னை பராசக்தியின் அருளைக்கொண்டே அப்பனுக இருக்கும் பரவஸ்துவையும் சாதகன் அறிந்துகொள்ள வல்லவனுகிருன்.

**विलासिनी — விலாஸினீ** ३४०

லீலை அல்லது விளையாட்டே வடிவெடுத்தவள்.

இயற்கை முழுதும் விளையாட்டாகத் தன்னை விளக்கிக் கொண்டிருக்கிறது. விளையாட்டு ஆனந்தத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளது. ஜீவர்களின் நிஜநிலை ஆனந்தம். எல்லாப் படித்தரங்களிலும் இருக்கிற எல்லா உயிர் வகைகளும் விளையாட்டில் ஈடுபட்டிருக்கின்றன. மனபரிபாகம் அடைந்தவர்களுக்கே இந்த விலாஸத்தின் காட்சியைக் காண்பது சாத்தியமாகிறது. பரவஸ்துவும் பராசக்தியும் ஒன்று. விளையாட்டில் ஈடுபட்டிருக்கின்ற போதெல்லாம் ஜீவர்கள் பரதேவதையோடு யோகம் பூண்டவர்களாகிறார்கள். வாழ்வென்னும் விளையாட்டை நன்கு நிறைவேற்றுகின்றவர்களே அன்னை பராசக்தியை இனிது வழிபடுபவராகின்றனர்.

**क्षेत्रस्वरूपा — க்ஷேத்ரஸ்வரூபா** ३४१

**க்ஷேத்ரத்தைத் தன்னுடைய சொந்த வடிவமாகக் கொண்டிருப்பவள்:**

பரத கண்டமெங்கும் அம்பிகைக்குரிய புண்ணிய க்ஷேத்திரங்கள் ஐம்பத்தொன்று இருக்கின்றன என்பது ஐதிகம். அந்த க்ஷேத்திரங்களிலே அம்பிகையின் சான்னித்தியம் சிறப்புற்று ஓங்குகிறது. மூலப் பிரகிருதியாகிய அம்பிகையினிடத்திருந்தே ஐம்பூதங்கள் மயமாய் மிளிரும் பிரபஞ்சம் உருவெடுக்கலாயிற்று. பிரபஞ்சத்தின் கூறு ஆகிய மண்ணுலகை நமக்குரிய க்ஷேத்திரமாக நாம் எடுத்துக்கொள்ளலாம். கர்மம் அல்லது உழைப்பின் வாயிலாகச் சாகுபடிக்குப் பொருத்தமான நிலப் பகுதிகளைப் பயன்படுத்தி உணவுப்பொருள் வகைகளை நாம் உண்டுபண்ணி எடுக்கலாம்.

மானுடனுக்குரிய கர்ம பூமியாய் அமைந்துள்ள அவனுடைய சரீரத்துக்கும் க்ஷேத்திரம் என்னும் பெயர் வந்துள்ளது. புண்ணியம், பாவம் ஆகிய இரண்டு விளைவுகளையும் பெறுதற்கு உடல் முகாமையாய் இருக்கிறது. உடலைச் சாதனத்துக்குரிய கருவியாகப் பயன்படுத்துவதற்கேற்ப அம்பிகையின் சான்னித்தியம் மானுட உடலிலேயே மேலோங்குகிறது.

**क्षेत्रेशी — க்ஷேத்ரேசீ** ३४२

**க்ஷேத்திரத்துக்கு இறைவியாக இருப்பவள்.**

க்ஷேத்ர சொருபமாய் இருக்கிற அம்பிகை அதன்மீது ஆதிக்கம் செலுத்துகிற ஈசுவரியாகவும் வீற்றிருக்கிருள். பிரபஞ்சம் முழுதையும் அவள் முறையாக ஆண்டு வருகிருள். அண்டமெங்கும் ஆங்காங்கு அமைந்துள்ள கோளங்களின் இயக்கத்தில் முறையான ஒழுங்குப்பாடு இருக்கிறது. அவைகளுக்கு அதிஷ்டான தெய்வமாக அம்பிகை யாண்டும் வியாபித்திருந்து அவைகளை ஆண்டு வருவதால் அவளுக்கு க்ஷேத்ரேசீ என்னும் பெயர் வந்துள்ளது.

அம்பிகையின் அருளை ஆதரவாகக்கொண்டு மானுடனே தன் மேனியாகிய க்ஷேத்திரத்தின்மீது ஆதிக்கம் செலுத்தலாம். சாதனத்தின் வாயிலாக உடலை வசப்பட்ட நிலையில் வைத்திருப்பதும் காயசித்தி பண்ணுவதும் மனிதனுக்கு இயலுகிறது. இச்செயல்கள் யாவும் அம்பிகையின் அருளால் நிகழ்வதால் அவள் க்ஷேத்ரேசீ எனப்படுகிருள்.

**क्षेत्रक्षेत्रज्ञ पालिनी** — க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞபாலினீ ३४३

க்ஷேத்ரத்தையும் க்ஷேத்ரக்ஞனையும் பரிபாலிப்பவள்.

மானுடன் ஒருவன் படைத்திருக்கிற உடலுக்கு க்ஷேத்ரம் என்றும் அதில் குடியிருக்கிற ஜீவாத்மனுக்கு க்ஷேத்ரக்ஞன் என்றும் பெயர். சர்வேஸ்வரி ஜடப்பொருள் மயமாயிருக்கிற பிரபஞ்சத்தையும் அப்பிரபஞ்சத்தின்கண் வாழ்ந்து வருகிற உயிர் வகைகள் அனைத்தையும் காப்பாற்றி வருகிருள். ஒவ்வொரு ஜீவனுக்கும் பொருத்தமான உடல் க்ஷேத்ரமாக வாய்த்திருக்கிறது. அவ்வாறு அமைந்திருப்பதெல்லாம் அன்னை பராசக்தியின் அருள் செயல்களாம்.

**क्षयवृद्धि विनिर्मुक्ता** — க்ஷய வ்ருத்தி விநிர்முக்தா ३४४

தேய்வும் வளர்ச்சியும் இல்லாதவள்.

வளர்வது தேய்வது ஆகிய சரீரத்தில் உண்டாகிற விகாரங்களையெல்லாம் தனக்கு வந்து வாய்த்தவைகளென்று ஜீவாத்மன் கருதுகிருன். அத்தகைய எண்ணம் மயக்கத்தின் விளைவாம். ஜீவனுக்கும் ஜகத்துக்கும் ஆதாரமாயிருக்கிற அம்பிகையிடம் இந்த விகாரங்களும் இல்லை; மயக்கமும் இல்லை. திரையற்ற

கடல் போன்று அன்னை பராசக்தியின் சொரூபம் அமைந்திருக்கிறது. ஜகத்தாகவும் ஜீவனாகவும் தென்பட்டுக்கொண்டிருக்கும் அம்பிகை யாண்டும் இந்த விகாரங்களையெல்லாம் கடந்தவளாகவே இருந்து வருகிறாள். விகாரங்கள் யாவும் பிரகிருதிக்கும், ஜீவாத்மனுக்கும் உரியவைகளாம். இவற்றுக்கு ஆதாரமாயிருக்கும் பரவஸ்துவோ யாண்டும் நிர்விகாரமாய் நிலைத்திருக்கிறது.

**क्षेत्रपाल समर्चिता — க்ஷேத்ரபால ஸமர்ச்சிதா ३४५**

க்ஷேத்திரமாகிய உடலைப் பரிபாலித்து வரும் ஆத்ம சாதகர்களால் நன்கு ஆராதிக்கப்படுகிறவள்.

க்ஷேத்ரக்ஞனாகிய ஒவ்வொரு ஜீவனும் தான் படைத்துள்ள க்ஷேத்திரமாகிய உடலைப் பரிபாலிப்பதில் ஊக்கம் மிகப் படைத்திருக்கிறான். அதற்கிடையில் தன்னையும் தன் உடலையும் பாதுகாத்து வைக்கவேண்டுமென்று அவன் பரம்பொருளிடத்து விண்ணப்பிக்கிறான். உடலில் அபிமானம் வைத்து அதைப் பேணுதற்கிடையில் அவ்வாறு பேணுகிறவன் அருள்துணையைச் சார்ந்திருக்கிறான். அருள்துணையைச் சார்ந்திருப்பதே சிறந்த ஆராதனையாம். இக்காரணத்தை முன்னிட்டு அம்பிகை க்ஷேத்ரபால ஸமர்ச்சிதா என்னும் பெயர் பெற்றுள்ளாள்.

**विजया — விஜயா ३४६**

யாண்டும் வெற்றியை உண்டுபண்ணுபவள்.

வெற்றியை முன்னிட்டே வெவ்வேறு செயல்களில் உயிர்வகைகள் ஈடுபடுகின்றன. எந்த ஜீவன் எத்தகைய உடலைப் படைத்திருக்கிறதோ அதற்கேற்றவாறு அது வாழ்க்கையில் வெற்றி பெறுகிறது. ஒவ்வோர் உயிரும் படைத்திருக்கும் பரிபக்குவத்துக்கும் கருவிகளுக்கும் முயற்சிக்கும் ஏற்றவாறு வெற்றி வாய்க்கிறது. ஒவ்வொரு ஜீவனும் தன் தன் போக்கில் வாழ்க்கையில் தனக்கு நேரும் ஆபத்தினின்று தப்பி வெற்றியை நிலைநாட்ட முடியும். உயிர்களனைத்துக்கும் இந்த வல்லமை அன்னை பராசக்தியினிடத்திருந்து வந்ததாம்.

புரட்டாசி மாதத்தில் நவராத்திரி விழாவின் பத்தாம் நாள் விஜயதசமி என்று சொல்லப்படுகிறது. அன்றைக்கு எடுத்துக்

கொள்கிற முயற்சி வெற்றிகரமாக வளர்ச்சியடைகிறது. வெற்றிக்கு மூலகாரணமாய் இருக்கும் அம்பிகை விஜயா என்று போற்றப்படுகிறாள்.

**विमला — விமலா** ३४७

மாசு இல்லாதவள்.

பொருள் ஒன்று பொருந்தாத பாங்கில் இடம் பெறும்பொழுது அது மலம் அல்லது அழுக்கு என்று சொல்லப்படுகிறது. உணவில் உடலுக்குப் பயன்பட்டான பிறகு எஞ்சியிருக்கும் பகுதியை மலம் என்கிறோம். மானுட உடலில் நிலைத்திருக்குமாகில் கேடு விளைவிக்கக் கூடிய அத்தகைய மலத்தை மண்ணில் புதைத்துவிட்டால் அது மண் மயம் ஆகி நில வளத்துக்கு ஏதுவாக அமைகிறது. இக்கோட்பாடு இயற்கையில் யாண்டும் எல்லாச் செயல்களிலும் நிறைவேறி வருகிறது. உயிர் வகைகள் மலமாக ஒதுக்குபவைகளையெல்லாம் விமலமாக அன்னை பராசக்தி திருத்தியமைக்கிறாள். உதாரணமாக மூத்திரத்தை ஆவியாக மாற்றி விமலமான மழை நீராகக் கொடுக்கிறாள். மண்ணில் போடப்படும் குப்பை கூளங்களைப் பூசாரமாக மாற்றிச் சாகுபடிக்குத் துணைபுரிகிறாள். அம்பிகையின் செயல் சர்வகாலமும் இப்படி நிகழ்ந்து வருவதால் அவள் விமலா என்று போற்றப்பெறுகிறாள்.

**वन्द्या — வந்த்யா** ३४८

வந்தனைக்குரியவள்.

பஞ்சபூதங்கள் மயமாக அம்பிகை மிளிர்கிறாள். அப்பாங்குகளில் அவள் போற்றப்படுகிறாள். இயற்கையின் ஒவ்வொரு பருவத்தையும் ஒவ்வொரு விதத்தில் பயன்படுத்துவதும் வந்தனையாகும். இயற்கையின் கவர்ச்சிகரமான பகுதிகளையும், மின்னல், இடி, மழை ஆகியவைகளையும் மனிதன் போற்றிப் பாராட்டுகிறான். அம்பிகையின் எல்லாவிதமான விபூதிகளும் போற்றுதற்கு உரியவைகளாகின்றன. ஆகையால் அவள் வந்த்யா என ஆராதிக்கப்பெறுகிறாள்.

**वन्दारुजन-वत्सला — வந்தாருஜன வத்ஸலா** ३४९

பக்த ஜனங்களுக்கு அருள்புரிபவள்.

இயற்கைத் தாயை முறையாகப் போற்றத் தெரிந்தவர்களெல்லாரும் அவளுடைய ஆதரிப்புக்கு ஏற்ற குழந்தைகளாகின்றனர். ஜடசக்தி, சித்சக்தி ஆகிய இரண்டுவித சக்திகளையும் முறையாகப் பயன்படுத்துகிறவர்கள் அம்பிகையின் ஆதரிப்புக்கு இலக்காகின்றனர். மின்சக்தியை முறையாகப் பிடித்து வைத்துப் பயன்படுத்தினல் பலப்பல காரியங்களுக்கு அது உதவுகிறது. அதே மின்சக்தியை முறைதவறிக் கையாண்டால் நொடிப்பொழுதில் அது மனிதனை மாய்த்துவிடும். சித்சக்திகளாகிய மனம், புத்தி, பிராணன் ஆகியவற்றை நன்கு பயன்படுத்துவது அம்பிகையின் ஆராதனையாகிறது. அம்பிகையோடு பொருத்தமான இணக்கம் வைத்து அவளுடைய ஆதரவை அன்போடு நாடுகிற நல்லார் அனைவருக்கும் அவள் இனியவளாகிருள். அவர்களைக் காப்பாற்றும் பொறுப்பையும் அவள் ஏற்றுக்கொள்கிருள்.

**वाग्वादिनी — வாக் வாதினீ** ३५०

தெளிந்த வார்த்தையை இயம்புபவள்.

சொல் சுத்தம் மக்களிடத்திருப்பதற்கு நிகராக வேறு எந்த உயிர் வகையினிடத்தும் இல்லை. சொல்லைத் திருந்தியதாக மாற்றியமைப்பது கல்வியில் முதல் படியாகிறது. அவ்வாறு திருத்தியமைப்பது சக்தி வழிபாடாகிறது. அம்பிகையிடத்திருக்கிற சொல் சுத்தத்தைக் குறித்துச் சாதகன் முதலில் தியானம் பண்ணவேண்டும். பிறகு திருந்திய பதங்களைப் பிரயோகித்து சாதகன் அம்பாளை வழுத்தவேண்டும். ஒருபொழுதும் உரக்கக் கத்திப் பேசக்கூடாது. கேட்பதற்கு இனிமையாக்ச் சுதி மீட்டிய மிருதங்கத்தின் இசைபோன்று சாதகனுடைய பேச்சு இருக்க வேண்டும். மேலும், சந்தர்ப்பத்திற்கு ஏற்றாற்போல் வார்த்தைகளை அளந்தெடுத்துப் பயன்படுத்துவது சாதகன் ஒருவனுக்குப் பெருமை தருவதாகும். தெய்விக நூல்களிலுள்ள திருந்திய சொற்களை அழுத்தந்திருத்தமாகவும் பக்திபூர்வமாகவும் அம்பிகையைப் புகழுதற்பொருட்டுப் பயன்படுத்துவது நல்ல உபாசனையாகும்.

**वामकेशी — வாமகேசீ** ३५१

அழகான கூந்தலை உடையவள்.

ஸூக்ஷ்ம நிலையில் மேலானதாய் உள்ளது ஸ்தூலத்திலும் மேலானதாகிறது. உடல் அமைப்பு அதற்கு நல்ல சான்றுகிறது. உலகெங்கும் உள்ள மாந்தர்களின் முடி அமைப்பை ஆராய்ந்து பார்த்தால் ஓர் அற்புதம் விளங்கும். கூந்தலமைப்பில் மிகக் கீழ்நிலையில் இருக்கும் மாந்தர்கள் ஆப்பிரிக்கா போன்ற தேசங்களில் வசித்துவரும் நீக்ரோக்களாவர். ஐரோப்பா போன்ற நாடுகளில் சிவப்பு நிறம் வாய்ந்த கூந்தல் படைத்திருப்பவர்களைக் காணலாம். பொன்னிறம் போன்ற கூந்தல் உடையவர்களையும் ஆங்குக் காணலாம். இனி, ஆசியாக்கண்ட வாசிகளுள் பெரும் பாலோர் படைத்திருப்பது கருமை நிறம் வாய்ந்த கூந்தலாம். கருமை நிறம் வாய்ந்த கூந்தலே அழகில் சிறந்ததாகிறது. மன பரிபாகத்தில் மட்டமாய் இருப்பவர்களின் கூந்தல் சற்றுக் கரடு முரடாய் இருக்கும். இனிய பான்மை படைத்திருப்பவர்களின் முடியின்கண் மென்மையைக் காணலாம். மன அமைப்பிலும் மேனி அமைப்பிலும் ஒருங்கே மேன்மை படைத்த மானுடர்களை அம்பிகையின் குழந்தைகளுள் முதன்மை வகிப்பவர்கள் என்று மொழியலாம். அம்பிகை தானே மேன்மைகளனைத்துக்கும் உறைவிடமாகின்றாள். அகம், புறம் ஆகிய எல்லாப் பகுதிகளிலும் மேன்மையுற்று மிளிர்பவள் அன்னை பராசக்தி. அவள் படைத்துள்ள கூந்தலின் பாங்கே அவளுடைய பரிபூரண நிலைக்கு எடுத்துக்காட்டாகும். அவளிடத்துப் பக்தியை வளர்க்கும் பாங்குடையதாக அவளுடைய கேசம் அமைந்திருக்கிறது. ஆதலால் அவள் வாமகேசீ என்னும் பெயர் படைத்துள்ளாள்.

**वह्निमण्डल वासिनी**—வஹ்னி மண்டல வாஸினீ ३५२

வஹ்னி மண்டலத்தில் வசிப்பவள்.

பற்றி எரிகிற தீ உயிர்த் தத்துவத்துக்கு நல்ல விளக்கமாகிறது. அக்னியை முகாமையாக வைத்துக்கொண்டு தெய்வ வழிபாடு செய்யப்படுகிறது. காட்டுத் தீ எங்கும் படர்ந்து ஜ்வாலை விட்டு எரியும்பொழுது உள்ளத்தில் அது தெய்விக உணர்ச்சியை ஊட்டுகிறது. அணியணியாக விளக்கேற்றி வைக்கப்பட்டிருக்கும் இடத்திலும் தெய்விக உணர்ச்சி தானாக உருவெடுக்கிறது. எங்கும் வியாபித்திருக்கிற நெருப்புக்கும் தெய்விக உணர்ச்சிக்கும் நெருங்கிய தொடர்பு இருக்கிறது. மானுடன் ஒருவன் வாழ்

திருக்கும் காலமெல்லாம் அவன் உடலெங்கும் வெப்பம் நிறைந்திருப்பதால் மானுட மேனியையே வஹ்னி மண்டலம் எனலாம். உயிர் வாழ்ந்திருக்கும் மானுட சரீரமே சக்தி உபாசனைக்குப் பொருத்தமான மண்டலமாகிறது. மானுட சரீரத்தில் ஏழு ஞான பூமிகளுள் மூலாதாரத்தில் நிலைத்திருக்கிற வெப்பம் சக்தியின் சான்னித்தியத்துக்குச் சிறந்த சான்றாகிறது. ஆங்கு சக்தி இனிது வசித்திருப்பதால் அவள் வஹ்னி மண்டல வாஸினி எனப் பாராட்டப்படுகிறாள்.

**भक्तिमत्कल्पलतिका — பக்திமத்கல்பலதிகா** ३५३

பக்தர்களுக்குக் கற்பகக்கொடி போன்று நலம் புரிபவள்.

பரவஸ்துவைக் கற்பகம் எனக்கூறுவது மரபு. கற்பகக் கொடியைச் சார்ந்திருக்கும் ஒருவன் எதைப் பெற விரும்புகிறானோ அதை எளிதில் அடைகிறான். கற்பகத்துக்கு அண்டையில் இருக்கும் ஆத்ம சாதகனுக்குக் குறையொன்றுமில்லை.

அம்பிகையின் சான்னித்தியத்தை எங்ஙனம் பயன்படுத்துவது என்னும் கோட்பாடு ஓர் உபமானக் கதையின் வாயிலாக வருகிறது.

வழிப்போக்கன் ஒருவன் களைத்துப்போய் ஒரு லதா மண்டபத்திற்குள் வந்தமர்ந்தான். அது கல்பலதா என்பது அவனுக்குத் தெரியாது. பருகுதற்கு நன்னீர் அகப்பட்டால் எவ்வளவு நன்றாயிருக்கும் என்று அவன் எண்ணினான். அக்கணமே அவனுக்குப் பானம் பண்ணுதற்குச் சுத்த ஜலம் கிடைத்தது. அடுத்தபடி பசியைத் துடைப்பதற்குப் பொருத்தமான போஜனம் கிடைத்தால் நன்றாக இருக்கும் என்று எண்ணினான். அவன் எண்ணியபடி பொருந்திய உணவு வந்து வாய்த்தது. அதை உண்டு பசியைப் போக்கினான். படுத்து உறங்குதற்குப் பாய் ஒன்று கிடைத்தால் வசதியாயிருக்கும் என்று எண்ணினான். எண்ணியவாறே பாய் வந்தது. யாராவது ஒருவர் விசிறி வீசினால் புழுக்கத்தைப் போக்கிக்கொள்ளலாம் என்று நினைத்தான். நினைத்தபடியே விசிறி வீசுதற்கு ஆள் வந்துவிட்டது. நன்கு உறங்கிய பிறகு விழித்தெழுந்து நாலாபக்கமும் பார்த்தான்; மானுடர்

யாரும் இல்லை. புலி வந்து பிடித்துக்கொண்டால் தன்கதி என்ன வாகும் என்று திகிலடைந்தான். உடனே புலி வந்து பிடித்து அவனைக் கொன்றுவிட்டது.

பிறப்பெடுத்தவர்கள், விரும்பியவற்றையெல்லாம் சற்று ஏறத்தாழப் பெறுகின்றனர். கடைசியாக மரணத்தைப்பற்றி அஞ்சுகின்றனர். மரணமும் அவர்களை வந்து விழுங்கிவிடுகிறது. பக்தர்கள் அன்னையின் அருளிலேயே திளைத்திருக்க வேண்டும். மரணத்தைக் குறித்து அஞ்சுவது அவர்களுக்குப் பொருந்தாது. மரணமிலாப் பெருநிலை என்பது கல்பலதை என்னும் அம்பிகை யிடமிருந்து அவர்கள் அடையும் பெரிய பேறு ஆகிறது.

## पशुपाशविमोचिनी — பசுபாசவிமோசினி ३५४

ஜீவாத்மாக்களைப் பிறவி என்னும் பாசத்தினின்று விடுவிப்பவள்.

பசு என்னும் சொல் ஜீவாத்மாவைக் குறிக்கிறது. ஜீவாத்ம னுக்குத் தலைவனாக இருக்கும் சிவனார் பசுபதி என்னும் பெயர் பெறுகிறார். ஜீவாத்மன் அக்ஞானத்தில் உழலும் காலமெல் லாம் பிரபஞ்ச வாழ்வு என்னும் பாசத்திலே கட்டுண்டவனாக இருக்கிறான். கட்டுண்டு கிடக்கிற ஒருவனை விடுவிப்பதற்கு நல்லார் ஒருவர் வருவது அவசியமாகிறது. பிரபஞ்ச வாழ்வு என்னும் பாசத்தில் கட்டுண்டு கிடக்கிற ஜீவர்களில் பெரும் பாலோர் விடுதலையைப்பற்றி நினைப்பதில்லை. கட்டுண்டு கிடப்பதையே தங்கள் யதார்த்த நிலை என்று அவர்கள் மயக்கம் பூண்டிருக்கின்றனர். அவர்களுள் அரிதிலும் அரிதாக யாரோ சிலருக்குப் பிறவிப் பிணியினின்று விடுதலையைப் பற்றிய விசாரம் வருகிறது. அன்னை பராசக்தியிடம் பக்தி பூண்டு விடுதலையை அவர்கள் வேண்டும்பொழுது அம்பிகை சான்னித் தியமாகிறாள்; கட்டை அவிழ்த்து விடுதலை என்னும் வீடுபேற்றி னைக் கொடுத்து உதவுகிறாள். அன்னையிடம் புரிகிற பிரார்த் தனைகளுள் பிரபஞ்சவாழ்வினின்று விடுதலை பெறவேண்டுமென்று பண்ணுகிற பிரார்த்தனையே சாலச் சிறந்தது. அதை நல்க வல்லவள் அம்பிகையே. ஆதலால் அவள் பசுபாச விமோசினீ என்னும் பெயர் பெற்றுள்ளாள்.

**संहृताशेषपाखण्डा — ஸம்ஹ்ருதாசேஷ பாகண்டா** ३५५

பாகண்டீகளை யாண்டும் சம்ஹாரம் செய்பவள்.

பாகண்டா எனும் சொல் பாஷண்டா எனவும் வழங்கி வருகிறது. பாஷண்டிகளை அம்பிகை ஒடுக்கித் தள்ளுகிருள். இது இயற்கையின் நியதி. பாஷண்டிகள் யார் என்பதை ஆராய்தல் வேண்டும். மேலாம் குலத்தில் பிறந்திருந்தும் அக்குலத்துக்கேற்ற குலாச்சாரம், குல தர்மம் ஆகியவைகளை அனுஷ்டிக்காது, கீழான ஆசாரம், வயிற்றுப் பிழைப்புக்கேற்ற கீழான தொழில் ஆகியவைகளில் ஈடுபடுகிறவன் பாஷண்டி ஆகிருன். மேலான வருணத்தில் பிறந்து அவ்வருணத்துக்கேறற தர்மத்தை அனுஷ்டிக்காது சுகபோகத்துக்கேற்ற லௌகிக உபயோகங்களில் தன்னை ஒப்படைப்பவன் பாகண்டி ஆகிருன். வழிமுறை வழிமுறையாக வேத வித்தையிலும் வைதீக ஆசாரத்திலும் வாழ்ந்து வரும் மரபில் பிறந்துள்ள ஒருவன் லௌகிக வாழ்க்கையிலும், லௌகிகப் பழக்க வழக்கங்களிலும் லௌகிகப் பிரவிர்த்தியிலும் தன்னை ஒப்படைப்பாஞகில் அவன் பாஷண்டி ஆகிருன். சந்நியாசம் போன்ற மேலான ஆச்ரம சம்ஸ்காரம் எடுத்துக் கொண்ட பிறகு பிரவிருத்திக்குரிய மணச் சடங்கில் கருத்தைச் செலுத்துபவனும், உலக வாழ்க்கையில் உழல்பவனுக்கு உலக சம்பந்தமான உத்தியோகங்கள் தேடித் தருவதில் சித்த விருத்தியைச் செலவு பண்ணுகிறவனும் பாகண்டியாகிருன். தன்னிடமுள்ள மேலான பண்புகளைத் தகுதி வாய்ந்த இதரர்களுக்கு எடுத்து வழங்கி அவர்களை உயர்நிலைக்கு எடுக்க மறுக்கின்றவன் பாகண்டியாகிருன். பாரமார்த்திகப் பெருவாழ்வு அலாதியாகத் தன்னுடையது என்றும் அதில் தன் இனத்தாரல்லாத ஏனையவர்கள் நாட்டம் கொள்வது இறைவனுடைய திட்டமன்று என்றும் வாதிப்பவன் பாஷண்டியாகிருன். தலைமுறை தலைமுறையாகப் பெருவாழ்வில் பிரவேசிப்பதற்குரிய மேலாம் அறவோன் வெறும் வயிற்றுப் பிழைப்புக்காகவென்று பொருள் தேடுதற்கு உரிய லௌகிகக் கல்வியிலேயே கண்ணும் கருத்துமாய் இருப்பதால் பாகண்டியாகிருன். பரவஸ்து விசாரம், ஈசுவர வழிபாடு ஆகியவைகளைப் பின்னணியில் வைத்துவிட்டு வயிறு வளர்ப்பதற்கேதுவான இவ்வுலக வாழ்விலும் தொழிலிலும் ஈடுபடுபவன்

பாஷண்டியாகிறான். இவ்விளக்கங்களின் சாரத்தைச் சொல்லுமிடத்து மேலான வருணத்துக்கும் ஆச்ரமத்துக்கும் தர்மத்துக்கும் உரிய மேன்மக்கள் கீழ்மையில் இறங்கலாகாது என்பதாம்.

கீழ்மை அகற்று என்பது கோட்பாடு. இதற்கு மாறாக மேன்மை அகற்றுகிற புல்லறிவாளன் ஒருவன் தனக்குத்தானே கேடு சூழ்ந்துகொள்கிறான். அத்தகையவனை அன்னை பராசக்தி சம்ஹாரம் செய்கிறாள். உண்மையில் உடல் எடுத்துள்ள எல்லாரும் சம்ஹாரத்துக்கு இலக்காகிறார்கள். நல்லவர்கள், கெட்டவர்கள் ஆகிய எல்லாருமே துடைத்துத் தள்ளுதல் என்னும் இயற்கைத்தாயின் தொழிலினின்று தப்பித்துக்கொள்ளமுடியாது' பாஷண்டிகள் துடைத்துத் தள்ளப்படுகிறார்கள் என்னும் கோட்பாட்டைத் தத்துவ ஆராய்ச்சியின் வாயிலாகப் பார்க்க வேண்டும். உயிர்களனைத்தும் சிறு நிலையினின்று பரிணமித்துப் பெருநிலையை எட்ட முயன்று வருகின்றன. அது இயற்கையின் திட்டம். பெருநிலையை எய்துதற்கு அன்னை பராசக்தி அனுக்ரஹம் பண்ணுகிறாள். பின்பு பெருநிலையை எட்டிய ஒருவன் சிறுமையில் கருத்தைச் செலுத்துவானாகில் அவன் பதிதன் ஆகிறான். கீழ்மையில் இறங்குபவன் மலை உச்சியினின்று கீழே உருட்டப்பட்ட கல்லுக்கு நிகராகிறான். பாஷண்டிக்குப் பிள்ளையாகப் பிறப்பவன் பாஷண்டித் தனத்தில் தந்தையைவிடக் கீழ்மையுறுகிறான். பின்பு, அவனுக்குப் பிள்ளையாகப் பிறப்பவன் அதைவிடக் கீழ்மைக்குப் போகிறான். பாஷண்டித் தனத்தில் வீழ்ந்துள்ளவர்களின் சில தலைமுறைகளை ஆராய்ந்து பார்த்தால் இப்பரிதாபகரமான நிலை விளங்கும்.

அன்னை பராசக்திக்குக் 'கோல் வளையாள்' என்பது ஒரு பெயர். செங்கோல் ஆட்சியிலின்று அவள் இம்மியளவும் பிசகுவதில்லை. காளிகா தேவி தன் இடக்கரம் ஒன்றில் வெட்டுகிற வாளை ஏந்திக் கொண்டிருக்கிறாள். மற்றொரு இடக்கரத்தில் வெட்டிய தலையை இரத்தம் சொட்டச் சொட்டத் தாங்கிக்கொண்டிருக்கிறாள். இதுவே இயற்கையின் நியதி. பரிணமம் என்னும் ஏணியில் கீழான படியில் இருப்பவன் பாஷண்டியானால் அவன் வீழ்ச்சி அவ்வளவு பெரியதன்று. ஏணியிலே மேலாம் படியில் இருப்பவன் வீழ்ந்தால் அந்த வீழ்ச்சியின் விளைவு சமுதாயத்துக்

குப் பெரிய நஷ்டமாகும். தன் வீழ்ச்சிக்கிடையில் தன்னை உயர்ந்தவனாக எண்ணிக்கொண்டிருப்பவன் பாஷண்டியாவான். பாகண்டிகள் எண்ணிக்கையில் அதிகரிப்பதற்கு ஏற்பச் சமுதாயத்தில் கேடுகளும் அதிகரிக்கும். கேடுகளை அன்னை பராசக்தி ஆதரிப்பதில்லை. சிறுநெறி சென்று சிறுவாழ்வு வாழ்ந்து தங்களை அல்லற்படுத்தும் கீழ்மையிலே பாகண்டிகளை அன்னை விட்டுவிடுகிறாள். அத்தகைய ஊழலினின்று நல்லோர் நாளடைவில் உருவெடுப்பதற்கான சூழ்நிலையை அவள் செய்து வைக்கிறாள். நல்லார்க்கு அவள் இனியவள் என்பதும் பொல்லார்க்கு அவள் சம்ஹார மூர்த்தி என்பதும் வெளிப்படை. உலகப் போக்கை நேராக ஆராய்கின்றவர்களுக்கு இவ்வுண்மை விளங்கும். பாஷண்டித் தனத்தினின்று தன்னை விடுவித்துக்கொள்ளப் பேரார்வம் கொள்கின்றவனுக்கே அன்னையின் அனுக்ரஹம் வருகிறது. இயற்கை நடைமுறை இதற்கும் சான்றாக இருக்கிறது. நல்லறிவாளன் தான் பாஷண்டியாகாது தன்னைப் பாதுகாத்துக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறான்.

**सदाचार-प्रवर्तिका — ஸதாசார ப்ரவர்த்திகா** ३५६

நல்லொழுக்கத்தில் செல்லும்படி தூண்டுதல் செய்கிறவள்.

நல்லொழுக்கத்தில் வாழ விரும்புபவர்களுக்கு ஆதரவு தருவது நிர்மாணச் செயல். சிறு நெறியில் செல்பவர்களுக்கு அவ்வப்போது எச்சரிக்கை வருகிறது. துன்பத்துக்கு ஆளாவதே அந்த எச்சரிக்கையாகும். துன்பத்தைக் கொடுத்துத் துராசாரத்தில் செல்பவர்களுக்கு அம்பிகை பாடம் புகட்டுகிறாள். ஸ்மசான காளி இடது கரம் ஒன்றில் வெட்டுதற்கு வாளை ஏந்திக்கொண்டிருக்கிறாள். அதேவேளையில் வலது கரம் ஒன்றை அபயகரமாக ஏந்தியிருக்கிறாள். ஸதாசாரத்தில் செல்பவர்களுக்குப் பயம் ஒன்றுமில்லை. அம்பிகையிடமிருந்து அபயம் அல்லது எதற்கும் அஞ்சாமை என்னும் தெய்விகப் பெற்றி வந்தமைகிறது. இயற்கையின் கண் உயிர் ததும்பிக்கொண்டிருக்கிறது. கெட்ட செயலுக்குக் கண்டனமும் சீரிய செயலுக்கு ஆதரவும் சதா வந்துகொண்டே இருக்கின்றன. அம்பிகையின் ஆட்சி ஓய்வு ஒழிச்ச

வின்றி முறையாக நடைபெற்று வருகிறது என்பதை இயற்கை யின்கண் யாண்டும் காணலாம். ஸதாசாரத்தில் வாழ்வைச் செலுத்துபவர்கள் அதிவிரைவில் பக்குவமடைந்து அன்னையின் அருளுக்குப் பாத்திரமாகிறார்கள். இக்கோட்பாடு ஸதாசாரப்ர வர்த்திகா என்னும் நாமத்தின் வாயிலாக வெளியாகிறது.

## तापत्रयाग्नि सन्तप्त समाह्लादन चन्द्रिका ३५७

**—தாபத்ரயாக்னி ஸந்தப்த ஸாமாஹ்லாதன சந்த்ரிகா.**

**மூன்று விதமான துன்பங்களால் தகிக்கப்படுபவர் களை இரக்கத்தோடு உற்சாகப்படுத்துபவள்.**

சந்த்ரிகை என்பது நிலா வெளிச்சம். பெற்ற தாயிடம் உள்ள இரக்கம் இயற்கைத் தாயினிடத்திலும் உள்ளது. துன்பத் தைத் துடைப்பதற்கு அவள் நல்கியுள்ள நலன்களே அதற்குச் சான்றுகளாகின்றன.

தாபத்ரயங்கள் ஆத்யாத்மிதம், ஆதி பௌதிகம், ஆதி தெய் விகம் என விரிவடைகின்றன. மானுடன் ஒருவன் தனக்குத் தானே அறியாமையினால் உண்டு பண்ணிக்கொள்கிற துன்பம் ஆத்யாத்மிகம் எனப்படுகிறது. மக்களுள் பெரும்பாலோர் படும் துயரத்துக்குத் தாங்களே பொறுப்பாளிகளாகின்றனர். திரிவு பட்ட காட்சிக்கு ஒப்பமில்லாத கண்ணாடியே காரணமாகும். சினம், பொறாமை போன்ற சிறுமைகள் உள்ளத்தில் இடம் பெற்றுவிட்டால் அதன் விளைவாக மனிதன் மேலும் மேலும் துன்பத்துக்காளாகிறான். நல்லறிவு படைத்த மனிதன் ஆத்யாத் மிக தாபத்தைத் தன் விவேகத்தால் ஒதுக்கித் தள்ளக் கடமைப் பட்டவனாக இருக்கிறான்.

பஞ்ச பூதங்களுள் ஆகாசம் நீங்கலாக ஏனையவைகளால் விளையும் கேடுகள் ஆதி பௌதிக தாபம் எனப்படுகின்றன. ஆகா சத்தினின்று பரிணமித்துள்ள வாயுவானது வேகமாக அடித்து உயிர்வகைகளுக்குக் கேடு செய்கிறது. கோடை காலத்தில் வாயு சலனமற்றிருந்து புழுக்கத்தை உண்டுபண்ணி உயிர்களைத் துன்புறுத்துகிறது. வாயுவின் செயல் மிகைபட்டாலும் செய லற்றுப் போனாலும் அதனால் உயிர் வகைகளுக்குத் துன்பம்

வருகிறது. அவ்வாறே மற்ற மூன்று பூதங்களாலும் உயிர்களுக்குக் கேடு உண்டாகிறது. நெருப்பினின்று நீர் பரிணமிக்கிறது. நீரானது மழையாகப் பொழிந்து உயிர்களை ஓம்புகிறது. அது மிகைபடப் பொழிந்தாலும், பொழியாது ஒழிந்தாலும் உயிர்களுக்குக் கேடு உண்டாகிறது.

தேவதைகளால் உயிர்வகைகளுக்கு ஏற்படும் துன்பம் ஆதி தெய்விக தாபமாகும். உயிர் வகைகளுக்குத் துன்பத்தை உண்டு பண்ணுவது தேவதைகளின் நோக்கமன்று. வருகிற துன்பம் ஒன்றுக்குக் காரணம் கண்டுபிடிக்க நமக்கு இயலாவிட்டால் அது தெய்வாதீனமாக நிகழ்ந்ததென்று நமக்கு நாமே சமாதானம் செய்துகொள்கிறோம். நடந்து செல்லும் ஒருவன் தெரியாமல் சர்ப்பம் ஒன்றை மிதித்தான். தற்பாதுகாப்புக்காக அது அவனைத் தீண்டியது. அவன் மாண்டு போனான். தெய்வாதீனமாக அவன் மடிந்து போனான் என்று நாம் பொருள் படுத்துகிறோம். தற்செயலாய் நிகழ்கின்ற பல விபத்துக்களைத் தெய்வாதீனமென்று நாம் பொருள்படுத்துகிறோம். இந்த மூன்று விதத் தாபங்கள் மனிதனைத் துன்புறுத்துகின்றன. பிறகு அவனுக்கு ஆறுதலும் கிடைக்கிறது. அந்த ஆறுதல் அம்பிகையின் கருணையால் வந்தது. ஆதலால் அவளுடைய கருணை நிலாவெளிச்சத்துக்கு நிகராக இருந்துகொண்டு உயிர்கள் உள்ளத்தில் ஆறுதலை ஊட்டி வருகிறது. ஆதலால்தான் துன்பம் நிறைந்துள்ள பிரபஞ்ச வாழ்வில் அம்பிகையின் கருணையால் உயிர்வகைகள் ஏகதேசம் இன்பத்தைப்பெற்று இனிது வாழ்ந்திருக்கின்றன.

**तरुणी — தருணி** ३५८

திரட்சி அடைந்திருப்பவள்.

தகுதி அடைதற்பொருட்டு வாழ்ந்திருப்பதுதான் வாழ்வின் குறிக்கோள். ஜீவாத்மாக்கள் பிறந்து வளர்ந்து திரட்சியடைந்து பிறகு தேய்வுறுகின்றனர். தேய்வுறுவதும் பிறகு தோன்றாநிலையை எய்துவதும் ஜீவர்களுக்கு இன்றியமையாத செயல்களாகின்றன. இந்தப் பிரபஞ்சத்தின் தொகை அல்லது சமஷ்டியாக அன்னை பராசக்தி மிளிர்கிறாள். அவள் யாண்டும் தருணியாகவே திகழ்

கிருள். மூப்பும் தேய்வும் அவள்பால் இல்லை. நாம் வாழ்ந்து வரும் இத் தொல்லுலகம் மிக மிகப் பழையது என்றாலும் பல யுகங்களாக அது புத்தம் புதியதாக இருந்து வருகிறது. வயோதிகத்துக்கும் பிரகிருதித் தாய்க்கும் வெகுதூரம். ஆத்ம சாதகன் ஸ்தூல சரீரத்தில் முதிர்ச்சியையும் வயோதிகத்தையும் பெறலாம். ஆனால் மன அமைப்பில் யாண்டும் அன்னை பராசக்தியின் அருட் செல்வனாகத் தன் யௌவனத்தைக் காத்துவரலாம். மனதின்கண் யாண்டும் இளமை பொலிந்து கொண்டிருக்கமுடியும். மனதை இந்த உயர்ந்த நிலையில் வைத்திருப்பவர்களே தருணீ என்னும் தாயை நன்கு போற்றுபவர்கள் ஆகிறார்கள்.

**तापसाराध्या — தபாஸ ஆராத்யா** ३५९

தபஸ்விகளால் ஆராதிக்கப்படுகிறவள்.

திட்டப்படி நம்மைத் திருத்தியமைத்துக்கொள்வது தபஸ் எனப்படுகிறது. பூமியிலிருந்து வெட்டியெடுக்கப்பட்டுள்ள உலோகத் தாதுக்களை உலையில் இட்டு உருக்குவதுபோன்று மன நெகிழ்ச்சி என்னும் உலையில் இட்டு மனிதன் தன்னை வேண்டியவாறு புதுப்பிக்க முடியும். முறையாகத் தவத்தில் ஈடுபடுகிறவர்கள் வாழ்க்கையிலே செயற்கரிய செயலைச் செய்து வருகின்றனர். அவர்களை மக்கள் நிலையினின்று மாண்புமிக்க தெய்விக நிலைக்கு உயர்த்துவதால் தவமானது செயற்கரிய செயல் என்று போற்றப்படுகிறது.

அம்பிகையை வழுத்துதற்கு ஏற்ப அவர்களுக்கு அருள் நாட்டம் அதிகரிக்கிறது. உலை ஒன்றில் உள்ள அக்னியின் உஷ்ணம் அதிகரிப்பதற்கேற்ப அதில் உருக்கப்படும் உலோகத் தாது சுத்தியடைகிறது. அங்ஙனம் உள்ளத்தின் நெகிழ்ச்சி அதிகரிப்பதற்கேற்ப, தபஸியின் அமைப்பு தெய்விகமாகத் திருந்தியமைகிறது. அம்பிகையினிடத்துப் பூண்டுள்ள பக்திப்பரவசநிலையே அதற்கேற்ற அருள் அக்னியாக அமைகிறது. ஆகையால்தான் ஆத்ம சாதகர்கள் அம்பிகையின் நாட்டத்தில் ஈடுபட்டிருப்பதைத் தலைசிறந்த தபஸாகச் சான்றோர்கள் அங்கீகரிக்கின்றனர். அம்பிகையைப் போற்றுவது எங்ஙனம் என்பதை அம்பிகையைக் குறித்துத் தவம் புரிந்து கொண்டிருப்பவர்களிடமிருந்து நாம் அறிந்துகொள்ள முடியும்.

**तनुमध्या** — தனுமத்யா ३६०

ஒடுங்கிய இடையை உடையவள்.

உடுக்கை போன்ற இடையை உடைய்வள் அம்பிகை. ஒடுங்கிய இடையை உடையவர்கள் ஆற்றல் மிகப் படைத்தவர்களாக இருக்கிறார்கள். மக்களுள் பீமசேனன் ஆற்றல் மிகப்படைத்தவன். அவனுக்கு வ்ருகோதரன் என்பது ஒரு பெயர். ஓநாய் போன்று ஒட்டிய வயிற்றையும் இடையையும் உடையவன் என்பது அதன் பொருள். கணபதிக்கோ லம்போதரன் என்றும் மத்தள வயிறன் என்றும் பெயர்கள் வந்துள்ளன. நடமாட்டம் மிகக் கொள்ள மத்தள வயிறு படைத்தவர்களுக்கு இயலாது. ஒடுங்கிய இடையையும் வயிற்றையும் உடையவர்களுக்கு ஓடியாடி வினையாற்ற இயலுகிறது. அன்னை பராசக்தி யாண்டும் கிரியா சக்தி சொரூபிணியாய் இருப்பதால் அவள் தனுமத்யா என்னும் பெயர் பெற்றிருப்பது பொருத்தமானது.

**तमोपहा** — தமோபஹா ३६१

தமோகுணத்தை அகற்றுபவள்.

அக்ஞான இருளாகிய தமோகுணத்தின் கூறு செயலற்றுச் சோம்பிக் கிடப்பதாம். ஜடப்பொருள் சிறிது சிறிதாகச் சேதனமாக மாற முயன்று வருகிறது. உறங்கிக் கிடப்பவைகளையெல்லாம் தட்டி எழுப்புதற்கேற்ற சூழ்நிலையை இயற்கை செய்து வைக்கிறது. தமோகுணத்தால் கீழ்மைப்பட்டிருப்பவைகளையெல்லாம் படிப்படியாகப் பக்குவப்படுத்திச் சத்துவ குணத்துக்கு உயர்த்துவது அம்பிகையின் இடையறாத முயற்சியாகிறது.

**चितिः** — சிதி: ३६२

ஞான வடிவினளாக இருப்பவள்.

அக்ஞானத்தை அகற்றுவது ஞானம். ஞான சொரூபிணியாய் இருக்கும் அம்பிகை அக்ஞானத்தை எளிதாக அகற்றுகிறாள். ஞானத்தை மேலும் மேலும் வளர்ப்பதற்கே ஜீவகோடிகளனைத்தும் சதா முயன்று வருகின்றன. அப்படி முயல்கின்றவர்களுக்கு ஞானத்தை நல்குகிறவள் அன்னை பராசக்தி. ஞானம் ஓங்குதற்கு ஏற்ப வாழ்வு நல்வாழ்வாகத் திருந்தி அமைகிறது.

## तत्पद लक्ष्यार्था — தத்பத லக்ஷ்யார்த்தா ३६३

தத் என்ற பதத்தின் குறியாய் இருப்பவள்.

தத்த்வம் அஸி என்பது மகா வாக்கியம். மத சம்ப்ரதாயக் காரர்கள் இதை மூன்று விதமாக மொழி பெயர்க்கின்றனர். 'அதற்காக நீ இருக்கிருய்' என்பது துவைத மத மொழி பெயர்ப் பாகும். இக்கருத்தின்படி ஜீவன் தன்னைப் பரவஸ்துவினிடம் ஒப்படைத்துவிட்டால் பிறவிப்பிணியினின்று விடுபடுகிருன். 'அதனுடையதாக நீ இருக்கிருய்' என்பது விசிஷ்டாத்வைதக் கோட்பாடு. ஜகத்தும் ஜீவனும் பரமாத்மாவினுடைய சரீரமாக இருக்கின்றனர் என்பது இதன் கருத்து. உடல் தானே உயிரா காது; அது உயிருக்குரியதாய் இருக்கிறது. 'அதுவாக நீ இருக்கிருய்' என்பது அத்வைத மொழி பெயர்ப்பாம். ஜீவன் தன்னைத் தனி வியக்தியுடையவனுக எண்ணிக்கொண்டிருக்கும் உபாதியை ஒதுக்கிவிட்டால் தன் மயமாய் இருக்கும் வஸ்துபிரம்மமாம். தத் என்னும் பதத்துக்கு லக்ஷ்யார்த்தமாய் இருப்பவள் அன்னை பராசக்தி என்பது இந்த நாமத்தின் கருத்து.

## चिदेक रसरूपिणी — சிதேக ரஸரூபிணீ ३६४

பரவஸ்துவுக்கு விளக்கங்கள் பல உள. இது யாண்டும் இருந்தபடி இருப்பதால் பிரம்மம் சத்தியம் என்னும் விளக்கம் வந்துள்ளது. பிரம்மம் சத் என்று சொன்னாலும் பிரம்மம் சத்தியம் என்று சொன்னாலும் பொருள் ஒன்றே. பிரக்ஞானம் பிரம்மம். பிரம்மம் ஆனந்தம்; ஆனந்தம், ரஸ:, பிரேமை என்னும் பதங் களுக்கெல்லாம் பொருள் ஒன்றே. பிரக்ஞானம், சைதன்யம், சித் என்றெல்லாம் பகரப்பெறும் பொருளும் ஒன்றே. பரவஸ்து வானது அறிவு சொரூபமாய் இருப்பது மட்டுமன்று. ஆனந்த சொரூபமாகவும் அது உள்ளது. பேரன்பு சொரூபமாகவும் அதே பொருள் இலங்குகிறது. தன்னைத் தானே ரஸித்துக்கொள்ளும் பொருளாகவும் அது இருக்கிறது. அப்பொருளைப் பராசக்தி என்றும் பகரலாம்; பரப்பிரம்மம் என்றும் போற்றலாம். இந்த நாமத்தில் இக்கருத்துக்கள் யாவும் அடங்கியுள்ளன. பரவஸ்து

வைக் குறித்து மனனம் பண்ணுவதற்கும் தியானம் பண்ணுவதற்கும் இந்நாமம் பயன்படுகிறது.

**स्वात्मानन्द लवीभूत ब्रह्माद्यानन्द सन्ततिः** ३६५

ஸ்வாத்மானந்த லவிபூத ப்ரஹ்மாத்யானந்த ஸந்ததி:

யாண்டும் பரமானந்தத்தில் திளைத்திருப்பவள்.

அன்னை பராசக்தியின் ஆனந்தத்தை ஆழ்கடலோடு ஒப்பிடலாம். பிரம்மா, விஷ்ணு ருத்ரன் ஆகிய மும்மூர்த்திகளும் இந்திரன் போன்ற தேவர்களும் அடைந்துள்ள ஆனந்தத்தை கடலின்மேல் உருள்கின்ற ஒவ்வோர் அலையோடு ஒப்பிடலாம். இந்தக் கிருத்தியக் கர்த்தாக்களுடைய ஆனந்தமோ மனிதனின் சிற்றறிவுக்கு எட்டாத பேரானந்தமாகிறது. இந்த மூர்த்திகளினுடைய ஆனந்தம் அம்பிகையினுடைய ஆனந்தக் கடலிலுள்ள ஒவ்வோர் அலைக்குச் சமமென்றால் அன்னையின் ஆனந்தக் கடலை எந்தத் தீர்க்கதரிசியாலும் அளக்கமுடியாது என்பது வெளியாகிறது. ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ச தேவர் தம் அனுபூதியின் வாயிலாக இதை விளக்குகிறார்.

அன்னை பராசக்தி அகண்ட சச்சிதானந்த சொரூபிணி. அம்பிகையின் ஆனந்தக்கடலில் உள்ள பாகு முழுவதையும் குடிக்கத் தீர்மானம் செய்துகொண்டு எறும்பு ஒன்று ஆங்குச் சென்றது. கரையிலே சிதறுண்டு கிடந்த ஒரு துளிப் பாகினின்று அது தன் வயிறாரப் பருகியது. கொஞ்சம் பாகைத் தன் வாயில் எடுத்துக்கொண்டு தன் வளைக்குத் திரும்பியது. அடுத்த தடவை கடல் முழுவதையும் விழுங்கிக்கொண்டு போவதாக அது கருதியது. அந்த எறும்பின் கருத்துக்கு நிகர் ஆத்மஞானிகளும் தேவாதி தேவர்களும் படைத்துள்ள பேரானந்தம். அம்பிகையின் அகண்டாகார ஆனந்தத்தை எந்த மூர்த்தியினாலும் அளவுகட்ட முடியாது.

**परा** — பரா ३६६

பரா என்னும் சொல்லின் ஸ்வரூபமாய் இருப்பவள்.

தோற்றத்தில் இருக்கும் பராசக்தி தோன்றா நிலையிலும் இருக்கிறாள். நாம் நாள்தோறும் அனுபவிக்கின்ற சுஷுப்தி

அவஸ்தையில் ஜீவவியக்தி முழுவதும் ஒடுங்கி விடுகிறது. அந்நிலையில் ஜீவன் எடுத்துக்கொள்கிற நேரத்துக்கு ஏற்றவாறு தன் ஆற்றலைப் புதுப்பிக்கிறான். அயர்ந்த உறக்கம் நீடிப்பதற்கு ஏற்ப உடலும் உள்ளமும் புதுப்பிக்கப்படுகின்றன. இதே பாங்கில் அகிலாண்டங்களும் ஒடுங்கும்பொழுது அது சமஷ்டி எனப்படுகிறது. அந்நிலையில் அன்னை பராசக்தி அகிலாண்டங்களையும் கரந்தெடுத்துக்கொண்டு தோன்றா நிலையில் இருக்கிறாள். அகிலாண்டத்துக்கும் பிரளயமாகிய அந்நிலையில் அம்பிகை பரா என்று பகரப்பெறுகிறாள். சிருஷ்டி எவ்வளவு காலம் நீடிக்கிறதோ அவ்வளவு காலம் பிரளயமும் நீடிக்கிறது.

அவ்யக்த நிலையிலுள்ள சில பீஜங்கள் உருவெடுத்தவுடனே முளைக்கத் தகுதியற்றிருக்கின்றன. குறிப்பிட்ட காலம் அவற்றை வெறுமனே வைத்திருந்து முளைக்கப்போட்டால் அவை நல்ல மரம், செடி, கொடிகளாக வளரும். அவளிடத்து அவ்யக்தமாக அடங்கிக் கிடக்கின்ற ஜீவர்களும் தத்தம் வினைகளை வலுப்படுத்திக்கொள்கின்றன.

தோன்றா நிலையிலிருக்கின்ற பராசக்தி தோற்றத்துக்கு வருகின்றபொழுது சப்தப்பிரம்மம் தோன்றா நிலையிலிருந்து தோன்றியுள்ள நிலைக்கு வருகிறது. மானுட சரீரத்தில் மூலாதாரத்தில் தோற்றமாக வடிவெடுக்கும் ஓசை பிராணனுடைய உதவியைக்கொண்டு பேச்சுக்கேற்ற பீஜமாக உருவெடுக்கிறது. மணிபூரம் என்னும் சக்கரத்தை அது எட்டும்போது அதன் செயல் மேலும் வலுக்கிறது. அந்நிலையில் அதற்குப் பச்யந்தி என்று பெயர். அனாஹத சக்கரத்தில் அந்த ஓசையில் அறிவு உருவெடுக்கிறது. அந்நிலையில் அதற்கு மத்தியமா என்று பெயர். பேச்சாக அது பரிணமிக்கும்பொழுது அது வைகரீ என்னும் பெயர் பெறுகிறது. அகிலாண்டமெங்கும் இந்நிகழ்ச்சி நடைபெறும்பொழுது அது பிரம்மாண்ட குண்டலினி எனப் பெயர் பெறுகிறது. பிரபஞ்ச அதீதத்தில் அந்தச் சக்தி பராசக்தி என வழங்கப்பெறுகிறது. பிரபஞ்ச மயமாகத் தோற்றத்துக்கு வரும்பொழுது வெவ்வேறு படித்தரங்களில் அவளுக்கு வெவ்வேறு பெயர்கள் வந்தமைகின்றன.

**प्रत्यक्चितीरूपा — பிரத்யக்சிதீரூபா** ३६७

அந்தர்முக திருஷ்டியில் இருக்கும் அறிவு வடிவினள்.

சிற்றுயிர்கள் பேருயிர்களாகப் பரிணமிப்பது தோற்றத்துக்கு வந்துள்ள மூலப்பிரகிருகித் தாயின் திட்டமாகும். உலகில் உள்ள ஜீவராசிகள் யாவும் முன்னேற்றம் அடைய முயன்று வருகின்றன என்பது வெளிப்படை. ஒவ்வொன்றாக ஐந்து இந்திரியங்களையும் நிறைநிலையில் பெறுவது சிறந்த முன்னேற்றமாகிறது. புற உலகில் இருக்கின்றவைகளை ஆராய்வதற்கும் பயன்படுத்துவதற்கும் ஐம்பொறிகள் நன்கு பயன்படுகின்றன. பொறிவாயில் ஐந்தையும் அடைத்து அந்தர் முகமாகத் திரும்புவது மனிதனுக்கே சாத்தியமாகிறது. மற்ற உயிர்களுக்கு அது சாத்தியப்படாது. அந்தர் முகமாகத் திரும்புவதற்கு ஏற்ப அறிவு வளர்கிறது. அன்னை பராசக்தியின் துணையைக்கொண்டு மனிதன் எவ்வளவுக்கெவ்வளவு உள்ளத்தின் உள்ளே உள் நோக்கிச் செல்கின்றானோ அவ்வளவுக்கவ்வளவு அவன் தன் அறிவைப் பேரறிவாகத் திருத்தியமைக்கிறான். அத்தகைய பேரறிவு வடிவினளாய் இருப்பவள் அன்னை பராசக்தி.

**पश्यन्ती — பச்யந்தீ** ३६८

பச்யந்தீ என்னும் ஓசை வடிவினளாக இருப்பவள்.

ஓசையாக வடிவெடுத்து வருவதற்கிடையில் இன்னும் தெளிந்த நிலையை அடையாதிருக்கும்பொழுது அது பச்யந்தீ எனப்படுகிறது.

பச்யந்தீ என்னும் சொல் பார்க்கிறவள் எனப்பொருள்படுகிறது. மானுடன் தன்முதுகுபோன்ற ஏதேனும் ஓர் அவயவத்தில் நிகழ்வதைக்கூட மனக்கண்கொண்டு பார்க்கிறான். அவனுடைய அனுபவத்துக்கெட்டாமல் எந்த நிகழ்ச்சியும் அவன்பால் நிகழ்வதில்லை. அதே விதத்தில் அகிலாண்டமெங்கும் நிகழ்ந்து வருகின்ற நிகழ்ச்சிகளனைத்தையும் அம்பிகை நன்கு பார்த்து வருகிறாள். அவளுடைய பார்வையினின்று மறைத்து வைத்து யாரும் எக்காரியத்தையும் செய்ய முடியாது. ஜீவகோடிகள்

அனைத்தும் எண்ணுவது இயம்புவது, இயற்றுவது ஆகியயாவும் அவளுடைய காட்சியில் அடங்கியவைகளாக உள்ளன. அக் காரணத்தை முன்னிட்டு அவள் பச்யந்தீ என்னும் நாமத்தைப் பெற்றுள்ளாள்.

**परदेवता — பரதேவதா** ३६९

**தேவதைகளனைத்துக்கும் மேலான தேவதையாக இருப்பவள்.**

அரசர்கள் அனைவருக்கும் மேலான அரசனாக இருக்கிறவன் சக்கரவர்த்தி எனப்படுகிறான். பரவஸ்துவானது கணக்கற்ற தேவதைகளாக வடிவெடுத்திருக்கிறது. அப்படி வடிவெடுத்திருக் கிற தேவதைகள் ஒருவரோடு ஒருவர் முரண்படும் வெவ்வேறு பாங்குகளில் போய்விட முடியாது. அத்தேவதைகள் அனைவருக் கும் பரதேவதையாக அம்பாள் வீற்றிருக்கிறாள். அவளுடைய பெரிய திட்டத்துக்கு உட்பட்டு வெவ்வேறு விதங்களில் அந்தத் தேவதைகள் நடந்துகொள்ளலாம். ஆனால் அம்பாளுடைய திட்டத்துக்கு முரண்பட்டு அவர்களுள் யாரும் எதையும் செய்ய முடியாது. எல்லாத் தேவதைகளின் எல்லாவிதமான செயல் களும் அம்பாளுடைய பேரமைப்புக்கு உட்பட்டிருப்பதால் அவள் பரதேவதா என்னும் பெயர் பெற்றுள்ளாள்.

**मध्यमा — மத்யமா** ३७०

**மத்யமா என்னும் வாக்கு வடிவத்தில் இருப்பவள்.**

நாதப்பிரம்ம சொரூபமாக இருக்கும் பராசக்தி உச்சரிப்புக்கு உட்பட்டவைகளும், உட்படாதவைகளுமாகிய பல படித்தரங் களிலுள்ள ஒலிகளாக அமைந்திருக்கிறாள். ஓசையானது ஓரளவு விளங்கியும் விளங்காமலும் இருக்கிற படித்தரத்தில் அது மத்யமா என்னும் பெயர் பெறுகிறது. அத்தகைய மத்யமா சொரூபமாக அம்பிகை இருக்கிறாள் என்பது கோட்பாடு.

**वैखरीरूपा — வைகரீரூபா** ३७१

**வைகரீ என்னும் வாக்கு வடிவத்தில் இருப்பவள்.**

சொல்லானது காதிலே தெளிவுறப்படும்படியான வடிவெடுத் திருக்கிறபொழுது அந்த வாக்குக்கு வைகரீ என்னும் பெயர்

வந்துள்ளது. வெளிச்சத்துக்குப் பல படித்தரங்களிருப்பது போன்று ஓசைக்கும் பல படித்தரங்கள் உள்ளன. காதுக்கு எட்டாத ஒடுங்கிய ஓசை காதுக்கு எட்டியும் எட்டாமலும் இருக்கிற இடைத்தர ஓசை காதுக்குத் தெளிவுற எட்டுகிற தலைத்தர ஓசை ஆகிய எல்லாவிதமான ஓசை ஒலிகளாக வடிவெடுத்திருப்பவள் அம்பிகை என்பது கோட்பாடு.

**भक्तमानसहंसिका** — பக்தமானஸஹம்ஸிகா ३७२

**பக்தர்களுடைய மனதிலே வீற்றிருக்கின்ற அன்னப் பறவைக்கு ஒப்பானவள்.**

பக்தர்களுடைய மனது படிப்படியாகப் பரிசுத்தமடைந்து வருகிறது. பக்தி சாதனத்தில் மேலோங்குதற்கு ஏற்பச் சித்த மலம் அறுபடுகிறது. சித்தம் தெளிவடைதற்கேற்ப அதனுள் வீற்றிருக்கிற அம்பிகையின் சான்னித்யம் சுவானுபூதியில் அறியப்படுகிறது. இக்கோட்பாடானது கைலாயகிரிக்குத் தென்திசையிலிருக்கும் மானஸசரோவரம் வாயிலாக நன்கு விளக்கப்படுகிறது. பனிக்கட்டி உருகி நீராகப் பெருக்கெடுத்து அந்த ஸரோவரத்தில் நிறைந்துள்ளது. ஐம்பத்தாறு மைல் சுற்றளவுள்ள கடல்போன்று அத்தடாகம் காட்சி கொடுக்கின்றது. காலையில் காற்றடிக்காத பொழுது வரைந்து வைத்த படம் போன்று அது தென்படுகிறது. வடபுறத்திலிருக்கும் கைலாயகிரியின் பிம்பம் அதன்கண் தெளிவுறத் தென்படுகிறது. அத்தடாகத்தின் அடிமட்டம் மிக ஆழமானது எனினும் அது அசைவற்றிருக்கிற பொழுது அதனுள் போடப்படும் கல் ஒன்று நிதானமாகக் கீழே சென்று தரைமட்டத்தை எட்டுவதை நாம் தெளிவாகக் காணலாம். அத்தடாகமானது நிர்மலமாகவும் சலனமற்றதாகவும் இருப்பதே அதற்குக் காரணமாகும். ஆத்ம சாதகன் ஒருவனுடைய உள்ளம் அந்த ஸரோவரத்தோடு ஒப்பிடப்படுகிறது.

**कामेश्वर प्राणनाडी**— காமேச்வர ப்ராண நாடீ ३७३

**காமேஸ்வரருடைய உயிர்நாடியாக இருப்பவள்.**

உயிர்நாடி சரியாக அடித்துக்கொண்டிருக்கும் வரையில் ஜீவர்கள் உயிர் வாழ்ந்திருக்கிறார்கள். ஜீவநாடி அடிப்பது

நின்றவுடன் உயிர்கள் மடிநதுபோகின்றன. ஒரு ஜீவனுடைய ஜீவநாடி செய்கிற வேலைக்குத் துவக்கமும் முடிவும் உண்டு. காமேஸ்வரனாகிய பரமசிவனுக்குப் பிறப்பும் இல்லை, இறப்பும் இல்லை. அவருக்கு யாரும் அழிவை உண்டுபண்ணமுடியாது. தேவர்கள் அமிர்த பானம் பண்ணியிருந்தும் பிரளய காலத்தில் ஒடுங்கிவிட்டார்கள்; அவர்களுடைய பிராண நாடியின் வேலையும் நின்றுவிட்டது. சிவனாரோ ஹாலஹால விஷத்தை உண்டார். அப்படி இருந்தும் அவருக்குத் தோற்றமும் ஒடுக்கமும் இல்லை. அவர் யாண்டும் இருந்தபடி இருக்கிறார். அவருக்கு அபின்னமாய் இருப்பது அன்னை பராசக்தி. அன்னை பராசக்தியின் சொரூபத்துக்குத் தோற்றமும் ஒடுக்கமும் இல்லை. சிவசக்தி பழுது ஒன்றுமில்லாது யாண்டும் தன் மயமாய் இருக்கும் பரவஸ்துவாம். அதன் ஜீவநாடியும் பழுதற்று இருக்கிறது. சிவசக்திக்கு எக் காரணத்தை முன்னிட்டும் விகாரமோ வினாசமோ இல்லை என்னும் கோட்பாடு இந்த நாமத்தில் அடங்கியுள்ளது.

**कृतज्ञा — க்ருதக்ஞா** **३७४**

நிகழ்ந்து வருகிற செயல்களையெல்லாம் அறிகின்றவள்.

பிரபஞ்சம் முழுதும் கர்ம சொரூபமாய் இருக்கிறது. ஜட வஸ்துக்கள் உணர்ச்சியில்லாது கர்மம் புரிகின்றன. அண்டங்களில் உள்ள கோளங்களும் உணர்ச்சியில்லாது சுழன்று வருகின்றன. ஆனால் அன்னையின் சந்நிதானத்தில் அவைகளின் இயக்கங்கள் நடைபெற்றுக் கொண்டிருப்பதால் அன்னை அவற்றின் செயல்களைச் சதா அறிந்துகொண்டிருக்கிறாள்.

உயிர் வகைகள் யாவும் தாம் புரிகின்ற கிருத்தியங்களைச் சற்று ஏறத்தாழ அறிகின்றன. நலந்தரும் கிருத்தியங்களைச் சில உயிர்வகைகளும் கேடு விளைவிக்கும் கர்மங்களை வேறு சில உயிர்வகைகளும் செய்கின்றன. நலம், கேடு ஆகிய இருவினைகளும் சிருஷ்டியில் இடம் பெற்றிருக்கின்றன.

ஒரு சூழ்நிலையில் ஒரு கூட்டத்துக்கு நலனாகத தென்படும் கிருத்தியம் மற்றொரு சூழ்நிலையில் வேறு ஒரு கூட்டத்துக்குக் கேடாகிறது. கேட்டையும் நலனையும் கால, தேச, நிமித்தத்

துக்கு ஏற்றவாறு நிகழ்வதற்கு அம்பிகை இடங்கொடுப்பதால் அவள் கிருதக்ஞா என்னும் பெயர் பெறுகிருள்.

ஜீவர்களுடைய எல்லாச் செயல்களுக்கும் சர்வகாலமும் சூரியன், சந்திரன், எமன், காலன், பஞ்சபூதங்கள் ஆகியவை சாட்சிகளாக இருந்து வருகின்றன. அனைத்துக்கும் மேலாக அன்னை பராசக்தி அவைகளின் கிருத்தியங்களை அறிந்து வருகிருள். பிரபஞ்சத்திலுள்ள அனைத்தும் அறிந்தோ அறியாமலோ செய்கின்ற எல்லாச் செயல்களையும் அவள் சதா அறிந்து வருகிருள். எனவே, அவள் கிருதக்ஞா என்னும் பெயர் பெறுகிருள்.

செய்த உபகாரத்திற்குப் பிரதி உபகாரம் செய்தல் என்னும பொருளும் கிருதக்ஞா என்னும் சொல்லில் அடங்கியுள்ளது. நன்றியறிதல் என்றும் அச்சொல் பொருள்படுகிறது. விவேகம் படைத்த நல்ல ஜீவர்கள் சத்கர்மங்களையே யாண்டும் செய்வதால் அது அம்பாளுக்குப் பெருமகிழ்வை ஊட்டுகிறது. அந்த ஜீவர்களிடத்துக் கருணை காட்டும் பாங்கில் அம்பிகை அன்னவர்களுக்கு விவேகத்தையும் ஞானத்தையும் நல்குகிருள். ஜீவர்கள் செய்கின்ற சாமானியமான சத்கிருத்தியங்களுக்குப் பிரதி உபகாரமாக அவள் ஞானத்தையே வழங்குகின்ருள் என்ருல் அவளுடைய கிருதக்ஞையை யார்தான் போற்ருது இருக்க முடியும்?

**कामपूजिता** — காமபூஜிதா ३७५

மன்மதனுல் ஆராதிக்கப்படுகிறவள்.

பிரஜாவிருத்திக்கு முகாமையாயிருப்பவன காமன். பிரவிருத்தி மார்க்கத்தில் செல்லும் அனைவர் உள்ளத்திலும் மன்மதன் இடம் பெறுகிருன். அவன் தன் ஸ்வதர்மத்தைச் செய்வதற்குச் சக்தியின் உதவி அவசியமாய் இருக்கிறது. தன் திறனை யாண்டும் காப்பாற்றி வைக்கவேண்டுமென்று அவன் சர்வ காலமும் அம்பிகையை உபாசித்துக்கொண்டிருக்கிருன். சக்தியின் துணை இல்லாவிட்டால் இயற்கையில் எச்செயலும் நிறைவேருது. தன் செயலுக்கேற்ற ஆற்றலை மன்மதன் அம்பிகையிடமிருந்து பெறுகிருன்.

**शृङ्गार रस सम्पूर्णा — சிருங்கார ரஸ ஸம்பூர்ணு** ३७६

சிருங்கார ரஸத்தைப் பூரணமாக உடைத்திருப்பவள்.

காமனுடைய கிருத்தியத்துக்கும் சிருங்கார ரஸத்துக்கும் நெருங்கிய தொடர்புண்டு. மன்மதனுடைய கிருத்தியம் ஜீவர்களிடம் நன்கு நிறைவேறுவதற்கு அந்த ஜீவர்களுடைய உள்ளத்தில் காம விகாரம் வடிவெடுக்க வேண்டும். காம உணர்ச்சியை வளர்ப்பதற்கான ஓசைகளை அடிப்படையாக வைத்துக்கொண்டு வடிவெடுக்கின்ற இன்னிசையைக் கேட்பதன் விளைவாகக் காமத்துக்கு வலிவு உண்டாகிறது. ஓர் ஆண் பறவையும் பெண் பறவையும் சேர்வதற்கான பருவம் வரும்பொழுது அவை இனிய ஓசையை எழுப்பித் தங்களுக்கிடையில் இணக்கத்தை உண்டு பண்ணிக்கொள்கின்றன. மேனியின்மீது கட்டழகு பொலியும் பருவத்திலும் காம ரஸம் வளர்க்கப் பெறுகிறது. தக்க பருவத்தில் ஆண் மயில் போன்ற பறவைகள் புதிய அழகு பெற்றுப் பொலிவது இதற்குச் சான்ருகிறது. சில உயிர் வகைகள் அழகு பொலிய ஆடிக் காமத்தை வளர்க்கின்றன. நாட்டியக் கலையில் பக்தியை வளர்ப்பதற்கான பகுதி இருப்பதுபோன்று காமத்தை வளர்ப்பதற்கான பகுதியும் இருக்கின்றது. காம ரஸத்திற்குப் பிறப்பிடமாக அம்பிகை இருப்பதால் அவள் அந்த ரஸத்தைப் பரிபூரணமாக உடைத்திருப்பதாக இயம்பப் பெறுகிருள்.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் திவ்ய பாவம் என்னும் சாதன வகையை மேற்கொண்ட பொழுது சிருங்கார ரஸத்தின் உச்ச நிலையை அடையப்பெற்ருர். சாதாரணச் சாதகர்களைக் காம வலையில் ஆழ்த்தக்கூடிய கவர்ச்சிகரமான அம்பிகையின் உருவத்தின்முன் தம்மைக் குழந்தையாக வைத்துக்கொண்டு அவர் அச்சக்தியின வசகரத்தை வென்ருர். இவ்வாறு சிருங்கார ரஸத்திற்கும் ஆதி சக்தியாய் அன்னை பராசக்தி இருப்பதால் அவள் சிருங்கார ரஸ ஸம்பூர்ணு எனப் போற்றப்பெறுகிருள்.

**जया — ஜயா** ३७७

வெற்றி வடிவினள்.

வாழ்க்கையில் உயிர் வகைகள் அனைத்தும் பலப்பல குறிக் கோள்களை நாடி முயன்று வருகின்றன. அவை பூர்த்தியாகும் பொழுது அது ஜயம் அல்லது வெற்றி ஆகிறது. உயிர்கள் அப் போதைக்கப்போது அடையும் மகிழ்ச்சி ஏதேனும் ஒரு வெற்றி யின் விளைவாக வந்தமைகிறது. பொதுப்பட வாழ்வில் தோல் வியை விட வெற்றியே அதிகமாக நிகழ்ந்து வருவதால்தான் உயிர் வகைகள் இன்புற்றிருக்கின்றன. அது அம்பிகையினிடத் திருந்து வந்துள்ள வரப்பிரசாதமாகும். வெற்றியை வழங்கி அம்பிகை உயிர்வகைகளை ஊக்கப்படுத்தி வருவதால் அவள் ஜயா என்னும் நாமம் பெற்றுள்ளாள். வெற்றிகளுள் தலையாய பரஞானம் உட்பட உயிர்களின் எல்லா முயற்சிகளையும் அம்பிகை நிறைவேற்றி வருவதால் அவள் ஜயா என்னும் பெயர் பெற் றுள்ளாள்.

**जालन्धरस्थिता — ஜாலந்தர ஸ்திதா** ३७८

ஜாலந்தரம் என்னும் க்ஷேத்திரத்தில் விஷ்ணுமுகீ என்னும் பெயர் படைத்தவளாக வீற்றிருப்பவள்.

ஸ்தலம் ஒன்றுக்கு மூன்று காரணங்களை முன்னிட்டு மகிமை வருகிறது. அவற்றுள் மூர்த்தியும் ஸ்தலமும் ஈண்டு சிலாகித்துக் கூறப்பெறுகின்றன. ஸ்தலத்திற்கு உண்டாகும் மகிமையைப் பரமஹம்சதேவர் இங்ஙனம் விளக்குகிறார்: 'பசு ஒன்றின் மேனி முழுவதும் இரத்தமயமாகப் பால் வியாபித்திருக்கிறது. ஆனால் பாலைப் பெறுதற்குப் பசுவின் மடியைக் கறக்கிறோம். புண்ணிய க்ஷேத்திரம் என்பது பசுவின் மடிக்கு நிகர். அது புனிதம் பெறு வதற்குக் காரணம் ஆங்குச் சான்றோர்கள் பலர் புரிந்த தபஸே யாகும். எங்கும் நிறைந்துள்ள பரவஸ்துவின் சான்னித்தியத் தைச் சிறப்பாகப் புண்ணிய க்ஷேத்திரத்தில் உணரலாம். அதன் கண் எழுந்தருளப் பண்ணியிருக்கிற மூர்த்தியை முன்னிட்டும் அவ்விடத்துக்கு மகிமை உண்டாகலாம். பிராணப் பிரதிஷ்டை பண்ணி விக்ரஹம் ஒன்றனுள் சான்றோர்கள் தெய்வ சான்னித்தி யத்தை நிரந்தரமாக ஆவாஹனம் பண்ணுகின்றனர். காந்தம் என்னும் ஜடசக்தியை இரும்பின்கண் ஏற்றலாம். மின்சக்தியைத் தாமிரக்கம்பியில் செலுத்தலாம். அதுபோல், தக்க விக்ரஹங் களில் தெய்வ சான்னித்தியத்தைச் சான்றோர் ஆவாஹனம் செய்

கின்றனர். அத்தகைய விக்ரஹம் வைஷ்ணவத்தில் அர்ச்சாவ தாரம் என்னும் பெயர் பெறுகிறது. இங்ஙனம் சிறப்பு வாய்ந்த ஸ்தலங்களில் உள்ள மூர்த்திகளைப் பக்தி பூர்வமாக வழிபடுங் கால் ஒரு சாதகனுக்குப் பக்தியும், ஞானமும் வாய்க்கின்றன. ஆங்காங்கு முறைப்படி க்ஷேத்திர யாத்திரை செய்து தெய்வ வழி பாடு நிகழ்த்துவது சாதனத்தில் முன்னேற்றமடைவதற்கு உற்ற உபாயமாம். இக்கோட்பாட்டை ஞாபகம் ஊட்டுதற்கு ஜாலந்தர ஸ்திதா என்னும் பெயர் அம்பிகைக்கு வழங்கப்பட்டுள்ளது.

**ओड्याणपीठ निलया** — ஓட்யாணபீட நிலயா ३७९

ஒட்டியாணம் என்கின்ற பீடத்தின்கண் இனிது வீற்றிருப்பவள்.

ஜாலந்தரா, ஒட்டியாண என்னும் பெயர்கள் புறத்திலே ஆங்காங்கு இருக்கும் க்ஷேத்திரங்களுக்குரிய பெயர்களாக அமைந்திருப்பது போன்று அகத்திலே உள்ள சில யோகச் சக்கரங்களுக்கும் விளக்கமாக உள்ளன. உதாரணமாகக் காம கிரி என்னும் க்ஷேத்திரம் மூலாதாரத்துக்கும் பூரணகிரி என்னும் க்ஷேத்திரம் அனாஹதச் சக்கரத்துக்கும் ஜாலந்தரம் என்னும் க்ஷேத்திரம் ஆக்ஞை சக்கரத்துக்கும் ஒட்டியாணம் என்னும் பீடம் விசுத்தி சக்கரத்துக்கும் புறச்சின்னங்களாக அமைந் துள்ளன. அகத்தில் அமைந்துள்ள பல மகிமைகளுக்கு விளக்க மாகப் புறத்திலும் பல க்ஷேத்திரங்களை ஆன்றோர்கள் நியமித் தனர். அகத்தில் இருக்கும் தத்துவங்களே யாண்டும் ஆத்ம சாதகர்களால் முற்றிலும் போற்றப்படுபவைகளாகின்றன. அவை களை மந்த அதிகாரிகளுக்கும் சுட்டிக்காட்டுதற்குப் புறத்தில் அமைந்துள்ள க்ஷேத்திரங்கள் பயன்படுகின்றன. நல்ல ஆத்ம சாதகன் அகம், புறம் என்னாதபடி யாண்டும் அம்பிகையின் சான்னித்தியத்தையே உணர்ந்து வருவானாகில் அவன் சாதனத் தில் முன்னேற்றமடைகிறான்.

**बिन्दुमण्डल वासिनी** — பிந்து மண்டல வாஸினீ ३८०

பிந்து மண்டலத்தில் வசிப்பவள்.

மானுட உடலில் உள்ள ஏழு ஞானபூமிகளுள் ஏழாவது ஞானபூமியாகிய சஹஸ்ராரம் உச்சந்தலையில் உள்ளது. அங்

பிரம்மரந்த்ரம் என்றும் பிந்து மண்டலம் என்றும் பகரப்பெறு கிறது. ஜீவாத்மன் ஜடநிலையினின்று படிப்படியாகச் சேதனத் தின் மேல்நிலைகளுக்குப் போகிறான். ஏழாவது ஞானபூமியே சேதனத்தின் உச்சநிலையாகிறது. பராசக்தி தானே சித்சொரூ பிணியாதலால் அவளுடைய சான்னித்தியம் பிந்து மண்டலத்தில் சிறப்புற்றிருப்பதில் வியப்பொன்றுமில்லை.

இக்கோட்பாட்டைப் பரமஹம்சதேவர் ஓர் உபமானத்தின் மூலம் விளக்குகிறார். பணக்காரன் ஒருவனுக்கு ஆங்காங்குப் பல வீடுகள் இருக்கின்றன. அந்தந்த வீடுகளில் அவன் அப்போதைக் கப்போது சென்று வசித்து வருகிறான். அப்படிச் செய்து வருவதற்கிடையில் குறிப்பிட்ட ஒரு வீட்டில் அவன் பெரிதும் வசித்து வருகிறான். அதே விதத்தில் அன்னை பராசக்தியின் இருப்பிடம் அகிலாண்டங்களாய் இருப்பதற்கிடையில் அவளு டைய தெளிந்த சான்னித்தியம் பிந்து மண்டலத்தில் அமைந் துள்ளது.

**रहोयागक्रमाराध्या — ரஹோயாக க்ரமாராத்யா** ३८१

**ரஹோயாகம் என்னும் முறைமையோடு கூடிய வழி பாட்டின் வாயிலாகப் போற்றப்படுபவள்.**

பரம்பொருள் வழிபாடு பலப்பல பாங்குடையதாயிருக்கிறது. புறத்திலே படாடோபத்தோடும் கிரியா விசேஷங்களோடும் விளம் பரத்தோடும் வழிபாடு செய்வது ஒருமுறை. புறச்சின்னங்கள் ஏதுமில்லாமலும் திரவியங்கள் ஏதும் இல்லாமலும் ஒரு சாதகன் ஏகாந்தத்தில் அந்தர்முக திருஷ்டி பூண்டு மானச பூஜை மயமாக அம்பிகை வழிபாடு செய்கிறான். இத்தகைய சிறந்த வழிபாடே அம்பிகையின் பெரும் திட்டத்துக்கு முற்றிலும் உகந்த தாகிறது. ஜீவாத்மனைப் படிப்படியாகத் தன்மயமாக்கிப் பக்குவப் படுத்தித் தன்னில் ஒடுங்கும்படி செய்வது அன்னை பராசக்தியின் பெரும் திட்டமாகிறது. உபமானம் ஒன்றின்மூலம் இதை விளக்கலாம். சூரிய வெப்பத்தால் கடலினின்று ஆவியாகி மேலே கிளம்பிச் செல்லும் நீர் வானத்தில் வெவ்வேறு வடிவெடுத்து மிளிர் கிறது. ஹிமாசலம் போன்ற இடத்தில் உறைபனியாக வீழ்ந்து நெடுங்காலம் அடைபட்டுக் கிடக்கிறது. பிறகு அது உருகிச்

சிற்றேடையாக வடிவெடுத்துப் பெரு நதியில் வந்து வீழ்கிறது. பலவிதத்திலும் மக்களுக்குப் பயன்படும் நதி இறுதியில் சமுத்திரத்தை வந்து எட்டுகிறது. வானத்துக்குச் சென்ற நீரின் மற்றொரு பகுதி சமுத்திரத்துக்கு நேர் மேலே மழையாக மாறிச் சமுத்திரத்தினுள் வீழ்கிறது. அத்தகைய நிகழ்ச்சியில் விளம்பரம் ஒன்றுமில்லை. அதற்கு நிகராகச் சில சாதகர்கள் அந்தர்முக திருஷ்டியிலேயே கருத்தைச் செலுத்தி அம்பிகையின் வழிபாட்டை நிறைவேற்றுகின்றனர். அத்தகைய மேலான வழிபாடு மனபரிபாகம் அடைந்துள்ள சாதகர்களுக்கே சாத்தியமாகிறது. சத்துவ குணத்தில் அவர்கள் ஓங்கியிருப்பதால் வெளிப் பகட்டு எதையும் அவர்கள் விரும்புவதில்லை. அந்தக்கரண சுத்தி ஒன்றிலேயே அவர்கள் கண்ணும் கருத்துமாய் இருக்கின்றனர். அதுவே வாழ்க்கையின் மேலான திட்டமாகிறது. ஆதலால்தான் சித்த விருத்தியை விரைவில் ஒடுக்கிக்கொண்டு போகிற வழிபாடு அம்பிகைக்கு முற்றிலும் உகந்ததாகிறது. இக்கோட்பாட்டை இந்த நாமம் நன்கு விளக்குகிறது.

**रहस्तर्पणतर्पिता — ரஹஸ் தர்ப்பண தர்ப்பிதா ३८२**

ரஹஸ்யமான தர்ப்பணத்தால் மகிழ்விக்கப்படுகிறவள்.

வழிபடப்பெறும் மூர்த்தியைச் சாதகன் ஒருவன் எக்கிரியையைக் கொண்டு திருப்திப்படுத்துகிறானே அக்கிரியைக்குத் தர்ப்பணம் என்று பெயர். கிரியைகள் அனைத்திலும் சாலச் சிறந்தது மனது என்னும் தத்துவத்தைப் பரத்தின்பால் ஒப்படைப்பதாம். மனிதன் வேறு எதைத் துறந்தாலும் தன் மனதைத் துறப்பது அரிது. அவன் தன் வழிபடுதெய்வமாகிய பராசக்தியை ஞானாக்னியாகக் கருதி அந்த அக்னியின்கண் தன் மனதை ஆஹுதியாகப் படைப்பானாகில் அதற்கு நிகரான வழிபாடு இல்லை. அது ரஹஸ்யமாகத் தனக்குள்ளேயே நிகழ்கிறது. யாருமறியாத ஏகாந்தம் தனக்குள்ளேயே இருக்கிறது. புறத்தினின்று வருகின்ற விக்கினங்களையெல்லாம் வைராக்கியத்தின் வாயிலாகத் தடுத்துவிடலாம். அகத்திலே அற்புதமான சூழ்நிலையை அமைத்துக்கொள்ளலாம். அத்தகைய ஏகாந்தத்தில் சாதகன் மனமுவந்து தன்னையே தன் வழிபடு தெய்வத்துக்கு அர்ப்பணம் செய்வதால் அவனுக்கு அக

மகிழ்வு உண்டாகிறது. அச்செய்கையை அம்பிகையும் ஒப்பற்ற தர்ப்பணமாக ஏற்றுக்கொண்டு அகமகிழ்வு அடைகின்ருள்.

**सद्यः प्रसादिनी — ஸத்ய: ப்ரஸாதினீ** ३८३

முறையாக வழிபாடு செய்கிறவனுக்கு உடனடியாக அனுக்ரஹம் செய்பவள்.

புறச்சடங்குகளேயும் பொருள்களேயும் அறவே ஒதுக்கித் தள்ளிவிட்டு அகத்திலே விரைவில் ஆத்மபரிபாகம் அடைந்து வருவது ரஹோயாகம், ரஹஸ் தர்ப்பணம் ஆகிய ஞான மார்க்கத்துக்குரிய வழிபாடுகளின் குறிக்கோளாகிறது. கர்மங்கள் யாவும் ஞானத்தில் முற்றுப்பெறுகின்றன என்பது வேதாந்தக் கோட்பாடு. அதை அனுசரித்தே இந்த வழிபாடுகள் வந்து அமைந்திருக்கின்றன. ஞானப்பிரகாசம் வடிவெடுப்பதும் அக்ஞான இருள் அகலுவதும் அம்பிகையின் அனுக்ரஹம் வாய்ப்பதும் ஒன்று சேர்ந்து நிகழ்கின்றன. கங்கை, யமுனே, சரஸ்வதி ஆகிய மூன்றும் கூடும் இடத்துக்குக் திரிவேணி என்று பெயர். புற அமைப்பில் சரஸ்வதி நதி காட்சியில் இல்லே. அக அமைப்பில் அக்ஞான இருள் மாயமாய் மறைந்து போகிறது. கங்கையும் யமுனேயும் ஞானத்துக்கும் பக்திக்கும் சின்னமாய் அமைந்துள்ளன. பக்குவமடைந்துள்ள ஆத்ம சாதகன் புரிகின்ற ஞான வேள்வியும், அம்பிகையின் அனுக்ரஹமும் சேர்ந்து அவனேச் சுலபமாக அம்பிகையில் ஒன்றுபடுத்தி விடுகின்றன. அம்பிகையின் அனுக்ரஹமோ சாதகனுக்கு மிக எளிதில் அகப்படுவதாகிறது. கருணையின் பாங்கும் ஞானத்தின் மேன்மையும் இங்கு ஒன்று சேர்ந்து மிளிர்கின்றன. தாயுடன் சேய் ஒன்று சேர்ந்திருப்பதில் சிரமம் ஏதுமில்லே என்பது இந்நாமத்தின் உட்பொருள்.

**विश्वसाक्षिणी — விச்வஸாக்ஷிணீ** ३८४

அகிலாண்டங்களின் நடைமுறைகளுக்குக் கண்காணிப்பு வைத்திருப்பவள்.

பிரம்மவாதமும், மாயாவாதமும் இந்நாமத்தின் வாயிலாக இணேக்கப்பெறுகின்றன. பரப்பிரம்மம் வேறு, பராசக்தி வேறு அன்று. பிரபஞ்சமாகிய மாயா காரியங்களுக்குப் பரப்பிரம்ம

மாகிய பராசக்தி சாக்ஷியாய் இருக்கிருள். தன்னிடத்தே தோன்றி தன்னில் நிலைபெற்றிருந்து பின்பு தன்னில் எது ஒடுங்குகிறதோ அது மாயாசக்தி. பராசக்தியின்கண் மாயாசக்தி இடம் பெற்றிருப்பதை முன்னிட்டுப் பராசக்திக்கு இழுக்கு ஏதும் உண்டாவதில்லை. நிறைபொருளாகிய அவள் தன்னில்தானுய் யாண்டும் நிலைத்திருக்கிருள். அவள் அருளாலேயே அண்டகோடிகளும் ஜீவகோடிகளும் உருவெடுத்து வருகின்றன. கானலானது எந்தவிதமான விகாரமும் அடையாமல் தன்மீது கானல்நீரைத் தோற்றுவித்துக்கொள்கிறது. இந்த உபமானத்தின் வாயிலாகச் சாக்ஷியாய் இருக்கிற பரவஸ்துவுக்கும் அதன் காட்சிக்கு இலக்காக வந்தமைகிற மாயப் பிரபஞ்சத்துக்கும் உள்ள தொடர்பு நன்கு விளக்கப் பெறுகிறது. எங்கும் வியாபகமாயிருப்பதால் விஸ்வம் என்னும் பெயர் பெற்றுள்ள மாயப்பிரபஞ்சத்துக்குத் தோற்றம், இருப்பு, ஒடுக்கம் ஆகியவை உண்டு. ஒடுக்கதில் அது எங்குமில்லாது மறைந்துபட்டுப் போகிறது. ஆனல் விஸ்வத்தினுடைய அந்த நிகழ்ச்சிகள் யாவற்றுக்கும் சாக்ஷிணியாக வீற்றிருக்கும் அம்பிகையிடத்து எந்தவிதமான மாறுதலுமில்லை. அவளுடைய சன்னிதான விசேஷமே விஸ்வத்தின் தோற்றம், இருப்பு மற்றும் ஒடுக்கத்துக்கு முகாமையாகிறது.

**साक्षिवर्जिता** — ஸாக்ஷிவர்ஜிதா ३८५

தான் இருப்பதற்குச் சாட்சியாக வேறு யாரும் இல்லாதவள்.

அண்டகோடிகளும் ஜீவகோடிகளும் வருவதையும் போவதையும் பாாத்துக்கொண்டிருக்கும் பாங்குடைய அன்னை பராசக்தியை வேறு யாராவது கண்காணித்து வருகிருர்களா என்னும் கேள்வி எழலாம். அவள் அகண்ட வஸ்து. விசாலாக்ஷி என்பது அவள் பெயர். அவள் அகண்ட வஸ்துவாதலால் கால, தேச, வர்த்தமானத்தில் கட்டுப்படாதவள். அவளுடைய கண் பார்வை நீக்கமற எங்கும் நிறைந்திருக்கிறது. அகண்ட வஸ்துவுக்கு அன்னியமாக மற்றொரு வஸ்து வரமுடியாது. பின்னப்படாதவளாகவும் பூரணியாகவும் விளங்கும் அன்னை பராசக்தி இரண்டாவது பொருளைப் படையாத அத்வைத வஸ்துவாக இலங்குகின்ருள். அவளுக்குப் புறம்பாக வேறு ஒரு வஸ்து இல்லாததால்

அவளை கண்காணிப்பதற்கு வேறு யாரும் இல்லை. தான் இருப்பதைத்தானே அறியும் அம்பிகை தன்னிடத்திருந்து தோன்றி வருகின்ற விஸ்வம் அனைத்தையும் அறிகிறாள். அவளுடைய ஆதிக்கத்துக்கு அனைத்தும் உட்பட்டு இருக்கின்றன. அவளுடைய மகிமைக்கு அவளே சாக்ஷியாகிறாள். அவளுக்குப் புறம்பாக வேறு எப்பொருளும் இல்லை என்பது இந்நாமத்தின் பொருள்.

**षडङ्ग देवता युक्ता — ஷடங்க தேவதா யுக்தா** ३८६

ஆறு அங்க தேவதைகளோடு கூடியிருப்பவள்.

ஆறு தேவதைகள் வீற்றிருக்கும் இடங்கள் ஹிருதயம், தலை,முடி, கண், கவசம், ஹஸ்தம் என்பவைகளாம். இந்த அங்கங்களோடு கூடியிருக்கிற மூர்த்தி நிறைவடிவம் எடுக்கிறது. சிவனுக்கு ஆறு அங்கங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. சிவன் வேறு சக்தி வேறு அல்ல. ஆதலால் சிவனுக்குரிய அங்கங்களை அம்பிகைக்கு உரியவைகள் எனப் பொருள் படுத்தலாம். சிவபெருமான் 'சர்வக்ஞர்' அல்லது ஓதாது உணர்ந்தவராகிறார். நிறைஞான வடிவினராய் அனைத்தையும் அறிந்திருத்தல் அவருடைய முதல் அங்கம். அவர் யாண்டும் குறையில்லா நிறைநிலையில் இருப்பதால் அவர் திருப்தியுற்றிருக்கிறார். இது அவருடைய இரண்டாவது அங்கம். தாம் இருப்பதைத் தாமே அறிந்துகொள்வதால் அவர் அனாதி பேதமாக இருக்கிறார். சான்று ஒன்றின் மூலம் இதை விளக்கலாம். வீடு ஒன்றுக்கு 'நான் இருக்கிறேன் என்னும் உணர்ச்சியில்லை. வீட்டில் குடியிருப்பவனுக்கு அவ்வுணர்ச்சி இருக்கிறது. அதேபாங்கில் சிவனார் அண்டம் முழுதும் நிறைந்திருக்கிறார். சிவனாரிடத்து விளங்கும் போதத்துக்குத் துவக்கம் கிடையாது. அது யாண்டும் நிலையுற்றது. ஸ்வதந்தரம் அவருடைய நான்காவது அங்கமாகிறது. பிறர் ஆட்சிக்கு உட்பட்டிருப்பது பரதந்த்ரம். தன் ஆட்சியிலேயே தங்குத்தடையின்றி இருப்பது ஸ்வதந்த்ரமாகும். சிவனார் படைத்துள்ள ஐந்தாவது அங்கதேவதை அலுப்த சக்தி. அதன் பொருள் குறைவில்லாத சக்தி என்பதாம். அவர் படைத்துள்ள சக்தியில் தேய்வு ஏதுமில்லை. அனந்தமாக இருப்பது அவருடைய ஆறாவது அங்க தேவதையாகிறது. அகண்டத்துக்கு எல்லை போடமுடியாது; அது அளப்பரியது. இந்த மகிமைகள்

யாவும் சிவனாருக்கு உரியன. ஆகையால் இவை யாவும் அம்பி கைக்கும் உரியவைகளாகின்றன.

**षाड्गुण्यपरिपूरिता — ஷாட்குண்யபரிபூரிதா ३८७**

ஆறுவிதமான குணங்களோடு நிரம்பியிருப்பவள்.

ஞானம், வைராக்கியம், ஸ்ரீ, கீர்த்தி, வீர்யம், ஐசுவரியம் ஆகிய ஈசுவரனிடத்திருக்கும் ஆறு குணங்களும் ஈசுவரியிடத்தும் அமைந்திருப்பது இயல்பே. ஞானத்தின் பிறப்பிடம் அம்பிகை. அக்னியினிடத்திருந்து உஷ்ணத்தை எப்படிப் பிரிக்கமுடியாதோ அப்படி ஞானத்தை அம்பிகையினிடத்திருந்து பிரித்தெடுக்க முடியாது. வைராக்கியம் என்பது பற்றற்றநிலை. பிரபஞ்சம் அனைத்தையும் தோற்றுவித்தவள் அம்பிகை. சிலந்திப் பூச்சி தன்னிடத்திருந்து நூலை உண்டுபண்ணி அதை வலையாக அமைக்கிறது. வலையின் மீது அமர்ந்திருப்பதற்கிடையில் அதன்மீது பற்று வைக்காது சிலந்திப் பூச்சி உள்ளது. அங்ஙனம் தான் தோற்றுவித்த பிரபஞ்சம் அனைத்தின் மீதும் பற்று ஏதும் வைக்காது அவற்றின் நடைமுறையை அன்னை பராசக்தி பரிபாலித்து வருகிறாள்.

ஸ்ரீ என்னும் சொல் அழகு என்றும் செல்வம் என்றும் பொருள்படுகிறது. பிரபஞ்சமாக அம்பிகை தானே இலங்குகின்றாள். பிரபஞ்சத்தின் எப்பகுதியினை ஆராய்ந்து பார்த்தாலும் அதனிடத்தில் அழகு பொலிகின்றது. தூய மனநிலையில் இருந்துகொண்டு அழகை ரசிப்பது அழகுக்கு இருப்பிடமாகிய அன்னையின் வழிபாடு ஆகும். ஏதேனும் ஒருவிதத்தில் செல்வமாக அமைந்துள்ள பிரபஞ்சத்திலுள்ள பொருள்கள் யாவற்றையும் முறையாகப் பயன்படுத்துவது அம்பிகையின் உபாசனையாகும். கீர்த்தி அல்லது புகழுக்கு இலக்காய் இருப்பவள் அம்பிகை. பூமியின்மேல் 'பொருள் சேர் புகழுக்கு' உரியவளாய் இருப்பவள் அன்னை பராசக்தி. மக்களைப் புகழ்வது பொருளற்றது. உலகில் எப்பொருளைப் புகழ்ந்து பாராட்டினாலும் அது அம்பிகைக்கே உரியதாகிறது. பரவஸ்துவாகிய பராசக்தியைப் புகழ்தற்கேற்ப ஆத்மசாதகன் மனபரிபாகமடைகிறான். அம்பிகையின் ஸ்தூல சான்னித்தியத்தின் சிறப்பானது புகழ்ச்சிக்கு உரியதாகக் காட்சி கொடுக்கிறது.

பராக்கிரமம் வாய்ந்த செயல் வீர்யம் எனப்படுகிறது. பராக்கிரமத்தை முறைதவறிக் கையாளும் போக்குடைய அசுரனை அழித்துத் தள்ளுவது அம்பிகையின் ப்ராக்கிரமம். அதற்குமேல் நலன்களையெல்லாம் இனிது நிறைவேற்றுவது அவளுடைய செயலாம். அண்டகோடிகளனைத்தையும் இனிது இயக்குவதில் அவளுடைய வீர்யம் வெளியாகிறது. யாண்டும் கவர்ச்சிகரமாயுள்ள வீர்யத்தைக் கருத்தில் வாங்குவது அம்பிகையின் வழிபாடாகும்.

ஐசுவரியம் என்பது ஆளும் தன்மை என்று பொருள்படுகிறது. அகிலாண்டங்களிலும் அம்பிகையின் அரசாட்சி இனிது நிறைவேறி வருகிறது. ஒழுங்குட்பாடு வழுவுகிறவிடத்து அவள் அதைத் திருத்தி அமைக்கிருள். ஒழுங்காக நடந்துகொள்ளும் உயிர்கள் அம்பிகையின் ஆட்சிக்கு இனிது உட்பட்ட குடிகளாகின்றனர். ஒழுங்குப்பாடு வழுவுகிற உயிர்களுக்குத் துக்கத்தை விளைவிப்பதன் மூலம் அம்பிகை அவைகளைத் திருத்தியமைக்கிருள். அம்பிகையின் ஆட்சிமுறையை யாருமே மீற முடியாது. நெறி பிறழாத ஆட்சியே அம்பிகையின் பாங்காகும். ஆதலால் அவள் ஐசுவரியம் படைத்தவள் எனப் போற்றப்படுகிருள்.

இந்த ஆறு குணங்களும் அம்பிகையினிடத்து நிறை நிலையில் இருப்பதால் அவள் ஷாட்குண்யபரிபூரிதா எனப் பாராட்டப் பெறுகிருள்.

**नित्यक्लिन्ना — நித்யக்ளின்ன** **३८८**

எப்போதும் இரக்கத்தோடு கூடியிருப்பவள்.

க்ளின்ன என்னும் சொல் நனைந்திருப்பது என்று பொருள் படுகிறது.

கல் நெஞ்சம் படைத்திருப்பவனை ஈரமில்லாநெஞ்சம் படைத்தவன் என்றும் இரக்கமும் தயையும் வடிவெடுத்திருப்பவனை இளகிய நெஞ்சம் படைத்தவன் என்றும் இயம்புவது உலக வழக்கு. அன்னை பராசக்தி யாண்டும் ஈரம் நிறைந்த நெஞ்சை உடையவளாக இருக்கிருள். அவளுடைய செங்கோல் ஆட்சி முறை பிறழாது நடக்கிறது எனினும் கருணைக்கு அவள் இருப்பிடமாகிருள். தாய் உள்ளம் படைத்த அவள் தயைக்கு இருப்

பீடம். இரக்கத்தினுலேயே அவள் உயிர்களைக் கண்டிக்கவும் திருத்தியமைக்கவும் செய்கிறுள். உயிர்களை உய்விப்பதிலேயே அவள் யாண்டும் கண்ணும் கருத்துமாய் இருப்பதால் அவள் நித்யக்ளின்ன என நாமம் படைத்தவளாகிருள்.

**निरुपमा — நிர் உபமா** ३८९

தனக்கு நிகர் யாருமில்லாதவள்.

பராசக்தியும் பரப்பிரம்மமும் ஒன்று என்பதை ஸ்ரீ ராம கிருஷ்ண பரமஹம்சர் ஓர் உபமானத்தின்மூலம் விளக்குகிருர். செயலற்றுச் சுருண்டு படுத்திருக்கும் பாம்புக்கு நிகர் பரப்பிரம்மம். வளைந்து வளைந்து இடம் மாறிப் போய்க்கொண்டிருக்கும் பாம்புக்கு நிகர் பராசக்தி. ஒரே பாம்பு கிரியா சொரூபமாகவும் நிஷ்கிரியா சொரூபமாகவும் இலங்குகின்றது. அதுபோல் செயலற்ற நிலையில் பிரம்மம் எனவும் பஞ்சகிருத்தியங்களில் ஈடுபட்டிருக்கும்பொழுது சக்தி எனவும் பரவஸ்து பெயர் பெறுகிறது. கடல் ஏக காலத்தில் அசைவற்றும் அசைவுற்றும் இருக்கிறது. அதன் அடிப்பாகத்தில் சலனமில்லை; மேல் பரப்பிலோ அலையெடுத்து உருண்டோடும் செயல் உள்ளது. பரவஸ்துவானது அத்தகையது. செயலற்ற நிலையில் அதற்கு அன்னியமாக வேறு ஒரு பொருள் இல்லை. அதற்கு உபமானமாக அல்லது மிக்கதாக வேறு பொருள் இல்லை. நானுவிதமான கிருத்தியங்களில் ஈடுபட்டிருப்பதும் அதே பொருள். அம்பிகைக்கு அன்னியமாக வேறு ஒரு வஸ்து இருந்து செயல்பட்டுக் கொண்டிருந்தால் ஒன்ருேடு ஒன்றைச் சீர்தூக்கிப் பார்க்கமுடியும். ஆனல் சீர் தூக்கிப் பார்ப்பதற்குச் சக்திக்கு அன்னியமாக வேறு ஒரு பொருள் இல்லாததனுல் அவள் நிகர் அற்றவள் அல்லது நிர் உபமா என்னும் பெயர் பெற்றுள்ளாள்.

**निर्वाणसुखदायिनी — நிர்வாண சுகதாயினீ** ३९०

விளக்கமுடியாத சுகமாகிய முக்தியைக் கொடுப்பவள்.

மானுடன் ஒருவன் தன் மேனியின்மீது உடை எதையும் அணிந்துகொள்ளாதிருக்கும் போது அவன் நிர்வாணமாயிருக்கிருன் என்கிருேம். தனக்குப் புறம்பான பொருள் எதையும்

தன்மீது அணிந்துகொள்ளாத நிலை நிர்வாணம் என்னும் பெயர் பெறுகிறது.

தண்ணீருக்குக் கடல் நீர், ஆற்று நீர், சேற்று நீர், குட்டை நீர், மழை நீர், மேகம், உறைபனி போன்ற உபாதிகள் பல உள்ளன. ஜலமானது உபாதியோடு கூடியதாகவும் உபாதி அற்றதாகவும் இருக்கிறது. உபாதிசொருபமாக இருக்கும் ஆத்மா ஜீவாத்மா என்னும் பெயர் பெறுகிறது. கல், புல் முதலிய நிலைகளினின்று சிருஷ்டி கர்த்தாவாகிய சதுர்முகப் பிரம்மதேவன் வரை எண்ணிறந்த உபாதிகளை ஜீவாத்மன் எடுத்துக்கொள்கிறான். இந்த உபாதிகள் அற்ற நிலையைத் தாற்காலிகமாக ஒவ்வொரு ஜீவனும் சுஷுப்தி அவஸ்தையில் பெறுகிறான். உபாதி உற்றநிலையில் ஜீவாத்மாக்கள் எண்ணிறந்தவை உள. உபாதியற்ற நிலையில் வெறும் பிரக்ஞை மட்டும் தன்னில்தானாய் இருக்கிறது. துக்கத்துக்கு இடமில்லாத சுஷுப்தி அவஸ்தையில் சுகமே எஞ்சியுள்ளது. ஏக வஸ்துவாகிய பிரக்ஞையும் சுகமும் ஒன்றே. அதற்கு நிகராக இரண்டாவது வஸ்து இல்லாததால் அது அத்வைதம். ஜீவாத்மன் ஒருவன் தன் உபாதிகளையெல்லாம் ஒதுக்கித் தள்ளுவானாகில் அவன் நிர்வாணி ஆகிறான். அவனைச் சார்ந்து அவனுக்குப் புறம்பாக ஏதும் இல்லை; எனவே அவன் தன்னில் தானாய் இருக்கிறான். அந்நிலையில் தனக்குச் சொந்தமாயுள்ள சுகம் அல்லது பேரானந்தம் மிளிர்கிறது. ஆனந்தம், சுகம், பிரக்ஞை, பரப்பிரம்மம் என்னும் சொற்கள் எல்லாம் வஸ்துவின் மூலநிலையை விளக்குபவைகளாம்.

மயக்கத்தால் ஜீவாத்மன் உபாதிகளை எடுத்துக்கொண்டு இன்ப துன்பத்துக்காளாகிறான். உபாதிகளை ஒதுக்கி வைத்துவிட்டு அடையும் நிர்வாண நிலை சொற்பதம் கடந்த அதீத நிலையாகும். கைவல்ய முக்தி எனப்படும் அந்நிலை சொல்லில் அடங்காத சுத்த சைதன்யமாகவும் மிளிர்கிறது. இத்தகைய ஒப்புயர்வற்ற பாரமார்த்திகப் பெருநிலையை அன்னை பராசக்தி ஜீவாத்மனுக்கு நல்குவதால் அவள் நிர்வாண சுகதாயினீ என்னும் நாமம் படைத்துள்ளாள்

**नित्याषोडशिकारूपा — நித்யாஷோடசிகாரூபா** १९१

பதினறுவித விபூதிகளோடு கூடி மிளிர்பவள்.

அகிலாண்டத்திலுள்ள சர அசரங்கள் சேதன, அசேதனங்கள் யாவும் அம்பிகையின் மகிமைகளாகவே அமைந்துள்ளன. சான்றுகள் மூலம் அவைகளை விளக்கலாம்.

அமாவாசைக்குப் பிறகு பதினைந்து திதிகளில் சந்திரனுடைய பிரகாசம வளர்ந்துகொண்டே போகிறது. பதினைந்தாம் நாள் சோமனுடைய சௌமியம் உச்சநிலை அடைகிறது. இந்தப் பதினைந்து திதிகளும் அம்பிகைக்கு அங்கதேவதைகளாக அமைந்துள்ளன. இவை யாவையும் தன்னகத்து அடக்கிவைத்துள்ள பதினாறுவது நித்திய தேவதையாக அவள் மிளிர்கின்றாள். அதற்குப் பதினாறு தனிப் பெயர்களை நூலோர் வழங்கியிருக்கின்றனர். வளர்பிறையைச் சான்றாக வைத்துக்கொண்டு அவளுடைய சொரூபத்தை ஒருவாறு அறிய வருகிறோம். இது ஸ்தூலக் காட்சி. இனி சூட்சுமத்தில் ஜீவனுடைய ஆத்ம பரிபாகத்தில் இக்கோட்பாடு வந்தமைகிறது. பதினாறு என்னும் எண்ணிக்கை பரிபாகத்தின் உச்சநிலைக்கு எடுத்துக்காட்டாக அமைந்திருக்கிறது. மார்க்கண்டேயனுடைய வாழ்க்கை பதினாறும் ஆண்டோடு முடிந்துவிடும் என்னும் நியதி அமைந்தது. ஆனால் அவ்வினைஞன் வையகத்தில் வாழ்வாங்கு வாழ்பவனானன். மார்க்கண்டேயனுக்கு வயது பதினாறு என்னும் வரமானது ஜீவாத்ம பரிபாகத்துக்கு இலக்காக இலங்குகிறது. சிவபூஜையில் ஆழ்ந்து மூழ்கியதன் விளைவாக அவன் சிவஞானத்தைப் பரிபூரணமாக அடையப்பெற்றவனானன். அதற்குமேல் அடைவதற்குப் பேறு ஒன்றும் இல்லை. சிவ சொரூபத்துக்கு அழிவில்லை சிவஞானமடைந்த மார்க்கண்டேயன் சிவசொரூபம் ஆனான். எனவே அவன் யாண்டும் பதினாறு வயது வாய்க்கப்பெற்ற மூர்த்தியானான்.

ஞானசம்பந்தர் தம் மூன்றாவது பிராயத்தில் சிவஞானத்தைப் பெற்று அதை உலகுக்கு அருள் விருந்தாக வழங்கிப் பின் தம் வாழ்வைப் பதினாறுவது ஆண்டுப் பூர்த்தியில் முடிவுக்குக் கொண்டு வந்தார். ஆதி சங்கரரும் தம் பதினாறுவது வயதில் மானுட ஜன்மத்தை சிவஞானத்தின் மூலமாக உச்சநிலைக்குக் கொண்டு வந்தார். பிரஸ்தானத் திரயத்துக்குப் பாஷ்யம் எழுதி அவர் நிறைநிலை எய்தினர். அதன் பிறகு ஷண்மதஸ்தாபகத்தின் பொருட்டு அவருக்கு இன்னும் பதினாறு ஆண்டு பரதேவதையால் வழங்கப்பட்டது.

வாழ்வாங்கு வாழ்கின்ற மானுடன் ஒருவன் பதினாறு ஆண்டுகளில் உடலமைப்பிலும் மன அமைப்பிலும் நிறைநிலை எய்துகிறான். தசரத ராமனுக்கு இது பரிபூரண நிலையில் அமைவதாயிற்று. பரம புருஷனுடைய பாங்கு எத்தகையது என்பதற்கு அவன் எடுத்துக்காட்டாகிறான். மேனியழகும் அதன் ஆற்றலும் நிறை ஞானமும் அதற்கேற்ற பயிற்சியும் எல்லாம் ஒன்றுகூடி அவனுக்குப் பதினாறு ஆண்டு நிறைவேறும் தறுவாயில் பூர்த்தியாகின்றன. அதே ஆண்டில் அவன் மணம் புரிந்து சீதாராமன் ஆனபொழுது அவன் நிறைவு உச்சநிலை எய்துகிறது. நிர்க்குணப் பிரம்மத்துக்கு நிகர் தசரதராமன்; சகுணப் பிரம்மத்துக்கு நிகர் சீதாராமன்.

அன்னை பராசக்தி நித்யாஷோடசிகா ரூபாவாக இருந்து கொண்டு தன் விகிருதிகள் என்னென்ன பாங்குகளில் பதினாறு ஆண்டுகளில் உச்சநிலை எய்துகின்றன என்னும் கோட்பாட்டைச் சதா விளக்கிக் கொண்டிருக்கிறாள். மானுட ஜன்மத்தை நன்கு பயன்படுத்தத் தெரிகிறவன் பதினாறு ஆண்டுக்குள் பெறவேண்டிய பேறு அனைத்தையும் பெற்றுவிட முடியும் என்னும் பெரிய கோட்பாட்டை அம்பிகையின் இத்திருநாமம் விளக்குகிறது.

**श्रीकण्ठार्धशरीरिणी — ஸ்ரீ கண்டார்த்த சரீரிணீ ३९२**

பரமேஸ்வரனுடைய சரீரத்தின் செம்பாதியைத் தன் மயமாக வைத்திருப்பவள்.

ஜன்மம் எடுத்தால் இன்னபாங்கில் ஓங்கி வளர்ந்து வருவதே வாழ்வின் குறிக்கோள் என்னும் கோட்பாடு சீதாராம சரிதத்தில் நன்கு விளங்குகிறது. பதினாறு வயதில் அவன் சீதாராமன் ஆனது அர்த்தநாரீச தத்துவத்துக்கு நல்ல விளக்கமாகிறது. சரீரம் எடுக்கிற ஜீவாத்மாக்களுக்கு முன்மாதிரியாக இலங்குபவன் ஸ்ரீ ராமன்.

பிறப்பேதும் எடுக்காத சிவனுடைய செம்பாதியாய் இருக்கின்ற பராசக்தியும் ஜனன மரணத்துக்கு அப்பாற்பட்டவள். பிரபஞ்சம் முழுதும் யாண்டும் சிவசக்தி சொரூபமாக இலங்கிக் கொண்டிருப்பதே அவள் ஸ்ரீ கண்டார்த்த சரீரிணீயாக இருப்பதற்கு எடுத்துக்காட்டாகிறது.

உலகை அழிக்கவந்த விஷத்தைச் சிவனார் தம் கண்டத்தில் நிறுத்தித் தம் சொரூபத்தை அழகுபடுத்தியதால் அவருக்கு ஸ்ரீ கண்டன் என்றும் நீலகண்டன் என்றும் பெயர்கள் வந்துள்ளன. இக்கோட்பாட்டை ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் நல்லதோர் உபமானத்தின் மூலம் விளக்குகிறார். நல்ல பாம்பின் பல்லில் நச்சு இருப்பது அதற்கு அலங்காரம். அதே நச்சு நம் மேனியில் புகுந்தால் அது நம்மை அழித்துவிடும். அங்ஙனம் உலகை அழிக்கவல்ல நாசகாரி சக்தியைச் சிவனார் தம்மகத்து அடக்கி வைத்துருக்கிறார். சக்தியானவள் சிவ சொரூபத்தில் என்னென்ன பாங்குகளில் இடம் பெறுகிறாள் என்பதற்கு ஸ்ரீ கண்டம் எடுத்துக்காட்டு ஆகிறது.

உலகத்தவர் பயன்படுத்தும் மொழிகளில் அர்த்தநாரீசுவரன் என்னும் கோட்பாடு அமைந்துள்ளது. உயிரெழுத்து மயமாய்ச் சிவமும் மெய்யெழுத்து மயமாய்ச் சக்தியும் இலங்குகின்றனர். உயிர்மெய்யெழுத்து மயமாய் இலங்குவது ஸ்ரீ கண்டார்த்த சரீரிணீ என்னும் நாமம்.

ஜீவாத்ம தத்துவத்துக்கு இந்த நாமம் விளக்கமாகிறது. ஒவ்வொரு ஜீவனிடத்திலும் உயிர்த் தத்துவமாயிருப்பது சிவம். உடல் தத்துவமாயிருப்பது சக்தி. பிண்டத்தில் அமைந்துள்ள இக்கோட்பாடு அகிலாண்டத்துக்கும் உரியதாகிறது. அண்ட கோடிகள் சேர்ந்து அமைந்துள்ள விராட் சரீரம் சக்தியின் சொரூபமாம். அதனுள் ஊடுருவிப் பாய்ந்துள்ள அறிவுத் தத்துவம் சிவசொரூபமாகிறது. ஆதலால் இறைவனுடைய விஸ்வரூபத்தை அர்த்தநாரீச சொரூபமெனலாம்.

அக்னியினின்று உஷ்ணத்தைப் பிரித்தெடுக்க முடியாது. பாலினின்று அதன் வெண்ணிறத்தைப் பிரிக்கமுடியாது. அதே பாங்கில் சிவ தத்துவத்தினின்று சக்தி தத்துவத்தைப் பிரிக்க முடியாது. இந்தக் கோட்பாட்டைப் பராசக்தி படைத்திருக்கின்ற ஸ்ரீ கண்டார்த்த சரீரிணீ என்னும் நாமம் நன்கு விளக்குகிறது.

**प्रभावती — பிரபாவதீ** ३९३

பிரபைகளோடு கூடியுள்ளவள்.

பிரபை என்பது கிரணம் எனப் பொருள்படுகிறது. நமக்குக் கண்கூடாகப் புலனாகும் சூரியனிடமிருந்து அதன் கிரணங்களைப் பிரித்தெடுக்க முடியாது. அதே பாங்கில் ஒளிப்பிழம்பு படைத்தவளாகிய அன்னை பராசக்தியிடமிருந்து கிளம்பும் ஒவ்வோர் ஒளியும் அவளுடைய அங்க தேவதையாகவும் ஆபரண தேவதையாகவும் அமைந்துள்ளது. அத்தகைய தேவதைகள் கணக்கிலடங்காதவைகளாம். அவை யாவையும் அன்னை தன் கிரணங்களாகப் படைத்திருக்கிறாள். ஆதலால் அவளுடைய மகிமைகள் மொழியில் அடங்காதவைகளாகின்றன.

**प्रभारूपा — ப்ரபா ரூபா** ३९४

பிரபைகள் யாவையும் தன் ஸ்வரூபமாக உடைத்திருப்பவள்.

சூரியனையும் சூரிய கிரணங்களையும் எப்படிப் பிரித்துவைக்க முடியாதோ அப்படி அம்பிகையையும் அவளுடைய பிரபைகளையும் பிரித்து வைக்க முடியாது. பிரபைகளின் தொகையாக அவள் இலங்குகின்றாள். மற்றொரு சான்றின் மூலம் இதை விளக்கலாம். பரந்துள்ள கடலின்கண் கணக்கற்ற அலைகள் உருண்டோடிக் கொண்டிருக்கின்றன. அத்தனை அலைகள் வடிவத்திலும் ஆழ்கடல் அமைந்திருக்கிறது என்று சொல்லலாம். அங்ஙனம் அனந்தங்கோடிப் பிரபைகளாக அன்னை பராசக்தி விரிவடைந்திருக்கிறாள் என்பது இந்நாமத்தின் கருத்தாகும்.

**प्रसिद्धा — ப்ரஸித்தா** ३९५

கண்கூடாக விளங்கிக் கொண்டிருப்பவள்.

அம்பிகையின் சான்னித்தியத்தை விளக்குதற்கு இதற்கு நிகரான சொல் கிடையாது. 'உலகனைத்தும் ஆனாய் நீயே' என்னும் கோட்பாடு இதில் அடங்கி இருக்கிறது. சக்தி தேவதைக்குப் புறம்பானது எதுவும் பிரபஞ்சத்தில் இல்லை. பஞ்சேந்திரியங்கள் மூலமாகத் தெற்றென நாம் நுகர்வது அவளுடைய சொரூபம். அவை அடங்கி ஒடுங்கியிருக்கின்ற பொழுது நாம் இருப்பதை நாமே தெற்றென உணர்கிறோமே. நான் இருக்கிறேனா? இல்லையா? என்பதைப் பார்த்துச் சொல்லுங்கள்' என்று நம்மைக் குறித்து

நாம் யாரிடமும் கேட்பதில்லை. நாம் இருப்பது நமக்குத் தெளிவு; நாம் பெற்றுள்ள ஸ்வபோதமும் அம்பிகையிடத்திருந்து வந்துள்ள தாம். அனந்தங்கோடி ஜீவ வியக்திகள் அம்பிகையின் வடிவங் களாம். கடலுக்குப் புறம்பாக அலைகள் இல்லாதது போல் அம்பிகைக்குப் புறம்பாக ஜீவ விய்க்திகளில்லை. அம்பிகைக்குப் புறம்பாக எவ்வுயிரையும் பொருள்படுத்தலாகாது.

இடைக்காலத்தில் இந்தியர்களுள் உயர்குடியில் பிறந்தவர் கள் தங்களை அம்பிகையின் கிரணங்களென வைத்துக்கொண்டு மக்களுள் ஒரு பகுதியினரை விலக்கப்பட்டவர்களென்றும் தாழ்த் தப்பட்டவர்களென்றும் பிரித்து வைத்தனர். அவர்களின் முன் னேற்றத்திலும் அன்னவர்கள் கருத்துச் செலுத்தவில்லை. தர்மத் துக்கு ஒவ்வாத முறையில் அவர்கள் கீழ் நிலையினின்று மேல் நிலைக்கு வர முடியாத பாங்கில் மேன்மக்களென்போர் முட்டுக் கட்டைகளாக நடந்து கொண்டனர். தத்துவத்தினின்று பிசகிய அவர்கள் பாகண்டிகளாகவும் பதிதர்களாகவும் ஆயினர். அக் குறையை நிவர்த்தி பண்ணுவதற்கே அம்பிகை வழிபாட்டில் ஆழ்ந்து மூழ்கிய ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் பிராயச்சித்தம் தேடினர். "தாயே, ஒதுக்கப்பட்டவர்கள் என்பவர்களும் உன் குழந்தைகளே. அவர்களை ஒதுக்கி வைத்தால் அது உன்னை ஒதுக்கி வைப்பதற்கொப்பாகும். அத்தகைய அபசாரத்தை நான் செய்யேன்" என்று அவர் செய்த பிரார்த்தனைக் கிணங்க அவர் சாதனத்தில் ஈடுபட்டார்.

யார் கண்ணிலும் படாமல் நள்ளிரவில் சேரிக்குச் சென்று தம் தலைமுடியால் அதைச் சுத்தம் செய்தார். ஆலயத்திற்குச் சென்று ஆங்குப் பிரதிஷ்டை செய்யப்பெற்றுள்ள வடிவத்தின் வாயிலா கச் செய்வதுதான் ஆராதனை என்னும் நம் பிழையை அவர் திருத்தியமைத்தார். தாம் ஒரு மேன்மகன் என்ற அகங்காரத்தை ஒதுக்கியதன் மூலம் அவர் பரமஹம்ச நிலை எய்தினர். நமக்கெல் லாம் இக்கோட்பாடு பிரசித்தமாக வேண்டும் என்பதே இந்நாமத் தின் உட்கருத்தாம்.

**परमेश्वरी** — பரமேச்வரீ ३९६

அனைத்துக்கும் ஈசுவரியாயிருப்பவள்,

உண்மையில் பரவஸ்து ஆணுமல்ல, பெண்ணுமல்ல. சிவ உபாசகர்கள் அதைப் பரமேச்வரன் என்றும் சக்தி உபாசகர் கள் அதைப் பரமேச்வரீ என்றும் பகர்கிறார்கள். சொல்லளவில் தான் வேறுபாடு உள்ளது.

நிர்க்குணமாய் இருக்கும் பரவஸ்துவை நிர்க்குணப் பிரம்மம் என்று வேதாந்தம் கூறுகிறது. அதே வஸ்துவைச் சதாசிவம் என்கிறது சைவ சமயம். அது சகுணமாயிருக்கின்றபொழுது வேதாந்தப்பூர்வமாக அதற்கு சகுணப்பிரம்மம் என்னும் பெயர் வந்தமைகிறது. சைவ சமயத்தில் அதற்கு ஈசுவரன் என்னும் பெயரும் பரமேசுவரன் என்னும் பெயரும் வழங்கப்பட்டுள்ளன. ஒப்புயர்வற்ற இறைவன் என்பது அதன் பொருள். அதே பொருள் ஈண்டு ஒப்புயர்வற்ற இறைவியாக இலங்குகின்றாள். அவளுடைய ஆதிக்கத்துக்கு அன்னியமாக ஒன்றுமில்லை. சராசரங்களனைத்தும் அவளுடைய ஆட்சிமுறையில் அடங்கி யுள்ளன. ஆதலால் அவளே ஆராதனைக்குரியவளாகின்றாள்.

मूलप्रकृतिः — மூலப்ரகிருதி: ३९७

அனைத்துக்கும் முதற்காரணமாய் இருப்பவள்.

தோன்றியுள்ள அண்டங்களனைத்துக்கும் உயிர்வகைகள் அனைத்திற்கும் முதற்காரணமாயிருப்பது மூலப்பிரகிருதி. உப மானம் ஒன்றின்மூலம் இதை விளக்கலாம். சட்டி, பானை, குடம் முதலியவற்றைக் குயவன் வனைகிறான். அவ்வடிவங்கள் களிமண் அடைந்துள்ள விகாரங்களாம். விகாரப்படாத வெறும் களிமண் எந்த நிலையிலிருக்கிறதோ அந்த நிலையில் இருக்கின்ற முதற் பொருள் மூலப்பிரகிருதி. நிர்விகாரமாயுள்ள அம் மூலப்பிர கிருதி சிருஷ்டி துவங்குவதற்கு முன்பே இருக்கிறது. அப்படித் தோன்றா நிலையிலுள்ள சக்திக்கு மூலப் பிரகிருதி என்னும் பெயர் வந்துள்ளது.

மனதில் நாம் எண்ணும் ஒவ்வோர் எண்ணமும் ஒவ்வொரு விகிருதி அல்லது விகாரமாகிறது. குறைநிலையில் மனம் அவ் வாறு எடுக்கின்ற விருத்திகளை ஒடுக்குவது யோக சாதனமா கிறது. சித்த விருத்தியை ஒடுக்க முயலுகிறவர்கள் மூலப் பிரகிருதியைத் தியானம் பண்ணினால் மன ஒடுக்கம் தானாக

வந்தமைகிறது. ஆத்ம சாதகன் ஒருவன் விகாரப்பட்ட நிலையி னின்று விலகி மூலப் பிரகிருதி நிலையை எட்ட முயலவேண்டும். அந்நிலையினின்று பிறகு பரமேச்வரியின் சந்நிதிக்குச் செல்ல அவன் பக்குவமடைகிறான்.

अव्यक्ता — அவ்யக்தா ३९८

தோற்றத்தில் இல்லாதவள்.

மூலப் பிரகிருதிக்கு இது மற்றொரு விளக்கமாக வந்துள்ளது. புருஷன், பிரகிருதி ஆகியவை தனித்தனியான இரண்டு வஸ்துக் கள் என்று சாங்கிய தர்சனம் கூறுகிறது. அவையிரண்டும் இணைபிரியாதவை என்று வேதாந்த தர்சனம் பகர்கிறது. அர்த்தநாரீசுவர மூர்த்தி இக்கோட்பாட்டுக்கு விளக்கமாகும், யாண்டும் தோற்றத்துக்கு அப்பாற்பட்டது புருஷ தத்துவம். ஒரு காலத்தில் தோற்றத்துக்கு வந்து இன்னொரு காலத்தில் தோன்றா நிலையிலிருப்பது பிரகிருதி தத்துவம். பிரம்மத்துக்கும் மாயைக்கும் உரியதாக அவ்யக்தம் என்னும் பதம் அமைந்துள் ளது. யாண்டும் தோன்றாநிலையில் இருக்கும் பிரம்மம் அவ்யக்தம் எனப்படுகிறது. மாயாசக்தியும் சில காலங்களில் தோன்றா நிலையில் இருப்பதால் அவள் அவ்யக்தா எனப்படுகிறாள்.

பூமியில் படிந்திருக்கும்பொழுது கடல் நீர், ஆற்று நீர், கிணற்று நீர் குளத்து நீர், ஊற்று நீர் என்றெல்லாம் பெயர் பெறும் ஜலம் வானத்தில் சஞ்சரிக்கிறபொழுது கார்மேகம். வெண் மேகம், மூடுபனி போன்ற பெயர்களைப் பெறுகிறது. அது உறையுங்கால் உறைபனி என்றும் ஆலங்கட்டி என்றும் பெயர் பெறுகிறது. இவையாவும் நீரினுடைய வியக்த நிலைகள், சூரிய வெப்பத்தால் ஆவியாக மாறி வானத்தில் இருக்கிற பொழுது அது அவ்யக்த நிலையில் உள்ளது. நீரானது வியக்த நிலையிலும் அவ்யக்த நிலையிலும் மாறி மாறி இருப்பதுபோன்று பிரகிருதித் தாயானவள் அவ்யக்தாவாகவும் இலங்குகின்றாள். மன ஒடுக்கத்துக்கு இக்கோட்பாட்டைச் சாதகன் பயன்படுத்த லாம். பிரகிருதித் தாயானவள் தோன்றா நிலையிலிருப்பது போன்று மனோ தத்துவத்தைத் தோன்றா நிலையில் வைப்பது ஆத்ம சாதனமாகிறது.

**व्यक्ताव्यक्तस्वरूपिणी —வ்யக்தாவ்யக்தஸ்வரூபிணீ** ३९९

தோன்றியிருப்பவைகளும் தோன்ருமல் இருப்பவை களுமான அனைத்தின் வடிவெடுத்திருப்பவள்.

பிரபஞ்சத்தில் தோற்றத்திற்கு வந்திருக்கும் பகுதிகளும் தோன்ருநிலையிலுள்ள பகுதிகளும் இருக்கின்றன. வானத்தில் தென்படும் நட்சத்திரங்கள் யாவும் வியக்தமானவைகளாம். மங்கலான வெண்ணிறம் நட்சத்திரங்களுக்கிடையில் அதீதத்தில் உள்ளது. அதற்குத் தோன்ருநிலை (Nebulous state) என்று பெயர். அவ்யக்தமாக உள்ள அது நெடுங்காலத்திற்குப் பிறகு நட்சத்திரங்களாக வடிவெடுக்க வல்லது. தோற்றத்துக்கு வராத அவை அவ்யக்த நிலையில் உள்ளன என்று பகரப்பெறுகின்றன.

பிரபஞ்சத்திலுள்ள ஜீவகோடிகள் வியக்த நிலையில் உள் ளன. இன்னும் பிறப்பெடுக்காத கணக்கற்ற ஜீவர்கள் அவ்யக்த மாயிருக்கின்றன. இவ்விரண்டின் தொகை அம்பிகையின் சொரூ பத்தில அடங்கியிருக்கிறது. அம்பிகையின் மகிமைகளில் அவ் யக்தமாயிருக்கிற பெரும்பகுதி நம் அறிவுக்கு எட்டாதது. வியக்தமாய் வந்துள்ள பகுதியோ அகண்டாகாரமாய் விரிந்தோடு கிறது. அதை அராய்ச்சி பண்ணப் பண்ண அது அளப்பரியதா கிறது. தோற்றத்துக்கு வந்துள்ள பகுதியைப் பக்தி பூர்வமாக ஆராய்ச்சி பண்ணுவது அம்பிகையின் வழிபாடாகிறது. இத் தனையுமாய்த் தோன்றியிருப்பவளும் இவையனைத்துக்கும் அப் பாலாய்த் தோன்ருதிருப்பவளும் அம்பிகையேயாம்.

**व्यापिनी—வ்யாபினீ** ४००

எங்கும் நிறைந்திருப்பவள்.

அம்பிகையின் மகிமை ஆகாச தத்துவத்தோடு சீர்தூக்கி விளக்கப்படுகிறது. பிரகிருதி தத்துவங்களுள் மிக வேகம் வாய்ந்தது மனது. ஜடப்பொருள்களுள் மிக வேகம வாய்ந்தது வெளிச்சம். அது ஒருநிமிஷத்துக்கு ஒருகோடி மைலுக்குமேல் வெட்டவெளியில் வேகமாகப் பாய்கிறது. ஆயினும் அதன் வேகம் மனேவேகத்துக்கு நிகராகாது. நினைத்த மாத்திரத்தில் மனம் அண்டமெங்கும் சென்றடைய வல்லது.

அத்தகைய மனம் எங்குச் சென்று எதை ஆராய்ந்து பார்த்தாலும் அதன் மயமாக அம்பிகை ஆங்கு வீற்றிருக்கிருள். நாம் எதையெல்லாம் நுகர்கிறேமோ அதுவாக அவளே வியாபித்திருக்கிருள். அவளை வியாபினீ என விளக்குவதற்கு மேல் நம் சொல் செல்லாது. நாம் அவளைத் தேடியலைவது பொருளற்றது. காண்பனயாவையும் அவளாகக் கருதுவோமானல் அது நல்ல வழிபாடாகிறது.

**विविधाकारा—விவிதாகாரா ४०१**

*வெவ்வேறுவிதமான வடிவங்களை எடுத்திருப்பவள்.*

ஆகாசத்தை இதற்குச் சான்ருக எடுத்துக் கொள்வோம். எங்கும் வியாபித்துள்ள ஆகாசத்திலிருந்தே ஏனைய பூதங்கள் பரிணமிக்கின்றன. அதன் விளைவாக அண்டகோடிகளனைத்தும் வடிவெடுக்கின்றன. மூலப்பொருளாகிய களிமண்ணே சட்டி, பானை, குடமாக வடிவெடுப்பது போன்று அன்னை பராசக்தியே தோற்றத்துக்கு வந்துள்ள எண்ணிறந்த உருவங்களாக விளங்குகின்ருள். வடிவங்களுள் இனியவை, இன்னுதவை ஆகிய அனைத்துமிருக்கின்றன. இன்னுதவைகளையும் அம்பிகை மயமாய்க் காண்பேமாகில் அவற்றில் தெய்விகம் திகழும். உருவங்களனைத்தும் அவளுடையவையாதலால் எல்லாவற்றையும் அம்பிகை மயமாகவே கண்டு பழகவேண்டும். அப்படிக் காண்பதற்கு இன்னுதது ஒன்றுமில்லை. ஏனென்ருல் காணப்படுகின்ற யாவும் அம்பிகையின் கணக்கற்ற ரூபங்களேயாம்.

**विद्याविद्यास्वरूपिणी—வித்யா அவித்யா ஸ்வரூபிணீ ४०२**

*வித்யாவடிவத்திலும் அவித்யா வடிவத்திலும் இருப்பவள்.*

வித்யா என்பது அறிவு; அவித்யா என்பது அறியாமை. அறியும் தன்மை உயிர்களுக்குண்டு. எது நன்கு அறிந்திருக்கிறது, எது அறியாத நிலையிலிருக்கிறது என்று பகுத்துப் பார்ப்பது மிகக் கடினம். நம் வசதிக்காக அறிவு, அறியாமை ஆகிய இரண்டுக்குமிடையில் ஒரு வரம்பு கட்டுகிறேம். அந்த வரம்புக்கு மேலேயிருப்பது வித்யா சொரூபம். அந்த வரம்புக்குக் கீழே இருப்பது அவித்யா சொரூபம். நன்கு பரிணமித்துள்ள மனிதனை

ஆஶிஷ்டோ த்ரடிஷ்டோ பலிஷ்ட: என்று சுருதி பாகுபடுத்துகிறது. ஒழுக்கமும் நுண்ணறிவும் பேராற்றலும் வாய்க்கப்பெற்றவன் என்பது அதன் பொருள்.

வித்யா சொரூபமாயிருப்பதற்கு அவன் சான்றுகிறுன். மேற் கொண்டு அவன் அறிந்துகொள்ள வேண்டியவை ஏராளமாக இருக்கின்றன. அன்னவனுக்குக் கீழ்ப்பட்ட உயிர்களெல்லாம் அவித்யா சொரூபமாயிருக்கின்றன. ஆயினும் அவை ஒன்றும் அறியாதவைகளல்ல. ஸ்பரிச உணர்ச்சி ஒன்று மட்டும் உள்ள ஸ்தாவரம் அல்லது நிலைத்திணை தன் போக்கில் அறிவு மயமாய் உள்ளது. மரஞ்செடி கொடிகள் குறையில்லா நிறைநிலை எய்தி வாழ்ந்து வருகின்றன.

ஸ்பரிசம், ரசம், கந்தம் ஆகிய மூன்று இந்திரியங்களை உடைய எறும்பு தொட்டுணர்தல், சுவைத்தல், நுகர்தல் ஆகிய மூன்று பொறிகளைப் படைத்துள்ளதாக இருக்கிறது. அது வாழ்ந்து வருகின்ற சமுதாய வாழ்க்கை சில கூறுகளில் மனித வாழ்க்கையைவிட மேம்பட்டு விளங்குகிறது.

தேனீ சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்து இந்திரியங்களை உடைத்திருக்கிறது. அதன் சமுதாய வாழ்க் கையும் மனித சமுதாய வாழ்க்கையைவிடப் பன்மடங்கு பாராட் டத்தக்கதாய் உள்ளது.

மனிதனை மட்டும் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொண்டால் அவன் வித்யா சொரூபமாகவும் அவித்யா சொரூபமாகவும் இருப்பது தேற்றம். மானுடன் ஒருவனே பிரபஞ்ச ஞானத்தின் கரை காணவல்லவன். அதற்கப்பாலுள்ள பரஞானத்தையும் அவனே அறிய வல்லவனாகின்றான். இத்தனை விதமான உயிர் வகைகளாக இலங்கிக்கொண்டிருக்கும் அம்பிகை வித்யா அவித்யா சொரூபிணீ எனப் பாராட்டப் பெறுகிறாள்.

தத்துவ பூர்வமாகப் பார்க்குமிடத்து, பிரபஞ்சமும் அதில் உள்ள ஜீவாத்மாக்களும் கீழ்நிலையில் இருக்கின்றன. மயக்கத் தில் இருக்கும் அவை அவித்யா சொரூபமாயுள்ளன. சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மனும் அதில் அடங்கியிருக்கிறான். சகுணப் பிரம்மமும் நிர்க்குணப் பிரம்மமும் வித்யா சொரூபமாம். இவ்

விரண்டின் தொகுதியாக அம்பிகை இருக்கிருள். ஆதலால் அவள் வித்யா அவித்யா சொருபிணீ எனப்படுகின்ருள்.

**महाकामेशनयन कुमुद आह्लाद कौमुदी ४०३**

மஹாகாமேசநயன குமுத ஆஹ்லாத கௌமுதீ

மகாகாமேசருடைய கண்களாகிய குமுதப் புஷ்பங்களை மலரச்செய்யும் சந்திரிகையாக இருப்பவள்.

சில புஷ்பங்கள் சூரிய வெளிச்சத்திலும் சில புஷ்பங்கள் சந்திர வெளிச்சத்திலும் மலர்கின்றன. சந்திர வெளிச்சத்துக்குச் சிறப்பொன்று உண்டு. தணுப்போடு கூடிய வெளிச்சம் அது; ஆதலால் அதினின்றுவரும் இன்பம் நிலைத்திருக்கிறது. சந்திர வெளிச்சத்தில் மலரும் குமுத மலரோடு சிவனுருடைய கண்கள் ஒப்பிடப்படுகின்றன. நிலா வெளிச்சத்தில் குமுதம் மலர்வதற்கு நிகராக அம்பிகையின் முன்னிலையில் சிவனுருடைய கண்கள் மலர்ந்து மகிழ்வடைகின்றன. சிவனுருக்கு மகாகாமேச்வரன் என்றும் அம்பிகைக்கு மகாகாமேச்வரீ என்றும் பெயர்கள் அமைந்துள்ளன. உயிர்வகைகளை அடிமைப்படுத்தி வாட்டும் காம நோயால் ஜீவர்கள் துன்புறுகின்றனர். ஆனல் சிவனுக்கும் சக்திக்கும் காமமானது விபூதியாக அமைந்துள்ளது. காமத்துக்கு அதிபதியாகச் சிவனும் காமத்துக்கு ஆதாரமாக அம்பிகையும் அமைந்துள்ளனர். சந்திர வெளிச்சம் ஓங்குதற்கேற்பக் குமுதத்தின் மலர்ச்சி விரைந்து நிகழ்கிறது. அங்ஙனம் அம்பிகையின் முன்னிலையில் சிவனுருடைய அன்பு பேரன்பாகப் பரிணமிக்கிறது. சிவனுருடைய அருளை நாடுகிறவர்கள் அவரைச் சக்தி சமேதராகக் கருதவேண்டும். அந்நிலையில் அவருடைய அருள் உச்ச நிலையில் இருக்கிறது. பட்டை தீட்டப்பெற்ற வைரம் நன்கு ஒளிர்வது போன்று உமாதேவி சமேதரராயிருக்கும் சிவனுர் பேரருள் சொருபமாகிருர். ஆதலால் அன்பர்கள் அம்மையையும் அப்பனையும் இணைத்து வைத்தே அவர்களிடமிருந்து அருளை நாடுதல் வேண்டும். அத்தகைய அருள் யாண்டும் பக்தனை உய்விக்க வல்லதாம். இச்சீரிய கோட்பாடு இந்நாமத்தின் மூலம் விளக்கப்பெறுகிறது.

**भक्तहार्द तमोभेद भानुमद्भानु संतति: ४०४**

பக்தஹார்த தமோபேத பானுமத் பானுஸம்ததி:

*பக்தர்களுடைய ஹிருதயத்திலிருக்கும் இருளை அகற்றவல்ல சூரியகிரணப் பிழம்பை ஒத்தவள்.*

பூமி இருள் சூழ்ந்து இருக்கும் போது அதன் பொலிவைக் காண முடியாது. பிரளயம் போன்று அனைத்தும் மறைந்து கிடக்கின்றன. அகத்திலுள்ள அக்ஞானம் புறத்திலுள்ள இருளுக் கொப்பானது. பக்தன் ஒருவன் அக்ஞான நிலையிலிருந்து பக்தி பண்ணுகிறான். சூரியன் உதயமாவதற்கு முன்பே அவனுடைய கிரணங்கள் காற்றில் படிந்து பூமியை எட்டுகின்றன. அடவியொன்றில் இருளில் தடுமாறிக்கொண்டு போகிறவர்களுக்கு விடியற்காலம் வரும்போது அதனால் சிறிது வெளிச்சம் கிடைக்கிறது. அதேபாங்கில் அம்பிகையை நாடி பக்தி பண்ணிக்கொண் டிருக்கும் சாதகனுடைய உள்ளத்தில் ஆரம்பதசையில் உள்ள அக்ஞானக் காரிருள் சூழ்ந்து கிடக்கிறது. அவன் பக்தி சாதனத்தில் இடையறாது ஈடுபட்டு வரும்பொழுது அவன் உள்ளத்தில் சூரிய கிரணத்துக்கு நிகராக அம்பிகையின் அருள்நாட்டம் சிறிது சிறிதாக ஞான வெளிச்சத்தை உண்டுபண்ணுகிறது. பக்தனுடைய அன்பு அப்பொழுது பன்மடங்கு அதிகரிக்கிறது. சூரிய கிரணங்களைத் தொடர்ந்து கதிரவன் தோற்றத்துக்கு வருவதையொத்து அம்பிகையின் அருள் என்னும் கிரணத்தைத் தொடர்ந்து அம்பிகையின் சாந்நித்தியமும் வருகிறது. பக்தன் பரமானந்தப் பேறுபெற்றவன் ஆகிறான். அத்தகையவன் அம்பிகையின் அருளைப் பானுவோடு ஒப்பிட்டு அவள் அனுக்கிரஹத்தை நாடியிருத்தல் வேண்டும். பானுவை உடைத்திருக்கும் சூரியன் பானுவான் என்ற பெயர் பெறுகிறான். அருள் என்னும் பானுவை உடைய அம்பிகை பானுமதியாக இலங்குகின்றாள். அம்பிகையைத் தியானிக்கின்ற பக்தன் அவளைப் பானுமதியாக அல்லது சுயஞ்சோதி சொரூபிணியாகப் பாவித்தல் வேண்டும்.

**शिवदूती — சிவதூதீ** ४०५

*சிவனைத் தூதனாக அனுப்புகிறவள்.*

தூது கொண்டு போகின்றவர்கள் பொதுப்பட ஸ்தானத்தில் கீழானவர்கள் ஆகின்றனர். இந்த உலக வழக்கிற்கு விலக்காகப் பெரிய ஸ்தானத்தில் இருப்பவர்கள் தூதுபோவதும் உண்டு.

கிருஷ்ண பரமாத்மா பாண்டவர்களுக்காக அஸ்தினபுரத்திற்குத் தூது சென்றார். சுந்தரமூர்த்தி நாயனருக்காகப் பரவையாரிடமும் சங்கிலியாரிடமும் சிவபெருமான் தூது சென்றார். அடியாருக்கு எளியவராகிய பரம்பொருள் பக்தர்கள் பொருட்டுத் தூது செல்வதில் பரமானந்தம் அடைகின்றார்.

சும்பன், நிசும்பன் என்ற அரக்கர்களோடு போர் தொடுப்பது அம்பிகைக்கு அவசியமாயிற்று. முன்னெச்சரிக்கை செய்வதற்கும் அவர்களிடம் மன மாறுதலை உண்டுபண்ணுதற்கும் அம்பிகை சிவனாரையே தூது அனுப்பினாள். அது அவளுடைய கருணைக்கு எடுத்துக்காட்டாகிறது. சிவபெருமானும் அவ்அரிய செயலை ஆர்வத்துடன் நிறைவேற்றினார். ஆனால் அசுர புத்தியை இறைவனாலும் மாற்ற முடியாது என்பது வெளியாயிற்று.

அசையும் பொருள் சரம் என்றும் அசைவற்ற பொருள் அசரம் என்றும் பெயர் பெறுகின்றன. சக்தியானது சராசரமாக இலங்குகிறது. அசரத்தை விடச் சிறந்தது சரம். சரமாகிய மின்சக்தி அசரமாகிய இரும்பு, தாமிரம், பொன் ஆகியவைகளை முகாமையாகக் கொண்டு தூது பாய்கிறது. உலோகம் ஒன்று எவ்வளவுக்கெவ்வளவு மேலானதோ அவ்வளவுக்கவ்வளவு அதன் பால் மின்சக்தி விரைந்து தூது பாய்கிறது. ஜட உலகத்தைப் பற்றிய இவ்வுண்மை சேதன உலகத்துக்கும் பொருந்துகிறது. பிரகிருதித் தாயின் கூறுகளாக உருவெடுக்கும் ஜீவாத்மாக்கள் பண்பாட்டில் மேல் நோக்கிப் போவதற்கேற்ப நல்ல பிரகிருதிகளாகத் திருந்தியமைகிறார்கள். கருவிகரணங்கள் முற்றிலும் தூய்மையடையுங்கால் ஜீவர்களிடம் சிவ சான்னித்தியம் மேலோங்குகிறது. 'கருவி கரணங்கள் ஓய்ந்த தொண்டர்களிடத்தோ நீ வீற்றிருப்பது' என்பது ஆப்த வாக்கியம். பிரகிருதித் தாயின் தூய தோற்றங்களாகிய அன்னவர்களிடம் சிவ சாந்நித்தியம் ஓங்கியிருப்பது இயல்பு. சிவதூதீ என்னும் சொல் இந்த அரிய பாரமார்த்திகத் தத்துவத்துக்கு விளக்கமாகிறது.

**शिव आराध्या — சிவ ஆராத்யா** **४०६**

சிவனால் ஆராதிக்கப்படுகிறவள்.

வைரமும் அதன் பிரகாசமும் சிவசக்தி தத்துவத்துக்கு நல்ல விளக்கமாகின்றன. வைரத்தில் மறைந்துகிடக்கிற பிரகாசத்தைத்

தோற்றத்துக்குக் கொண்டு வருவதற்கேற்ப அதன் மதிப்பு மேலோங்குகிறது. இங்கு வைரம் சிவமாகவும் அதன் பிரகாசம் சக்தியாகவும் இருப்பது தேற்றம்.

சக்தியற்றிருப்பவன் நான் கிடக்கிறேன் சிவனே என்று' என இயம்புவது இயல்பு. சக்தியற்றுப் போனவன் செயலுக்கு உதவமாட்டான். சக்தி ஓங்குதற்கேற்ப ஒவ்வொரு ஜீவனும் எச் செயலையும் செய்ய வல்லவனாகிறான்.

பிருகு மஹரிஷியும் ஆதி சங்கரரும் தங்களுடைய சாதனங்களின் ஆரம்பதசையில் சக்தி உபாசனையைப் புறக்கணித்தனர். பின்பு சக்திதேவியின் ஆராதனை ஓங்கியபொழுதே அவர்கள்பால் சிவ சான்னித்தியம் உறுதி பெறுவதாயிற்று.

தம் மகிமைகளை விளக்குதற்பொருட்டே சிவபெருமான் தம் பால் புதைந்துள்ள சக்தி சொரூபத்தை வியாபகப்படுத்தி அகிலாண்ட கோடிகளைத் தோற்றத்துக்குக் கொண்டு வந்துள்ளார். சிவனர் தம் பால் அபேதமாயுள்ள சக்தியை ஆராதித்த தன் விளைவாகத்தான் பிரபஞ்சம் தோற்றத்துக்கு வந்துள்ளதாம். ஆத்ம சாதகன் ஒருவன் சக்திதேவியின் இடையறாத ஆராதனையின் மூலமாகவே தன்னிடத்துள்ள சிவ சொரூபத்தை வியாபகப் படுத்த முடியும்.

சிவசொரூபமாகிய ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் அன்னை சாரதா தேவியாரைச் சக்தி சொரூபமாக வழிபட்டபொழுது அவருடைய ஆத்ம சாதனங்கள் அனைத்தும் சம்பூரண நிலையை அடைந்தன. எனவே, சிவ ஆராத்யா என்னும் சொல்லுக்கு அவருடைய சாதனங்களே நல்ல விளக்கமாக வந்துள்ளன.

**शिवमूर्तिः — சிவமூர்த்தி:** ௪௦௭

சிவனைத் தன் வடிவமாக உடைத்திருப்பவள்.

சக்தியே சிவம், சிவமே சக்தி என்னும் அபேத நிலையை இந்த நாமம் எடுத்துக் காட்டுகிறது. அக்னியே உஷ்ணம், உஷ்ணமே அக்னி என்பதற்கு நிகராகச் சிவமூர்த்தி என்னும் நாமம் அமைந்துள்ளது. சிவம் என்னும் சொல் நலனையும் மங்களத்தையும் குறிக்கிறது. அம்பிகையைச் சிவமூர்த்தி என்று சொல்லுங்கால் அவள் நலனே வடிவெடுத்தவள் என்றும் மங்க

ளமே அவளுடைய பாங்கு என்றும் பொருள்படுகிறது. சிவம் என்னும் சொல் மோக்ஷத்தைக் குறிக்கிறது மங்களங்களனைத்திலும் உச்ச நிலையிலிருப்பது மோக்ஷம். மோக்ஷமே உருவாயிருப்பவள் அம்பிகை என்றும் இந்த நாமம் பொருள்படுகிறது.

**शिवङ्करी — சிவங்கரீ** ௪௦௮

மங்களத்தை விளைவிப்பவள்.

பிரபஞ்சத்தை நன்கு ஆராய்ந்து பார்த்தால் அதன்கண் நலத்தைவிடக் கேடே நிறைந்திருப்பதைக் காணலாம். பிரபஞ்சம் முழுதும் இக்காட்சியைக் கொடுத்துக் கொண்டிருக்கையில் அம்பிகையைச் சிவங்கரீ என்று சொல்வது எங்ஙனம் பொருந்தும்? கேடுகளை ஆராய்ந்து பார்த்தால் அவை யாவும் சில நலன்களை உருவாக்குவதற்கே அமைந்துள்ளன என்பது விளங்கும். நம்முடைய கீழான மனப்பான்மையைக் கொண்டு நாம் கேடுகளைக் கேடுகளாகப் பொருள்படுத்துகிறோம். ஆனால் கேடுகள் யாவும் நலனாக நாளடைவில் வடிவெடுப்பதைக் காணலாம்.

ஜீவர்களாகத் தோன்றி ஜனன மரணத்தில் திண்டாடிக் கொண்டிருப்பது பெருங்கேடாகத் தென்படுகிறது. அளப்பரிய திண்டாட்டங்களின் வாயிலாகக் காலாந்தரத்தில் ஜீவர்கள் சிவசொரூபமாகத் திருந்தியமைகின்றனர். ஜீவர்களைப் படிப்படியாகத் திருத்தியமைப்பதும் சிவசொரூபமாக முடிவுக்குக் கொண்டு வருவதும் அம்பிகையின் அரிய செயலாம். 'சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனை ஆண்ட' என்று அங்ஙனம் திருத்தியமைத்த பக்தர் ஒருவர் பராசக்தியின் அரிய செயலை விளக்குகிறார். இங்ஙனம் ஜீவர்களனைவரையும் சிவசொரூபமாக அமைத்து வருவதால் அம்பிகை சிவங்கரீ என இயம்பப் பெறுகிறாள்.

**शिवप्रिया—சிவப்ரியா** ௪௦௯

சிவனுடைய அன்புக்குரியவள்.

அபின்னமாயிருக்கும் பிரகிருதி புருஷ தத்துவங்களைப் பின்னப்படுத்தி ஆராய்ந்தால் இந்த நாமத்தின் உட்பொருள் இனிதுவிளங்கும். இதற்கு விளக்கமாக ராதாகிருஷ்ண வடிவங்கள்

அமைந்திருக்கின்றன. பிரகிருதி தத்துவமான ராதையும் புருஷ தத்துவமான கிருஷ்ணனும் அருகருகே நின்றுகொண்டிருக்கின்றனர். ராதையின் தலை கிருஷ்ணன்பால் வளைந்திருக்கிறது. கிருஷ்ணனுடைய தலை ராதையின்பால் வளைநதிருக்கிறது. அப்படி வளைந்திருப்பதால் கிருஷ்ணனுக்குப் பங்கிம் என்னும் பெயர் வந்துள்ளது. அன்பானது ஒரு மூர்த்தியைத் தனக்குரிய மற்றொரு மூர்த்தியின்பால் கவர்ந்திழுக்கிறது.

சிவனுருடைய முழு அன்புக்கு உரியவளாகிய அம்பிகை தானே தன் முழு அன்பையும் சிவனிடம் செலுத்துகிருள். துவைதத்தில் உருவெடுக்கும் அன்பு அத்வைதத்தில் பூர்த்தியாகிறது. சிவன் சக்தியின்பால் கொண்டுள்ள அன்பு பெரியதா, அல்லது சக்தி சிவத்தின்பால் கொண்டுள்ள அன்பு பெரியதா என்று பாகுபடுத்த முடியாது. அது பரஸ்பர அன்பாக வடிவெடுத்துப் பின்பு அனன்ய பக்தியாகப் பூர்த்தியாகிறது. ஆத்மசாதகர்களுக்கு இக்கோட்பாடு சிறந்ததோர் எடுத்துக்காட்டாகிறது. பரம்பொருளுக்கென்றே பக்தன் ஒருவன் தன்னை ஒப்படைத்து விடவேண்டும். அப்படிச் செய்கிற பக்தனுக்கு உரியதாகவே பரவஸ்து ஆகிறது. சிவனுக்கும் சக்திக்கும் உள்ள இனிய அன்பு பக்தனுக்கும் பரமனுக்கும் உரியதாகவும் வடிவெடுக்கிறது.

**शिवपरा — சிவபரா** ४१०

சிவனுக்கு மிக்காளாக இருப்பவள்.

சான்று ஒன்றின் மூலம் இந்நாமத்தை விளக்கலாம். வைரமும் அதன் பிரகாசமும் இணைபிரியாதவைகள். பிரகாசம் ஓங்குதற்கேற்ப வைரத்தின் மதிப்பு அதிகரிக்கிறது. அங்ஙனம் சிவபெருமானுக்கு வந்துள்ள மகிமைகள் யாவும் சக்தியினிடத்திருந்து வந்தவைகளாம். சக்தி சிவனிடமிருந்து மறைந்து போய்விடுமானல் சிவம் சவமாகப் பொருளற்றதாகிவிடும்.

சிவனைத் தவிர வேறு எதையும் குறிக்கோளாகக் கொள்ளாதவள் எனவும் இந்த நாமம் பொருள்படுகிறது. அம்பிகை நாடுதற்கு சிவத்தைத் தவிர வேறு பொருள் இல்லை. அவள் யாண்டும் சிவ நாட்டம் படைத்தவளாகவே இருக்கிருள். சீதா ராம தத்துவத்தின் மூலம் இந்த நாமத்தின் கோட்பாடு நன்கு விளங்கும்.

சீதையை மணந்துகொண்ட பிறகு ஸ்ரீ ராமனுடைய மகிமை பன் மடங்கு மேலோங்குகிறது. ஸ்ரீ ராமனை மணந்துகொண்ட பிறகு சீதையின் பதிபக்தி உச்சநிலைக்கு வருகிறது. பதிபக்தியில் ஊறியிருந்த சீதையை இராவணன் அபகரித்துச் சிறையில் வைக்கிறான். அதன் விளைவாகச் சீதையிடம் ராம நாட்டம் உச்சநிலைக்குப் போகிறது. தன் பதியை அவள் என்ன பாங்கில் மதித்து வந்தாள் என்பதைச் சிறைவாசம் விளக்குகிறது. அதற் கொப்ப சிவனை யடைதற்கு அம்பிகை குமரியாயிருந்து கடுந்தவம் புரிகிறாள். சிவனை அடைவதைத் தவிர வேறு எந்த நோக்கமும் அவளுக்கு இல்லை. சிவபரா என்னும் சொல் இக்கோட்பாட்டை நன்கு விளக்குகிறது.

அம்பிகையைச் சார்ந்திருக்கின்றவர்களுக்கு அவள் சிவ சொரூபத்தைக் காட்டியருள்கிறாள். காளிகாதேவி தன் பாதத் தின் கீழ் சவம்போன்று அசைவற்றிருக்கிற சிவத்தைப் பக்தர் களுக்கு வரமாகக் காட்டியருள்கிறாள். அதற்கு நிகரான பேறு இல்லை. தன்னை நாடியிருப்பவர்களுக்குச் சிவனை அடையும் பேற்றினைக் கொடுத்தருள்பவள் என்று சிவபரா என்னும் நாமம் பொருள்படுகிறது.

**शिष्टेष्टा — சிஷ்டேஷ்டா** ௪௧௧

சிஷ்டர்களைத் தனக்குச் சொந்தமாக்கிக்கொள் கிறவள்.

நல்லொழுக்கத்தினின்று இம்மியளவும் பிசகாது இருக்கின்ற வர்கள் சிஷ்டர்கள் எனப்படுகின்றனர். நல்லொழுக்கம் மானு டன் ஒருவனிடம் தென்படுமாகில் அன்னவனை மற்றவர்கள் எல் லாரும் மதிக்கின்றனர். அன்னை பராசக்தியோ மக்கள் எல்லாரை யும் நல்லாராக்குவதிலேயே கண்ணும் கருத்துமாயிருக்கிறாள். யாரெல்லாம் முற்றிலும் நல்லாராகின்றார்களோ அவர்கள் எல்லா ரும் அம்பிகைக்கு முற்றிலும் உகந்தவர்களாகின்றனர். சிஷ்டர்கள் என்னும் சொல் தத்தமக்குகந்த ஸ்வதர்மத்தினின்று பிசகாதவர் கள் எனவும் பொருள்படுகிறது. ஸ்வதர்மத்தை இனிது நிறை வேற்றுகிறவன் மேலோனாகிறான். அதுவே சிறந்த தேவாராதனை யாகிறது. ஜீவர்களெல்லாரும் தத்தமக்குரிய கர்மங்களை இனிது

நிறைவேற்றுவார்களாயின் பிரபஞ்சத் திட்டம் மேலோங்குகிறது. அது அவனுக்குப் பரம திருப்தியை உண்டுபண்ணுகிறது. ஆதலால் ஆத்ம சாதகர்கள் எல்லாரும் நல்லொழுக்கத்தில் நிலைபெற்றவர்களாக இருந்துகொண்டு தத்தமக்குரிய ஸ்வதர்மங்களை இனிது நிறைவேற்றுவார்களாயின் அவர்கள் அம்பிகையின் அருளுக்குப் பாத்திரமாகிறார்கள்.

**शिष्टपूजिता — சிஷ்டபூஜிதா** ४१२

சிஷ்டர்களால் பூஜிக்கப்படுகிறவள்.

ஒவ்வொரு மனிதனும் ஏதேனும் ஒன்றை வழிபடுவது அவனுக்கு இயல்பாயமைந்துள்ள பாங்கு ஆகிறது. அவனை வழுத்துபவர்கள் உலகில் இருக்கிறார்கள். அங்ஙனம் தீமையை வழுத்துபவர்களும் உலகில் இருக்கிறார்கள். ஒருவன் செல்வத்தை வழுத்துகிறான். மற்றொருவன் பதவியையும், போகத்தையும் வழுத்துகிறான். மனிதன் எதை வழுத்துகிறானோ அதினின்று அவனுடைய பண்பு வெளியாகிறது. துஷ்டத்தனம் வாய்ந்தவர்கள் துஷ்ட தேவதையை வழுத்துகிறார்கள். சிஷ்டர்களாயிருப்பவர்கள் நல்லொழுக்கத்தில் நிலைபெற்றவர்கள். அம்பிகையை இயல்பாகவே வழிபடும் அன்னவர்கள் அவளுடைய மகிமையை உள்ளபடி அறிந்துகொள்கிறார்கள்.

ஒவ்வொருவர் புரியும் கர்மமும் ஒருவிதத்தில் தெய்வ வழிபாடாகிறது. நல்லார் சத்கர்மமே வடிவெடுத்தவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் புரிகிற மேலாம் கர்மம் அம்பிகைக்கு முற்றிலும் உகந்த வழிபாடாகிறது. அன்னவர்களுடைய ஜீவிதத்தைத்தான் அம்பிகையின் இடையறாத ஆராதனை என இயம்பவேண்டும். அன்னவர்களின் ஆராதனை அம்பிகையின் மகிமையை இனிய பாங்கில் வெளிப்படுத்துகிறது.

**अप्रमेया — அப்ரமேயா** ४१३

அளப்பரியவள்.

வழிபடு தெய்வத்தின் மகிமைகளை ஒருவாறு வழிபாடு செய்பவர்கள் அறிந்துகொள்வதும் ஒருவித வழிபாடாகிறது. வழிபடுவதற்கேற்ப வழிபடு தெய்வத்தின் மகிமை வழிபடுகிறவர்களுடைய உள்ளத்துக்கெட்டுகிறது. ஆயினும் அகண்டாகாரத்

தில் விரிந்தோடுகிற அம்பிகையின் பெருமைகளை பக்தர்களோ, யோகிகளோ, தேவதைகளோ முற்றிலும் அறிந்துகொள்ள மாட்டார்கள். எல்லையில் அடங்காத அகண்ட வஸ்துவாக அம்பிகை இலங்குகின்றாள். எல்லைக்குட்பட்ட மனதைக்கொண்டு எல்லையிலடங்காத ஒன்றை அளக்கமுடியாது. பாண்டம் ஒன்றி லிருக்கும் ஜலத்தை ஆழாக்கைக்கொண்டு அளக்கலாம். ஆனால் சமுத்திரத்தை அளப்பதற்கு ஆழாக்கு உதவாது. சமுத்திரத்தை அளக்கவே முடியாது. அங்ஙனம் அன்னை பராசக்தியின் அகண்டாகார சொரூபமும், அவள்பால் இலங்குகின்ற விபூதி களும் யாருடைய வழிபாட்டிலும் அடங்கப் பெருதவைகளாம். ஆயினும் சிஷ்டர்கள் விபூதிகளின் ஒரு சில பகுதிகளைச் சரியாக அறிந்துகொள்கின்றனர். அகண்டாகாரத்தில் விரிந்து ஓடுகிற அம்பிகையை வழிபடுவதற்கு நல்ல ஆத்ம சாதகனொருவன் தன் மனதையும் அகண்டாகாரத்தில் கரைத்துவிட முயல்வானாகில் அது நல்ல ஆராதனையாகிறது. சமுத்திரத்தை ஆழம் பார்க்க முயலும் உப்புப்பொம்மை சமுத்திரத்திலேயே ஒன்றுபடுகிறது. ஆனால் அதை அளக்க அப் பொம்மைக்கு இயலாது. அங்ஙனம் அம்பிகையின் சொருபத்தை யாருமே அளந்தது கிடையாது.

**स्वप्रकाशा — ஸ்வப்ரகாசா** ४१४

இயல்பாகவே ஒளி மயமாயிருப்பவள்.

பிரபஞ்சப் பொருள்களுள் சூரியன் சுயப்பிரகாசம் உடைய வன். சுயப்பிரகாசம் இல்லாத சந்திரன் சூரியனிடமிருந்து ஏற்றுக் கொண்ட வெளிச்சத்தைக் கொண்டு ஒளிர்கிறது. அதே பாங்கில் சூரியனிடமிருந்து வாங்கிக் கொண்ட வெளிச்சத்தைக் கொண்டு பூமி ஒளிர்வதைச் சந்திர மண்டலத்திற்குப் போனவர்கள் பார்த் தார்கள். சூரியனுக்குச் சுயப்பிரகாசம் இருக்கிறது என்றாலும் பின்பொரு காலத்தில் அந்தப் பிரகாசம் அழிந்து பட்டுப்போம். முன்பொரு காலத்தில் சூரியனில் பூமியும் சந்திரனும் அடங்கி யிருந்தபொழுது அவைகளும் சுயப்பிரகாசமாயிருந்தன. சிதறி வந்த பிறகு அவை வெப்பத்தை இழந்து வெளிச்சத்தையும் இழப் பனவாயின. இங்ஙனம் ஜடப்பொருள்கள் யாவும் பிரளயத்தில் தங்கள் ஒளியை இழக்கின்றன. ஆத்மப் பிரகாசம் அங்ஙனம் அழிந்துபட்டுப் போவதன்று. யாண்டும் அது தன்னைத்தானே

விளக்கிக்கொண்டும் ஜடப் பொருள்களை விளக்க வல்லதாயும் உள்ளது. அதன் ஸ்வப்பிரகாசம் அம்பிகையென்று அழைக்கப் பெறுகிறது. ஜீவர்களுடைய உள்ளத்திலும் ஒளிர்ந்து கொண்டிருக்கும் அந்த ஸ்வப்பிரகாசத்தைச் சார்ந்திருப்பதுதான் சரியான வழிபாடு. புறத்தில் ஜடப்பொருளைக் கொண்டு அம்பிகைக்கு வடிவம் ஒன்றமைத்து அதற்குத் தீபாராதனை பண்ணுவது அக்ஞான நிலையிலிருப்பவர்கள் செய்கின்ற வழிபாடாகிறது. வேறு பாங்கில் வழிபட அவர்களுக்கு இயலாது. ஆகையால் அத்தகைய பிரபஞ்சப் பொருள்களைக் கொண்டு செய்கின்ற வழிபாடு ஆன்றோர்களால் ஆமோதிக்கப்படுகிறது. ஜீவாத்மன் தன்னிடத்துள்ள ஆத்மப் பிரகாசத்தை உள்ளத்தில் ஒளிர்கின்ற அம்பிகையின் ஸ்வப்பிரகாசத்தில் ஒன்றுபடுத்துவதே சீரிய வழிபாடாகிறது. அது ஞானிகளுக்கு இயலுகிறது.

## मनोवाचाम् अगोचरा — மனோவாசாம் அகோசரா ४१५

மனதுக்கும் வாக்குக்கும் எட்டாதவள்.

அந்தக்கரணமாகிய மனமும் புறக்கரணமாகிய வாக்கும் பிரகிருதியின் கூறுகளாகின்றன. பிரகிருதியோ அசேதனம். சேதனத்தை அசேதனம் அறிந்துகொள்ளாது. குருடன் எங்ஙனம் சூரியப் பிரகாசத்தை அறிந்து கொள்ளமாட்டானோ அங்ஙனம் சேதனத்தின் தெளிவைப் பிரகிருதி கிரகிக்க மாட்டாது.

மனதையும் வாக்கையும் மக்களாகிய நாம் பயன்படுத்துவதெல்லாம் பிரகிருதியோடு இணக்கம் கொள்ளுதல் பொருட்டேயாம். கருவிகரணங்களைக் கையாண்டு வாழ்ந்து வருகின்ற உயிர்களனைத்தும் பிரபஞ்சத்தில் உழன்று வருகின்றன. அதைத் தங்கள் திறனுக்கேற்றவாறு அவை பயன்படுத்தியும் வருகின்றன. ஆனால்பிரபஞ்சாதீதத்திலுள்ள பரதேவதையைத் தரிசிக்க இவை உதவமாட்டா. கருவிகரணங்களைப் பிரகிருதியின்கண் செல்லாது கட்டியாளவேண்டும். அச்செயலே ஆத்ம சாதனம் எனப்படுகிறது. அவற்றை முற்றிலும் அடக்கியாளுகிற பாங்கிலே பதினன்கு வருஷங்களுக்கு மேல் வாழ்ந்து வருகிற யோகிக்கு ஞானக் கண் உருவெடுக்கிறது. அந்த ஞானக் கண்ணுக்கு அம்பிகை கோசரம் ஆகின்றாள். அம்பிகையைத் தரிசிக்க அத்தகைய ஞானக்

கண் வேண்டும். ஊனக்கண்களுக்கு அவள் ஒருநாளும் எட்ட மாட்டாள். இதுவே இந்நாமத்தின் உட்பொருளாம்.

**चिच्छक्तिः — சிச்சக்தி:** ४१६

**பேருணர்வு, பேரறிவு மயமாய் இருப்பவள்.**

ஜடசக்தி அல்லது உணர்வற்ற சக்தியோடு சீர்தூக்குவதன் வாயிலாகச் சித்சக்திக்கு நல்ல விளக்கம் தரலாம். இவ்விளக்கத்துக்குத் துணையாக மொழியில் அமைந்துள்ள உயிரெழுத்து, மெய்யெழுத்துக்களைச் சான்றாக எடுத்துக்கொள்ளலாம்.

ஒலிக்கும் பாங்குடைய உயிரெழுத்தின் துணை இல்லாவிட்டால் ஒலிக்கும் பாங்கு அடைபட்டுக் கிடப்பது மெய்யெழுத்து. உயிரெழுத்து சித்சக்திக்கு நிகராகவும் மெய்யெழுத்து ஜடசக்திக்கு நிகராகவும் இருக்கின்றன. உயிரெழுத்தும் மெய்யெழுத்தும் சேர்ந்து பல தரப்பட்ட ஓசைகளாக வடிவெடுக்கின்றன. இயற்கையில் இதற்கு நிகராகச் சித்சக்தியும் ஜடசக்தியும் அமைந்திருக்கின்றன. வெப்பம், வெளிச்சம், சாந்தம் ஆகியவை இயற்கையிலுள்ள ஜடசக்திகளாகின்றன. அறிவோடும், உணர்ச்சியோடும் கூடிய உயிர்த்தத்துவம் சித்சக்தியாகிறது. 'நான் இருக்கிறேன்' என்னும் உணர்ச்சி படுத்திருக்கும் ஒரு மனிதனுக்கு உண்டு. இந்தச் சக்தியே சித்சக்தி என்னும் பெயர் பெறுகிறது. இத்தகைய உணர்ச்சி சவம் ஒன்றுக்கு இல்லை.

மனிதனைப் போன்ற பொம்மைகளை இக்காலத்தில் செய்கிறார்கள். அவைகளுக்கு நடக்கவும், மோட்டார் சைக்கிள் ஓட்டவும், 'எஜமானன் வீட்டில் இல்லை' என்று தொலைபேசியில் பேசவும் முடியும். இதற்கிடையில் அவை படைத்திருப்பது ஜடசக்தியாம். நல்லது எது, கெட்டது எது என்று பாகுபடுத்த ஜடசக்திக்கு இயலாது. சித்சக்தியுடைய மக்கள் செய்வது போல் பொம்மைகள் ஒன்றோடொன்று உறவு கொண்டாட மாட்டா. சித்சக்தி மயமாயிருக்கின்ற ஜீவாத்மாக்கள் இன்ப துன்பங்களை உணர்கின்றன. ஜீவர்களுக்குப் பிறப்பு, தேய்வு, வளர்ச்சி, மரணம் உண்டு. ஜடசக்தி மயமாய் இருக்கிற பொம்மைகள் இன்ப துன்பங்களை உணர்வதில்லை. பிறப்பு, வளர்ச்சி, மரணம் உண்டு. ஜடசக்தி மயமாய் இருக்கிற பொம்மைகள்

இன்ப துன்பங்களை உணர்வதில்லை. பிறப்பு, வளர்ப்பு அவற்றுக்கு இல்லை. அவை தேய்ந்து கெட்டுப்போகின்றன. அது ஜடசக்தியின் கூறு. சித் சக்தியானது தான் இருப்பதைத் தானே அறிகிறது. அது பேரறிவு வடிவம் கொண்டது.

**चेतनारूपा — சேதனரூபா** ४१७

சைதன்ய வடிவினளாய் இருப்பவள்.

சித் என்று சொல்லுவதும் சைதன்யம் என்று சொல்லுவதும் சேதனம் என்று சொல்லுவதும் ஒரே மெய்ப்பொருளை முன்னிட்டாம். யாண்டும் உள்ள அம்மெய்ப்பொருள் தான் இருப்பதைத் தானே அறிகிறது. மனிதன் ஒருவனுக்குத் தான் இருப்பதைப் பற்றிச் சந்தேகம் இல்லை. 'நான் இருக்கிறேனா? அல்லது செத்துப் போய்விட்டேனா?' என்னும் கேள்வியை அவன் யாரிடமும் கிளப்புவதில்லை. சேதனத்துக்கு அழிவில்லை என்பதை ஒரு நிகழ்ச்சியின் வாயிலாக விளக்கலாம்.

இரவில் படுக்கப்போன மானுடன் ஒருவன் அறையைத் தாளிட்டுக்கொண்டான். அங்கு மங்கலான தீபம் ஒன்று எரிந்து கொண்டிருந்தது. தூங்கும்போது அவன் கண்ட கனவில் தன் சத்துருவைச் சந்தித்தான். அவர்களுக்கிடையில் தொடங்கிய வாய்ச்சண்டை கை கலப்பில் முடிந்தது. எதிரி திடீரென்று கத்தி ஒன்றை எடுத்து அவன் நெஞ்சில் ஓங்கிக் குத்தினான். நெஞ்சைப் பிளந்துகொண்டு கத்தி முதுகுப் பக்கம் வெளியாயிற்று. 'செத்தேன், செத்தேன்' என்று சொல்லிக்கொண்டு கீழே விழுந்த வேகத்தில் கனவு கண்ட அவன் காலை ஓங்கித் தரையில் அடித்தான். அதன் விளைவாகக் காலில் நல்ல அடி. அவன் எழுந்து உட்கார்ந்து தன் நெஞ்சைத் தொட்டுப் பார்த்தான். அவனைக் குத்திய கத்தி நெஞ்சில் இல்லை. தாளிட்டபடி கதவு இருந்தது; சத்ரு அறைக்குள் வரவில்லை. 'நான் சாகவில்லை' என அவன் தெளிவடைந்தான். அந்தத் தெளிவு நிலைதான் சேதனம். தனக்குள்ள சக்தியால் உடலை எடுத்துக்கொள்ளும் சேதனம் பிறந்து, வளர்ந்து, தேய்ந்து, சாகும் அவ்வுடலின் செயல்களைத் தன் செயல் என்று மயக்கம் கொள்கிறது. அவ்வாறு மயக்கம்கொள்கின்றவிடத்தும் அது சேதனமாகவே உள்ளது. தூங்குகின்ற பொழுதும் அது அவ்வாறே உள்ளது. அவ்வேளையில் தமோ

குணத்தில் லயமாகிய அச்சேதனத்தின் அந்தக்கரணம் ஜடமாக மாறுகிறது. தூங்குகிறபொழுது தன்னையும் புறத்தில் இருப்பவைகளையும் பார்க்கப் பயன்படுத்திய அந்தக்கரணம் ஜட நிலைக்குப் போனதும் அதைக்கொண்டு மனிதன் எதையும் பார்க்க முடிவதில்லை. தூங்கும்போது ஒன்றையும் பார்க்காது இருக்கின்ற நிலைக்குச் சேதனம் சாட்சி. அதனால் தான் 'நான் ஒன்றையும் பார்க்கவில்லை' என்று சொல்ல அவனுக்குச் சாத்திய மாகிறது. தனக்குப் புறம்பாக எதையும் பார்க்காத நிலையிலும் சேதனம் தனக்குத்தானே சாட்சியாய் இருக்கிறது. இதுவே சேதனத்தின் மகிமை. அன்னை பராசக்தி சேதனா ரூபிணியாக இருக்கிறாள்.

தூங்குவதும் எழுந்திருப்பதுமாகிய சரீரத்தின் கூறு சேதனத்தின் பால் அறியாமையினால் ஆரோபிக்கப்படுகிறது. ஜீவன் முக்தன் அந்த அறியாமையினின்று விலகியிருக்கிறான். முக்குணமயமாயுள்ள உடல் உணர்வினின்று தன்னை விடுவித்துக்கொள்வது முக்தி. ஜீவர்களின் நிஜநிலை சேதனம். சேதனாரூபிணியாக இருக்கும் அம்பிகையின் அருளால் ஜீவாத்மனும், தான் யதார்த்தமாயுள்ள சேதனாரூபத்தை அனுபூதியில் அறிந்து கொள்ளவேண்டும். இதுவே மானுட ஜன்மத்தின் குறிக்கோள்.

## जडशक्तिः — ஜடசக்தி: ४१८

சித்சக்திக்கு நேர் எதிரிடையில் இருப்பது ஜடசக்தி. அம்பிகையின் நிஜ சொரூபம் சித்சக்தி என்றால் ஜடசக்தியைத் தோற்றுவித்தது யார்? என்னும் கேள்வி எழுகின்றது. பிரபஞ்ச நடைமுறையை உண்டுபண்ணுதற்கு ஒன்றோடொன்று மாறுபடுகிற இரண்டுவிதச் சக்திகள் அவசியமாகின்றன. நன்மை தீமை, இன்பதுன்பம், பிறப்பு இறப்பு போன்ற நிலைகள் அவசியம். இதற்குத் திருஷ்டாந்தம் ஒன்று கொண்டு வருவோம்.

கட்புலனாகாத சூரிய கிரணம் பேரொளி. அது ஒருவஸ்துவின் மீது படிந்தால் அதை வெளிச்சம் என நாம் பொருள் படுத்துகிறோம். ஒன்றின்மீதும் அது படியாதிருக்கும்பொழுது அது தோன்றா நிலையில் இருக்கிறது. ஒரு முப்பட்டைக் கண்ணாடியின் மீது அதைப் படியச் செய்தால் அது ஏழு நிறங்களாகச் சிதறடைகிறது. அந்நிறங்களுள் பச்சை சிவப்போடும் நீச்சள்

நீலத்தோடும், வெள்ளை கறுப்போடும் முரண்படுகின்றன. இத்தகைய முரண்பாடுகள் இருந்தால்தான் நிறங்களை நன்கு விளக்க முடியும். விளங்காததை விளங்கவைப்பது சிருஷ்டியின் கூறு. விளங்கவைப்பதற்கு வேற்றுமை அவசியம். அக்கோட்பாட்டின்படி சித்சக்தியாயுள்ள அம்பிகை ஜடசக்தியாகவும் தன்னைத் திரிவுபடுத்துகிறாள். அங்ஙனம் திரிவுபடுத்தினால்தான் பிரபஞ்ச அமைப்பை அல்லது சிருஷ்டியை முறையாகக் கொண்டு செலுத்த முடியும்.

வெள்ளைக்கு நேர் எதிரிடையாகக் கருப்பு இருப்பதுபோன்று சித்சக்திக்கு எதிரிடையாக ஜடசக்தி இருக்கிறது. உணர்ச்சியும் அறிவும் சித்சக்தியிடம் உண்டு. மற்றதனிடத்து உணர்ச்சியும் இல்லை; அறிவும் இல்லை. ஆயினும் அது சக்தியாக இலங்குகிறது. உதாரணமாக உஷ்ணத்திடத்து உயிர்த் தத்துவம் இல்லாததால் அது சித்சக்தியாகாது. ஆயினும் அது சித்சக்தி அல்லது உயிர்த்தத்துவம் ஓங்குதற்கு உறுதுணையாகிறது. சூரிய வெப்பம் என்னும் ஜடசக்தி மண்ணுலகுக்கு வாராது போய்விடுமானால் உயிர்களனைத்தும் அடிபட்டுப் போம். ஜடசக்திகளாகிய பஞ்சபூதங்கள் இல்லாவிட்டால் உலகை ஆக்க முடியாது. உயிரை ஓம்புதற்கு ஜடசக்தியும் அவசியமாகிறது. இக்காரணத்தை முன்னிட்டே அம்பிகை ஜடசக்தியாகவும் இலங்குகிறாள். மானுட அமைப்பில் ஜடசக்தியாகிய எலும்பு உணர்ச்சிமயமான தசையுடன் சேர்ந்து செயல்படுகிறது. இங்ஙனம் அறிவுமயமான அம்பிகை உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத ஜடசக்தியாகவும் திகழ்கிறாள்.

**जडात्मिका — ஜடாத்மிகா** ४१९

ஜடசக்தி வடிவமாகப் பிரபஞ்சத்திலுள்ள ஜடப் பொருள்கள் அனைத்திலும் இலங்குபவள்.

இம்மண்ணுலகில் ஜடப்பொருள்கள் சேதனப் பொருள்களை விட அதிகமாக உள. இதை ஒரு சான்றின்மூலம் விளக்கலாம். தென்னை நெற்று ஒன்றை ஆராய்ந்துபார்த்தால், அதன்கண் சேதன வஸ்துவாய் அல்லது உயிர்த் தத்துவமாய் இருப்பது மிகச் சிறிய பகுதி. அதைக் காப்பாற்றுதற்கு மட்டை, ஓடு

முதலிய ஜடப்பொருள்களாய் அமைந்திருப்பவை மிக அதிகம். மிகைபட்ட ஜடசக்தி இருப்பதால்தான் குறைபட்ட சித்சக்தி பிரபஞ்சத்தில் நன்கு காப்பாற்றி வைக்கப்படுகிறது. ஆதலால் அம்பிகை ஜடாத்மிகாவாக இலங்குகின்ருள். அந்த நிலையிலும் அவள் ஆராதனைக்குரியவள் ஆகின்ருள். உலகெங்குமுள்ள ஜடாத்மிக தத்துவத்தை அம்பிகையின் மகிமையென்று பாராட்டுவது அவளுக்குரிய நல்ல ஆராதனையாகிறது.

**गायत्री — காயத்ரீ** ४२०

தெய்வ வழிபாட்டுக்குரிய யாப்பு அமைப்புகளுள் காயத்ரீ யாப்பு மிகப் பிரசித்தி பெற்றுள்ளது. அது நான்கு வேதங்களின் சாரம் என்று போற்றப்படுகிறது. வழிபாட்டுக்குரிய ஒவ்வொரு தேவதைக்கும் ஏற்ற காயத்ரீ மந்த்ரம் அமைந்திருக்கிறது. அந்த மந்த்ரத்தில் இரண்டு கூறுகள் அமைந்துள்ளன. முதல் கூறு அந்தத் தெய்வத்தின் விபூதி அல்லது மகிமையாகும். இரண்டாவது கூறு அதை உச்சரிக்கின்ற ஆத்ம சாதகன் பெறுகின்ற பரபோதமாகும். பரபோதத்தைப் பெறுதற்கே சாதனங்கள் யாவும் பயிலப்படுகின்றன. அவைகளுள் காயத்ரீ மந்த்ர ஜபம், காயத்ரீ தியானம் ஆகியவற்றின் வாயிலாக விளைகிற பரபோதம் விரைவில் அமைவதாகிறது. அதை முன்னிட்டே காயத்ரீ மந்த்ரம் மிக முக்கியமானதெனப் பாராட்டப்படுகிறது. அதன் மகிமை அந்தச் சொல் அமைப்பிலேயே அமைந்திருக்கிறது. காயா— அதைப் பாடுகின்ற ஒருவனுக்கு, த்ரீ—பாதுகாப்பும், முன்னேற்றமும் தாமாக வந்தமைகின்றன என்பது காயத்ரீ என்னும் சொல்லுக்குரிய பொருளாம். காயத்ரீ மந்த்ரத்தில் மனம் ஒன்றுபடுகின்ற அளவு அதன்கண் தூய்மையும் தெளிவும் ஏற்படுகின்றன.

**व्याहृतिः — வ்யாஹ்ருதி:** ४२१

உச்சரிப்பு மயமாக இருப்பவள்.

ஆத்ம சாதகன் ஒருவன் மந்த்ரத்தைச் சரியாக உச்சரிக்கக் கடமைப்பட்டிருக்கிருன். உணவு உண்கிற ஒருவன் அதை நன்ருக மென்று உமிழ்நீருடன் கலந்து விழுங்குகின்றபொழுது

உடலில் அது நன்ருகப் பற்றுகிறது. அங்ஙனம் காயத்ரீ மந்த்ரத்தை எல்லா மன நிலைகளிலும்.நன்ருக உச்சரிக்கின்றபொழுது அதன்கண் உள்ள அருள் சாதகனை அதிவிரைவில் தெய்விக இயல்பு படைத்தவனுகத் திருத்தியமைக்கிறது.

வியாஹ்ருதிக்குப் பூர், புவ:, ஸ்வ: என்று மூன்றுவித மன நிலைகள் ஏற்றுவது சர்வ சாதாரணம். இம்மூன்றும் ஜாக்கிரதம், சொப்பனம், சுஷுப்தி எனப் பொருள்படுகின்றன. இதற்குமேல் வியாஹ்ருதியை பூ:, புவ;, ஸ்வ:, மக:, ஜன, தப, சத்யம் என ஏழாக அமைப்பதும் உண்டு. மனேபாவங்கள் யாவும் இந்த ஏழு வ்யாஹ்ருதிகளில் அடங்கிவிடுகின்றன. மனேபாவங்கள் எத்தகையதாயிருந்தாலும் அதன் வாயிலாக உச்சரிக்கப்படும் மந்த்ரமானது தெளிவுற்றதாய் இருக்குமானல் அது சாதகனை மந்த்ரத்துக்குரிய தெய்வ சொருபமாகத் திருத்தியமைக்கிறது என்பது கோட்பாடு.

**संध्या — ஸந்த்யா** ४२२

நேரங்கள் இரண்டு ஒன்றையொன்று சந்திக்கும்பொழுது அது ஸந்த்யா எனப்படுகிறது. காலையில் இரவும் பகலும், மாலையில் பகலும் இரவும் சந்திக்கின்றன. நண்பகலில் பகலின் முற்பகுதியைப் பிற்பகுதி சந்திக்கிறது. இந்த நான்கு வேளைகளும் ஸந்த்யா எனப்படுகின்றன. சாந்தம் நிலவும் அவ்வேளைகள் தியானம் பண்ணுதற்குப் பொருத்தமான நேரங்களாகின்றன. மனதை அமைதியுறப் பண்ணுகிறவர்களுக்கு அவை தக்க தருணங்களாகின்றன. தீவிரமாக ஆத்மசாதனங்கள் புரிகின்றவர்கள் நான்கு ஸந்த்யாக்களையும் நன்கு பயன்படுத்துகின்றனர். பாரமார்த்திகப் பெருவாழ்வை வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டிருக்கிறவர்களுக்குச் சந்த்யா வேளைகளை முற்றிலும் பயன்படுத்துவது சாத்தியமாகிறது. சாதனத்தில் ஏகதேசம் ஈடுபடுகிறவர்கள் காலை, மாலை சந்தியாக்களைக் கட்டாயம் பயன்படுத்தியாகவேண்டும்.

வெயிலில் வியர்த்துக் கொட்டிக்கொண்டு திண்டாடி நடக்கின்றவர்கள் வழியில் நிழலைக் கண்டால் அதைப் பயன்படுத்திக் கொண்டு ஓய்வையும் உறுதியையும் பெறுகின்றனர். அந்த நிழலுக்கு நிகர் ஸந்த்யா நேரம். ஹிமாசலத்தில் உறைபனியில் நடுங்கிக்கொண்டு நடக்கிறவர்கள் தேயிலைப்பானக் கடைகளில் எரிந்து

கொண்டிருக்கும் அடுப்பண்டை கை நீட்டிக் குளிர் காய்ந்து இன்புறுகின்றனர். சந்தியா வேளைகளைப் பயன்படுத்துபவர்களின் இன்பம் அத்தகையது. இயற்கைத் தாயின் வரப்பிரசாதமாக ஆத்மசாதகர்களுககுச் சந்தியா வேளைகள் வாய்க்கின்றன. மனதைச் சாந்தப்படுத்துதற்குரிய அந்நேரங்களே அம்பிகையின் சொரூபங்களாகக் கருதப்படுகின்றன.

ஆத்ம சாதகன் தன்னைக் காயத்ரீ மந்த்ரத்தோடு இரண்டற இணைத்துக்கொள்கின்றபொழுது அது சந்தியா எனப்படுகிறது. தியான அவஸ்தையில் ஜீவாத்மன் தன்னைப் பரமாத்மனோடு இணைத்துக்கொள்கின்றபொழுது அது சந்தியா எனப்படுகிறது. சிவமும் சக்தியும் அபேதமாக உள்ளனர் என உணரும்பொழுது அது சந்தியாவாகிறது.

புராண வரலாற்றின்படி, நான்முகக் கடவுள் தியானம் பண்ணிக்கொண்டிருந்தபொழுது அவர் உள்ளத்தினின்று தோன்றிய ஒரு கன்னிகைக்குச் சந்தியா என்று பெயர். சந்தியா நேரங்களில் சாதனங்கள் புரிகின்றபொழுது அத்தேவதைக்கு வணக்கம் செலுத்துவதால் மனம் குவிந்து தியானம் பண்ணும் வல்லமை சாதகனுக்கு வருகிறது. சந்தியாவில் அமைந்துள்ள இக்கோட்பாடுகளையெல்லாம் நன்கு பயன்படுத்திச் சாதனத்தில் தீவிரமாக ஈடுபட ஆத்மசாதகன் கடமைப்பட்டிருக்கிறான்.

**द्विजवृन्दनिषेविता — த்விஜப்ருந்தநிஷேவிதா** **४२३**

த்விஜர்களுடைய கூட்டங்களால் ஊக்கத்துடன் ஆராதிக்கப்படுகிறவள்.

த்விஜன் என்னும் பதம் இருபிறப்பாளன் எனப் பொருள்படுகிறது. மானுட வடிவத்தில் மாதாவின் உதரத்தினின்று தோன்றிவருவது முதற்பிறப்பு. பிறகு மனபரிபாகம் அடைந்துள்ள மானுடன் ஒருவன் தன்னைப் பாரமார்த்திகப் பெருவாழ்வுக்கு ஒப்படைக்கின்றபொழுது அவன் இரண்டாவது பிறப்பெடுத்தவனாகிறான். தாய் வயிற்றினின்று தோன்றி வந்துள்ள நிலையிலேயே நின்றுவிடுபவன் சூத்திரன் எனப்படுகிறான். பரநாட்டம் கொள்ளவோ பரம்பொருளை வழுத்தவோ அத்தகையவர்களுக்கு இயலாததால் அவர்களை மாக்கள் எனலாம்.

இருபிறப்பாளர்களுள் தீவிரமாகப் பாரமார்த்திக வாழ்வில் ஈடுபடுகின்றவன் த்விஜோத்தமன் அல்லது பிராம்மணன் எனப்படுகிறான். பாரமார்த்திகப் பெருவாழ்வில் இடைத்தரமான முயற்சி கொண்டிருப்பவன் க்ஷத்திரியன்; கடைத்தரமான முயற்சியுடையவன் வைசியன். வெறும் சடங்கின் வாயிலாகவோ உலக வழக்கின் வாயிலாகவோ ஒருவன் துவிஜன் ஆகமுடியாது. மனபரிபாகமே த்விஜன் ஆவதற்கு இன்றியமையாத நிபந்தனையாகிறது. ஒருவன் வாழ்ந்து வருகிற வாழ்க்கைமுறையைப் பார்த்து அவன் த்விஜனா கடை வருணத்தவனா என்று கண்டுபிடிக்கலாம்.

த்விஜர்களின் நித்திய கர்மம் உபாசனையாகும். த்விஜன் ஆவது மானுடப் பிறப்பின் குறிக்கோள். த்விஜர் கூட்டங்கள் அதிகரிப்பதற்கு ஏற்பச் சமுதாயத்தின் தரம் மேலோங்குகிறது. தெய்வ வழிபாடு உச்சநிலையை எட்டுகிறது. இகபரத்துக்குரிய மேன்மைகள் யாவும் எளிதில் வந்தமைகின்றன.

வியாஹ்ருதி என்னும் நாமம் ஜாக்கிரதாவஸ்தை அல்லது நனவுக்கு விளக்கமாகிறது. நனவிலே மனம், மொழி, மெய் ஆகிய திரிகரணங்களும் செயல்படுகின்றன. ஜாக்கிரதாவஸ்தையில் புரிகின்ற கர்மமோ ஜீவனைப் பண்படுத்தும் பாங்குடையது. அதை நன்கு பயன்படுத்துகிறவன் நல்ல ஆத்ம சாதகன்.

சந்தியா என்னும் நாமம் சொப்பனாவஸ்தையைக் குறிக்கிறது. இந்த அவஸ்தையில் மனம் என்னும் ஒரு கரணம் மட்டும் வேலை செய்கிறது. அது தனக்குள்ளேயே ஓர் உலகை உண்டு பண்ணிக்கொள்வதால் ஜாக்கிரதாவஸ்தை போன்று தென்படுகிறது. உடல் செயலற்றுப் படுக்கையில் கிடப்பதால் அது நித்திரை எனப்படுகிறது. ஜாக்கிரதாவஸ்தையும் சுஷுப்தி அவஸ்தையும் சந்திக்கின்ற நிலை சொப்பனாவஸ்தையாகிறது.

த்விஜ பிருந்த நிஷேவிதா என்னும் நாமம் சுஷுப்தியை விளக்குகிறது. பறவைகளிடத்தில் தாய்ப்பறவையினின்று முட்டையாக வெளிவருவது ஒரு பிறவி; முட்டையினின்று குஞ்சு பொரிக்கப்படுகின்றபொழுது அது இரண்டாவது பிறவி. இந்தப் பறவைகளின் கூட்டம் பகலெல்லாம் அலைந்து திரிந்தான பிறகு இரவில் ஓர் இடத்துக்குப் பறந்தோடி ஒடுங்குகின்றன. அந்த ஒடுக்கத்தை சுஷுப்தி அவஸ்தை எனலாம். கனவற்ற உறக்

கத்தில் திரிகரணங்களுக்கும் வேலை இல்லை. ஜீவாத்மன் தன்னில் தான் திருப்தியடைந்து ஒடுங்கி மறைந்து கிடக்கிறான். கூட்டங் கூட்டமாயுள்ள ஜீவர்கள் இரண்டற்ற நிலையை ஈண்டு எய்து கின்றனர். அந்நிலையே ஒப்பற்ற உபாசனை. ஜாக்கிரதாவஸ் தையில் இருபிறப்பாளர்கள் கூட்டம் கூட்டமாக அம்பிகை வழி பாட்டில் இன்புற்றிருப்பதற்கு நிகராக சுஷுப்தி அவஸ்தையில் ஜீவகோடிகள் தங்கள் பேதங்களை ஒதுக்கித்தள்ளிவிட்டு அபே தத்தில் இன்புற்றிருக்கின்றன.

மூன்று அவஸ்தைகளிலும் அபேதத்தை நிலைநாட்டுதற்கான உபாசனையே மேலானது. அன்னை பராசக்தி மூன்று அவஸ்தை களிலும் உபாசனைக்குரியவள். அயர்ந்த உறக்கத்தில் அபேதம் தானாக அமைகிறது. நனவு நிலையில் சாதனத்தின் வாயிலாக அதை நிலைநாட்டுவது நல்ல வழிபாடாகிறது.

**तत्त्वासना — தத்வாஸனா** **४२४**

தத்துவங்களை இருப்பிடமாகக் கொண்டவள்.

தத்துவங்கள் உண்மைகள் எனப் பொருள்படுகின்றன. சாங்கிய தர்சனப்படி தத்துவங்கள் இருபத்தைந்து உள. அவை யாவன. பூதங்கள் ஐந்து, அவைகளின் தன் மாத்திரைகள் ஐந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து, சித்தம், மனம், புத்தி, அகங்காரம் ஆகிய அந்தக் கரணங்கள் நான்கு. இருபத்தைந்தாவது தத்துவம் புருஷன். சாங்கிய தர்சனப்படி புரு ஷர்கள் அல்லது ஜீவாத்மாக்கள் அனந்தம். இவை யாவையும் தொகுத்துச் சொல்லுங்கால் சேதன, அசேதனங்களாக வடிவெடுத் திருப்பவள் அம்பிகை. உலகனைத்துமாய் இலங்குபவளும் உயிர் களனைத்துமாய் இலங்குபவளும் அவளே. அவளுக்குப் புறம்பாக ஏதுமில்லை. எல்லாவற்றிற்கும் அதிஷ்டான தெய்வமாக அவள் வீற்றிருப்பதால் அவள் தத்வாஸனா என்னும் நாமம் பெற்றுள் ளாள். தோற்றத்துக்கு வந்துள்ள சேதனம், அசேதனம் ஆகிய யாவையும் அவள் மயமாகக் காண்பது நல்ல ஆத்ம சாதனமா கிறது.

**तत् — தத்** **४२५**

அதுவாக இருப்பவள்.

காணப்படுகின்ற பொருள்கள் அனைத்தையும் அது என்னும் சொல் சுட்டிக்காட்டுகிறது. மனதால் கருதப்படுபவைகளையும் அது என்னும் சொல் குறிப்பிடுகிறது. மனதுக்கெட்டாததைச் சுட்டிக் காட்டுதற்கும் இச்சொல் பயன்படுகிறது. தோற்றத்தில் உள்ளது எதுவோ அது தத். தோற்றத்துக்கு அப்பால் உள்ளது எதுவோ அதுவும் தத். தத் பதத்தை அம்பிகை வழிபாட்டில் கையாளும்போது 'தஸ்மை நம:' என்று சொல்லவேண்டும்.

**त्वम् — த்வம் ४२६**

**நீ என்னும் சொல்லுக்கு இலக்காய் இருப்பவள்.**

படர்க்கையாய் இருந்த பொருள் இப்பொழுது முன்னிலைப் பொருளாக விளிக்கப்படுகிறது. ஒரு மூர்த்தியைத் தேடி உலகெல்லாம் அலைகிறவர்கள் அந்த மூர்த்தியைக் கண்டு பிடித்தான பிறகு, 'உன்னை நான் எங்கெல்லாம் தேடியலைந்தேன்' என்று கூறுவது வழக்கம். அந்த வழக்குக்கொப்ப அதுவாயிருந்த பொருள் இப்பொழுது நீ என்று இயம்பப்பெறுகிறது. அர்ச்சனையில் இச்சொல்லைக் கையாளும் பொழுது 'துப்யம் நம:' என இயம்பவேண்டும். 'உனக்கு வணக்கம்' என்பது இதன்பொருள்.

**अयी — அயீ ४२७**

**ஆயா என்பது இதன் பொருள்.**

தாயை அன்போடு அழைக்கும் பொழுது அவளை அயிஎன்றோ, ஆயா என்றோ கூறுவது உலகவழக்கு. இனிமைக்கும், மென்மைக்கும் அன்புக்கும் இருப்பிடமாய் இருக்கும் தாய் என்பது இதன் பொருள். தாயே, ஜெகதாம்பா, நீதான் நான் காண்கின்றபொருள்கள் அனைத்துமாய் இலங்குகின்றாய் என்னும் கோட்பாடு இந்த மூன்று பதங்களில் அமைந்துள்ளன. இவைகளை வேறொரு பாங்கில் இயம்புமிடத்து 'தத்துவம் அஸி' என்னும் மகாவாக்கியமாக அவை வடிவெடுக்கின்றன. ஜீவாத்ம, பரமாத்ம ஐக்கியத்திற்கு விளக்கமாக இந்த மகாவாக்கியம் வந்துள்ளது. தாயே, நீ தான் இப்பிரபஞ்சம் அனைத்துமாய், உயிர்களனைத்துமாய் இலங்குகின்றாய் என்னும் கோட்பாடும் இந்த மகாவாக்கியத்தில் அடங்கியுள்ளது. இச்சொல்லை அர்ச்சனைக்குப் பயன்படுத்தும் பொழுது 'அய்யை நம:' என இயம்பவேண்டும்.

**पञ्चकोशान्तरस्थिता — பஞ்சகோசாந்தரஸ்திதா** ௪௨௮

பஞ்சகோசங்களுக்கு நடுவில் இருப்பவள்.

அண்டத்திற்கும், பிண்டத்திற்கும் அமைப்பில் வித்தியாச மில்லை. மானுட அமைப்பு பிண்டம் எனப்படுகிறது. பிரபஞ்சம் முழுவதும் தொகுத்து அண்டம் எனப்படுகிறது. பிண்டத்தில் இருப்பதே அண்டத்தில் இருக்கிறது. மானுட அமைப்பில் ஆத்ம சொரூபம் ஐந்து கோசங்களுக்குள் வீற்றிருக்கிறது கோசம் என்பது கவசம் அல்லது சட்டை. ஓர் உபமானத்தைக்கொண்டு இதை விளக்கலாம். வாழைத் தண்டானது பல வாழைப் பட்டை களால் மூடப்பட்டிருப்பது போன்று ஆத்ம சொரூபம் ஐந்து அங்கி களை அணிந்திருக்கிறது. அவற்றுள் ஸ்தூலமான அன்னமய கோசம் நமக்குக் கட்புலனுகிறது. உணவு ஊட்டி வளர்க்கப்படுவ தால் நாம் படைத்துள்ள சரீரம் அன்னமய கோசம் எனப்படு கிறது. வளர்ச்சியும் தேய்வும் உடைய அன்னமய கோசத்தில் நிலம், நீர், நெருப்பு, காற்று ஆகிய நான்கு ஸ்தூல பூதங்களும் இடம் பெற்றிருக்கின்றன. உடலை ஓம்புவதால் நாம் உயிரை ஓம்பி வருகிறோம். உயிர்த் தத்துவத்திற்குப் பிராணமய கோசம் என்று பெயர். உடல் நிலைகுலையுங்கால் உயிரும் அழிந்துபட்டுப் போகிறது. உடலெங்கும் வியாபித்திருக்கும் பிராணமய கோசத்தைவிட இன்ப துன்பங்களை உணரும் மனோமய கோசம் சூட்சுமமானது. அது சங்கல்ப, விகல்ப சொரூபம் ஆனது. தீர்மானத்துடன் வருகிற எண்ணம் சங்கல்பம் எனவும், தீர்மானம் ஏதும் இல்லாது தற்செயலாய் உதிக்கும் எண்ணம் விகல்பம் எனவும் பொருள்படுகின்றன. ஸ்தாவரத்திற்கு அன்னமய கோசமும், பிராணமய கோசமும் உண்டு. ஜங்கமங்களாக வந் துள்ள உயிர்கள் பெரும்பாலும் இன்பதுன்பங்களை உணரும் பாங்குடையவைகளாய் இருக்கின்றன. மனோமயகோசம் மனித னிடத்து மேன்மை உற்று மிளிர்கிறது. இது இன்பதுன்பங்களை உணர வல்லது. மனோமய கோசத்தை விட சூட்சுமமாகப் பகுத் தறிவு மயமான விஞ்ஞானமய கோசம் விளங்குகிறது. பொருள் களின் பாங்கை விஞ்ஞானம் பாகுபடுத்த வல்லது. நலம், கேடு களை ஓர்ந்து அறியவல்ல விஞ்ஞானமய கோசத்தைப் புத்திக் கூர்மை என்றும் இயம்பலாம். இதனுள் காரண நிலையில் இருப்

பது ஆனந்தமயகோசம். இன்பத்தையும் அதற்கு எதிர் இடையான துன்பத்தையும் நன்கு விளக்கவல்லது ஆனந்தமய கோசம். அதனுள் அந்தர்யாமியாய் வீற்றிருப்பது ஆத்மா. வாழை மரம் தானே தண்டாகவும் அதை மூடி இருக்கிற பட்டைகளாகவும் வடிவெடுத்திருப்பது போன்று ஜீவாத்மன் தானே பஞ்சகோசங்களாகப் பரிணமித்திருக்கிறான். சச்சிதானந்தப் பொருளாகிய ஆத்மாவின் பேர் ஆனந்த நிலை அதை அடுத்துள்ள ஆனந்தமய கோசத்தில் மிளிர்கிறது. ஆத்மாவில் சித்சொரூபம் விஞ்ஞான மய கோசத்திலும், மனோ மயகோசத்திலும் வெளியாகிறது. பிராண மயகோசத்திலும், அன்னமய கோசத்திலும் அதன் சத் சொரூபம் விளங்குகிறது. பிரம்மாண்ட நாயகியாகிய அன்னை பராசக்திக்கு அன்னமய கோசமாகப் பஞ்சபூத மயமாயுள்ள இப் பிரபஞ்சம் விளங்குகிறது. அதில் ஆங்காங்கு மிளிர்கின்ற உயிர்த் தத்துவம் அவளுடைய பிராணமய கோசமாகும். சமஷ்டி இன்ப துன்ப உணர்ச்சி அவளுடைய மனோமயகோசம். அண்டமெங்கும் வெளியாகும் அறிவுத் தத்துவம் அவளுடைய விஞ்ஞான மய கோசம். உயிர்களிடம் இலங்கும் ஆனந்தத்தின் தொகை அவளுடைய ஆனந்த மயகோசம். பஞ்சகோச அந்தர ஸ்திதா என்று அவளுடைய நாமத்தை உச்சரிக்கும்போது தன்னில் தானாய் இருக்கின்ற பெரிய பொருளாகிய அன்னை பராசக்தியின் இத்தகைய பேர் அமைப்பை எண்ணுவது சிறந்த தியானமாகிறது.

சக்தி உபாசனையில் மேல்நிலைக்குச் சென்றுள்ள ஆத்ம சாதகர்கள் அம்பிகையின் அங்கதேவதைகளாகிய பிந்து தத்துவம், பரஞ்ஜோதி தத்துவம், பரா தத்துவம், நிஷ்கள சாம்பவீ தத்துவம், அஜபா தத்துவம் ஆகிய ஐந்தும் அவளுக்குப் பஞ்ச கோசங்களாக அமைந்திருக்கின்றன என்று இயம்புகின்றனர்.

**निःसीममहिमा — நி: ஸீமமஹிமா** ४२९

வரம்பில் அடங்காத மகிமைகளோடு கூடியவள்.

இயற்கையின் அமைப்பே இந்த நாமத்துக்கு எடுத்துக்காட்டாக உள்ளது. புஷ்பம் ஒன்றை ஆராய்ச்சி பண்ணுகின்ற இயற்கை நூலாளர்கள் அது வர்ணனைக்கு எட்டாதது என்றும் அதீதத்தில் போகிறது என்றும் இயம்புகின்றனர். உலகெங்கும் தென்படுகின்ற எல்லா மலர்களையும் ஆராய்ந்து பார்த்தால்

அவற்றின் அமைப்பும் வர்ணனைக்கு எட்டாது அதீதத்தில் போகிறது. பௌதிக விஞ்ஞானிகள் நுண்ணியதிலும் நுண்ணிய தாக இருக்கின்ற அணுவை ஆராய்ச்சி பண்ணுகிறார்கள். அண்டம் எங்கும் உள்ள மகிமைகளெல்லாம் ஓர் அணுவின் உள்ளும் அடங்கி இருக்கின்றன என்று அவர்கள் காண்கின்றனர். நட்சத்திர மண்டலங்களை ஆராய்ந்தால் அவைகளின் அமைப்பும் இயக்கங்களும் வர்ணனைக்கு எட்டாது அதீதத்தில் போகின்றன. உயிர்களை ஆராய்ந்து பார்க்கும் இடத்தும் அறிஞர்கள் இதே முடிவுக்கு வருகின்றனர். இத்தனை படித்தரங்களில் இயங்குபவள் அன்னை பராசக்தி. ஆதலால் அவளை நி: ஸீமமஹிமா என்று போற்றுவதைத்தவிர வேறு என்ன செய்ய முடியும்? அன்னையின் மகிமைகளை ரசிப்பதே அன்னையின் வழிபாட்டின் ஒரு கூறு ஆகிறது.

**नित्ययौवना — நித்யயௌவனா** ४३०

யாண்டும் இளமையிலேயே இருக்கிறவள்.

இப்பிரபஞ்சம் வேறு, பராசக்தி வேறு அல்லள். அவளே பிரபஞ்ச சொரூபமாக இருக்கிறாள். உலகை உள்ளபடி அறிந்து கொள்ளுதல் அம்பிகையைப் பற்றிய ஞானமாகிறது. இந்தத் தொல்லுலகம் மிகமிகப் பழையதானாலும் அது யாண்டும் யௌவனத்திலேயே இருக்கிறது. பழுதுபட்டுப் போன வடிவங்கள் எல்லாம் சர்வகாலமும் கவர்ந்தழிக்கப்படுகின்றன. புதிய வடிவங்கள் இடையறாது தோன்றி இயற்கையின் இளமையை நிலை நாட்டி வருகின்றன. இயற்கைத் தாயானவள் எத்தனை ஆயிரம் யுகங்கள் இருந்தாலும் அத்தனை யுகங்களிலும் அவள் உலகைப் புதிய உலகமாகவே பாதுகாத்து வைத்திருக்கிறாள். இயற்கையைத் துருவி ஆராய்கின்றவர்களுக்கு இக்காட்சி கண்கூடாகப் புலப்படுகின்றது. அம்பிகையின் எண்ணிறந்த மகிமைகளுள் தன் இளமையை யாண்டும்பாதுகாத்து வைத்திருப்பதும் ஒன்றாம்.

**मदशालिनी — மதசாலினீ** ४३१

மதத்தில் யாண்டும் தோய்ந்திருப்பவள்.

உயிர்கள் யாவும் இன்புற்றிருப்பதற்கு முகாமையாயிருப்பவைகள் புறவுலகில் அவைகளுக்கு அமைந்துள்ள வசதியான

சூழ்நிலைகளாம். சூழ்நிலை பிரதிகூலமாக மாறுகின்றபொழுது இன்புற்றிருக்கும் உயிர்கள் துன்புற்றிருப்பவைகளாக மாறுகின்றன. அன்னை பராசக்தியோ ஆனந்தமயீ. அவளும் ஆனந்தமும் ஒன்று. அந்தப் பேரானந்தம் தன்னில் தானைகத் ததும்பிக்கொண்டிருக்கிறது. இன்பத்திரள் என்று அதை இயம்ப வேண்டும். அன்னை பராசக்தி யாண்டும் அப்பெருநிலையிலேயே திளைத்திருப்பதால் மதசாலினீ என்னும் பெயர் பெற்றுள்ளாள்.

**मदघूर्णितरक्ताक्षी —மதகூர்ணித ரக்தாக்ஷீ** ४३२

**பேரானந்தத்தால் சுழற்றிக்கொண்டிருக்கும் சிவந்த கண்களை உடையவள்.**

தன்னில் தானைகத் திளைத்திருக்கும் அம்பிகையின் ஆனந்தத்துக்கு அத்தாட்சி வேறொன்றுமில்லை. இந்நாமத்தின் படி அவளுடைய ஆனந்தத்துக்கு அவளுடைய நயனங்கள் பிரமாணமாக வந்தமைகின்றன. இக்காட்சியானது உலகத்தவர்கள் உலக மக்களுக்கிடையில் காண்கின்ற ஒரு காட்சியோடு ஒப்பிட்டுக் கூறப்படுகிறது.

மதம் என்னும் சொல் மதுபானத்தினின்று வடிவெடுக்கின்ற கள்வெறி எனவும் பொருள்படுகிறது. போதை நிறைந்துள்ள மதுவைப் பருகுவானாகில் அவன் கண்கள் ரத்தம் சுரந்தவைகள் ஆகின்றன. அவன் ஆனந்தத்தில் திளைத்திருக்கிறான். ஆனந்தத்தை வேண்டியே குடிகாரர் உலகம் மதுபானத்தில் ஈடுபடுகிறது. கள் குடிவெறியில் மூழ்கியிருப்பவனுடைய கண்கள் சுழன்றுகொண்டிருக்கின்றன. அப்படிச் சுழல்வது புறவுலகில் எதையும் புலப்படுத்துவதற்கு நிகழ்வதன்று. மதுபானம் கிளப்பியுள்ள ஆனந்தமானது நயனத்தின் அசைவாக வடிவெடுக்கிறது. ஆதலால் குடிகாரர்களுடைய மயக்க நிலையானது பாரமார்த்திகப் பேரின்பத்துக்குச் சான்றாக அமைந்துள்ளது. இதை முன்னிட்டே உலக மக்களுள் குடிகாரரிடம் தென்படுகிற தோற்றம் ஒன்று அம்பிகைக்கு ஆகுபெயராக அமைந்திருக்கிறது.

**मदपाटलगण्डभूः — மதபாடலகண்டபூ:** ४३३

**மதத்தினால் இளம் சிவப்பாகக் காட்சி கொடுக்கும் கன்னங்களை உடையவள்.**

வெளுத்த மேனி படைத்திருப்பவர்களுக்குக் கன்னத்தில் இரத்தம் சுரந்தால் செந்தாமரையின் நிறம் அக்கன்னத்தில் தென் படும். எக்காரணத்தை முன்னிட்டாவது உள்ளத்தில் பூரிப்பு ஏற்பட்டால் கன்னத்தில் செந்நிறம் தென்படும். உலகமக்களுக் கிடையில் தென்படும் சர்வ சாதாரணமான காட்சிகளை உபமான மாக வைத்துக்கொண்டு அம்பிகையின் பாரமார்த்திகப் பேரானந் தம் விளக்கப் பெறுகிறது. குடிவெறியின் விளைவாகக் கன்னம் சற்றுச் சிவந்திருக்கும் வெள்ளையர்கள் பெறும் பேரானந்தத்துக் குச் சான்றாக இந்நாமம் வந்தமைந்துள்ளது.

வடமொழியில் பாடலம் என்பது பாதிரிப்பூ என்று பொருள் படுகிறது. அகமகிழ்வுக்கு அறிகுறியாகப் பாதிரிப் பூவைக் காதில் மாட்டித் தொங்கவிட்டிருப்பது பெண்பாலர்களின் பழக்க மாகிறது. அன்னவர் அடையும் இன்பத்தை முன்மாதிரியாகக் காட்டி ஆனந்தமயமாக அம்பிகை இருக்கிறாள் என்பது விளக்கப் படுகிறது. மதம் என்பது வாசனைத் திரவியமாகிய கஸ்தூரியை யும் குறிக்கும். வாசனைத் திரவியங்களின் குழம்பைக்கொண்டு கன்னத்தில் புஷ்பங்களின் வடிவங்களை வரைந்து வைத்து அதில் இன்புற்றிருப்பதும் மங்கையர்களுக்கிடையிலுள்ள பழக்கமா கிறது. இன்பத்தை ஊட்டுதற்கு எவையெல்லாம் முகாமையாகின் றனவோ, அவை யாவும் அம்பிகையின் அம்சங்கள் என்னும் கோட்பாடு இந்த நாமத்தில் அடங்கி உள்ளது.

**चन्दनद्रवदिग्धाङ्गी — சந்தனத்திரவதிக்தாங்கீ ४३४**

அரைத்த சந்தனத்தால் பூசப்பட்ட அங்கங்களை உடையவள்.

கோயிலில் கடவுள் தரிசனம் செய்த பிறகு சந்தனக்குழம்பு பூசி மகிழ்வுற்றிருப்பது உலக வழக்கு. மணச்சடங்குகளில் மக்கள் மேனியில் சந்தனக்குழம்பு பூசி மகிழ்வுற்றிருப்பதைப் பார்க்கிறோம். மகிழ்வுக்கு ஏதுவான நிகழ்ச்சிகளில் எல்லாம் சந் தனக்குழம்பு வழங்குவது மரபு. யாரெல்லாம் சந்தனம் பூசி இருக் கிறார்களோ அவர்களெல்லாரும் ஏதேதோ காரணங்களை முன் னிட்டு மகிழ்வுற்றிருக்கிறார்கள். இக்கோட்பாடானது அம்பிகை யின் மீது ஆரோபிக்கப்படுகிறது. மக்கள் ஆனந்தத்திற்கு அறி

குறியாக எதைச் செய்கிறார்களோ அதை அவர்கள் வழிபடும் தெய்வமும் செய்வதாக ஐதிகம் அமைகிறது. அம்பிகை யாண்டும் ஆனந்தமயீ என்பதற்கு அறிகுறியாக அங்கங்களில் அவள் சந்தனச் சாந்து பூசி இருக்கிறாள். பொதுமக்களுக்கு இந்த ஆனந்த நிலையை அறிவுறுத்துதல் பொருட்டு இந்த உபமானங்கள் சர்வ சாதாரணமாகக் கையாளப்படுகின்றன.

**चाम्पेयकुसुमप्रिया** — சாம்பேயகுஸுமப்ரியா ४३५

சம்பகப் புஷ்பத்தில் பிரியமுள்ளவள்.

இப்பிரபஞ்சம் முழுவதும் அன்னை பராசக்தியின் மகிமைகளை விளக்கி வருகின்றது. பிரகிருதியில் ஆங்காங்குள்ள சில வஸ்துக்கள் அவளுடைய மகிமைகளைத் தெளிவுபட விளக்குகின்றன. அவற்றுள் புஷ்பங்கள் முக்கியமான இடம் பெறுகின்றன புஷ்பங்களில் அமைந்துள்ள நறுமணம், பேர் அழகு முதலியன பரதேவதையின் மகிமையாக மிளிர்கின்றன. மேல்நாட்டுக் கவிஞர் ஒருவர் கூறுகிறார்: "வானத்தில் இலங்கும் நட்சத்திரங்களிலும் பூமியில் பொலியும் புஷ்பங்களிலும் இறைவனுடைய மகிமையைக் காண இயலாதார் அம்மகிமைகளை வேறு எங்கே காணப் போகின்றனர்?" கட்புலனுக்கு அப்பால் இருக்கின்ற பரதேவதை ஆனவள் கட்புலனாகின்ற பிரபஞ்சமாகவும் பிரகாசிக்கின்றாள். இப்பிரபஞ்சத்தில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்க பொருள்களுள் ஒன்று சம்பகப் புஷ்பம். அதில் அம்பிகை அதிகப் பிரியம் வைத்திருக்கிறாள். அவளுடைய அம்சங்களாகிய மக்களும் அதனிடத்துப் பிரியம் வைக்கின்றனர். அழகும், மணமும் நிரம்பப்பெற்ற சம்பகப் புஷ்பத்தை ரசிப்பதே ஒருவித வழிபாடு ஆகிறது.

**कुशला** — குசலா ४३६

சாமர்த்தியசாலியாய் இருப்பவள்.

சிருஷ்டி, ஸ்திதி முதலிய கிருத்தியங்களை அம்பிகை இடையறாது ஆற்றி வருகிறாள். அப்படிச் செய்வதில் அவளுடைய திறமை நன்கு வெளியாகிறது. இயற்கையின் நடைமுறையே இதற்குச் சான்றாகிறது.

சல: என்னும் சொல் சந்திரனைக் குறிக்கிறது. 'கு' என்னும் பகுதி வெறுப்புக்குரிய என்னும் பொருள்படுகிறது. குமானு

சன் என்றால் வெறுப்புக்குரிய மனிதன் எனப் பொருள்படுகிறது. அதே பாங்கில் குசல: என்னும் சொல் தோற்கடிக்கப்பட்ட சந்திரன் எனப் பொருள்படுகிறது. அழகும் வசீகரமும் வாய்ந்த சந்திரன் அம்பிகையின் முன்னிலையில் பொருளற்றதாகப் போய்விடுவதால் அம்பிகையின் பெருமை நன்கு வெளியாகிறது. சந்திரனைக் காட்டிலும் அதிகக் கவர்ச்சி உடையவளாக அம்பிகை இருக்கிறாள் என்பது இதன் பொருள்.

**कोमलाङ्गारा — கோமலாகார்ரா** ४३७

அழகான அவயவங்களை உடையவள்.

எது இளமை மாறாததாக இருக்கிறதோ அது கோமளமானது. இளமையில் உள்ள உயிர்களின் அவயவங்களில் தனி அழகு பொலிகிறது. யாண்டும் குமரியாகவே இருக்கும் அம்பிகை அதற்கு ஏற்ற மெல்லிய, அழகு வாய்ந்த அவயவங்களை உடையவளாக இருக்கிறாள். ஆதலால் அவள் போற்றுதற்குரிய பேரழகே வடிவெடுத்தவளாக இலங்குகிறாள். ஆராய்ந்து பார்த்தால் இயற்கையின்கண் யாண்டும் எழில் நிறைந்திருப்பதைக் காணலாம்.

**कुरुकुल्ला — குருகுல்லா** ४३८

பிரபஞ்ச அமைப்புக்குச் சின்னமாய் ஸ்ரீ சக்கரம் அமைந்துள்ளது. அதில் வெவ்வேறு பகுதிகளில் வெவ்வேறு தத்துவங்கள் இடம் பெறுகின்றன. அவற்றுள் அகங்காரம், மனது ஆகியவையும் அடங்கியுள்ளன. இவை இரண்டுக்கும் அதிஷ்டான தெய்வமாக அமைந்திருப்பவள் குருகுல்லா. மனிதனுடைய முன்னேற்றத்துக்குப் பெரும் தடையாக இருக்கும் அகங்காரம், மனது ஆகியவற்றை ஒதுக்கித் தள்ளுவது வேதாந்த சாஸ்திர சாதனமாகும். அவற்றை அம்பிகையின் சொரூபமாகப் பயன்படுத்தல் தந்திர சாஸ்திரத்தின் கோட்பாடாகும். அவற்றை வெறுத்து விலக்குவதில் கஷ்டமும் கசப்பும் இருக்கின்றன. அம்பிகையின் சொரூபங்களாக அவைகளைக் கருதும்போது மகிழ்வும், இனிமையும் ஏற்படுகின்றன. அம்பிகை உபாசனையில் எதிர்மறைச் சாதனம் எதுவும் இடம் பெறுவதில்லை. ஆதியோடு அந்தமாக உடன்பாட்டுச் சாதனங்களே அமைந்துள்ளன. நலமும் கேடும் சேர்ந்ததுதான் உலகம் என்பது வேதாந்தக் கோட்பாடு.

உலகில் உள்ள அனைத்தும் அம்பிகையின் அம்சம் என்பது சக்தி வழிபாட்டின் சிறப்பு அம்சமாகும். ஆதலால் தான் அது சாதகர்களுக்கு இனிமை வழங்குகிறது. கேட்டை நலனைக் கருதுபவன் தானே நலன் வடிவினன் ஆகின்றான்.

**कुलेश्वरी — குலேச்வரீ** ४३९

குலத்துக்குத் தலைவியாய் இருப்பவள்.

குலம் என்னும் சொல் ஒரே இனத்தைக் குறிக்கிறது. குல குரு என்றால் மாணாக்கர் கூட்டத்திற்கு ஆசிரியர் என்று பொருள். குல தெய்வம் என்று இயம்பும்பொழுது ஒவ்வோர் இனத்தையும் காத்து வரும் தேவதை எனப் பொருள்படுகிறது. குலபதி என்னும் சொல் பள்ளித் தலைவன் எனவும், ஓர் இனத்திற்குத் தலைவன் எனவும் பொருள்படுகிறது. குலேச்வரீ என்னும் சொல்லில் ஈண்டு இயம்பியுள்ள சொற்கள் அனைத்தும் அடங்கியிருக்கின்றன. பிரபஞ்சத்தில் இருப்பவைகளைக் கணக்கற்ற இனங்களாக அம்பிகை பிரித்து வைத்திருக்கிறாள். அந்தந்த இனத்தை அதனதன் பாங்கில் காப்பாற்றி வைப்பது இயற்கையின் அரிய செயலாகிறது. வண்ணாத்திப் பூச்சியில் ஆயிரக்கணக்கான இனங்கள் ஆயிரக்கணக்கான வண்ணங்கள் பெற்று விளங்குகின்றன. பிசகாது இத்தனை வித இனங்கள் இந்த ஒரு ஜாதியில் நிலை பெற்றிருப்பது அதிசயம். அதேபாங்கில் நடப்பன, பறப்பன, ஊர்வன அனைத்தும் அதனதன் இனத்தைக் காப்பாற்றி வருகின்றன. அவைகளுக்கிடையில் கலப்பு ஏற்பட்டுவிட்டால் மூல அழகு அழிந்துபட்டுப்போம். மூல அழகைக் குலேச்வரீ இருக்கிறபடி காப்பாற்றி வருகிறாள்.

**कुलकुण्डालया — குலகுண்டாலயா** ४४०

குலகுண்டம் என்று இயம்பப்படுகிற இடத்தை ஆலயமாகக் கொண்டுள்ளவள்.

மானுட சரீரத்திலுள்ள ஆறு ஆதாரங்களுள் குய்யத்தில் அமைந்திருக்கும் மூலாதாரத்தில் இருந்து துவங்கும் சுஷும்னா நாடி ஏழாவது ஆதாரமாகிய ஸஹஸ்ராரம் வரை மேல் நோக்கிப் போகிறது. சுஷும்னா நாடித்துவாரம் அடைபட்டிருந்தாலும் அந்தத் துவாரத்தின்கண் தலையை வைத்துக்கொண்டு குண்

டலினி சக்தியானது ஒரு சர்ப்பம் போன்று படுத்து உறங்கிக் கொண்டிருக்கிறது. தந்திர சாதனம், யோகசாதனம் ஆகியவற்றின் நோக்கம் குண்டலினிசக்தியை எழுந்திருக்கச் செய்வதாகும். சைதன்யம் ஜீவதத்துவமாகவும் பரதத்துவமாகவும் அமைந்துள்ளது. சைதன்யத்திற்கு இருப்பிடம் ஆலயம் எனப் பொருள்படுகிறது. மூலாதாரத்தை இருப்பிடமாக வைத்துக்கொண்டு அதில் தன் சொரூபத்தை நிறை நிலைக்குக் கொண்டுவருவது மூலப்பிரகிருதியின் நோக்கமாகும். சிசு கருவில் உருவெடுப்பது போன்று குலகுண்டம் எனப்படும் மூலாதாரத்தில் ஜடம்போன்று தூங்கிக் கொண்டிருக்கும் சக்தியானவள் சிவ சொரூபமாகப் பரிணமிப்பதற்கு ஆங்குத் தவம்புரிந்து கொண்டிருக்கிறாள். அத்தவத்தை நிறைவேற்றி வைப்பது ஆத்ம சாதகனுடைய குறிக்கோளாகும். அதற்கு அவன் பிரம்மச்சரிய விரதம் என்னும் நிறை நிலையைக் காத்து வைக்கக் கடமைப்பட்டிருக்கிறான். நல்லொழுக்கத்தின் விளைவாக ஜடசக்தி சித்சக்தியாக மாறுகிறது.

**कौलमार्गतत्परसेविता — கௌலமார்கதத்பரஸேவிதா ४४१**

கௌலமார்க்கத்திலேயே கண்ணும் கருத்துமாய் இருப்பவர்களால் உபாசிக்கப்படுகிறவள்.

அம்பிகை வழிபாட்டிற்குச் சாஸ்திர ரீதியாக மூன்று மார்க்கங்கள் வகுக்கப்பட்டுள்ளன. அம்மூன்றனுள் கௌலமார்க்கம் எனப்படும் வாமாச்சாரம் மிகக் கடினமானது. ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் பைரவி பிராம்மணீ என்னும் மாதரசியைக் குருவாக ஏற்றுக்கொண்டு கௌல மார்க்கத்தைக் கடைப்பிடித்திருக்கிறார். இம் மார்க்கத்திலுள்ள அறுபத்து நான்குவித சாதனங்கள் சாந்த பாவம், வீரபாவம், திவ்வியபாவம் என மூன்றாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. வீரபாவமும், திவ்வியபாவமும் கௌல மார்க்கத்திற்கு உரியவை. சாந்த பாவம் வாமாச்சாரத்திற்கும் சமய ஆச்சாரம் எனப்படும் தக்ஷிணாச்சாரத்திற்கும் பொதுவானது. கௌலமார்க்கத்தை வெற்றிகரமாகப்பூர்த்திபண்ணிய பரமஹம்ஸ தேவர் அம்மார்க்கத்தைத் தம் சிஷ்யர்கள் யாருக்குமே புகட்டவில்லை. ஒரு வீட்டினுள் நுழைவதற்கு முன் வாசலும், பின்புறத்தில் புழக்கடையும் உள்ளன. புழக்கடை வழியாக உள்ளேவர

வேண்டிய அவசியம் இல்லை. கௌலமார்க்கம் புழக்கடைக்கு நிகரானதாகிறது.

தக்ஷிண மார்க்கம் என்பது வேதாந்தத்திற்கும் ஆகமத்திற்கும் ஒத்திருப்பதால் சாஸ்திரரீதியாகச் செல்பவர்கள் இம்மார்க்கத்தைக் கடைப்பிடிக்கலாம்

இனி மிஸ்ரமார்க்கம் என்னும் கலப்பு வழி ஒன்றும் உண்டு. பக்தி பூர்வமாக எந்த மார்க்கத்தைக் கையாண்டாலும் சாதகன் ஒருவன் அம்பிகையின் அருளுக்குப் பாத்திரமாகலாம். பக்தியினல் தூண்டப்பெற்றுச் செய்கிற வழிபாடு அம்பிகைக்கு முற்றிலும் உகந்ததாகிறது. கல்வியும், கேள்வியும் இல்லாதவனும் இதைக் கடைப்பிடிக்கலாம். இதற்குச் சாஸ்திரப் பிரமாணம் தேவையில்லை. தீவிர அதிகாரிகள் கடினமான கௌலமார்க்கத்தையும் அனுஷ்டித்து அன்னை பராசக்தியின் பேரருளுக்குப் பாத்திரமாகிறார்கள்.

**कुमारगणनाथाम्बा — குமாரகண நாதாம்பா** ४४२

குமரக் கடவுளுக்கும் கணபதிக்கும் தாயாக இருப்பவள்.

அம்பிகை அல்லது சிவன் கோவிலுக்குச் செல்லும்பொழுது வாயிலின் வலப்பக்கத்தில் கணபதியும் இடப்பக்கத்தில் இளையவனும் இடம்பெற்றிருப்பதைக் காணலாம். இந்து மதத்தில் அடங்கியுள்ள சமயங்கள் ஆறினுள் கௌமார மதத்துக்கு மூலப்பொருளாயிருப்பவன் குமரக்கடவுள். காணபத்திய மதத்துக்கு மூலப்பொருளாய் இருப்பவன் கணபதி. பிறப்பு, இறப்பற்ற அகண்ட ஏக வஸ்துவாகிய மூலப்பொருள் ஒவ்வொரு சமயத்திலும் ஒவ்வொரு பெயர் பெறுகிறது. பிறவாத வஸ்து அம்பிகையின் பிள்ளைகளாகப் பிறந்தார்கள் எனக் கருதுவது புராணக் கோட்பாடு. சிவனையோ அவனுடைய மற்றொரு சொரூபமாயிருக்கிற சக்தியையோ அடைய விரும்புகின்றவர்கள் அறிவு படைத்தவர்களாகவும் ஆற்றல் படைத்தவர்களாகவும் இருக்கவேண்டும். கணபதி அறிவுக்குச் சின்னமாயும் குமரக்கடவுள் ஆற்றலுக்குச் சின்னமாயும் இருக்கிறார்கள்.

ஓங்கார மூர்த்தியாகிய கணபதி இருக்கிற இடத்திலேயே அசைவற்று இருக்கிறார். அவர் பேசுவது மிகக் குறைவு; ஆயினும் அவர் யாண்டும் காதுகொடுத்துக் கேட்டுக்கொண்டே இருக்கிறார். அறிவை வளர்க்க விரும்புகின்றவர்கள் மிகைபடப் பேசலாகாது. பேச்சாக வடிவெடுத்து வருகின்ற கோட்பாடுகளையெல்லாம் கவனித்துக் கேட்கவேண்டும். கேட்பதிலும் சிந்திப்பதிலும் கருத்தைச் செலுத்துவதற்கேற்ப அறிவு வளர்கிறது. கணபதி போன்று இருந்து அறிவை ஓங்கச் செய்பவர்கள் சிவஞானத்துக்குத் தகுதியுடையவர்களாகின்றனர்.

ஆற்றலிலும் கட்டழகிலும் தனக்கு நிகர் யாருமில்லாத இளையவன் குமரனுக்கு வாகனமாய் அமைந்திருப்பதும் அழகில் சிறந்த ஆண்மயில். எவ்விடத்துக்கு வேண்டுமானாலும் விரைந்து செல்ல வல்லவனாகிய அவன் தேவர்களுக்கெல்லாம் சேனாதிபதியாக அமைந்திருக்கிறான். எச்செயலையும் திறம்படச் செய்யும் தகைமை அவனிடத்து உண்டு. அவனுக்கு ஆகாத காரியம் எதுவும் இல்லை. பரமனை அடைய விரும்புகின்றவர்கள் அத்தகைய ஆற்றலை வளர்க்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். பண்பாடு அடைந்து வருகின்ற ஜீவாத்மன் கணபதி தத்துவத்தையும் குமரக்கடவுள் தத்துவத்தையும் தன்பால் தலையெடுக்கச் செய்தல் வேண்டும்.

அறிவையும் ஆற்றலையும் பிரித்து வைத்துப் பேசுதல் பொருந்தாது. அப்படி அவசியம் ஏற்படுங்கால் அறிவுக்கு முதன்மையும் ஆற்றலுக்கு இரண்டாம் தரமும் கொடுக்கலாம். அறிவையும் ஆற்றலையும் ஒருங்கே அடையப்பெற்றிருக்கின்ற ஆத்ம சாதகன் தத்துவத்தைச் சரியாக அறிந்துகொள்வதிலும் அதை நடைமுறைக்குக் கொண்டு வருவதிலும் வல்லுநன் ஆகிறான்.

**तुष्टिः — துஷ்டி:** ४४३

திருப்தி வடிவினள்.

போதம் என்ற மனமே பொன் செய்யும் மருந்து. மானுடன் ஒருவனுக்குத் திருப்தி வாய்க்குமாகில் அவன் பாக்கியவான் ஆகிறான். பிரபஞ்சத்தில் இருப்பவைகளை உரிமையாக்கிக்கொள்ள முயலுதற்கு ஏற்ப மனிதனுக்கு ஆசை வளர்ந்து கொண்டே

போகிறது. திருப்திக்கு எதிரிடையாக இருக்கும் ஆசைக்கு ஓர் அளவில்லை. அது வளர வளர மனிதனிடத்துச் சஞ்சலம் ஓங்கு கிறது. ஆதலால் வாழ்வு அவனுக்கு ஓர் தலைச்சுமையாகத்தோன்று கிறது. ஆசையை ஒதுக்குதற்கு ஏற்ப அவன் பண்பாட்டில் மேலே போகிறான். யாண்டும் திருப்தி வடிவினளாய் இலங்கும் அன்னை பராசக்தி ஆனந்தமயீ என இயம்பப்படுகிறாள். குமரக் கடவுளும் கணபதியும் போன்று அனந்தங்கோடி ஜீவர்கள் எல்லாரும் அம்பிகைக்குச் செல்வர்களும் செல்விகளும் ஆகின் றனர். ஆனால் அவர்கள் படைத்துள்ள பேராசை என்னும் சிற்றியல்பு அவர்களை அம்பிகையிடம் இருந்து பிரித்து வைக் கிறது. ஆசையை அவன் அறவே ஒதுக்கிவிட்டால் அம்பிகையின் சந்நிதிக்கு வந்தவனாகிறான். அம்பிகையின் பேரியல்பாகிய திருப்தி தானாகத் தோற்றத்துக்கு வருகிறது. அம்பிகையின் இந்தப் பாங்கு வாய்க்கப்பெற்ற ஜீவர்கள் தாங்களும் திருப்தர் களாய் இருப்பார்களாகில் அவர்கள் அம்பிகை வழிபாட்டுக்குத் தகுதி உடையவர்கள் ஆகின்றனர்.

**புஷ்டிः — புஷ்டி:** ௪௪௪

நிறைவே வடிவானவள்.

சரீரம் எடுத்திருப்பவர்களுள நிறைநிலையில் இருப்பவர்களை யும் குறை நிலையில் இருப்பவர்களையும் காண்கிறோம். உடலமைப் பில் மெலிந்திருப்பது குறை நிலையாகிறது. வரம்பு கடந்து கொழுத்திருக்கிறபொழுது அவ்வுடல் நன்கு செயலாற்றத் தகுதி யற்றதாகிறது. புஷ்டி என்னும் பதமோ பொருத்தமான செழு மையை விளக்குகிறது. இயற்கையில் தோற்றத்துக்கு வந்திருப் பவைகளுக்கிடையில் செழுமை நிறைந்த உயிர்வகைகளைக் காண்கிறோம். அத்தகைய நிறைநிலை அம்பிகையின் மகிமை யாகிறது. உடலைப் பட்டினி போட்டு மெலியச் செய்வது யோக சாதனமாகாது. மிகைபட்ட உணவைச் செலுத்தி அதைத் தடித்திருக்கச் செய்வதும் பொருந்தாது. பண்பட்ட பாங்கில் உடலைச் செழுமையுடன் பாதுகாத்து வைப்பது நல்ல ஆத்ம சாதனம் ஆகிறது. செழுமையான உடலைப் படைத்திருப்பவர் களே நிறை வாழ்வு வாழ வல்லவர்களாகிறார்கள். நிறை வாழ்வே அம்பிகையின் வழிபாடு. அம்பிகை பிரபஞ்சம் எங்கும் புஷ்டி வடி

வினளாய் இருந்து உயிர் வகைகளைத் தன்மயம் ஆக்குவதில் கருத்துடையவளாய் இருக்கிறாள். ஆதலால் உடலைத் திண்ணிய தாக வைத்திருப்பதே அம்பிகையின் வழிபாடாகும்.

मतिः — மதி: ४४५

அறிவு வடிவினள்.

அறிவை வளர்ப்பதே வாழ்க்கையின் குறிக்கோளாகும். 'எப் பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு' என்பது பொய்யாமொழி. அம்பிகை புக்தி, முக்தி சொரூபிணியாய் இருக்கிறாள். சுகபோகத்திற்கு ஏதுவாய் இருப்பது புக்தி. விடுதலை மயமாய் இருப்பது முக்தி. ஜீவர்கள் முதலில் புக்தியை அனுபவித்துவிட்டு முக்தியை நாடுகின்றனர். சுகபோகத்தில் ஈடுபட்டு இருக்கின்ற பொழுதும் நல்ல அறிவைக் கையாளவேண்டும். மிகைபட்ட சுகபோகம் மனிதனை அழித்துத் தள்ளுகிறது. இதை அறிந்துகொள்ளுதல் நல்லறிவு ஆகும். வரம்புக்குட்பட்ட சுகபோகத்தில் ஈடுபடுபவன் நல்லறிவு படைத் தவன் ஆகிறான். பிறகு சுகபோகத்தை அறவே ஒதுக்கித் தள்ளு பவன் பேர் அறிவு படைத்தவன் ஆகிறான். புத்தி வடிவினளாகிய அன்னை பராசக்தி தன் குழந்தைகளுக்கு நல் அறிவைப் புகட்டி வருகிறாள்.

धृतिः — த்ருதி: ४४६

தைரிய வடிவினள்.

பெருநிலையினின்று பிசகாதிருப்பவள் அம்பிகை. உறுதிப் பாடே வடிவெடுத்து இருப்பவள் என்பது இன்னொரு வியாக்கி யானமாகிறது. இம்மூன்று மகிமைகளையும் ஒருங்கே அடையப் பெறுவது வாழ்க்கையின் குறிக்கோளாகும்.

வாழ்க்கையில் ஏற்படும் ஆபத்துக்கேதுவான சூழ்நிலையில் மனம் கலங்குகிறவன் அந்த ஆபத்திலிருந்து மீளமுடியாது. மனம் கலங்காத தைரியம் படைத்தவர்களே எதிரிகளை வெல்லுகின் றனர். தங்களைச் சார்ந்திருப்பவர்களுக்கு இன்னல் உண்டாகாது பாதுகாத்து அவர்களைக் கஷ்டதசையினின்று விடுவிக்கின்றனர். தைரியத்திற்கு நிகரான தோழன் இல்லை.

ஓர் இலட்சியத்தில் மாருது நிலைத்திருப்பது த்ருதி எனப் படுகின்றது. பொருள் சம்பாதிக்கும் முயற்சியில் அடங்கியுள்ள கஷ்டநஷ்டங்களுக்கு ஏற்பப் பலர் அம்முயற்சியினின்றும் பின் வாங்கிவிடுகின்றனர். கல்வி கற்பதில் இருக்கின்ற சிரமங்களைப் பார்த்துப் பலர் அதில் இருந்து விலகிக்கொள்கின்றனர். ஆத்ம சாதனங்கள் பயிலப் பலர் முயலுகின்றனர். ஆனல் அவற்றிலுள்ள இடைஞ்சல்களைச் சமாளிக்கப் பலருக்கு த்ருதி இல்லாததால் சிறிதளவு சாதனம் புரிந்த பிறகு அதைக் கைநழுவ விட்டுவிடுகின்றனர். சோதனைகளுக்கு அசையாப் பாங்கு என்பது வாழ்வின் முன்னேற்றத்துக்கு முற்றிலும் அவசியமானது.

மரத்திலுள்ள பிஞ்சுகளை மரத்தோடு இணைத்து வைத்திருப்பது காம்பு. உறுதிப்பாடில்லாத சில காம்புகள் பிஞ்சைத் தாங்குகிற வல்லமை படைத்திராததால் அவை மரத்தினின்று வீழ்ந்து பயனற்றுப் போகின்றன. மரத்தினின்று நல்ல கனிகள் உண்டாவதற்கு உறுதியான காம்புகள் பயன்படுகின்றன. உறுதியான காம்புகளுக்கு ஒப்ப மனிதன் உறுதிப்பாடே வடிவெடுத்தவனாக இருக்கவேண்டும். தொடுத்த கருமத்தினின்று பின் வாங்காத உறுதிப்பாடுடையவன் வாழ்வில் முன்னேற்றமடைகிருன். த்ருதி சொருபிணியாய் உள்ள அம்பிகை இத்தனை விதமான பாடங்களையும் தன் குழந்தைகளுக்குப் புகட்டி வருகிருள்.

**शान्तिः — சாந்தி: ४४७**

அமைதியே வடிவெடுத்தவள்.

இயற்கையை அறிந்துகொள்வதும் இயற்கையாக இலங்கும் அன்னை பராசக்தியை அறிந்துகொள்வதும் ஒன்றேயாம். இயற்கைத்தாய் செயலே வடிவெடுத்தவளாகவும் இலங்குகின்ருள். குழப்பத்தை உண்டுபண்ணுகிற ஒரு சூழ்நிலையில் ஒரு மனிதன் குழம்பாதிருப்பானுகில் அத்தகையவனைச் சாந்த மூர்த்தி என்று நாம் பாராட்டுகிருேம். கோபத்தை மூட்டுகிற ஒரு சூழ்நிலையில் ஒரு மனிதன் கோபங்கொள்ளாது அமைதியாக இருப்பானுகில் அவனுடைய பாங்கையும் நாம் பாராட்டுகிருேம். அம்பிகை யாண்டும் சாந்தியே வடிவெடுத்தவளாக இருக்கிருள். இன்ப துன்பங்களால் அலக்கழிக்கப்படுகிற மாந்தர் நலம், கேடுகளுக்கிடையில்

சாந்தமாயிருந்து பழகுவார்களாகில் அது அம்பிகையிடமிருந்து வந்துள்ள வரப்பிரசாதம் என்று இயம்பவேண்டும். ஆத்ம சாதகன் யாண்டும் சாந்தமூர்த்தியாய் இருந்து பழகுவானாகில் அது சிறந்த உபாசனையாகிறது.

**स्वस्ति मती — ஸ்வஸ்தி மதீ ४४८**

மெய்ப்பொருளாய் இருப்பவள்.

அனுபவத்துக்கு வருகின்ற ஒரு பொருளின்கண் மெய்ம்மை காண்பதில் பிராதிபாஸிகஸத், வியவஹாரிகஸத், பாரமார்த்திகஸத் ஆகிய மூன்று படித்தரங்கள் உள்ளன.

மாலைநேரத்தில் மானுடன் ஒருவன் ஏதோ எண்ணத்தில் மூழ்கியவனாய் நடந்து சென்றபொழுது சுருண்டு படுத்திருந்த பாம்பு ஒன்றின் பக்கத்தில் வந்ததும் துள்ளிக் குதித்துப் பின் வாங்கினான். அச்சத்தால் எட்ட நின்றுகொண்டு அவ்வழியே வந்த மற்றவர்களுக்கும் எச்சரிக்கை செய்தான். அப்படி வந்தவர்களுள் ஒருவன் கையில் இருந்த மின்கைவிளக்கை மீட்டிப் பார்த்தபொழுது பாம்புபோன்று சுருண்டு கிடந்தது ஒரு கயிறு என்பது வெளியாயிற்று. இங்ஙனம் ஒருபொருளை வேறொரு பொருளாகக் காண்பது பிராதிபாஸிக ஸத். இதன் பொருள் 'ஏற்றுவிக்கப் பட்ட உண்மை' என்பதாகும். உண்மையில் பரவஸ்துவாகிய பிரபஞ்சம் பிராதிபாஸிக ஸத்தாக நமக்குக் காட்சி கொடுக்கின்றது.

சக்தி மதத்தை அனுஷ்டிக்கின்றவர்கள் பரிணாமம் கற்பனையன்று, பரவஸ்துவின் லீலை என்கின்றனர். பிரபஞ்சமாக விளையாடும் பரவஸ்துவின் லீலையில் பெரிய திட்டம் ஒன்று உண்டு. சிற்றுயிர் பேருயிராகவும் பேருயிர் அறிவு படைத்துள்ள மானுடனாவும் பரிணமிக்கின்றன. பரத்தை அடைவதற்கான ஆத்ம சாதனங்களைச் செய்யும் மானுடன் ஒருவன் பரதத்துவ விசாரம் செய்வதன் மூலம் அந்தக்கரண சுத்தி அடைகிறான். இப்பெரிய காரியத்துக்குப் பயன்படுவதை முன்னிட்டு இப்பிரபஞ்ச ஏற்பாடு பொருளுடைய வியவஹாரிகஸத் ஆகிறது. இப்பிரபஞ்சம் முக்தனுக்கு இல்லை; பரபோதமே எஞ்சியுள்ளது. இன்னும் பக்குவம் அடையவேண்டிய ஜீவர்களுக்கோ பிரபஞ்சம் கற்பனையன்று; நிலைபேறு உடையதாக விளங்குகிறது. இதுவே வியவஹாரிக ஸத் என்பதன் பொருள்.

பரப்பிரம்மம் பிரபஞ்சமயமாகத் தன்னைத் தோற்றுவித்துக் கொள்வதற்கிடையில் தன் நிஜசொருபத்தினின்று இம்மியளவும் பிசகுவதில்லை. அன்னை பராசக்தியும் பரப்பிரம்மமும் ஒன்றே. பிரபஞ்சமாகவும் அதிலுள்ள ஜீவகோடிகளாகவும் விளையாடுவதற்கிடையில் பரப்பிரம்மமானது யாண்டும் தன் பெருநிலையினின்று பிசகுவதில்லை. சுவஸ்தி மதீ என்பதன் பொருள் இதுவேயாம்.

ஸ்வஸ்தி என்னும் சொல் ஆசீர்வாதம் எனவும்பொருள்படுகிறது. அதற்குத் தன் நிஜ நிலையில் இருப்பது என்றும் க்ஷேமம் என்றும் வேறு பொருள்கள் உண்டு. ஸ்வஸ்தி வசனம் சொல்வது என்றால் மங்களம் கூறுவது எனவும் பொருள்படுகிறது. இத்தனைவிதமான பெருநிலைகளில் அம்பிகை இலங்கிக்கொண்டிருப்பதால் அவள் ஸ்வஸ்திமதீ என்னும் பெயர் பெற்றுள்ளாள்.

**कान्तिः — காந்தி:** ௪௪௯

அழகுடையவள்.

அம்பிகை படைத்துள்ள அழகு சுயம்பிரகாசம் வாய்க்கப் பெற்றது. அது யாண்டும் தன்னைத்தானே விளக்கிக்கொண்டிருக்கிறது. அப்பேரழகு மற்ற உயிர்களையெல்லாம் தன்பால் கவர்ந்திழுக்கும் பாங்குபடைத்ததாய் இருக்கிறது. தன் பிரகாகாசத்தால் மற்றவைகளை விளங்கச் செய்யும் பாங்குடையதாயும் அது இருக்கிறது. அது மற்ற உயிர்வகைகளின் இச்சைகளை நிறைவேற்றி வைக்கவல்லதாய் இருக்கிறது. ஆத்மப்பிரகாசத்திடமிருந்தே சூரியன், சந்திரன், நட்சத்திரம், மின்னல், அக்னி முதலியன தம் சோபையைப் பெறுகின்றன என்பது வேதவாக்கு. பிரகாசங்கள் அனைத்துக்கும் மூலப்பிரகாசம் என்றும் அழகு அனைத்துக்கும் மூல அழகு என்றும் காந்தி: என்னும் சொல் பொருள்படுகிறது. அத்தகைய மூலவஸ்துவாகவும் ஆத்மப் பிரகாசமாகவும் இலங்கும் அம்பிகை காந்தி: என்னும்பெயர் பெற்றுள்ளாள்.

**नन्दिनी — நந்தினீ** ௪௫௦

மகிழ்ச்சியை ஊட்டுபவள்.

எக்காரணத்தை முன்னிட்டாவது எவ்வுயிர்க்காவது மகிழ்வு ஏற்படுமாகில் அம்மகிழ்விற்கு மூலகாரணமாயிருப்பவள் அம்

பிகை. நந்தகோபனுடைய புதல்வியாக அன்னை பராசக்தி கோகுலத்தில் பிறப்பு எடுத்ததால் அவள் நந்தினீ என நவிலப்படுகிறாள்.

வேண்டிய பொருள்களை எல்லாம் வேண்டியவாறு வழங்கவல்ல காமதேனுவின் அம்சமாக வந்த பசு ஒன்று நந்தினீ என்று அழைக்கப்படுகிறது. பாபத்தைப் போக்குபவள் என்னும் பொருளில் நந்தினீ என்னும் பெயர் கங்காதேவிக்கும் அமைந்துள்ளது. கங்கா நதிக்குள் வந்து வீழ்கிற சாக்கடை நீர் தன் சிறுமையை இழந்துவிட்டுப் பவித்திரமான கங்கா ஜலசொரூபமாகத் திருந்தி அமைகின்றது. அங்ஙனம் அம்பிகையை வந்தடைகிற ஜீவர்கள் எல்லாரும் தம் ஜீவ வியக்திகளை ஒதுக்கிவிட்டுப் பரத்தில் ஒன்று படுகின்றனர். இத்தகைய பாங்கு அம்பிகையினிடத்து இருப்பதால் அவள் நந்தினீ என்னும் பெயர் பெற்றுள்ளாள்.

## विघ्ननाशिनी — விக்ன நாசினீ ४५१

இடையூறுகளை அகற்றுபவள்.

அம்பிகையின் மூத்த மகனுக்கு விக்னேஸ்வரன் என்றும் விக்னராஜா என்றும் பெயர். தாயின் கடமையைத் தனயன் செய்வதும் தனயன் கடமையைத் தாய் செய்வதும் ஆகிய உலகின் போக்கு, பாரமார்த்திகத்திற்கும் ஒத்து இருக்கிறது. விக்னேஸ்வரன் விக்னத்திற்குத் தலைவனாய் இருக்கிறான். இறைவனுடைய திரு உளத்திற்கு ஏற்ப விக்னமானது எப்படி வேண்டுமானாலும் வந்தமையும். மானுடர் எடுத்துக்கொள்ளும் சில செயல்களை விக்ன ராஜாவாகிய கணபதி நடைபெறாது தடைப்படுத்தி விடுகிறார். அவனுக்குக் கேடுவிளைவிக்கும் முயற்சிகள் நிறைவேறப் பெறாது தடைப்பட்டுவிடுமானால் அக்கணத்தில் அவன் அதைக் குறித்து ஏமாற்றமடைகின்றான். ஆனால் நாளடைவில் தொடுத்த கருமம் தடைப்பட்டது தன் நலனுக்காகவே என்று அவனுக்கு விளங்குகிறது. மனிதன் விரும்புவதை எல்லாம் இறைவன் நிறைவேற்றி வைப்பதில்லை. அவனுக்கு எக்காலத்தில் எது தகுந்ததாகின்றதோ அதை மட்டும் அவர் நிறைவேற்றி வைக்கிறார். தடை பண்ணுவதன் வாயிலாக இறைவனுடைய கருணை

வெளியாகிறது. நிறைவேறுவதற்கு உரிய வேறு சில கர்மங்களுக்கு விக்னங்கள் வந்தால் அவைகளைத் தோன்றாத் துணையாய் இருந்து அவர் அகற்றி வைக்கிறார். உலகக் கிருத்தியங்கள், தெய்விகக்கிருத்தியங்கள் இரண்டிலுமே விக்னேஸ்வரர் தலையிடுவது நிகழ்ந்து வருகிறது. தடைபோடுவதிலும் தடையைத் துடைப்பதிலும் அவர் வல்லுனராய் இருக்கிறார்.

அம்பிகைக்கு விக்னநாசினீ என்னும் பெயர் அமைந்துள்ளது. ஈண்டு இரண்டுவிதக் கிருத்தியங்களுக்கு இடமில்லை. இடைஞ்சலைப் போக்குதல் என்னும் ஒரே கிருத்தியம்தான் நடைபெறுகிறது. இது முற்றிலும் பாரமார்த்திகத்திற்கு உரியது. ஆத்ம சாதனத்தில் ஈடுபடுகிறவர்களுக்கு வெவ்வேறு பாங்குகளில் விளையும் தடைகளைச் சமாளிக்க முடியாதது போன்று தென்படுகிறது. அவர்கள் அம்பிகையின் அருளைத்தேடி அதன் விளைவாகப் பரஞானத்தைப் பெறுகின்றனர். 'அம்பிகையைச் சரண் புகுந்தால் அதிக வரம் பெறலாம்' என்று பக்தர் ஒருவர் பகர்ந்துள்ளார். பரநாட்டம் வாய்க்கப்பெற்றவர்கள் பாக்கியவான்கள். நாடுபவைகளுள் அதற்கு நிகரானது ஏதுமில்லை. தாய் உள்ளம் யாண்டும் தன் குழந்தைகளைப் பராமரிக்கும் பாங்குடையதாய் இருப்பதுபோன்று அம்பிகையிடம் விண்ணப்பிக்கின்றபொழுது பரஞானத்திற்கு விக்னமாயுள்ள அனைத்தையும் அவள் அக்கணமே ஒதுக்கித் தள்ளுகிறாள்.

## तेजोवती — தேஜோவதீ ४५२

பொலிவை உடையவள்.

நிறைவாழ்வு வாழ்ந்து வருகின்ற உயிர்களிடத்துத் தெய்வ சம்பத்தாகிய பொலிவு இயல்பாக அமைந்துள்ளது. அவற்றின் புறத்தோற்றமாக அது விளங்குகிறது. சின்னஞ்சிறு குழந்தைகளிடத்துப் பொலிவு இருப்பது வெளிப்படை. அவை நெறியான வாழ்வில் ஈடுபடுவதற்கு ஏற்பப் பொலிவு ஓங்குகிறது. நெறி பிறழ்ந்து ஒழுக்கமின்மையில் ஈடுபடுவதற்கு ஏற்பப் பொலிவு தானாக மங்குகிறது. பொலிவைக்காக்கவும் வளர்க்கவும் மனிதன் கடமைப்பட்டிருக்கிறான். நல்லொழுக்கத்தினின்று வெளியாகும் பொலிவு அலாதியானது. மேனியழகு இல்லாதவர்களிடத்தும்

தேஜஸ் மேலோங்குவது உண்டு. சீலத்தின் விளைவாக அது வடிவெடுக்கிறது. எங்கெல்லாம் தேஜஸின் சான்னித்தியத்தைக் காண்கிறோமோ அங்கெல்லாம் அம்பிகையின் சான்னித்தியம் இருக்கிறது எனக் கருதுதல் வேண்டும்.

**त्रिनयना — த்ரிநயனா** ४५३

மூன்று கண்களை உடையவள்.

சந்திரன், சூரியன், அக்னி ஆகிய மூன்றும் கண்பார்வைக்குத் துணைபுரிகின்றன. ஸ்தூல விளக்குகளாக அமைந்துள்ள இம் மூன்றனுள் சந்திரனும், அக்னியும் தோற்றத்தில் இல்லாது மறைந்துபட்டுப்போவதுண்டு. எனவே அவை இரண்டும் ஊனக் கண்களுக்கு விளக்கங்களாகின்றன. ஊனக்கண்கள் பார்க்கக் கூடிய நிலையிலும் பார்க்கமுடியாத நிலையிலும் இருக்கின்றன. சுயப்பிரகாசம் வாய்க்கப்பெற்றுள்ள சூரியனே மறைந்துபோவ தில்லை. ஆகையினால் அது ஞானக்கண்ணுக்கு விளக்கமாகிறது. இம்மூன்றையும் சிவனுருக்கும் அம்பிகைக்கும் கண்கள் என்று பகர்வது ஐதிகம்.

நயனா என்னும் சொல் நடாத்துபவள் எனப் பொருள்படு கின்றது. திரிநயனா என்னும் சொல் மூன்று முறைகளைக் கையாண்டு ஆத்மசாதகர்களைப் பரம்பொருளின்கண் நடாத்து பவள் எனப் பொருள்படுகிறது. வேதங்களில் உள்ள ஆப்த வாக்கியங்கள் சுருதிப்பிரமாணம் எனப்படுகின்றன. அவற்றை ஏற்று அனுஷ்டிப்பவன் பரத்தை அடைவது திண்ணம். மனிதன் தன் பகுத்தறிவை முறையாகக் கையாளும் உபாயம் ஒன்றும் உள்ளது. சுருதியை ஏற்க மறுக்கின்றவர்களும் யுக்திப் பிரமா ணத்தைப் பயன்படுத்தலாம். அவை இரண்டுக்கும் இடையே முரண்பாடு ஏதும் இல்லை. யுக்தியைப் பயன்படுத்த இயலாத மந்த அதிகாரியானவன் பரிணமித்து மேல்நிலைக்கு வரும்வரை காத்திருப்பது அவசியமாகிறது.

மூன்று பிரமாணங்களுள் அனுபூதியின் விளைவாக வரும் பிரத்தியட்சப் பிரமாணம் முடிவானது. ஆத்மசாதகன் தனக்கும் தன் தலைவனுக்குமிடையில் உள்ள தொடர்பை அனுபூதியில் அறி கின்றபொழுது ஐயங்கள் அகலுகின்றன. அவன் ரிஷிகள் கூட் டத்தைச் சேர்ந்தவனாகிறான்.

சிரவணம், மனனம், நிதித்தியாசனம் (கேட்டல், எண்ணுதல், தெளிதல்) ஆகிய மூன்று உபாயங்களின் வாயிலாக ஆத்மசாதகனைப் பரத்தின்கண் எடுத்துச் செல்லுபவள் என்றும் திரிநயனா என்னும் சொல் பொருள்படுகிறது. பரதத்துவங்களைக் கேட்பது முதல்படி; அவற்றை ஓர்ந்து பார்ப்பது இரண்டாவதுபடி. அவற்றின் உட்பொருளை உள்ளபடி உணர்வது முடிந்துள்ள மூன்றும் படி. அன்னை பராசக்தி இத்தகைய ஆத்மசாதனத்துக்குத் துணை புரிவதால் அவள் திரிநயனா என்னும் பெயர் பெற்றுள்ளாள்.

**लोलाक्षी कामरूपिणी — லோலாக்ஷீ காமரூபிணீ** ४५४

அசைகின்ற கண்களை உடையவளாகவும் காதல் வடிவினளாகவும் இருப்பவள்.

மடந்தைப் பருவம் எய்தும் பெண் ஒருத்தியிடம் காமம் உருவெடுப்பதற்குப் புறச்சின்னமாக அவள் கண்கள் அசைகின்றன. பிரஜா விருத்தியில் நோக்கம் உடையவளாக அவள் மனது சலிக்கிறது. பக்குவம் அடையும் உயிர்வகைகள் யாவும் பிரவிருத்தியில் ஈடுபடுகின்றன. நிவிருத்தியில் அசைவற்றிருப்பது அரிதிலும் அரிதாகச் சில மானுடப் பிறவிகளுக்கே சாத்தியமாகிறது. அது ஜன்மாந்திரங்களில் வாய்த்துள்ள ஆத்மபரிபாகத்தின் விளைவாகும். பிரவிருத்தி நாட்டம் உடைய உயிர்வகைகள் அம்பிகைக்குப் புறம்பானவைகள் அல்ல. அம்பிகை தானே பலப்பல சக்திகளாகத் திகழ்கின்றாள். வேறுபாடுடைய அத்தனைவிதச் சக்திகளுள் காதல் மயமாய் இருப்பதும் ஒரு கூறு ஆகிறது. அம்பிகையின் சொரூபத்தைக் கணக்கில் எடுத்துக்கொள்கின்றபொழுது அதில் எப்பகுதியும் புறக்கணிக்கப்படுவதன்று. தக்க தருணத்தில் காதல் மயமாக உயிர்வகைகள் மிளிர்வதே இயற்கையில் எங்கும் நாம் காண்கின்ற காட்சியாகும். ஆதலால் அக்காட்சியையும் அம்பிகையினுடைய மகிமையென்று போற்ற ஆத்மசாதகன் கடமைப்பட்டிருக்கின்றான்.

**मालिनी — மாலினீ** ४५५

மாலையை அணிந்திருப்பவள்.

புஷ்பமாலை, ருத்ராக்ஷமாலை, துளசிமாலை என்று மாலையில் பல பாங்குகள் உள. ஈண்டுக் குறிக்கப்பட்டிருப்பது இந்த வகை

களைச் சேராது. அம்பிகையிடத்திருந்து உருவெடுத்த ஒசை, ஒலிகள் எழுத்துக்களாக வடிவெடுக்கின்றன. எழுத்துக்களுக்கு அக்ஷரம் என்று பெயர். அழியாதது என்பது அதன் பொருள். அழிவற்ற நாதப்பிரம்மத்தினின்று தோன்றிய ஒலி வடிவங்களும் அழிவற்று இருக்கின்றன. சம்ஸ்கிருதத்தில் உள்ள ஐம்பத்தோர் அக்ஷரங்களும் பிரகிருதியின்கண் உள்ள எல்லாவிதமான ஓசை களையும் தம்மகத்து அடக்கி வைத்திருக்கின்றன. எனவே சம்ஸ் கிருதபாஷை உச்சரிப்பினுடைய உச்சநிலையை எட்டியுள்ளது; அது நிறைமொழியும் ஆகிறது. ஓசையின் வடிவுகள் குன்றுதற் கேற்ப் மொழியும் குறைநிலை உடையதாகிறது. இந்த ஐம்பத் தோர் அக்ஷரங்களும் பிரகிருதித் தாயிடமிருந்து தோன்றி வந் திருப்பதால் அவள் மாலினீ என மொழியப் பெறுகிறாள். கங்கா நதியின் உபநதிகளுள் ஒன்று மந்தாகினி. அந்நதிக்கு மாலினீ என்னும் பெயர் உண்டு. அந்த நதி சொரூபமாகவும் அன்னை பராசக்தி இலங்குகின்றாள்.

**हंसिनी— ஹம்சினீ** **೫೫६**

அன்னப்பறவை மயமாயிருப்பவள்.

ஹம்சங்களின் நடை பார்ப்பதற்கு அழகாக இருக்கும். எனவே தான் அழகான நடைக்கு அன்னநடை என்னும் பெயர் வந்துள்ளது. இந்த அன்னப் பறவைகள் அம்பிகை நடப்பதைப் பார்த்துத் தாங்களும் அழகான நடையை அவளிடமிருந்து கற்றுக் கொண்டன என்பது புராண வரலாறு.

ஹம்சம் என்பது ஜீவாத்மனைக் குறிக்கிறது. இது வேதாந்த மரபு. சைவ சமயத்தில் பசு என்னும் சொல் ஜீவாத்மனைக் குறிக் கிறது. பரமாத்மன் பசுபதியாகிறான். வைஷ்ணவ சம்ப்ரதாயப் படி கோ என்றால் ஜீவாத்மன் என்றும் கோபாலன் என்றால் பரமாத்மன் என்றும் பொருள்படுகின்றன. வேதாந்தக் கோட் பாட்டின்படி ஹம்சம் என்னும் சொல் பண்பாடு அடைந்துள்ள ஜீவாத்மனைக் குறிக்கிறது. பண்பாட்டில் உச்சநிலையை எட்டிய ஜீவாத்மன் பரமஹம்சம் என அழைக்கப்படுகிறான். மந்த் ரம் ஒன்றைத் திரும்பத் திரும்ப உச்சரிக்கின்றபொழுது அது ஜபம் என்னும் பெயர் பெறுகிறது. உச்சரித்தாலும்

உச்சரிக்காவிட்டாலும் தானே ஒலித்துக் கொண்டிருக்கும் மந்த்ரம் அஜபா மந்த்ரம் ஆகின்றது. ஸோஹம் ஹம்ஸ: என்பது உச்சரிக்கப்படாத மந்த்ரம். அது அனாஹதத் தொனி எனவும் பகரப்படுகிறது. பரமஹம்ச பரம்பரையைச் சேர்ந்தவர்கள் மனதினுள்ளேயே அதை ஒலித்துக்கொண்டிருக்கின்றனர். மூச்சு வாங்கும் பொழுதும், விடும்பொழுதும் அந்த ஓசை புறக்காதுக்குப் புலப்படாது உள்ளத்தின் உள்ளேயே ஒலித்துக் கொண்டிருக்கிறது. அத்தகைய அஜபா மந்த்ரமயமாயிருப்பவளாகிய அம்பிகை ஹம்சினீ என்னும் பெயர் பெற்றுள்ளாள்.

**माता** — மாதா ௪௫௭

பெற்றெடுத்தவள்.

ஜகத் ஜனனியாக இருக்கின்றபொழுது அம்பிகை ஸ்ரீ மாதா என மொழியப் பெறுகிறாள். ஈண்டு மாதா என மொழியப்படுவது அந்தந்த ஜீவனுக்குரிய மாதா என்று பொருள்படுகிறது. பெற்றெடுத்த தாயைப் பராசக்தி சொரூபமாகப் பாராட்டுவது பண்பட்டுள்ளவர்களுடைய பாங்கு ஆகிறது. தாயை அன்னை பராசக்தியின் சொரூபமாகப் பாவித்து நாள்தோறும் அதிகாலையில் அவள் பாதத்தைத் தொட்டு வணங்குவது நல்ல ஆத்மசாதனமாகிறது.

**मलयाचल वासिनी** — மலயாசல வாஸினீ ௪௫௮

மலய மலையிலே வசித்திருப்பவள்.

பிரபஞ்சம் முழுவதும் சக்தி சொரூபம். பூமியிலுள்ள மலைகள் வெளிப்படையாகச் சக்தியின் பாங்கை விளக்குகின்றன. ஸ்தாவரங்கள் போன்று மலைகளும் உயிர்த்தத்துவங்களாகின்றன. கிருஷ்ண பரமாத்மா ஈசுவர விபூதியை விளக்குகின்ற பொழுது 'ஸ்தாவரங்களுள் நான் ஹிமாசலமாக இருக்கிறேன்' என்கிறார். ஹிமாசலத்துக்கு நிகராக மலயமலையும் உயிர்த்தத்துவம் ததும்பப் பெற்றிருக்கிறது. ஆதலால் அம்மலையின்கண் அம்பிகை வீற்றிருக்கிறாள் என்னும் கோட்பாடு முற்றிலும் பொருத்தமானது. எந்த மலையைப் பார்த்தாலும் அதை அம்பிகையின் சொரூபமாகப் பாவிப்பது நல்ல ஆராதனையாகிறது.

**सुमुखी** — ஸுமுகீ ४५९

மலர்ந்த முகத்தை உடையவள்.

'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்பது கோட்பாடு. அந்தக்கரண சுத்தி அடைவதற்கேற்ப அதன் பொலிவு முகத்தில் மிளிர்கிறது. அன்னை பராசக்தியின் சோபனமான முகத்தைத் தியானிப்பதே நல்ல ஆத்ம சாதனமாகிறது. அவளுடைய முக விலாசத்தின் இனிமையை எண்ண எண்ண ஆத்ம சாதகர்களுக்கு ஆனந்தம் மேலிடுகிறது. ஆத்ம ஞானத்தில் அன்னவன் விரைந்து முன்னேறுகிறான்.

**नलिनी** — நளினீ ४६०

தாமரைப் புஷ்பம் போன்றவள்.

அம்பாளுடைய கை, பாதம், முகம், கண் ஆகிய அவயவங்கள் யாவும் கமலப் புஷ்பம் போன்றிருக்கின்றன. தாமரைப் புஷ்பத்தைப் போற்றுவதே அம்பிகையின் வழிபாடாகிறது. நளன் என்னும் அரசன் அம்பாளை வழிபட்டதனால் அவளுக்கு நளினீ என்னும் பெயர் வந்ததாகச் சொல்லப்படுகிறது. கங்கா நதியின் உபநதிகளுள் ஒன்றான நளினியின் வடிவிலும் அன்னை பராசக்தி இலங்கிக்கொண்டிருக்கிறாள்.

**सुभ्रूः** — ஸுப்ரூ: ४६१

அழகிய புருவங்களை உடையவள்.

இந்த ஸ்தூல வர்ணனையிலும் பொருள் மிகப் புதைந்துள்ளது. உள்ளத்தின் பரிபாகம் முகவிலாசத்தில் மிளிர்வதைப் போன்று முகத்துக்கு இனிமையோடுகூடிய உறுதிப்பாட்டைத் தருவது புருவமாகும். மக்களுக்கும் விலங்குகளுக்கும் புருவம் பொதுவானது. முக அமைப்பில் புருவங்கள் முக்கியமான இடம் பெற்றிருக்கின்றன. நுண்ணறிவு படைத்திருப்பவர்கள் புருவங்களைப் பார்த்து உயிர்வகைகளின் அமைப்பை உள்ளபடி அறிந்து கொள்வார்கள். அம்பிகையின் புருவ அமைப்போ யாண்டும் கவர்ச்சிகரமானது; உயிர்த் தத்துவத்தைத் தன்பால் கவர்ந்திழுக்க வல்லது. ஆதலால் அம்பிகை ஸுப்ரூ: அல்லது அழகிய புருவங்களே வடிவெடுத்தவள் என்று போற்றப்படுகிறாள்.

**शोभना — சோபனு** ४६२

பேரழகே வடிவெடுத்திருப்பவள்.

பரவஸ்துவுக்குரிய விபூதிகளுள் ஒன்ருகிய அழகு, வடிவத்தோடு சம்பந்தப்பட்டது. முறையாக அமைந்துள்ள வடிவம் உள்ளத்தைக் கவர்கிறது. புறத்திலுள்ள வடிவத்தின் பொலிவு கண் என்னும் பொறிவாயில் வழியாக உள்ளத்துக்கு எட்டுகிறது. புறப்பொருளில் உள்ள ரூபத்தின் மகிமையை மனது ரசித்துப் போற்றுவதாகிறது.

பலப்பல மகிமைகள் வாய்க்கப்பெற்ற பரமன் சுந்தரேஸ்வரன் என்றும் சுந்தரராஜன் என்றும் போற்றப்படுகிருன். அவனிடத்துள்ள சோபை அம்பிகையின் சான்னித்தியத்தால் வருகிறது. கட்புலனுகாது வெட்டவெளியில் சூரியனிடமிருந்து பூமிக்குவரும் சூரிய கிரணத்தை முப்பட்டைக் கண்ணுடியின் வழியாகப் பாயும் படி செய்தால் அது ஏழு நிறமாகச் சிதறடைகிறது. வெட்டவெளியில் நீர்த்திவலை நிறைந்த மேகத்தின் வழியாகப் பாய்ந்தால் அது ஏழுநிறமுடைய வானவில் அல்லது இந்திர தனுசாக வடிவெடுக்கிறது; அது உள்ளத்தைக் கவரவல்லதாகிறது. தோன்ரு நிலையிலுள்ள பரப்பிரம்மம் தோற்றத்துக்கு வரும்பொழுது சக்தி என்று பெயர் பெறுகிறது. சக்தியின் எண்ணிக்கையிலடங்காத அம்சங்களுள் சோபையும் ஒன்று. சோபையைப் பெற்று விளங்கும் அம்பிகை சோபனு என்று போற்றப்படுகிருள். கற்றவர், கல்லாதவர் ஆகிய அனைவரின் மனதும் அழகின்கண் நன்கு ஒடுங்குகிறது. அம்பிகையின் அழகை ரசிப்பதும் ஒருவித ஆராதனையாகிறது.

**सुरनायिका — ஸுரநாயிகா** ४६३

தேவர்களுக்கெல்லாம் தலைவி.

ஈசுவரனுடைய சிருஷ்டியில் நல்லார், பொல்லார் ஆகிய இரு தரத்தாரும் இருக்கின்றனர். நல்லாரைச் சுரர்கள் என்றும் பொல்லாரை அசுரர்கள் என்றும் அழைக்கின்ருேம். பரிணுமத்தில் படிப்படியாக மேல் நிலைக்கு வருகின்றவர்கள் நல்லார் அல்லது சுரர் ஆகின்றனர். உயிர்களனைத்தும் படிப்படியாக மேல் நிலைக்கு வருவதே இயற்கைத்தாயின் திட்டமாகும். அந்த அரிய

திட்டத்தை அவள் யாண்டும் இனிது நிறைவேற்றி வருவதால் அவளுக்கு ஸுர நாயிகா என்ற பெயர் அமைந்துள்ளது.

**काळकण्ठी — காலகண்டீ ४६४**

காலகண்டருடைய சொரூபத்தில் இருப்பவள்.

காலகண்டனுக இருக்கும் சிவன் வேறு, சக்தி வேறு அல்லள். கருநிறமான கண்டத்தை அல்லது கழுத்தைப் படைத் திருப்பவன் காலகண்டன். உலகை ஒழிக்க வந்த ஹாலால விஷத்தைப் பருகிப் பரமசிவன் உலகை உய்வித்தார். அந்த விஷத்தை அவர் கண்டத்தில் நிறுத்தியதால் அவர் காலகண்டன் என்னும் பெயர் பெற்ருர். நஞ்சுண்டான் என்பதற்கும் இதே பொருள் அமைந்துள்ளது. துன்மார்க்கத்தில் சென்று சிறுமை அல்லது குறைபாடு ஏதேனும் அடையப்பெறும் மனிதன் அவமானத்துக்குள்ளாகிருன். சிவனர் கறைக்கண்டனுயிருப்பது அவருடைய பெருமைக்கு எடுத்துக்காட்டாகும். மேனி முழுதும் கட்டழகே வடிவெடுத்த அவர் ஜீவர்களனைவரையும் விழுங்கவந்த விஷத்தைத் தாம் ஏற்றுக்கொண்டார். அவர் செய்த தியாகத் தின் விளைவாக அவருடைய கண்டத்தில் கரிய நிறம் வந்திருப்ப தால் அது அவருடைய பெருமைக்கு எடுத்துக்காட்டாக அமைந் திருக்கிறது. அத்தகைய பரமனைப் பராசக்தியாகப் போற்று மிடத்து அவர் காலகண்டீ என்னும் தாயாக இலங்குகின்ருர்.

அளந்தெடுத்துள்ள ஓசையோடு கூடிய தொண்டை கால கண்டம் எனப் பெயர் பெறுகிறது. மிக அடங்கிய குரலோசை யும், வரம்புக்கு மீறி வெடித்து வருகின்ற குரலோசையும் பாராட் டப்படுபவைகளாகா. வீணையில் சுருதி மீட்டப்பட்டிருப்பது போன்று அளந்தெடுத்த குரலில் பேசுவதும் பாடுவதும் செவிக்கு விருந்தாகிறது. யாண்டும் அளந்தெடுத்துள்ள குரலிலேயே அன்னை பராசக்தி தன் கருத்தையும் உணர்ச்சியையும் வெளிப் படுத்துவதால் அவள் காலகண்டீ என்று அழைக்கப் பெறுகிருள். சூழ்நிலைக்கு ஏற்பக் குரலை உயர்த்துவதும் தாழ்த்துவதும் அவசிய மாகிறது. மக்கள் இப்பாங்கை அன்னையிடமிருந்து கற்றுக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கின்றனர். கால சொரூபிணி ஆகிய காளிகாதேவியைக் காலகண்டீ என்று அழைப்பது மரபு.

**कान्तिमती — காந்திமதீ** ४६५

ஒளிமயமாய் இருப்பவள்.

ஒளிமயமாயிருக்கும் சூரியனின் ஒளி நண்பகலில் கண்ணைக் கூசும்படி செய்கிறது. அன்னை பராசக்தியிடமிருக்கும் ஒளியோ இனிமை ததும்புவதாய் உள்ளது. காந்திமதியாய் இலங்குபவளின் வடிவத்தைக் காணக்காண அது கண்ணுக்கு விருந்தாயிருக்கிறது. உள்ளத்துக்கு அமைதியையும் ஆனந்தத்தையும் அது ஊட்டுகிறது. உள்ளத்தைக் கவர்ந்து அது தன்மயமாக்குகிறது. தியானத்துக்குரிய மகிமை நிறைந்த தெய்விக வடிவினளாய் இருக்கும் அம்பிகை காந்திமதீ என்னும் பெயர் பெற்றுள்ளாள். அம்பிகையைக் குறித்து அவள் ஒளி வடிவினள் என்று கருதித் தியானம் பழகுவது முற்றிலும் அவசியமாகிறது.

**क्षोभिणी — க்ஷோபிணீ** ४६६

உணர்ச்சியை உறுதிப்படுத்துபவள்.

சக்தியின் கூறுகள் அனைத்தும் பிரளயகாலத்தில் அவ்யக்தமாக அடங்கிக் கிடக்கின்றன. தோற்றத்தில் இல்லாத சக்தி சிருஷ்டியைத் தொடங்குகின்றபொழுது மூலப்பிரகிருதியாக மாறுகின்றாள். உறக்கத்தில் அசைவற்றுக் கிடக்கின்றவன் விழித்தெழும்போது இப்படியும் அப்படியும் புரண்டு தன்னிடத்து ஒரு சலனத்தை உண்டுபண்ணுகிறான். அந்தச் சலனத்துக்குச் சோபனம் என்று பெயர். அத்தகைய கிளர்ச்சி மயமாக அம்பிகை இருப்பதால் அவள் க்ஷோபிணீ எனப்படுகிறாள். சுறுசுறுப்பு அவளிடமிருந்து உருவெடுக்கிறது. சுறுசுறுப்புக்கேற்றவாறு செயல் இனிது நிறைவேறுகிறது. இத்தகைய பேரியல்புகளை அன்னை பராசக்தி படைத்திருப்பதால் அவளுக்கு இப்பெயர் வந்துள்ளது.

**सूक्ष्मरूपिणी — ஸூக்ஷ்மரூபிணீ** ४६७

நுண்ணிய வடிவெடுத்திருப்பவள்.

இயற்கையாக வடிவெடுத்துள்ள அம்பிகையும் இயற்கையும் ஒன்றே. இயற்கையில் ஸ்தூலமாய் உள்ள அனைத்தும் இந்திரியங்களுக்கு எட்டுகின்றன. சூட்சுமமாக உள்ளவை இந்திரியங்

களுக்கு எளிதில் எட்டுவதில்லை. ஸ்தூல ரூபிணியாகிய அம்பிகை சூட்சும நிலையில் ஆற்றல் மிகப் படைத்தவளாக இருக்கிறாள். பராசக்தியின் பேராற்றல் ஜடரூபத்தில் மிளிர்வதை விடப் பன்மடங்கு அதிகமாகச் சூட்சும ரூபத்தில் மிளிர்கிறது.

இயற்கையில் வெப்பம், மின்சக்தி, காந்தம் போன்றவை ஜட சக்தி எனவும் எண்ணம், உணர்வு, சாரம் என்பவை சித்சக்தி எனவும் பெயர்பெறுகின்றன. சூட்சும நிலையிலுள்ள சித்சக்திக்கே ஜடசக்தியை விட வலிவு அதிகம். கட்புலனாகாது சூட்சும நிலையிலுள்ள ஜடசக்தி, சித்சக்தி ஆகிய எல்லாவிதமான சக்திகளும் அம்பிகையின் பலதரப்பட்ட ஆற்றல்களாம். ஆதலால் அவள் சூட்சுமரூபிணீ என்று போற்றப் பெறுகிறாள்.

### वज्रेश्वरी — வஜ்ரேச்வரீ ४६८

வஜ்ரம் எனப்படும் பேராற்றல் வடிவினள்.

பராசக்தியின் பேராற்றலை விளக்குவதற்கான சின்னம் ஸ்ரீசக்கரம். அதில் ஜாலாந்தரம் என்னும் ஆசனத்தில் வஜ்ரேச்வரீ வீற்றிருக்கிறாள். அவளுடைய பேராற்றலை அறிந்துகொள்ளுதற்கு அவள் வகித்துள்ள ஸ்தானம் ஓரளவு உற்ற உபாயமாகிறது.

ஆயுதங்களுள் நான் வஜ்ராயுதம் என்று கிருஷ்ணபரமாதமா பகர்கிறார். தேவேந்திரன் அசுரர்களைத் தோற்கடிக்க உறுதுணையாயிருந்த வஜ்ராயுதம் ததீசி மஹரிஷியின் அஸ்தியைக் கொண்டு அமைக்கப்பெற்றது என்பது ஐதிகம். அவருடைய தபஸ் ஒன்றே அந்த அஸ்திக்கு வலிவு கொடுத்தது. சிறுமைகளையும் கேடுகளையும் வஜ்ராயுதம் என இயம்பப்பெறும் தபசைக் கொண்டு போக்கடிக்கலாம். அத்தகைய பேராற்றல் அம்பிகையிடமிருந்தே தபசிகளுக்கு வருவதால் அவள் வஜ்ரேச்வரீ எனப்படுகிறாள். வஜ்ராயுதமாக மனிதன் தன்னைத் தவத்தின் மூலம் மாற்றியமைத்துக் கொள்ளவேண்டும். அம்பிகையை ஆற்றல் வடிவினளாகப் போற்றுதற்கு ஏற்ப மனிதன தானே வஜ்ராயுதமாக மாறி அமைகின்றான்.

### वामदेवी — வாமதேவீ ४६९

வாமதேவருடைய சக்தியாக இருப்பவள்.

பாங்கிலும் அமைப்பிலும் கவர்ச்சிகரமான வாமதேவரின் இனிய பொலிவு ஜீவகோடிகளைத் தன்மயமாகக் கவர்ந்திழுக்கிறது. எல்லாராலும் போற்றுதற்குரிய வாமதேவரின் பொலிவும் அம்பாளும் ஒன்றேயாம். தீயும் அதனுடைய சுடுகின்ற தன்மையும் போன்று வாமதேவரும் வாமதேவியும் சொரூபத்தில் ஒன்றே. அம்பிகையின் இத்தகைய இனியதும் கவர்ச்சிகரமானதுமாகிய சொரூபத்தில் இலயித்திருப்பது நல்ல வழிபாடாகிறது.

மாதொருபாகமான பரமனுக்கு அர்த்தநாரீசுவரன் என்று பெயர். தேவி அமைந்துள்ள இடப்பக்கம் வாமபாகம் எனப்படுகிறது. பரமனுடைய இடப்பக்கம் முழுதும் பரமேஸ்வரிமயமாயிருப்பதால் அவள் வாமதேவீ எனப் போற்றப் பெறுகிருள்.

நான்கு திக்குகளுக்கு நான்கு முகங்களும் மேல்நோக்கிய ஒரு முகமும் உடைய பரமசிவன் பஞ்சானனன் எனப் போற்றப்படுகிறார். மேற்கு, கிழக்கு, வடக்கு, தெற்கு ஆகிய திசைகளை நோக்கிப் பார்த்துக்கொண்டிருக்கும் முகங்களுக்கு முறையே சத்தியோஜாத, தத்புருஷா, வாமதேவர், அகோரா என்னும் பெயர்கள் அமைந்துள்ளன. ஈசானன் என்னும் முகம் மேல்நோக்கிப் பார்த்துக்கொண்டிருக்கிறது. வடதிசையைப் பார்க்கும் முகம் மயமாக அம்பிகை இருப்பதால் அவள் வாமதேவீ என்னும் பெயர் பெற்றுள்ளாள்.

அம்பிகை கர்மங்களனைத்துக்கும் அதிஷ்டான தெய்வமாயிருப்பதாலும் அவள் வாமதேவீ என்று அழைக்கப் பெறுகிருள்.

பரம்பொருளை வழிபடும் மார்க்கங்களுள் தட்சிணாசாரம் பரமசிவனுக்கும் பார்வதிதேவிக்கும் பொதுவானது. வாமாசாரமோ அலாதியாகப் பார்வதி உபாசனைக்கே உரியதாக இருப்பதால் அம்பிகை வாமதேவீ என்னும் பெயர் பெற்றுள்ளாள்.

**वयोऽवस्थाविवर्जिता — வயோऽவஸ்தாவிவர்ஜிதா ௪௭०**

வயதாகிக் கொண்டிருத்தல் என்னும் பாங்கில் கட்டுப்படாதிருப்பவள்.

எது பிறப்பெடுக்கின்றதோ அது வளர்ந்து கொண்டேபோய் ஓர் உச்சநிலையை எட்டியான பிறகு தேய்வடைகிறது. மரணத்தின்

வாயிலாக அது மறைகின்றது. தேகம் எடுத்திருப்பவர்களுக்குக் குழந்தைப் பருவம், யௌவனம், முதுமை, வயோதிகம், மரணம் ஆகிய வியவஸ்தைகள் உள்ளன. தேகம் எடுத்தவிடத்தும் அம்பிகை எவ்விதமான மாறுபாடும் அடையாதவளாய் இருக்கிறாள்.

பிறந்து, வளர்ந்து, தேய்ந்து கொண்டிருக்கும் அனந்தங்கோடி ஜீவர்களின் தொகையாக அம்பிகை இருக்கிறாள். ஜீவநிலையிலுள்ள வியஷ்டியில் அவஸ்தைகள் சதா மாறிக்கொண்டிருக்கின்றன. சமஷ்டியில் அம்பிகை யாண்டும் மாறாது இலங்குகின்றாள். கடலில் உருவெடுக்கும் அலைகளுக்கு விகாரப்படும் பாங்குகள் உள்ளன. அலைகளின் தொகையாகிய கடலோ யாண்டும் ஒரே நிலையில் இருக்கிறது. அம்பிகையின் பாங்கும் அத்தகையது. யாண்டும் அவள் வயதில் கட்டுப்படாதவளாய் தன்மயமாய் இருந்துகொண்டே இருக்கிறாள்.

**सिद्धेश्वरी — ஸித்தேச்வரீ** ४७१

சித்தர்களுக்கு ஈசுவரியாக இருப்பவள்.

ஆத்ம பரிபாகம் அடைந்திருப்பவர்கள் ஞானிகள், பக்தர்கள், யோகிகள், சித்தர்கள் எனப் பல பெயர்களால் அழைக்கப்படுகின்றனர். சித்தர்கள் அம்பிகையைச் சித்தேச்வரீ என்று கூறி ஆராதிக்கின்றனர். காயசித்தி பண்ணும் சாதனத்தை மேற்கொள்ளும் சித்தர்களின் கொள்கைப்படி அவர்கள் வயதினால் பாதிக்கப்படுபவர்கள் அல்லர். அம்பிகை வயதினால் பாதிக்கப்படாதது போன்று தங்கள் தேகங்களை யாண்டும் ஒரே பாங்கில் வைத்திருக்கும் பரிபாகம் அடைந்துள்ள சித்தர்களும் வயதினால் பாதிக்கப்படுவதில்லை. சித்தர்களுள் கோரக்ஷர், மத்ஸ்யேந்திர நாதர் என்னும் கூட்டத்தாருக்கு உபாசன மூர்த்தியாய் இருப்பவள் சித்தேச்வரீ.

காசியில் கோயில் கொண்டிருக்கும அம்பிகைக்கு அன்னபூர்ணா, விசாலாக்ஷீ என்னும் பெயர்களுடன், சித்தேச்வரீ என்னும் பெயரும் அமைந்துள்ளது.

**सिद्धविद्या —ஸித்த வித்யா** ४७२

சித்த வித்யா வடிவமாக இருப்பவள்.

பரம்பொருளை அடைவதற்கான பராவித்யாவானது பிரம்ம வித்யா, ஆத்மவித்யா, ஸ்ரீவித்யா, சிவஞானம் இப்படியெல்லாம் பெயர் பெறுகிறது. சித்தமார்க்கத்தில் செல்கின்றவர்களும் அதே பராவித்யாவை அடைவதால் அந்த வித்தையானது சித்தவித்யா என்னும் பெயர் பெறுகிறது. அந்த வித்யா சொரூபமாக விளங்கும் அம்பிகைக்கும் சித்தவித்யா என்னும் பெயர் அமைந்துள்ளது. பிரகிருதி தத்துவங்களைச் சுத்தி செய்து அவை அழிந்துபட்டுப் போகாமல் சாஸ்வதமாக இருக்கும்படி செய்வது சித்த வித்யாவாகிறது. யோகம், வாமாச்சாரம், ரசாயனம் ஆகியவை தேவைக்கேற்ற அளவு இடம்பெற்றுள்ள சித்த வித்யா மார்க்கம்தான் யாவற்றிலும் சிறந்தது என்று அம்மார்க்கத்தில் ஈடுபடுகின்றவர்கள் கூறுகின்றனர்.

**सिद्धमाता** — ஸித்த மாதா ४७३

சித்தர்களுக்கெல்லாம் தாயாயிருப்பவள்.

மெய்ப்பொருள் ஒன்று எனினும் அது பலப்பல மூர்த்திகளாக வடிவெடுத்திருக்கிறது. அவற்றுள் எந்த மூர்த்தியை உபாசித்தாலும் அது பரவஸ்து உபாசனையாகிறது. பக்தி, ஞானம் முதலிய மார்க்கங்களை அனுஷ்டிக்கின்றவர்களுக்குப் பலப்பல உபாசனமூர்த்திகள் உள்ளனர். சித்தர்கள் யாண்டும் அம்பிகையையே வழிபடு தெய்வமாக வைத்துக்கொள்கின்றனர். ஒரு குழந்தை தன் தாயிடம் தங்குதடையின்றி இணங்கி வருவது போன்று சித்தர்களும் தங்களை அம்பிகையின் செல்லப்பிள்ளைகளாகக் கருதுகின்றனர். தனக்கு வேண்டிய ஒன்றை 'உரிமை பாராட்டித் தாயிடம் குழந்தை கேட்கிறது. அதே பாங்கில் மாதாவை முன்னிட்டே சித்தர்களின் மொழியும், சிந்தனையும், செயல்களும் வடிவெடுக்கின்றன. இக்காரணங்களை முன்னிட்டு அம்பிகை சிறப்பாக ஸித்த மாதா என்று அழைக்கப்படுகிறாள்.

**यशस्विनी** — யசஸ்வினீ ४७४

யசஸ் அல்லது கீர்த்திக்குச் சொந்தமானவள்.

புகழ், கீர்த்தி, யசஸ் எல்லாம் ஒரே பொருளைத் தருகின்றன. 'பூமிமேல் புகழத்தக்க பொருளே' என்று ஒரு பக்தரும் 'இறைவனைக் குறித்து வருகிற புகழே பொருள்சேர் புகழ்' என்று வள்ளு

வரும் பரம்பொருளைப்போற்றியுள்ளனர். பாராட்டுதற்குரிய ஒன்று யசஸ் படைத்ததாகிறது. குறைநிலையில் இருப்பதை யாரும் பாராட்டுவதில்லை. புகழைப் பெறுகின்ற பாங்கில் மனிதன் வாழ்ந்திருக்கவேண்டும் என்பது கோட்பாடு. அன்னை பரா சக்தி தன் மகிமைகளையெல்லாம் பிரபஞ்சத்தில் உள்ள அனைத்து மாய் விரித்துக் காட்டிக்கொண்டிருக்கிறாள்.

பொருத்தமாய் அமைந்துள்ள ரூபங்களைப் பார்த்து நாம் ரசிக்கிறோம். ரசிப்பதற்கேற்ற ரூபமும், நிறமும் பொருந்தியிருக் கும் பொருள் ஒன்று யசஸ் படைத்ததாகிறது.

சீரும் சிறப்பும் நிறைந்துள்ள எல்லாம் மனதைக் கவர்ந் திழுக்கும் வல்லமை படைத்திருக்கின்றன. அப்படி உள்ளத்தைக் கவர்ந்திழுப்பது அம்பிகைக்குள்ள யசஸ் அல்லது புகழாகிறது.

வாழ்வாங்கு வாழ்ந்து அம்பிகையின் திட்டத்தை நன்கு நிறைவேற்றுபவனை உலகம் போற்றிப் பாராட்டுகிறது. மானு டன் ஒருவன் கீர்த்தியை நாடிச் செல்லலாகாது. ஆனால் நல்வாழ்வில் அவன் நாட்டம் கொண்டிருக்கவேண்டும். கீர்த் தியை நாடி ஓடுவது நிழலைப் பிடிக்க ஓடுவதற்கு நிகராகும். பர ஒளியை நாடிச்செல்லும் மனிதனைப் பின்தொடர்ந்து புகழாகிய நிழல் பின் தொடர்ந்துவரும். அம்பிகை ஆமோதிக்கும் பார மார்த்திகப் பெருவாழ்வில் ஈடுபடும் சாதகனைத் தேடிப் புகழ் வந்து சேரும். அந்நிலையிலும் புகழுக்கு அடிமைப்படுதல் ஆகாது. யசஸ்வினீ ஆகிய அம்பிகைக்கு அடிமையாயிருத்தல் வேண்டும். சூரியவெளிச்சத்தில் இருப்பவன்மீது சூரிய ஒளி படிவதுபோன்று அம்பிகையின் செல்வனுக்கு அம்பிகையின் யசஸ் சொந்தமா கிறது. எத்தனையோ இன்னல்களுக்கு ஆளாகி ஒருவன் அம்பிகையின் பேரருளுக்குப் பாத்திரமாகிறான். அது சாசுவத மான யசஸ் அல்லது கீர்த்தி ஆகிறது.

**विशुद्धिचक्रनिलया — விசுத்தி சக்ர நிலயா** ४७५

விசுத்தி என்று சொல்லப்படுகின்ற சக்கரத்தைத் தன் இருப்பிடமாகக் கொண்டவள்.

மானுட சரீரத்தில் உள்ள ஆறு யோகச் சக்கரங்கள் முருகக் கடவுளுக்கு உரிய ஆறுபடை வீடுகள் என்றும் ஆறு ஆதாரங்கள்

என்றும் வழங்கப்படுகின்றன. கழுத்தில் ஐந்தாவது சக்கரமாக விசுத்தி சக்கரம் அமைந்துள்ளது. இதிலுள்ள பதினறு இதழ் களும் சம்ஸ்கிருத பாஷையிலுள்ள அ (அ) முதல் அ: வரை உள்ள பதினறு உயிர் எழுத்துக்களுக்கு இருப்பிடமாகின்றன. அ என் னும் எழுத்துக்கு அ் என்பது பீஜ அக்ஷரமாகிறது. அதே போன்று பதினறு அக்ஷரங்களுக்கும் பீஜ அக்ஷரம் உண்டு. அக்ஷரம் என்ருல் அழியாதது என்று பொருள். அழிவற்ற பர வஸ்து ஓசை வடிவமாயிருக்கும்பொழுது நாதப் பிரம்மம் எனப் படுகிறது. ஜீவாத்மனுடைய பிரக்ஞை விசுத்தி சக்கரத்தை யொட்டி அதில் நிலைபெற்றிருக்கின்றபொழுது அந்த ஜீவன் நிர்மலமாகிருன். விசுத்தி என்ருல் முற்றிலும் தூயது எனப் பொருள்.

சுத்தமான கண்ணுடியிலும் தேங்கித் தெளிந்த நீரிலும் நம் பிம்பம் நன்கு தென்படுவதுபோன்று விசுத்தி சக்கரத்தில் எங்கும் நிறைபொருளாகிய பராசக்தியின் சான்னித்தியத்தை யோகியான வன் தெளிவுறத் தரிசிக்கிருன். அத்தகைய தரிசனத்தின் பொருட்டு அவன் தன் அந்தக்கரணத்தைத் தூயதாக்கக் கடமைப் பட்டிருக்கிருன்.

**आरक्तवर्णा — ஆரக்தவர்ணு** ௪௭௬

இலேசாக சிவந்த நிறம் உடையவள்.

முதிர்ந்த சிவப்போடு வெள்ளையைக் கலந்தால அது இளஞ் சிவப்பாக வடிவெடுக்கிறது. பாதிரிப்புஷ்பம் படைத்திருக்கின்ற நிறம் அத்தகையது. பிரபஞ்ச மயமாக இலங்குகின்ற அன்னை பராசக்தி எல்லாவித நிறங்களிலும் மிளிர்கிருள். நீர்த்திவலையின் வழியே பாயும் நிறமற்ற சூரிய கிரணம் ஏழு நிறங்களாகச் சிதறடைகிறது. அந்நிறங்கள் யாவும் சக்திக்கு உரியவைகளாம். கண் பார்வையின் வாயிலாக நிறங்கள் யாவும் மனதைக் கவர் கின்றன. அத்தகைய நிறங்களையெல்லாம் ஆத்ம சாதகன் அம்பிகையின் விபூதிகள் என்று பொருள்படுத்தவேண்டும். ஆரக்தவர்ணு என்னும் நாமம் நிறத்தின் வாயிலாக அம்பிகையை வழிபடுவதற்கு நன்கு உதவுகிறது.

**त्रिलोचना — த்ரிலோசஞ** ४७७

மூன்று கண்களை உடையவள்.

அம்பிகை, ஹரன், கணேசன் ஆகிய மூர்த்திகள் மூவருக்கும் முக்கண்கள் அமைந்துள்ளன. தாய், தந்தை, மைந்தன் ஆகிய மூவரிடத்திலும் இகலோக சம்பந்தமான ஞானமும், பரஞானமும் சேர்ந்தே அமைந்திருக்கின்றன. இகலோகத்துக்குரியவைகளை நுகர்வதற்கு ஊனக்கண்களிரண்டும் பயன்படுகின்றன. இதற் கப்பால் உள்ள பாரமார்த்திகப் பெருநிலையைச் சுவானுபூதியில் அனுபவிப்பதற்கு நெற்றியிலுள்ள ஞானக்கண் பயன்படுகிறது. பாரமார்த்திக ஞானம் வேண்டுகின்றவர்கள் பாரமார்த்திக ஞான சொரூபிணியாக இருக்கின்ற த்ரிலோசனவை உபாசித்தல் வேண்டும். நிறைஞானிக்கும் நெற்றியில் ஞானக்கண் அமை கிறது. புலனடக்கம் அதற்கு முற்றிலும் அவசியமாகிறது.

**खट्वाङ्गादि प्रहरणा — கட்வாங்காதி ப்ரஹரணு** ४७८

கட்வாங்கம் முதலிய ஆயுதங்களை உடையவள்.

டாகினி தேவி தன் நான்கு கரங்களில் ஏந்தியுள்ள நான்கு ஆயுதங்களுள் கட்வாங்கம் முக்கியமானது. தண்டம் ஒன்றன் நுனியில் மனிதனுடைய மண்டையோட்டைப் பொருத்தி வைத் திருப்பது கட்வாங்கம். கட்டிலின் கால் கட்வாங்கம் எனப்படு கிறது. கட்டில்கால் முதலிய ஆயுதங்களைப் படைத்திருப்பவள் என்றும் இந்நாமம் பொருள்படுகின்றது.

வல்லவனுக்குப் புல்லும் ஆயுதமாகிறது; ஆயுதம் இல்லாத வன் அரை மனிதன் என்பது கோட்பாடு. அம்பிகையின் வடிவங்களாகிய பலப்பல மூர்த்திகள் அனைவரிடத்தும் சிறப்பான ஓர் ஆயுதம் அல்லது பல ஆயுதங்கள் இருக்கின்றன. உயிர் வகைகளிடம் ஆக்கிரமிப்புக்கோ பாதுகாப்புக்கோ பயன்படும் ஆயுதங்கள் தேவையான அளவு இருக்கின்றன. போர்வீரன் ஒருவன் தற்பாதுகாப்பிற்காகக் கேடயத்தையும் ஆக்கிரமிப்புக் காக வாளையும் தாங்கியிருக்கிறான். பிரபஞ்சமெங்கும் நிகழ்கின்ற கிருத்தியங்கள் யாவும் அம்பிகைக்கு உரியன. அக்கிருத்தியங் களுக்கேற்ற ஆயுதபாணியாக அம்பிகை இலங்குகின்றாள்.

கட்வாங்கம் என்னும் ஆயுதம் உயிர்ப்பற்று வைத்திருப்பவர் களிடத்தும் பற்றின்மையை ஊட்டுகிறது.

**वदनैकसमन्विता — வதனைகஸமன்விதா** ௪௭௯

ஒரு முகத்தை உடையவள்.

மூர்த்தி ஒன்றன் பாங்குக்கு ஏற்ப முகம் இல்லாமலும், ஒரு முகத்துடனும், பல முகங்களுடனும் இருப்பது அம்பிகையின் மகிமையாகின்றது. டாகினி தேவி ஒற்றை முகம் உடையவளா யிருக்கின்ருள். சில ஜீவ ஜந்துக்கள் முகம் இல்லாதனவாக அமைந்துள்ளன. உதாரணமாக நண்டுக்கு உடலில் கண் இருக் கிறது, அதற்குத் தலை இல்லை.

**पायसान्नप्रिया — பாயஸான்னப்ரியா** ௪௮௦

பாயஸம் என்னும் போஜனத்தில் விருப்பம் உள்ள வள்.

பதினறு ஆழாக்கு பசும்பாலில் ஓர் ஆழாக்குத் தவிடோடு கூடிய பச்சரிசியைச் சேர்த்து நன்கு சமைத்து அதில் ஒன்றரை ஆழாக்குச் சர்க்கரையைக் கலந்து கொதிக்க வைத்தால் அது நல்ல பால் பாயசம் ஆகிறது. சாத்வீக உணவுகளில் சுவையும் சத்தும் நிறைந்த பால் பாயசம் தலைசிறந்ததாகிறது. ஸ்தாவர ஜங்கமங்கள் ஆகிய உயிர்வகைகள் அனைத்தும் சத்துள்ள உண வையே புசித்து உடல் திட்பம் பெறவேண்டும். அது ஆயுள், ஆரோக்கியம் ஆகிய இரண்டையும் நல்குகிறது. அன்னை பரா சக்தி பாயச அன்னப் ப்ரீதி உடையவளாக இருப்பதன் வாயி லாக இவ்வரிய கோட்பாட்டை மக்களுக்குப் புகட்டுகிருள்.

**त्वक्स्था — த்வக்ஸ்தா** ௪௮௧

த்வக் அல்லது மேல் தோலுக்கு அபிமானியாயிருப் பவள்.

சரீரத்தில் உள்ள ஒவ்வோர் அவயவத்துக்கும் அதிஷ்டான தேவதை அமைந்திருப்பதாக ஐதிகம் உள்ளது. ஸ்பரிச உணர்ச் சிக்கு ஏதுவாக உள்ள மேல்தோலின் உணர்ச்சிமயமாக வடிவெடுத் திருப்பவள் டாகினீ தேவி. ஸ்தாவரமாயிருக்கின்ற உயிர்வகை களுக்கு ஸ்பரிச உணர்ச்சி ஒன்றுதான் உருவெடுத்திருக்கிறது

தொட்டு உணர்தலின் வாயிலாக மரம், செடி, கொடி களாகிய ஸ்தாவரங்கள் நிறைவாழ்வு வாழ்கின்றன. அம்பிகையின் இந்த மகிமை சிந்தனைக்குரியது. நிலைத்துணையாகவே இருந்து வரும் பரியந்தம் உயிர் ஒன்றுக்கு தொட்டுணர்தலாகிய பொறி ஒன்றே போதுமானது. மானுடன் ஒருவனுக்கு ஏதேனும் ஓர் இந்திரியம் வாய்க்காது போய்விட்டால் அதைக் குறித்து அவன் வருந்த வேண்டியதில்லை. அவனிடம் விவேகம் மட்டும் இருக்கு மாகில் பொறியின் குறைபாட்டுக்கு இடையிலும் அவன் நிறை வாழ்வு வாழலாம்.

**पशुलोकभयङ्करी — பசுலோக பயங்கரீ** ४८२

பசு உலகுக்குப் பயத்தை உண்டு பண்ணுபவள்.

சைவம், சாக்தம் ஆகிய மதங்களின் கோட்பாட்டின்படி பசு என்னும் சொல் ஜீவாத்மனைக் குறிக்கிறது. வைஷ்ணவ மதப்படி கோ என்னும் பதம் ஜீவாத்மனைக் குறிக்கிறது. தன் சொரூப ஞானமில்லாத ஜீவாத்மனுக்குப் பசு என்னும் பெயர் வந்தமை கிறது. பசுவினிடம் உள்ள பிறத்தல், வளர்தல், சந்தான விருத்தி உண்டுபண்ணுதல், அஞ்சுதல், தேய்தல், சாதல் ஆகிய ஆறு கூறு களுள் அஞ்சுதல் என்பது வியப்புக்குரியதாம்.

ஜங்கமமாயுள்ள உயிர்களனைத்தும் சத்ரு அல்லது மரணத் துக்கு அஞ்சுகின்றன. தான் தோற்றுவித்துள்ள உயிர்களிடத்து மரண பயத்தை அம்பிகை ஏன் உண்டுபண்ணுகிறாள் என்னும் கேள்வி எழலாம். உயிர்வகைகளின் செயல்கள் எண்ணிக்கையில் அடங்கா. அவற்றுள் பெரும்பகுதி ஆபத்துக்கு ஏதுவான சூழ் நிலைகளினின்று தங்களை விடுவித்துக்கொள்ளுதல் பொருட்டே யாம். பயப்படுகின்ற பசுக்களனைத்தும் பய நிவர்த்திக்கு முயலு வதன் வாயிலாக முன்னேற்றமடைந்து வருகின்றன. எத்தனையோ முறைகளில் பயத்தை அவ்வுயிர்கள் வென்று வருவதால் பரிணாம முன்னேற்றம் உண்டாகிறது. இறுதியில் தாம் ஆத்ம சொரூபம் என்றும், உடல் சொரூபம் அல்லர் என்றும் ஜீவர்கள் அறிய வருகின்றார்கள். பயமனைத்தும் அக்ஞானத்தின் விளைவு என்று அறியப்படுகின்றது. எனவே, அச்சத்தின் பெரும்பகுதி தவிர்க்கப்படுகிறது.

உள்ளது ஒன்று; அதுவே பிரகிருதியாகவும், புருஷனுகவும் தன்னைத் தோற்றுவித்துக் கொள்கிறது. பிரகிருதியின் கூறுகள் எண்ணிலடங்காதவை. இதை அறிந்துகொள்வதே அத்வைத ஞானம். அந்த ஞானத்தைப் பெறும் பசு நிர்ப்பய வஸ்துவாகிறது. ஒரு பொருள் தன்னைக் குறித்தே பயப்படுதல் இல்லை. அது அபயநிலை அடையப்பெறுகிறது. ஜீவாத்மாக்களை இந்தப் பெருநிலையின்கண் கொண்டு சேர்த்தற்பொருட்டே அன்னை பராசக்தி கிருபை கூர்ந்து பசு லோகத்துக்குப் பயத்தை வழங்கி வருகின்றுள். பயத்தைக் குறித்துத் தியானிப்பது பயத்தை வெல்ல உற்ற உபாயம். பயத்தை வெல்லுதற்கேற்ப ஆத்ம சாதகன் சாதனத்தில் முன்னேறுகிருன். பயம் அபயமாகத் திருந்தியமைகிறது.

**अमृतादिमहाशक्ति संवृता** **४८३**

**அம்ருதாதி மஹாசக்திஸம்வ்ருதா** **483**

அம்ருத முதலிய மகா சக்திகளால் இனிது சூழப் பெற்றிருப்பவள்.

விசுத்தி சக்கரத்திலுள்ள பதினுறு இதழ்களில் அம்பிகையின் பதினுறு அம்சங்கள் அத்தனை மகாசக்திகளாக அமைந்துள்ளார்கள். அவர்களைத் தொகுத்துப் பாவனை பண்ணுகிறபொழுது சக்தி பாவனை திரண்டெழுகிறது. சாதகன் சக்தியைப் பாவனை பண்ணுகிறபொழுது தன் ஜீவ வியக்தி சக்தி சொரூபத்தில் இலயமாவதற்கு இவ்வமைப்பு நன்கு உதவுகிறது.

**डाकिनीश्वरी — டாகினீச்வரீ** **४८४**

டாகினி என்னும் பெயர்பெற்றுள்ள ஈசுவரியாக இலங்குகின்ருள்.

இதுவரையில் இயம்பப்பெற்றுள்ள அன்னை பராசக்தியின் மகிமைகள் அனைத்தும் ஒன்ருகத் திரண்டு திகழுமிடத்து அப் பெரிய மூர்த்தி டாகினீச்வரீ எனப் பெயர் பெறுகிருள். அவளுடைய ஆற்றல் அளப்பரியது என்பது இதன் கருத்தாகும்.

**अनाहताब्जनिलया — அனுஹதாப்ஜநிலயா** **४८५**

அனுஹத சக்கரத்தின்கண் எழுந்தருளியிருப்பவள்.

அனாஹத சக்கரம் ஆத்ம சாதகனுடைய ஹிருதய கமலத்தில் நான்காவது சக்கரமாக அமைந்துள்ளது. இது பன்னிரண்டு இதழ்களை உடையது. இந்நாமத்தில் மெய்யெழுத்துக்களுள் முதல் பன்னிரண்டு எழுத்துக்கள் இடம் பெறுகின்றன. ஓசைகளுள் எந்தெந்தப் பகுதிகள் எந்தெந்த ஆதாரங்களில் அமைந்துள்ளன என்பதை இந்நாமங்கள் விளக்குகின்றன.

**श्यामाभा — ச்யாமாபா** ௪௮௬

சியாமள வர்ணத்தோடு கூடியவள்.

காளிகாதேவி, கிருஷ்ணன் ஆகியவர்களின் நிறம் சியாமளம் அல்லது கருப்பு. கரு நிறத்தில் அழகு பொலிவது அகக்கண்ணுக்கு வெளிப்படை. நிறத்தில் சியாமளம். வயதில் பதினாறு. அழகில் உச்சநிலை. இந்த மகிமைகளெல்லாம் ஒன்றாகத் திரண்டிருப்பவள் என்பது இந்நாமத்தின் கருத்து.

**वदनद्वया — வதனத்வயா** ௪௮௭

இரண்டு முகங்களை உடையவள்.

அன்னை பராசத்திக்கு முகமற்ற நிலையிலிருந்து எண்ணிக்கையிலடங்காத, கணக்கற்ற முகங்களைப் படைத்திருக்கும் பாங்குகள் இருக்கின்றன. புலனாகின்ற வடிவங்களனைத்தும் அவளுடைய கூறுகளே என்பது கோட்பாடு. இரண்டு முகங்களை உடைத்திருப்பவள் ராகிணி என்னும் பெயர் பெறுகிறாள்.

**दंष्ट्रोज्ज्वला — தம்ஷ்ட்ரோஜ்ஜ்வலா** ௪௮௮

கோரைப் பற்களுடன் பொலிபவள்.

காட்டுப் பன்றி, யானை முதலியவைகளின் நீண்ட தந்தங்கள் தம்ஷ்ட்ரம் என்னும் பெயர் பெறுகின்றன. அத்தகைய கோரைப் பற்கள் அளப்பரிய ஆற்றலுக்குச் சின்னமாக ராகிணி தேவிக்கும் அமைந்துள்ளன என்பது ஐதிகம். நீண்டுள்ள தந்தங்களைக் கொண்டு யானைகளும் காட்டுப் பன்றிகளும் செயற்கரிய செயல்களைச் செய்கின்றன. எந்த உயிர் எத்தகைய சக்தியைப் பெற்று, அதை எந்த அவயவத்தைக் கொண்டு வெளிப்படுத்தினாலும் அந்தச் சக்தி அன்னை பராசக்தியிடமிருந்து வந்துள்ளது என்னும் பேருண்மையை இந்நாமம் வெளிப்படுத்துகிறது

**अक्षमालादिधरा — அக்ஷமாலாதிதரா** ४८९

அக்ஷமாலை முதலியவற்றைத் தாங்கியிருப்பவள்.

அன்னை பராசக்தி தாங்கியுள்ள மாலையில் மொழியின் முதல் எழுத்தாகிய அ முதல் கடைசி எழுத்தாகிய க்ஷ வரையில் உள்ள எல்லா எழுத்துக்களும் அடங்கப்பெற்றிருக்கின்றன. எனவே அதற்கு அக்ஷமாலை என்னும் பெயர் வந்துள்ளது. பாகினீச்வரீ நான்கு கரங்களை உடையவளாக இருக்கிறாள். அவைகளில் அக்ஷமாலை, சூலம், கபாலம், டமரு ஆகியவற்றைத் தாங்கியிருக்கிறாள். இவையாவும் அவளுக்கு ஆயுதங்களாக அமைந்துள்ளன. ஆயுதமில்லாவிட்டால் தன் ஆற்றலை யாரும் வெளிப்படுத்த முடியாது. ஆக்கத் துறையிலும் அழிவுத்துறையிலும் செயற்கரிய செயல்களைச் செய்வதற்கு ஏற்ற ஆயுதங்கள்தேவை. அவை யாவும் அம்பிகையின் பேராற்றலுக்கு விளக்கங்கள் ஆகின்றன. பிரபஞ்சத்தில் என்னென்ன காரியங்கள் நிகழ்கின்றனவோ அவை யாவுக்கும் சின்னங்களாகப் பலப்பல ஆயுதங்கள் அமைந்திருக்கின்றன.

**रुधिर संस्थिता — ருதிரஸம்ஸ்த்திதா** ४९०

ருதிரதாதுவின் அபிமான தேவதையாக அமைந்திருப்பவள்.

சரீரத்தில் உள்ள பல தாதுக்களுள் இரத்தம் மிக முக்கியமானது. உடலெங்கும் இரத்தம் நன்கு வியாபித்திருக்குமாகில் உடல் வாழ்க்கை இனிது நிகழ்கிறது. செயல்கள் நன்கு சாதிக்கப்படுகின்றன. இரத்தம் குறைவதற்கேற்ப ஆற்றல் தானாக மங்குகிறது. இரத்தம் முழுதும் சரீரத்தைவிட்டு வடிந்துபோனால் அது சவமாகிவிடும். உயிரை ஓம்புகிற இரத்தத் தாது மயமாக ராகிணீ தேவி அமைந்துள்ளாள் என்பது இந்நாமத்தின் கருத்து.

**कालरात्र्यादिशक्त्यौघवृता —** ४९१

காலராத்ர்யாதிசக்த்யௌகவ்ருதா 492

கால ராத்திரி முதலிய சக்தித் திரள்களால் சூழப்பட்டவள்.

அனாஹத சக்கரத்தின் பன்னிரண்டு இதழ்களில் அமைந்துள்ள பன்னிரண்டு மெய்யெழுத்துக்களில் இந்தச் சக்தித் திரள்

கள் அமைந்துள்ளன. இவைகளுள் முதல் ஆயுதமான காலராத்திரி மிக முக்கியமானது. மானுடன் ஒருவன் சரீரத்தை உகுப்பதற்கு முன் அமைந்துள்ள அவனுக்குரிய கடைசி ராத்திரி காலராத்திரி யாகிறது. காலராத்திரியை யாண்டும் ஞாபகத்தில் வைத்திருப்ப வனுக்கு வாழ்வும், சாவும் ஒன்றுபட்டுவிடுகின்றன. அதனால் மரணம் வெல்லப்படுகிறது. கணப்பொழுதும் வீண்போகாது சாதனத்தில் நன்கு பயன்படுத்தப்படுகிறது.

**स्निग्धौदनप्रिया — ஸ்னிக்தௌதனப்ரியா ४९२**

நெய் கலந்து சமைத்த அன்னத்தில் பிரியமுள்ளவள்.

தேகம் எடுத்துள்ள உயிர்வகைகள் ஆகாரமில்லாது வாழ்ந் திருக்கமுடியாது. தேகி ஒருவன் தனக்குப் புறம்பாயுள்ள அன் னத்தைப் புசித்து, செமித்து அதைத் தன் மயம் ஆக்குவானுகில் அந்த அன்னம் ஆகாரம் எனப்படுகிறது. பின்பு ஆகாரத்தில் புஷ்டியை வேண்டியவாறு வழங்குவது தலைத்தரமானது. மட்ட மான ஆகாரத்தை ஏற்று மனிதன் உடலமைப்பில் மேன்மையுற முடியாது.

பிறந்து வளர்ந்துவரும் சிசுக்களுக்குச் சின்னஞ் சிறு வயதி லேயே சத்துள்ள ஆகாரத்தைக் கொடாவிட்டால் அதன் ஆற்றல் க்ஷீணித்துப் போகிறது. வயது வந்த பிறகு சத்துள்ள ஆகா ரத்தை வேண்டியவாறு வழங்கினுலும் அந்த ஜீவனுடைய தரம் மேலோங்குவதில்லை. வாழ்நாளெல்லாம் சத்துள்ள நல்ல உண வையே ஏற்கின்ற மக்கள் ஆற்றல் மிகப் படைத்தவர்களாக வாழ் விற்குத் தகுதி உடையவர்களாகின்றனர்.

முயற்சியெடுத்துத் தலைத்தரமான உணவைத் தேடி அதை ஆயுட்காலம் எல்லாம் அளந்தெடுத்து நன்கு புசித்து வாழ்பவர் கள் வாழ்க்கைக்குத் தகுதி உடையவர்கள் ஆகிறார்கள். தவிடு நிறைந்த சத்துள்ள அரிசியையும் நெய்யையும் கலந்து பக்குவப் படுத்துகின்ற அன்னம் தலைத்தரமானது. அது அம்பிகைக் குப் பிரியமானது என்று பகர்வதன் வாயிலாக அம்பிகையின் சொரூபங்களாகிய மக்கள் தலைத்தரமான உணவையே தேடிப் புசித்து நல்வாழ்வு வாழவேண்டும் என்னும் கோட்பாடு அமைந் திருக்கிறது.

**महावीरेन्द्रवरदा — மஹாவீரேந்திரவரதா** ४९३

மகாவீரேந்திரர்களுக்கு வரங்களைக் கொடுப்பவள்.

ஆற்றல் மிகப்படைத்துள்ள ஒரு மானுடன் தன் ஆற்றலைத் தர்மத்தை நிலைநாட்டுதற்கும், அதர்மத்தை அகற்றுதற்கும் பயன் படுத்தினால் அவன் வீரனாகிறான். வாய்ப்பு அமையும் பொழு தெல்லாம் தர்மத்தை நிலைநாட்டுதற்கே அவன் தீவிரமாக முயற்சி செய்யவேண்டும். அதர்மத்தை ஒழித்துத் தள்ளுதற்கும் அதே விதத்தில் தீவிர முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும். உலகத் தவர் அவனுடைய அரிய செயலை அங்கீகரித்து அவனைப் பின் பற்றுகிறார்கள். அவ்வாறு அவனைத் தலைவனாக அவர்கள் ஏற் றுக்கொள்வார்களாகில் அவன் மகாவீரேந்திரன் ஆகிறான். வீரச் செயலில் ஈடுபட ஆரம்பிக்கும்பொழுதே அன்னையின் அனுக்கிர கம் மறைமுகமாக வருகிறது. அதுவே அம்பிகையின் வரம் என ஈண்டு இயம்பப்பெற்றுள்ளது. தன்னைச் சாரும் பக்தர்களுக்கு அவள் வரத்தை வாரி வழங்குகின்றாள்.

**राकिण्यम्बास्वरूपिणी — ராகிண்யம்பா ஸ்வரூபிணீ** ४९४

ராகிணீ என்று அழைக்கப்பெறுகின்ற யோகிணீ வடிவினளாய் இருப்பவள்.

மேலே உள்ள ஒன்பது நாமங்களில் விளக்கப்பட்டுள்ள மகிமைகள் யாவும் ராகிணீ தேவிக்கு உரியவைகளாகின்றன. அத்தனைவித விபூதிகளை உடையவளாக அன்னை பராசக்தி விளங்குகின்றாள் என்று பாவித்து அவளைக்குறித்துத் தியானம் பண்ணவேண்டும். அம்பிகையின் மகிமைகளை ஒன்றன்பின் ஒன்றாகச் சிந்தனைக்குக் கொண்டு வரும்போது அது நல்ல தியான மாக வடிவெடுக்கிறது.

**मणिपूराब्जनिलया — மணிபூராப்ஜ நிலயா** ४९५

மணிபூரம் என்னும் யோகச் சக்கரத்தைத் தன் வாசஸ்தலமாக உடைத்திருப்பவள்.

மணிபூரம் என்னும் யோகச் சக்கரம் ஆத்மசாதகனுடைய நாபியில் இடம்பெறுகிறது. அதன் பத்து இதழ்களிலும் பத்து அக்ஷரங்கள் அமைந்துள்ளன. இந்த எழுத்துக்கள் யாவும்

அம்பிகையின் சொருபங்கள் எனப் பகரப்படுகின்றன. ஓசை வடிவினளாக உள்ள அம்பிகை நாதபிரம்மம் என்னும் பெயர் பெற்றுள்ளாள். நாதத்தின் பலப்பல கூறுகளாக எழுத்துக்கள் அமைந்திருக்கின்றன. அவ்வெழுத்துக்களை ஒலி வடிவத்தில் பொருள்படுத்தவேண்டும். ஈண்டு இயம்பியுள்ள பத்துவித ஒலி களாகவும் அம்பிகை இச் சக்கரத்தின்கண் ஒலித்துக்கொண்டிருக் கின்றாள்.

**वदनत्रयसंयुता — வதனத்ரய ஸம்யுதா** ४९६

மூன்று முகங்களை உடையவளாக இருப்பவள்.

ரூபத்தையெல்லாம் கடந்துள்ள அம்பிகை அனந்தங்கோடி ரூபங்களையும் எடுத்துள்ளாள். அவள் படைத்துள்ள வடிவங்கள் ஒரு தலை முதல் கணக்கற்ற தலைகளை உடையவைகளாகக் கருதப் படுகின்றன. அத்தலைகள் தத்துவங்களின் சின்னங்களாம். அவை யாவற்றையும் முறையாக ஓர்ந்து அறிவதற்குச் சாதக னுக்கு இயலாது போய்விடலாம். அதைக்குறித்து அவன் கவலைப்பட வேண்டியதில்லை. வடிவங்கள் அனைத்தும், ஓசைகள் அனைத்தும் அம்பிகையின் அம்சங்களே. இங்ஙனம் கருதுவது மிக எளிது. அம்பிகைக்குப் புறம்பாக ஒன்றுமில்லை. அவளே இத்தனையுமாக இலங்குகின்றாள் என்று உணர்வது நல்ல ஆத்ம சாதனமாகிறது.

**वज्रादिकायुधोपेता — வஜ்ராதிகாயுதோபேதா** ४९७

வஜ்ராயுதத்தையும் அதனோடு கூடிய ஏனைய ஆயுதங்களையும் உடையவள்.

ராகிணீ தேவியின் நான்கு கரங்களிலும் வஜ்ரம், சக்தி, தண்டம், அபயமுத்திரை ஆகிய நான்கு ஆயுதங்கள் இடம் பெற்றுள்ளன. ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா 'ஆயுதங்களுள் நான் வஜ்ராயுதமாக இருக்கிறேன்' என்று இயம்புகிறார். இதில் பெரிய கருத்து அடங்கியிருக்கிறது. அசுரர்கள் தேவர்களை யாண்டும் வென்று வந்தார்கள். அவர்களை எங்ஙனம் தோற்கடிப் பது என்ற பிரச்னை தேவேந்திரனுக்கு உண்டாயிற்று. அவன் அதைப் பிரம்மதேவனிடம் பணிவுடன் சமர்ப்பித்தான். வஜ்ரா யுதம் ஒன்றை நிர்மாணிக்கும் முறை அவனிடம் பகரப்பட்டது.

பிரம்மச்சரிய விரதத்திலும் தவத்திலும் உச்சநிலையிலிருந்த ததீசி மஹரிஷி பிரம்ம நிஷ்டையிலிருந்துகொண்டு தம் மேனியை வஜ்ராயுதம் அமைத்தற்பொருட்டு தேவேந்திரனுக்குக் கொடுத்தார். அந்த மேனியிலிருந்து அமைக்கப்பெற்ற வஜ்ராயுதத்தின் துணைகொண்டு தேவேந்திரன் அசுரர்களை அறவே நிர்மூலமாக்கினான். நைஷ்டிக பிரம்மச்சாரியாகவும் ஆழ்ந்து தவத்தில் ஈடுபடுபவனாகவும் இருப்பவனே உலக வாழ்விலுள்ள கேடுகளைக் களைய வல்லவன் ஆகின்றான். இந்த வல்லமையும் அன்னை பராசக்தியிடமிருந்தே உருவெடுத்து வருகின்றது.

பயப்படும் தன்மை ஜீவர்கள் எல்லாரிடமும் இருக்கிறது. சத்துருவைப்பற்றிய பயம், நோயைப்பற்றிய பயம், மரணத்தைப் பற்றிய பயம் போன்ற பயத்தின் பல்வேறு வடிவங்களை ஒழிப்பது வாழ்க்கையின் குறிக்கோள். கடவுள் தத்துவத்தை அறிந்து கொள்ளுதற்கேற்பப் பயம் ஒழிகிறது. அறியாமையை முன்னிட்டுப் பயம் வடிவெடுக்கின்றது. எங்ஙனம் சூரியனிடத்து இருள் இல்லையோ அங்ஙனம் ஞானப்பிரகாசத்தில் பயத்துக்கு இடமில்லை. எதற்கும் அஞ்சாத அபயம் என்னும் மனோதத்துவமே பிறகு வஜ்ராயுதத்துக்கு நிகராகிறது. அபயகரம் படைத்திருப்பதாகப் பரவஸ்துவின் ஒவ்வொரு அம்சமும் அமைந்துள்ளது. தெய்வத்தன்மையில் அச்சத்துக்கு இடமில்லை. அபய முத்திரையின் வாயிலாக அம்பிகை இப்பெரிய கோட்பாட்டை விளக்கிக் கொண்டிருக்கிறாள். உடல் திட்பமும், மன உறுதியும் வாய்க்கப் பெற்றவர்களுக்குச் சக்தி அனைத்தும் உண்டு. வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் என்னும் கோட்பாட்டை அம்பிகை தாங்கியுள்ள தண்டம் விளக்குகிறது.

**डामर्यादिभिरावृता — டாமர்யாதிபிராவ்ருதா** ௪௯௮

டாமரி முதலான மூர்த்திகளால் சூழப்பெற்றவள்.

அம்பிகையின் அம்சங்கள் டாமரி முதலிய பத்து மூர்த்திகளாக இலங்குகின்றன. மணிபூர யோகச் சக்கரத்தில் அடங்கியுள்ள பத்து எழுத்துக்களுக்கேற்ப இந்தப் பத்து மூர்த்திகள் இலங்குகிறார்கள். மனதின் உன்னதத்திற்கேற்ப இவர்களின் மகிமைகளைப்பற்றி ஆழ்ந்து எண்ணுவது நல்ல சக்தி உபாசனையாகின்றது.

**रक्तवर्णा — ரக்தவர்ணா** ४९९

சிவப்பு நிறமுள்ளவள்.

முக்குணங்களால் ஆகியது பிரகிருதி. அமைதிக்கும் அறிவுக்கும் அறிகுறியாய் இருக்கும் வெண்ணிறம் வாய்ந்தது சத்துவ குணம். ரஜோகுணம் ஆற்றலை விளக்கும் சிவப்பு நிறமானது. உறக்க நிலையில் இருக்கும் கருப்பு நிறம் தமோ குணத்துக்குப் பொருத்தமானது. வெண்ணிறம் சிதறடைகின்ற பொழுது உண்டாகும் ஏழு நிறங்களுக்கும் ஆதாரமாயிருப்பது சிவப்பு. எனவே அம்பிகை சிவப்பு நிறம் பூண்டிருப்பது தத்துவத்திற்கு ஒத்திருக்கிறது. பொருள் நல்ல நிலையில் இருக்கிறது என்பதை அதற்கேற்ற நிறம் செழுமையுற்றிருப்பதினின்று அறியலாம். செழிப்புற்றிருக்கும் பயிர்வகைகள் பசுமை நிறமாய் இருக்கின்றன. திண்ணிய உடல் படைத்திருக்கும் பிராணிகளின் உடலெங்கும் இரத்தம் வியாபித்திருக்கிறது. இரத்தம் நிறைந்திருப்பது உயிர்த் தத்துவத்துக்கு முதல் அறிகுறி.

உடலைப் பீடித்துள்ள நோய் இன்னதென்று இரத்தத்தின் கூறினின்று வெளியாகிறது. ஆரோக்கியமானதும் திண்ணியமானதுமான உடலைப் பெறுதற்கு ஆரோக்கியமான இரத்தம் ஆதாரமாகிறது. மனதில் காமம், குரோதம் போன்ற எதிர்மறை உணர்ச்சிகள் எழுமாகில் அதற்கேற்றவாறு இரத்தம் தன் தூய்மையை இழந்துவிடுகிறது. தெய்விக எண்ணங்கள் உள்ளத்தில் சதா உதித்துக்கொண்டிருக்குமாகில் இரத்தம் புனிதம் அடைகின்றது. மேலான எண்ணம் ஜபத்தின் விளைவாக ஏற்படுகிறது. அதற்கேற்ப இரத்தம் தூய்மையடைவதால் நோய் அகலுகிறது.

செக்கச் செவேலென்னும் பிரகாசத்தோடு கூடியவளாக அம்பிகையைக் குறித்துத் தியானம் பண்ணும் ஆத்மசாதகனிடத்துச் சக்தி ஓங்குகிறது. வழிபாட்டில் ஈடுபடுபவர்கள் அதற்கு அறிகுறியாக நெற்றியில் முதிர்ந்த சிவப்புநிறம் வாய்ந்த குங்குமத்தை அணிகின்றனர். அம்பிகைக்குரிய அந்தச் சிவப்பு நிறத்தைக் கருத்தில் வாங்குவது மனதைப் பண்படுத்துகின்றது.

**मांसनिष्ठा — மாம்ஸ நிஷ்டா** ५००

மாமிசதாதுவின் அதிஷ்டான தேவதையாயிருப்பவள்.

உயிர்வகைகள் படைத்திருக்கும் உடல் வெறும் எலும்பும் தோலுமாக இருப்பது பொருந்தாது. உடலைக் கையால் பற்றிப் பிடித்தால் அது சதை நிறைந்ததாக இருக்கவேண்டும். நல்ல நிலையில் இல்லாத மாமிசம் துர்நாற்றமெடுக்கிறது. இரத்த விருத்தியினின்று வடிவெடுக்கும் சதை உடலெங்கும் பொருத்த மாக அமைந்திருத்தல் வேண்டும். சதை நிறைந்த பொருத்தமான பாங்கில் உடலைப் பேணுவது சக்தி உபாசனை ஆகிறது. மெலிந்த மேனியுடன் குற்றுயிர் உற்று இருப்பவன் 'நான் கிடக்கிறேன் சிவனே என்று' என்கிறான். அது சக்தி உபாசனை செய்யாதிருப் பதற்கு அறிகுறியாகிறது. திண்ணிய உடல் படைத்திருப்பது நல்ல சக்தி உபாசனையாகும். சக்தி உபாசனை செய்யாது யாரும் சிவத்தை அடைய முடியாது.

**गुडान्नप्रीतमानसा** — குடான்ன ப்ரீத மானஸா ५०१

சர்க்கரைப் பொங்கலில் ப்ரீதியடையும் மனதை உடையவள்.

அம்பிகை அனந்தம் கோடி மக்கள் சொரூபமாக இலங்கு கின்றாள். மக்கள் அடையும் திருப்தி அம்பிகைக்கு உரியதாகிறது. எத்தகைய உணவில் மக்கள் பிரீதியடைகிறார்களோ, எத்தகைய உணவு வகைகள் மக்களிடத்து புஷ்டியை உண்டுபண்ணுகின் றனவோ அத்தகைய உணவு வகைகள் அம்பிகைக்குப் பிரியமான வைகள் என்னும் ஐதிகம் வந்துள்ளது.

சுவை நிறைந்த சர்க்கரைப் பொங்கல் புஷ்டிக்கு ஏதுவான உணவாகவும் அமைந்துள்ளது. அவ்வுணவைச் சுவையின் பொருட்டு உண்ணாமல் அம்பிகைக்குப் படைத்து அதைப் பிரசாத மாக ஏற்றுப் பழகவேண்டும். நல்லுணவை மிகைபட உண்டு உடலைக் கெடுப்பது போகிகளுடைய போக்கு. அதை அம்பிகை யின் பிரசாதமாக அளவுடன் ஏற்று ஆத்ம சாதனத்துக்குத் தங்க ளைத் தகுதியுடையவர்களாகச் செய்துகொள்வது பக்தர்களுடைய போக்கு. உணவு ஏற்கும் பாங்கே ஆத்ம சாதகர்களுக்குச் சாதன மாகிறது.

**समस्तभक्तसुखदा** — ஸமஸ்த பக்த ஸுகதா ५०२

பக்தர்கள் எல்லார்க்கும் சுகத்தைக் கொடுப்பவள்.

உயிர்களனைத்துக்கும் சுகத்தை நாடுவது பொதுவான இயல்பு. அந்த நாட்டத்தில் முறையாகச் செயல்படாததால் உலகப்பற்றுடையவர்கள் துன்பத்துக்காளாகின்றனர். பக்தர்களுடைய பாங்கு அத்தகையதன்று. உண்பது, ஓய்வெடுத்துக் கொள்வது போன்ற நித்தியக் கர்மங்களையும் அவர்கள் நெறி வழுவாது நிகழ்த்துகின்றனர். அவர்களின் வாழ்வே அம்பிகையின் ஆராதனையாகிறது.

எது சுகமாகத் தொடங்கித் துக்கமாக முடிவுறுகிறதோ அது போகம். எது சுகமாகத் தொடங்கிச் சுகமாகவே நிலைத்திருக்கிறதோ அது யோகம். அம்பிகையின் பக்தர்களாகிய தீவிரமான யோகிகள் வாழ்ந்துவரும் பாரமார்த்திகப் பெருவாழ்வில் யாண்டும் சுகத்தையே காண்கின்றனர். பக்தியின் மேல் நிலையை எட்டும் பொழுது அவர்களை உலகத்துன்பங்கள் பாதிக்கமாட்டா. அவர்கள் 'இன்பமே எந்நாளும் துன்பமில்லை' என்னும் உயர் நிலை எய்துகின்றனர்.

**लाकिन्यम्बास्वरूपिणी** — லாகிண்யம்பா ஸ்வரூபிணீ ५०३

லாகிணீ என்னும் அம்பிகையின் வடிவத்தில் இருப்பவள்.

மேலே உள்ள ஒன்பது நாமங்களில் அடங்கியிருக்கும் விளக்கங்கள் யாவும் லாகிணீ தேவியைக் குறிப்பவைகளாகின்றன.

**स्वाधिष्ठानाम्बुजगता** — ஸ்வாதிஷ்டானம்புஜகதா ५०४

மூலாதாரத்துக்குச் சற்று மேலே ஸ்வாதிஷ்டானம் என்னும் ஆதாரம் உள்ளது. ஆறு இதழ்களை உடையதாக இது இருக்கிறது. व (ப) என்னும் அக்ஷரம் முதல் ल (ல) என்னும் அக்ஷரம் வரை உள்ள எழுத்துக்கள் இந்த ஆதாரத்துக்கு உரியன. இந்த ஆதாரத்தில் வீற்றிருக்கும் அம்பிகை காகினீ என்னும் பெயர் பெறுகிறாள்.

**चतुर्वक्त्रमनोहरा** — சதுர்வக்த்ரமனோஹரா ५०५

நான்கு முகங்களுடன் அழகாக இருப்பவள்.

அன்னை பராசக்தியின் நான்கு முகங்களும் மிகக் கவர்ச்சிகரமாக அமைந்துள்ளன. நான்கு என்னும் எண்ணிக்கையில் தத்துவங்கள் பல புதைந்து கிடக்கின்றன.

கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என்று காலம் நான்கு கூறுகளை உடையதாய் இருக்கிறது. இவை நான்கும் ஒன்றிக்கும்பொழுது அழகு பொலிகிறது. தேசம் கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு என்னும் நான்கு திக்குகளாகப் பரவுகிறது. இடத்தில் அழகு பொலிவது வெளிப்படை. தர்மம், அர்த்தம், காமம், மோட்சம் என்று முயற்சி நான்கு அம்சங்கள் வாய்க்கப் பெற்றதாக உள்ளது எனவே அதன்கண் அழகு திகழ்கிறது. அறிவு ரிக், யஜுர், சாமம், அதர்வம் ஆகிய நான்கு வேதங்களாக விரிவடைகிறது. ஜீவர்கள் பிராம்மணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் என்று நான்கு இனங்களாகக் காட்சி கொடுக்கின்றனர். இவ்வாறு சிருஷ்டி முழுவதுமே நான்கு வர்ணங்களாக அமைந்திருக்கின்றது. மனிதன் அடைகின்ற பண்பாடு பிரம்மச்சரியம், கிருஹஸ்தம், வானப்பிரஸ்தம், சன்னியாசம் ஆகிய நான்கு ஆச்ரமங்களாக விளங்குகின்றது. இத்தனை விதங்களில் அம்பிகை தன்னை அழகுபடுத்திக்கொள்கின்றாள்.

**शूलाद्यायुधसंपन्ना** — சூலாத்யாயுத ஸம்பன்னா ௫0௬

சூலம் முதலான ஆயுதங்களைப் படைத்திருப்பவள்.

நான்கு முகங்களுடன் கூடிய அம்பிகை நான்கு கரங்களை மட்டுமே படைத்திருக்கிறாள். தத்துவ விளக்கத்துக்கு எத்தகைய வடிவம் தேவையோ அது தெய்வத்துக்கு வந்தமைவது ஐதிகம். திரிசூலம், பாசம், கபாலம், அங்குசம் ஆகிய நான்கு ஆயுதங்களை அவள் ஏந்தியுள்ளாள். லலிதையின் வடிவத்தில் அம்பிகை பாசம், அங்குசம் ஆகிய இரண்டு ஆயுதங்களைப் பெற்றிருக்கிறாள்.

வாழ்க்கைக்கு அனுகூலமாய் இருப்பவைகளிடத்துப் பாசம் அல்லது பற்றுதல் வந்தமைகிறது. வாழ்க்கைக்கு எது கேடு விளைவிக்கிறதோ அதனிடத்து வெறுப்பு வளர்கிறது. ராகஸ்வரூப பாசாட்யா என்னும் பெயர் பெற்றுள்ள அன்னை பராசக்தி க்ரோதாகார அங்குசோஜ்ஜ்வலா எனவும் பெயர்பெற்றிருக்கிறாள்.

காகினீ வடிவத்தில் அவள் தாங்குயுள்ள திரிசூலம் ஞானத்தின் சின்னமாகிறது. சிவபெருமான் எங்கெல்லாம் திரிசூலத்தைக் கையாளுகின்ருரோ ஆங்கு நல்லறிவும் பரஞானமும் உருவெடுக்கின்றன. ஞானத்தை நல்கும் இப்பாங்கு அம்பிகையிடத்தும் அமைந்துள்ளது.

மற்ரெரு கரத்தில் காகினீதேவி கபாலத்தை ஏந்தியுள்ளாள். ஜீவர்களின் தொகை சிருஷ்டிகர்த்தாவாகிய பிரம்மாவாகிருர். ஜீவவியக்தியைத் தியாகம் பண்ணுவது வாழ்க்கையின் குறிக்கோள். வாழ்ந்துகொண்டிருப்பதற்கிடையில் தன்னைச் செத்துப்போனவனுகப் பாவிப்பதால் ஜீவனுடைய உலகப்பற்றுகள் அனைத்தும் அழிந்துபட்டுப்போகின்றன. 'பற்றுக பற்றற்ருன் பற்றினை அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு' என்னும் கோட்பாட்டிற்கிணங்க அவனிடம் தெய்வப் பற்று ஒன்றே எஞ்சியுள்ளது. கபாலம் அதற்குச் சின்னமாய் அமைந்திருக்கிறது. உலக வாழ்வு அநித்தியமானது என்பதை அது நினைவூட்டுகிறது. அருவருப்புக்குரியதாகக் கருதப்படும் மண்டையோடு ஆராதனைக்குரிய பொருளாகப் பயன்படுத்தப்படுகிறது. உலகில் அருவருப்புக்குரியது ஒன்றுமில்லை. இத்தகைய நான்கு ஆயுதங்களை உடைய அம்பிகை அவற்றின் வாயிலாக வாழ்க்கைத் தத்துவங்களை விளக்குகின்ருள்.

**पीतवर्णा — பீதவர்ணு** ௫௦௭

மஞ்சள் நிறம் உடையவள்.

முப்பட்டைக் கண்ணுடியின் வழியாகப் பாய்ந்து செல்லும் நிறமற்ற ஒளி ஏழு நிறங்கள் உடையதாகச் சிதறடைகின்றது. நிர்க்குணப் பிரம்மம் நிறங்களையெல்லாம் கடந்த அதீத வஸ்துவாகிருர். அதே பரவஸ்து தன்னை மாயா சக்தியாகத் தோற்றுவித்துக்கொள்கின்ற பொழுது ஏழு நிறங்களுடன் மிளிர்கிருர். பொன்னுர் மேனியள் என்று அம்பிகை அழைக்கப் பெறுகிருள். அணிந்துகொள்ளும் வஸ்திரத்தின் நிறத்திற்கேற்ப மனதில் மாறுபாடு உண்டாகிறது. சில நிறங்கள் மனதை உயர் நிலைக்கு எடுத்துச் செல்கின்றன. வேறு சில நிறங்கள் மனதை உலகப் பற்றில் ஆழ்த்துகின்றன. மஞ்சள் நிறமும் காவி நிறமும் வைராக்

கியம் என்னும் உலகப்பற்றின்மையை வளர்க்கின் . மஞ்சள் நிறம் மனிதனிடம் தெய்விக உணர்வைத் தானுக உண்டாகும்படி தூண்டுகிறது. நிறத்தைப்பற்றிய கலைஞானத்தை ஆராய்ந்து கொண்டு போகப் போக அம்பிகையின் சொரூபமான பிரகிருதி யின் பாங்குகள் பல வெளியாகின்றன. மஞ்சள் நிறம் படைத் துள்ள அம்பிகையிடம் அத்தகைய மகிமை அமைந்திருப்பது இயல்பு.

**अतिगर्विता — அதிகர்விதா** ௫0௯

கர்வம் மிகப் படைத்தவள்.

கர்வம் அல்லது செருக்கு போற்றுதற்குரிய பெருநிலையன்று. செருக்குற்று இருப்பது சிறுர் செயல். கர்வம் அல்லது செருக்கு அவிவேகத்தினின்று வடிவெடுக்கின்றது. அச்சிறுமை அம்பிகை யின்பால் சுமத்தப்படுவதில் தத்துவம் ஒன்று வெளியாகின்றது.

ஏழை ஒருவன் தன் ஏழ்மையை முன்னிட்டுக் கர்வம் படைப் பதில்லை; சிறுமையுறுகிருன். பணம் படைத்திருப்பவனே தன் செல்வத்தைக் குறித்துச் செருக்குறுகிருன். மேன்மையுறுதற்கு முயற்சி இன்றியமையாதது. பொருள்படைத்திருப்பது முயற்சி யின் விளைவு. முயற்சி மிக எடுத்துக்கொண்டு பொருள்துறையில் மேன்மையுறும் மானுடன் ஒருவன் அதைக்குறித்துச் செருக்கடை கிருன். செருக்கு தன்னளவில் மட்டமானது என்றுலும் பெற் றுள்ள பேறு ஒன்றின் விளைவாக அது வந்துள்ளது. எனவே மறைமுகமாக அது தெய்வப் பெற்றியின் அறிகுறியாகிறது.

தெய்வசம்பத்தாகிய அழகு ஸ்தாவர, ஜங்கமங்களாகிய அனைத்திடத்தும் பொலிகிறது. ஆபாசமான வடிவைக்குறித்து யாரும் கர்வம் கொள்வதில்லை. லாவண்யத்தைக் குறித்துக் கர் வம் வருகிறது என்றுல் அது அழகு என்னும் தெய்வசம்பத்தைப் பெற்றதன் விளைவாகும்.

அன்னை பராசக்தியின் சொருபங்களாகிய உயிர்வகைகள் தாம் படைத்துள்ள தெய்வசம்பத்தைக் குறித்துக் கர்வம் பூண் டிருக்கின்றன. அது உடன்பாட்டுச் செயலேயொழிய எதிர் மறைச் செயல் அன்று. 'நான் ஒன்றுக்கும் உதவாதவன்' என் னும் எதிர்மறை எண்ணம் மனிதனைக் கீழ்மையில் ஆழ்த்துகிறது.

'என்னிடத்தில் இன்னினன பெருமைகள் வாய்ததுள்ளன' என்னும் செருக்கு அவனை மேலும் உயர்நிலைக்குத் தூண்டுகிறது. எனவே அத்தகைய செருக்கு ஆமோதிக்கப்படுகிறது. மக்கள் படைத்துள்ள செருக்கு அம்பிகையின் விபூதி எனப் பாராட்டப் படுகிறது. செருக்குறுதலின் வாயிலாகச் செருக்கையும் தாண்டி மேல்நிலைக்குப் போவது அவசியமாகிறது. அம்பிகை தானே கர்வம் படைத்தவளாயிருந்து கர்வத்திற்கும் மேலே போகவேண்டும் என்னும் பாடத்தைப் புகட்டிவருகிறாள்.

मेदोनिष्ठा — மேதோநிஷ்டா ௫0௯

மேதஸ் அல்லது கொழுப்பு என்னும் தாதுவுக்கு அதிஷ்டான தெய்வமாயிருப்பவள்.

உடல் வளர்ச்சிக்குக் கொழுப்பு இன்றியமையாதது. கொழுப்புக் குறைவுபட்டுள்ள உடல் மெலிந்து பெரும் செயலுக்குத் தகுதி யற்றதாகிறது. சான்று ஒன்றன்மூலம் இதை விளக்கலாம். ஓர் எந்திரம் நன்கு செயல்படுவதற்கு அது இயங்குகின்ற பகுதிகளில் எண்ணெய் இடுவது (lubrication) அவசியம். எண்ணெய்ப்பசை உள்ள இடத்தில் விகுத்தம் (friction) இல்லை. விகுத்தமற்ற எந்திரம் ஒன்று செயல்படுகிறது. கொழுப்பில்லாத மானுடமேனி உலர்ந்து போனதற்கு நிகராகிறது. சக்தியற்றுத் தடுமாற்றத்துடன் செயல்புரியும் ஒருவனை 'அவன் தலைகாய்ந்து திரிகிறான்' என்று குற்றம் சாட்டுகிறோம். அத்தகைய சிறுநிலையை யாரும் எய்தலாகாது. உடலின் தகைமை அது படைத்துள்ள கொழுப்பி னின்று வருகிறது. ஆனால் கொழுப்பு அதிகரித்துவிடுமானால் ஒருவன் வரம்பு கடந்த செயல்களில் ஈடுபடுகிறான். கர்வம் என்னும் முன்னீட்டம் கொழுப்பு என்னும் மிகைபட்ட உடல் வளர்ச்சியின் விளைவாம்.

தன்னளவில் கேடு இல்லாத கொழுப்பு தெய்வ சம்பத்து என்றே பாராட்டப்படுகிறது. நல்ல ஆத்ம சாதகர்கள் தாங்கள் சாதனங்களைக் குறித்து வரம்புக்குட்பட்ட தற்பெருமை பூணுவது ஆரம்பதசையில் அவசியமாகிறது. அதையும் தாண்டி மேலே போவது முடிந்த நிலையாகிறது. அதற்கு இன்றியமையாத உடல் கூறு ஆகிய போதுமான கொழுப்பைப் பெற்றிருப்பதும்

அவசியமாகிறது. கீழ்மைகளெல்லாம் உண்மையில் கீழ்மைகள் ஆகமாட்டா. அவைகளை முறையாகப் பயன்படுத்தினால் மனிதன் மேன்மையுறுவதற்கு அவ்வை இன்றியமையாதவையாகின்றன. ஆதலால்தான் அன்னை பராசக்தி கொழுப்பு என்னும் தாதுவுக்கு அதிஷ்டானதெய்வமாக இருக்கிறாள் என்றுபாராட்டப்படுகிறாள்.

**मधुप्रीता — மதுப்ரீதா** ௫௧௦

மதுவின்பால் விருப்பமுள்ளவள்.

மது என்னும் சொல் தேனைக் குறிக்கிறது. வெறியூட்டும் கள் வகைகளையும் அது குறிக்கிறது. உறுதியோடுகூடிய நல் வாழ்க்கையை அமைக்க விரும்புகிறவர்களுக்கு இந் நாமத்தின் வாயிலாக ஓர் அரிய பாடம் புகட்டப்படுகின்றது. தந்திர சாதனத்தில் அம்பிகை வழிபாட்டில் 'ம' என்னும் எழுத்தில் துவங்குகிற ஐந்து வஸ்துக்கள் இடம் பெற்றிருக்கின்றன. அப்பொருள்களில் மது என்பதும் ஒன்று: உடலுக்குப் புஷ்டி தரும் நல் உணவுகளுள் தேன் முதன்மை பெறுகிறது. ஓர் உணவினின்று மலம் வடிவெடுப்பது எவ்வளவுக் கெவ்வளவு குறைகின்றதோ அவ்வளவுக்கவ்வளவு அது நல்லுணவு ஆகின்றது. தேனை அருந்தும் தேனீ மலம் கழிப்பதில்லை என்பதே இதற்குச் சான்றாகிறது.

அளவுடன் கள் குடிக்கின்றவர்களுக்கு உணவு நன்கு செமிக்கின்றது. அது உடலுக்கு உறுதி தருகின்றது. தந்திர சாதனத்தில் ஈடுபடுகிறவர்கள் மருந்துக்கு நிகராக அளவெடுத்து மதுபானம் பண்ணுகின்றனர். அதன் விளைவாக அவர்களுக்கு ஆழ்ந்த தியானம் கை கூடுகிறது. விருத்தாப்பியத்தை எட்டியுள்ள சரீரங்களுக்கு மது வர்க்கம் சிறிது அவசியமாகிறது. எளிதில் தளர்வடையும் மேனி மதுவின் வாயிலாக ஊக்கத்தை வருவித்துக்கொள்வதால் அது அம்பிகைக்குப் பிரியமானது எனப் பாராட்டப்படுகிறது.

உணவு வகைகளை ஆராய்ந்து அவற்றிலுள்ள தோஷங்களை தவிர்க்கவும் குணங்களைப் பெருக்கவும் செய்வது உசிதம். அப்படிச் செய்வதால் வாழ்வைத் திண்ணியதாக்கலாம். இக்கோட்பாடு அம்பிகை படைத்துள்ள மதுப்பிரீதா என்னும் நாமத்தில் அடங்கியிருக்கிறது.

**बन्धिन्यादि समन्विता — பந்தின்யாதி ஸமன்விதா** ५११

பந்தினீ முதலிய தேவிமார்களோடு கூடியிருப்பவள்.

தீமையைத் தகர்ப்பதில் தளர்வுறாத பந்தினீ முதலிய ஆறு தேவிமார்கள் போர் புரிவதில் திறமை வாய்ந்தவர்கள். யாண்டும் இத்தேவிமார்களால் சூழப்பெற்ற அம்பிகை பக்தர்களின் நலத்தை முன்னிட்டுத் தீமையை யாண்டும் எதிர்த்துப் போராடுகிறாள். அதற்குச் சின்னமாக இந்த ஆறு சக்தி தேவதைகள் அவள் சான்னித்தியத்தில் இடம் பெறுகின்றனர்.

**दध्यन्नासक्तहृदया — தத்யன்னாஸக்த ஹ்ருதயா** ५१२

தயிர்கலந்த அன்னத்தில் அதிக விருப்பமுடையவள்.

பால் அன்னத்தில் ஒரு சிறப்பு இருப்பதைப் போன்று தயிர் அன்னத்தில் இன்னொருவிதச் சிறப்பு உண்டு. தயிர் அன்னம் எளிதில் ஜீரணமாகக்கூடியது. அதன் புளிப்புச் சுவை வாயில் ஆங்காங்கு பரவியுள்ள மதுரத்தை அகற்றுகிறது. அதனால் தித்திப்பு பற்களின் உறுதியைப் பாதிப்பது தவிர்க்கப்பட்டுப் பற்களின் வேர் உறுதி பெறுகிறது. ஆலும் வேலும் போன்று தயிரும் பற்களைப் பாதுகாக்கும் ஔஷதத் தன்மை படைத்துள்ளது. ஆத்மசாதகன் படைத்திருக்கும் உடல் அன்னையின் ஆலயம். வித விதமான உணவு வகைகளை ஊட்டுவதன் வாயிலாக உடலுறுதி இனிது காப்பாற்றப்படுகிறது. உடலுக்குச் சத்து நிறைந்த உணவைப் படைப்பது சக்தி உபாசனையாகிறது. அத்தகைய உணவு வகைகளைத் தனக்குப் பிரீதியானது என்று கருதாமல் பக்தன் அவை அன்னை பராசக்திக்குப் பிரியமானது என்று கருதுகிறான். இதுவே ஆத்மசாதகனது இயல்பாம்.

**काकिनीरूपधारिणी — காகினீரூபதாரிணீ** ५१३

காகினீ தேவியின் உருவத்தைப் படைத்திருப்பவள்.

காகினீ தேவியின் அமைப்பு மேலே உள்ள ஒன்பது நாமங்களில் அடங்கியுள்ளது. ஸ்வாதிஷ்டான சக்கரத்தில் வீற்றிருக்கும் அவள் அறுசுவை உணவு வகைகளை ரசிக்கிறாள். ஷட்ரசம் எனப்படும் இந்தச் சுவைகளை மானுடன் ஒருவன் போக்தாவாயிருந்து அனுபவிப்பது மட்டமானது. அவைகளில் கருத்தைச்

செலுத்துவதற்கிடையில் அவற்றை அம்பிகையின் மகிமைகள் எனக் கருதுவது நல்ல ஆத்ம சாதனமாகிறது.

காகினி தேவிக்கு நான்கு வேதங்களும் வக்த்ரங்கள் என்று சொல்லப்படும் நான்கு முகங்களாக அமைந்துள்ளன. நான்கு வேதங்களில் இயற்கைத் தத்துவங்கள் யாவும் இடம்பெற்றிருக்கின்றன. காலம், தேசம், நிமித்தம், வருணம், ஆச்ரமம் ஆகிய ஒவ்வொன்றும் நான்கு அம்சங்களாக விரிவடைகின்றன. இவை யாவும் அம்பிகையின் மகிமைகளாம்.

**मूलाधार अम्बुजाआरूढा —மூலாதார அம்பூஜாஆரூடா ५१४**

*மூலாதாரத்தின்கண் வீற்றிருப்பவள்.*

ஆத்மசாதகன் மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரம் ஆகிய ஆதாரங்களில் கருத்தை நாட்டித் தியானிக்கலாகாது. அப்படிச் செய்தால் பிரபஞ்ச எண்ணங்களே அவனிடத்தில் உருவெடுக்கும்; பாரமார்த்திகப் பேருணர்வு உருவெடுக்கமாட்டாது. எனவே அவன் தன் நித்திய வழிபாட்டில் தன் இஷ்ட தேவதையை அனுஹதம் என்னும் இருதய கமலத்தில் வைத்துத் தியானம் பண்ணவேண்டும். வீடு கட்டுதற்கு அஸ்திவாரம் தேவை. ஆனால் அது காட்சியில் இல்லை. அதைக்காண யாரும் முயலுவதில்லை. முதல் மூன்று ஆதாரங்களின் பாங்கு அத்தகையது.

**पञ्चवक्त्रा — பஞ்சவக்த்ரா ५१५**

*ஐந்து முகங்களை உடையவள்.*

அம்பிகைக்கு அமைந்துள்ள ஐந்து முகங்கள் ஐந்து இந்திரியங்களுக்குச் சின்னங்களாக உள்ளன. உடல் அமைப்பில் மேல் நிலைக்கு வந்துள்ள பறவைகள், விலங்குகள், மக்கள் ஆகிய உயிர் வகைகளுக்குக் கண், காது, வாய், மூக்கு, மேனி ஆகிய ஐந்து இந்திரியங்களும் உச்சநிலை எய்தியுள்ளன. பிரபஞ்சத்திலுள்ள உயிர்களின் பரிணமத்திற்கேற்ப அம்பிகையின் சொரூபங்களும் பலப்பல வடிவெடுக்கின்றன. ஐந்து முகங்களை உடைய இந்த வடிவத்தை வாச்சியார்த்தமாக எடுத்துக்கொள்ளலாகாது; லட்சியார்த்தமாக எடுத்துக்கொள்ளவேண்டும். ஐந்து

இந்திரியங்களைத் தெய்விகம் வாய்ந்தவைகளாகப் பயன்படுத்துவது மனிதனுக்குச் சாத்தியம். அப்படிச் செய்வது ஆத்ம சாதனமாகிறது.

**अस्थिसंस्थिता — அஸ்திஸம்ஸ்திதா** ૫૧૬

எலும்புத் தாதுவுக்கு அதிஷ்டான தெய்வமாக இருப்பவள்.

பறவை ஒன்றின் முட்டையினுள் கடின பதார்த்தம் ஏதும் இல்லை. ஆயினும் அது குஞ்சாகப் பொரிக்கப்படுகின்ற பொழுது எலும்புத்தாது உருவெடுத்துவிடுகின்றது. மானுட பிந்து சிசுவாகப் பிறக்கின்றபொழுதும் எலும்புத் தாதுக்கள் உருவாகின்றன. உடலமைப்பில் உணர்ச்சிக்கு ஏதுவான சித்சக்தியும் உணர்ச்சியற்ற நிலைக்கு ஏதுவான ஜடசக்தியும் அமைந்துள்ளன. தோலிலும், தசையிலும் உணர்ச்சி இடம் பெறுகிறது. ஜடசக்தி சொரூபமான எலும்பின்கண் உணர்ச்சியில்லை. எனினும் உடல் வளரும்போது எலும்பும் வளர்ந்துவருகிறது. உடைந்துபோன எலும்பு சிகிச்சையின் வாயிலாக ஒன்றுசேர்ந்துகொள்கின்றது. எனவே சித்சக்திக்கும் ஜடசக்திக்கும் இடையிலுள்ள வேற்றுமை பெயரளவிலேயாம்.

பிரபஞ்ச சுகபோகத்துக்குப் பயன்படுத்தப்படும் உடலின் திட்பம் தடைப்படுகிறது. தவத்துக்குப் பயன்படும் மேனி முழுவதும் தெய்விக ஆற்றலைப் பெறுகின்றது. மனிதன் விரும்பினால் தன் மேனியை வஜ்ராயுதத்திற்கு நிகராகத் திருத்தியமைக்கலாம் என்னும் கோட்பாடு இதினின்று வெளியாகிறது. எலும்பைப் பொருளற்ற ஜடப்பொருள் என்று புறக்கணிக்காமல் அதைத் தவத்தின் வாயிலாக உறுதி படைத்ததாகச் செய்வது நல்ல ஆத்ம சாதனமாகும். எலும்புத்தாது சொரூபமாக அன்னை பராசக்தி இலங்குகின்றாள் என்று கருதவேண்டும்.

**अङ्कुशादि-प्रहरणा — அங்குசாதி ப்ரஹரணா** ૫૧૭

அங்குசம் முதலிய ஆயுதங்களை உடையவள்.

யானையை ஓட்டுதற்கும் நிறுத்துதற்கும் பயன்படும் அங்குசம் என்னும் ஆயுதம் இந்திரிய நிக்ரஹத்துக்குப் புறச்சின்னமாய்,

அமைந்துள்ளது. அத்யாத்மிக அமைப்பில் மனிதன் தன்னடக்கத்தை அங்குசமாகப் படைத்திருத்தல் வேண்டும். தாமரைப் புஷ்பத்தை அம்பிகை இரண்டாவது ஆயுதமாக வைத்திருக்கிறாள். புஷ்பங்களுள் தலைசிறந்ததாகிய தாமரை தெய்வ சொரூபங்களுடன் நன்கு இணைக்கப்பட்டுள்ளது. வாடிப்போன புஷ்பம் வழிபாட்டுக்கு உதவாதது போன்று வாடிப்போன மனம் வாழ்வுக்கு உதவாது. அன்றலர்ந்த தாமரைப் பூப்போன்று மனிதன் தன் மனதை யாண்டும் புதுமையில் நிலைபெற்றதாக வைத்திருக்கவேண்டும். விருத்தாப்பிய தசையை அடைந்தாலும் மனதை யாண்டும் புத்தம்புதியதாக வைத்திருக்கலாம் என்னும் கோட்பாட்டைப் பத்மாயுதத்தின் வாயிலாக அம்பிகை விளக்கிக் கொண்டிருக்கிறாள்.

அம்பிகை படைத்திருக்கும் மூன்றாவது ஆயுதம் புத்தகம். தன் அறிவைப் படிப்படியாக வளர்த்துக்கொண்டு வரும் ஆத்ம சாதகன் பரவஸ்துவின்கண் எடுத்துச் செல்லப்படுகிறான். ஞானத்தைப் பேணுதலில் மனிதன் எக்காரணத்தை முன்னிட்டும் பின்னணிக்குப் போய்விடலாகாது என்னும் கோட்பாட்டை அறிவு வளர்ச்சிக்குச் சின்னமாய் அமைந்துள்ள புத்தகம் விளக்குகின்றது.

அம்பிகையின் நான்காவது ஆயுதம் சின் முத்திரையாம். கட்டை விரலும் ஆட்காட்டி விரலும் ஒன்றுகூடி இருக்கின்றன. நடுவிரல், சுண்டுவிரல், மோதிரவிரல் ஆகியவை பிரித்து வைக்கப் பட்டிருக்கின்றன. இத்தகைய விரல் அமைப்பு சின் முத்திரை என்னும் பெயர் பெறுகிறது. முத்திரைகளின் வாயிலாகப் பெரிய கருத்துக்கள் விளக்கப்படுகின்றன. தக்ஷிணாமூர்த்தியாக எழுந்தருளியுள்ள சிவனார் சின் முத்திரை தாங்கியுள்ளார்.

கட்டைவிரல் பரமாத்ம தத்துவத்துக்கும், ஆட்காட்டி விரல் ஜீவாத்ம தத்துவத்துக்கும் சின்னங்களாகின்றன. ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்று மலங்களையும் மற்ற மூன்று விரல்கள் குறிக்கின்றன. அந்த மும்மலங்களினின்று தன்னைப் பிரித்தெடுத்துக் கொண்டால்தான் ஓர் ஆத்ம சாதகன் பரமாத்மாவுடன் யோகம் பண்ணத் தகுதியுடையவனாகின்றான். தியானம் பழகும் ஆத்மசாதகன் சின் முத்திரையில் அடங்கியுள்ள

கோட்பாட்டை வாழ்வில் நிலைநாட்டவேண்டும். சின் முத்திரை என்னும் ஆயுதம் இந்தச் சிறந்த கோட்பாட்டை விளக்குகின்றது.

**वरदादि निषेविता — வரதாதி நிஷேவிதா** ௫௧௮

வரதா முதலான சக்திகளால் சேவிக்கப்படுபவள்.

அம்பிகைக்குக் குற்றேவல் புரிகின்ற பாங்கில் நான்கு சக்தி தேவதைகள் அவளைச் சூழ்ந்திருக்கிறார்கள். அவர்களுள் விரும்பியவைகளையெல்லாம் விரும்பியவாறு வகுத்தளிக்க வல்லவள் வரதா என்னும் சக்தி. இயற்கைத் தாயிடமிருந்து நமக்குத் தேவையானவைகளையெல்லாம் நாம் பெற்றுக்கொள்ள முடியும். வரத்தைத் தர அவள் யாண்டும் ஆயத்தமாய் இருக்கிறாள்; அதற்கு நம்மைப் பக்குவப்படுத்திக்கொள்வது நம் கடமை. வரத்தை யாசகமாக அம்பிகையிடமிருந்து கேட்பதற்கு மாறாக வரத்துக்கு நம்மைப் பக்குவப்படுத்திக்கொள்ளக் கற்றுக்கொள்வோமாக.

செல்வத்துக்கு நாயகியான ஸ்ரீ தேவி இரண்டாவது சக்தி. அவளுடைய அனுக்கிரகத்துக்கு இலக்காகின்றவர்களுக்குப் பொருளுக்குப் பஞ்சமில்லை. முறையான உழைப்பின் வாயிலாக நாம் தேவையான திரவியங்களையெல்லாம் பெறலாம்.

ஷண்டா என்னும் மூன்றாவது சக்தியானவள் பெண்பாலுக்குரிய அம்சங்களைப் பெற்றிருக்கவில்லை. தோற்றத்தளவில் அவள் சக்தியின் அம்சமாக இருக்கிறாள். பெண் வடிவு எடுத்திருப்பவர் எல்லாரும் பெண் தன்மையைப் பெறுவதில்லை. இயற்கையின் அமைப்பில் இத்தகைய குறைநிலையும் சாத்தியம் என்பதை ஷண்டா என்னும் சக்தி நிரூபிக்கின்றாள்.

நான்காவது சக்தியாக அமைந்திருப்பவள் சரஸ்வதி. கலைகள் யாவற்றுக்கும் அவள் அதிஷ்டான தேவதை. வாழ்ந்திருக்கும் காலமெல்லாம் மக்கள் கலைகள் பலவற்றைப் பயிலக் கடமைப்பட்டிருக்கிறார்கள். கல்வி கற்க மறுப்பவன் பெருவாழ்வு வாழ மறுப்பவன் ஆகிறான். சரஸ்வதி தேவி அம்பிகையின் சான்னித்தியத்துக்கு விபூதியாய் இருப்பதன் மூலம் உபாசகன் ஒருவன் அம்பிகையிடமிருந்து யாண்டும் எக்கல்வியை வேண்டுமானாலும் பெறலாம் என்று நிரூபித்துவருகிறாள்.

**मुद्गौदनासक्तचित्ता — முத்கௌதனஸக்தசித்தா** ௫௧௯

முத்க என்னும் சிறுபயறு, அரிசி ஆகியவற்றைக் கலந்து சமைக்கிற அன்னத்துக்குக் கிசுடி என்று பெயர். அதனுடன் வெல்லம், தேங்காய்ப்பூ, முந்திரிப் பருப்பு, மிளகு முதலியன சேர்த்துக்கொள்வதுண்டு. இந்தச் சாத்வீக ஆகாரம் அம்பிகைக்குப் பிரியமானது என்று இயம்புவது ஐதிகம். ஆத்மசாதகர்களுக்கு இது முற்றிலும் பொருத்தமானது. அம்பிகைக்குப் பிரியமானது என்று ஸ்வீத்துக்கொள்ளுமிடத்து மக்கள் அதில் கருத்தைச் செலுத்தி முறையாகப் பக்குவப்படுத்துவார்கள். அப்பொழுது அது அம்பிகைக்குப் படைப்பதற்கு ஏற்றதாகிறது. அம்பிகையின் பிரசாதமாக ஏற்கின்றவர்களுக்கு அது அந்தக்கரண சுத்தியை உண்டுபண்ணுகிறது. அந்தக்கரண சுத்தி ஆத்ம சாதனத்துக்கு முற்றிலும் இன்றியமையாதது.

**साकिन्यम्बा स्वरूपिणी — ஸாகின்யம்பா ஸ்வரூபிணீ** ௫௨௦

ஸாகினீ தேவி வடிவத்திலிருப்பவள்.

மேலே உள்ள ஆறு நாமங்களில் ஸாகினீ தேவியின் மகிமைகள் விளக்கப்பட்டிருக்கின்றன.

**आज्ञाचक्राब्जनिलया — ஆக்ஞாசக்ராப்ஜநிலயா** ௫௨௧

ஆக்ஞை சக்கரமாகிய ஆருவது ஆதாரத்தில் வீற்றிருப்பவள்.

இரண்டு இதழ்களை உடைய ஆக்ஞை சக்கரத்துக்குத் தனி மகிமை ஒன்று உண்டு. யோகி ஒருவன் முறையாக ஆத்மசாதனங்கள் புரிகின்றபொழுது அவனுடைய சரீரத்தில் மூலாதாரத்தினின்று உருவெடுக்கும் குண்டலினிசக்தி ஸஷும்னா நாடியின் வழியாகச் சுவாதிஷ்டானம், மணிபூரம், அனாஹதம், விசுத்தி ஆகிய ஆதாரங்களைக் கடந்து ஆக்ஞை சக்கரத்தை எட்டுகிறது. அப்பொழுது அம்பிகையின் அருளால் அந்த யோகிக்கு அலாதியான சித்து வாய்க்கிறது. அவன் ஆக்ஞாபிக்கும் எதுவும் இனிது நிகழ்வதாகிறது. யோகிக்கு வந்துள்ள அந்தச் சக்தியை அவன் ஈசுவரனுக்கு அர்ப்பணம் பண்ணவேண்டும். அதை அவன் சுய நலத்துக்குப் பயன்படுத்துவானாகில் அவன் அச்சக்தியை இழந்து வறிஞன் ஆகிறான்.

**शुक्लवर्णा — சுக்லவர்ணு** ४२८

வெள்ளை நிறம்படைத்தவள்.

ஏதேனும் அழுக்குப் படிந்திருந்தால் வெள்ளை நிறம் அதை நன்கு விளக்கிக்காட்டும் சிறப்புப் பெற்றுள்ளது. தூய வெண்மை நிறம் தூய்மைக்குச் சின்னமாகிறது. ஏழு நிறங்களும் ஒன்றிக் கும்பொழுது வெண்மை நிறம் உண்டாகிறது. வெண்மை நிறம் ஒன்றே நிறங்களையெல்லாம் கடந்துள்ள வர்ணாதீதத்துக்குப்போக வல்லது. வெண்ணிறம் படைத்துள்ள உறைபனிக் கட்டியை வெந்நீரில் போட்டுக் கலக்கினால் அது நிறமற்ற நிலையை எய்து கிறது. அந்தக் கரணம் சுத்தியடைந்து சத்துவகுணத்தில் நிலை பெற்றிருக்கும்பொழுது அது வெண்மை நிறம் அடைகிறது. சிவ னும் சரஸ்வதி தேவியும் வெண்ணிறம் படைத்துள்ளனர். சிவ மும் சக்தியும் அபேத நிலையை எய்துகின்றனர். எனவே அன்னை பராசக்தி சுக்லவர்ணு என்று விளக்கப் பெறுகிறாள்.

**षडानना — ஷடானனு** ४२३

ஆறு முகங்களை உடையவள்.

ஆறு முகங்கள் ஆறு ஆதாரங்களுக்குச் சின்னங்களாய் உள்ளன. ஏழு ஞான பூமிகள் ஒன்றிக்கும்பொழுது அது சுத்த சிவசொருபமாகின்றது. மற்று ஆறு ஞான பூமிகள் ஒன்றிக்கு மிடத்து அது பண்பட்ட ஜீவாத்மனைக் குறிக்கிறது. ஒவ்வொரு ஞானபூமியிலும் ஒவ்வொரு வித ஜீவாத்மாக்கள் இடம் பெறுகின் றன. ஸ்தாவரங்களுக்கு ஸ்பரிச உணர்ச்சி என்னும் ஒரே ஒரு ஞானபூமி உள்ளது. மரம், செடி, கொடிகள் ஸ்பரிசம் என்னும் ஓர் அறிவைக்கொண்டு நிறை வாழ்வு வாழ்கின்றன; செயற்கரிய செயல்களைச் சாதிக்கின்றன. ஸ்பரிசித்தல், நுகர்தல், உண்ணு தல் ஆகிய மூன்று முகங்களைக் கொண்டு எறும்புகள் தலைத்தர மான சமுதாய வாழ்க்கை வாழ்ந்து வருகின்றன. முகம் என்பது தத்துவத்துக்கு உருவகமாம். தேன் ஈக்கள் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்து ஞானேந்திரியங்களையும் பெற்றுள் ளதால் அற்புதமான சமுதாயவாழ்க்கை வாழ்கின்றன. பறவைகளும் விலங்குகளும் ஐந்து புலன்களை வைத்துக்கொண்டு நல்வாழ்வு வாழ்கின்றன. பகுத்தறிவு என்னும் ஆறுவது

அறிவையும் படைத்துள்ள மனிதன் பரஞானம் பெறத் தகுதியுடையவனுகிறன். ஆறறிவு அல்லது ஆறு முகங்களை எப்படிப் பயன்படுத்திப் பண்பட்ட நிலைகளை அடையவேண்டும் என்பதற்கு ஷண்முகக் கடவுள் சான்ருக இலங்குகின்ருன். முற்றிலும் பண்பட்ட ஜீவாத்மாவுக்கு முன் மாதிரியாய் இருப்பவன் முருகக் கடவுள். அவன் தாயாகிய அம்பிகையும் அதே விதத்தில் ஆறு முகங்கள் படைத்தவளாய் இருக்கிருள்.

**मज्जासंस्था — மஜ்ஜா ஸம்ஸ்தா** ௫௨௪

மஜ்ஜை என்னும் தாதுவின் அபிமான தேவதையாய் இருப்பவள்.

மானுட உடலில் அமைந்திருக்கும் எலும்புகள் குழாய் மயமாய் இருக்கின்றன. அவற்றுள் மஜ்ஜை என்னும் ஊன் நிறைந்திருக்கிறது. மாமிசத்தில் ஊடுருவியுள்ள சாரம் மஜ்ஜை எனப்படுகிறது. மஜ்ஜை என்னும் தாதுவிடத்துச் சக்தி ஓங்குதற்கு ஏற்ப உடல் திட்பம் உண்டாகிறது. பிரம்மச்சரியம் காத்துச் சரீரத்தைத் திண்ணிய நிலையில் வைத்திருப்பவர்களிடத்து மஜ்ஜை பன்மடங்கு உறுதி வாய்ந்தது ஆகிறது. தூய வாழ்வு வாழ்கின்றவர்களிடத்து அமைந்துள்ள மஜ்ஜைக்கு வலிவு அதிகம். பாரமார்த்திகப் பெருவாழ்வு வாழ்பவர்களுக்கு அமைந்துள்ள மஜ்ஜை ஆத்மசக்திக்கு இருப்பிடமாகிறது. அங்ஙனம் பெருவாழ்வு வாழ்கின்றவர்களின் மஜ்ஜையில் தெய்விகம் திகழ்கிறது. அத்தகைய மஜ்ஜை தாதுவுக்கு அன்னை பராசக்தி அதிஷ்டான தெய்வம் ஆகிருள்.

**हंसवती मुख्यशक्ति समन्विता — ஹம்ஸவதீ முக்யசக்தி ஸமன்விதா** ௫௨௫ 525

ஹம்ஸவதீ முதலிய சக்திகளோடு கூடியவள்.

அம்பிகைக்குக் குற்றேவல் புரிகின்ற பாங்கில் பல படித்தரங்களில் பல சக்தி தேவதைகள் வாய்த்துள்ளார்கள். ஹம்ஸவதீ, க்ஷமாவதீ என்னும் இரண்டு சக்திகளும் அம்பிகையின் மகத்துவத்தை நன்கு விளக்கிக் காட்டவல்லவர்களாய் இருக்கிருர்கள்.

**हरिद्रान्नैक रसिका — ஹரித்ரான்னைக ரஸிகா** ५२६

மஞ்சள் நிறமான அன்னத்தில் பிரியம் உள்ளவள்.

மஞ்சள் பொடி அல்லது குங்குமப் பூவால் அன்னத்துக்கு மஞ்சள் நிறம் வருகிறது. மஞ்சள் பொடி உடலில் உள்ள நோய்களை அகற்றுகிறது. குங்குமப்பூ நறுமணம் கமழச்செய்கிறது. இந்தப் பாங்கில் பக்குவப்படுத்தப்பட்டுள்ள அன்னம் உடல் உறுதியைத் தருகிறது. அம்பிகைக்குப் படைக்கப் பெற்றுள்ள மஞ்சள் நிறமுள்ள அன்னத்தை மக்கள் பக்தி விசுவாசத்தோடு அருந்துகின்றனர். மஞ்சள் நிறம் தீட்டிய அன்னம் அம்பிகைக்கு விருப்பமானது என்னும் கொள்கை மக்களுக்கு மறைமுகமாக நலன் தருகிறது. அவ்வுணவை உண்பதால் அவர்கள் உடல் திட்பமும் உள்ளத் தெளிவும் பெறுகின்றனர். இக்காரணத்தை முன்னிட்டே அம்பிகைக்கு மஞ்சள் நிறமான அன்னம் உகந்தது என்று இயம்பப்பட்டுள்ளது.

**हाकिनीरूप धारिणी—ஹாகினீரூப தாரிணீ** ५२७

தூய்மைக்குச் சின்னமான வெண்ணிறமும் நான்கு கரங்களும் உடைய ஹாகினீ தேவியைப் புருவத்தின் மத்தியில் ஆக்ஞைச் சக்கரத்தின்கண் வைத்துத் தியானிக்கவேண்டும்.

ஒரு கரத்தில் அவள் ஏந்தியிருக்கும் ஞான முத்திரை அறிவுக்கு அவள் பிறப்பிடம் என்பதைக் காட்டுகிறது. ஓசையனைத்தும் அவளிடத்திருந்து உதித்து வருகின்றன என்பதற்கு அறிகுறியாக அவள் மற்றொரு கரத்தில் டமரு அல்லது உடுக்கையைத் தாங்கியிருக்கிறாள். அவளுடைய அடுத்த கரத்தில் அக்ஷமாலை உள்ளது. அக்ஷம் என்பது கண்; ருத்ராக்ஷம் என்பது சிவனார் கண்களினின்று கருணையின் விளைவாகத் ததும்பிய கண்ணீர் ஆகிறது. அம்பிகை தானும் கருணைக் கடல் என்பதை அறிவுறுத்துதற்குக் கையில் அக்ஷமாலையை வைத்திருக்கிறாள். தன் நான்காவது கரத்தில் ஹாகினீ தேவி கபாலத்தை ஏந்தியிருக்கிறாள். உயிர் வகைகளுக்குப் பிறப்பிடமாகவும் ஒடுங்குமிடமாகவும் அவளே இருக்கிறாள் என்பதைக் கபாலம் விளக்கிக் கொண்டிருக்கிறது. ஜனன மரணத்தை ஒரே பாங்கில் மனிதன் கருதிப்பழகவேண்டும்; அப்படி ஏற்றுக்கொள்ளும் மனப் பண்பு

டையவனே சிறந்த அம்பிகை உபாசகன் ஆகின்ருன். இங்ஙனம் ஹாகினீ தேவி ஆருவது ஆதாரத்தில் இனிது வீற்றிருக்கிருள்.

**सहस्रदल पद्मस्था — ஸஹஸ்ரதல பத்மஸ்தா** ௫௨௮

ஸஹஸ்ராரக் கமலத்தின் கண் வீற்றிருப்பவள்.

பிரம்மரந்திரம் எனப்படும் ஸஹஸ்ராரம் ஏழாவது ஞான பூமியாகிறது. மண்ணுலகில் மூலாதாரமாயிருப்பது கன்னியா குமரி. ஆங்கு மூலப்பிரகிருதி சிவனுரை அடைதல் பொருட்டுத் தவம் புரிந்துகொண்டிருக்கிருள். ஆத்ம சாதகன் ஒருவன் பிரம் மச்சரிய விரதம் பூணுதற்கு ஏற்ப மூலப்பிரகிருதி குண்டலினி சக்தி என உயிர் தரிக்கிருள். குண்டலினி சக்தி முற்றிலும் உருவெடுத்தான பிறகு சுஷும்னா நாடி வாயில் திறக்கிறது.

குண்டலினி சக்தி ஒவ்வோர் ஆதாரத்தின் வழியாகவும் மேல் நோக்கிச் சென்று சக்தி தேவியின் திருவருளால் ஆக்ஞை சக்க ரத்தை எட்டுகின்றபொழுது சாதகன் முற்றிலும் பரிபக்குவம் அடையப்பெற்றவனுகிருன். அதே பாங்கில் ஆரம்பதசையில் பார்வதி தேவியாய் இருந்தவள் ஆக்ஞை சக்கரத்தில் நிறைஞான சொருபமாகிய ஹாகினீ தேவியாகிருள். பர்வதம் ஜடசக்திக்குச் சின்னமாய் இருக்கின்றது. பிரபஞ்சத்தில் ஜடசக்தியாய் இருப்பது தவத்தின் விளைவாக சித்சக்தியாகப் பரிணமிக்கிறது. மங்கிய வெளிச்சம் படிப்படியாகத் திரண்ட வெளிச்சமாகத் தெளி வடைவதற்கு நிகராக சித்சக்தியே ஒவ்வொரு ஞான பூமியிலும் ஞானத் தெளிவைப் பலப்படுத்துகிறது.

ஆறுமுகக் கடவுள் மயமாயிருக்கும் பண்பட்ட ஜீவாத்மனைத் தன்னேடு தாங்கிக்கொண்டு ஹாகினீதேவி ஏழாவது ஞானபூமி யாகிய ஸஹஸ்ராரத்தை எட்டும்பொழுது யாகினீ தேவியாகப் பரிணமிக்கிருள். பின்பு ஜீவாத்ம தத்துவமான புதல்வனும் மாயா தத்துவமான சக்தியும் பரமாத்ம தத்துவமாகிய சதாசிவத் தில் ஏகவஸ்துவாக ஒன்றித்து அத்வைத சித்தி அடைகின்றனர். சுஷுப்தி அவஸ்தையில் முப்பொருள்கள் மறைந்து பிரக்ஞை என்னும் ஒருபொருளாகி விடுவதுபோன்று சமாதி நிலையில் அகண்ட சச்சிதானந்தம் என்னும் எல்லைகாணுத ஒரே பரவெளி ஆகிவிடுகிறது. இப்பரவெளியே சிதம்பர ரகசியம் என்னும் பெயர் பெறுகிறது. ஏழாவது ஞான பூமியில் உள்ள ஆயிரம்

இதழ்கள் உண்மையில் எண்ணிக்கையிலடங்காத அகண்டாகாரத்தின் அடையாளமாகின்றன. அந்த அறிவுப் பெருவெளியில் சக்தி சிவத்தில் ஒடுங்குகிருள். ஆதலால்தான் நிலவுலகில் ஏழாவது ஞான பூமியாகிய கயிலாயகிரியின்கண் சக்தியின் சான்னித்யத்துக்கு இட மில்லை. ஜீவாத்மாவுடைய ஜீவவியக்திக்கும் ஆங்கு இடமில்லை. சுத்த சிவம் மட்டுமே ஆங்கு இலங்குகிறது. இதுவே ஸஹஸ்ரதள பத்மத்தைப்பற்றிய உண்மையாம்.

## सर्ववर्णोप शोभिता — ஸர்வ வர்ணோப சோபிதா ௫௨௯

எல்லாவிதமான நிறங்களாலும் அலங்கரிக்கப்படுகிறவள்.

மூல நிறங்கள் ஏழு. நிறங்கள் பலப்பல படைத்திருப்பது இயற்கைத் தாயின் மகிமையாம். காஷ்மீரத்திலுள்ள புஷ்பங்களின் நிறங்களைக் கணக்கிட யாருக்கும் இயலாது. ஒரு நிறம் மற்றொரு நிறத்துக்கு இணையாக அமைந்து அவற்றின் அழகை அதிகப்படுத்திக்கொண்டிருப்பது ஓர் அற்புதமான அதிசயமாம். அவைகளை ஆராய்ந்து பார்க்கப் பார்க்க அம்பிகையின் ஆற்றல் எத்தகையது என்பது புலனுகும். சில கனி வகைகள் கனிந்து வர வர அவை வெளிப்படுத்தும் நிறங்களும் எண்ணிக்கையிலடங்கா. இனி, வண்ணத்திப் பூச்சிகளின் வர்ணங்களுக்கு ஒரு முடிவில்லை. மீன் வகைகளிலும் இதே அற்புதம் நிறைந்திருக்கிறது. முதலாவது அவதாரமான மச்சாவதாரம் பரமன் அழகன் என்பதை நிரூபிக்கிறது.

எழுத்து அல்லது ஓசை என்றும் வர்ணம் என்னும் சொல் பொருள்படுகிறது. க்ஷ என்னும் அக்ஷரத்தில் தொடங்கி அ என்னும் அக்ஷரத்தில் முடியும் எழுத்துக்களின் எண்ணிக்கை நூறு. ஆயிரம் இதழ்களை உடைய தாமரையில் வீற்றிருக்கும் பராசக்தியானவள் இத்தனைவித ஓசை வடிவினள் என்பது வெளியாகிறது. இந்த ஓசைகளின் இணைப்பால் எண்ணிறந்த பதங்களும் பதத்துக்கேற்ற கருத்துக்களும் கணக்கில் அடங்காதவைகளாக விரிவடைகின்றன. எண்ணிறந்த ஸ்தூலவஸ்துக்களும் ஓசையினின்றே வடிவெடுக்கின்றன. 'பதார்த்தம்' என்பதற்கு 'சொல்லும் அதன் விளக்கமும்' என்று பொருள். ஆக ஒளி மயமாகவும்

ஒலி மயமாகவும் அன்னை பராசக்தி தன் விபூதிகளையெல்லாம் வாரிக் கொட்டிக் கொண்டிருக்கிறாள் என்பது கோட்பாடு.

**सर्व आयुधधरा —ஸர்வ ஆயுததரா** ௫௩௦

எல்லாவிதமான ஆயுதங்களையும் உடைத்திருப்பவள்.

ஆயுதம் இல்லாதவன் அரைமனிதன் என்பது கோட்பாடு. ஏதேனும் ஓர் ஆயுதத்தின் வாயிலாகவே ஒரு மனிதன் தன் முழுத் திறமையையும் வெளிப்படுத்துகிறான். நிராயுதபாணியாய் இருப்பவனின் திறமை முழுவதும் வெளியாவதில்லை. நடப்பன, பறப்பன, நீந்துவன ஆகிய உயிர்களனைத்தும் தத்தம் வாழ்க்கைக்கு ஏற்றவாறு தற்காப்புக்கும் ஆக்கிரமிப்புக்கும் ஏற்ற ஆயுதங்களைப் படைத்திருக்கின்றன. சிங்கத்துக்கு அதன் நகங்களும், பற்களும் ஆக்கிரமிப்புக்கு ஏதுவான ஆயுதங்களாகின்றன. வேகமாகப் பாய்ந்தோடும் கால் திறன் மான் ஒன்றின் தற்பாதுகாப்புக்கு உதவுகிறது. இங்ஙனம் உயிர்களனைத்தும் ஆயுதங்கள் படைத்திருப்பது அம்பிகையின் மகிமையாகிறது.

ஆயுதம் ஏதும் இல்லாதவனாகப் பிறப்பெடுக்கும் மனிதன் தன் அறிவைப் பயன்படுத்தி எண்ணிக்கையில் அடங்காத பலப் பல ஆயுதங்களை அமைத்துக்கொள்கிறான். இரண வைத்தியம் பண்ணுவதற்கான நுண்ணிய கருவிகளை மனிதன் கையாள்கிறான். ஓர் ஊரையே அழித்து விடக்கூடிய பீரங்கியையும் அதே மனிதன் கையாள்கிறான். அந்தந்தக் காரியத்துக்கேற்றவாறு மனிதன் கையாளும் கருவிகளுக்குக் கணக்கில்லை. இத்தனைவிதமான உயிர்வகைகள் இத்தனைவிதமான ஆயுதங்களை இயற்கையாகவும் செயற்கையாகவும் கையாண்டுவருவது அம்பிகையின் மகிமையாம். பிரபஞ்ச வாழ்வு என்னும் கிருத்தியத்தை உயிர்கள் கணக்கற்ற கருவிகளைக் கையாண்டு நிறைவேற்றி வருகின்றன. அம்பிகையே இத்தனைவிதமான ஆயுதங்களைக்கொண்டு தன் பிரபஞ்ச லீலையை நிறைவேற்றி வருகிறாள். ஆதலால் அவளை ஸர்வாயுததரா என்று போற்றுவது முற்றிலும் பொருத்தமானது.

**शुक्लसंस्थिता — சுக்ல ஸம்ஸ்திதா** ௫௩௧

சுக்லம் என்னும் மானுட பீஜம் அல்லது உயிர்த் தாதுவின் அபிமான தேவதையாயிருப்பவள்.

ஆண்பாலரிடம் உயிர்த்தாதுவாக உருவெடுப்பது சுக்லம். அதைப் பேணுதற்குரிய ரஸதாதுவாகப் பெண்பாலரிடம் அமைந்திருப்பது சுரோணிதம். இவை இரண்டின் சேர்க்கையின் விளைவாகக் கருவில் ஜீவதத்துவம் உருவெடுக்கின்றது.

பிரம்மச்சரிய விரதம் காப்பதன் வாயிலாக சுக்லம் அல்லது ரேதஸை வீரியம் நிறைந்த மேலானதாக மாற்றியமைக்கலாம். சுஷும்னை நாடியில் கீழ்நோக்கிவந்து குறியின் வாயிலாக ஸ்கலிதமாகும் விந்துவைப் பிரம்மச்சரியத்தின் வாயிலாக ஊர்த்துவ ரேதஸாக மாற்ற மனிதனுக்கு இயலும். தசரத ராமனும் சீதாதேவியும் மணந்து கொண்ட பிறகு இருபத்தாறு வருஷங்கள் முறையாகப் பிரம்மச்சரிய விரதம் காத்தார்கள். அதன் விளைவாக ஸ்ரீ ராமனைவிடப் பன்மடங்கு மேலான குசன், லவன் என்ற புத்திரர்கள் அவர்களுக்கு வாய்த்தனர்.

பிரபஞ்சத்திலுள்ள அனைத்தின் சொரூபமாக உள்ள அன்னை பராசக்தி சுக்ல சொரூபமாகவும் இருக்கிறாள். அதை உயிரினும் உயர்ந்ததாக மானுடன் ஓம்பி வரவேண்டும். கர்ப்ப தானமாக அது வழங்கப்படுங்கால் தலைசிறந்த சந்தானமாகிறது. தன் சொரூபத்திலேயே அது லயமாகுங்கால் மானுடன் பிரம்ம ஞானத்துக்குத் தகுதியுடையவனாகின்றான். சுக்லத்தின் சிறப்பை அறிந்து காப்பது விரதம். அதுவே தலைசிறந்த சக்தி வழிபாடாகிறது. அப்படிக் காத்தவர்களுள் பீஷ்மர் முதலிடம் பெறுகிறார். தலைத்தரமான பிரம்மசாரியாய் இருந்த அவர் அமானுஷ்ய சக்தியைப் பெற்றிருந்தார். அறிவிலும் அவர் தலைசிறந்து திகழ்ந்தார். அவர் அனுமதியின்றி மரணம் கூட அவரை அணுகாது. யுத்தத்தில் யாராலும் வெல்ல முடியாதவராக அவர் இருந்தார். அவருக்கு நிகரான சக்தி உபாசகர் இல்லை எனலாம்.

## सर्वतोमुखी —ஸர்வதோமுகீ ५३२

எல்லாப் பக்கங்களிலும் தன் முகங்களை உடையவள்.

எங்கும் வியாபித்திருக்கின்ற அருவமாய் உள்ள பரவஸ்துவை உருவமாகப் பொருள்படுத்துவது நம் வசதியின் பொருட்டேயாம். உருவங்கள் வாயிலாகவேதாம் தத்துவத்தைக் கிரகிக்க இயலுகிறது. ஒரு முகம் படைத்திருக்கும் நான்முதை

ஆங்காங்குத் திரும்பிப் பொருள்களைப் புலப்படுத்துகிறோம். எங்கும் வியாபித்திருக்கும் அம்பிகைக்கு எல்லாத்திக்குகளிலும் எண்ணிறந்த முகங்கள் இருக்கின்றன என்பதால் யாவும் அவள் காட்சிக்கு எட்டுகின்றன. அனந்தம் கோடி முகங்களாக அனந்தம் கோடி ஜீவர்கள் படைத்திருப்பதெல்லாம் அம்பிகையின் விஸ்வரூபத்துக்கு விளக்கங்களாகின்றன. எங்கு எவ்வுயிர் எப்பொருளை எங்ஙனம் புலப்படுத்திக்கொண்டிருக்கின்றதோ ஆங்கு அவ்வுயிர் மயமாக அம்பிகை இலங்குவதைக் கிரஹித்தல் வேண்டும். உயிர்கள் அனைத்துமாய் அம்பிகையே உருவெடுத்து விளையாடுவதால் அவையாவையும் அவளுடைய சொருபங்களாய்க் காண்பது நல்ல ஆத்ம சாதனமாகிறது.

## सर्वौदन प्रीत चित्ता — ஸர்வௌதன ப்ரீத சித்தா ५३३

சமைத்துள்ள அன்னவகைகள் அனைத்திலும் விருப்பம் வைத்துள்ள மனதை உடையவள்.

உணவைச் சமைத்துண்ணும் செயல் உயிர்வகைகளுள் அலாதியாக மனிதனுக்கு உடையதாகிறது. மக்களுள்ளும் எஸ்கிமோ தேசத்தவர்கள் பச்சை மாமிசத்தையே புசித்துவருகின்றனர். ஏனென்றால் ஸ்தாவர உயிர்வகைகள் ஆங்கு உதிக்கமாட்டா. சூழ்நிலையை முன்னிட்டு அந்நாட்டு மக்கள் சமைக்காத உணவையே புசித்து வாழ்ந்து வருகின்றனர்.

ஜீவகோடிகள் அனைத்தும் உண்ணும் உணவு உண்மையில் அம்பிகையினால் ஏற்கப்படும் உணவாகிறது. எல்லாவித உணவு வகைகளுள் அம்பிகை சமைத்துள்ள அன்னத்தையே விரும்புகின்றாள் என்று மனிதன் தனக்கு விருப்பமாயுள்ள உணவை அம்பிகைக்கு விருப்பமானதாகக் கற்பித்திருக்கிறான். அவன் உணவைப் போக்தாவாக இருந்து ஏற்பானாகில் அவன் சாதனத்தில் மேன்மையுறுவதில்லை. மனிதன் யோகியாய் இருந்து அம்பிகையின் பிரசாதமாக அன்னத்தை அளவெடுத்து அருந்துவானாகில் அது நல்ல ஆத்மசாதனமாகிறது. ஆத்ம சாதகன் தனக்கென்று அன்னத்தைச் சமைக்காமல் தன் வழிபடு தெய்வமாகிய அம்பிகைக்கு நைவேத்தியமாகவே அன்ன வகைகளைச் சமைக்கவேண்டும். உணவை நல்லுணவாகச் சமைப்பதும்

அதை அம்பிகைக்கு நைவேத்தியமாகப் படைத்து அந்த அன்னத்தை அவளுடைய பிரசாதமாக எடுத்துப் புசிப்பதும் நல்ல ஆத்ம சாதனமாகிறது. அதன் பொருட்டே சமைத்துள்ள அன்ன வகைகளில் விருப்பம் மிக வைக்கிற பாங்கில் அம்பிகை இருக்கிறாள் எனப் புகட்டப்படுகிறது.

**याकिन्यंबास्वरूपिणी** — யாகின்யம்பா ஸ்வரூபிணீ ५३४

யாகினீதேவியின் வடிவத்தை எடுத்திருப்பவள்.

மேலே கூறப்பட்டுள்ள அம்பிகையின் பலப்பல ரூபங்களின் விளக்கங்கள் அனைத்தையும் தன்பால் கொண்டுள்ள அம்பிகை யாகினீதேவி என இயம்பப்பெறுகிறாள். அன்னை பரா சக்திக்குரிய அனந்தங்கோடி விபூதிகளில் இப்பகுதியும் அடங்கி உள்ளது.

**स्वाहा** — ஸ்வாஹா ५३५

ஸ்வாஹா என்னும் மந்த்ர சொரூபமாக இருப்பவள்.

அக்னியின்பால் அமைந்துள்ள சக்தி ஸ்வாஹா என இயம்பப்பெறுகிறது. அக்னியிலிருந்து தோன்றிய குமரக்கடவுள் படைத்துள்ள வல்லமையும் ஸ்வாஹா எனப் பெயர்பெறுகிறது. ஹோமாக்னியில் சொரியப்பெறும் நெய் முதலிய நிவேதனங்களை ஸ்வாஹா என இயம்பிப் படைப்பது ஐதிகம். மனிதன் ஆயத்தப் படுத்தியுள்ள உணவு வகைகளுள் முதன்மை பெறுகின்ற நெய்யை அக்னியில் மந்த்ரபூர்வமாகச் சொரியுமிடத்து அது அபூர்வம் என்னும் சூட்சும சக்தியாக மாறுகிறது. தெய்வத்துக் குரிய யாகத்தில் ஸ்வாஹா என்னும் மந்த்ரம் முதன்மை பெறு கிறது. அந்த மந்த்ர சொரூபமாகவே அம்பிகை இலங்குகின்றாள்.

**स्वधा** — ஸ்வதா ५३६

ஸ்வதா என்னும் வடிவத்தில் இருப்பவள்.

உலக வாழ்வில் ஈடுபட்டிருக்கின்றவர்கள் காலம் சென்ற தம் முன்னோர்களையும் பித்ரு தேவதைகளையும் வழிபடக் கடமைப் பட்டுள்ளனர். பித்ரு தேவதைகளுக்காக ஹோமாக்னியில் சொரி கின்ற ஆகுதியை ஸ்வதா என்று உச்சரித்துப் படைக்கவேண்டும்.

யதிகள் சந்நியாச ஆச்ரமம் மேற்கொள்வதற்கு முன்பு பித்ரு தேவதைகளுக்குப் பிண்டம் போட்டுவிடுகின்றனர். அதன் பிறகு அன்னவர்கள் பித்ரு தேவதைகளை வணங்குவதில்லை. அவர்கள் செய்கின்ற பரவஸ்து தியானத்தில் இகலோக சம்பந்தமான வழிபாடுகளனைத்தும் ஒடுங்கிவிடுகின்றன. உலக பந்தபாசத்திலிருக்கும் மக்களுக்கு அன்னை பராசக்தி ஸ்வதா சொருபமாக இலங்குகின்றாள்.

**अमतिः — அமதி:** ௫௩௭

அவித்யா ரூபமாய் இருப்பவள்.

பரவஸ்துவுக்கு அபின்னமாய் இருக்கும் மூலப்பிரகிருதி பஞ்ச பூதங்களாகச் சிருஷ்டிக் கிரமத்தில் பரிணமிக்கின்றாள். பஞ்சபூதங்கள் அசேதனமாக இருப்பதால் அவை அவித்யா சொருபமாக இருக்கின்றன. அவற்றினின்று வடிவெடுக்கின்ற அண்டங்களும் அசேதன வஸ்துக்களாய் உள்ளன. அம்பிகையின் சொருபங்களாகிய வித்யா மாயை, அவித்யா மாயை ஆகியவை முறையே ஞான மார்க்கத்தில் செல்பவர்களுக்கும் பிரபஞ்ச வாழ்வில் கட்டுண்டு இருப்பவர்களுக்கும் பயன்படுகின்றன. ஜட ஆகாசம் அமைப்பில் சித் ஆகாசத்துக்கு நிகரானது. வாயு, அக்னி நீர், நிலம் ஆகியன எல்லாவிதமான உயிர்வகைகளின் தோற்றத்துக்குப் பொருத்தமான சூழ்நிலைகளாகின்றன. அக்ஞானத்தில் உழல்கின்ற அத்தனை ஜீவகோடிகள் மயமாக இலங்கும் அம்பிகை அமதி: என ஆராதிக்கப்படுகின்றாள். ஞானமார்க்கத்தில் செல்பவர்கள் அக்ஞானமயமாயிருக்கும் பிரகிருதியையும் அதில் வாழ்ந்துவரும் சிற்றுயிர்களையும் அலட்சியப்படுத்துவதில்லை. அம்பிகை இத்தனைவிதமான வடிவங்களில் விளையாடுகிறாள் என்றே அவர்கள் அவைகளைப் பாராட்டிப் போற்றுகின்றனர்.

**मेधा — மேதா** ௫௩௮

பேரறிவு சொருபமாயிருப்பவள்.

இயற்கையின் நடைமுறையை ஆராய்ச்சி பண்ணுகின்ற பௌதிக விக்ஞானிகள் காண்கின்ற விவரங்கள் வேதாந்தக் கோட்பாட்டை ஒத்திருக்கின்றன. ஜடநிலையில் இருப்பவை சேதனமாகப் பரிணமித்து வருவதுதான் இயற்கையின் திட்டம்

என்னும் முடிவுக்கு அவர்கள் வந்துள்ளனர். அன்னை பராசக்தி தானே ஜடநிலையினின்று சேதன நிலைக்குப் பரிணமிக்கின்றாள் என்று வேதாந்தம் புகட்டுகிறது. பர்வதம் என்பது அசைவற்ற ஜடநிலையில் உள்ள மலையைக் குறிக்கிறது. பர்வதராஜனின் புதல்வி பார்வதீ என்னும் பெயர் பெறுகின்றாள். அவ்வாறு ஜட நிலையிலிருக்கும் பார்வதீ படிப்படையாக அறிவு சொரூபமாகப் பரிணமிக்கின்றாள். சூழ்நிலையிலிருக்கும் இடைஞ்சல்களையெல் லாம் பெரு முயற்சி செய்து வென்று சிற்றுயிர்கள் பேருயிர்களா கப் பரிணமிக்கின்றன. அறிவில் மேன்மையுற்று வருகின்ற உயிர் கள் இறுதியில் மானுட நிலையை எய்துகின்றன.

அறிவில் முன்னேற்றமடையும் மனிதன் பஞ்சபூதங்களையும் தன் வசதிக்கேற்ப அடக்கியாள்கிறான். சூழ்நிலையைத் தனக்குப் பயன்படுமாறு அவன் செய்து கொள்ளும் நிலையே பௌதிக விஞ்ஞானம் எனப்படுகிறது. ஆனால் இயற்கையைக் கட்டியாண்டு சுகஜீவனம் பண்ணுதற்கேற்ப மனிதனுக்குத் துன்பமும் அதிகரித் துக் கொண்ட வருகிறது. மனிதன் அனுபவிக்குமளவு இன்பத் தைச் சிற்றுயிர்கள் அனுபவிப்பதில்லை. பின்பு மனிதன் துயரப் படுகின்ற அளவு சிற்றுயிர்கள் துன்பப்படுவதுமில்லை. பிரபஞ் சத்தைப் பற்றிய இந்த அறிவு அபராவித்தை எனக் கருதப்படு கின்றது. இயற்கையில் நலனும் கேடும், வெற்றியும் தோல்வி யும், ஜனனமும் மரணமும் மாறி மாறி வருவதால் மனிதன் இன்ப துன்பங்களில் அல்லற்பட்டுக் கொண்டிருக்கிறான்.

மேதா என்பது பேரறிவு அல்லது பராவித்யா எனப்படு கிறது. பராவித்தையைப் பயிலுபவன் பிரபஞ்ச வாழ்க்கையில் உள்ள குறைநிலைகளினின்று விடுபடுகிறான். மாயப் பிரபஞ்சத் துக்கு அப்பால் இருக்கும் பாரமார்த்திகப் பெருநிலையைக் கிரகிக்க வல்லவனே மேதா என்னும் அம்பிகையின் பெருநிலையை எட்டியவனாகிறான். இவ்விரண்டு நிலைகளிலும் இருந்துகொண்டு உயிர்களைப் பக்குவப்படுத்தி வரும் அம்பிகை அமதி என்றும் மேதா என்றும் பெயர்கள் பெற்றுள்ளாள். பிரபஞ்ச வாழ்வு சிற்றறிவாகத் தொடங்கிப் பேரறிவாகப் பரிணமிக்கிறது என்பது இதன் கருத்தாகும்.

श्रुतिः — ச்ருதி: ५३९

காதால் கேட்டு அறியப்படுவது.

ரிக், யஜுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களும் இயற்கையைப் பற்றிய பேரறிவுக்கு இருப்பிடமாகின்றன. பல்லாயிரம் ஆண்டுகளாக இவை காதால் கேட்டுக் காப்பாற்றி வைக்கப்பட்டிருந்தன. ஜடநிலையில் இருக்கும் ஜீவர்கள் சேதன நிலைக்குப் பரிணமிக்கின்றனர். அதன் பிறகு அவர்களுள் சிலர் மேதைகளாகின்றனர். மேதைகளாக இருப்பவர்களுக்கே வேதங்களைக் கேட்கவும் கேட்டபடி காப்பாற்றி வைக்கவும் சாத்தியமாகிறது. இடைச்செருகல் ஏதும் இல்லாது நான்கு வேதங்களும் நெடுங்காலம் காப்பாற்றி வைக்கப்பட்டது பேரறிவுக்குச் சான்றாகிறது. பேரறிஞனாக மானுடன் ஒருவன் பரிணமித்து வருவது அம்பிகையின் மகிமையாகும். அப்படி மேதையாக உருவெடுத்தவன் சுருதி அல்லது வேதங்களைக் கேட்டு அறிந்துகொள்ளுதல் அம்பிகையின் மகிமையாகும். அறிந்துகொண்டதற்கு இழுக்கு ஏதும் ஏற்படாது காப்பாற்றி வைத்ததும் அம்பிகையின் மகிமையாகும். மனிதனுடைய பேரறிவு மங்கியிருக்கின்ற இக்காலத்தில் வேதங்கள் அச்சடிக்கப்பட்டுள்ள புஸ்தகங்களாக மாறிவிட்டன. இக்காலத்திய மனிதன் அடைந்துள்ள க்ஷீண தசைக்கு இது எடுத்துக் காட்டாகிறது. இடையிடையே மனிதன் க்ஷீணதசை அடைந்தாலும் சுருதி அல்லது வேதங்கள் அழிந்துபட்டுப்போகக் கூடியவை அல்ல. ஏதேனும் ஒரு பாங்கில் அவை யாண்டும் நிலைபெற்றிருக்கின்றன. வேதங்களின் சொருபமாக அம்பிகை யாண்டும் நிலைத்திருப்பதால் அவள் சுருதி என்று போற்றப் பெறுகிறாள்.

स्मृतिः — ஸ்ம்ருதி: ५४०

ஞாபகசக்தி வடிவினளாய் இருப்பவள்.

வேதத்தை அறிகின்ற ஒருவன் அதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவும் வல்லவனாயிருக்கவேண்டும். அறிந்துகொண்டதை அப்போதைக்கப்போது மறந்துவிட்டால் நீர்மேல் எழுத்துப் போல் ஞானம் வீணாய்ப்போய்விடும். அப்படி அது பாழ்படுதற்குப் பராசக்தி இடம் தருவதில்லை. அவள் அறியும் திறமை

வாய்ந்திருப்பதுபோன்று அறிந்ததை நினைவில் வைத்திருக்கும் பாங்குடையவளாகவும் இருக்கிறாள். இவ்விரண்டு வல்லமைகளும் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டிருப்பதாலேயே உலகில் ஞானம் நிலைபெற்றிருக்கிறது. மானுடன் ஒருவன் தான் படைத்துள்ள ஜீவவியக்தியை ஞாபகத்தில் வைத்திருப்பதால் தான் அவனுடைய இகலோக வாழ்வு இனிது நடைபெற்று வருகிறது.

வாழ்க்கை சம்பந்தமான சட்டதிட்டங்களுக்கு ஸ்ம்ருதி என்னும் பொருள் ஒன்று உண்டு. ஒரு காலத்துக்கு உதவுகின்ற ஸ்மிருதி இன்னொரு காலத்துக்கு உதவாது போய்விடும். காலத்துக்கு ஏற்றவாறு ஸ்மிருதியை மக்கள் மாற்றியமைத்து வருகின்றனர். ச்ருதியையோ அப்படி மாற்ற முடியாது. சுருதியை ஸநாதன தர்மம் என்றும் ஸ்மிருதியை யுகதர்மம் என்றும் இயம்பலாம். சுருதியை ஆதாரமாக வைத்துக்கொண்டே ஸ்ம்ருதி காலத்துக்கேற்ற கோலம் எடுக்கிறது. சுருதியோடு முரண்படும் ஸ்ம்ருதி, ஸ்ம்ருதி எனக் கருதப்படமாட்டாது.

அன்னை பராசக்தி இத்தகைய ஸ்ம்ருதி சொரூபமாக இலங்குகின்றாள்.

**अनुत्तमा — அனுத்தமா** ५४१

தனக்கு மிக்கார் யாரும் இல்லாதவள்.

அம்பிகையே அனைத்துமாய் இருக்கிறாள். அவள் தானே அனைத்துமாய், அனைவருமாய் இருப்பதால் அவள் ஒப்புயர்வற்றவளாகிறாள். மற்ற மூர்த்திகளுக்குத் தனி வியக்தி கொடுத்து ஆராய்ந்து பார்த்தாலும் அம்மூர்த்திகளுக்கெல்லாம் அவள் மேலானவளாக இருக்கிறாள். அன்னை பராசக்தியே அனந்தம் கோடி மூர்த்திகளாகவும் அவர்களனைவருக்கும் மேம்பட்டவளாகவும் இருக்கின்றாள். ஆதிசக்தியாகவும், மகாசக்தியாகவும் இருப்பதால் அவளை ஒப்புயர்வற்றவள் எனப் போற்றுவது முறை.

**पुण्यकीर्तिः — புண்யகீர்த்தி:** ५४२

புண்ணியத்தை வழங்குவதில் புகழ்பெற்றவள்.

சத்கர்மம் ஜீவாத்மன் ஒருவனை மேலோனாக மாற்றுகிறது. அப்படி மேன்மையுறுவது புண்ணியம். ஜீவாத்மனைக் கீழ்மையில் ஆழ்த்தும் கர்மம் பாபம் என ஒதுக்கப்படுகிறது. யாண்டும்

புண்ணியமாயுள்ள கர்மம் ஒன்று உளது. அம்பிகையைப் போற்றுமளவு போற்றுகிறவன் மேன்மையுறுகிறான். 'பூமிமேல் புகழத்தக்க பொருளே' என்று அவளை ஆன்றோர் ஆராதிக்கின்றனர்.

ஒரு சூழ்நிலையில் புண்ணியமாயிருந்து மற்றொரு சூழ்நிலையில் பாபமாக மாறும் கர்மங்களும் உள்ளன. அம்பிகையைப் போற்றும் நல்லவர்கள் மேலும் நல்லவர்களாகிறார்கள். அவளைப்போற்றும் கெட்டவர்களோ தம் கேடு நீங்கப் பெறுகிறார்கள். ஒவ்வொருகர்மத்திலும் நலம், கேடு இரண்டும் கலந்திருக்கின்றன என்னும் நியதி அம்பிகையைப் போற்றுவதில் இல்லை. 'நலமுடையாள் கேடு இல்லாள்' என்னும் கோட்பாடு அவளுக்கே உரியதாகிறது. அம்பிகையைக் குறித்துக் கீர்த்தனங்கள் பாடுவதும், புகழ்வதும், போற்றுவதும் யாண்டும் புண்ணியத்தையே வளர்ப்பனவாகின்றன.

கீர்த்தி மிக வாய்க்கப்பெற்றவள் அம்பிகை. அவளைப் போற்றுகிற பக்தர்களையும் பக்தி மதிகளையும் புண்ணியம் நிறைந்தவர்களாக அவள் செய்து விடுகின்றாள். புண்ணியத்தைத் தாராளமாக வழங்குகின்றவள் என்னும் கீர்த்தி அவளுக்கே உரியதாகிறது.

**पुण्यलभ्या** — புண்யலப்யா ५८३

புண்ணியத்தால் அடையப் பெறுபவள்.

புண்ணியத்தில் நிலைபெறுமளவு மானுடன் ஒருவன் மேலோனாகிறான். நல்லுணவு உடலுக்குப் புஷ்டி தருவதுபோன்று புண்ணிய கர்மம் உள்ளத்தைத் தெளிவுபடுத்துகிறது; உயிர் வகைகளுக்கிடையில் நல்லிணக்கத்தை வளர்க்கிறது; விவேகத்தை ஊட்டுகிறது. புண்ணியத்தினின்று பிசகாமல் அதை மேலும் மேலும் வளர்க்கின்றவன் ஆத்ம பரிபாகம் அடைகின்றான். அதன் விளைவாகப் பிரபஞ்ச வாழ்வு அநித்தியமானதென்றும் துக்கம் நிறைந்ததென்றும் அவன் அறிய வருகிறான். அப்பொழுது அருள்நாட்டம் தானாக ஓங்குகிறது; பக்தி பெருகுகிறது. பக்தன் தன்னையும் தான் சேகரித்துள்ள புண்ணியங்களையும் அம்பிகையின் திருவடியில் சமர்ப்பிக்கிறான். நெருப்பிடம் தன்னை ஒப்படைக்கும் விறகுக்கட்டை தானே நெருப்பு சொரூபமாகிறது. தன்னையும்

தன் உடைமைகளையும் தேவியிடம் சமர்ப்பிக்கும் பக்தன் ஒருவன் தேவியின் சொரூபத்தில் இடம் பெறுகிறான். அநித்திய மாயுள்ள புண்ணிய கர்மத்தைச் செய்கின்ற பாங்கில் செய்து ஒப்படைக்க வேண்டிய இடத்தில் ஒப்படைக்கும் சாதகன் அம்பிகையின் திருவடியில் சாசுவதமாயுள்ள வாழ்வைப் பெறுகிறான் என்பது இந்த நாமத்தின் கருத்து.

**पुण्यश्रवणकीर्तना — புண்ணியச்ரவண கீர்த்தனா** ௫௪௪

அம்பாளுடைய மகிமைகளைப் போற்றுவதிலும் கேட்பதிலும் புண்ணியத்தை விளைவிக்கின்றவள்.

பக்தி பூர்வமாக அவை யாவற்றையும் கீர்த்தனம் பண்ணுகிறவன் அல்லது விளக்குபவன் பாக்கியவானாகிறான். அத்தகைய விளக்கத்தை ஊக்கத்தோடும் பக்தி பூர்வமாகவும் கேட்டுக் கொண்டிருப்பவனுக்கும் அதே பாக்கியம் வாய்க்கிறது. பரதேவதையின் மகிமையில் திளைத்திருக்கின்ற காலமெல்லாம் ஜீவாத்மன் ஜீவபோதத்தை ஒதுக்கிவிட்டுப் பரதேவதையில் ஒன்றுபட்டவன் ஆகிறான். அதனால் அவனுடைய புண்ணியம் ஓங்குகிறது. சொல்லுகிறவனும் கேட்கிறவனும் இந்தப் பாக்கியத்துக்கு இலக்காகிறார்கள் என்பது இதன் பொருள்.

**पुलोमजार्चिता — புலோமஜார்ச்சிதா** ௫௪௫

சுலபமான நாம ஜபத்தைக் கையாண்டு குறைநிலை எய்தியுள்ள யார் வேண்டுமானாலும் நிறைநிலையை அடையப் பெறலாம் என்பது கோட்பாடு. தத்துவபூர்வமாக இந்திரியங்கள் தேவர்களாகவும் அவற்றையாளும் மனம் இந்திரனாகவும் கருதப்படுகின்றன. மனம் தன் பண்பை இழந்துவிட்டால் மனிதன் தானே பதிதன் ஆகிறான். விவேகம் படைத்திருப்பவன் அம்பிகையின் மகிமைகளை அறிந்துகொள்ளுதற்கேற்பத் தன் மனதை விரைவில் திருத்தியமைக்கிறான்.

**बन्धमोचनी — பந்தமோசனீ** ௫௪௬

பந்தங்களினின்று விடுவிப்பவள்.

பிறவிப் பெருங்கடலில் கட்டுண்டு கிடப்பதும் அக்ஞான இருளில் உழல்வதும் பந்தங்களாகின்றன. சத்குருவின் கையில்

பிடிபட்டுக் கிடப்பது' உலக வாழ்வு சம்பந்தமான பந்தமாகிறது. அக்ஞான இருளில் உழல்கின்ற மனது தனக்குத்தானே பந்தத்தை உண்டுபண்ணிக்கொள்கிறது. சம்சார சாகரத்தில் தத்தளிக்கும் அம்மனது ஞான சொருபமாகத் திருந்தியமைவது சாத்தியம். மனிதன் தன் இருள் சூழ்ந்த மனதை அம்பிகையின் வழிபாட்டில் செலுத்துவானாகில் அம்மனதின்கண் ஞானப்பிரகாசம் உண்டாகிறது. ஞானாக்னியில் கர்மங்கள் யாவும் பஸ்பமாகின்றன. பிறகு பந்தபாசம் என்னும் இடைஞ்சலுக்கு இடம் இல்லை. முறையாக அம்பிகையை வழுத்துகின்றவர்கள் எல்லாவிதமான பந்தங்களினின்றும் விடுபடுகின்றனர்.

**बर्बरालका** — பர்பராலகா ௫௪௭

மேடுபள்ளமாக வளைந்து வளைந்திருக்கும் கூந்தலை உடையவள்.

நீண்ட கூந்தல் படைத்திருப்பது பெண்பாலர்க்கு அழகு. அந்த நீண்ட கூந்தலில் இலேசாக வளைவு ஏற்படுமானால் கூந்தல் என்னும் நீர்ப்பரப்பில் அலைவீசுவது போன்று காட்சிகொடுக்கும். அத்தகைய காட்சி கூந்தலின் அழகைப் பன்மடங்கு அதிகரிக்கும்படி செய்கிறது. அன்னை பராசக்தி அத்தகைய கூந்தல் படைத்தவளாகத் திகழ்கிறாள்.

**विमर्शरूपिणी** —விமர்ச ரூபிணீ ௫௪௮

தன்னைத்தானே விளக்கிக்கொண்டு தன்னில் தானே திருப்தியடைந்தவளாய் இருப்பவள்.

காட்சிக்கு எட்டாத நிலையில் பரவஸ்து சிவம் எனப்படுகிறது. அதே பொருள் காட்சிக்கு எட்டுகிற நிலையில் சக்தி எனப்படுகிறாள். சக்தியாய்ச் சிவமாய்' என்பது ஆப்த வாக்கியம்.

பரத்தினை அடைதற்கு நாம் ஜபிக்கும் மந்த்ர சொருபமாய் இருப்பவள் அம்பிகை. அவளருளாலே ஜீவர்களாகிய நாம் தோற்றத்தில் பக்குவமாகி அதற்கப்பால் செல்கின்றோம். அந்த அரிய செயலைச் செய்வதால் அம்பிகை விமர்சரூபிணீ எனப் போற்றப் பெறுகிறாள்.

विद्या — வித்யா ५४९

வித்யாரூபமாக இருப்பவள்.

வித்யாமாயை, அவித்யாமாயை ஆகியவை மாயாதேவியின் இரண்டு கூறுகளாகின்றன. ஞானமார்க்கத்தில் மேல் நோக்கிச் செல்ல ஜீவாத்மன் ஒருவனுக்குத் துணையாயிருக்கும் மாயை வித்யா மாயை என்றும் அவன் கீழ்மையுறுதற்கு ஏதுவாயிருக்கும் மாயை அவித்யா மாயை என்றும் பெயர் பெறுகின்றன. ஜீவாத்மன் ஞானத்தெளிவடைந்து முக்தியைப் பெறுவதற்கு ஏதுவாயிருப்பது வித்யா. அத்தகைய வித்யா சொரூபிணியாக அம்பிகை இருக்கிறாள்.

பரமசிவம் சுத்த மாயையுடன் சம்பந்தப்படுவதன் வாயிலாக ஜீவ சொரூபமாகக் காட்சி கொடுக்கிறார். சுத்த சிவம் மாயையை ஆளுகின்றபொழுது அவன் ஈசுவரன் என இயம்பப் பெறுகிறான். சுத்த சிவம் மாயைக்கு அடிமைப்பட்டவன் போன்று தென்படுகின்றபொழுது அவன் ஜீவாத்மன் எனப்படுகிறான். ஜீவனைக் கட்டி வைத்திருக்கின்ற மாயா சக்தியானவள் அந்த ஜீவனுக்கு விவேகத்தை நல்குகின்றபொழுது அவள் வித்யா என்னும் பெயர் பெறுகிறாள். நித்ய வஸ்து எது அநித்ய வஸ்து எது என முறையாகப் பாகுபடுத்தும் விவேகம் வித்யா மாயையிலிருந்து உருவாகிறது. இதை முன்னிட்டும் அன்னை பராசக்தி வித்யா என விளம்பப்பெறுகிறாள்.

वियदादिजगत्प्रसूः — வியதாதி ஜகத் ப்ரஸூ: ५५०

ஆகாசம் முதலிய ஜகத்தின் ஜனனியாக இருப்பவள்.

ஆதிமூலமாயிருக்கும் பரப்பிரம்மம் யாண்டும் தன்னில்தானாய் இருக்கிறது. அந்த மூல வஸ்துவிடமிருந்து மூலப்பிரகிருதியாகிய ஆதி சக்தி வடிவெடுக்கிறாள். அந்த ஆதிசக்தியிலிருந்து ஆகாசமும் ஆகாசத்தினின்று வாயுவும் உருவெடுக்கின்றன. வாயுவினின்று அக்னியும் அக்னியினின்று நீரும் தோன்றுகின்றன. நீரினின்று நிலம் வருகிறது. உயிர்த்தத்துவங்கள் தோன்றுவதற்கு இந்தப் பூதங்கள் முகாமையாயிருக்கின்றன. பிரபஞ்சத்துக்கும் அதிலுள்ள உயிர்வகைகளுக்கும் ஜனனியாக அன்னை பராசக்தி

இருக்கிருள் எனப் பாராட்டுவது நல்ல ஆராதனையாகிறது. அத்தகைய மனநிலையை வரவழைப்பதற்கு இந்நாமம் உதவிபுரிகிறது.

**सर्वव्याधिप्रशमनी — ஸர்வவ்யாதிப்ரசமனீ ५५१**

எல்லா விதமான நோய்களையும் நீக்குபவள்.

இயற்கையை முறையாக ஆராய்ந்து பார்த்தால் இந்த லீலை நன்கு விளங்குகிறது. மனிதனுடைய சரீரத்தில் உண்டாகும் காயத்துக்குக் கட்டுப்போட்டு அதற்குச் சிகிச்சை பண்ண மனிதன் முயலுகிருன். கட்டுப்போடுவது வெறுமனே பாதுகாப்புக்கு உதவுகிறது. மருந்து முதலியன சிகிச்சைக்கு உபகாரணங்களாகின்றன. சிகிச்சை என்னும் செயல் இயற்கைத் தாயின் தற்செயலாகிறது. முறைதவறிய வாழ்வின் வாயிலாகத் திரும்பத்திரும்ப நோய்வாய்ப் பட்டுக்கொண்டிருப்பதே ஜீவாத்மாக்களின் போக்காகிறது. அறியாமையினுல் அப்படி வரவழைக்கப்பட்ட வியாதியைக் குணப்படுத்துவது இயற்கைத் தாயின் செயல். அத்தகைய மகிமை அவளுக்குண்டு என்று கருதுவது அம்பிகையின் ஆராதனையாகிறது.

**सर्वमृत्युनिवारिणी ஸர்வம்ருத்யுநிவாரிணீ ५५२**

எல்லாவிதமான மரணங்களையும் தடுப்பவள்.

உடல் எடுத்துள்ள ஜீவாத்மாக்கள் எல்லாரும் ஏதேனும் ஒருவிதத்தில் மரணம் அடைந்துகொண்டே இருக்கிருர்கள். மரணத்தைத் தடுத்துச் சாஸ்வதமாக வாழ்ந்திருப்பவர் யாருமில்லை. ஆக, அம்பிகைக்கு எல்லாவிதமான சாவுகளையும் தடுக்கும் பாங்கு இல்லை என்பதுதானே நிரூபிக்கப்படுகிறது. இந்த நாமத்தை மெய்யானதென்று நிலைநாட்டுவது எங்ஙனம்?

சரீரம் படைத்துள்ள ஜீவாத்மாக்கள் ஆகாரம் ஏற்பதன் வாயிலாக மரணத்தை ஒத்திவைத்துக்கொண்டு வருகிருர்கள். பூதங்களின் வாயிலாக வருகின்ற விபத்துக்களை நீக்குவதன் வாயிலாகத் தாற்காலிக மரணம் தவிர்த்து வைக்கப்படுகிறது. பழுதுபட்டுப்போன சரீரத்தின் அழிவை யாரும் தவிர்க்க முடியாது. ஸ்தூல சரீரத்தைக் கணக்கில் எடுத்துக்கொள்கின்றபொழுது மரணம் நிகழ்ந்துகொண்டே இருக்கிறது. நிகழ்கின்ற மரணச் செயலில் புதிய உயிர் வாழ்வு இடம் பெற்றிருக்கின்றது.

உதாரணமாகப் பூமியில் ஓரிடத்தில் வசிப்பவர்கள் அஸ்தமன சூரியனைப் பார்க்கிறார்கள். அதே வேளையில் பூமியில் மற்றோரிடத்தில் இருப்பவர்கள் உதய சூரியனைப் பார்க்கிறார்கள். அதே பாங்கில் வாழ்வுக்குத் தகுதியற்ற ஸ்தூல சரீரம் வீழ்ந்த பிறகு சூட்சும சரீரம் அழிந்துபோகாதிருந்து மற்றொரு ஸ்தூல சரீரத்தைத் தனக்குத் தானே உண்டுபண்ணிக்கொள்ளுதற்கு அந்த ஜீவாத்மா ஆயத்தப்படுத்துகிறது. எனவே அந்த ஆத்மாவுக்கு மரணமில்லை. புதிய புதிய சரீரங்களை எடுத்துக்கொண்டு ஜீவாத்மாக்கள் தங்களை மேலும் மேலும் பக்குவப்படுத்திக் கொண்டே வருகிறார்கள். ஜீவகோடிகளை அம்பிகை சதா புதுப்பித்துக்கொண்டே வருகிறாள். சரீரத்துக்குரிய அப்புதுமை ஆத்மாவுக்குரியதன்று. எனவே, புதிய உடலங்களை ஓயாது வழங்கி உயிர்வகைகளை நிரந்தர வாழ்வில் ஈடுபடும்படி அம்பிகை எல்லாவித மரணங்களினின்றும் காப்பாற்றி வருகிறாள். பழைய சரீரங்களுக்கு வரும் நாசம் ஜீவாத்மாக்களைப் பாதிப்பதில்லை என்பதை அறிந்துகொள்வோமானால் அவள் அத்தனைவித உயிர்களை எல்லாவிதமான மரணங்களினின்றும் காப்பாற்றி வருகின்றாள் என்பது தெற்றென விளங்கும்.

**अग्रगण्या — அக்ர கண்யா** ५५३

முதலிலே எண்ணப்படுகின்றவள்.

அண்டங்கள், ஜீவகோடிகள் அனைத்துக்கும் அம்பிகையே ஆதிசக்தியாயிருக்கிறாள். அவளைப்பற்றி எண்ணிய பிறகே ஏனைய யாவற்றைப் பற்றிய எண்ணமும் வருகிறது. குடும்பம் ஒன்றில் அன்னையைப்பற்றிய எண்ணம் முதலில் வருகின்றது. தந்தையைப்பற்றியும் பிள்ளைகளைப் பற்றியும் அடுத்த படியாக எண்ணம் வருகிறது. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்னும் கோட்பாட்டில் அன்னை முதன்மை பெறுகிறாள். ஆக, எல்லாப்படித்தரங்களிலும் எல்லாவித வாழ்க்கை வைபவங்களிலும் ஆதிசக்தி முதலில் நினைவுக்கு வருகிறாள்.

நர கணம், தேவகணம், அசுரகணம் போன்ற கணங்கள் யாவும் அம்பிகையிடமிருந்து தோன்றி வந்துள்ளன. கணங்கள் அனைத்துக்கும் அம்பிகை முதன்மை வகிக்கிறாள் என்று இயம்புவது முற்றிலும் பொருத்தமானதாகும்.

**अचिन्त्यरूपा — அசிந்த்ய ரூபா** ५५४

மனதுக்கெட்டாத வடிவத்தை உடையவள்.

பிரபஞ்ச சொருபமானது, பிரபஞ்சத்துக்கு அதீதமானது என்று அம்பிகையின் பாங்குகள் இரண்டு உள. பார்வைக்கு எட்டாத சூரியகிரணம் கட்புலனுகைக் கூடிய ஏழு நிறங்களாகச் சிதறடைவதற்கு நிகராகப் பிரபஞ்சமாக வடிவெடுத்திருக்கும் அம்பிகையே மனதுக்கு எட்டாத வடிவத்தையும் உடைத்திருக் கிருள்.

மனதால் கிரஹிக்கவும் வாக்கால் விளக்கவும் சாத்தியப்படும் அவளுடைய சொரூபத்தைச் சிந்த்யரூபா என்று கூறலாம். அவ் வாறு தோற்றத்துக்கு வந்துள்ள பகுதி மிகமிகச் சிறியது. சக்தி எனப்படும் பகுதி ஜீவகோடிகளாகவும் அண்டகோடிகளாகவும் நம் பஞ்சசேந்திரியங்களுக்கு எட்டுவதாய் அமைந்துள்ளது. நம் சிந்தனைக்கு அப்பாற்பட்டதாகச் சிவம் என்னும் பெரும் பகுதி அமைந்துள்ளது. பரஞானம் படைத்துள்ள ஆத்ம சாதகன் அதை ஏகதேசம் அனுபூதியில் அறிகிருன்.

**कलिकल्मष नाशिनी — கலிகல்மஷ நாசினீ** ५५५

கலியுகத்துக்குரிய கல்மஷங்களையெல்லாம் அகற்ற வல்லவள்.

கிருத யுகத்தில் தர்ம தேவதை என்னும் பசு நான்கு கால் களில் நிற்கிறது. அந்த யுகத்தில் எக்காரணத்தை முன்னிட்டும் தர்மம் பிசகிப்போவதில்லை. திரேதா யுகத்தில் தர்மம் என்னும் பசு மூன்று கால்களில் நிற்கிறது. அதர்மம் கால் பங்கு இடம்பெறு கிறது. துவாபர யுகத்தில் தர்மம்என்னும் பசு இரண்டு கால்களில் நிற்கிறது. தர்மமும், அதர்மமும் சற்றேறத்தாழ மாறிமாறிச் சமூ கத்தில் இடம்பெறுகின்றன. கலியுகத்திலோ அப்பசு ஒரு காலில் நிற்க முயலுகிறது. அது மிகக்கடினமானது. எங்கும் அதர்மம் தான் தலையெடுத்திருக்கிறது. அம்பிகையிடத்துப் பக்தி செலுத்து கின்றவன் அதர்மத்துக்கு ஆளாவதில்லை. பாபம் அவனைத் தீண்டுவதில்லை. அம்பிகையின் உபாசகன் எளிதில் முக்திக்கு அருகதை உடையவனுகிருன். கலியுகத்தில் கிடைப்பதுபோன்று

முக்தி அவ்வளவு எளிதில் மற்ற யுகங்களில் கிடைப்பதில்லை. குறைநிலைக்கு ஈடாக இது அம்பிகை நல்கியுள்ள நலமாகும். அன்னை பராசக்தியிடம் மாறாத அன்பு வைக்கின்றவர்கள் மிக எளிதில் மோட்ச சாம்ராஜ்யத்தைப் பெறுகின்றனர். ஆதலால் அவள் கலிமல்மஷ நாசினீ எனக் கூறப்பெறுகிறாள்.

**कात्यायनी — காத்யாயனீ** ௫௫௬

காத்யாயனீ என்னும் பெயர் படைத்துள்ளவள்.

ஒவ்வொரு தெய்வமும் திவ்யமான பிரகாசம் நிரம்பப் பெற்றது. தெய்வங்கள் யாவும் படைத்துள்ள பிரகாசத்தைத் தொகுத்தெடுத்தால் அந்த ஒளித்தொகையை உடைத்திருப்பவள் காத்யாயனீ. காத்யாயனீ வழிபாட்டில் வழிபாடுகள் அனைத்தும் அடங்கியிருக்கின்றன.

அகிலாண்டங்களின் அமைப்பின் புறச்சின்னமாகிய ஸ்ரீ சக்கரத்தில் ஒட்டியானம், காமரூபம், பூரணகிரி, ஜாலந்தரம் என்னும் நான்கு பீடங்கள் உள்ளன. ஒவ்வொரு பீடத்துக்கும் அம்பிகையின் அம்சங்களாகிய அதிஷ்டான தேவதைகள் அமைந்திருக்கிறார்கள். அந்த நான்கு மூர்த்திகளில் ஒருத்தியாகக் காத்யாயனீ இருப்பதாகப் பாவித்து அவளை வணங்குவதும் முறையாகும்.

**कालहन्त्री — காலஹந்த்ரீ** ௫௫௭

காலத்தைத் துடைத்துத் தள்ளுபவள்.

பிரபஞ்சமும் அதில் நிலைபெற்றிருக்கின்ற உயிர் வகைகளும் காலத்துக்கு உட்பட்டவைகளாக இருக்கின்றன. காலமானது அவை யாவற்றையும் சதா எடுத்து விழுங்கிக்கொண்டிருக்கிறது. அத்தகைய காலத்தைத் துடைத்துத்தள்ள வல்லவளாக, அம்பிகை இருக்கின்றாள். காலமானது மரண சொரூபமாக இருந்துகொண்டு உயிர்களையும் உலகையும் எடுத்து உண்கிறது. எல்லாம் வல்ல அத்தகைய காலத்தையே அன்னை பராசக்தி துடைத்துத் தள்ளிவிடுகிறாள். அத்தகைய அம்பிகையை உபாசிக்கிறவர்கள் காலத்தில் கட்டுண்பதில்லை. கால அதீதத்தை எட்ட அவர்களுக்கு இயலுகிறது. அம்பிகையின் உபாசனையின் விளைவாக வருகின்ற வரப்பிரசாதம் இதுவாம்.

**कमलाक्षनिषेविता — கமலாக்ஷ நிஷேவிதா** ५५८

விஷ்ணுவினல் சிறப்பாக வழிபடபட்டவள்.

விஷ்ணுவுக்கு அமைந்துள்ள பல நாமங்களுள் கமலாக்ஷன் என்பது ஒன்று. தாமரைக் கண்ணன் என்பது அதன் பொருள். கண்ணன் என்றும் அவன் அழைக்கப்பெறுகிறான். ஞான சொரூப மாகிய கண் அனைத்தையும் காணவல்லது இகம், பரம் ஆகிய இரண்டும் அவனுடைய கண்பார்வைக்கு எட்டுகின்றன. அன்னை பராசக்தி யாண்டும் உபாசனைக்கு உரியவள். ஆகையால் கமலக் கண்ணன் மகிழ்வோடும், உள்ளன்போடும், ஊக்கத்தோடும் அம் பிகையை வழுத்திக்கொண்டே இருக்கிறான். உபாசகன் ஒருவ னுக்கு உபாசன மூர்த்தியின் விபூதிகள் சொந்தமாகின்றன என்பது கோட்பாடு.

**ताम्बूलपूरितमुखी — தாம்பூல பூரித முகீ** ५५९

தாம்பூலம் நிறைந்த இனிய வாயை உடையவள்.

இகலோக வாழ்க்கையில் தாம்பூலம் முக்கியமாக இடம் பெறுகின்றது. எங்கெல்லாம் இகலோக வாழ்வு இனிது நிறை வேறுகிறதோ, எதன் வாயிலாக மக்கள் அமைதியும் இன்பமும் உற்றிருக்கிறார்களோ அங்கெல்லாம் அன்னையின் சான்னித்தியம் மிளிர்கிறது என்பதற்கு விள்க்கமாக அம்பிகை தாம்பூல பூரிதமுகீ என மொழியப் பெறுகிறாள்.

**दाडिमीकुसुमप्रभा — தாடிமீ குஸுமப்ரபா** ५६०

மாதுளைப் பூவின் பொலிவினைப் போன்ற அழகைப் படைத்தவள்.

இயற்கையினூடு அழகைக் காண்பவர் அம்பிகையின் சான் னித்தியத்தைக் காண்கின்றனர். ஒவ்வொரு பொருளிலும் இருக் கும் அழகைக் காணும் பரிபாகம் எல்லாருக்கும் அமைவதில்லை. மலர்களை அம்பிகையின் சொரூபங்களாகக் காண்கின்றவர்களிடம் அவை கடவுள் சான்னித்தியத்தை ஊட்டுகின்றன. மாதுளைப் பூவை அம்பிகையின் முன்னிலையில் சமர்ப்பித்து அதன் அழகை ரசித்துத் தியானிப்பவர்கள் அம்பிகையின் அழகையும் சான்னித் தியத்தையும் போற்றுபவர்களாகின்றனர்.

**मृगाक्षी — ம்ருகாக்ஷீ** ५६१

மானின் கண்களைப் போன்ற கண்களை உடையவள்.

அம்பிகையின் கண்பார்வை நீக்கமற எங்கும் நிறைந்திருப்பதால் அவளுக்கு விசாலாக்ஷி என்று பெயர். உயிர்வகைகளின் ஆசைகளையெல்லாம் தன் கடைக்கண் பார்வையால் நிறைவேற்றி வைப்பதால் அவள் காமாக்ஷி எனப்படுகிருள். இமையாத கண் பார்வை உடையவளாதலால் அவளுக்கு மீனாக்ஷி என்னும் பெயரும் உண்டு. இம்மூன்று சொற்களில் பரதேவதையின் பாரமார்த்திகப் பேருண்மை நன்கு விளக்கப்பெறுகிறது.

மானின் பார்வையில் இனிமையும், தூய்மையும், வசீகரமும் அமைந்துள்ளன. நம்மைப் பார்த்துக்கொண்டிருக்கும் மானைப் பார்க்கப் பார்க்க நமக்குப் பரவசம் உண்டாகிறது. திருஷ்டி என்னும் செயலில் நம்மை நாம் மறந்துவிடுகின்றோம். சிறிது நேரம் நாம் வேறு, மான் வேறு என்னும் பேதமும் அடிபடுகிறது. பரக்காட்சியின் பாங்கை இக்லோக ஜந்து ஒன்று நமக்கு ஞாபக மூட்டுகிறது. அன்னை பராசக்தியின் பாங்கும் அத்தகையதாம். அவளுடைய பார்வைக்கு இலக்காகின்ற ஜீவர்கள் ஜீவபோதத்தைத் துடைத்துவிட்டுப் பரபோதத்தில் ஒன்றுபடுகின்றனர். அவளுடைய பார்வை உயிர்வகைகளுக்குப் பரமானந்தத்தை ஊட்டுகிறது. அவற்றின் உலக வாழ்க்கை இனிது நிறைவேறுகிறது. இதுவே இந்நாமத்தின் உட்கருத்தாம்.

**मोहिनी — மோஹினீ** ५६२

மோஹம் அடையும்படி செய்பவள்.

உயிர்வகைகளைக் காம மோஹத்தில் கட்டி வைக்கவல்ல கவர்ச்சி படைத்தவர்களாக இருக்கும் பெண்பாலர்கள் யாவரும் அன்னை பராசக்தியின் தோற்றங்களாகின்றனர். அதை முன்னிட்டு அம்பிகை ஜகன்மோஹினீ எனவும் இயம்பப் பெறுகிருள். அவளுடைய மோஹவலையில் அகப்பட்டுக்கொள்கின்ற ஜீவர்கள் பரக் காட்சியை மறந்துவிட்டு இகலோக இன்பக் காட்சியில் மயங்கி இருக்கின்றனர். அம்பிகையின் ஓர் அம்சமாகிய மோகனு சக்தி உயிர்கள் அனைத்தையும் பிரபஞ்சமோகத்தில் மூழ்கிக்

கிடக்கும்படி செய்கிறது. அவளுடைய அனுக்ரஹம் இல்லாதவர்கள் அந்த மோகவலையைத் தாண்டி அப்பால் செல்ல முடியாது.

சர்வகாலமும் தன் எல்லாவிதமான விபூதிகளோடும் இலங்கிக்கொண்டிருக்கும் அம்பிகை உலகில் ஆங்காங்கு மோகினியாகக் காட்சிகொடுக்கின்றாள். காமவலையில் வீழ்ந்து சீர்கேடடையும் ஜீவர்கள் சில பிறவிகளில் முயன்று முயன்று மோகத்தில் அகப்படாது மேல்நோக்கிப் போகிறார்கள். ஆத்ம சாதகன் ஒருவன் மோகினியாக மிளிர்கின்ற பெண்பால் ஒருத்தியைச் சந்திக்க நேர்ந்தால் தன்னை ஒரு சிறு குழந்தையாகப் பாவித்துக்கொள்ள வேண்டும். அவளை அன்னை பராசக்தியின் சொரூபமாகச் சிந்திக்க வேண்டும். மோஹினியின் மோஹவலையினின்று மீளுதற்கு இது உற்ற உபாயமாகிறது.

**मुख्या — முக்யா** ५६३

அனைத்துக்கும் முதற்காரணமாயிருப்பவள்.

அனைத்துக்கும் முதற்காரணமாயுள்ள மூலப்பிரகிருதி முக்கியப் பிராணன் என இயம்பப் பெறுகிறாள். பிரளய காலத்தில் உள்ள தோன்றாநிலையிலிருந்து சிருஷ்டி உருவெடுக்கும்பொழுது முதன் முதலில் தோற்றத்துக்கு வருவது ஹிரண்ய கர்ப்பன். இச்சொல் பிரம்மதேவனையும் குறிக்கிறது. இங்ஙனம் தோற்றத்துக்கு வந்துள்ள முதல் மூர்த்தி அனந்தங்கோடி மூர்த்திகளாக வடிவெடுக்கிறான். இத்தனைக்கும் அம்பிகையே முதற்காரணம். பிரபஞ்சக் காட்சியைப் புறக்கணிப்பதும் பரக்காட்சியைப் பாவனை பண்ணுவதும் ஆத்மசாதனமாகின்றது. அன்னை பராசக்தியே மாயப் பிரபஞ்சத்துக்கு மூலகாரணமாயிருக்கின்றாள் என்று சிந்தனை பண்ணுகின்றபொழுது பிரபஞ்சக் காட்சிகள் யாவும் மறைந்து பரபோதம் தானாக வடிவெடுக்கின்றது.

**मृडानी — ம்ருடானீ** ५६४

பரமசிவனுடைய பத்தினியாக மிளிர்பவள்.

பரமசிவன் உயிர்களனைத்துக்கும் இன்பத்தை நல்குகின்றார். முக்குணங்களில் கட்டுண்டிருக்கும் உயிர்வகைகள் சத்துவகுணத்தின் காரணமாக இன்பத்தில் திளைத்திருக்கின்றன. அத்தகைய சத்துவகுணமாக வடிவெடுத்திருப்பவர் சிவனார். ம்ருடன்

என்றால் உயிர்களனைத்துக்கும் இன்பத்தை நல்குகின்றவர் எனப் பொருள்படுகிறது. அதே செயலை அம்பிகையும் செய்து வருவதால் அவள் ம்ருடானீ எனப் பெயர் பெற்றுள்ளாள். சிவன் வேறு, சக்தி வேறு அல்லர் என்னும் கோட்பாடு இதன் வாயிலாக நமக்கு ஞாபக மூட்டப்படுகின்றது. இன்பத்தில் திளைத்திருக்கின்ற ஆத்ம சாதகர்கள் அந்த இன்பத்துக்கு வசப்படுவார்களானால் அவர்கள் கீழ்மையுறுகின்றனர். அந்த இன்பம் அம்பிகையினுடைய மகிமை எனக் கருதி அதை அவள் மயமாகப் பாவிக்கின்றபொழுது சாதகர்கள் மேன்மையுறுகின்றனர்.

**मित्ररूपिणी — மித்திரரூபிணீ** ५६५

அன்பு வடிவினளாக இலங்குபவள்.

தம்மைத் தாக்கவும், துன்புறுத்தவும், தடைகள் போடவும் முயலும் பகைவர்களைச் சமாளிப்பது வாழ்க்கையில் ஜீவர்களுக்குரிய ஒரு பயிற்சியாகிறது. சத்ருக்கள் இருப்பது போன்று அவர்களுக்கு மித்ருக்களும் இருப்பது இயல்பு. அன்பே வடிவெடுத்துள்ள மித்ருக்களுடன் ஒட்டி உறவாடும்பொழுது வாழ்வின் இன்பம் முன்னணிக்கு வருகின்றது. நிலையற்ற மண்ணுலகில் நிலைத்து வாழ உயிர்வகைகள் முயலுவதற்குக் காரணம் அவைகள் தம்மை உள்ளன்போடு நேசிப்பவர்களைப் பிரிந்து போக விரும்புவதில்லை. அன்பர்களின் கூட்டுறவே நிலவுலக வாழ்க்கைக்கு இனிமையை வழங்குகிறது. அத்தகையை அன்பர்களின் சொரூபமாக அம்பிகை இருக்கின்றாள்.

பரவஸ்துவுக்குரிய கோட்பாடு சூரியனுக்கும் பொருந்துகிறது. அதை ஆண்பாலாகவும் பெண்பாலாகவும் கருதலாம். அதற்குரிய பெயர்களுள் மித்ரன் என்பதும் ஒன்று. சூரியனின் சான்னித்தியத்தை உயிர்களனைத்தும் விரும்புகின்றன. அத்தகைய சூரிய தேவதை அம்பிகையின் சொரூபமாம். சூரியனைப் போற்றுவதும் அம்பிகையைப் போற்றுவதும் ஒன்றே.

**नित्यतृप्ता — நித்யத்ருப்தா** ५६६

காலமெல்லாம் திருப்தியோடிருப்பவள்.

நிறைநிலையின் விளைவாகத் திருப்தியுற்ற மனநிலை உண்டாகிறது. மண்ணுலகில் வாழ்ந்துவரும் அனந்தங்கோடி உயிர்வகை

கள் அனைத்துக்கும் ஏமாற்றமும் மனத்திருப்தியும் மாறி மாறி அமைகின்றன. சிறிது நேரத்திற்கு உண்டாகும் நிறைவு நெடு நேரம் பட்ட துயரத்துக்கு ஈடு தருகிறது. உயிர்வகைகளுக்கு அப்போதைக்கப்போது வந்தமையும் நிறைவுகள் பரமானந்தத்தை ஊட்டுகின்றன. ஆதலால் தான் அவை நிலவுலக வாழ்வை நீத்து விட விரும்புவதில்லை. அம்பிகையின் அம்சங்களாக் வந்துள்ள ஜீவர்கள் யாவும் அவ்வப்பொழுது ஏதேதோ காரணங்களை முன்னிட்டுத் திருப்தியடைந்திருக்கின்றன. யாண்டும் திருப்தி சொரூபமாக இலங்கும் அம்பிகையின் மகிமையால் அந்தப் பெருநிலை அவைகளுக்கு வந்து வாய்க்கின்றது.

**भक्तनिधिः — பக்த நிதி:** ௫௬௭

பக்தர்களுக்குப் பொக்கிஷமாக இருப்பவள்.

செல்வம் படைத்திருப்பவர்களுக்குக் குறையொன்றுமில்லை. ஏராளமான செல்வம் நிரம்பி இருக்கும் இடம் பொக்கிஷமாகிறது. பக்தர்கள் தம் உடல், பொருள், ஆவி அனைத்தையும் அம்பிகைக்கு உரியவைகளாக்குவதன் வாயிலாக அவர்கள் அம்பிகை மயமாகின்றனர்; குறையொன்றுமில்லாத நிறைநிலை படைத்தவர்களாகின்றனர். நிறைபொருளாகிய அம்பிகை அவர்களுக்குச் சொந்தமாகிறாள்.

அன்னை வறுமையில் வாடினாலும் அவளுடைய குழந்தைகளுக்கு வறுமையில்லை. ஏனென்றால் அன்னையின் அன்பில் சிசுவானது நிறைமனம் படைத்திருக்கிறது. சாதாரண மாது ஒருத்தியின் அன்பு அத்தகையது என்றால் பரதேவதையைப் பற்றிய பேச்சு எதற்கு? பராசக்தியைத் தனக்குச் சொந்தமாக்கிக் கொள்ளும் பக்தன் இகபரத்துக்குரிய அனைத்தையும் அடையப் பெற்றவனாகிறான். அவளுடைய அன்பில் ஊறியவனாக அவன் பரமானந்தத்தில் திளைத்திருக்கிறான்.

**नियन्त्री — நியந்த்ரீ** ௫௬௮

அகிலாண்டங்களையும் நல்வழியில் நடாத்துபவள்.

தனி மனிதன் ஒருவன் கொஞ்சகாலம் நெறி பிறழ்ந்தவனாக நடக்கிறான். பிறகு தன் போக்கு உதவாது என்பதைத் தானே அறிந்து கொள்கிறான். சில வேளைகளில், சில பிறவிகளில் நெறி

பிறழ்ந்தவனாக மனிதன் இருக்கலாம். அதன்பிறகு அவன் நல்வழிக்குத் திரும்புவது நிச்சயம். தொடர்ந்து தீயவழியில் யாருமே செல்ல முடியாது. சந்திர, சூரியர்கள் எப்பொழுதாவது நிலை தடுமாறிப் போகின்றார்களா? எண்ணிறந்த கோளங்களின் ஒழுங்குப்பாடே அம்பிகையின் ஆட்சிக்கு எடுத்துக்காட்டாகிறது. சேதனம், அசேதனமாகிய அண்டகோடிகளனைத்தையும் அன்னை பராசக்தி யாண்டும் நல்வழியிலேயே நாடாத்தி வருகிறாள். அவை யாவும் படைத்துள்ள ஒழுங்குப்பாடு அவளுடைய மகிமையாம்.

**निखिलेश्वरी — நிகிலேச்வரீ** ५६९

பிரபஞ்சம் முழுவதுக்கும் ஈச்வரியாக இருப்பவள்.

தங்களுக்குள் சண்டையிட்டுக்கொள்ளும் சிற்றரசர்கள் தம் சக்கரவர்த்தியின் ஆணைக்குட்பட்டு நடந்துகொள்வர். பிரபஞ்சத்தில் உள்ள ஒவ்வோர் அண்டமும் அதனதன் இயக்கத்தை ஒழுங்காக நடாத்தி வருகின்றது. அவையாவும் ஒன்றோடொன்று முரண்படாமலும் குழப்பத்தை உண்டாக்காமலும் இனிது இயங்கி வருகின்றன. அவையாவும் பராசக்தியின் திட்டத்துக்கு உட்பட்டவைகளாம். அண்டத்திலிருப்பது பிண்டத்திலும் இருக்கிறது என்கிறோம். அதாவது அன்னை பராசக்தியின் ஒரே திட்டம் தான் ஓர் அணுவிலும், பிண்டத்திலும் அண்டத்திலும் காணப்படுகிறது. அவைகளுக்கிடையில் பிணக்கோ, முரண்பாடோ நேருவதற்கே அவகாசமில்லை. ஏனென்றால் அன்னை பராசக்தி தானே பிரபஞ்ச முழுதுக்கும் ஈசுவரியாக இருந்து அவைகளை நடாத்தி வருகின்றாள்.

**मैत्र्यादि वासनालभ्या — மைத்ர்யாதி வாஸனாலப்யா** ५७०

மைத்ரி முதலான நல்ல வாசனைகளால் அடையக் கூடியவள்.

மனப்பாங்கு வாசனை எனப்படுகின்றது. நல்ல மனப்பான்மை படைத்திருப்பது ஆத்ம சாதனத்துக்கு இன்றியமையாதது. நீண்ட பயிற்சியின் விளைவாக நல்ல மனப்பான்மை (Right Disposition) வந்தமைகிறது. அதில் நான்கு வகைகள் உள்ளன. சினேக பாவத்துடனிருப்பது மைத்ரீ எனப்படுகிறது. ஆத்ம சாதகன் ஒருவன் சதாச்சாரமும் நேர்மையான வாழ்க்கை

யும் அமையப்பெற்றிருப்பவர்களுடன் தோழமை பூணலாம். ஒருவன் எத்தகைய தோழர்களைச் சேர்த்திருக்கிருன் என்பதினின்று அவனுடைய மனபரிபாகம் வெளியாகிறது. நல்லாரிணக்கம் ஆத்ம சாதகனுக்குப் பேருதவியாகும்.

எக்காரணத்தை முன்னிட்டாவது ஒவ்வொரு மனிதனுக்கும் ஏதேனும் ஒரு காலத்தில் துன்பம் நேரிடுகிறது. துன்பப்பட்டுக் கொண்டிருப்பவனிடத்து இரக்கம் காட்டும் இயல்பு கருணை என்று கூறப்படுகிறது. பிறர் துன்பத்தைத் தன்துன்பமாகக் கருதிப் பிறருக்கு இரக்கம் காட்டுவது தெய்விகஇயல்பு. கருணைகரன் என இறைவன் இயம்பப்படுகிருன். அத்தகைய கருணை மனிதன் ஒவ்வொருவனிடத்திலும் அமைந்திருக்குமாகில் அவன் தெய்விக இயல்பில் வளர்பவனுகிருன்.

அறநெறி பிறழாது ஒழுங்குப்பாடுடன் வாழ்ந்திருப்பவர்களைப்பார்த்து மகிழ்வடைவது முதிதா என்று மொழியப்படுகிறது. நன்னெறியில் நிலைத்திருப்பவர்கள் எல்லாருடனும் இணக்கம் வைத்திருப்பது சாத்தியமன்று. ஆனல் அன்னவர்கள் வாழும் நேர்மையான வாழ்வைப் பார்த்து மகிழ்வடைந்திருப்பது முற்றிலும் அவசியமானது. பிறர் நலனையும் முன்னேற்றத்தையும் பார்த்து இன்புற்றிருப்பவன் தானே இனியவனுகிருன்.

துஷ்டர்களும் சிற்றியல்பு படைத்திருப்பவர்களும் உலகில் இருந்துவருகிருர்கள். அவர்களுடைய சிற்றியல்புகளைக் கருத்தில் வாங்கிக்கொள்ளும்பொழுதெல்லாம் ஒருவனுடைய மனதில் மாசு படிகிறது. உலகிலுள்ள கேடுகளைப் பொருள்படுத்தாதிருப்பது நல்ல ஆத்ம சாதனமாகிறது. இங்ஙனம் பராமுகமாய் இருப்பது உபேக்ஷா எனப்படுகிறது. சேற்றில் வாழும் சேற்றுமீன் தன் மேனியின் மீது சேறு படியாது யாண்டும் பளபளப்பாகவே இருக்கிறது. அதே பாங்கில் உபேக்ஷை வடிவெடுத்திருப்பவன் உலகில் உள்ள தோஷங்களைத் தன் கருத்தில் வாங்கிக்கொள்ளாது உதாசீனனுக இருக்கின்ருன். தெய்விகச் சித்தவிருத்திகள் அவன் உள்ளத்தில் சதா வடிவெடுத்துக்கொண்டிருக்கின்றன. கேட்டைக் கருத்தில் வாங்குபவன் அதை ஒழிப்பதற்கு மாருக அதை வளர்ப்பவனுகிருன். நலத்தை வளர்ப்பதே கேட்டைத் தகர்ப்பதற்கு உற்ற உபாயமாகிறது.

ஈண்டு இயம்புபிள்ள நான்கு வாசனைகளும் அந்தக்கரண சுத்திக்கு முற்றிலும் அவசியமானவைகளாம். அந்தக்கரண சுத்தி அடையப் பெறுபவன் எளிதில் சித்தபுருஷன் ஆகிறான். மேலான வாசனைகளில் நிலைத்திருக்கும் ஆத்மசாதகனுடைய வாழ்வு முழுவதும் இடையறாத வழிபாடாக வடிவெடுக்கிறது.

**महाप्रलयसाक्षिणी** — மஹாப்ரளய ஸாக்ஷிணீ ५७१

மஹாபிரளயத்துக்குச் சாட்சியாக இருப்பவள்.

பிரபஞ்சம் முழுவதும் தோற்றத்துக்கு வருவது சிருஷ்டி. அவை யாவும் ஒடுங்குவது பிரளயம். இயற்கையின்கண் நிகழ்வது நம் கால அளவையில் கட்டுப்படாதது. இரவில் நாம் படுத்துத் தூங்கும்பொழுது நம் ஜீவ வியக்தி ஒடுங்கிப் போகிறது. அது நமக்குப் பிரளயம். நாம் அனுபவிக்கும் சுஷுப்தி அவஸ்தை நமக்குப் பிரளயமாக அமைந்துள்ளது. காலையில் நாம் விழித்து எழுந்திருப்பது நமக்குச் சிருஷ்டி. நம் வியக்தியும் நாம் காண்கின்ற உலகும் அப்பொழுது தோற்றத்துக்கு வருகின்றன. பிரம்மதேவன் முதற்கொண்டு பண்பாடு அடைந்து பிரம்மலோகத்தில் வசித்துவரும் பதவி முக்தர்கள் எல்லாரும் கிரம முக்தியடைகின்றார்கள். ஒரு பிரம்மதேவன் முக்தியடைந்தான பிறகு அவன் ஆயுள் எவ்வளவு நீண்டதாயிருக்கிறதோ அவ்வளவு காலம் பிரளயமாக இருக்கிறது. அது மஹாபிரளயம் எனப்படுகிறது. நம் கால அளவையை வைத்துக்கொண்டு அந்த மஹாபிரளயத்தை அளக்க இயலாது. இயற்கையின்கண் நிகழ்ந்து வருகிற விரிவான நிகழ்ச்சி நம்மிடத்துச் சுருக்கமாக நாள்தோறும் நடந்துவருகிறது. அனைத்தும் ஒடுங்கிப் போகும் மஹாபிரளயத்தில் சுத்த சைதன்யமாயிருக்கும் அன்னை பராசக்தி ஒடுங்கிப்போவதில்லை. அதற்குச் சாட்சியாக அவள் தன் விகாரமற்ற நிலையில் இருந்து வருகிறாள்.

மஹாபிரளயத்தில் பிரம்மதேவனும் அவனுடைய கூட்டங்களும் மறைந்துபட்டுப் போகின்றன. அதற்குச் சாட்சியாகச் சைதன்ய சொரூபிணியாகிய அம்பிகை தன் சொரூபத்திலேயே திளைத்திருப்பதால் அவள் மஹாபிரளய ஸாக்ஷிணீ எனப் போற்றப் பெறுகிறாள்.

**पराशक्तिः —பராசக்தி:** ५७२

ஒப்புயர்வற்ற சக்தியாக இருப்பவள்.

கனி ஒன்றுக்குச் சக்திதரும் பாங்கு உண்டு. அதன் விதையின்கண் மற்றொரு செடியை அல்லது மரத்தை உண்டுபண்ணக் கூடிய சக்தி அடங்கியிருக்கிறது. மானுட அமைப்பில் மஜ்ஜை, சுக்லம், பிராணன் ஆகியவை உயிர்த்தத்துவம் நிறைந்த சக்திகளாகின்றன. தத்துவபூர்வமாகப் பார்க்குமிடத்து எது தோற்றத்துக்கு வருகின்றதோ அது சக்தியில் மட்டமானதாக இருக்கிறது. சூட்சுமமாக மாறியமைபவைகளிடத்துச் சக்தி மேலோங்குகிறது. ஜலமானது உறைபனிக்கட்டியாகிய கடின பதார்த்தமாகவும், நீராகிய திரவப் பதார்த்தமாகவும், ஆவியாகிய சூட்சுமப் பதார்த்தமாகவும் உள்ளது. நீராவிக்கு இருக்கிற வல்லமை நீருக்கு இல்லை. நீருக்கு உள்ள வல்லமை பனிக்கட்டிக்கு இல்லை. சூட்சும நிலைக்குப் போகப் போக வஸ்துவின் வல்லமை அதிகரிக்கிறது. அதி சூட்சும நிலையில் பிரகிருதி தத்துவத்தையும் புருஷ தத்துவத்தையும் பாகுபடுத்த முடியாது. அங்நிலையில் அது சுத்த சைதன்யமாக விளங்குகிறது. வல்லமையில் அதற்கு நிகரானது ஏதுமில்லை. அத்தகைய மூல நிலையில் அம்பிகை இருப்பதால் அவள் பராசக்தி எனப் போற்றப் பெறுகிருள்.

**परानिष्ठा—பரா நிஷ்டா** ५७३

பேரியக்க வடிவினள்.

ஓர் இலட்சியத்தின் கண் செலுத்தப்படும் முயற்சிகளனைத்துக்கும் நிஷ்டை என்பது பொதுப் பெயர். சாதகன் ஒருவனுடைய செயல்களனைத்தும் அவனுடைய வழிபடு தெய்வத்துக்கே உரியன ஆக்கப்படுகின்றன. காந்த ஊசி எல்லாச் சூழ்நிலைகளிலும் வடதிசையையே நோக்கிக்கொண்டிருப்பது போன்று சாதகனுடைய அமைப்பு முழுவதும் அவனுடைய இஷ்ட மூர்த்தியின் கண் படைக்கப்படுவதாகிறது. ஆதலால் அவன் கொண்டிருக்கிற அருள் நாட்டம் பராநிஷ்டையாகிறது.

முயற்சிகள் யாவும் முடிவில் ஞானவடிவெடுக்கின்றன. நிகரற்ற ஞானமும் பரம்பொருளைப் பற்றியதாகுங்கால் அது பராஞானம் என்று பெயர்பெறுகிறது. சாஸ்திர ஆராய்ச்சி, சிரவணம்,

மனனம், நிதித்யாசனம் ஆகிய சாதனங்களின் விளைவாக அத்தகைய ஞானம் வந்து வாய்க்கிறது. பரப்பிரம்மமே மூலப்பொருள் என்னும் செய்தி சாஸ்திரங்களினின்று கிடைக்கிறது. அப்பர வஸ்து நிறைஞானி ஒருவரால் தெளிவுபட விளக்கப்படுகிறது. அவ்விளக்கத்தை ஊக்கத்தோடு கேட்டு அறிந்துகொள்ளுதல் சிரவணமாகிறது. கேட்டறிந்த பொருளை இடையருது எண்ணிப் பார்ப்பது மனனம் எனப்படுகிறது. மனனம் முதிருங்கால் அது நிதித்யாசனம் அல்லது ஞான அனுபூதி ஆகின்றது. இத்தகைய ஞான சாதனம் தீவிரமாக நிகழுங்கால் அது பராநிஷ்டா என்று பெயர்பெறுகிறது. அதில் திளைத்திருப்பதற்கு நிகரான பேறு இல்லை. பிரம்ம ஞானத்தைப் பெறுபவன் தானே பிரம்ம சொருபமாகிருன் என்பது இந்நாமத்தில் அடங்கியுள்ள கோட்பாடு ஆகும்.

**प्रज्ञानघन रूपिणी** — ப்ரக்ஞானகன ரூபிணீ ௫௭௪

*திரண்ட பேரறிவு வடிவினள்.*

பஞ்ச பூதங்களுள் நிலம், நீர், அக்னி, காற்று ஆகிய நான்கு பூதங்களுக்கும் ‘ திரண்ட என்று பொருள்படும் ‘ கன ’ என்னும் பதம் அடைமொழியாக அமைகிறது. நிலத்திலும், கடலிலும் ஆழ்ந்து போகப் போக அழுத்தம் அதிகம். அக்னிக்கும் அதே கோட்பாடு பொருந்துகிறது. வைக்கோல் எரிவதால் உண்டாகும் உஷ்ணத்தை விடப் புளியம் விறகு எரிவதால் ஏற்படும் உஷ்ணம் அதிகம். காற்றினிடத்தும் கீழ்ப்பகுதியில் அழுத்தம் அதிகம். மேலே போகப் போக அதன் அழுத்தம் குறைகின்றது. ஆனல் ஐந்தாவது பூதமாகிய ஆகாசத்தில் இலேசான பகுதி என்றும் கடினமான பகுதி என்றும் இல்லை. நீக்கமற எங்கும் நிறைந்திருக்கும் ஆகாசமானது யாண்டும் ஒரே பாங்குடையதாய் இருக்கிறது. அதே பாங்கில் சிதாகாசத்தில் அழுத்தமான பகுதியும் தளர்வடைந்த பகுதியும் இல்லை. நிர்விகாரமான அதனிடத்து ஏற்றத் தாழ்வு கிடையாது. நிறைநிலை, குறைநிலை என்பன பரவஸ்துவுக்கு இருக்குமானல் அது பூரணப்பொருளாகாது. அகண்டமாயுள்ள ப்ரக்ஞானத்துக்கு யாண்டும் ஏற்றத்தாழ்வு அற்ற சமநிலை உரியதாகிறது.

மனமானது இந்திரிய சுகத்தில் அல்லது துக்கத்தில் ஆழ்ந்து ஈடுபடும்பொழுது சுகத்தையோ துக்கத்தையோ அது மிகைப்பட அனுபவிக்கின்றது. மனதின் உணர்வு வலிவு குன்றுவதற்கேற்ப இன்ப துன்ப அனுபவமும் சாமானியமானதாக இருக்கிறது. மலினப்பட்டிருக்கும் கண்ணுடியில் சூரிய பிம்பம் குறைந்த ஒளி உள்ளதாகிறது. பாதரசம் தீட்டப்பெற்றுத் திரண்டிருக்கின்ற கண்ணுடியின்மீது சூரிய பிம்பம் பன்மடங்கு அதிகரிக்கின்றது. அதே விதத்தில் பரநாட்டத்தில் திரண்டிருக்கின்ற மனதின்கண் ஆத்ம சைதன்யம் சித்கனமாகப் பிரகாசிப்பதுபோன்று தென்படுகின்றது. 'ஓயாதே உள்குவார் உள்ளிருக்கும் உள்ளானை' என்னும் கோட்பாடு மனதின் திரட்சிக்கு' ஒத்ததாகிறது. அந்தக்கரண விருத்திதான் யாண்டும் சமநிலை வகிக்கும் ப்ரக்ஞானத்தின்பால் உயர்வு தாழ்வு இருப்பதுபோன்ற தோற்றத்தை உண்டு பண்ணுகின்றது. ப்ரக்ஞானமோ யாண்டும் தன் மயமாய் உள்ளது. பரவஸ்துவின் பேரமைப்பில் உயர்வு தாழ்வு என்னும் விகாரம் ஒருபொழுதும் இல்லை. எல்லாவிடங்களிலும் ஆகாசம் யாண்டும் தன்மயமாய் இருப்பதுபோன்று ப்ரக்ஞானம் யாண்டும் மாருது தன்மயமாய் உள்ளது என்பதையே ப்ரக்ஞான கனம் அல்லது சிதாகாசம் என்னும் பதம் தெளிவுபடுத்துகிறது.

**माध्वीपानालसा — மாத்வீபாஞலஸா** ५७५

மாத்வீ பானத்தினின்று உண்டாகின்ற உள்முக நோக்கத்தோடு இருப்பவள்.

திராட்சைப் பழ ரசத்தினின்று மாத்வீபானம் ஆயத்தப்படுத்தப்படுகின்றது. அது எவ்வளவுக்கெவ்வளவு பழையதாயிருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு அதன் சக்தி அதிகரிக்கிறது. அதனை அளவெடுத்துப் பானம் பண்ணுகின்றவர்கள் உற்சாகம் மிகப் பெற்று சாதனங்களைத் தீவிரமாகச் சாதிக்க வல்லவர்களாகின்றனர். அலசா என்ருல் மனதை உள்முகமாகத் திருப்புதல் என்று பொருள். மனதை உள்முகமாகத் திருப்பிய தியானநிலை சாதனங்களுள் தலைசிறந்ததாகிறது. முதிர்ந்த தியானம் சமாதி எனப்படுகின்றது. சாதனங்களுக்குப் பிரபஞ்சப் பொருள்களெல்லாம் பொருத்தமான பாங்கில் கையாளப்படுகின்றன. புளித்துப் போன திராக்ஷாரசம் அம்பிகைக்கு நைவேத்தியமாகப் படைக்

கப்படுகின்றது. அதை ஏற்றுக்கொண்டதன் விளைவாக அம்பிகை தானே அந்தர்முகத் திருஷ்டியில் திளைத்திருக்கிருள் என்பது ஐதிகம். அதே பாங்கில் சக்தி உபாசகர்களும் திராக்ஷைப் பழ ரசத்தைப் பிரசாதமாக ஏற்றுக்கொண்டு ஆழ்ந்து தியானத்தில் ஈடுபடுகின்றனர். அன்னவர்களின் மனம் எளிதில் உள்முக மாகத் திரும்பித் தியானநிலை கைகூடுகின்றது என்பது இந் நாமத்தின் கருத்தாம்.

**मत्ता — மத்தா** ௫௭௬

மயங்கியிருப்பவள்.

மதுவர்க்கங்கள் உண்டுபண்ணக்கூடிய போதையானது வரம்புக்குட்பட்டதாயிருக்குமாகில் அது அரிய பெரிய காரியங் களை ஆற்றுவதற்குப் பயன்படுகிறது. ஆகையால் அத்தகைய மயக்கத்தை வருவிப்பதும் ஒருவகைச் சாதனத்தில் ஆமோதிக் கப்படுகிறது.

மத் என்னும் சப்தம் 'அஹம்' என்பது உருவெடுப்பதைக் குறிக்கின்றது. 'அஸ்மத்' என்பது நான் என்னும் உணர்ச்சி யாம். பரமசிவனிடத்து 'அஸ்மத்தா' அல்லது 'நான் இருக்கி றேன், என்னும் உணர்ச்சியாயிருப்பது சக்தியின் லீலையாம். அந்த உணர்ச்சி ஓங்குதற்கேற்ப ஜீவாத்மாக்கள் பெருநிலைக்குப் பரிணமித்து வருகிருர்கள். அது தெளிந்த தூய நிலை அடையும் பொழுது சிவசொரூபமாகிறது. அத்தகைய நிலையை அம்பிகை உண்டு பண்ணி வைப்பதால் அவள் மத்தா என்று போற்றப்படு கிருள்.

**मातृकावर्ण रूपिणी — மாத்ருகா வர்ண ரூபிணி** ௫௭௭

எழுத்துக்களின் வடிவத்தில் இருப்பவள்.

பிரகிருதியில் ஒலி, ஒளி ஆகிய இரண்டும் முக்கியமான இடம் பெறுகின்றன. ஒலி வடிவத்திலிருப்பதைக் காதால் கேட் கிரோம். ஒளி வடிவத்திலிருப்பதைக் கண்ணல் பார்க்கிரோம். இயற்கையின்கண் அமைந்திருக்கும் விதவிதமான ஓசைகள் யாவும் சம்ஸ்கிருத பாஷையின் ஐம்பத்தோர் அக்ஷரங்களாக அமைந்திருக்கின்றன. எது அழிந்துபட்டுப்போவதில்லையோ அது அக்ஷரம் எனப்படுகின்றது. பரப்பிரம்மத்துக்கு நாதப்

பிரம்மம் என்பது ஒரு பெயர். பலப்பல வடிவெடுக்கும் ஓசை அழிந்து பட்டுப்போவதில்லை. ஆதலால் 'ஓசை ஒலியெல்லாம் ஆனாய் நீயே' என்னும் கோட்பாடு வந்துள்ளது.

உலகில் உள்ள ஒவ்வொரு மொழிக்கும் சிறப்பு ஒலியொன்று அமைந்திருக்கின்றது. ஆங்கிலத்தில் Z, F என்னும் அக்ஷரங்களும் தமிழில் ழ, ற ஆகிய அக்ஷரங்களும் அவ்வாறு சிறப்பாக அமைந்தவை. உலகில் உள்ள எல்லா மொழிகளின் ஓசைகளையும் சம்ஸ்கிருத பாஷையில் கொண்டுவந்து அடக்கலாம். எனவே அது தேவ பாஷை எனவும் நிறைமொழி எனவும் அழைக்கப்படுகிறது.

உச்சரிப்புக்கு எட்டாத அமாத்ரப் பிரணவத்திலிருந்து அ, உ, ம் ஆகிய மூன்று எழுத்துக்களடங்கிய மாத்ரப் பிரணவம் தோற்றத்துக்குவருகின்றது. ஓசையின் தோற்றம்—அ, இருப்பு—உ, முடிவு—ம் ஆகியவை ஓங்காரமாகின்றன. ஓசையினுடைய ஸ்தூலத்தோற்றம் இப்பிரபஞ்சமாகும்.ஒலியை அடிப்படையாகக் கொண்டு எழுத்துக்கள் கூட்டம் கூட்டமாகப் பிரிவுபடுகின்றன. அவ்வாறு விரிவடையும் ஸப்த ஸ்வரங்களினின்று உருவாகும் அனைத்து எழுத்துக்களும் அகரத்தில் தொடங்கி மகரத்தில் முடிவுறுகின்றன. அவையெல்லாம் அம்பிகையின் சொரூபத்தில் நிலைபெற்றிருந்து அம்பிகையின் சொரூபத்தில் ஒடுங்குகின்றன.

ஓசைகளையெல்லாம் காதால் கேட்டு நாவால் கிளப்பி நாம் பழகி வருவதால் அவை இயற்கையில் நிலைபெற்றுள்ளன. சம்ஸ்கிருத மொழியை நன்கு பேசக் கற்றுக்கொள்கின்ற ஒருவன் மற்ற எல்லா மொழிகளையும் எளிதில் கற்றுக்கொள்ள வல்லவனாகிறான். மொழிகளின் எல்லா ஓசைகளையும் கருத்துக்களையும் சம்ஸ்கிருத மொழியில் உள்ள வேதங்கள் தம்முள் அடக்கியிருக்கின்றன.

வர்ணம் என்றால் நிறம் என்று ஒரு பொருள் உண்டு. கண்ணிற்குப் புலப்படாத ஒரு நிறம் புலனாகின்ற ஏழு நிறங்களாகப் பரிணமிக்கிறது. ஏழுவித ஓசைக்கும் ஏழுவித நிறத்துக்கும் தொடர்பு உண்டு. மஞ்சள் நிறமான தங்கத்தைக் காய்ச்சினால் அது வெண்ணிறத்துடன் ஒளிரும். இக்கோட்பாட்டின்படி எழுத்துக்கள் நிறம்பெற்றிருக்கின்றபோது அவை சக்தி சொரூபமா

யுள்ளன என்று கருதப்படுகிறது. ஓசையின் சலனம் அதிகரிக்கின்றபொழுது வெவ்வேறு நிற எழுத்துக்கள் வெண்ணிறத்துடன் ஒளிர்கின்றன. அது சிவ சொரூபம் ஆகிறது. சிவமும் சக்தியும் ஒன்று என்னும் கோட்பாடு அதினின்று தெளிவாகிறது.

சக்தியின் சொரூபம் உடல்; சிவசொரூபமாயிருப்பது உயிர். சிவசக்தியின் அமைப்பு யாண்டும் ஒரே திட்டத்தை அடிப்படையாகக் கொண்டது. பரமாத்மன் அகிலாண்டத்தையும், ஜீவாத்மன் மானுட சரீரத்தையும் மேனியாகக் கொண்டுள்ளனர். பிண்டத்தில் இருப்பது அண்டத்திலும் இருக்கிறது. ஒழுங்குப்பாடு தவறாத அகிலாண்டத்தின் அமைப்பே இறைவன் சிருஷ்டித்துள்ள ஸ்ரீ சக்கரமாகிறது. அதில் உயிர் எழுத்துக்களும் மெய் எழுத்துக்களும் பொருத்தமான பாங்கில் இடம் பெற்றுள்ளன. சிவனுடைய சான்னித்தியம் ஜகத் மயமாயிருக்கும் சக்தியினூடு சேர்ந்திருக்கின்றது.

தீர்க்கதரிசிகளான ரிஷிகள் அண்டத்தின் பேரமைப்பை ஓசைமயமாக அனுபூதியில் அறிகின்றனர். ஓசையை மாற்றுவதன் மூலம் அண்டத்தின் அமைப்பைத் திருத்தியமைக்கலாம் என்று அவர்கள் கண்டறிந்தனர். இஷ்ட மந்த்ரம் என்னும் ஓசையைக் கிளப்பிக்கொண்டிருப்பதன் மூலம் குறைநிலையுடைய பிண்டத்தையும் திருத்தியமைக்கலாம். மானுடன் ஒருவன் தானே ஓசை மயமாயிருக்கிறான். அவனுக்கு வாய்த்துள்ள மந்த்ரம் அவனிடம் இயல்பாய் அமைந்துள்ள ஓசையைத் திருத்தியமைக்கிறது.

எழுத்துக்கள் வர்ணங்கள் எனவும் பெயர் பெறுகின்றன. தீர்க்கதரிசிகள் மனிதனின் மன அமைப்பை ஞானக் கண்ணால் காண்கின்றனர். அவன் எந்த வர்ணத்தைச் சேர்ந்தவன் என்றும் அறிந்துகொள்கின்றனர். மன அமைப்பில் வெண்ணிறம் படைத்தவன் பிராம்மணன். செந்தாமரை நிறம், மஞ்சள் நிறம், கரு நிறம் ஆகியன முறையே க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் ஆகியவர்களுக்கு உரியனவாகின்றன. இந்த நிற அமைப்பு அகிலாண்டத்துக்கும் பொருந்துகின்றது. எழுத்துக்கள் அதற்கேற்றவாறு ஆங்காங்கு அமைந்துள்ளன. சிவமயமாயுள்ள எழுத்துக்கள் வெவ்வேறு நிறங்களுக்குக் கீழே வந்தால் அவை

சக்திமயமாகின்றன. இங்ஙனம் சிவசக்தி மயமாயுள்ள அகிலாண்டங்கள், பிண்டங்கள் ஆகியவற்றின் அமைப்பை மாத்ருகா வர்ண ரூபிணீ என்னும் நாமம் விளக்கிக் காட்டுகிறது. நாம் சிவ சக்தி மயமாக உலகைக் கண்டு பழகுதல் வேண்டும்.

**महा कैलास निलया — மஹா கைலாஸ நிலயா** ௫௭௮

மகா கைலாசத்தில் வீற்றிருப்பவள்.

யாண்டும் சிவ சொருபத்தில் செம்பாதியாக உள்ளவள் அம்பிகை. இருவருக்கும் சிறப்பான உறைவிடமாயிருப்பது கைலாசம். உயிர்களை ஓம்புதல் பொருட்டு சக்தி மூலப் பிரகிருதியாகவும், ஐம்பூதங்களாகவும் கீழ்நிலைக்கு இறங்கி வருகின்றாள். பிரபஞ்சமாகத் தோன்றிக்கொண்டிருப்பது அவளுடைய நிஜ சொருபத்தின் மிகச் சிறந்த பகுதியேயாம். அவளுடைய பெரு நிலை சிவனாரோடு ஒன்றுபட்டது.

ஆயிரம் இதழ்களை உடைய சஹஸ்ரதளமாக இருக்கும் ஏழாவது ஞானபூமிக்கு மகாகைலாசம் என்று பெயர். முதல் ஞானபூமியில் செயலற்றுச் சுருண்டு படுத்திருக்கும் அம்பிகை குண்டலினி என்னும் பெயர் பெறுகிறாள். தவத்தின் விளைவாகச் சிவபோதம் பெற்று எழுந்திருக்கும் குண்டலினி சக்தி ஸ்வாதிஷ்டானம், மணிபூரம், அனாஹதம், விசுத்தம், ஆக்ஞை ஆகிய ஞான பூமிகளுக்கு விஜயம் செய்துவிட்டுத் தன் யதாஸ்தானமாகிய சஹஸ்ரதள பத்மத்தில் சிவனோடு ஒன்றுபடுகிறாள். நிரந்தர வாசஸ்தலமாகச் சஹஸ்ராரம் இருப்பதால் அன்னை பராசக்தி மஹா கைலாஸ நிலயா என்று போற்றப்பெறுகிறாள்.

**मृणाल मृदुदोर्लता — ம்ருணால ம்ருதுதோர்லதா** ௫௭௯

தாமரைத் தண்டிலிருக்கும் மிருதுவான கொடி போன்ற கைகளை உடையவள்.

உறுதியும் வல்லமையும் பெற்றுள்ள ஆண்மேனியிடத்தும் மிருதுவும் மெல்லியல்பும்பெற்றுள்ளபெண்மேனியிடத்தும்இரண்டு விதமான விபூதிகள் மிளிர்கின்றன. ஆண்பால் வடிவம் ஆற்றல் மயமாகவும் பெண்பால் வடிவம் அன்பு மயமாகவும் இருக்கின்றன. வஜ்ரம் போன்ற கைகளைப் படைத்திருப்பவன் ஆண். தாமரைத் தண்டு போன்று மெல்லிய கரங்களைப் பெற்றிருப்பவள் பெண்.

அன்பு ஓங்கியிருக்குமிடத்தில் மெல்லியல்பை நாம் காண்கிறோம். மகா கைலாஸத்தில் அன்பும் ஆற்றலும் இணைபிரியாது அமைந்துள்ளன. அம்பிகையின் மெல்லியல்புக்கு விளக்கமாகத் தாமரைத் தண்டிலிருக்கும் நூல் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது.

**महनीया — மஹநீயா** ௫௮०

எல்லாராலும் போற்றப்படுபவள்.

மேற்போக்காகப் பார்க்குமிடத்து இறைவனைப் போற்றுப்வர்களும் தூற்றுபவர்களும் உலகில் இருக்கிறார்கள் என்று அறிகிறோம். ஆராய்ந்து பார்க்கும்பொழுது தூற்றுகிறவர்கள் யாருமில்லை என்பது புலனாகும். வெவ்வேறு படித்தரங்களிலிருக்கின்ற எண்ணரிய ஜீவாத்மாக்கள் தத்தம் அறிவுக்கு எட்டுகின்ற பாங்கில் போற்றிப் புகழ்வதற்கு உரிய பொருள்கள் பிரபஞ்சத்தில் இருக்கின்றன. அந்தப் பொருள்களனைத்துமாக அம்பிகை இலங்குகின்றாள் என்னும் உண்மை எல்லாருக்கும் விளங்குவதில்லை. ஆதலால் உயிர்களனைத்தும் நேராகவோ, மறைமுகமாகவோ அம்பிகையையே போற்றிப் பாராட்டிக்கொண்டிருக்கின்றன. அவளுக்குப் புறம்பாகப் பொருள் ஏதும் இல்லாததனால் அவளையே ஜீவகோடிகளனைத்தும் போற்றி வழுத்திக்கொண்டிருக்கின்றன.

**दयामूर्तिः — தயாமூர்த்தி:** ௫௮௧

தயையே வடிவெடுத்திருப்பவள்.

உயிர்களின் வளர்ச்சிக்குத் துணைபுரிகின்றவர்களைத் தயாமூர்த்திகள் என்றும் உயிர்களின் வளர்ச்சிக்குத் தடை செய்கின்றவர்களைக் கொடூர மூர்த்திகள் என்றும் பகர்கின்றோம். இயற்கையின்கண் உயிர்களின் வளர்ச்சிக்கு உதவி புரியும் சூழ்நிலைகளும் இடைஞ்சல் பண்ணுகின்ற சூழ்நிலைகளும் ஏராளமாக இருக்கின்றன. ஆயினும் அதில் ஓர் அதிசயம் இலங்குகின்றது. ‘எவ்வுடல் எடுத்தார். அவ்வுடல் வாழ்க்கை இன்பம்;எனவே துன்பம் இல்லை’ என்பது கோட்பாடு. எல்லா உயிர்களும் வெவ்வேறு விதங்களில் பாதுகாத்து வைக்கப்படுகின்றன. அத்தகைய பாதுகாப்புக்குப் பிறப்பிடம் அன்னை பராசக்தி. ஆதலால் அவள் தயாமூர்த்தி, இரக்கமே வடிவெடுத்தவள் என்று இயம்பப்படுகின்றாள்.

**महासाम्राज्य शालिनी**—மஹா ஸாம்ராஜ்ய சாலினீ ௫௮௨

பாராட்டுதற்குரிய மிகப் பெரிய சாம்ராஜ்யத்தை உடைத்திருப்பவள்.

சக்கரவர்த்தி ஒருவனுடைய ஆணைக்கு உட்பட்டிருக்கின்ற அரசாங்கங்கள் அனைத்தையும் தொகுத்து மஹாசாம்ராஜ்யம் என மொழிகிறோம். அண்டகோடிகளனைத்தும் ஜீவ கோடிகளனைத்தும் அம்பிகையினுடைய ஆட்சியில் இடம் பெறுகின்றன. அண்டங்களும் ஜீவகோடிகளும் அவளால் இனிது காப்பாற்றப் பட்டு வருகின்றன. அவளுடைய ஆதிக்கத்தை உள்ளபடி உணர்ந்து கொள்பவர்கள் அவளுக்குத் தலைவணங்குகின்றனர். அவளுடைய ஆட்சிக்கு உகந்த குடிமக்களாகின்றனர். அவளுக்கு உகந்த பக்தர்களாகவும் பக்திமதிகளாகவும் அவர்கள் திருந்தி யமைகின்றனர். அம்பிகையின் மகத்தான ஆட்சி முறையை எண்ணிப் பார்ப்பதே அவ்விடத்துப் பக்தியை வளர்ப்பதற்கு உற்ற உபாயமாகின்றது.

**आत्मविद्या** — ஆத்ம வித்யா ௫௮௩

ஆத்ம ஞான வடிவினளாயிருப்பவள்.

கலைகளுக்கு இருப்பிடமாகிய சரஸ்வதி தேவியே இன்னும் கற்றுக்கொண்டிருக்கிறாள் என்பது கோட்பாடு. அவ்வாறு கற்றுக் கொண்டே போனால் கலைஞானம் விரிவடைகிறது. ‘மறையாகிய நால் வேதம் உதித்தாய் போற்றி’ என்பது ஆன்றோர் வாக்கு. கல்வி கற்க இயலாதவர்களுக்குக் கல்வி மறைந்து கிடக்கிறது. கற்கக் கற்க ஞான வெளிச்சம் விரிவடைகிறது. கற்றது கைமண் ணளவு, கல்லாதது உலகளவு என்பார்கள். எது அறியப்படு கின்றதோ அது வித்தை. ஏதேனும் ஒரு கலையை ஆழ்ந்து ஆராய்ந்தால் அதன் கிளைகளாக வேறு பல கலைகள் உருவெடுக் கின்றன.

வித்தை ஓங்குமளவுக்கு அது கலைஞானத்தையும் அறிவானந் தத்தையும் வளர்க்கிறது. அதற்கீடாகத் திகைப்பும் துக்கமும் சித்தவிருத்திகளாக வளர்கின்றன. கல்லாத அறிவிலிக்குத் தான் அவ்வாறிருப்பது குறையாகத் தென்படுவதில்லை. மாறாக, அறிஞன் ஒருவனிடம் உள்ள குறைநிலையைச் சுட்டிக்காட்டி ‘இவன் பண்டித

மூடன்' என்று பகர்ந்தால் அவன் அளவற்ற வேதனை அடைவான். கல்வியின் விளைவாக அறிவு நாட்டமும் வளர்கின்றது. உடல் வாழ்விலுள்ள குறைநிலையைப் பற்றிய துக்கமும் அதிகரிக்கின்றது.

'கல்லாத பேர்களே நல்லவர்கள், நல்லவர்கள். கற்று அறிவில்லாத என் கன்மத்தை என் சொல்வேன்' என்று ஆன்றோர் ஒருவர் கூறுகின்றார். எதைக் கற்றால் மனிதன் அனைத்தையும் கற்றவனாகிறான் என்று பழங்கால ரிஷிகள் ஆராய்ந்தார்கள். எதைக் கற்றால் மரணத்தை மனிதன் வெல்ல முடியும் என்று அவர்கள் சிந்தித்தார்கள். மனிதனுடைய அமைப்பையே இதன் பொருட்டு ஆராய்ந்தனர். அதன் பெரும்பகுதி நிலையற்றது என்னும் உண்மையை அவர்கள் கண்டறிந்தனர். உணவை ஏற்கின்ற அன்னமயகோசமாகிய உடல் நித்திய வஸ்து அன்று. சிற்றுயிர்களும் கூட அழிந்துபட்டுப் போக விரும்புவதில்லை. உடலின் வாயிலாக அழியாத நிலையைப் பெறுதல் முடியாது. எனவே, மனிதன் தன் உள்ளத்தை ஆராய்ந்தான். அந்தக்கரணமாகிய உள்ளம் எண்ணம், உணர்வு, பகுத்தறிவு என்னும் பல கூறுகளை உடையதாக இருக்கின்றது. உணர்ச்சி அன்பாகவும், வெறுப்பாகவும் வடிவெடுக்கின்றது. நன்மை, தீமைகளைப் பாகுபடுத்தும் தெளிவு முதுமையில் மங்குகிறது. உள்ளமும் நிலை பேறுடையதாய் இல்லை.

ஆக்கத்துக்கும் அழிவுக்கும் மூலகாரணமாயுள்ள ஐம்பொறிகளுக்கு அடிமைப்பட்டிருக்கிறவர்கள் விரைவில் அழிந்துபோகின்றனர். மனிதன் ஆசைகளை அடக்கிப் புறத்தில் போகின்ற நாட்டத்தை உள்முகமாகத் திருப்பினான். தன் நிஜசொரூபம் உடல் அன்று, உள்ளம் அன்று, ஐம்பொறிகளும் அன்று என்னும் உண்மை அவனுக்குப் புலப்பட்டது. சச்சிதானந்தமே தன் நிஜ சொரூபம் என்பதை அனுபூதியில் அறிந்தான். அதுவே ஆத்மா; அழியக்கூடிய உடலினுள் அழிவற்ற ஆத்ம சொரூபம் மிளிர்ந்து கொண்டிருக்கிறது. ஞான அக்ஞான மயமான அந்தக்கரணத்துக்கு மெய்ஞ்ஞான வெளிச்சம் தருவது ஆத்மா. இன்பதுன்ப மயமான வாழ்வில் பேரானந்தமயமாயிருப்பது ஆத்மா. இதை அனுபூதியில் அறிகின்றவன் பாரமார்த்திகப் பெருநிலை எய்து

கிருன். அப்பெருநிலேயே அம்பிகையின் சொரூபமாம். ஆதலால் அவள் ஆத்ம வித்யா எனப் போற்றப்பெறுகிருள்.

**महाविद्या** மஹாவித்யா — ௫௮௪

வித்தைகளுக்கெல்லாம் மேலான வித்தையாயிருப்பவள்.

பிரம்ம வித்தைக்கு மேல் அடைவதற்கு ஒன்றுமில்லே. அவ்வாறு பரம்பொருளில் ஒன்றுபடுகின்ற ஜீவாத்மன் தோற்றத்தளவில் ஜீவனுகத் தென்படுகிருன். ஜீவன் முக்தனுகிய அவனுக்கோ ஜீவாத்மாக்களுக்கு உண்டாகின்ற பிரச்னே ஏதும் இல்லே. இவ்வுலக சம்பந்தமான இன்ப துன்பங்கள் அவனேத் தொடுவதில்லே. லாபநஷ்டம், வெற்றி தோல்வி ஆகியவை அவனுக்குப் பொருளற்றவைகள். நிந்தைக்கும் ஸ்துதிக்கும் ஜீவர்கள் பெரிதும் கட்டுப்பட்டவர்களாகின்றனர். ஆனல் பிரம்ம ஞானிக்கோ நிந்தையும் ஸ்துதியும் முற்றிலும் பொருளற்றவை. ஜீவாத்மாக்களுக்குத் தவிர்க்க முடியாததாயுள்ள பிறப்பும் இறப்பும் பிரம்ம வித்தையை அடையப்பெற்றவனுக்கு இல்லே. அவன் யாண்டும் தன்மயமாய் இருக்கிருன். அந்நிலே கால, தேச, வர்த்தமானத்துக்கு அப்பாற்பட்டது. அந்நிலேயும் அன்னே பராசக்தியின் சொரூபமும் ஒன்றே. ஆதலால் அவள் மஹாவித்யா எனப் போற்றப் பெறுகிருள்.

**श्रीविद्या** – ஸ்ரீ வித்யா ௫௮௫

ஸ்ரீவித்தை சொரூபிணியாய் இருப்பவள்.

ஸ்ரீ என்பது பேரழகு. எங்கெல்லாம் அழகு பொலிகின்றதோ ஆங்கு அம்பிகையின் சான்னித்தியம் இருக்கின்றது. எங்கெல்லாம் தெய்வீக சம்பத் ஆகிய பரவித்தை அமைந்துள்ளதோ ஆங்கு எல்லாவிதமான சம்பத்துக்களும் நிறைந்துள்ளன. தோற்றத்துக்கு வராத மகிமைகள் அகண்டாகாரத்தில் விரிந்தோடுகின்றன. அன்னே பராசக்தியே அவற்றை அளக்கமாட்டாள். அவற்றை அளக்க வேறு யார்தான் உளர்?

ஸ்ரீவித்தையின் நான்கு பிரிவுகளுள் யக்ஞ வித்யா என்பது ஒன்று. இயற்கையின்கண் உள்ள கர்மங்களனேத்தையும் அன்னே பராசக்தியின் தோற்றங்களாகக் கருதுவது யக்ஞ வித்தையாகிறது. கர்மங்களேத் தியாக புத்தியுடன் ஆற்றுவது யக்ஞம்.

பரதேவதையிடத்துப் பக்தி செலுத்துவது மஹாவித்யாவாகிறது. அவ்வாறு அன்பு பூணுகின்ற செயலிலும் இனிமைகள் பல நிறைந்துள்ளது. பக்திமான்களும் பக்திமதிகளும் விதவிதமான பாங்குகளில் அனுஷ்டித்த பேரன்புகள் யாவும் மகாமாயாவின் மகிமைகளாம்.

குஹ்யவித்யா என்பது இன்னொன்று. ஓசை ஒலிகள் எல்லாம் அம்பிகையிடமிருந்து வந்தவை. ஜபிக்கின்ற மந்த்ரங்களின் மயமாயிருப்பவள் அன்னை பராசக்தி. பிரணவம், காயத்ரீ, தேவதைகளுக்குரிய மந்த்ரங்களின் பீஜமந்த்ரங்கள் யாவும் சைதன்ய சொருபமாகவே இலங்குகின்றன. தெய்விகம் வாய்ந்த சொற்களைச் சுவானுபூதியில் அறியப்பெற்ற ரிஷிகள் மந்த்ரத் திருஷ்டாக்கள் எனப்படுகின்றனர். உள்ளன்போடு அன்னை பராசக்தியை வழுத்தி வரும் உபாசகன் ஒருவனுக்கேற்ற மந்த்ரம் அவனுடைய உள்ளத்தினுள்ளேயே ஒளிர்கின்றது. அந்த ஒலியில் லயமாயிருப்பது குஹ்யவித்யாவாகிறது.

ஞான விசாரத்தால் அநித்தியமாயிருக்கும் பிரபஞ்சத்தின் கூறுகளை யெல்லாம் ஒதுக்கித்தள்ளியான பிறகு எஞ்சியிருப்பது சுத்த சைதன்யம். தோற்றத்துக்கு வந்துள்ள அனைத்துக்கும் ஆதாரமாயுள்ள அது ப்ரக்ஞானம் எனப் பகரப்பெறுகிறது. அதன் மிகச் சிறிய பகுதி அண்டங்களாகவும், ஜீவர்களாகவும் வடிவெடுத்துள்ளது. இவ்விரிவுகள் யாவும் அதனிடத்தே ஒடுங்குகின்றன. அதற்குப் பிரம்ம வித்யா என்று பெயர். பெறுதற்கரிய பேருகிய பராவித்தையானது இத்தனை விதமான கூறுகளைப் பெற்றிலங்குகிறது. முடிந்த பரஞானமும் பராசக்தியும் ஒன்றே என்பது இந்நாமத்தின் கோட்பாடாகிறது.

**कामसेविता** காமஸேவிதா— ५८६

காமதேவனால் உபாசிக்கப்படுபவள்.

ஹிமாசலத்தில் உயர்வும் தாழ்வும் மாறிமாறி அமைந்திருப்பதற்கு நிகராக அம்பிகையின் திருநாமங்கள் ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத பல கருத்துக்களையும் தம்மகத்து அடக்கியவையாக விளங்குகின்றன. மேலானவை, கீழானவை ஆகிய அனைத்தும் அம்பிகையின் தோற்றங்களாம். அதில் எந்தவிதமான சந்தேகத்துக்கும் இடமில்லை.

ஆண், பெண் இணக்கத்துக்கு முகாமையாயிருப்பது காம விகாரம். அந்த உணர்வும் மற்ற உணர்வுகளைப் போன்று பரம் பொருளிடத்திருந்தே வந்துள்ளதாம். பிரவிருத்தி மார்க்கத்தில் செல்கின்றவர்களுக்குக் காமம் இன்றியமையாத கூறுகின்றது. நிவிருத்தி மார்க்கத்தில் செல்கின்றவர்களோ அதைச் சத்துரு எனப் புறக்கணிக்கின்றனர். ஆத்ம சாதகர்களிடத்தில் இப்படி மனப்பான்மையில் வேற்றுமையிருப்பது முற்றிலும் இயல்பேயாம்.

மன்மதனுக்குக் காமதேவன், அனங்கன், கந்தர்ப்பன் என்றெல்லாம் பெயர்கள் அமைந்துள்ளன. மலர்போன்று மிருதுவாக வந்து மக்களுடைய உள்ளத்தைத் தன் ஆதிக்கத்துக்கு உட்படுத்துகின்ற மன்மதனை அம்பிகையின் மகிமை என்றே பொருள் படுத்தவேண்டும். அப்படிச் செய்வதால் பிரபஞ்சமயமான பாங்கைத் தெய்விகம் நிறைந்ததாகத் திருத்தியமைக்கிறோம்.

தவத்தின் விளைவாக வாய்க்கின்ற மக்கட் செல்வத்தை சூரியன் என்று இயம்புகிறோம். காமத்துக்கு வசப்படுகின்றவர்கள் அக்காமத்தையே பராசக்தியின் அம்சமெனக் கருதுவதால் தவ நிலைக்கு அருகில் அது வருவதாகிறது. ஜீவாத்மன் ஒரு படித்தரத்தில் காமத்துக்கு வசப்பட்டிருப்பவன் ஆயினும் அவன் அம்பிகையின் பக்தியிலேயே ஈடுபட்டவனாக இருப்பானாகில் அவனைப் பிடித்துள்ள காமம் ஓரளவில் தெய்வசம்பத்தாகிறது.

அருணகிரிநாதர் போன்றவர்களிடத்துத் திடீரென்று வைராக்கியம் தோன்றும்பொழுது காம நுகர்ச்சி முழுவதையும் அவர்கள் அருள் தாகமாக மாற்றியமைக்கின்றனர். ஒரே ஜன்மத்தில் அவர்கள் மிகக் கீழ்நிலையிலிருந்து மகோன்னத நிலைக்கு மனோவேகத்துடன் முன்னேறிச் செல்கின்றனர். இன்றைக்குக் காமத்தில் உழல்கின்றவர்கள் நாளைக்குக் கடவுளின் கருணையை நாடுவார்கள் என்பது தேற்றம். ஆதலால் மன்மதனின் வசப்பட்டிருப்பவர்களும் ஒரு போக்கில் அம்பிகை உபாசகர்களாகின்றனர் என்னும் கருத்து இந்நாமத்தில் அடங்கியுள்ளது.

**श्रीषोडशाक्षरीविद्या — ஸ்ரீ ஷோடசாக்ஷரீ வித்யா** ௫௮௭

மேன்மை தங்கிய பதினாறு எழுத்துக்களின் வடிவினளாயிருப்பவள்.

அக்ஷரங்கள் யாவும் ஒன்றுசேர்ந்து அம்பிகைக்கு மாலையாக அமைந்துள்ளன. ஒலி வடிவத்திலிருக்கின்ற எழுத்துக்கள் என்றும் அழிந்துபட்டுப் போவதில்லை. நாதப்பிரம்மத்தின் கூறுகளாக அவை உள்ளன. ஒவ்வோர் அக்ஷரமும் அம்பிகைக்குரிய ஒரு மகிமையாக விளங்குகிறது. லலிதாம்பிகைக்கு அமைந்துள்ள திருநாமங்களுள் பதினறு எழுத்துக்களை உடைய நாமங்கள் பல இருக்கின்றன. ஒவ்வொரு நாமத்திலும் அடங்கியிருக்கின்ற விபூதிகளையெல்லாம் தொகுத்து ஆராய்ந்தால் அது சகுணப்பிரம்ம ஆராய்ச்சியாக மேலோங்குகிறது.

அம்பிகையின் உபாசகர்களுள் அவரவர்கள் கையாளுகின்ற சாதனத்துக்கேற்ற ஷோடசாக்ஷரமும் வந்து வாய்க்கிறது. மன பரிபாகத்துக்கும் சாதன முறைக்கும் ஏற்ப அந்த ஷோடசாக்ஷரம் பலப்பலவாக அமைந்துள்ளது. ஜீவாத்மனின் பாங்குக்கு ஏற்ற மந்த்ரம் அவன் உள்ளத்தினுள்ளேயே ஒலிக்கின்றது. சாதகன் அதை இடைவிடாது உச்சரித்து அம்பிகையின் அருளுக்குப் பாத்திரமாகின்ருன்.

**त्रिकूटा — த்ரிகூடா** ௫௮௮

மும்மை மயமாயிருப்பவள்.

பிரபஞ்சதத்துவங்களிலும் பரதத்துவங்களிலும் 'மூன்று' என்பது முக்கியமான இடம் பெற்று வருகின்றது. பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் ஆகியோர் ஸத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்களுக்கு அதிஷ்டான தெய்வங்களாயிருக்கிருர்கள். காலம் இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என மூவகைப்படுகிறது. மூன்று நேர்க்கோடுகள் ஓர் இடத்தை அடைப்பதற்குத் தேவை. இடம் பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம் என்று மூன்ருக மிளிர்கின்றது. ஸ்தூல சரீரம், சூட்சும சரீரம், காரண சரீரம் என்பவை சரீரத்திரயம் எனப்படுகின்றன. திரிகரணங்கள் மனம், வாக்கு, காயம் என்றும் அவஸ்தைகள் ஜாக்ரதம், சொப்பனம், சுஷுப்தி என்றும் பெயர்பெறுகின்றன.

உயிர் வகைகளைத் தேவகணம், நரகணம், அசுரகணம் என்று பிரிக்கலாம். பிரபஞ்சம், சகுணப் பிரம்மம், நிர்க்குணப் பிரம்மம் ஆகிய மூன்று நிலைகளில் பரவஸ்து திகழ்கின்றது. பரவஸ்துவும்

பரதேவதையாகிய அம்பிகையும் ஒன்று. இத்தனைவிதமான மும்மைகளில் மாதாவானவள் மிளிர்ந்துகொண்டிருப்பதால் அவள் த்ரிகூடா என்று போற்றப்பெறுகிறாள்.

**कामकोटिका — காமகோடிகா** ௫௮௯

சிவனுக்கு அபின்னமாயிருப்பவள்.

தீயினின்று வெப்பத்தைப் பிரிக்கமுடியாதது போன்று சக்தியைச் சிவத்திடமிருந்து பிரிக்கமுடியாது. வசதிக்காகச் சிவம் வேறு, சக்தி வேறு என்று சொல்லி வருகின்றோம். சக்தி, சிவம், பரப்பிரம்மம் ஆகிய எல்லாச் சொற்களும் ஏக வஸ்துவாகிய பரம்பொருளையே குறிக்கின்றன. அன்னை பரா சக்தி சொரூபமாகவும் பரமசிவ சொரூபமாகவும் அம்பிகையே இலங்கிக்கொண்டிருக்கிறாள் என்னும் கோட்பாடு காமகோடிகா என்னும் நாமத்தில் அடங்கியிருக்கிறது.

**कटाक्षकिङ्करीभूत कमला कोटि सेविता** ௫௯௦

**கடாக்ஷகிங்கரீபூத கமலா கோடி ஸேவிதா** 590

அம்பிகையின் கடைக்கண் பார்வைக்குப் பணிவிடை புரியும் கோடிக்கணக்கான தேவிமார்களை உடைத்திருப்பவள்.

அன்னை பராசக்தி தன் நிறைபார்வையை எதனிடத்தும் செலுத்தவேண்டிய அவசியமில்லை. கிங்கரர்கள் என்று சொல்லப்படும் வேலையாட்களின் நிலையில் கோடிக்கணக்கான தேவிமார்கள் அன்னையின் கடாக்ஷத்தை எதிர்பார்த்து நிற்கிறார்கள். சிவனார் தம் பூரண ஆற்றலை எக்காரணத்தைக் கொண்டும் பயன்படுத்தவேண்டிய நெருக்கடி ஒரு பொழுதும் வராது. அவருடைய திறமையைச் சோதிக்கக் கனவேகத்துடன் வந்த ஆகாச கங்கையே அவருடைய ஜடாபாரத்தில் மாட்டிக்கொண்டு மாயமாய் மறைந்துபோனாள். சர்வசக்திமானாகிய சிவபிரான் தம் சக்தியின் ஓர் அற்பப்பகுதியைக் கொண்டே அகிலாண்டங்களையும் படைத்துள்ளார். அதே பாங்கில் அகிலாண்டேஸ்வரியாகிய அம்பிகை தன் கடைக்கண் பார்வையின் ஒரு சிறு பகுதியைக்கொண்டு அண்டங்கள் அனைத்திலும் உள்ள செயல்

களை நிறைவேற்றி வருகிருள். அவளுக்கும் அவளுடைய பக்தர்களுக்கும் பணிவிடை பண்ணுகிற பாங்கில் திருமகள் ஸ்தானத்தைப் பெற்றிருக்கும் பல கோடிக்கணக்கான தேவிமார்கள் ஆவலுடன் காத்திருக்கிருர்கள். அம்பிகையிடமிருந்து வெளிப்படும் அனுக்ரஹம் அணுவுக்கும் அணுவாய் இருந்தாலும் பக்தகோடிகள் அனைவருக்கும் அது பரந்த நலனைச் செய்யவல்லது என்னும் கோட்பாடு இந்நாமத்தில் அடங்கியுள்ளது.

**शिरःस्थिता — சிர:ஸ்திதா** ५९१

*சிரஸில் வீற்றிருப்பவள்.*

மானுட சரீரத்தில் ஏழாவது ஞான பூமியாகிய சஹஸ்ராரம் உச்சந்தலையில் இருக்கிறது. சஹஸ்ராரம் என்பது ஆயிரம் இதழ்த் தாமரை என்று பொருள்படுகின்றது. மூலாதாரத்தினின்று குண்டலினி சக்தியாக எழுந்து சுஷும்னா நாடி வழியாக ஆறு ஆதாரங்களைத் தாண்டி சிரஸுக்கு வரும்போது சக்தியும் சிவமும் அபேத நிலை எய்துகின்றனர். சக்தியின் மேலாம் சொரூபம் ஆங்குத் திகழ்கிறது. அரசன் ஒருவனுக்குப் பலப்பல மாளிகைகள் இருந்தாலும் அவன் சிம்மாசனத்தில் கொலு வீற்றிருக்கும் சிறந்த மாளிகையில் மந்திரிப் பிரதானிகள் புடைசூழ இலங்கிக்கொண்டிருப்பதை ஒரு காலத்தில் காணலாம். அத்தகைய கொலு மண்டபத்துக்கு நிகர் சஹஸ்ராரம். அம்பிகையின் மேலாம் சொருபத்தைக் காண்பதில் நேரும் சிறு தடைக்குத் திரோதானம் என்று பெயர். சிவனர் தாமே அருள் குருவாயிருந்து அருள்தாகம் மேலிட்டு ஆத்மசாதகன் ஒருவன் பரதேவதையை நாடுகின்ற பொழுது அனுக்ரஹம் பண்ணுகின்ருர். அங்ஙனம் அருளுக்குப் பாத்திரமாகும் பக்தன் அம்பிகையின் சொருப தரிசனம் பெற்று ஆனந்தமுறுகிருன். அதற்கு நிகரான அனுபூதி வேறில்லை. தரிசனம் பெற்றுன் பிறகு அவன் சிவசக்தியில் இரண்டறக் கலந்துகொள்கிருன். திரிவேணி சங்கமம் என்று அந்நிலையைப் பகரலாம். அந்த ஏழாம் ஞானபூமியில் பூரண மகிமையோடு எழுந்தருளும் பரதேவதை சிர:ஸ்திதா என இயம்பப் பெறுகிருள்.

**चन्द्र निभा — சந்த்ர நிபா** ५९२

சந்திரனையொத்த ஒளியை உடையவள்.

சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் பரதேவதை கீழே இறங்கி வருகின்றபொழுது ஒவ்வொரு படித்தரத்திலும் அவளிடம் பல மகிமைகள் மிளிர்கின்றன. சஹஸ்ராரத்தின் கீழ்ப் பகுதியாகிய பிரம்மரந்திரத்தில் அவள் நிலாவின் வெளிச்சம் போன்று ஒளிர்கிறாள். பூரணச் சந்திர வெளிச்சத்தில் கைலயங்கிரியிலுள்ள உறைபனியைக் காணுங்கால் அது பரஞானப் பிரகாசத்துக்கு எடுத்துக்காட்டாயுள்ளது. அவ்வெளிச்சம் சூரிய ஒளியைவிடப் பன்மடங்கு பிரகாசமானது. அதில் வெப்பம் சிறிதும் இல்லை; அது குளிர்ந்த பூரிப்பை ஊட்டுவதாக உள்ளது. 'அந்தத் திரண்ட பேரொளியில் வெப்பம் என்னும் வெறுப்புக்கோ பதைபதைப்புக்கோ இடமில்லை.

முக்கோணத்திற்குள் ஒளிரும் பிம்பமாக இருப்பவள் என்று பொருள் வந்தமைகிறது. முக்கோண வடிவத்திலிருக்கும் மூலாதாரம் திரிகோணம் என இயம்பப் பெறுகிறது. பிரம்மச்சரிய விரதத்தை நன்கு காப்பாற்றும் ஆத்மசாதகனின் மூலாதாரத்தில் ஞானக்னி யாண்டும் மூட்டப்பெறுவதால் குண்டலினி சக்தி உருவெடுக்கின்றது.

அக்னி, சூரியன், சந்திரன் ஆகியன ஒளியின் சின்னங்களாக உள்ளன. மூலாதாரத்தில் அக்னியும், அனாஹதச் சக்கரத்தில் சூரியதேவனும், சஹஸ்ராரத்திற்குச் சிறிது கீழே சந்திரனும் இருக்கின்றன. அம்பிகை இந்த மூன்று பீடங்களிலும் தீபமாக மிளிர்கின்றாள்.

மூலாதாரத்தினின்று சகஸ்ராரம் வரை உள்ள மேருதண்டம் அஷ்டகோணங்களை உடையதாக அமைந்துள்ளது. அதை வட்டமிட்டுக்கொண்டு வருகின்றபொழுது சூரியதேவனுடைய வெளிச்சம் மூன்று பட்டைகளில் மட்டும் படிகின்றது. அதை விளக்குகின்ற பாங்கில் த்ரிகோணாந்தர தீபிகா என்று அம்பிகை போற்றப் பெறுகிறாள்.

சூரியன் முதலியவற்றிலிருக்கும் ஜடப்பிரகாசம், ஞானப் பிரகாசம், ஜீவாத்மனிடம் இருக்கும் சித் ஆபாசம் அல்லது பிரதி

பிம்பிக்கின்ற வெளிச்சம் ஆகிய இம்மூன்று விதமான பிரகாசங்கள் மயமாக அம்பிகை இருந்து அவை யாவுக்கும் வெளிச்சம் கொடுத்து வருகின்ருள் என்னும் கோட்பாடு இந்நாமத்தில் அடங்குகிறது.

**भालस्था — பாலஸ்தா** ५९३

நெற்றியில் வீற்றிருப்பவள்.

ஹ்ருன் என்னும் மந்த்ரம் ஒரு பொட்டு வடிவில் நெற்றியில் அமைந்திருப்பதாக்க் கருதி அந்த மந்த்ர வடிவினளாக அம்பிகை இருப்பதாகப் பாவித்து அவளை உபாசித்தல் வேண்டும்.

**इन्द्रधनुष्प्रभा — இந்த்ரதனுஷ்ப்ரபா** ५९४

வானவில்லின் பிரபைகளைப் போன்ற எழிலுடையவள்.

ஹ்ருன் பொட்டுக்குச் சற்று மேலே அர்த்த சந்திரன் வடிவத்தில் நிறங்களனைத்தையும் ஒளிரச் செய்து கொண்டிருப்பவள் என்பது இதன் பொருள். வானவில்லின் ஏழு நிறங்களுக்குப் புறம்பாக இயற்கையில் வேறு எந்த நிறமும் இல்லை. நிறமற்ற சூரிய கிரணம் ஏழு நிறங்களாகச் சிதறடைந்து தன்னை விளக்கிக் கொள்கிறது. அதே பாங்கில் தோற்றத்துக்கு அப்பாலுள்ள பரதேவதையானவள் பிரபஞ்சமெங்குமுள்ள எல்லாவிதமான நிறங்களாகவும் இலங்குகின்ருள். உலகில் உள்ள எண்ணிக்கையிலடங்காத நிறங்கள் யாவும் மூலத்தில் உள்ள ஏழு நிறங்களின் திரிபுகளாம். அம்பிகையின் மகிமைதான் இயற்கையில் இத்தனை விதமான நிறங்களாக மிளிர்ந்து கொண்டிருப்பதாகப் பொருள் படுத்துவது நல்ல ஆத்ம சாதனமாகிறது.

**हृदयस्था — ஹ்ருதயஸ்தா** ५९५

ஹிருதயத்தில் வீற்றிருப்பவள்.

பரமேஸ்வரனுடைய ஹிருதயத்தில் உபநிஷதங்களாகவும், அந்த உபநிஷதங்களிலே விளக்கப்பெற்றுள்ள பரவஸ்து சொரூபமாகவும் அம்பிகை இலங்குகின்ருள் என்பது ஒரு கோட்பாடு.

ஒவ்வொரு ஜீவனும் மதன்படுகின்ற பிரபஞ்சத்தைத் தன் இயல்புக்கேற்ற உலகமாகக் கருதிகொள்கின்ருன். அத்தனை வித

மான கருத்துக்களுக்கும் வித்தாக அம்பிகை எல்லாருடைய உள்ளத்திலும் வீற்றிருக்கிருள் என்பது இன்னெரு கோட்பாடு.

தியானத்துக்குரிய ஸ்தானமாகிய ஹிருதயத்தில் அம்பிகை வீற்றிருக்கிருள் என்று பக்தன் ஒருவன் பாவிப்பாளுகில் அது நல்ல தியானமாகிறது.

**रविप्रख्या** — ரவிப்ரக்யா ௫௯௬

சூரியனைப் போன்று பிரகாசித்துக் கொண்டிருப்பவள்.

ஸ்ரீ வித்தைக்கு இருப்பிடமாக அகிலாண்டம் இருக்கிறது. அந்த ஸ்ரீ வித்தைக்கு ஸ்தானமாகத் தன் ஹிருதயத்தை ஒவ்வோர் ஆத்ம சாதகனும் கருதவேண்டும். அந்த ஹிருதயக் கமலத்தைச் சூரியப் பிரகாசம் படைத்திருப்பதாகப் பாவித்தல் வேண்டும். அந்தச் சூரியப் பிரகாசத்தினுள் அம்பிகை ஒளிர்ந்து கொண்டிருக்கிருள் என்றும் ஆத்ம சாதகன் பாவித்து வருவது நல்ல வழிபாடாகிறது.

**त्रिकोणान्तर दीपिका** — த்ரிகோணுந்தர தீபிகா ௫௯௭

முக்கோணத்துக்குள்ளிருக்கும் தீபமாக இலங்குபவள்.

ஹிருதயக் கமலம் சூரியனுக்கு இருப்பிடமாயிருப்பது போன்று முக்கோண வடிவமான மூலாதாரம் அக்னிக்கு இருப்பிடமாகிறது. அண்டம் ஸ்ரீ வித்தைக்கு இருப்பிடமாயிருப்பது போன்று சாதகன் ஒருவன் தன் சரீரமாகிய பிண்டத்தையும் அதற்குரிய கூடமாகக் கருதுதல் வேண்டும். மூலாதாரம் முதல் கூடமாகவும், ஹிருதயக் கமலம் இரண்டாவது கூடமாகவும், உச்சந்தலையில் உள்ள சஹஸ்ராரம் மூன்ருவது கூடமாகவும் அமைந்திருப்பதாக அவன் கருதுதல் வேண்டும். சஹஸ்ராரத்தில் அமைந்துள்ளது சந்திர வெளிச்சம். சூரியன், சந்திரன் அக்னி ஆகிய மூன்று வெளிச்சங்களும் ஆத்மப் பிரகாசத்தின் புறத் தோற்றங்களாம். ஆத்மப் பிரகாசமே அம்பிகையின் சொரூபம். ஆதலால் அவள் ஆத்மப் பிரகாசத்திற்கும் சந்திர, சூரிய, அக்னி பிரகாசத்திற்கும் அபின்னமாய் இலங்கும் பரஞான தீபமாம்.

**दाक्षायणी — தாக்ஷாயணீ** ५९८

தக்ஷப் பிரஜாபதியின் புதல்வியாயிருப்பவள்.

பாராட்டத்தக்க பரந்த பாங்கு இல்லாதிருந்த தக்ஷப்பிரஜாபதிக்கு நல்லியல்பே வடிவெடுத்த புதல்வியாக அம்பிகை பிறப்பெடுத்தாள். தன் புதல்விக்குக் கணவனுய் அமைந்த சிவனுரைத் தக்ஷன் அலட்சியப்படுத்துவதில் பெருமகிழ்வு அடைந்திருந்தான். அவன் புரிந்த நிந்தை மறைமுகமான ஸ்துதியாக அமைந்ததை அவன் விளங்கிக்கொள்ளவில்லை. வீடு, வாசலற்றவனுகச் சுடுகாட்டில் வசிப்பவன் என்று அவன் சிவனுரைக் குறித்து இறக்கி வைத்துப் பேசினுன்.

தத்துவ பூர்வமாகப் பிரபஞ்சம் யாருக்குமே நிரந்தர வாசஸ்தலமாகாது. பிரளய காலத்தில் ஒடுங்கிப்போகும் அதை ஒரு சுடுகாடாகக் கருதிச் சான்ருேர் அதில் பற்று வைக்காதிருப்பார்கள். உடலுடன்கூடி வாழ்ந்திருக்கும்பொழுதே உடலைச் சாம்பலாகக் கருதுபவன் பரம்பொருளையடைவதற்குப் பக்குவமாகி வருகிறுன். சுடலைப் பொடி பூசிக்கொண்டு பூதகணங்களுடன் சிவனுர் இணங்கியிருப்பது, மற்ற உயிர்வகைகளையும் நல்வழிக்கு அழைத்துச் செல்லும் செயல் பாராட்டத்தக்கது என்னும் கோட்பாட்டை விளக்குவதாய் உள்ளது. பிக்ஷாடனுகத் தன் மாப்பிள்ளை திரிந்துவருவதாகத் தக்ஷன் பண்ணிய நிந்தையை சிவனுர் மகிழ்வுடன் ஏற்றுக்கொள்பவராயிருந்தார். பிரபஞ்சத்தில் எதிலும் உரிமை பாராட்டாமல் இருப்பது பெரியோர் செயலாகும். தக்ஷனுடைய செல்வி தாக்ஷாயணீ முற்றிலும் சிவனுருக்கு உரியவளானுள். மேலோர் கீழ்வம்சத்தில் பிறப்பெடுத்து மேல்நிலைக்குப் போவது சாத்தியம் என்னும் கோட்பாட்டைத் தாக்ஷாயணீ வடிவெடுத்து அம்பிகை விளக்கியருள்கின்ருள்.

**दैत्यहन्त्री — தைத்ய ஹன்த்ரீ** ५९९

தைத்யர்களைச் சம்ஹாரம் செய்பவள்.

தைத்ய வம்சத்தைச் சேர்ந்த பண்டாசுரனை வதம் செய்தது அம்பிகையின் செயற்கரிய செயலாம். இச்செயலின் மூலம் இயற்கைத் தாயின் அரிய பெரிய செயல் நிரூபிக்கப்படுகிறது. சிருஷ்டியின் போக்கில் கேடுடைய உயிர்வகைகள் உருவெடுக்கின்றன.

அவற்றை ஒடுக்கித் தள்ளுதல் இயற்கையின் செயல் என்பதை இந்நாமம் விளக்குகிறது.

**दक्षयज्ञविनाशिनी — தக்ஷயக்ஞ விநாசினீ** ௬௦௦

தக்ஷனுடைய யாகத்தைப் பாழ்படுத்தியவள்.

மக்களுக்கிடையிலும் ஸ்தாவர, ஜங்கமமாகிய உயிர்வகைகளுக்கிடையிலும் நிகழ்கின்ற பொருந்தாத வாழ்க்கை முறையைத் தக்ஷ யக்ஞம் குறிக்கின்றது.

தக்ஷப் பிரஜாபதி மும்மூர்த்திகளுக்கும் அழைப்பு அனுப்பாமல் ஒரு யாகத்துக்கு ஏற்பாடு செய்திருந்தான். அவனுடைய புதல்வியாகிய தாக்ஷாயணி சிவனாரை மணந்துகொண்டு இனிதாகக் கைலாசத்தில் வாழ்ந்து வந்தாள். தன் தந்தையின் யாகத்தில் கலந்துகொள்ள அவள் விரும்பினாள். அழைப்பில்லாமல் அங்குச் செல்வது முறையன்று என்று சிவனார் ஆட்சேபித்தும் அதைப் பொருட்படுத்தாமல் தான் தனியளாகத் தந்தையின் யாகசாலைக்குச் சென்றாள் தாக்ஷாயணீ.

தன் செல்வியைச் சபை நடுவே வைத்துத் தக்ஷன் எள்ளி நகையாடினான். அவளோ யோக நிஷ்டையிலிருந்து தன் சரீரத்தை அந்த இடத்திலேயே ஒதுக்கி விட்டாள். அச்செய்தியைக் கேள்விப்பட்ட சிவனார் தம் சொரூபத்தினின்று வீரபத்திர மூர்த்தியைத் தோற்றுவித்துத் தக்ஷனுடைய யாகத்தைப் பாழ்படுத்தும்படி உத்தரவிட்டார். அம்மூர்த்தியும் அங்ஙனமே செய்து முடித்தார்.

தேவர்களெல்லாரும் பிரம்ம தேவனிடம் சென்று முறையிட்டனர். சங்கரனுக்கும், நாராயணனுக்கும் இடமில்லாத யாகத்திற்கு அறிஞர்களாயிருப்பவர்கள் சென்றால் இப்படித்தான் எல்லாம் அமங்களமாய் முடியும் என்று அவர் விளக்கினார்.

பிரபஞ்ச நடைமுறையில் தக்ஷப் பிரஜாபதியின் யக்ஞம் திரும்பத் திரும்ப நிகழ்ந்து வருகிறது. எங்கெல்லாம் மக்கள் நல்லொழுக்கத்தைப் புறக்கணிக்கின்றனரோ, எங்கெல்லாம் அவர்கள் பெருமிதமாகச் சுகபோகத்தில் ஈடுபடுகின்றனரோ ஆங்கெல்லாம் நிகழ்வது தக்ஷப் பிரஜாபதியின் யக்ஞமாம்.

த்க்ஷயக்ஞ விநாசினீ ஆகிய அம்பிகை அதை அழித்துத் தள்ளு கின்ருள் என்பது இந்நாமத்தின் கருத்து.

**दरान्दोलित दीर्घाक्षी — தராந்தோலித தீர்க்காக்ஷீ** ६०१

இனிது அசைகின்ற நீண்ட கண்களை உடையவள்.

அம்பிகையினுடைய கண்கள் வண்ணத்தில் உச்சநிலை எய்தி யுள்ளன. அதற்கு மேல் கண்ணழகைத் திருத்தியமைக்க முடி யாது. தானே இப்பிரபஞ்சமாகத் தோற்றத்துக்கு வந்துள்ள மூலப் பிரகிருதியாகிய அம்பிகைக்கு யாண்டும் நிறைநிலை சொந் தம். கருணையே வடிவெடுத்துள்ள அவள் அதை வாரி வழங்கு தல் பொருட்டுத் தன் கண்களை இலேசாக அசைக்கிருள். கண் பார்வை மொழிகளுக்கெல்லாம் மேலானது. கண்ணேட்டம் மனதில் இருப்பதை உள்ளபடிவெளிப்படுத்தவல்லது. ஒருவன் பேசுகின்ற மொழியை இன்னெருவன் அறியாமலிருக்கலாம். கண்பார்வையோ கோபம், அச்சம், பொருமை, விசனம் போன்ற எல்லாவிதமான மனநிலைகளையும் எளிதில் விளக்க வல்லதாகிறது. இலேசாக அசைந்துகொண்டிருக்கின்ற அம்பிகையின் நீண்ட கண்கள் உயிர் களை ஆதரிக்கும் பாங்குடையவைகளாய் இருக்கின்றன. அத்தகைய கண்களைப் பார்க்கின்ற பொழுதே பக்தனுடைய உள்ளத்தி னின்று பயம் பறந்தோடுகின்றது. அக்ஞானமே பயத்துக்குப் பிறப்பிடம். அன்னை பராசக்தியை உள்ளபடி அறிந்துகொள்ளு தற்கேற்பப் பயம் அகலுகிறது. சக்தி உபாசகன் சக்தியின் இயல்பை அறிந்துகொள்ளுதற்கு ஏற்ப அவன் அபயத்தில் நிலை பெற்றவனுகிருன் என்னும் கோட்பாட்டை இந்நாமம் விளக்கு கின்றது.

**दरहासोज्ज्वलन्मुखी — தரஹாஸோஜ்ஜ்வலன் முகீ** ६०२

தன் இளம் புன்சிரிப்பால் முகத்தின்கண் எழிலை உண்டுபண்ணும் பாங்குடையவள்.

வாய்திறந்து ஒலமிட்டுச் சிரிப்பதில் அழகு ஒருவாறு அழிந்து பட்டுப் போகிறது. புன்னகையின் பாங்கு முற்றிலும் வேருனது. அடக்கத்துக்கும் ஆற்றலுக்கும் அறிகுறியாய் இருப்பது புன் னகை. அளந்தெடுத்துச் செயல் புரிதற்கு அறிகுறி புன்னகை. ஆமோதிப்பையும், ஆக்ஷேபத்தையும் தெரிவிப்பது புன்னகை.

வியப்பையும், ஏமாற்றத்தையும் வெளிப்படுத்துவது புன்னகை. எல்லாப் பாங்குகளுக்கும் பொது விளக்கமாயிருப்பது புன்னகை. அதன் ஆழத்தை அறிந்துகொள்ள யாருக்குமே இயலாது. கண்ணுடியில் எல்லாரும் தத்தம் முகத்தைக் காண்பதுபோன்று அம்பிகையின் புன்னகையில் தத்தம் மனப்பான்மைக்கேற்றவாறு விடை அல்லது தடை வருவதாக அனைவரும் பொருள்படுத்திக்கொள்கின்றனர். எல்லாவற்றிற்கும் மேலாக அம்பிகையின் புன்முறுவல் அவளுடைய முகவிலாசத்துக்கு ஒளியை வழங்கிக்கொண்டிருக்கிறது. ஆத்ம சாதகர்கள் எத்தகைய பாவனை படைத்தவர்களாயிருக்க வேண்டும் என்பதையும் அம்பிகை தன் இனிய புன்முறுவலின் வாயிலாக வெளியிடுகின்றாள் என்பது இந்நாமத்தின் கருத்து.

**गुरुमूर्तिः — குருமூர்த்தி:** ६०३

குருவின் வடிவத்தில் இருப்பவள்.

வயதிலும் அறிவிலும் பெரியவர், வயதிலும் அறிவிலும் சிறியவருக்குக் குரு ஆகிறார். அந்தஸ்திலும் அனுபவத்திலும் பெரியவர் அவற்றில் சிறியவருக்குக் குரு ஆகிறார். குரு என்னும் சொல் அக்ஞான இருளை நீக்குபவன் எனப் பொருள்படுகிறது. முன்னேற்றம் அடைந்துவரும் மானுடன் ஒவ்வொருவனுக்கும் ஒரு துறையில் ஏதேனும் ஒரு விதத்தில் இன்னொருவன் குருவாகின்றான். குருபக்தி ஓங்குதற்கேற்ப மந்தமாயுள்ள ஆத்ம சாதகன் தீவிர சாதகனாகத் திருந்தி அமைகிறான். குருபக்தி முன்னேற்றத்துக்குப் பெரிதும் அவசியம். தாயாகவும், தந்தையாகவும், தெய்வமாகவும் உள்ளவர் தன் குரு என்று எண்ணுபவன் தானாகவே மேல் நிலைக்கு எடுத்துச் செல்லப்படுகின்றான். அவன் நலன்கள் அனைத்துக்கும் உரியவனாகின்றான்.

அந்தந்த ஜீவனுக்கேற்ற நலனையும் முன்னேற்றத்தையும் அன்னை பராசக்தி வெவ்வேறு மூர்த்திகள் வாயிலாக நிறைவேற்றி வைக்கிறாள். அவள் தானே அனந்தங்கோடி உயிர்வகைகளாகவும் அகிலாண்டங்களாகவும் இலங்குகின்றாள். ஆதலால் ஓர் ஆத்ம சாதகன் தனக்கு வாய்க்கிற மூர்த்தியை அன்னை பராசக்தி சொருபமாகப் பாராட்டுதல் வேண்டும். அன்னை பராசக்தி

உயிர்வகைகளனைத்தையும் படிப்படியாக மேல் நிலைக்கு எடுத்துச் செல்வதால் அவள் அனைவருக்கும் குருமூர்த்தி என்று கூறுவது பொருத்தமானது.

**गुणनिधिः — குணநிதி: ៦०४**

குணங்களனைத்துக்கும் பொக்கிஷமாயிருப்பவள்.

இப்பிரபஞ்சத்தை உருவாக்கியுள்ள சத்துவம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்களின் தாரதம்மியத்தால் எண்ணிக்கையிலடங்காத உயிர்வகைகள் தோற்றத்துக்கு வந்துள்ளன. ஜட சொரூபம் என்று கருதப்படும் தமோகுணமே பல தெய்வீக இயல்புகள் வாய்க்கப்பெற்றதாயுள்ளது. மண்ணின் மகிமைக்கு ஓர் அளவில்லை. கற்கள் ரத்தினங்களாக அமைந்திருப்பதும் அன்னை பராசக்தியின் மகிமையாம். தமோகுணத்திற்கு அறிகுறியாகிய நித்திரையின் வாயிலாகத்தான் உயிர்கள் புதுப்பிக்கப்படுகின்றன. நித்திரையில் உயிர்கள் பிரம்ம அவஸ்தையில் திளைத்திருக்கின்றன. அம்பிகை தானே நித்திரை சொரூபமாயிருக்கிருள்.

இயற்கையில் உள்ள ஆற்றலானது ஜடசக்தி, சித்சக்தி என இருவகைப்படுகின்றது. வெப்பம், ஓசை, மின்னல் போன்றவை ஜடசக்தியின் கூறுகள். பிரபஞ்ச அமைப்பில் இவையாவும் குறிப்பிடத்தக்க அரிய பெரிய ஸ்தானங்கள் வகித்து வருகின்றன. உயிர்வகைகளிடத்தில் உணர்ச்சியாகவும் அறிவாகவும் வடிவெடுத்திருப்பது சித்சக்தி. விதவிதமான உணர்ச்சிகள் அவைகளின் மகிமைக்கு விளக்கமாகின்றன. அறிவில் சிறந்தவன் என்று இறுமாப்புக் கொண்டிருக்கும் மனிதன் இயற்கையைப் பற்றிய பல உண்மைகளை மற்ற உயிர்வகைகளிடத்திருந்து கற்றுக்கொள்ள வேண்டியவனுயிருக்கின்றான். நாயினிடத்து உள்ள மோப்பச் சக்தி மனிதனிடம் கிடையாது. இங்ஙனம் பல உயிர்களிடத்தும் பலப்பலவாக வெளிப்படுத்தப்படும் அறிவுத்திறன் எல்லாம் அம்பிகையின் விளையாட்டாம்.

உயிர்த் தத்துவத்துக்கு இருப்பிடம் சத்துவகுணம். சத்துவ குணம் தலையெடுக்குமிடத்து உயிர்வகைகள் தாமே தோற்றத்துக்கு வருகின்றன. உயிர்களனைத்துமே தெய்வீகத்தில் திகழ்ந்து கொண்டிருக்கின்றன என்பது ஞானிக்கு விளங்குகிறது. ஞானி,

பக்தன், யோகி ஆகியோரிடத்து இலங்கும் பண்புகளுக்குக் கணக்கில்லை. மூன்று குணங்களையும் முறையாகப் பாராட்டுவது அம்பிகை வழிபடாகிறது.

குணம் என்பதற்குக் கயிறு என்பது இன்னொரு பொருள். ஜலப்பிரளயம் நிகழ்ந்தபொழுது மனுவுக்குக் கயிருயிருந்து அம்பிகை பெருந்துணை புரிந்தாள் என்பது புராண வரலாறு. உயிர்வகைகளின் மாதிரிகள் அனைத்தும் அடங்கிய தோணியை மச்யாவதாரமாய்த் தோன்றிய பரமனுடன் இணைத்து வைப்பதற்கு உறுதுணையாயிருந்தது கயிறு சொரூபமாய் இருந்த அம்பிகை. சக்தியின் துணை இல்லாவிட்டால் பிரபஞ்சத்தில் எச்செயலும் நிகழாது. இக்காரணங்களையெல்லாம் முன்னிட்டு அம்பிகையைக் குணநிதி என்று போற்றுவது முற்றிலும் பொருத்தமானது.

**गोमाता கோமாதா —** ६०५

பசு என்னும் தாயாய் இருப்பவள்.

பசு என்னும் தாய் தான் சாகும்வரை மக்களுக்குக் காலமெல்லாம் பாலூட்டி வருகின்ருள். பசுக்களுக்கெல்லாம் தாயாகிய காமதேனு அன்னை பராசக்தியின் அம்சம். காமதேனு இருக்குமிடத்தில் வேண்டியவாறெல்லாம் உணவைப் பெறலாம். அதன் தலை மானுட வடிவிலும், கொம்புகளும், கால்களும் விலங்கின் பாங்கிலும், இரண்டு சிறகுகள் பறவையின் அமைப்பிலும் விளங்குவதால் உயிர்களனைத்துக்கும் உணவூட்ட வல்லது காமதேனு என்னும் கோட்பாடு அதன் மூலம் தெளிவாகிறது.

கோ என்னும் சொல் ஜீவாத்மனைக் குறிக்கிறது. கோபாலன் என்ருல் ஜீவனைக் காப்பாற்றுபவன் என்றும் கோவிந்தன் என்ருல் ஜீவனை அறிந்துகொள்பவன் என்றும் கோமாதா என்ருல் ஜீவனைப் பெற்றெடுத்து வளர்த்து வருபவள் என்றும் பொருள் படுகின்றன. பிரகாசத்தை உண்டுபண்ணுபவளாகவும், வஜ்ராயுதத்தை நிர்மாணிப்பவளாகவும், பூமியையும் சந்திரனையும் தோற்றுவிப்பவளாகவும் அம்பிகை இலங்குகின்ருள். நீர்மயமாகவும், பத்துத் திக்குகளாகவும் வியாபித்திருப்பவள் அம்பிகை. சத்திய சொரூபியான அவள் அக்னியையும் சொல்லையும் தோற்றுவித்திருக்கிருள். இத்தகைய பொருள்களனைத்தும் கோமாதா என்னும் நாமத்தில் அடங்கியுள்ளன.

**गुहजन्मभूः — குஹஜன்மபூ:** ६०६

ஸ்கந்தனுக்குப் பிறப்பிடமாய் இருப்பவள்.

சிவனுருடைய இளைய குமாரன் கார்த்திகேயன் எனவும் குஹன் எனவும் பெயர் பெற்றுள்ளான். ஹிருதயக் குகையில் வீற்றிருப்பதால் குஹன் என்று அவன் அழைக்கப் பெறுகிறான். அனந்தங்கோடி ஜீவாத்மாக்களின் பிரதிநிதியாய் இருப்பவன் குஹன். ஜீவர்களனைவரும் தக்க சாதனங்கள் புரிந்து ஸ்கந்தன் அடைந்துள்ள பெருநிலையைப் பெறலாம். முன்னேற்றமடைய விரும்புபவர்களுக்கு முன் மாதிரியாய் இருப்பவன் குஹன். அவனுடைய மகிமைகளை அறிந்துகொள்ளுதலும் அவனை உபாசிப்பதும் அதற்கு உபாயமாம். அக்ஞானத்தில் உழலும் ஜீவாத்மாக்கள் தம் உள்ளத்தில் வீற்றிருக்கும் சிவ சொரூபத்தை அறிந்து கொள்ளமாட்டார்கள். குஹனுடைய உபாசனைக் கேற்ப அக்ஞானத்தின் விளைவான மறைத்தல் என்னும் குறைநிலை நீக்கப் பெறுகிறது; சிவபோதம் தலையெடுக்கிறது. சிவனுருக்கே குருவாகிய குஹன் தகப்பன் சுவாமி எனப்படுகிறான். தன் மைந்தனைச் சிவனர் குருவாக ஏற்றுக்கொண்டது ஜீவாத்மா அத்தகைய பெருநிலை அடைதல் சாத்தியம் என்பதைப் புகட்டுதல் பொருட்டேயாம். ஆத்ம சாதகர்களாகிய நாம் குஹனை உபாசிப்பதன் மூலம் சிவனிடத்து இரண்டறக் கலந்துகொள்ள வல்லவர்களாகிறோம். அம்பிகையின் அருளைப் பயன்படுத்தி ஜீவர்கள் அனைவரும் குஹ சொரூபம் ஆகலாம் என்னும் கோட்பாடு இந்நாமத்தில் அடங்கியுள்ளது.

**देवेशी — தேவேசீ** ६०७

தேவர்களுக்கெல்லாம் ஈசுவரியாக இலங்குபவள்.

மக்களைவிட மேலான நிலைக்கு வந்துள்ள தேவர்கள் இன்னும் முடிந்த பெருநிலையை எட்டியவர்களல்லர். அன்னவர்களை நல்வழியில் நடாத்துபவள் அன்னை பராசக்தி.

தேவர்கள் என்னும் சொல் இந்திரியங்களையும் குறிக்கிறது. தேவர்கள் எனப் பெயர் பெற்றுள்ள நம் ஞானேந்திரியங்களைச் செவ்வனே பயன்படுத்துதற்கு ஆத்ம சொரூபம் தேவை. அற்புதமான கருவிகளாகிய கண்களைக் கையாளுதற்கு ஆத்ம சொரூபம்

இல்லாது போனால் அவை பயனற்றவையாகின்றன. இங்ஙனம் இந்திரியங்கள் அனைத்தையும் ஆத்ம சைதன்யம் இனிது பயன் படுத்தி வருவதால் அந்த ஆத்ம சைதன்ய சொரூபமாய் இலங்கும் அம்பிகை தேவேசீ எனப் போற்றப் பெறுகிறாள்.

**दण्डनीतिस्था — தண்டநீதிஸ்தா ६०८**

தக்கமுறையில் தண்டனை கொடுத்து ஜீவர்களை நல் வழியில் நடாத்துபவள்.

அம்பிகையின் கணக்கிலடங்காத செல்வர்களும் செல்வியர் களும் பெரும்பாலும் சிறுநெறி பிடித்து ஒழுகுகிறவர்களாகவே இருக்கிறார்கள். சிற்றியல்பு படைத்துள்ள தன் குழந்தைகளை அணைத்துக்கொள்வது போன்று அவர்களை அடித்துப் பாடம் புகட்டுவதும் அம்பிகையின் செயலாகிறது. நெறிபிறழ்கின்ற யாரும் நீதியினின்று தப்பித்துக்கொள்ள முடியாது. நெறி பிறழும்பொழுதெல்லாம் ஜீவன் ஒருவனுக்குத் தண்டனை வந்து வாய்க்கிறது. தண்டனையின் விளைவாகத் துக்கம் உண்டாகிறது. தனக்கு ஏன் இத்தகைய துன்பம் வந்துள்ளது என்று ஆராய்ந்து பார்க்கும் ஜீவாத்மனுக்குத் தன் குற்றம் விளங்குகிறது. நெறி நிற்பவர்கள் இன்புறுகின்றனர். நெறி பிறழ்தல் குற்றம் எனப் படுகிறது. துன்பத்தை வழங்குவதன் மூலம் அம்பிகை உயிர் வகைகளைத் தூயவையாகத் திருத்தியமைக்கிறாள். எனவே அவள் தண்டநீதிஸ்தா என்று பெயர் பெறுகிறாள்.

**दहराकाशरूपिणी — தஹராகாசரூபிணீ ६०९**

ஹிருதயக் குகையில் இருக்கும் சிறிய ஆகாசத்தைத் தன் சொரூபமாகக் கொண்டிருப்பவள்.

தன் உடலைத் தேவாலயமாகவும் அதனுள்ளிருக்கும் ஹிரு தயத்தைக் கர்ப்பக்கிருஹமாகவும் ஆத்மசாதகன் பொருள்படுத்து கிறான். அதனுள் தன் வழிபடு தெய்வமாகிய அம்பிகை எழுந் தருளியிருப்பதாக அவன் பாவிக்கிறான். பாங்கில் ஒரு துளி ஜல மும் அகண்டமாயுள்ள கடலும் வேறுபாடின்றி உள்ளன. சூட்சும மாயிருக்கும் மஹா ஆகாசம் எப்பொருளாலும் பிளவுபடுவதில்லை. ஒரு கடத்தினுள், கடத்தினூடே, கடத்திற்கு வெளியே எங்கும் வியாபகமாய் இருப்பது மஹா ஆகாசம். கட ஆகாசமாகத் தென்

படுவதும் மஹா ஆகாசமே. அதற்கு நிகராக உள்ளது தஹரா காசம். ஹிருதயக் குகையில் உள்ள வெட்ட வெளியாகிய தஹரா காசத்தை அனுபூதியில் அறிகின்றவன் சிதாகாசத்தை அறிந்தவ ஞகிறுன். தஹராகாசம் தன் நிஜசொரூபம் என்று முறையான சாதனத்தின் மூலம் அவன் உணர்கின்ருன். அம்பிகையே தஹரா காசமாகவும் மஹா ஆகாசமாகவும் இலங்கும் பரதேவதையாகின் ருள். ஓர் எறும்பின் உள்ளும் மானுடனுடைய உள்ளத்திலும் இருப்பது தஹராகாசமே. யானையினுள்ளும் இருப்பது அதே தஹராகாசமேயாகும். உண்மையில் சிதாகாசம் சிறியதும் அன்று, பெரியதும் அன்று. யாண்டும் தன்னில் தானுக இருக்கும் சிதாகாசம் அல்லது சிதம்பரமாக அம்பிகை இலங்குகின்ருள்.

## प्रतिपन्मुख्यराकान्त तिथिमण्डल पूजिता ६१०

## ப்ரதிபன்முக்யராகாந்த திதிமண்டல பூஜிதா 610

பிரதமையில் துவக்கிப் பௌர்ணமியில் முடிகின்ற திதிவகைகளினுல் ஆராதிக்கப்படுகின்றவள்.

அமாவாசைக்கு அடுத்தநாள் பிரதமை; பதினைந்தாவது திதியாயிருப்பது பூர்ணிமா. அம்பிகை உபாசகர்களுக்குத் திதி கள் அனைத்தும் புண்ணியமானவைகளே. நாட்கள் எல்லாம் நல்ல நாட்களே. அலை உருண்டோடும்பொழுது அது உண்டு பண்ணும் மேடும் பள்ளமும் உருண்டு ஓடுகின்றன. அதன் விளை வாக அலைகள் உருவெடுக்கின்றன. வழிபாட்டுக்குத் திதிகளை ஒன்றன்பின் ஒன்ருகக் கணக்கில் எடுத்துக்கொள்கின்றபொழுது சாதனம் வல்லமையிலும் வலுத்துக்கொண்டே வருகின்றது. திதியின் எண்ணிக்கை வழிபாட்டில் பக்தியின் வேகத்தை வளர்ப்பதற்கு நன்கு உதவுகிறது. ஆத்ம சாதகன் தன் சாதனத் தில் வலுவடைதற்கு ஏதுவாயுள்ள திதிகள் மயமாகவும் அம்பிகை இலங்குகின்ருள் என்பது இந்நாமத்தின் கருத்து.

## कलात्मिका — கலாத்மிகா ६११

கலைகளின் வடிவத்தில் இருப்பவள்.

சப்த ஜிஹ்வா என்று அக்னிக்கு ஒரு பெயர் அமைந்துள்ளது. அதனிடத்தில் பத்துக் கலைகள் உள்ளன. அது சுடர்விட்டு எரியும் பொழுது ஏழு கொழுந்துகள் உடையதாகத் தென்படும்.

புகைமயமாயிருப்பதும், தெளிந்த சுடராயிருப்பதும், சாம்பலினுள் மறைந்து கிடப்பதும் அக்னியின் கலைகளில் சில ஆகின்றன. வானத்தில் சஞ்சரிக்கும் சூரியனுக்குப் பன்னிரண்டு கலைகள் இருப்பது போன்று சந்திரனுக்குப் பதினாறு கலைகள் உள்ளன.

வித்தைகள் யாவும் அறுபத்து நான்கு கலைஞானங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. ஜாக்ரதம், சொப்பனம், சுஷுப்தி அவஸ்தைகளில் மனிதனின் கலைகள் வெவ்வேறு வடிவெடுக்கின்றன. சக்தியின் ஆதிக்கம் ஜாக்ரதாவஸ்தையில் முன்னணியில் இருக்கிறது. உணர்ச்சியைப் பெறுதல், நினைவோடிருத்தல், சித்தவிருத்திகளுடனிருத்தல் இவையெல்லாம் ஜாக்ரதாவஸ்தையின் கலைகளாம். முக்குணங்களும் ஜாக்ரதாவஸ்தையில் பலப்பல பாங்குகளில் வடிவெடுக்கின்றன. சொப்பனவஸ்தையில் ஆசைப்படுதல், மயங்குதல், ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுதல், சிந்தை செயல்புரிதல் ஆகிய கலைகள் இடம் பெறுகின்றன. அதில் சிவம், சக்தி ஆகிய இரண்டு சொரூபங்களும் ஆதிக்கம் பெற்றுள்ளன. சுஷுப்தியில் மரணம், ஞாபகமின்மை, மூர்ச்சை முதலியன கலைகளாய் அமைகின்றன. சிவம் மட்டும் அங்கு ஆதிக்கம் புரிகிறது. இங்ஙனம் விதவிதமான கலைகள் மயமாக அம்பிகை இலங்குகின்றாள்.

**कलानाथा — கலாநாதா** ६१२

கலைகளுக்கெல்லாம் தலைவியாக இருப்பவள்.

குடும்பத் தலைவியாயிருக்கும் தாய் தான் வேறு, தன் குடும்பம் வேறு என்று பாகுபடுத்துவதில்லை. சரியாக உருவெடுத்திருக்கின்ற குடும்பத்தில் ஒவ்வோர் அங்கத்தினருக்கும் ஒவ்வொரு பொறுப்பு வந்தமைகிறது. யாரிடத்தில் எந்தப் பொறுப்பை ஒப்படைப்பது என்பதை அன்னையானவள் தீர்மானிக்கிறாள். அதற்கு நிகராக அன்னை பராசக்தியின் ஞானத்துறையில் கலைகள் பல இருக்கின்றன. அவற்றுள் சில ஆற்றலையும், வேறு சில உணர்வையும், இன்னும் சில அறிவையும் ஓங்குவிப்பவைகளாக இருக்கின்றன. உடல் திறனை அடிப்படையாகக்கொண்டு நடனக் கலையும், உணர்வை ஓங்குவிப்பதாக இன்னிசையும், அறிவை விளக்குவதாகத் தாள ஞானப் பகுதியும் அமைந்துள்ளன. உணர்வுக்கும் அறிவுக்கும் நல்ல பொருத்தம் ஏற்பட

வேண்டும். சொற்சுவை நிறைந்துள்ள மொழி நல்ல கலையாகிறது. அதனுடன் பொருள் சுவையும் சேர்ந்திருக்குமாகில் அது மேலாம் கலையாகிறது. இனிமையும் மேன்மையும் ஒன்றுசேர்ந்தால் அது பொருத்தமான மொழியமைப்பாகிறது. இயல், இசை, கூத்து ஆகிய மூன்றும் முறையாக ஒன்றுபடுமிடத்து ஆற்றல், அன்பு, அறிவு ஆகிய மூன்றும் தக்க இடம்பெறுகின்றன. அவற்றை அம்பிகை முறையாக அமைத்து வைப்பதால் அவள் கலைகள் யாவுக்கும் தலைவியாகத் திகழ்கின்றாள். கலைகள் வடிவினளா யிருப்பதற்கும் கலைகளுக்குத் தலைவியாய் இருப்பதற்கும் இடை யில் சிறு வேறுபாடு உள்ளது. கலைகளை உருவாக்குவது மட்டுமன்று; கலைகளுக்கிடையிலே நல்ல பொருத்தத்தை அமைப் பது மேலானது. தலைமை வகிப்பவர்களுக்கே அது சாத்தியமா கின்றது.

**काव्यालाप विनोदिनी — காவ்யாலாப விநோதினீ** ६१३

காவியங்களின் விளக்கத்தில் மேலாம் மகிழ்ச்சி யடைபவள்.

நிறைநிலையில் அமைந்துள்ள கவிதை காவியமாக முற்றுப் பெறுகிறது. கவி என்னும் சொல் சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மதேவனைக் குறிக்கிறது. சொல்லைச் சரியாக அமைப்பவன் கவி எனப்படுகிறான். பிரம்மதேவனுடைய பெரிய காப்பியமாக இப்பிரபஞ்சம் விளங்குகிறது. அதன்கண் வடிவழகு, சொல்லழகு, ஓசையழகு, கருத்தழகு ஆகிய சௌந்தர்யங்களனைத்தும் மிளிர் கின்றன. மஹரிஷி வால்மீகி போன்றவர்கள் படைத்துள்ள காவியங்களில் எல்லாவிதமான மகிமைகளும் ஒரேபாங்கில் அமைந்திருக்கின்றன. சொல் குற்றம் எதையும் நல்ல காவியத் தில் காணமுடியாது. அருளாளர்களே தம் கருத்துக்களுக்கேற்ற பொருத்தமான பதங்களைப் பொருத்தமான பாங்கில் பயன் படுத்துகின்றனர். அத்தகைய காவியங்களில் அமைந்துள்ள சொற்சுவை அளவில்லா ஆனந்தத்தை ஊட்டுகிறது. அத்தகைய காவியத்திற்குப் பணிவிடை பண்ணுகின்ற பாங்கில் இன்னிசை காத்துக்கொண்டிருக்கின்றது. மேலாம் இசையினால் கவிதையின் மகிமை மேலும் சிறப்புற்று விளங்குகிறது. ராகங்களை உணர்ச் சிக்கோ கருத்துக்கோ ஏற்ற இடத்தில் அமைத்து வைத்தால்

அதன் விளைவாக ஆனந்தம் பன்மடங்கு அதிகரிக்கின்றது. எல்லாவற்றுக்கும் மேலாகப் பொருள் சுவை என்பது அமைந்துள்ளது. பொருள்களுக்கெல்லாம் பெரியபொருளாயிருப்பது பரம்பொருள். அவனை விளக்குதற்கென்றே ஒரு காவியம் பொருத்தமாக அமையுமாகில் அதை நிறைமொழி என்றும் ஆப்த வாக்கியம் என்றும் அழைக்கலாம். இவை யாவற்றையும் இனிதாக இணைத்து வைத்து ரசிக்கின்றவர்கள் சரியான முறையில் தேவாராதனை பண்ணுகின்றார்கள்.

கண்ணன் கிளப்பிய புல்லாங்குழலோசையில் நாதப்பிரம்மம் உருவெடுத்தது. அதன் விளைவாக மக்களுக்கிடையில் தேகாத்ம புத்தி என்னும் கீழ்மை தானாக நழுவிப்போயிற்று. ஆத்ம சொருபம் ஒன்றே எஞ்சியிருந்தது. கோபிமார்களுக்கிடையில் ஒன்றென்றோ பலவென்றோ பகரமுடியாத அதீதநிலை நிகழ்ந்தது; பரமானந்தம் தன் மயமாய் மிளிர்ந்தது. அத்தகைய நிலையில் அம்பிகை யாண்டும் இருக்கின்றாள்.

சொற்சுவை, பொருட்சுவை, ஆலாபனம் ஆகிய யாவும் பரமஹம்சதேவர் பாடிய அனுபூதி நிறைந்த பாடல்களில் திகழ்ந்தன. ஆலாபனம் உச்சநிலையாகிய அதீதத்துக்குப் போன பொழுது சமாதி நிலை கைகூடியது. ஆலாபனத்தை எந்த இடத்தில் நிறுத்தினாரோ அந்த இடத்திலிருந்து பரமஹம்சதேவர் சமாதியிலிருந்து கீழ்நிலைக்கு வந்தபோது ஓசையாக உருவாக்கினார். அப்படிச் செய்ததும் ஒருவிதக் கலைஞானமாகிறது. காவியத்தை முறையாக விளக்குவதில் என்னென்ன விதமான ஆனந்தங்கள் நிறைந்திருக்கின்றன என்பதற்குப் பரமஹம்சர் அடைந்த ஆனந்தமே சான்றாகிறது. அம்பிகை உபாசனையில் அவர் உச்சநிலையை எட்டியிருந்தார். தானே அம்பிகையாக அவர் மாறியமைந்தார்.

சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதானம், அனுக்ரஹம் ஆகிய பஞ்ச கிருத்தியங்கள் அம்பிகைக்கு ஒரு காவியமாக அமைகின்றன. கால ஒழுங்குப்பாட்டில் தாள ஞானம் நிறைந்திருக்கிறது. இயற்கையும் உயிர் வகைகளும் தக்க காலங்களில் ஓங்கி வளர்ந்துவருவதில் பேருணர்வுக் கலை முன்னணியில் வந்து நிற்கிறது. பிரபஞ்ச அமைப்பில் எப்பொருள் எத்தகைய இடம்

பெறுதல் என்னும் கோட்பாட்டில் அம்பிகையின் பேராற்றல் ஒரு பெரும் கலையாகத் தோற்றத்துக்கு வருகிறது. உயிர்வகைகளைத் திரோதானத்தில் மறைத்து வைத்திருந்து ஜீவாத்மாக்களின் நிஜநிலையைப் பக்குவமான காலத்தில் காட்டியருள்வது அனுக்ரஹமாகின்றது. அம்பிகையின் கிருத்தியங்கள் யாவும் பலப்பல கலைகளாகத் திகழ்கின்றன. அவை யாவற்றையும் அம்பிகை தன் மகிமைக்கேற்ற பாங்கில் ஆலாபனம் பண்ணிக் கொண்டிருக்கிருள்.

## सचामर रमावाणी सव्यदक्षिण सेविता ६१४

**ஸசாமர ரமாவாணீ ஸவ்யதக்ஷிண ஸேவிதா 614**

சாமரங்களைக் கையில் ஏந்திய இலட்சுமிதேவியும் சரஸ்வதிதேவியும் இடது பக்கத்திலும் வலது பக்கத்திலும் நின்றுகொண்டு சேவிக்கப்படுபவள்.

ஆதிபராசக்தியின் முன்னிலையில் திருமகளும் கலைமகளும் பணிப்பெண்களின் நிலையை எய்துகின்றனர். உலக நடைமுறையில் செல்வமும் கல்வியும் சேர்ந்திருப்பதைக் காண்பது அரிது. இந்த இரண்டு தேவிமார்களும் மகிழ்வுடன் ஒன்றுகூடி இருந்து கொண்டு அம்பிகைக்குப் பணிவிடை செய்வதன் வாயிலாக அவளுடைய மகிமையை வெளிப்படுத்துகிருர்கள். அம்பிகையின் அருளுக்குப் பாத்திரமாகிறவர்களிடம் செல்வமும் கல்வியும் சேர்ந்தே அமையும். செல்வம் படைத்தவனிடத்து நல்ல கலைஞானம் அமைந்திருக்குமாகில் அக் கலைஞானத்தைப் பொது மக்களுக்கு நன்கு பயன்படும்படிச் செய்ய அவனுடைய செல்வம் முகாமையாகிறது. நிறைஞானி ஒருவனிடத்து அவனுடைய சங்கல்பத்திற்கு ஏற்றவாறு கலைகளும் செல்வமும் வேண்டிய அளவு வந்து வாய்க்கின்றன. பொருளும் அருளும் பரஞானத்துக்குப் பணிவிடை பண்ணுகின்றன. அர்த்தநாரீஸ்வரர் ஆகிய சிவனாரின் இடப்பக்கத்தில் அம்பிகை இருக்கின்ருள். செல்வத்தின் பணிவிடை எல்லாம் பிரகிருதியின் ஆதிக்கத்தில் நின்றுவிடுகிறது என்பதை அம்பிகைக்கு வலப்பக்கத்தில் சேவை செய்யும் கலைமகள் விளக்குகின்ருள். மற்று கலையை நன்கு பயன்படுத்தினல் அது பிரகிருதி மயமான பிரபஞ்ச வாழ்விற்கும் பர நாட்டத்துக்கும் பெரிதும் உதவி பண்ணுகிறது. திரவிய நாட்

டத்தை வித்யா நாட்டமாக மாற்றிப் படிப்படியாக மேலே கொண்டுசெல்ல வேண்டும். உச்சநிலைக்குப் போகும் கலைஞானம் பரஞானமாகப் பரிணமிக்கிறது. ஆனல் ஏராளமாகக் குவியும் செல்வம் இகலோக வாழ்க்கைக்கு மட்டுமே பயன்படும். ஆத்ம சாதகன் பொருள் நாட்டத்தைப் பின்னணியிலும் அருள் நாட்டத்தை முன்னணியிலும் வைத்துப் பழக வேண்டும்.

**आदिशक्तिः — ஆதிசக்தி:** ௬௧௫

ஆதி சக்தியாயிருப்பவள்.

தோற்றத்தில் இருப்பவைகளுக்கும் தோன்ரு நிலையில் இருப்பவைகளுக்கும் மூலப் பொருளாயிருப்பவள் அன்னை பராசக்தி. எந்த விதமான விகாரத்திற்கும் இடமில்லாத மூலநிலை பரப்பிரம்மத்தோடு ஒன்றுபட்டிருக்கிறது. அந்நிலையிலுள்ள பொருளைச் சாக்தர்கள் ஆதி சக்தி என்றும், சைவர்கள் சதாசிவம் என்றும், வைஷ்ணவர்கள் மகாவிஷ்ணு என்றும் பகர்கின்றனர். வேதாந்தத்தில் அப்பரவஸ்து பிரம்மம் எனப் பெயர் பெறுகிறது. பூர்ணமத: என்பது ஆப்த வாக்கியம். பரவஸ்து நிறைநிலையினின்று எவ்விதத்திலும் மாறுவதில்லை. பூரணத்தினின்று எத்தனை கோடி அண்டங்களைத் தோற்றத்திற்குக் கொண்டு வந்தாலும், பூரணப்பொருள் பழையபடி பூரணமாகவே இருக்கிறது. ஆகையால் அன்னை பராசக்தியை ஆதி சக்தியாகக் கருதித் தியானிப்பது முற்றிலும் பொருந்தும்.

**अमेया — அமேயா** ௬௧௬

அளப்பரியவள்.

ஆதிபராசக்தியே அனைத்துமாய் இருப்பதால் அவளை அளப்பதற்குரிய பொருள் வேறென்றும் இல்லை, நடுக்கடலில் உள்ள ஜலத்தை அளப்பதற்குக் கடல் நீரைத் தவிர வேறென்றும் இல்லை என்ருல் அந்நிலையிலுள்ள கடல்நீர் அளப்பரியதாகிறது. பரவஸ்துவாய் இருக்கும் அம்பிகைக்கும் இக்கோட்பாடு பொருந்துகிறது. அனந்தங்கோடி ஜீவாத்மாக்களின் உடல், உள்ளம், அறிவு ஆகிய கருவி கரணங்களாய் அம்பிகை இருக்கிருள். இங்ஙனம் அனைத்துமாய் இலங்குவதால் அம்பிகைக்கு 'அமேயா' என்னும் நாமம் பொருத்தமாக அமைந்துள்ளது.

आत्मा — ஆத்மா ६१७

ஆத்ம சொருபமாய் இருப்பவள்.

ஆத்மாவுக்கு அன்னம் படை என்று கூறும்பொழுது அது அன்னமய கோசத்தைக் குறிக்கிறது. ஆத்மா மறைந்துபோயிற்று என்று சொல்லும்பொழுது அது பிராணமய கோசத்தைக் குறிப்பிடுகிறது. ஆத்மா குழம்பியிருக்கிறது அல்லது வேதனைப் படுகிறது என்று சொல்லும்பொழுது அப்பதம் மனோமயகோசத்தைக் குறிக்கிறது. பொருளை உள்ளது உள்ளபடி காணும் திறமை ஒரு மனிதனுக்கு இருந்தால் அந்த ஆத்மாவுக்கு எல்லாம் உள்ளங்கை நெல்லிக்கனியாக விளங்குகின்றது என்று கூறப்படுகின்றது. இங்கு ஆத்மா என்னும் பதம் விஞ்ஞானமயகோசத்தைக் குறிப்பிடுகிறது. ஆத்மா யாண்டும் இன்புற்றிருக்கிறது என்று இயம்பும்பொழுது அது ஆனந்தமயகோசத்தைக் குறிக்கிறது. பொதுவாக ஆத்மா என்னும் சொல் அனந்தங் கோடி ஜீவாத்மாக்களைக் குறிக்கிறது. ஜீவர்கள் அனைவரையும் தொகுத்து அம்பிகை சொருபமாகப் பொருள்படுத்துவது நல்ல ஆத்ம சாதனமாகிறது.

परमा — பரமா ६१८

பரவஸ்துவாய் இருப்பவள்.

அம்பிகை பிரபஞ்ச மயமாக இலங்கும்பொழுது அது இகமென்றும் பிரபஞ்சத்துக்கு அப்பாற்பட்டதாயிருக்கும்பொழுது அது பரமென்றும் மொழியப்பெறுகிறது. பிரம்மத்தைக் குறிக்கும் பரம் என்னும் சொல் சக்தியைக் குறிக்கும்பொழுது பரமா என்று மாறியமைகிறது. தோற்றத்தில் இருப்பவளும் தோற்றத்துக்கு அப்பால் இருப்பவளும் அம்பிகையே. அவளுக்கு அன்னியமாகப் பொருள் ஒன்றும் இல்லை. கண்ணுக்குப் புலப்படும் கடலின் மேற்பரப்பும், அங்ஙனம் புலப்படாத கடலின் கீழ்ப்பரப்பும் சேர்ந்து கடல் என்னும் பொதுப் பெயர் பெறுகின்றன. அதே பாங்கில் தோற்றத்தில் உள்ளவை, தோற்றத்துக்கு அப்பால் உள்ளவை ஆகிய யாவுமாய் இருப்பவள் அன்னை பராசக்தி என்று கருதித் தியானிப்பது நல்ல தியானமாகிறது.

**पावनाकृतिः — பாவனாக்ருதி: ६१९**

எல்லாவற்றையும் பரிசுத்தப்படுத்தும் வல்லமையும், வரலாறும், ஞானமும் அமையப்பெற்றவள்.

அம்பிகையினுடைய திருவிளையாடல்களைப் படிக்கவும் கேட்கவும், அவற்றைப் பற்றிச் சிந்திக்கவும் செய்கின்றவர்களின் மனம் தானாகப் புனிதமடைகிறது. அவளுடைய வரலாற்றைப் பக்தி பூர்வமாக ஆராய்பவன் புனிதவான் ஆகின்றான். வெளிச்சம் தோன்றுமிடத்து இருள் தானாக மறைந்து பட்டுப் போவது போன்று அம்பிகையின் தியானத்தில் ஞானம் உதயமாகிறது.

ஞானோதயத்தில் ஜீவாத்மனுடைய பதிதநிலை அடிபட்டுப் போய் அவன் பாவனன் ஆகிறான்.

பரம்பொருளே பாலகிருஷ்ணனாக வடிவெடுத்து வந்தது. ஐம்பொறிகள் வாயிலாகவும் கோபிமார்கள் தங்களை அறவே கண்ணனிடம் ஒப்படைக்கலாயினர். அதே பாங்கில் தியான அவஸ்தையில் அன்னை பராசக்தியின் பேரழகு வாய்ந்த வடிவம் ஆத்ம சாதகனுக்கு எட்டுமாகில் அதில் அவன் தன்னை லயப்படுத்துகிறான். அதற்கு நிகரான சாதனம் இல்லை என்பதை இந்நாமம் விளக்குகிறது.

**अनेककोटिब्रह्माण्डजननी ६२०**

**அனேககோடிப்ரம்மாண்ட ஜனனீ 620**

கணக்கிட முடியாத கோடிக்கணக்கான பிரம்மாண்டங்களைத் தோற்றுவிப்பவள்.

சூரியனுக்கும் பூமிக்குமிடையில் ஒன்பது கோடி மைல் தூரம் இருக்கிறது. சூரிய ஒளி எட்டேகால் நிமிஷத்தில் பூமியை எட்டுகிறது. ஆக, சூரிய ஒளியானது ஒரு நிமிஷத்துக்கு ஒரு கோடி மைல் தூரம் பாய்கிறது. நெடுந்தூரத்துக்கு அப்பால் உள்ள நட்சத்திரத்தில் இருந்துவரும் வெளிச்சம் பூமியை எட்டுவதற்குப் பல கோடி வருஷங்கள் ஆகின்றன. கண்ணுக்குத் தென்படுகின்ற நட்சத்திரங்கள் எல்லாம் சேர்ந்து ஒரு பிரம்மாண்டம் ஆகிறது. இங்ஙனம் அனந்தங்கோடி பிரம்மாண்டங்களாக விரிவடைந்து போகின்ற அகண்டாகாரத்தை யார் தான் அளக்க இயலும்?

ஒவ்வொரு பிரம்மாண்டத்திலும் உள்ள பூமியைப் போன்ற கோளங்களில் வசிக்கும் ஜீவகோடிகள் அனைத்துக்கும் அம்பிகையே ஜனனீயாக இருக்கிறாள். இனி, ஜடமாயிருக்கும் அனந்தங்கோடி கோளங்களுக்கும் அவளே ஜனனீயாக இலங்குகின்றாள். எனவே அவள் 'விராட்' என்னும் பெயர் பெறுகிறாள். ஜீவாத்மாக்களைப் பரிபாலித்து வரும் அம்பிகைக்கு 'சுவராட்' என்று பெயர். சேதனம், அசேதனம் இரண்டுக்கும் அபிமான தேவதையாய் இருக்கும் அம்பிகை 'சம்ராட்' எனப்படுகிறாள். இங்ஙனம் அம்பிகையின் புறத்தோற்றத்தைக் கருத்தில் வாங்கிக்கொள்ளும் ஆத்ம சாதகன் தன் ஜீவவியக்தியை அம்பிகையின் அகண்டாகாரத்தில் ஒடுக்குபவன் ஆகின்றான்.

**दिव्यविग्रहा — திவ்யவிக்ரஹா ६२१**

அழகான தேகத்தை உடையவள்.

ஒவ்வொரு வடிவத்தையும் கூர்ந்து கவனித்தால் அதில் அழகு பொலிவது புலனாகும். வடிவம் ஒன்று விக்கிரகம் என்னும் பெயர் பெறுகிறது. ஒருவனுக்கு அழகற்றதாகத் தென்படும் பொருள் இன்னொருவனுக்கு அழகுள்ளதாகத் தென்படுகிறது. இதற்குப் பார்ப்பவனுடைய மனப்பான்மையே காரணம். பண்பட்ட மனம் படைத்திருப்பவனுக்கு அனைத்தும் பேரழகுள்ளனவாகத் தென்படுகின்றன.

அரக்கன் என்று உருவகப்படுத்தப்படும் தீமையும் அம்பிகையினிடமிருந்தே தோன்றி வந்துள்ளது. முன்னேற்றமடைந்து வரும் மாந்தர் தீமையை எதிர்த்துப் போராடும் அளவிற்கு அவர்களுடைய ஆற்றல் அதிகரிக்கிறது. அவர்கள் நன்மையில் நிலைபெறுபவர்கள் ஆகிறார்கள். தீமையை எதிர்த்துப் போராடும் பராக்கிரமத்தோடு கூடிய வடிவம் பாராட்டுதற்குரியது. எங்கெல்லாம் தீமை எதிர்க்கப்படுகிறதோ அங்கெல்லாம் நலன் மகிமையோடு மிளிர்கிறது. இத்தகைய போராட்டம் இயற்கையின்கண் இடையறாது நிகழ்ந்து வருவதை வலியுறுத்துவதற்கு இந்நாமம் அம்பிகைக்குச் சூட்டப்பட்டிருக்கிறது.

**क्लीङ्कारी — க்லீங்காரீ ६२२**

'க்லீம்' என்னும் பீஜமந்திரத்தின் வடிவத்தில் இருப்பவள்.

ஜீவாத்மாக்கள் அனைவரும் காமத்தை உபாசிக்கின்றவர்களாக இருக்கின்றார்கள். அதன் விளைவாகப் பிரஜாவிருத்தியும் பிரவிருத்தியும் நிலைபெற்றிருக்கின்றன. பிரவிருத்தி மார்க்கத்தில் செல்லும் மானுடன் தன்னிடம் அமைந்துள்ள காமத்தை அம்பிகையின் விபூதியாகப் பொருள்படுத்துவானாகில் அதை அவன் மேன்மைப்படுத்துகிறான். யோகிகளால் நோயாகப் புறக்கணிக்கப்படும் காமம் போகியர்களால் தெய்வ விபூதியாகப் பாராட்டப் படுகிறது. காமத்தைப் புனிதப்படுத்துகிறவர்கள் நிறைநிலையிலுள்ள மகப்பேறதனைப் பெற்று உலகுக்குச் சன்மானமாக அளிப்பது கிருகஸ்த ஆச்ரம தர்மமாகிறது. அதை நன்கு நிறைவேற்றுதற்கு உரிய பீஜமந்திரமாக அம்பிகை தானே இலங்குகின்றாள்.

**केवला — கேவலா** **६२३**

தன்னில் தானாய் இருப்பவள்.

ஆத்ம சைதன்யம் பிரகிருதி மயமாகத் தன்னை விளக்கிக் கொள்ளும் நிலையிலும் பிரகிருதியோடு சம்பந்தப்படாது தன்னில் தானாய் இருக்கின்ற பாங்கிலும் உள்ளது. பிரகிருதியில் ஊடுருவிப் பாய்ந்திருக்கின்றபொழுது திரிகுண பேதங்களால் வருகின்ற விபூதிகளெல்லாம் ஆத்ம சைதன்யத்துக்கு உரியவைகளாகத் தென்படுகின்றன. அந்நிலையில் நிகழும் கிருத்தியங்கள் யாவும் ஆத்ம சைதன்யத்துக்குரிய தர்மங்கள் எனவும் கருதப்படுகின்றன. குணங்களைத் தன்பால் ஒடுக்கி ஆத்ம சைதன்யம் தன்னில் தானாய் இருக்கின்றபொழுது அதனிடத்தில் எந்த விகாரமும் இல்லை. விபூதிகளெல்லாம் மறைந்து பட்டுப்போய் அது குணாதீத கர்மாதீத நிலையாக இருப்பதால் சுத்த சைதன்யமாய், அகண்டமாய், ஏகமாய் உள்ள அதற்குப் புறம்பாக ஒன்றுமே இல்லை. அது அத்வைத வஸ்து. இதுவே கேவலா என்பதன் பொருளாகும். ஆத்ம சாதகன் கேவலத்தில் தன்னை ஒடுக்குவது சாதனத்தின் குறிக்கோளாகும். அம்பிகையைக் கேவலாவாகப் பாவித்து உபாசிப்பதற்கேற்ப ஆத்மசாதகன் சாதனத்தில் விரைந்து மேல் நோக்கிப் போகிறான்.

**गुह्या — குஹ்யா** **६२४**

ஹிருதய குகையில் இரகசியமாக மறைந்திருப்பவள்.

வேதாந்தத் தத்துவத்தின்படி காண்போனுடைய காட்சிக்குக் காணப்படுபொருள்களெல்லாம் இலக்காகின்றன. ஆனல் காண்போன் ஒருபொழுதும் காணப்படுபவனுவதில்லை. ஆகையால் ஆத்ம சொரூபம் குஹ்யமாயிருக்கிறது. அது காட்சிக்கு எட்டாததாயிருக்கிறது. வாய்விட்டுச் சொல்லாது உள்ளத்துக்குள்ளேயே புதைந்திருப்பது மௌனம். அந்த இரகசியத்தை அறிந்துகொள்ளுதற்குத் தன்னைத் தவிர இரண்டாவது மூர்த்தி இல்லை. சுத்த சைதன்யம் ஒன்றே இரகசியமாக இருக்கிறது. சலனம் ஏதும் அதன் கண் இல்லாததால் ஆங்கு ஓசை உண்டாவதில்லை. எங்கு ஓசையில்லையோ அங்கு மௌனம் நிலவுகிறது. மௌனத்திலிருப்பது தன்னில் தானய் திளைத்திருப்பதாகும். அப்பெரு நிலையைத்தான் சிவபெருமான் தட்சிணுமூர்த்தியாய் இருந்து மௌனத்தின் வாயிலாக விளக்குகிறுர். சுத்த சைதன்யத்தில் தன்மயமாயிருப்பது நல்ல ஆத்ம சாதனமாகிறது.

**कैवल्यपददायिनी — கைவல்யபததாயினீ** ६२५

கைவல்ய என்னும் பெருநிலத்தையும் அதை அடைதற்கு முன்பு அமைந்துள்ள பதவி முக்திகளையும் உபாசகர்களுக்கு வழங்குபவள்.

சகுணப் பிரம்மம் தன் மகிமைகளையெல்லாம் தூய அறிவுக்கு எட்டும்படி செய்வதால் உபாசனைக்கு அந்தச் சொரூபம் முற்றிலும் பொருத்தமானது. கேவல வஸ்து ஆகிய நிர்க்குண பிரம்மத்தில் விளக்கங்களுக்கு இடமில்லை. சகுணப்பிரம்மம் ஒரு காலத்தில் இருந்து இன்னெரு காலத்தில் மறைந்துபட்டுப் போகிறது. நிர்க்குணப் பிரம்மமோ யாண்டும் யாவருக்கும் உரியதாய் இருப்பதால் அதைக் கேவலம் என்று கூறுகிறோம். உலக நடைமுறையில் கூட மட்டமான ஒரு பொருளுக்குப் பஞ்சம் இல்லாமையினல் அது கேவல வஸ்து எனப்படுகின்றது.

காமபீஜ மந்த்ரம் தர்மம், அர்த்தம், காமம், பதவி முக்திகள் ஆகியவற்றைக் கொடுத்தாலும் அது பிறவிப்பெருங்கடலிலிருந்து ஆத்ம சாதகன் ஒருவன் தன்னை விடுவித்துக் கொள்ள உதவ மாட்டாது. சம்சார சாகரத்தினின்று விடுதலை அடைவதற்குக் காமக்கலையை உயர்நிலைக்கு உயர்த்துதல் வேண்டும். அந்த உயர் நிலையில் சிவமும், சக்தியும் அபேத நிலையில் உள்ளனர்.

பூலோக வாழ்க்கையைப் பண்பட்டுள்ள மக்கள் மேலான தாக மாற்றியமைக்க வல்லவர்களாகின்றனர். பததாயினீ என்பது வெவ்வேறு படித்தரங்களிலுள்ள பதவிகளைத் தருபவள் எனப்பொருள்படுகிறது. ஆக, அம்பிகை உபாசனையினால் பூலோகத்தில் மக்கள் அனுபவித்து வரும் நல்ல நிலைகளைவிட மேலான பதவிகளைப் பெறுவது சாத்தியமாகிறது.

பக்தன் ஒருவன் அடையும் பதவிகள் சாலோக்யம், சாமீப்யம், சாரூப்யம், சாயுஜ்யம் எனப்படுகின்றன. இவை நான்கிற்கும் மேலே இருப்பது கைவல்யம். கைவல்ய முக்தியில் ஒரு ஜீவன் பரப்பிரம்மத்தில் ஒன்றுபடுகின்றான். அவன் சம்சார சாகரத்தைத் தாண்டியவனாகின்றான். அவனுக்குப் பிறப்பு, இறப்பு முதலியன இல்லை. பிரதீகா என்னும் புறச்சின்னங்களின் வாயிலாகப் பாஹ்ய பூஜையில் ஆழ்ந்து மூழ்கியிருக்கும் ஆத்ம சாதகன் அம்பிகைக்குரிய சாலோக்யம் என்னும் லோகத்தில் வசித்திருப்பவனாகிறான். அவனுடைய நல்ல ஆசைகளெல்லாம் அங்கு நிறைவேறுகின்றன. சாமீப்யம் என்னும் படித்தரத்தில் அகத்திலும் புறத்திலும் தன் வழிபடு தெய்வமாகிய அம்பிகைக்குச் சமீபத்தில் இருப்பதாகச் சாதகன் உணர்கிறான். இந்நிலையில் பாஹ்ய பூஜை நின்று போய்ச் சர்வகாலமும் மானஸ பூஜையே நிகழ்ந்துகொண்டிருக்கிறது. ஆயினும் தனக்கும் தன் வழிபடு தெய்வத்துக்கும் இடையில் சிறிது வேறுபாடு இருப்பதை ஆத்ம சாதகன் உணர்கிறான். சாரூப்ய பதவியைத் தீவிரமான உபாசனையின் வாயிலாக அடையும் அந்த ஆத்ம சாதகன் தெய்வத்துக்குரிய அதே வடிவத்தைத் தானும் எடுத்துக்கொள்கிறான். தன் வடிவமும் தன் வழிபடு தெய்வத்தின் வடிவமும் ஒன்று என்னும் ஞான அனுபவம் அவனுக்குக் கிட்டுகிறது.

சாயுஜ்யம் என்னும் பதவியில் உபாசகனும் உபாசனா மூர்த்தியும் ஐக்கிய நிலையை எய்துகின்றனர். இந்நிலையில் 'நான்' என்னும் சொல் ஜீவாத்மனைக் குறிப்பதில்லை; அது பரவஸ்துவைக் குறிக்கிறது. சகுணப்பிரம்மத்தில் சாதகன் ஒன்றுபட்டிருக்கும் நிலை இதுவேயாம். ஸத் கர்மங்களின் வாயிலாக இத்தகைய பதவி முக்திகள் ஒருவனுக்கு வாய்க்கின்றன.

கர்மாதீதத்துக்குப் போகின்றவன் கைவல்ய முக்தி அடைகின்றான். சுத்த சைதன்யம் தன்னில்தானாய்த் திகழ்ந்து கொண்

டிருக்கும் அப்பெருநிலேதான் ஜீவனுடைய யதார்த்த நிலே ஆகிறது.

**त्रिपुरा — த்ரிபுரா** ६२६

முப்புரங்களுக்கு அதிபதியாயிருப்பவள்.

சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் ஆகிய மூன்று கிருத்தியங்களுக்கு அதிஷ்டான தெய்வங்களாகிய பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் ஆகியவர்களுக்கு அதிபதியாகவும்; அப்பாற்பட்டவளாகவும் அம்பிகை இலங்குகின்ருள்.

முக்குணங்களில் சத்துவ குணத்தின் சான்னித்தியத்தால் உயிர்வகைகள் உருவெடுக்கின்றன. ரஜோகுணத்தின் பலப்பல பாங்குகளாக இயற்கையின்கண் நிகழ்ச்சிகள் நிகழ்கின்றன. தமோகுணத்தின் விளேவாக ஜடமயமாயுள்ள அண்டகோடிகளனேத்தும் உருவெடுத்துள்ளன. இந்த முக்குணங்களில் கட்டுப்படாத குணுதீத நிலேயில் அம்பிகையின் மகிமை மிளிர்ந்துகொண்டிருக்கிறது.

மனம், புத்தி, அகங்காரம் ஆகிய அந்தக்கரணங்களுக்கு அப்பாற்பட்டவளாக அம்பிகை இருக்கிருள். இடை, பிங்கலே, சுஷும்னே என்னும் கூறுகளே உடைய பிராணனின் போக்குவரத்துக்கு அப்பாற்பட்டவளாக அன்னே பராசக்தி இலங்குகின்ருள். உயிர் வகைகளின் வாசஸ்தலங்களாகிய பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம் ஆகிய மூன்று உலகங்களுக்கும் அப்பாற்பட்டவளாக அம்பிகை இருக்கிருள். ஆதலால் அவள் த்ரிபுரா என்று போற்றப்படுகிருள்.

**त्रिजगद्वन्द्या — த்ரிஜகத்வந்த்யா** ६२७

மூன்று உலகங்களாலும் வணங்கப்பெறுபவள்.

புருஷ தத்துவம், பிரகிருதி தத்துவம் ஆகியவற்றின் சேர்க்கை நிலேயில் உள்ள அன்னே பராசக்தியை மூவுலகிலும் எல்லாப் படித்தரங்களிலும் உள்ள ஜீவகோடிகள் அறிந்தோ அறியாமலோ வழுத்தி வருகின்றன.

மரணமிலாப் பெருநிலேயை எய்தும் பொருட்டு ஜீவர்கள் செய்யும் முயற்சியால் சிற்றுயிர்நிலேயிலிருந்து பேருயிர்களாகப்

பரிணமித்து வருகின்றன. அத்தகைய அழிவற்ற வஸ்து ஆத்மாவே யாகும். அந்தப் பரவஸ்துவாகிய ஆத்மாவே பராசக்தி. ஆக, ஜீவர்களனைவரும் மறைமுகமாக அம்பிகையையே போற்றி வருகின்றனர். ஆகையால் அம்பிகை த்ரிஜகத்வந்த்யா எனப் போற்றப் பெறுகிறாள்.

**त्रिमूर्तिः — த்ரிமூர்த்தி:** ६२८

மும்மூர்த்திகளாக இலங்குபவள்.

பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் ஆகிய மும்மூர்த்திகள் மயமாக அம்பிகை இலங்குகின்றாள். விதவிதமான உயிர்வகைகள் சதா பிறப்பெடுத்துக் கொண்டேயிருப்பது சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மதேவனுடைய செயல். அவ்வாறு பிறப்பெடுத்துள்ள உயிர் வகைகள் தமக்கேற்ற உணவின் மூலம் தம் உடலைப் பாதுகாப்ப தற்கும் வளர்ப்பதற்கும் முயலுகின்றன. இச்செயலுக்கு அதிஷ் டான மூர்த்தியாக இருப்பவர் விஷ்ணு.

வாழ்க்கைக்குத் தகுதியற்ற உடலங்களை ஒதுக்கித் தள்ளு வது மரணம் எனப்படுகிறது. அறியாமையால் மரணத்தை வேண்டாமென்று ஒதுக்கித்தள்ள உயிர்வகைகள் முயன்றாலும் அவையாவும் மரணத்துக்கு உட்பட்டே ஆகவேண்டும். சம்ஹார மூர்த்தியாகிய ருத்ரன் இச்செயலை இடையறாது நிகழ்த்தி வரு கிறார். இந்த மூன்று விதக் கிருத்தியங்களின் வாயிலாகவே ஜீவ ராசிகள் முன்னேற்றமடைந்து வருகின்றன. சிருஷ்டி, ஸ்திதி சம்ஹாரம் ஆகிய மூன்று கிருத்தியங்களையும் மும்மூர்த்திகளாக இலங்கும் அன்னை பராசக்தியே செய்து வருகின்றாள்.

த்ரிமூர்த்தி எனப்படும் அம்பிகை மூன்று வயது படைத் துள்ள பாலாவாக இலங்குகிறாள் என்பது ஒரு வியாக்கியானம். மூன்று வயதுள்ள சிறுமிகள் அகங்காரம் தோற்றத்துக்கு வராது சித்சொரூபிணிகளாகவும் ஆனந்தமயீ என்று அழைக்கப்பெறுப வர்களாகவும் உள்ளனர். அவர்களை அன்னை பராசக்தியின் சொரூபங்களாகப் போற்றுவது நல்ல வழிபாடாகிறது.

திரிமூர்த்தி என்னும் சொல் வாமா, ஜ்யேஷ்டா, ரௌத்ரி ஆகிய அம்பிகையின் சொரூபங்களாகிய தேவிமார்களையும் குறிக்

கிறது. ஜீவாத்மாக்களிடமிருக்கும் இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞானசக்தி சொரூபிணியாகவும் அன்னை பராசத்தி இலங்கு கின்றாள்.

**त्रिदशेश्वरी — த்ரிதசேச்வரீ** ६२९

தேவர்களுக்கெல்லாம் ஈசுவரியாக இருப்பவள்.

தேவர்கள் எனப்படுபவர்களுக்குத் தோன்றுதல், வளர்தல், இருத்தல் என்னும் மூன்று கூறுகள் உள்ளன என்றும் நரர்களுக்குத் தேய்தல், மறைதல் ஆகிய கூறுகளும் உண்டு என்றும் இயம்பப்படுகிறது. நரர்களோடு சீர்தூக்கிப் பார்க்குமிடத்துத் தேவர்கள் பலயுகங்களுக்குத் திட்பத்துடன் மரணமில்லாமலும் இருக்கிறார்கள். மரணமற்ற முக்த நிலையைத் தேவர்களும் அடைந்தவர்களல்லர். அவர்களுக்கு மரணம் இல்லை என்று உபசாரத்துக்காகச் சொல்லப்படுகிறது. நரர்கள் பல வருஷங்கள் வாழ்ந்திருப்பதுபோன்று தேவர்கள் பல யுகங்கள் வாழ்ந்திருக்கின்றனர். பலயுகங்களுக்குப் பிறகு ஞான பரிபாகம் அடைதல் பொருட்டு அன்னவர்களும் மக்களாய்ப் பிறக்க வேண்டும். விஷய சுகத்துக்குத் தகுதி பெற்றிருக்கும் தேவர்கள் ஞான விசாரமோ பக்தியைப் பெருக்குதலோ செய்ய இயலாது. அந்த அளவில் திரிதசர்களாகிய தேவர்கள் மானுடருக்கு ஒப்பானவர்களாகமாட்டார்கள்.

த்ரிதசா என்பது ஜாக்ரதம், சொப்பனம், சுஷுப்தி ஆகிய மூன்று நிலைகளைக் குறிக்கிறது. மானுடன் ஒருவன் ஜாக்ரதாவஸ்தையில் இருக்கும்பொழுது உலகோடு ஒரு போக்கில் இணக்கம் கொள்கிறான். கனவு நிலையில் இவ்வுலகம் அவனை விட்டு மறைந்துபோகிறது. தன் தன்மைக்கேற்ற உலகம் ஒன்றைக்கனவில் அவன் தானே சிருஷ்டித்துக்கொள்கிறான். அயர்ந்த உறக்கத்தில் அவன் ஒரே பிரளயத்தில் ஒடுங்கிவிடுகிறான். தத்துவபூர்வமாகப் பார்க்குமிடத்து இம்மூன்று அவஸ்தைகளிலும் மூன்று ஜீவர்கள் வடிவெடுப்பதில்லை. ஒரே ஜீவன் மூன்று அவஸ்தைகளிலும் நாள்தோறும் மாறியமைகிறான். அத்தகைய ஜீவர்களுக்கு இறைவியாக இலங்குபவள் த்ரிதசேச்வரீ என்று போற்றப்பெறுகிறாள்.

**त्र्यक्षरी — த்ர்யக்ஷரீ** ६३०

மூன்று எழுத்து மயமாயிருப்பவள்.

ஞான சக்தி, கிரியா சக்தி, இச்சா சக்தி ஆகியவற்றைக் குறிக்கும் பீஜமந்த்ரத்தை இந்த மூன்று எழுத்துக்கள் குறிக்கின்றன. ஞானத்தைப் பெருக்குதல் உயிர்கள் அத்தனைக்கும் பொதுவானது. தமக்கு வரக்கூடிய துன்பங்களினின்று தம்மைப் பாதுகாத்துக்கொள்ள உயிர் வகைகள் யாவும் முயலுகின்றன. அம்முயற்சிக்குக் கிரியாசக்தி என்று பெயர். ஒவ்வோர் உயிரும் தன்னிடம் வைத்துள்ள பற்றுதல் இச்சா சக்தியாகிறது. ஆபத்துக்கேதுவானவற்றை உணர்ந்துகொள்ளும் ஞானசக்தி எல்லா உயிர்வகைகளிடமும் உண்டு. தமக்குத் தேவையான உணவு வகைகளைத் தேடி வெகுதூரம் செல்லும் ஜீவராசிகளின் முயற்சிக்குக் கிரியாசக்தி எனப்பெயர். இந்த மூன்று சக்திகளையும் வளர்ப்பதில் மனிதன் கண்ணும்கருத்துமாயிருக்கிறான். தனக்கு உகந்த துறையில் அறிவை வளர்ப்பதில் மனிதன் நிபுணன் ஆகிறான். செயற்கரிய செயல்களைச் சாதிக்க வல்லவனாகவும் அவன் இருக்கிறான். பஞ்சபூதங்களையும் அன்னவன் தன் வசதிக்காக அடக்கி ஆளுகின்றான். அன்பை வளர்க்கும் திறமை அவனிடம் ஏராளமாக உள்ளது. எல்லாவற்றுக்கும் மேலாகத் தெய்வபக்தி என்னும் பேரன்பு மனிதனிடம் மட்டுமே சிறப்பாகத் திகழ்கிறது. இக்காரணங்களை முன்னிட்டு த்ர்யக்ஷரீ மயமாயுள்ள அம்பிகையின் சான்னித்தியத்தை ஜனசமூகத்திற்கிடையில் நாம் காணலாம்.

**दिव्यगन्धाढ्या — திவ்யகந்தாட்யா** ६३१

தெய்விக மயமான நறுமணத்தை நிறைநிலையில் உடைத்திருப்பவள்.

பிரபஞ்சத்திலுள்ள சேதனம், அசேதனம் ஆகிய அனைத்துமாய் அமைந்திருப்பவள் அம்பிகை. சேதனப்பொருள் ஒன்று பரிபூரணநிலை எய்துங்கால் அதனிடமிருந்து நறுமணம் கமழ்கின்றது. மரம், செடி, கொடிகளாகிய ஸ்தாவரங்கள் வளர்ச்சியில் உச்சநிலை அடையும்பொழுது பரப்பும் நறுமணமே அம்பிகையின் சான்னித்தியத்துக்குச் சான்றாகிறது. பூரண நிலையை

எட்டியுள்ள புனுகுப் பூனை, கஸ்தூரிமான் போன்றவை தன் மேனியினின்று நறுமணத்தை வெளிப்படுத்துகின்றன. சீரிய நல்வாழ்வு வாழ்கின்ற மனிதர்களிடத்துப் பாராட்டுதற்குரிய நறுமணம் கமழ்கின்றது. நல்ல யோகிகளிடத்துச் சுகந்தம் **(Saint's Fragrance)** கமழுவதை நாம் நுகரலாம்.

தேவலோகத்துக்குரிய ஹரிச்சந்தனம் போன்றவற்றின் பரிமளம் அம்பிகையிடம் கமழுகிறது. பக்குவமடைந்துள்ள யோகிகளின் இந்திரியங்கள் ஆற்றல் மிகப் பெறுவதால் மற்றவர்கள் நுகர இயலாத பரிமளத்தை அன்னவர்கள் நுகரமுடிகின்றது. அத்தகைய நறுமணமும் அம்பிகையின் சான்னித்தியத்துக்கு அத்தாட்சியாகிறது.

**सिन्दूरतिलकाञ्चिता — ஸிந்தூர திலகாஞ்சிதா** ६३२

சிந்தூரத்தினால் இடப்பட்ட திலகத்தைக்கொண்டு அலங்கரிக்கப்பட்டவள்.

கோரோசனை முதலிய நறுமணம் ஏற்றப்பட்டுள்ள குங்குமம் இரத்த நிறமாய் இருப்பதால் அதற்குச் சிந்தூரம் என்று பெயர். எங்கெல்லாம் அழகு மிளிர்கிறதோ அங்கெல்லாம் அம்பிகையின் சான்னித்தியம் சிறப்புற்று நிறைந்துள்ளது. இயற்கையாக அமைந்துள்ள அழகைச் செயற்கையாக அதிகப்படுத்துவதும் ஒருவித வழிபாடாகிறது. தெய்வத்தின் சின்னங்களாகிய அழகு பொருந்திய விக்ரஹங்களைச் சந்தனம், திலகம் போன்ற புறப் பொருள்களைத் தீட்டி மேலும் அலங்கரிக்கலாம். அழகை நன்கு புலப்படுத்துவதே ஒரு விதத்தில் தெய்வ வழிபாடாகிறது.

சிந்தூர திலகம் என்பது பெண்பாலர்களைக் குறிக்கிறது. பெண்பாலர்களால் நன்கு போற்றப்படுபவள் என்னும் கருத்தும் இந்நாமத்தில் அடங்கியுள்ளது.

**उमा — உமா** ६३३

உமா என்னும் பெயரை உடையவள்.

உமா என்னும் சொல் ஓங்கார ரூபமாக மிளிர்கிறது. அது தேவிக்குரிய பிரணவம் ஆகிறது. 'பிரணவத்தின் கோட்பாடுகளனைத்தும் உமா என்னும் மந்திரத்தில் அடங்கியுள்ளன. உ என்

னும் அக்ஷரம் சிவசொரூபத்தையும் மா என்னும் அக்ஷரம் இலட்சுமியையும் குறிக்கிறது. உமா என்பது சிவனாரிடம் அமைந்துள்ள லட்சுமிகரத்தைக் குறிக்கின்றது. சிவம் என்றால் மங்களம் எனப் பொருள்படுகிறது. எல்லா மகிமைகளோடும் கூடிய பரம்பொருளுக்கு உமா மஹேஸ்வரன் என்னும் பெயர் வந்துள்ளது. உமையின் பொருட்டே சிவனார் சுந்தரேஸ்வரன் ஆகிறார்.

தவத்தின் மூலம் உண்டாக்கப்படும் தூய சம்ஸ்காரங்களினால் மேலான எண்ணங்களே சர்வகாலமும் உதிக்கின்றன. போற்றுதற்குரிய அவ்வெண்ணங்களின் மயமாக அம்பிகை இலங்குகிறாள் என்பதை இந்நாமம் விளக்குகிறது. ஹிமவானின் புதல்வியாகிய அம்பிகை பிரம்ம வித்யா மயமாகக் காட்சிகொடுப்பதால் அவள் உமா என்னும் பெயரைப் பெறுகிறாள். தூய மனதுக்கும் எட்டாத பரவஸ்துவாகிய நிர்க்குணப் பிரம்மம் சகுணப் பிரம்மமாக இலங்குவதற்கு ஏதுவாயிருப்பவள் உமாதேவி. உமாதேவியின் அருளால் சகுணப் பிரம்மத்தின் விபூதிகளனைத்தும் தூய மனதிற்கு எட்டக்கூடியவையாய் உள்ளன.

ஹிமவானின் புதல்வியாக அவதரித்துக் கடும் தவத்தில் ஹைமவதி ஈடுபட்டபொழுது அவளுடைய தாய் தன் குழந்தை அதிகச் சிரமம் எடுத்துக்கொள்ளலாகாது என்று உ என்னும் அக்ஷரத்தை உச்சரித்து அவளுடைய கவனத்தைத் தன்பால் திருப்பினாள். பிறகு மா என்னும் அக்ஷரத்தை உச்சரித்தாள். அதன் பொருள் 'வேண்டாம்' என்பதாகும். கடுந்தவத்தில் மூழ்க வேண்டாம் என்று சொன்னதால் செல்விக்கு உமா என்னும் பெயர் வந்தது.

அகர உகர மகரம் பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் ஆகியவர்களைக் குறிப்பதால் உமாவதி தானே மும்மூர்த்திகளின் மயமாக இலங்கிக் கொண்டிருக்கிறாள்.

**शैलेन्द्रतनया — சைலேந்த்ர தனயா** **634**

பர்வத ராஜனுடைய புதல்வியாய் விளங்குபவள்.

சைலம் என்றால் மலை என்று பொருள்படுகிறது. மலைகளுக்கெல்லாம் ஹிமவான் தலைவனாய் இருப்பதால் அவன் சைலேந்திரன் என்னும் பெயர் பெற்றுள்ளான். பர்வத ராஜனின் புதல்

விக்குப் பார்வதி என்னும் பெயர் வந்துள்ளது. ஹைமவதி என்றும் கிரிஜா என்றும் அவள் அழைக்கப் பெறுகிறாள். ஒரு நிலையில் அசேதனமாயிருப்பது மற்றொரு நிலையில் சேதனமாகப் பரிணமிக்கிறது. மலையானது சேதனம், அசேதனம் இரண்டுக்கும் இடை நிலையில் இருக்கிறது. அம்பிகை தானே ஜடசக்தியாகவும் சித்சக்தியாகவும் இலங்குகின்றாள். அவள் தன் தவத்தால் ஜடநிலையினின்று சேதன நிலைக்கு அவதரித்து வருகிறாள் என்பதை அவளுடைய நாமங்கள் யாவும் விளக்குகின்றன. இந்நாமங்களை ஓதுகின்ற ஆத்ம சாதகர்களும் ஜட நிலையைக் கடந்து சேதனநிலைக்கு வரவேண்டும் என்று உணர்வார்களாகில் அவர்கள் புரியும் அர்ச்சனை பொருள் மிகப் புதைந்ததாகிறது. ஜடநிலையில் உள்ள உயிர்வகைகள் படிப்படியாகச் சேதன நிலைக்குப் பரிணமித்து வருவதை அம்பிகையின் திருநாமங்கள் ஒருபோக்கில் விளக்குகின்றன.

### गौरी — கௌரீ ६३५

இளம் மஞ்சள் நிறம் வாய்க்கப்பெற்றவள்.

கௌரவர்ணம் என்பது தங்கத்தின் நிறத்தைக் குறிக்கிறது. பொன்னார் மேனியளாய் விளங்கும் அம்பிகை கௌரீ என்னும் நாமத்தைப் பெறுகிறாள்.

தன் தந்தை தக்ஷப்பிரஜாபதி சிவனுக்கு அழைப்பு விடுக்காமல் யாகம் ஒன்று புரிந்தான். சிவனார் செய்த எச்சரிக்கையையும் ஏற்றுக்கொள்ளாது அம்பிகை யாக சாலைக்குச் சென்றதால் அவமதிக்கப்பட்டாள். யோக நிலையில் தன் சரீரத்தை ஆங்கு உகுத்துவிட்ட பிறகு ஹிமவானின் புதல்வியாக அவள் பிறப்பெடுத்தபோது சங்கு மல்லிகைப்பூ, பூரணச் சந்திரன் ஆகியவை போன்று வெண்மை நிறம் படைத்தவள்ாயிருந்தாள். எனவே கௌரீ என்னும் சொல் வெண்ணிறத்தையும் குறிப்பதாயிற்று.

நதி ஒன்றும், பத்துவயதுக் கன்னிகை ஒருத்தியும், கான்யகுப்ஜம் என்னும் பீடத்துக்கு அமைந்துள்ள அதிஷ்டான தெய்வமும் கௌரீ என்னும் பெயர் பெற்றுள்ளதால் அன்னை பராசக்தி கௌரீ என்று போற்றப்பெறுகிறாள்.

**गन्धर्वसेविता — கந்தர்வ ஸேவிதா** ६३६

கந்தர்வர்களால் சேவிக்கப்படுபவள்.

சாதகன் ஒருவனுக்குக் கிடைத்துள்ள வாய்ப்புக்களில் இன்னிசையும் ஒன்ருக இருக்குமாகில் அந்த இசையை அவன் வழிபாட்டுக்கு நன்கு பயன்படுத்தலாம். கான ரசமானது மற்ற உயிர் வகைகளையும் வழிபாட்டின்கண் கவர்ந்திழுக்கிறது. இன்னிசையை யோகத்துக்கென்றே பயன்படுத்துவது சாலச் சிறந்தது. கந்தர்வர்கள் தேவலோகத்தில் சிறந்த பாடகர்களாக இலங்கி வருகிருர்கள். அவர்கள் தங்கள் பாடல் திறனை அம்பிகைக்குச் சிறப்பாகப் பயன்படுத்துகிருர்கள் என்னும் சிறப்பும் இந்நாமத்தில் அடங்கியுள்ளது.

**विश्वगर्भा — விச்வ கர்பா** ६३७

அகிலாண்டங்களையும் தன்னுள் உடைத்திருப்பவள்.

அலை சமுத்திரத்திற்குப் புறம்பானதாக இருக்கமுடியாதது போன்று உடல் தாங்கி இருக்கும் மானுடன் ஒருவன் எப்பொழுதாவது எவ்விடத்திலாவது பூமாதேவியின் சன்னிதிக்குப் புறம்பாயிருப்பவனல்லன். பூமாதேவி தானே மக்கள் எல்லாரையும் தாங்கிக்கொண்டு இருக்கிருள். எங்குப் பிறந்து எங்கு வாழ்ந்திருந்தாலும் மனிதன் பூமாதேவியின் மடியிலேயே இருந்து வருகிருன். அகிலாண்டநாயகியாகிய அம்பிகை அகிலாண்டங்களையும் தன்னகத்து அடக்கி வைத்திருக்கிருள். ஆத்ம சாதகன் ஒருவன் தெய்வ சான்னித்தியத்தை நாடி இங்குமங்கும் அலைந்து திரிவது பொருளற்றது. காண்பதையெல்லாம் கடவுள் சொருபமாய்க் காணும் மனபரிபாகத்தைப் பெறுவது அவசியமாகிறது. 'விச்வகர்பா' என்று அம்பிகையைப் பற்றி இயம்பும்பொழுது அவள் தானே அனைத்துமாய் மிளிர்ந்துகொண்டிருக்கிருள் என்பது வெளியாகிறது. தன் மனப்பான்மையைச் சாதகன் ஒருவன் மேலானதாக மாற்றியமைத்துக்கொள்வதே நல்ல வழிபாடாகிறது. உயிர்களோடு இணக்கம் கொள்கின்ற ஆத்ம சாதகன் அவ்வுயிர்களை அம்பிகையின் சொருபமாகப் பொருள்படுத்தவேண்டும்: அதற்கேற்ற பாங்கில் தன் மனதைத் திருத்தியமைப்பவனே சரியான முறையில் அம்பிகை வழிபாடு செய்பவனுகிருன். இந்

நாமத்தில் அடங்கியுள்ள அம்பிகையின் ஸ்தூல அமைப்பு முழுவதையும் சுவானுபவத்தில் கொண்டுவர முயலுவதே நல்ல ஆராதனையாகிறது.

स्वर्णगर्भा — ஸ்வர்ண கர்பா ௬௩௮

பொன்னார் மேனியளாகப் பொலிகின்றவள்.

கனவற்ற உறக்கத்தில் நாமும் அகிலாண்டங்களும் மறைந்துபட்டுப் போகின்றன. பிரளயத்தில் அகிலாண்டங்களனைத்தும் தோன்றாநிலை எய்துகின்றன. ஒடுங்கியுள்ள யாவும் தோற்றத்துக்கு வருகின்றபொழுது இருளாய் இருப்பது உருக்கி எடுத்த தங்கம் போன்று பிரகாசமடைகின்றது. அதினின்று நாமரூபங்கள் அனைத்தும் உருவெடுக்கின்றன. தங்கத்துக்கு நிகரான அழகும் ஒழுங்குப்பாடும் வடிவெடுத்தவளாக அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகி இலங்குகின்றாள். அனைத்தையும் அம்பிகை சொரூபமாகப் பார்க்கும் நிலையை அடையப்பெற்ற ஆத்ம சாதகன் ஒருவன் அவற்றையெல்லாம் பொன்னார் மேனி படைத்ததாகப் பார்க்கிறான். ஒவ்வொரு பொருளிலும், ஒவ்வோர் உயிரிலும் அழகு நிறைந்திருக்கிறது. ஒழுங்கற்றவை போன்று தென்படுபவைகளிடத்தும் ஒழுங்குப்பாடே நிறைந்துள்ளது. அவையாவும் தேஜோமயமாகப் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றன. அருள்பெற்ற சான்றோர்களின் பாமாலையை அம்பிகை வழிபாட்டில் சாதகன் ஒருவன் பயன்படுத்துகிறான். அத்தகைய பாமாலை மயமாக அம்பிகை இருக்கிறாள் என்னும் கருத்தும் இந்த நாமத்தில் அடங்கியுள்ளது.

अवरदा — அவரதா ௬௩௯

அரக்கர்களைக் கண்டிக்கிறவள்.

மக்களால் அமைக்கப்பட்டுள்ள நீதிகளை மீறி நடப்பது சாத்தியம். தெய்வாதீனமாக அமைந்துள்ள நீதிகளை மீறி நடக்க யாருக்குமே இயலாது. அப்படி மீறி நடக்கின்றபொழுது அவர்களுக்கு நேரும் துக்கமே தண்டனை எனக் கருதப்படுகிறது. சான்றோர்களுக்கும் நல்லவர்களுக்கும் கூடத் துக்கம் வாய்க்கிறது. சான்றோர்கள் பிரபஞ்சத்திலுள்ள பொருள்களனைத்துக்கும் சாட்சியாய் இருந்துகொண்டு அவற்றை அனுபவிக்கலாம். உரிமை

பாராட்டாதிருந்துகொண்டு உலகப் பொருள்களை அனுபவிப்பா யாக என்பது கோட்பாடு. அதற்கு மாருக சீதையின் சொற்படி ஸ்ரீராமன் மாயமானைக் கைப்பற்ற முயன்றதன் விளைவாக அவன் துக்கத்துக்கு ஆளானன். நம்முடையது அல்லாததை நம்முடைய தாக்க முயன்ருல் நமக்குக் கேடு வரும். அவ்வாறு முயலுபவர்கள் அரக்கர்கள் எனப்படுகின்றனர். சதாச்சாரம் படைத்திருப்பவர் கள் தேவர்கள் என்றும் சான்ரோர்கள் என்றும் பெயர் பெறுகின் றனர். அதற்கு நேர்மாருக நடப்பவர்களுக்கோ அசுரர்கள் என் றும் புல்லியர்கள் என்றும் பெயர் வந்துள்ளது. அவர்களுக்குத் தண்டனைக்கு மேல் தண்டனை வருகிறது. சான்ரோர்களுக்கும் துன்பம் வந்தமைவதுண்டு என்னும் கோட்பாட்டைச் சீதாராமன் தன் ஜீவிதத்தின் வாயிலாக விளக்குகிருன். யார் பிசகு செய்தா லும் அவர்கள் தண்டனையிலிருந்து தப்ப முடியாது என்னும் உண்மையை இந்த நாமம் விளக்குகிறது.

**वागधीश्वरी — வாகதீச்வரீ** ६५०

வாக்குகளுக்கெல்லாம் தலைவியாயிருப்பவள்.

மக்கள் பேசும் திறமை உள்ளவர்களானலும் எல்லாரும் தெளிவாகப் பேசமுடிவதில்லை. பேச்சுத் தெளிவு பண்பாட்டின் அறிகுறியாகும். சொல் சுவை, பொருள் சுவை இரண்டும் வாக் கில் அமைந்திருக்கவேண்டும். இந்தத் தெய்விகப் பண்பு அமை யப் பெற்றிருந்த அப்பர் சுவாமிகள் திருநாவுக்கரசு என்னும் பெயர் பெற்றுள்ளார். வாகதீச்வரியாகிய அம்பிகையின் அரு ளால் சொல் சுவையும் பொருள் சுவையும் அவருடைய தேவாரத் தில் அமைந்திருக்கின்றன அவ்விரு சுவைகளும் சேர்ந்து அமை யப்பெற்றவர்கள் அவற்றை அம்பிகையின் வழிபாட்டுக்கென்றே பயன்படுத்துதல் வேண்டும். சொல் சுவையும் பொருள் சுவை யும் தன்னிடத்து அமைந்திருத்தல் வேண்டும் என்று ஆத்மசாத கன் ஒருவன் அம்பிகையைப் பிரார்த்திக்கலாம். அது காமியப் பிரார்த்தனை ஆகாது.

**ध्यान गम्या — த்யான கம்யா** ६५१

தியானத்தினல் அடையப்பெறுபவள்.

விரும்பிய பொருள் ஒன்றில் மனம் முழுவதும் செல்லுமாகில் அது தியானமாகிறது. தியானத்திலேயே கண்ணும் கருத்துமா

யிருப்பது தியான யோகம் என்னும் பெயர் பெறுகிறது. பரவஸ்துவைப் பற்றியோ உலகப் பொருளைப் பற்றியோ தியானம் பண்ணலாம். மனம் குவிவதற்கேற்பத் தியானம் தலைத்தரமானதாகிறது. விஷயாதிகளில் மனதைச் செல்லவிடாது ஆத்மசாதகன் ஒருவன் பரம்பொருளைக் குறித்தே தியானம் பண்ண வேண்டும்.

குளக்கரையில் மீன் பிடிக்கத் தூண்டிலுடன் அமர்ந்திருக்கும் செம்படவனின் ஒருமுகப்பட்ட மனநிலை ஆத்ம சாதகனுக்கு வாய்க்கவேண்டும். தியானம் வலுக்க வலுக்க அவனுக்கு உடல் உணர்வு போய்விடுகிறது. எண்ணிய பொருள் மயமாய் அவன் உள்ளம் வடிவெடுக்கிறது. அம்பிகையைக் குறித்து இப்படித் தியானம் பண்ணுகிறவர்களுக்கு அவளுடைய அருள் வாய்க்கிறது என்னும் கோட்பாடு இந்நாமத்தில் அடங்கியுள்ளது. முதிர்ந்த நிலையில் தியானம் சமாதியாக வடிவெடுக்கிறது. அந்நிலையில் ஆத்ம சாதகன் தன் ஜீவ வியக்தியைத் துடைத்து விட்டுப் பரவஸ்துவில் ஒன்றுபடுகிறான்.

**अपरिच्छेद्या — அபரிச்சேத்யா** ६४२

அளவில் அடங்காதவள்.

கால, தேச, வர்த்தமானத்தில் கட்டுப்பட்டிருக்கும் பிரகிருதி அளவில் அடங்கியுள்ளது. ஒரு காலத்தில் இருந்து மற்றொரு காலத்தில் இல்லாது போவது மெய்ப்பொருள் ஆகாது. சிருஷ்டியிலும், ஸ்திதியிலும் தோற்றத்தில் இருக்கும் பிரபஞ்சம் பிரளயத்தில் இல்லாது போகிறது. தன்மயமாய் உள்ள அம்பிகையின் சன்னிதான விசேஷத்தால் காலம் என்னும் அளவை தோற்றத்துக்கு வந்து பிறகு மறைந்துபட்டுப் போகிறது. ஓரிடத்தில் இருக்கும் பொருள் மற்றோரிடத்தில் இல்லாமல் போனால் அது இடம் என்னும் அளவைக்கு உட்பட்டதாகிறது. அம்பிகை இன்ன இடத்தில் இருக்கிறாள், இன்ன இடத்தில் இல்லை என்று பாகுபடுத்த முடியாது. அவள் இடத்தைத் தன்பால் தோன்றவும் அடிபட்டுப் போகவும் அனுமதி தருகிறாள்; அதற்குச் சாட்சியாகவும் அவள் இலங்கிக்கொண்டிருக்கிறாள். காரண காரியமாயுள்ள இயற்கையின் செயல் வர்த்தமானமாகிறது. ஒரு காரணத்தை முன்னிட்டுத் தோற்றத்துக்கு வரும் ஜீவதத்துவம்

ஜாக்ரத, சொப்பன அவஸ்தைகளில் வியவஹாரம் பண்ணுகிறது சுஷுப்தியில் ஜீவ வியக்தி இல்லை. அன்னை பராசக்தி வர்த்தமானம் எதிலும், நியதி எதிலும் அடங்கியவளாகமாட்டாள்.

கண்கொண்டு பார்க்கப்படும் பொருள்கள் யாவும் பிரபஞ்ச சம்பந்தமானவைகள். அன்னை பராசக்தியை ஊனக்கண்கொண்டு காண இயலாது. சாதனத்தின் விளைவாக ஞானக்கண்ணை வரவழைப்பது ஒன்றே அவளைக் காண்பதற்கு உற்ற உபாயம். நாத சொரூபிணி ஆகிய அம்பிகையைக் குறித்துச் செய்கின்ற ஸ்தோத்திரங்கள், பகர்கின்ற நாமங்கள் மூலமாக அவளைப்பற்றி உத்தேசமாக அறிய வருகிறோம். பக்தியின் மூலமாகப் பண்பட்ட மனது அவள் நாத சொரூபம் என்பதை ஏகதேசம் கிரஹிக்கிறது. ஆக. கால, தேச, வர்த்தமானத்தில் கட்டுப்படாதவளாகவும் ஊனக் கண்களுக்கும், காதுகளுக்கும் எட்டாதவளாகவும் உள்ள அம்பிகை அபரிச்சேத்யா எனப்படுகிறாள்.

**ज्ञानदा — ஞானதா** ६४३

ஞானத்தைக் கொடுப்பவள்.

பிரபஞ்சத்தைப் பற்றிய ஞானம் அபராவித்தை என்றும் பரம்பொருளைப் பற்றிய ஞானம் பராவித்தை என்றும் பெயர் பெற்றுள்ளன. பல படித்தரங்களில் உள்ள ஜீவர்கள் ஞானேந்திரியங்களைப் பயன்படுத்தித் தத்தமக்கு ஏற்ற முறையில் பிரபஞ்ச ஞானத்தைப் பெற்று வருகின்றன. ஐந்து இந்திரியங்களின் உதவியால் தேன் ஈக்கள் அற்புதமான சமுதாய வாழ்க்கை வாழ்ந்து வருகின்றன. ஒவ்வோர் உயிரின் தனிச் சிறப்பை நன்கு அறிந்துகொள்ளக் கூடிய பகுத்தறிவை அன்னை பராசக்தி மனிதனுக்குக் கொடுத்துள்ளாள். பிரபஞ்ச வாழ்வு குறைபாடுடையது என்று அறிந்து அதற்கப்பால் இருப்பதை அறிந்துகொள்ள முயலுகின்றவர்கள் தலைத்தரமான மக்களாகின்றனர். அதற்கு உபாயங்களாயிருக்கும் யோகம், பக்தி, ஞானம் ஆகிய மார்க்கங்களை அம்பிகை கிருபை கூர்ந்து ஆத்ம சாதகர்களுக்கு நல்குகின்றாள். கடைசியாகப் பிரபஞ்ச அதீதத்தில் உள்ள பரவஸ்துவைச் சுவானுபூதியில் அடைவதற்கான ஞானக் கண்களையும் பக்குவமாயுள்ள சாதகர்களுக்கு அவள் கொடுத்தருள்கின்றாள். விஷய ஞானத்தில் தொடங்கி பரஞானத்தில் முற்றுப்பெறுகின்ற எல்லா

விதமான ஞானங்களையும் ஜீவகோடிகளுக்குச் சதா வழங்கிக் கொண்டிருக்கும் அம்பிகை ஞானதா எனப் போற்றப் பெறுகிறாள்.

**ज्ञानविग्रहा — ஞான விக்ரஹா** ६४४

ஞானமாக உருவெடுத்திருப்பவள்.

ஞான சொருபமாக இருக்கிற அம்பிகை அனந்தங்கோடி ஜீவர்களிடத்திலும் ஞான சொரூபத்தை அமைத்திருக்கிறாள். தேன் ஈக்கள் தமக்கேற்ற அளவில் ஞானத் திறமையைப் பெற்றுள்ளன. தேன் நிறைந்த பூக்கள் ஏராளமாக இருக்கின்ற இடங்களிலேயே அவை தம் அடையை அமைக்கின்றன. மழை வருவதற்குச் சில நிமிஷங்களுக்கு முன்பு தேன் ஈக்கள் அனைத்தும் தம் கூட்டுக்குத் திரும்பி வருகின்றன. மானுடர்கள் வெவ்வேறு துறைகளில் ஞானம் பெறும் பொருட்டு முயற்சி செய்கின்றனர். கடைசியாக பக்தி சாதனத்தின் வாயிலாக மானுடமேனி முழுவதையும் ஞான சொரூபமாக மாற்றலாம் என்பதை அறிய வருகிறார்கள். பக்தியின் விளைவாக ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய அமைப்பு முழுவதுமே ஞான விக்கிரகமாக வடிவெடுக்கலாயிற்று. வெவ்வேறு இடங்களில் இருந்து கொண்டுவந்த தண்ணீரை வரிசையாக அவர் முன்னிலையில் வைத்தால் அவைகளுக்கிடையில் கங்கை ஜலம் எது என்று அவர் சுட்டிக் காட்டுவார். எங்கும் நிறைந்திருக்கின்ற பிரம்ம சைதன்யம் கங்கா ஜலத்தில் பன்மடங்கு ஓங்கியிருக்கிறது என்பதை அவர் அறிந்திருந்தார். அம்பிகை தானே ஞான விக்கிரகம் என்றால் அம்பிகை உபாசகராகிய பரமஹம்சரும் ஞான விக்கிரகமாக மிளிர்ந்தார்.

முடிந்த நிலையில் பரஞானத்தை நாடுகின்ற ஆத்ம சாதகர்களுக்கு அம்பிகை தானே பரஞான விக்கிரகமாக இருந்து அருள் புரிகின்றாள். ஆக, எல்லாப் படித்தரங்களிலும் அவள் ஞான வடிவினளாக அமைந்திருப்பது பெரிய அற்புதமாம்.

**सर्ववेदान्त संवेद्या — ஸர்வவேதாந்த ஸம்வேத்யா** ६४५

வேதாந்த சாஸ்திரங்களால் நன்கு அறியப்படுகிறவள்.

வேதாந்தம் என்னும் சொல்லுக்கு உபநிஷதங்கள் இலக்காக அமைந்திருக்கின்றன. மண்ணுலகிலும் விண்ணுலகிலும் மனிதன் விரும்புகின்ற மேன்மைகளுக்கெல்லாம் ஹேதுவாயிருப்பது கர்ம காண்டம். ஞானகாண்டமாகிய உபநிஷதங்கள் பரபிரம்மத்தை அடைவதற்கு வழிகாட்டித் தருகின்றன. உபநிஷதங்களில் கூறப் பட்டுள்ள முறைகளை அனுஷ்டிப்பதற்கு ஏற்ப ஆத்ம சாதகன் பரஞானத்திற்குத் தகுதியுள்ளவன் ஆகிறான். அவன் பிரபஞ்ச சம்பந்தமான வாழ்க்கை முறைகள் அனைத்தையும் அதற்காகத் தியாகம் பண்ணவேண்டும். ஐம்பொறிகளை வென்று பாரமார்த் திகப் பெருவாழ்வு வாழ்கின்றவனே ஞானக்கண்ணைப் பெறுகின் றான். தான் உடல் சொரூபமல்லன்; ஆத்ம சொரூபம் என்று அறிந்து கொள்பவன், இப் பிரபஞ்சத்திற்கு அப்பால் உள்ள பரவஸ்து அன்னை பராசக்தி என்னும் உண்மையை அறிய வரு கிறான். சர்க்கரையின் தித்திப்பைச் சொல்லால் விளக்கமுடி யாது. அதைச் சுவைத்துப் பார்ப்பதே தித்திப்புக்கு நல்ல விளக்கமாகிறது. அதே போன்று பரவஸ்துவை கிரகித்துக் கொள்ளுதற்கு அந்தக் கரணமும் சொல்லும் பயன்படமாட்டா. சொல்லற்கரிய பொருளை ஒரு சொல்லால் விளக்க முயல்வது உபநிஷதங்களின் திட்டமாகும். சாதனத்தின் விளைவாக அந்தக் கரண சுத்தி அடைந்து வருவதற்கேற்ப பரவஸ்துவை கிரகிப்ப தற்கான பரிபாகம் ஓரளவில் வந்து அமைகிறது. முற்றிலும் அந்தக்கரண சுத்தி அடைந்தான பிறகு ஞானக்கண் தோன்று கிறது. அப்பொழுது பரம்பொருளின் சொரூபம் சுவானுபூதியில் உள்ளபடி தெளிவாகிறது. இதுவே இந்நாமத்தின் உட்பொரு ளாகும்.

**सत्यानन्दस्वरूपिणी — ஸத்யானந்த ஸ்வரூபிணீ** ६९६

சத்ய சொரூபமாகவும் ஆனந்த சொரூபமாகவும் இருப்பவள்.

ஒரு காலத்தில் இருந்து மற்றொரு காலத்தில் இல்லாமல் போவது சத்தியமாகாது. ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்தில் இல்லாது போகும் பொருளும் சத்தியமாகாது. நம் உடல் முன் பொரு காலத்தில் இல்லை. பின்பொரு காலத்திலும் அது இருக்க மாட்டாது. ஓரிடத்தில் இருக்கும் அது மற்றோர் இடத்தில்

இல்லை. ஆகையால் அது சத்யமாகாது. ஒரு காரணத்தை முன்னிட்டு இருந்து மற்றொரு காரணத்தை முன்னிட்டு இல்லாமற் போவதும் சத்யமாகாது. பிறப்பை முன்னிட்டு வடிவெடுக்கும் உடல் இறப்பை முன்னிட்டு இல்லாது போகிறது. மாயையின் கூறுகளாகிய காலம், தேசம், நிமித்தம் ஆகியவற்றிற்கு நிலைபேறு இல்லை. அன்னை பராசக்தியோ காலாதீதமாய் எங்கும் வியாபகமாய் கர்மாதீதத்தில் இருப்பதால் அவள் சத்சொரூபம்.

பிரபஞ்சத்தில் உள்ள உயிர்கள் அனைத்தும் ஆனந்தத்தில் திளைத்திருக்கின்றன. ஏனென்றால் அவையாவும் ஆனந்தமயமாக உள்ள அம்பிகையிடமிருந்து உருவெடுத்து வந்திருக்கின்றன. தங்கத்தால் செய்யப்பட்ட நகைகள் யாவும் தங்கமயமாக இருப்பது போன்று ஆனந்தத்தில் இருந்து உருவெடுத்து வந்துள்ள உயிர் வகைகள் ஆனந்தத்தை விளக்கிக் கொண்டிருக்கின்றன. மனிதர்கள் இன்புற்றிருக்கின்ற பொழுது தம் நிஜசொரூபமாகிய அம்பிகையின் ஆனந்தத்தில் மூழ்கியிருக்கிறார்கள். அவர்கள் மாயையின் வல்லமையால் விசனப்படுகிறபொழுது அவர்களின் ஆனந்த சொரூபம் மறைத்துவைக்கப்படுகிறது. ஆனந்தத்திலே தோன்றி அதிலேயே நிலைத்திருக்கும் உயிர் வகைகள் அனைத்தும் ஆனந்தத்தையே நாடி நிற்கின்றன. கால தேச நிமித்தத்தில் கட்டுண்டிருக்கும் அவைகளின் சத்சொரூபமும், ஆனந்த சொரூபமும் எல்லையில் அடங்கியவைகளாக இருக்கின்றன. ஆனால் அன்னை பராசக்தியோ எல்லை மருவாத சத் சொரூபிணியாகவும் ஆனந்த சொரூபிணியாகவும் இலங்கிக்கொண்டிருக்கிறாள்.

## लोपामुद्रार्चिता — லோபாமுத்ரார்ச்சிதா ६४७

லோபாமுத்திரையினால் ஆராதிக்கப்படுகிறவள்.

அகஸதிய முனிவருடைய தர்ம பத்தினியாகிய லோபாமுத்திரை அம்பிகை உபாசனையில் தலைசிறந்தவளாயிருந்தாள். அவள் அம்பிகையை ஆராதித்து வந்தது உலக மக்களுக்கு முன் மாதிரியாய் அமைந்திருக்கிறது. வழிபாட்டுக்குச் சின்னங்களாயுள்ள உபாயங்களில் சின் முத்திரைக்கு நிகராக லோபாமுத்திரை ஞானமே வடிவெடுத்ததாக இருக்கிறது. ஞானத்தை வளர்ப்பவர்களெல்லாரும் தாம் தாம் பெற்றுள்ள ஞானத்தின் வாயிலாக அம்பிகையை நன்கு ஆராதிக்கிறார்கள். இக்காரணங்

களால் அம்பிகைக்கு லோபாமுத்ரார்ச்சிதா என்னும் நாமம் அமைந்துள்ளது.

**लीलाक्लृप्त ब्रह्माण्ड मण्डला ६४८**

**லீலாக்ளுப்த பிரம்மாண்ட மண்டலா 648**

பிரமாண்ட மண்டலங்களையெல்லாம் விளையாட்டாகத் தோற்றுவித்திருப்பவள்.

பெரிய காரியம் எதையும் சிரமப்படாது சாதிக்க முடியாது. அவ்வாறு ஒரு செயலைச் செய்து பூர்த்திபண்ணுவதைப் பகீரதப் பிரயத்தனம் என்கிறோம். அண்டங்களின் தோற்றமும் நடைமுறையும் அதிசயங்களுள் பேரதிசயங்களாயிருக்கின்றன. நன்கு விளையாடத் தெரிந்தவனுக்கு எவ்வளவுதான் ஓடியாடினாலும் அதில் சிரமம் தோன்றுவதில்லை. சிறிதேனும் சிரமப்படாது ஒரு காரியத்தை நிறைவேற்றுகின்றபொழுது அது விளையாட்டாக நிறைவேறிவிட்டது என்று சொல்லுகிறோம். அம்பிகை விளையாட்டுப் போன்று அண்ட கோடிகளைத் தோற்றுவித்தும் நிர்மாணித்தும் வருகின்றாள். நனவில் நாம் காண்கின்ற உலகங்களையும், செய்யும் செயல்களையும் கனவில் நாம் செய்து சாதிக்கிறோம். கனவு உலகைக் கற்பிப்பதில் யாருக்கும் எந்தவிதமான சிரமமும் கிடையாது. மனிதன் கனவு உலகத்தைத் தோற்றுவிப்பதற்கு நிகராக அன்னை பராசக்தி விளையாட்டாக அண்டங்கள் அனைத்தையும் உண்டுபண்ணி அவற்றை முறையாக நடாத்தியும் வருகின்றாள். அம்பிகையின் இத்தகைய அரிய விளையாட்டை ரசிப்பது அவளுடைய ஆராதனையாகிறது.

**अदृश्या — அத்ருச்யா ६४९**

பார்வைக்கு எட்டாதவள்.

அண்டகோடிகளை யெல்லாம் தோன்றா நிலையிலிருந்து தோற்றத்துக்குக் கொண்டு வந்துள்ளவள் அம்பிகை. தன்னைத் தோன்றா நிலையில் வைத்துக்கொண்டு அம்பிகை இதைச் செய்து சாதிக்கின்றாள். தன்னை எவ்விதத்திலும் அவள் விளம்பரப்படுத்திக்கொள்வதில்லை. நம்மை யாராவது அடித்தால் வலிக்கிறது என்கிறோம். நம் அனுபவத்துக்கெட்டும் அந்த வலியைக் காட்ட நமக்கு முடியுமா? அது இயலாததாயிருக்க, இந்திரியங்களுக்கு எட்டாத பொருளை

இந்திரியங்களுக்கு எட்டும்படி செய்வது எப்படி? கண்ணுக்குப் புலப்படாத ஒன்றை இல்லை என்று வாதிப்பது பொருளற்றது. பிரபஞ்சமாக வடிவெடுத்துள்ள பரவஸ்து தோன்றா நிலையில் இருக்கும்பொழுது அது இல்லை என்று வாதிப்பது பொருந்தாது. அதனுடைய அறிவு சொரூபமும் ஆனந்த சொரூபமும் நம் காட்சிக்கு எட்டுவனவல்ல. பஞ்சேந்திரியங்களுக்கு அவள் இலக்காக மாட்டாள். என்றைக்கு நாம் கருவி கரணங்களைத் தாண்டிச் செல்கின்றோமோ அன்றைக்கு அகக்கண்ணால் அம்பிகையின் சான்னித்தியத்தை அறிந்து கொள்ளமுடியும். பஞ்சேந்திரியங்களைச் சுகபோகத்துக்கென்று பயன்படுத்தாமல் அம்பிகை வழிபாட்டுக்கென்றே பயன்படுத்துவது ஞானக்கண் பெறுவதற்கு உற்ற உபாயமாகும். பஞ்சேந்தியங்களுக்கு எட்டாதவளை ஞானக்கண் கொண்டு காண முடியும். இந்திரியங்களுக்குப் புலனாகாதவள் எனினும் ஞானக்கண்ணுக்கு அன்னை பராசக்தி புலனாவாள் என்பது இந்நாமத்தின் கருத்தாகும்.

**दृश्यरहिता — த்ருச்ய ரஹிதா** ६५०

காட்சியில் இருப்பவைகளுக்கு அப்பாற்பட்டவள்.

புறக்கரணங்களாகிய பஞ்சேந்திரியங்களுக்கும் அந்தக் கரணங்களாகிய மனம், புத்தி ஆகியவற்றுக்கும் இலக்காகின்ற யாவும் நிரந்தரமான காட்சிக்கு உரியன ஆகமாட்டா. அயர்ந்த உறக்கத்தில் பாஹிய கரணங்களும் அந்தக் கரணங்களும் செயலற்றிருப்பதால் ஜகத்தும் காட்சியில் இல்லை. ஜீவர்களாகிய உயிர் வகைகளும், அவைகளுக்கு இருப்பிடமாகிய ஜகத்தும் வியவகாரிக ஸத் ஆகின்றன. காண்போன், காணுதல், காணப்படுபொருள் ஆகியவை திரிபுடி எனப்படுகின்றன. காணுதலும், காணப்படுபொருளும் வியவகாரிக ஸத் ஆகின்றன. ஆத்மசொரூபத்தில் காணுதல் என்னும் செயலும் காணப்படுபொருளும் ஒடுங்குகின்றன. காண்போனாகிய ஆத்மா காட்சிக்கு இலக்காவதில்லை என்றாலும் அது யாண்டும் நித்தியமாய் நிர்விகாரியாய் உள்ளது. கால, தேச, நிமித்தத்திற்கு அப்பாற்பட்ட அது பாரமார்த்திக ஸத் எனப்படுகிறது. பரதேவதையாகிய அன்னை யாண்டும் பாரமார்த்திக ஸத்தாயிருக்கிறாள். அவள் யாண்டும் தன்னில் தானாய், தன்மயமாய் இருக்கிறாள். அவளைப் பார்ப்ப

தற்கு வேறு ஒரு வஸ்து இல்லை. பாரமார்த்திக ஸத் ஆகிய அவள் யாண்டும் த்ருச்யரஹிதாவாக இலங்குகின்றாள்.

**विज्ञात्री** — விக்ஞாத்ரீ ६५१

பேரறிவோடு கூடியவள்.

சூரியனுடைய அளப்பரிய பிரகாசத்தை முழுவதும் பார்க்கின்ற திறமை நம் ஊனக்கண்களுக்கு இல்லை. அதன் ஒரு சிறு பகுதிதான் நம் கண்களுக்கு இலக்காகிறது. அந்தச் சூரியனே தன் பிரகாசத்தைத் தானே விளக்கிக் கொண்டிருக்கிறான். பிரகாசத்துடனும், பிரகாசம் இல்லாமலும் இருக்கின்ற ஏனைய பொருள்களைச் சூரியப்பிரகாசம் விளக்கிக் காட்டுகிறது. அம்பிகையின் பேரறிவுப் பிரகாசம் அத்தகையது. அனைத்தையும் விளக்கிக் கொண்டிருக்கும் அவளை முழுதும் அறிந்துகொள்ள யாருக்குமே இயலாது. ஆதலால் அவள் விக்ஞாத்ரீ என்னும் நாமம் பூண்டுள்ளாள்.

**वेद्यवर्जिता** — வேத்ய வர்ஜிதா ६५२

அம்பிகையினுடைய பேரறிவுக்கு எட்டாதது ஒன்றுமில்லை.

அனைத்தையும் அறிந்தவளாக அம்பிகை இருக்கின்றாள். சேதனம், அசேதனம் ஆகிய யாவும் அவளுடைய வாலறிவில் அடங்கியுள்ளன. வியவகாரிக ஸத், பாரமார்த்திக ஸத் ஆகிய இருநிலைகளையும் அவள் பூரணமாக அறிகிறாள். ஞானக் களஞ்சியமாய் இலங்கும் அம்பிகையின் பேரறிவு அகண்டாகாரத்தில் விரிந்தோடுகிறது. அவளுடைய சொரூபத்தைப் பார்த்துப் பூரித்திருப்பதற்கு அவளுக்குப் புறம்பாக யாருமே இல்லை. ஜீவகோடிகளனைத்தும் அவளுடைய சொரூபத்தில் அடங்கிக்கிடக்கின்றன. அவளுக்கு அன்னியமாக யாரும் இல்லை. யாவுமாக அவள் இருக்கிறாள். பண்பாடடைந்துள்ள ஜீவாத்மாக்கள் அம்பிகை கொடுத்துள்ள சிற்றறிவைக் கொண்டு அவளை ஏதோ சிறிதளவுதான் அறிந்துகொள்ள வல்லவர்களாகிறார்கள். ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் அம்பிகையிடம் அவள் தானே கிருபை கூர்ந்து சாதன வகைகள் அனைத்தையும் தமக்குப் புகட்டியருள வேண்டுமென்று உள்ளன்போடும் ஊக்கத்தோடும் பிரார்த்தனை பண்ணினார். அதற்

கேற்ப அவர் யோகச் சித்தரானர். ஆதலால் அம்பிகை வேத்ய வர்ஜிதா என்று போற்றப்படுகிருள்.

**योगिनी — யோகினீ** ६५३

யோக வடிவினளாக இருப்பவள்.

மனிதன் பண்பாடு அடைதற்குரிய சாஸ்திரங்களில் வைசேஷிக சாஸ்திரத்தின்மூலம் அவன் ஒழுங்காக எண்ணுதற்குக் கற்றுக்கொள்கிருன். தான் அறிந்திருப்பதைப் பிறருக்கு எடுத்துச் சொல்லும் வல்லமையை நியாய சாஸ்திரத்தின் வாயிலாகப் பெறுகிருன். பூர்வ மீமாம்சத்தின்மூலம் தீவிரமாகக் கர்மத்தில் ஈடுபட்டுச் சாதிக்க வேண்டியவற்றைத் தன் சுயமுயற்சியால் அவன் சாதிக்கிருன். பிரபஞ்சத்தின் அமைப்பையும் உயிர்வகைகளின் இருப்பையும்பற்றிச் சாங்கிய சாஸ்திரத்தின்மூலம் அவன் அறிந்துகொள்கிருன். சாதாரண மனிதனை மேலானவனுக மாற்றியமைப்பது யோகசாதனம். யோகசாஸ்திர சொரூபிணியாக அம்பிகை இருக்கிருள். பிரபஞ்சம் முழுவதுமாக வடிவெடுத்துள்ள அம்பிகை யோகம் பயிலுகின்றவர்களுக்கு முன்மாதிரியாக விளங்குகின்ருள். அஷ்டாங்கயோகத்தின் எட்டு அங்கங்களும் மனிதன் அடையவேண்டிய மேல்நிலைகளுக்கு விளக்கங்களாக அமைந்திருக்கின்றன. ஒவ்வொரு சாதனத்தின் நிறைநிலையில் அன்னை பராசக்தி இருக்கிருள் என்று உணர்ந்து அவளுக்கு வந்தனை வழிபாடு செய்கின்றபொழுது சாதனம் மனிதனுக்குச் சுலபமாகக் கைகூடுகின்றது.

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள்களுள் மானுடன் ஒருவனுக்குத் தர்மம் சரியாக வாய்க்குமானல் அது அவன் அடைகிற யோகமாகிறது. பொருள், இன்பம் ஆகியவையும் திட்டப்படி கிட்டுமானல் அது யோகம் என இயம்பப்படுகிறது. இறுதியாக ஜீவாத்மனைப் பரமாத்மனேடு எது இணைத்து வைக்கிறதோ அதுவும் யோகமாகிறது. ஆருவது சாஸ்திரமாகிய வேதாந்தம் அத்தகைய பரமாத்ம தத்துவத்தை உள்ளபடி விளக்குகிறது. அம்பிகை தானே யோகினீயாக இருந்து தன்னை வழிபடுகின்றவர்களை யோக சாதனத்தில் உருவாக்குவதால் அவர்கள் பரதேவதையாகிய அவளைச் சென்றடை

வது உறுதி என்னும் கோட்பாடு இந்நாமத்தில் அடங்கியிருக்கிறது.

**योगदा — யோகதா** ६५४

யோகத்தை வழங்குபவள்.

முயன்று செல்வத்தைப் பெறுதல் எல்லாருக்கும் சாத்தியம் என்பது சொல்லாமலே விளங்குகிறது. யோக சாதனமும் அத்தகையது. செல்வத்தைச் சிறிது சிறிதாகச் சேகரிக்கின்றவனுக்குச் செல்வம் கைகூடுகிறது. அதே விதத்தில் யோக சாதனங்களைச் சிறிது சிறிதாகச் செய்து பழகுகின்றவனுக்கு யோக சித்தி நாளடைவில் கைகூடுகின்றது. ஒவ்வொரு படித்தரத்திலும் யோக சாதனத்தைத் தனக்குத் தந்தருள வேண்டும் என்று ஒருவன் அம்பிகையிடம் பிரார்த்திப்பது முறை. முயற்சி ஏதும் எடுத்துக்கொள்ளாது செல்வம் வேண்டும் என்று அவளிடம் பிரார்த்திப்பவர்களுக்குத் தரித்திரம் வளர்கிறது. யோகசாதனம் புரியாது அதைக் குறித்துப் பெரிதாகப் பேசுகின்றவர்களுக்கு யோகம் வாய்க்காது. தான் எடுத்துக்கொள்ளும் முயற்சிக்கு உறுதியும் ஊக்கமும் தரவேண்டும் என்று அம்பிகையிடம் பிரார்த்திக்கலாம். ஊக்கத்துடன் யோகசாதனம் செய்பவர்களுக்கு அம்பிகை கிருபை கூர்ந்து யோகசாதனத்தை வழங்குகிறாள். அங்ஙனம் முறையாகப் பிரார்த்தனை பண்ணுகின்றவர்களுக்கு யோக தத்துவங்களை அம்பிகை எடுத்து வழங்குவதால் அவள் யோகதா என்னும் பெயர் பெற்றுள்ளாள்.

**योग्या — யோக்யா** ६५५

யோகத்துக்குத் தகுதியுடையவள்.

பஞ்சேந்திரியங்கள் மூலமாக அனுபவிக்கப்படுகின்ற சுகங்கள் துக்கங்களாக முடிவுறுகின்றன. மக்கள் எல்லாரும் பொதுவாகச் சிற்றின்பப் பற்று உடையவர்களாகவே இருக்கின்றார்கள். எத்தனையோ பிறவிகளில் ஜீவாத்மாக்கள் போகங்களை அனுபவித்துப் பார்த்துச் சலிப்புத்தட்டிப்போன பிறகு இந்திரிய சுகங்களில் தீவிர வைராக்கியம் வருகிறது. ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றும் அவன் யோகத்துக்குத் தகுதி உடையவன்

ஆகிறான். இந்திரியங்களை அறவே கட்டியாளுகின்றவனுடைய பாங்கு உடலின் மூலமாகவும் உள்ளத்தின் மூலமாகவும் வெளியாகின்றது. மேதை என்னும் யோக நாடியை மனிதன் அடையப் பெறுகிறான். பரதத்துவத்தின் நுட்பங்களெல்லாம் அவனுக்கு உள்ளபடி விளங்குகின்றன. தான் உடல் சொரூபம் அல்லன்; ஆத்ம சொரூபம் என்று உணர்ந்துகொள்ளும் யோகி பிரம்ம ஞானத்துக்குத் தகுதிபடைத்தவனாகிறான்.

அகிலாண்ட சொரூபமாக உள்ள அன்னை பராசக்தி யாண்டும் தன் நிறைநிலை பிசகாதவளாக இருப்பதால் அவள் சர்வகாலமும் சிவசொரூபத்தோடு யோகம் பூணுகிற தகுதி வாய்ந்தவளாக இருக்கிறாள். நெறியான உலக வாழ்க்கைக்குத் தகுதியுடையவன் யோக்யன் என்று பாராட்டப் பெறுகிறான். அந்த நிறைநிலையை அடைய விரும்புபவனுக்கு அன்னை பராசக்தி முன்மாதிரியாக இலங்குகின்றாள்.

**योगानन्दा — யோகானந்தா** ६५६

யோகத்தின் வாயிலாக ஆனந்தமுற்றிருப்பவள்.

போகமானது ஆனந்தத்தில் தொடங்கித துக்கத்தில் முடிவடைகிறது. யோக சாதனமோ தொடங்கும்பொழுதும் ஆனந்தம்; அதைத் தொடர்ந்து அனுஷ்டிக்கும் பொழுதும் ஆனந்தம்; யோகாரூட நிலையில் அதைப் பூர்த்தி பண்ணும்பொழுதும் ஆனந்தம். சிவத்துடன் அம்பிகை பிரித்து வைக்க முடியாத பாங்கில் யாண்டும் ஒன்றுபட்டிருப்பதில் அவள் அடைகின்ற ஆனந்தம் அளவற்றது. யோகியர்கள் அனுபவிக்கின்ற யோகானந்த சொரூபமாக அவள் இலங்குகின்றாள். ஜீவர்கள் தம் ஜீவ வியக்தியை மறந்து ஆனந்தத்தில் திளைத்திருக்கும் பொழுது ஜீவ, பிரம்ம ஐக்கியம் தானே உண்டாகிறது. ஜீவகோடிகளனைத்தும் சுஷுப்தி அவஸ்தையில் தம் ஜீவவியக்திகளை ஒதுக்கித் தள்ளுகிறார்கள்; தங்களையறியாது ப்ரம் பொருளிடத்து யோகம் பண்ணுகிறார்கள். அங்ஙனம் சுஷுப்தி அவஸ்தையில் அத்தனை உயிர்களுக்கும் ஆனந்தத்தை ஊட்டுகின்ற அம்பிகை அந்த ஆனந்தத்திலேயே நிலைபெற்றிருப்பதால் அவள் யோகானந்தா என்று போற்றப்பெறுகிறாள்.

**युगन्धरा — யுகந்தரா** ६५७

நுகத்தடியைத் தாங்கியிருப்பவள்.

பிரபஞ்ச நடைமுறைகளனைத்தும் அம்பிகையின் ஆணையால் நிகழ்ந்து வருகின்றன என்னும் கோட்பாட்டுக்கு ஆகுபெயராக இருப்பது நுகத்தடி. கால, தேச, வர்த்தமானங்களுடன் கூடிய வளாக அம்பிகை இலங்குகின்றாள். கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் ஆகிய நான்கு யுகங்களும் காலத்தின் கூறுகளாகத் திகழ்கின்றன. அந்த யுகங்களை முறையாகக் கொண்டு செலுத்துபவள் அம்பிகை. திக்குகள் அனைத்துக்கும் ஆதாரமாய் இருப்பவளும் அவளே. அண்டகோடிகளில் நிகழ் கின்ற கிருத்தியங்களுக்கெல்லாம் ஆதரவு கொடுப்பவளாய் அம் பிகை இருக்கின்றாள். சிவமும் சக்தியும் இணைபிரியாத மூர்த்திகள் என்னும் கோட்பாட்டை நுகத்தடியைத் தாங்கியிருப்பதன் வாயி லாக அம்பிகை விளக்குகிறாள். பாலையும் அதன் வெண்மை நிறத்தையும் பிரிக்க முடியாததுபோன்று சிவ, சக்தி தத்துவங் கள் அபேதமாயுள்ளன என்னும் உண்மையை இந்நாமம் விளக்கு கிறது.

**इच्छाशक्ति ज्ञानशक्ति क्रियाशक्ति स्वरूपिणी** ६५८

**இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி ஸ்வரூபிணீ** 658

இச்சை, ஞானம், கிரியை ஆகிய மூன்று சக்திகள் சொருபமாக இலங்குபவள்.

அன்பு என்னும் இச்சா சக்தியானது ஜடநிலையில் ஈர்ப்புச் சக்தியாக விளங்குகிறது. அச்சக்தியின் விளைவாகவே கோளங் கள் யாவும் பொருத்தமான இடங்களிலிருந்துகொண்டு முறையாக இயங்கி வருகின்றன. ஒவ்வோர் உயிரும் தன் இனத்தோடு கூடி வாழ்ந்து இன்புற்றிருக்கிறது. தாய்க்கும் சேய்க்குமுள்ள இணக்கம் ஒவ்வொரு படித்தரத்திலும் நன்கு வெளியாகிறது. எல்லாவகையான உயிர்களும் தம் போக்கில் அறிவை வளர்த்து வருகின்றன. வெளிச்சம் இருக்கும் இடத்தை நோக்கிக் கிளை களை அதிகமாக அனுப்பும் மரம், செடி, கொடிகள் வாழ்க்கைக்கு வெளிச்சம் இன்றியமையாத ஆதாரம் என்று ஒருவாறு அறிந் திருக்கின்றன. ஞானசக்தி ஸ்தாவர உலகிலும் நிறைந்திருப்பதற்கு

இது சான்றுகிறது. எறும்பு முதலிய சிற்றுயிர்கள் சத்தற்ற தானியங்களையும் சத்துள்ள தானியங்களையும் கலந்து வைத்தால் முதலில் சத்துள்ள தானியவகைகளையே ஏற்கின்றன. மனிதனுக்கு நிகராகவும் சில வேளைகளில் அவனுக்கு மேம்பட்ட நிலைகளிலும் விலங்கினங்கள் உணவைத் தேடுவதிலும் பொருத்தமான இடங்களில் வசிப்பதிலும் அறிவு படைத்தவைகளாக விளங்குகின்றன.

மனிதன் அன்பினால் தூண்டப்பெற்றவனாகத் தான் நேசிப்பவர்கள் பொருட்டு ஓயாது உழைக்கிறான். ஞானத்தினால் தான் எதை உயர்ந்தது என்று அறிந்துகொள்கின்றானோ அதை அடைவதற்காக அரிய பெரிய திட்டங்களை அமைத்துச் செயல்படுகிறான். இவ்வாறாக அம்பிகையின் சொரூபமாகிய ஜீவர்களிடத்து இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி வெளிப்படுகின்றன என்பது இந்நாமத்தில் உள்ள கருத்துக்களாம்.

**सर्वाधारा — ஸர்வ ஆதாரா** ६५९

தன்னிடமிருந்து தோற்றத்துக்கு வந்துள்ள ஜகத் முழுவதுக்கும் தானே ஆதாரமாக இருப்பவள்.

மூலப் பிரகிருதியாயிருக்கின்ற அம்பிகையிடமிருந்து பஞ்ச பூதங்களும் உருவெடுத்து வந்துள்ளன. எங்கும் நிறைபொருளாயிருக்கும் ஆகாசம் ஏனைய நான்கு பூதங்களுக்கும் ஆதாரமாயிருக்கிறது. ஜடசக்தியாக அமைந்துள்ள அம்பிகை சித்சக்தியாகவும் இலங்குகின்றாள். அவளுடைய எதார்த்த நிலையாகிய பிரக்ஞானம் எவ்விதமான விகாரமுமின்றி இருந்தபடியே இருக்கிறது. அத்தகைய பிரக்ஞான சொரூபிணியாகிய அம்பிகை தன்னிடமிருந்து உருவெடுத்துள்ள சராசரங்களனைத்துக்கும் ஆதாரமாக இலங்குகின்றாள்.

தனி வியக்தியாயுள்ள இப்பூவுலகில் மலை, மடு, நதி, குளம், சமுத்திரம், மேகம் ஆகிய அனைத்தும் வடிவெடுத்துள்ளன. மண்ணுலகினின்று உருவெடுத்துள்ள இத்தனை விகாரங்களையும் மண்ணுலகமே ஆதாரமாயிருந்து தாங்கிக்கொண்டிருக்கிறது. அதே பாங்கில் தன்னிடமிருந்து தோன்றி வந்துள்ள பிரபஞ்சம் முழுவதையும் அதனதன் நிலையில் அம்பிகை கட்டிப் பிடித்துக்கொண்டிருக்கின்றாள். பிரபஞ்சம் என்னும் சரீரத்தை ஆதாரமாகக்

கொண்டு அதனுள் ஊடுருவிப் பரவியிருந்து சித்சக்தியாகிய அவள் தன் பாங்கை விளக்கிக்கொண்டிருக்கின்ருள்.

ஒவ்வொரு பிரளயத்துக்குப் பின்னும் வருகின்ற சிருஷ்டி முன் இருந்ததினின்று மாறியிருந்தாலும் அதனூடுமிளிர்கின்ற ஆத்ம சைதன்யம் மாறுபடாதிருக்கிறது. மெய் எழுத்தின்மீது ஏறி உயிர் எழுத்துத் தன் பாங்கை விளக்கிக்கொண்டிருப்பதற்கு ஒப்பத் தன்னிடமிருந்து உருவெடுத்துள்ள சராசரங்களனைத்துக்கும் ஸர்வாதாராவாக அன்னை பராசக்தி மிளிர்ந்துகொண்டிருக்கின்ருள்.

**सुप्रतिष्ठा — ஸுப்ரதிஷ்டா** ௬௬௦

ஜகத்துக்கு நல்ல அஸ்திவாரமாக இருப்பவள்.

அடிமட்டத்திலுள்ள அஸ்திவாரத்துக்கு ஏற்பக் கட்டப்படுகிற வீட்டுக்கு உறுதிப்பாடு வருகின்றது. அதுபோன்று பிரபஞ்சம் என்னும் பேராலயத்துக்கு மாருத அஸ்திவாரமாக இருப்பவள் அன்னை பராசக்தி. அவளுடைய பேராற்றலை அடிப்படையாகக்கொண்டுள்ள அண்டங்கள் வேறு எதனலும் அசைக்கப்படமாட்டா.

இருபது எழுத்துக்களைக் கொண்டுள்ள யாப்பு அமைப்பு ஒன்றுக்குச் சுப்ரதிஷ்டா என்னும் பெயர் தரப்பட்டிருக்கிறது. அத்தகைய சந்தஸ் வடிவினளாக இருப்பவள் அம்பிகை என்னும் பொருள் இந்நாமத்தில் அடங்கியிருக்கிறது.

**सदसद्रूप धारिणी — ஸத்அஸத்ரூப தாரிணீ** ௬௬௧

ஸத், அஸத் ஆகிய இரண்டு வடிவங்களையும் எடுத்திருப்பவள்.

ஸத் எனப்படும் மெய்ப்பொருளுக்குப் புறம்பாயிருப்பது அஸத் ஆகிறது. ஒருகாலத்திலிருந்து இன்னெரு காலத்தில் இல்லாமல் போவது வெறும் தோற்றம். சொப்பனத்தில் நிறையச் செல்வம் படைத்திருப்பவனுய் இருக்கும் ஒரு மனிதன் விழித்துக்கொண்டவுடன் அந்தச் செல்வம் மாயமாய் மறைந்துபோகிறது. ஆதலால் அது அஸத். ஒரு நாட்டில் நல்ல பூஸ்திதி படைத்திருப்பவன் மற்ருெரு நாட்டிற்குச் சென்று பொருளில்லாது தவிக்கின்றபொழுது வேறு ஒரு நாட்டிலிருக்கும் பூஸ்திதி பொய்

பொருளாகிவிடுகிறது. ஓரிடத்தில் இருந்து மற்ரோரிடத்தில் இல்லாத பொருள் அஸத் எனப்படுகிறது. ஒரு காரணத்தை முன்னிட்டுக் கைப்பொருளாகத் தென்படுவது இன்னொரு காரணத்தை முன்னிட்டுக் கைநழுவிப் போய்விடுமானல் அது அஸத் ஆகிறது. கால, தேச, வர்த்தமானத்தால் பாதிக்கப்படாது எது நிரந்தரமாக நிலைத்திருக்கிறதோ அது ஸத் பொருள்.

பிரளயகாலத்தில் ஒடுங்கிப்போன பிரபஞ்சத்திற்கு இடமில்லை; வர்த்தமானமும் இல்லை. அவ்வாறு அஸத்தாக இலங்குகின்ற மாயப்பிரபஞ்சமாகவும் அம்பிகை இருக்கின்ருள். அவளே மெய்ப்பொருளாகிய பிரம்ம சொருபமாகவும் விளங்குகின்ருள். இருளில்தென்படும் மரக்கட்டைஒன்று வெவ்வேறு மனிதர்களுக்கு அவரவர் மனப்பாங்குகளுக்கு ஏற்ப வெவ்வேறு காட்சி கொடுப்பதற்கு நிகராகப் பிரபஞ்சப் பொருள்கள் திரிவுபட்ட வேறு பல பொருள்களாகத் தென்படுகின்றன. அத்தகைய மாயா சக்தியை அன்னை படைத்திருக்கிருள். ஆதலால் இப்பிரபஞ்சத்திலேயே மாயா ஸத் ஆகவும் மாயா அஸத் ஆகவும் அன்னை தன்னைக் காட்டிக்கொண்டிருக்கின்ருள் என்னும் உண்மையை இந்நாமம் விளக்குகிறது.

## अष्टमूर्तिः — அஷ்டமூர்த்தி: ६६२

எட்டு விதமான வடிவங்களை உடைத்திருப்பவள்.

பஞ்சபூதங்கள், மனம், புத்தி, அகங்காரம் ஆகிய எட்டு வடிவங்களில் அம்பிகை இலங்குகின்ருள் என்பது பொருள். காட்சிக்கு வந்துள்ள யாவும் இந்த எட்டுவித வடிவங்களில் அமைந்திருக்கின்றன.

## अजाजैत्री — அஜாஜைத்ரீ ६६३

அவித்தையை வென்றவள்.

அஜை என்ருல் பிறப்பெடுக்காதது எனப் பொருள்படுகின்றது. அக்ஞானத்தை இது குறிக்கிறது. அம்பிகை அதை வென்றிருப்பதால் அவள் அஜாஜைத்ரீ என இயம்பப்பெறுகிருள். எங்கெல்லாம் சூரியனுடைய சான்னித்தியம் இருக்கின்றதோ ஆங்கெல்லாம் இருளைக் காண முடியாது. இருளைச் சூரியன் வென்றிருக்கிருன். அவன் இருளைத் தேடிக்கொண்டு எங்குச்

சென்றாலும் அதைக் காணமாட்டான். அங்ஙனம் ஞான வடிவினளாய் உள்ள அம்பிகை இருக்குமிடத்தில் அக்ஞானத்துக்கு இடமில்லை. ஆதலால் அவள் அஜாஜைத்ரீ எனப் போற்றப்படுகிறாள்.

**लोकयात्रा विधायिनी — லோக யாத்ரா விதாயினீ** ६६४

உலகங்களின் நடைமுறைகளைச் செலுத்த வல்லவள்.

உலகங்கள் பூலோகம் முதலிய மேல் உலகங்கள் ஏழாகவும் அதலா முதலிய கீழ் உலகங்கள் ஏழாகவும் பிரிவுபடுகின்றன. இப்பதினான்கு உலகங்களையும் தோற்றுவித்து நிலைபெறச் செய்வது, ஒடுக்குவது ஆகிய கிருத்தியங்களை அம்பிகை ஒழுங்காக நடாத்தி வருவதால் அவள் லோக யாத்ரா விதாயினீ எனப் பெயர் பெற்றுள்ளாள்.

**एकाकिनी — ஏகாகினீ** ६६५

தன்னந்தனியளாய் இருப்பவள்.

அனந்தங்கோடி அண்டங்களும் ஜீவர்களும் எண்ணிக்கையில் அடங்காதவை. தேவகணம், நரகணம் போன்ற ஜீவகோடிகளின் வகைகளும் எண்ணிறந்தவைகளாய் உள்ளன. இத்தனை விதத் தோற்றங்களும் வேறுபாடுகளும் அம்பிகைக்குப் புறம்பானவைகள் ஆகமாட்டா. மூலப்பொருளாகிய அம்பிகையிடமிருந்தே அவை தோற்றத்துக்கு வந்து நிலைபெற்றிருந்து பின் ஒடுங்குகின்றன. அனந்தங்கோடி அலைகள் தோன்றி நிலைபெற்று ஒடுங்கும் சமுத்திரம் என்னும் நீர்ப்பரப்பு ஏகமாய் உள்ளது. தோன்றியுள்ள பஞ்சபூதங்களில் ஒன்றாகிய நீரினிடத்து உள்ள இத்தகைய பாங்கு யாவற்றுக்கும் மூலப்பொருளாயுள்ள அம்பிகையினிடத்தும் அமைந்துள்ளது. ஆதலால் எல்லாவற்றையும் அம்பிகையின் மயமாகக் காண்பது நல்ல ஆத்ம சாதனமாகிறது.

**भूमरूपा — பூமரூபா** ६६६

ஒப்புயர்வற்ற பெரிய பொருளாய் வடிவெடுத்திருப்பவள்.

பூமம் என்றால் பெரிய பொருள் என்று பெயர். பரவஸ்துவை உபநிஷதங்கள் பூமம் என்று கூறுகின்றன. அசைவற்ற பரப்

பிரம்மம் வேறு, அசைகின்ற பராசக்தி வேறு எனக் கருதலாகாது. சுருண்டு படுத்திருக்கும் போதும் வளைந்து வளைந்து போகின்ற பொழுதும் சர்ப்பம் சர்ப்பமாகவே இருக்கிறது. அதே பாங்கில் பரபிரம்மமும் பராசக்தியும் ஒன்று என்பதை இந்நாமம் தெளிவுபடுத்துகிறது.

## निर्द्वैता — நிர்த்வைதா ६६७

இரண்டுக்கு இடம் கொடாதவள்.

மாது ஒரு பாகமான சிவபெருமானை அர்த்த நாரீசுவரன் என்கிறோம். பெயரளவில் சிவம் வேறு, சக்தி வேறு. அக்னியிடமிருந்து உஷ்ணத்தைப் பிரித்தெடுக்க முடியாதது போன்று அண்டத்திலிருந்து அம்பிகையைப் பிரிக்க முடியாது. அண்ணலும் அம்பிகையும் நிர்த்வைதமாகிய இரண்டற்ற பொருள் எனக் காண்பதே மெய்ப்பொருள் காட்சியாகும்.

## द्वैतवर्जिता — த்வைத வர்ஜிதா ६६८

எக்காரணத்தை முன்னிட்டாவது இரண்டாவது வஸ்துவைக்காண இடம் தராதவள்.

வேற்றுமையாக வடிவெடுத்திருப்பது சிருஷ்டி; வேற்றுமையற்ற நிலை பிரளயம். பூதங்களில் ஒன்றாகிய நீர் கடல்நீர், ஆற்று நீர், ஊற்று நீர், மழை நீர், கேணி நீர் என்று பல்வேறு பெயர்களைப் பெறுகின்றது. இதே நீர் என்னும் வஸ்து சூட்சும நிலையில் ஆவி, மேகம், மூடுபனி என்று வடிவங்களை எடுத்துக்கொள்கின்றது. உறை நிலையில் அதே வஸ்து ஆலங்கட்டி, கல்மாரி, உறைபனி என்றெல்லாம் பெயர் பெறுகின்றது. ஒரு நிலையில் இருக்கின்ற நீரை இன்னொரு நிலையில் வைத்துக் கூறினால் அது சொல்லாட்சிப் பிழையாகும். மெய்ப்பொருள் ஆராய்ச்சியில் இவை யாவற்றையும் அப்பு என்று பொருள்படுத்துவதே முறை. அது துவைத வர்ஜிதம் எனப்படுகிறது. அதேபோன்று பர தேவதையாகப் பொருள்படுத்துமிடத்து அம்பிகைக்குப் புறம்பான வஸ்து வேறு ஒன்றுமில்லை. ஆதலால் அவளை த்வைத வர்ஜிதா என்று நான் இயம்பவேண்டும்.

**अन्नदा — அன்னதா** ६६९

அன்னத்தைக் கொடுப்பவள்.

உடல் எடுத்து உயிர் வாழ்ந்திருக்கும் ஜீவராசிகள் அனைத்துக்கும் உணவு தேவை. கல்லினுள் உள்ள சிறு தேரைக்கும் எப்படியோ உணவு எட்டுகிறது. ஸ்தாவரம், ஜங்கமம் ஆகிய ஜீவ கோடிகள் எப்படி எப்படியோ தங்களுக்குத் தேவையாயுள்ள உணவைப் பெற்று வருகின்றன. நிலம், நீர், நெருப்பு, காற்று ஆகிய நான்கு பூதங்களினின்றும் அவற்றுக்கு உணவு வந்துகொண்டிருக்கிறது. உணவுக்கு அன்னம் என்பது பொதுப் பெயர். உணவை அன்னை முறையாக வழங்கி வருவதால் அவள் அன்னபூர்ணை என்னும் பெயர் பெற்றுள்ளாள். அம்பிகை தானே நான்கு பூதங்களாக இருந்து உணவாக வடிவெடுத்து உயிர்களை ஓம்பி வருகின்றாள்.

மனிதனைத் தவிர மற்ற உயிர்வகைகள் சாகுபடி செய்து தானியங்களைப் பாதுகாத்து வைப்பதில்லை. அப்படியிருந்தும் நாள்தோறும் அவைகளுக்குத் தேவையான உணவு ஏதேனும் ஒரு விதத்தில் அகப்படுகிறது. விசுவாசம் கெட்ட மனிதனே பெருமிதமாக அன்ன விசாரத்தில் அல்லற்பட்டுக்கொண்டிருக்கின்றான். அன்னையின் அருளை முழுவதும் சார்ந்திருப்பவர்களுக்கே உணவைப்பற்றிய கவலை உருவெடுப்பதில்லை. தனக்கு எவ்விதத்திலும் அன்னையின் அருளால் அன்னம் வந்து வாய்க்கும் என்னும் உறுதியான எண்ணம் படைத்திருப்பவனே அன்னதா என்னும் நாமம் பெற்றுள்ள பராசக்தியை முறையாகப் போற்றுபவன் ஆகிறான்.

**वसुदा — வஸுதா** ६७०

செல்வத்தைக் கொடுப்பவள்.

வைரம் முதலிய ஒன்பது வகையான கற்கள் நவரத்தினங்கள் எனப்படுகின்றன. உலகப்பற்று வைத்திருக்கின்ற மக்களுக்கு இவை யாவும் கிடைத்தற்கரிய பேறுகள் ஆகின்றன. வைராக்கியத்தின் உச்சநிலையில் இருக்கும் பக்தர்களுக்கும் யோகிகளுக்கும் இவை பொருளற்றவையாகின்றன. ஆத்ம சாதனத்தில் மேலோங்கியிருக்கும் பரமஹம்சர்களுடைய மேனியின்மீது தங்கம்,

வெள்ளிபோன்ற தனங்கள் படிந்தால் அதனல் அவர்களுக்குத்துன்பம் உண்டாகிறது. உலகப் பற்றுடையவர்களோ அன்னையின் பேரருளால் செல்வம் யாவும் தங்களுக்கு வாய்த்திருக்கின்றன என்று மகிழ்வுற்று இருக்கின்றனர். வஸூதா என்னும் நாமம் அத்தகையவர்களுக்குப் பொருள் பொதிந்ததாகிறது.

**वृद्धा — வ்ருத்தா** ६७१

வயது முதிர்ந்தவள்.

கற்பகாலமாக நிலைத்திருக்கும் இத்தொல்லுலகிற்குக் காரணமாகிய மூலப்பிரகிருதி அன்னையின் சொரூபமாம். ஆதலால் அவளை அனைத்துக்கும் மூத்தவளாயிருக்கும் தொண்டு கிழவி என்று கூறுவது பொருந்தும். உருண்டோடுகின்ற காலச் சக்கரம் உடல் எடுத்திருக்கும் அனைவரையும் கிழத்தனத்தில் கொண்டு சேர்க்கிறது. எழிலும், இளமையும் நிலைபேறு உடையவையாக மாட்டா என்னும் உண்மையை வ்ருத்தையாய் இருக்கின்ற பராசக்தி போதித்துக்கொண்டிருக்கின்றாள்.

**ब्रह्मात्मैक्यस्वरूपिणी — ப்ரஹ்மாத்மைக்ய ஸ்வரூபிணீ** ६७२

பிரம்மமும், ஆத்மாவும் ஒன்றுபட்டுள்ள வடிவத்தில் இருப்பவள்.

ஜீவாத்மன் எப்பொழுதாவது பரமாத்மனுக்குப் புறம்பாக இருந்தது கிடையாது. சமுத்திரத்தில் வடிவெடுக்கும் அலைகள் ஒரு க்ஷணப்பொழுதாவது சமுத்திரத்துக்கு அன்னியமாக இருக்க முடியாது. அங்ஙனம் பிரம்மமும் ஜீவாத்மாவும் யாண்டும் இணைபிரியாது இருந்துவருகின்றன. பரப்பிரம்மத்துக்கு ஜீவ வியக்தியாக வடிவெடுத்து வரும் பாங்கு பராசக்தியைப் பொறுத்திருக்கிறது. ஒரே பொருள் இயங்காத நிலையில் பிரம்மம் என்றும் இயங்குகின்ற நிலையில் சக்தி என்றும் பெயர் பெற்றுள்ளது. சமுத்திரத்தின் மேல்பகுதி அலைகளாக வடிவெடுத்து உருண்டோடுகிறது. அதன் அடிப்பகுதியோ அசைவற்றிருக்கிறது. அசையாத பாங்கில் உள்ள நிர்க்குணப் பிரம்மம் அசைகின்ற பாங்குடைய சகுணப் பிரம்மமாகவும் உள்ளது. சிவனர் சதாசிவமாகவும் அர்த்தநாரீசுவரராகவும் இலங்குகின்றார். அர்த்தநாரீசு

வர சொரூபத்தில் ஜீவ வியக்தியும் இடம் பெறுகின்றது. பரமாத்மனின் கூறே ஜீவாத்மனுகக் காட்சி கொடுக்கின்றது.

சிற்றலைகளும் பேரலைகளும் சமுத்திர சொருபமாக இருப்பது போன்று புல் முதல் சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மதேவன் ஈருக ஜீவகோடிகளனைத்தும் பிரம்மத்தின் சொருபங்களாம். இந்த உண்மைக்கு மாருகத் தன்னை உயர்ந்தவனுகவும் மற்றவனைத் தாழ்ந்தவனுகவும் பொருள்படுத்துபவன் அக்ஞானத்தில் உழலுகின்ருன். தான் மட்டும் முன்னேற்றமடைந்திருப்பவனுக எண்ணிக் கொண்டிருக்கும் அன்னவன் உண்மையில் படிப்படியாகக் கீழ்மையுற்று வருகிருன். பேத புத்தியை உண்டுபண்ணுவது அக்ஞானமாகும். ஆகையினல் கட்புலனுகின்ற ஜீவகோடிகள் அனைத்தையும் பரப்பிரம்ம சொருபமாகப் பாவிப்பது நல்ல ஆத்ம சாதனமாகின்றது.

**बृहती — ப்ருஹதீ** ६७३

பெரியவள்.

மெய்ப்பொருளானது அணுவுக்கு அணுவாயும் அப்பாலுக்கு அப்பாலாகவும் உள்ளது. மனதை அகண்டாகாரத்திற்கு எடுத்துச் செல்ல இயற்கையின்கண் உள்ள மூன்று பாங்குகளை ஆத்ம சாதகன் தியானித்துப் பழகவேண்டும் என்று பரமஹம்சதேவர் பகர்ந்துள்ளார். வானளாவிக் கொண்டிருக்கும் ஹிமாசலத்தைப் பார்த்து வியப்படைந்து களித்திருப்பது ஒருவிதத் தியானமாகிறது. கரைகாணுத கடலைக் கண்டு அதில் மனதைச் செலுத்திப் பழகுவது ஒரு நல்ல ஆத்ம சாதனமாகிறது. நள்ளிரவில் நாலா பக்கமும் வியாபித்துள்ள வானவெளியின்கண் கருத்தைச் செலுத்திப் பழகவேண்டும். அதில் தென்படுகின்ற எண்ணிறந்த நட்சத்திரங்கள் எத்தனையெத்தனை கோடி வெளிச்ச வருஷங்களுக்கு அப்பாலுள்ளன என்று எண்ணிப் பார்க்கவேண்டும்.

சூரியன் பூமியிலிருந்து ஒன்பது கோடி மைல் தொலைவில் உள்ளது. ஒரு நிமிஷத்திற்கு ஒரு கோடி மைல் தூரம் பாயக்கூடிய சூரிய ஒளிக்கதிர் எட்டு நிமிஷங்களில் பூமியை எட்டுகிறது. அந்த வெளிச்சம் முந்நூற்று அறுபத்தைந்து நாட்களில் பாய்ந்து போகின்ற தூரம் ஒரு வெளிச்ச வருஷம் ஆகிறது.

பிருஹதையாய் இருக்கின்ற பராசக்தி தன் ஸ்தூல வடிவம் எவ்வளவு பெரியது என்பதை இதன்மூலம் விளக்குகின்றாள். சூட்சும நிலையிலோ அவள் வடிவம் இன்னும் பன்மடங்கு பெரிதாக விரிவடைகின்றது. அன்னையைப் ப்ருஹதையாக எண்ணி வரவர ஆத்ம சாதகன் தன் ஜீவ வியக்தியைக் கடந்து அகண்டத்தில் ஒன்றுபடுகிறான்.

**ब्राह्मणी — ப்ராஹ்மணீ** ௬௭௪

பிராம்மண சொரூபமாயுள்ள சிவனாரின் சகதர்மணியாக இருப்பவள்.

கல்லூரிப் படிப்பைப் பூர்த்திபண்ணுகின்றவன் பட்டதாரி ஆகின்றான். நான்கு வருணங்களுள் பண்பாட்டில் உச்சநிலையடைந்திருப்பவன் பிராமணன் ஆகின்றான். பயிற்சியின் வாயிலாக அந்நிலையை எட்டவேண்டும். பிறந்துள்ள மானுட சிசு ஒன்று ஆரம்ப நிலையில் சூத்திரனாயிருக்கின்றது. சமஸ்காரத்தின் வாயிலாக அது படிப்படியாக மேலான வருணங்களுக்கு முன்னேறிச் செல்கின்றது. மனபரிபாகத்தில் மேல் நிலைக்குப் போவது இரண்டாவது பிறப்பு என்றும் அவ்வாறு மேல் நிலைக்குச் செல்கின்றவர்கள் த்விஜர்கள் என்றும் பாராட்டப்படுகிறார்கள். அருளே வடிவெடுத்திருப்பவனும் அருளை மக்களுக்கு நல்குபவனும் அந்தணன் எனப்படுகிறான். தன்னைத் தெய்வம் காப்பாற்றுவதால் தன் தேக சம்ரக்ஷணையைப் பற்றி இம்மியளவும் எண்ணாதிருப்பவன் பிராம்மணன் ஆகிறான்.

தற்செயலாய் வரும் பொருளைக்கொண்டு திருப்தியடைகின்றவனும், வீடு இல்லாது இருப்பவனும்; உடல் சம்ரக்ஷணையைப் பற்றிய கவலை இல்லாது இருப்பவனும் பிராம்மணன் எனப்படுகிறான். மண்ணுலகில் வாழும் விண்ணவன் எனப் பகரப்பெறும் அன்னவனைக் காண்பது தெய்வத்தைக் காண்பதற்கு நிகராகும். பெண்பாலர்களில் அனசூயை, சீதை, இராதை, ஆண்டாள் முதலியவர்கள் அத்தகைய பாங்கு படைத்திருந்தனர். அன்னவர்கள் மயமாக அம்பிகை இருப்பதால் அவள் பிராம்மணீ என்று போற்றப்படுகிறாள். பரமஹம்சதேவருக்கு முதல் குருவாக வாய்த்திருந்த பைரவி பிராம்மணீயிடம் தியாக வாழ்வின் மகிமை மிளிர்ந்தது; ஞானக் கடலாக அவர் விளங்கினார்; பரஞான அனு

பூதியின் எல்லையை அவர் எட்டியிருந்தார். மேனி அமைப்பிலும் அழகிலும் உச்சநிலை அடைந்திருந்த அவர் பரதேவதைக்குரிய பிராம்மண அம்சங்கள் யாவும் வாய்க்கப்பெற்றவராக இலங்கினர். அத்தகைய பாங்குடைய பெண்பால் ஒருத்தியை பிராம்மணீ அல்லது மகாதேவியாகப் பாராட்டுவது பொருத்தமானது.

**ब्राह्मी — ப்ராஹ்மீ** ६७५

சிருஷ்டி கர்த்தா பிரம்மதேவனுடைய சக்தி சரஸ்வதி சொரூபமாயிருப்பவள்.

சமுதாயத்தில் சரஸ்வதியின் சான்னித்தியம் எக்காலத்திலும் அழிந்துபட்டுப் போவதில்லை. கலை ஓங்கியிருக்கும் இடங்களில் எல்லாம் கலைமகளாகிய அவள் சான்னித்தியம் வெளிப்படையாகிறது. பல படித்தரங்களிலிருக்கும் ஆடவர், மகளிர் ஆகிய இருபாலர்களுடைய நாவிலும் அவள் வீற்றிருந்துகொண்டு கலைகளை வெளிப்படுத்துகின்றாள். அவளுடைய மேனி, ஆடை, இருப்பிடமாகிய தாமரை ஆகிய யாவும் தூய்மைக்கு எடுத்துக் காட்டாகிய வெண்ணிறம் படைத்துள்ளன. மனத்தூய்மை வாய்ப்பதற்கேற்பக் கலைமகளுடைய அருளுக்குப் பாத்திரமாகலாம் என்பது கோட்பாடு. கலையின் உச்சநிலையாக அம்பிகை யாண்டும் மிளிர்ந்துகொண்டிருப்பதால் அவள் ப்ராஹ்மீ என்னும் பெயர் படைத்துள்ளாள்.

**ब्रह्मानन्दा — ப்ரஹ்மானந்தா** ६७६

பிரம்மானந்த சொரூபமாயிருப்பவள்.

நிறைபொருளாகிய பிரம்மத்திற்குப் புறம்பாக ஏதும் இல்லை. மலினப்படாது மேன்மையுற்று ஓங்கியிருக்கும் ஆனந்தம் பிரம்மானந்தம் எனப்படுகிறது. ஆனந்தம் பிரம்மம் என்பது உபநிஷத் வாக்கியம். தூயமனம் படைத்திருக்கின்றவர்களுக்கு இப்பிரபஞ்சத்தின்கண் பிரம்மானந்தமே பொலிந்துகொண்டிருப்பது புலப்படும். நாமரூபத்தில் பொலிந்துகொண்டிருக்கும் ஆனந்தம் அதற்கு அதீதத்திலும் பொலிகின்றது. ஆனந்தத்தை அறியாத உயிரும் அதில் நிலைபெறாத உயிரும் இல்லை.

இவ்வுலகில் துக்கம் ஏராளமாக நிறைந்திருக்கிறது. அது உண்மையில் ஆனந்தத்தின் எதிர்மறைத் தோற்றமேயாகும்.

இருள் என்பது வெளிச்சத்தின் ஒருவித நிலையாய இருப்பது போன்று துக்கம் பேரானந்தத்தின் ஒருவித நிலையாம். சித்திர வதைக்கு ஆளான அப்பர் சுவாமிகள் அந்நிலையிலும் 'இன்பமே எந்நாளும் துன்பமில்லை' என இயம்பினர். தோன்றியுள்ள யாவும் தோற்றத்துக்கு அப்பால் இருப்பதும் பிரம்மானந்தமே. அக்னி யிடமிருந்து உஷ்ணத்தைப் பிரிக்கமுடியாதது போல் பிரம்மத்தை யும் சக்தியையும் பிரிக்கமுடியாது. பிரம்மத்திற்குக் கொடுக்கும் அதே அடைமொழியை அம்பிகைக்கும் வழங்கலாம். மனதற்ற நிலையில் ஜீவர்கள் உணரும் பிரம்மானந்தத்தில் லயித்திருப்பது நல்ல அம்பிகை வழிபாடாகிறது.

**बलिप्रिया — பலிப்ரியா** ६७७

நிவேதனத்திலோ பேராற்றலிலோ பிரியம் வைத் திருப்பவள்.

எங்கெல்லாம் மமகாரம் ஒதுக்கப்படுகிறதோ ஆங்கெல்லாம் அம்பிகையின் சான்னித்தியம் திகழ்கிறது. கோயிலின் நுழை வாயிலில் உள்ள பலிபீடத்தில் பக்தன் ஒருவன் தன் சிறுமைகளை யெல்லாம் பலி கொடுக்கவேண்டும். அகங்கார, மமகாரத் தியா கத்துக்கு நிகரான தியாகம் இல்லை. ஆத்ம சாதகன் தன் ஜீவி தத்தை அம்பிகை வழிபாட்டுக்காகவென்று பலி கொடுப்பதற்கு நிகரான நிவேதனம் வேறு ஏதுமில்லை.

நிலையற்றவைகளை ஒதுக்குவதன் மூலம் ஜீவாத்மன் பேரானந் தத்திற்குச் சொந்தமாகிறான். தன் ஜீவவியக்தியைப் பலிகொடுக் கும் ஜீவனும் அப்பலியை ஏற்கும் அம்பிகையும் பேரானந்தம் அடைகின்றார்கள். அம்பிகைக்குப் புறம்பானவர்களாகத் தங்க ளைக் கருதிக்கொள்பவர்கள்தான் அல்லலுக்கு ஆளாகிறார்கள். அலை கடலுக்குச் சொந்தமாவதுபோல் ஜீவர்களனைவரும் அம்பிகைக்குச் சொந்தம். அச்சொந்தத்தைச் செயல்படுத்துவது நிவேதனம் ஆகிறது.

பலி என்னும் சொல் பலம்படைத்தவன் எனப் பொருள்படு கிறது. பலம் படைத்ததே வாழ்க்கைக்குத் தகுதி உடையதாகிறது. பலம்படைத்தவனே ஆத்ம ஞானத்துக்குத் தகுதி உடையவனா கிறான். 'வலிவு வாழ்வை நல்குகிறது; மெலிவு மரணத்தை வர

வழைக்கிறது' என விவேகானந்த சுவாமிகள் விளக்கியுள்ளார். மானுடன் ஒருவன் பலவானுகப் பரிணமித்து வருவானுகில் அவன் வாழ்க்கைத் திட்டத்தை நன்கு நிறைவேற்றுபவனுகிருன். ஆத்ம சாதகன் ஒருவன் தன்னை யாண்டும் பலப்படுத்திக்கொண்டு வருவானுகில் அது சிறந்த அம்பிகை வழிபாடாகிறது.

**भाषारूपा — பாஷாரூபா** ६७८

மொழிகளின் வடிவங்களில் இருப்பவள்.

நாதப்பிரம்மத்தின் வெவ்வேறு தோற்றங்களாக உலகில் உள்ள பல்வேறு மொழிகள் இருக்கின்றன. கருத்துக்களை வழங்குவதற்கென்றே அமைந்துள்ள மொழிகளில் எல்லாம் மேன்மை மிளிர்கின்றது. அம்பிகையைப் பற்றிய மகிமைகளை யெல்லாம் விஸ்தாரமாய் விளக்கியிருப்பது சம்ஸ்கிருத மொழி யிலேயாம். தத்துவ ஆராய்ச்சிக்கென்றே அலாதியாக அமைந் துள்ள மொழி சமஸ்கிருதம். ஒவ்வொரு மொழியிலும் ஒரு சிறப்பு உண்டு. சிறப்பிக்கின்ற பாங்கில் சம்ஸ்கிருதம் தேவ பாஷை எனப்படுகிறது. சௌந்தரிய லஹரியில் திகழும் தெய்விகம் மீனுட்சியம்மை பிள்ளைத் தமிழிலும் விளங்குகிறது. விவேகானந்த சுவாமிகள் காளிகா தேவியைப் பற்றி அமைத்துள்ள ஆங்கிலக் கவிதையை அதே அருள்நிலையில் மற்ஞெரு மொழியில் அமைக்க முடியாது. ஒரு பாஷையை வாகனமாகக் கொள்ளும் ஞானியின் பாங்குக் கேற்பப் பாஷையிலும் மகிமை வந்தமைகிறது. அன்னை பராசக்தியே அனைத்துமாயிருப்பதால் பிரபஞ்சத்திலுள்ள மொழி கள் மயமாக அவளே இலங்குகின்ருள் என்று கருதுவது நல்ல உபாசனையாகிறது.

**बृहत्सेना — ப்ருஹத்சேஞ** ६७९

அளப்பரிய சேனையை உடைத்திருப்பவள்.

ஓர் அரசாங்கத்தின் வல்லமை அது படைத்துள்ள சேனை யில் அடங்கியுள்ளது. பட்டாளத்தின் பலத்திற்கேற்ப ஆட்சி முறையும் பெரியதாகிறது. இன்றைக்குப் படைகள் நிலப்படை, நீர்ப்படை, ஆகாயப்படை ஆகிய மூன்று விதமாக அமைந்திருக் கின்றன. இவையாவுக்கும் மேலாக அணுச்சக்தியை வைத்துக் கொண்டு படையெடுத்துப் போகாமலேயே உலகின் எந்தப்

பகுதியை வேண்டுமானாலும் பாழ்படுத்துவதற்கான வல்லமையை மக்கள் பெற்றிருக்கின்றனர். மூலப்பிரகிருதியாகிய அம்பிகையிடமிருந்தே இவை யாவும் வந்துள்ளன. இக்காலத்திய போர் வீரர்கள் ஒப்பற்ற முறைகளில் ஜடசக்தியை நாசகாரியாகக் கையாள்கின்றனர். இத்தகைய சக்திகள் யாவும் அன்னை பராசக்தியிடமிருந்தே உருவெடுத்து வந்தவைகள் என்று சிந்தனை பண்ணுவது நல்ல அம்பிகை வழிபாடாகிறது.

**भावाभावविवर्जिता — பாவ அபாவ விவர்ஜிதா ६८०**

தோற்றம், ஒடுக்கம் ஆகிய இரண்டுக்கும் அப்பாற்பட்டவள்.

இப்பிரபஞ்சத்தில் ஒரு காலத்தில் தோற்றத்திற்கு வரும் யாவும் மற்றொரு காலத்தில் ஒடுங்கித் தோன்றாநிலை யெய்துகின்றன. அவ்வாறு தோற்றத்துக்கு வருவதும் பிறகு ஒடுங்குவதுமாகிய பிரகிருதியின் கூறுகளில் அன்னை பராசக்தி அடங்கியவள் ஆகமாட்டாள். தோன்றி மறைகிற பிரகிருதியை நிர்விகார பெருநிலையிலுள்ள அம்பிகையின் வழிபாட்டிற்குப் பயன்படுத்திக்கொள்ளலாம். தோற்றத்திற்கும் ஒடுக்கத்திற்கும் அப்பாற்பட்டவளாகிய அன்னை பராசக்தி அவளை வழிபடுவதற்குப் பயன்படுத்தப்படும் சின்னங்களில் ஆவாஹனம் செய்யப்படுகின்றாள். வழிபாட்டிற்குப் பிறகு அவள் விஸர்ஜனம் செய்யப்படுகின்றாள். இப்படிச் செய்வதெல்லாம் வழிபாட்டில் மக்களிடமுள்ள குறைநிலைக்கு ஈடு செய்தல் பொருட்டேயாகும். தீவிர ஆத்மசாதகர்கள் அம்பிகை தோற்றத்திற்கும் ஒடுக்கத்திற்கும் அப்பாற்பட்டவள் என்பதையும் வரவேற்புக்கும், வழி அனுப்புதலுக்கும் அப்பாற்பட்டவள் என்பதையும் அறிந்து அவள் யாண்டும் தன்மயமாயிருக்கிறாள் என்னும் பாவனையில் ஊறியிருப்பது நல்ல வழிபாடாகிறது.

**सुखाराध्या — சுக ஆராத்யா ६८१**

இனிது போற்றப் பெறுபவள்.

வழிபடு தெய்வம் சொரூபத்தில் மேலானதாயிருக்கும் அளவுக்கு வழிபாட்டிற்கு உரிய நியமனங்களும் கடினமானவைகளாகின்றன. பக்தியின் பெருக்கால் பராசக்தியுடன் இணக்கம்

பூணுகின்றவன் மந்த்ரத்தை உச்சரிப்பதில் பிழை செய்வானுகில் அதை ஒரு பிழையாகக் கொள்ளலாகாது. திரிகரணங்களையும் பக்குவப்படுத்துவதுதான் இன்றியமையாத கோட்பாடாகும்.

நீராடுதல், ஆசமனம் பண்ணுதல் போன்ற நியமனங்களின் வாயிலாக ஆத்மசாதகன் தன்னைப் பக்குவப்படுத்துதற்கேற்ப ஆராதனையானது மேம்பாடடைவது திண்ணம். ஆனுல் அம்பிகை வழிபாட்டில் ஆசார அனுஷ்டானங்களுக்கெல்லாம் விதிவிலக்கு உண்டு. தாயைச் சேய் அணுகுவதற்குக் கட்டுமானம் ஏதும் இல்லை. படுக்கையைவிட்டு எழுந்தானவுடனே தாயை நாடிக் குழந்தை ஓடலாம். நீராடியபின் தூய உடை அணிந்துகொண்டு பாதசேவை செய்யக் கையில் புஷ்பம் ஏந்திக்கொண்டும் தாயை அணுகலாம். குழந்தைக்குத் தாயோடு எல்லாப் பாங்குகளிலும் எல்லாச் சூழ்நிலைகளிலும் இணக்கம் வைப்பதற்கு உரிமை உண்டு. ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் இதே சுதந்திரத்துடன் அம்பிகை வழிபாட்டில் ஈடுபட்டிருந்தார். தமக்குத் தோன்றிய விதங்களில் எல்லாம் அம்பிகையுடன் ஒட்டி உறவாடினுர். பூஜாவிதி எதையும் அவர் பின்பற்றவில்லை. அம்பிகை வழிபாட்டில் ஈடுபட்டுள்ள ஆத்மசாதகனும் அதே போன்று சகல உரிமைகளுடனும் ஈடுபட்டு அம்பிகையைப் போற்றலாம் என்பதை இந்நாமம் விளக்குகிறது.

## शुभकरी — சுபகரீ ६८२

நலனையே செய்பவள்.

தாய் எத்தகைய கேடுடையவளாயிருந்தாலும் தன் சேய்க்கு அவள் தீங்கு ஒன்றும் செய்வதில்லை. பக்தி பூர்வமாக ஆத்மசாதகன் எத்தகைய வழிபாட்டில் ஈடுபட்டாலும் அம்பிகை அவனுக்குத் தீங்கு ஒன்றும் செய்யமாட்டாள். அவன் நல்வழியினின்று பிசகாமல் இருக்குமபடியும் அவள் அருள்கூர்ந்து பார்த்துக்கொள்கின்ருள்.

ஓர் அன்பர் இல்லத்துக்குத் தாம் சொன்னபடி போகாததால் பரமஹம்சதேவர் படுக்கையில் படுத்துத் தூங்க முடியாமல் தவித்தார். சொன்ன சொல்லை நிறைவேற்றியான பிறகே அவரால் அமைதியாகத் தூங்கமுடிந்தது. அம்பிகை இந்தப் பாங்கில் தன் பக்தர்களைப் பேணி வருகின்ருள்.

சிற்றுயிர்களாகிய பறவைகள், விலங்குகள் எல்லாம் தத்தம் மகிழ்ச்சியை, விசனத்தை, ஆபத்தை, எச்சரிக்கையைத் தம் இனத்துக்குத் தெரிவிக்கத் தம்போக்கில் ஓலமிடுகின்றன. சிற்றுயிர்களுக்கு ஏற்ற பாஷைகளும் இருக்கின்றன. இவைகளும் அம்பிகையிடமிருந்தே உருவாகி வந்துள்ளன என்று நாம் பாராட்டவேண்டும்.

**शोभना सुलभागतिः — சோபனு ஸுலபாகதி: ६८३**

சோபனம் என்னும் கதியை எளிதில் வழங்க வல்லவள்.

தர்மம், அர்த்தம், காமம், மோட்சம் என்று புருஷார்த்தங்கள் நான்கு இருக்கின்றன. தர்மத்தை விட்டுப் பிசகாதிருப்பது மானுட ஜன்மத்தின் குறிக்கோளாகிறது. தர்மபுத்திரனுகிய யுதிஷ்டிரனுக்குத் தர்மம் ஒன்றே நெறியும் குறியுமாக இருந்தன. அதன் விளைவாக அவனுக்குப் பொருளும், போகமும், வீடுபேறும் சுலபமாக வந்து வாய்ப்பனவாயின. அது அம்பாளுடைய அனுக்ரஹத்தால் நிறைவேறுவதாயிற்று. மக்கள் அனைவரின் நாட்டத்திற்கேற்ப அம்பிகை சோபனங்களை அன்னவர்களுக்கு எடுத்து வழங்குகின்ருள். நிலையற்ற அவைகளின் வாயிலாகவும் அவர்கள் பரிபக்குவம் அடையக் கடமைப்பட்டிருக்கின்றனர்.

இனி, சோபனங்களுள் உச்சநிலையிலிருப்பது மோட்ச சாம்ராஜ்யம். ரிஷிபுத்திரனுகிய நசிகேதன் மோட்சத்தைத் தவிர வேறு எதையும் பொருள்படுத்தாதவனுக இருந்தான். அத்தகைய சோபனம் அவனுக்கு அவ்வளவு சுலபமாக வாய்த்தது அம்பிகையின் அனுக்ரஹத்தாலேயாம். எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்த மாணிக்கவாசகர் எம்பெருமானின் பொன்னடிகளைக் கண்டு வீடுற்ருர். அந்த முக்தியாம் வீடுபேறு நிலைபேறு உடையது. அன்னையின் அருளுக்குப் பாத்திரமாகின்றவர்கள் இத்தகைய சோபனத்தை மிக எளிதில் அடையப் பெறலாம் என்பது இந்த நாமத்தின் கருத்து.

**राजराजेश्वरी — ராஜராஜேசவரீ ६८४**

மன்னுதி மன்னர்களுக்கெல்லாம் இறைவியாக இருப்பவள்.

ஆங்காங்கு உள்ள ராஜாக்களுக்கு அதிபதியாக இருக்கின்ற சக்ரவர்த்தி ராஜ ராஜன் என்று போற்றப்படுகிறான். அத்தகைய ராஜாதி ராஜர்களுக்கெல்லாம் ஈஸ்வரியாக அம்பிகை இலங்கு கின்றாள். அந்த ராஜாதி ராஜர்கள் தாம் படைத்திருக்கும் சைதன் யத்தையும் ஐஸ்வர்யத்தையும் அம்பிகையிடமிருந்தே பெற்றிருக் கிறார்கள். மக்களுக்குப் பலவிதங்களில் பயன்பட்டு வருகின்ற வித விதமான கருவிகரணங்களுக்கு விசையை வழங்கிவருவது மின்சக்தி. அந்தச் சக்தியின் சாந்நித்யம் இல்லாவிட்டால் அக் கருவிகள் யாவும் செயலற்றுப் போகின்றன. அதேவிதத்தில் பிரம்மாண்டத்தின் அமைப்பில் பெரிய பெரிய ராஜ பதவிகளை வகித்துவரும் மூர்த்திகளுக்கு அம்பிகையின் ஆத்மசக்தி என் னும் சேதனம் இல்லாதுபோய்விடுமானால் அத்தகைய மூர்த்தி கள் எல்லாரும் ஜட நிலை எய்துவர். அவர்களை எல்லாம் அரிய பெரிய கிருத்தியங்களில் இயக்கி வருபவள் அம்பிகை. ஈஸ்வரி யின் ஆதிக்கத்துக்கு மேலானது எதுவும் இருக்கமுடியாது. அத் தகைய ஆதிசக்தியை ராஜ ராஜேஸ்வரியாகப் பாவித்து உள்ளன் போடு வழிபடுவது நல்ல ஆத்மசாதனமாகும்.

**राज्यदायिनी — ராஜ்யதாயினீ** ६८५

ராஜ்யத்தைக் கொடுப்பவள்.

மஹாவிஷ்ணுவுக்கு வைகுண்டமும், சிவனுக்குக் கைலயங் கிரியும், இந்திரனுக்கு இந்திரலோகமும், பிரம்மாவுக்குப் பிரம்ம லோகமும் ராஜ்யங்களாக அமைந்துள்ளன. ஒரு குடும்பத்தை இழுக்கு ஏதுமில்லாது ஒழுங்காகக் கொண்டு செலுத்துவதும் ஒரு பெரிய சாம்ராஜ்யத்தை நிர்வகிப்பதும் ஒரே திட்டத்தில் அமைந் திருக்கின்றன. குடும்பத்துக்குத் தலைவனாயிருக்கின்றவன் தன் மனைவி மக்களுக்கும் உற்றார் உறவினருக்கும் செய்ய வேண்டிய கடமைகளையெல்லாம் முறையாகச் செய்து முடிக்கக் கடமைப்பட் டிருக்கிறான். அக்கம் பக்கத்தில் இருப்பவர்களுக்கும் தன்னால் இயலுகின்ற கைங்கரியங்களை முறையாகச் செய்து முடிப்பது அவன் கடமையாகின்றது. ஏழை எளியவர்களுக்கும் இயன்ற உதவிகளைச் செய்ய அவன் கடமைப்பட்டிருக்கின்றான். அம்பிகை யின் அருளுக்குப் பாத்திரமாய் இருக்கின்ற குடிமகன் ஒருவனே ராஜ்யப் பராமரிப்புக்கு நிகரான இத்தகைய குடும்பப் பாரங்களை

யெல்லாம் ஏற்று முறையாக நிறைவேற்ற வல்லவனுகின்றுன். இங்ஙனம் அந்தந்தத் தெய்வங்களுக்கும் தேவதைகளுக்கும் ஏற்ற ராஜ்யங்களை அன்னை பராசக்தி பகுத்து எடுத்துக் கொடுத்திருப்பதால் அவள் ராஜ்யதாயினீ என்னும் பெயர்பெற்றுள்ளாள்.

**राज्यवल्लभा — ராஜ்யவல்லபா** ६८६

ராஜ்யங்களில் பிரியம் வைத்துள்ளவள்.

வெவ்வேறு மூர்த்திகளும் தத்தம் ராஜ்யங்களை அம்பிகையின் அருளால் பெற்றிருப்பதை உணரக் கடமைப்பட்டிருக்கின்றனர். அவற்றில் பற்று மிக வைத்து நன்கு பராமரிக்க வேண்டும். அத்தகைய ராஜ்யபரிபாலனம் நன்கு நிறைவேறி வருவது அம்பிகையை மகிழ்விப்பதாகிறது. அந்த ராஜாக்களிடமும் ராஜ்யங்களிடமும் அன்னை பராசக்தி பிரியம் மிக வைக்கிருள். இங்ஙனம் அம்பிகையின் அனுக்ரஹத்தால் கிடைக்கப்பெற்ற பதவிகளை யெல்லாம் அந்த ராஜாக்கள் பிசகின்றி ஒழுங்காக நிர்வகித்து வருவார்களானல் அதைக் குறித்து அம்பிகை பரம பூரிப்பு எய்துகிருள்.

**राजत्कृपा — ராஜத்க்ருபா** ६८७

அத்யந்த கிருபையோடு கூடியவள்.

அவரவர் படைத்துள்ள மனப்பான்மையைப் பொறுத்து இரக்கம் காட்டும் செயலில் பாகுபாடு வந்தமைகிறது. மேலோர்கள் கிருபை காட்டவேண்டிய அவசியம் ஏற்படுமிடத்துத் தங்கு தடையின்றிப் பிறரிடம் இரக்கம் காட்டுகின்றனர். தம்பி சுக்ரீவனின் மனைவியை அபகரித்துக்கொண்ட வாலிக்கு மரண தண்டனை விதிக்கத் தீர்மானித்துவிட்ட ஸ்ரீ ராமன் அதை நிறைவேற்றவும் செய்தான். தான் செய்த குற்றத்தை மனப்பூர்வமாக வாலி உணர்ந்ததால் அதற்குக் கைமாருக அவனுக்கு ஸ்ரீ ராமன் மோட்சத்தைக் கொடுத்தருளினன். தெய்வத்தின் அளவிலடங்காத கிருபை அத்தகையது. தாய் உள்ளம் படைத்த அம்பிகையிடம தஞ்சம் அடைகின்றவர்களுக்கு அவள் அளவிலடங்காத கிருபையைத் தாராளமாக எடுத்து வழங்குகின்றுள். அறிவிலிகளாகிய ஜீவாத்மாக்கள் செய்த குற்றத்தை உணர்ந்து தெய்வத்திடம் அனுக்ரஹம் வேண்டுகின்றபொழுது அது தாராளமாக வருகின்

றது. 'அம்பிகையைச் சரண்புகுந்தால் அதிக வரம் பெறலாம்' என்னும் உண்மையை அறிந்து சாதகர்கள் நன்கு பயன்படுத்திக் கொள்ளவேண்டும்.

**राजपीठनिवेशितनिजाश्रिता ६८८**

**ராஜபீட நிவேசித நிஜாச்ரிதா 688**

தன்னை உபாசிக்கின்றவர்கள் ராஜபீடத்துக்கு ஒப்பான பெரிய பதவியில் இருக்கும்படி அனுக்ரஹம் செய்பவள்.

'வேண்ட முழுவதும் தருவோய் நீ' என்று தாம் அனுபூதியில் பெற்றதைப் பற்றி வாதவூரர் போற்றிப் பாராட்டுகின்றார். கைம்மாறு கேளாத பக்தனுக்குப் பரம்பொருள் தம்மையே கொடுத்துவிடுகின்றார். உபாசகன் ஒருவனுக்கு அன்னை பராசக்தி அவன் பரிபாகத்திற்கு ஏற்றபிரகாரம் சன்மானத்தை எடுத்து வழங்குகின்றாள். ராஜபீடத்தைத் தருவதுபோன்ற கொடைகளெல்லாம் பல படிகள் கீழே நிற்கின்றன. ஜீவபோதம் சிறிதளவாவது எஞ்சியிருந்து இம்மையில் பெரிய ஸ்தானம் வகிக்க எண்ணம் கொண்டுள்ள பக்தன் தேவேந்திரனுடைய ஸ்தானத்துக்கு நிகரான பதவிகளைப் பெறுகிறான். ஆசையை அறவே ஒதுக்கித் தள்ளிவிட்டு அம்பிகையின் அருளைமட்டும் நாடி நிற்கும் அன்பர்களுக்கு அவள் கைவல்ய முக்தியைக் கொடுக்கின்றாள். சுத்த சன்மார்க்கத்தில் செல்லும் பக்தன் தன்னை முற்றிலும் தன் தாயாகிய அம்பிகையிடம் ஒப்படைத்து விடுவானாகில் அப்பொழுது அவள் அவனைத் தன்னில் ஐக்கியப்படுத்துகின்ற அரியபெரிய வரத்தைத் தந்தருள்கின்றாள்.

**राज्यलक्ष्मीः — ராஜ்ய லக்ஷ்மீ: ६८९**

ராஜ்ய லட்சுமி வடிவத்தில் இருப்பவள்.

தெய்வ மகிமை வாய்க்கப்பெற்றவனே அரச பதவியைப் பெற வல்லவனாகிறான். தகுதி வாய்ந்த வேந்தனை விஷ்ணுவின் அம்சம் எனக் கருதுவது மரபு. மகாபாரதப் பெரும் போரில் வெற்றி பெற்றான பிறகு தனக்கு ராஜ்யம் வேண்டாம் என்று யுதிஷ்டிரன் அதைத் துறந்தான். 'நீ உனக்குரியவன் அல்லன்;

மக்களுக்குரியவன்' என்று பாட்டனர் ஆக்ஞாபிக்கவே அவர் ஆணைப்படி தர்மராஜன் ராஜ்யத்தை ஆண்டான். அவன் தகுதியை அனுசரித்து ராஜ்ய லக்ஷ்மியின் மகிமைகளனைத்தும் அவன் ஆண்டு வந்த நாட்டில் பொலிவனவாயின. தனி மனிதனுடைய வாழ்விலும் இது வந்தமைகிறது என்பதை அம்பிகையின் உபாச கர்கள் கருத்தில் கொள்வார்களாக.

**कोशनाथा — கோசநாதா** ६९०

பொக்கிஷத்துக்குத் தலைவி.

செல்வம் வேண்டியவாறு அமைந்திருப்பதற்கு ஏற்ப ஓர் அரசாங்கத்தின் ஆட்சிமுறை உன்னத ஸ்தானம் பெறும். பிரபஞ் சத்தில் உள்ள ஒவ்வோர் அம்சமும் செல்வமாக விளங்குகிறது. நீர்வளமும், நிலவளமும் ஓங்குமிடத்துக் குடிவளமும் தானகவே ஓங்குகிறது. நன்மக்கள் நிறைந்துள்ள பிரதேசத்தில் அமைந் துள்ள வாய்ப்புகள் எல்லாம் தனங்களாகத் தெரிந்தெடுக்கப்படு கின்றன. இயற்கையில் கிடைக்கும் மேலாம் பொருள்களைச் சரியாக மதிப்பிடுபவன் மனிதன். மனிதன் என்னும் சேதனப் பொருளும், மண், பொன், இரத்தினம் ஆகிய அசேதனப்பொருள் களும் அன்னை பராசக்திக்குச் சொந்தமாகின்றன. தன் சிருஷ்டி யில் எத்தகைய அரிய பெரிய ஜடப்பொருள்களையும் சேதனங் களையும் அவள் அமைத்து வைத்திருக்கின்றாள் என்று ஆராய்ந்து பார்த்தால் அவளுடைய மகிமைகள் ஓரளவு நமக்கு விளங்கு கின்றன.

வனஸ்பதி என்று இயம்பப்படுகிற காட்டு மரம் ஒன்றின் கனியில் வித்து என்னும் உயிர்த்தத்துவத்துக்கு மேல்தோலும், சதைப் பற்றும் கோசங்களாக அமைந்திருக்கின்றன. அதே போன்று மனிதன் என்னும் ஜீவாத்மன் ஸ்தூல நிலையில் தொடங் கிச் சூட்சும நிலைகளுக்குப் போகும் அன்னமய கோசம் முதலிய பஞ்சகோசங்களைப் படைத்திருக்கிறன். அத்தகைய ஜீவாத்ம னுக்குத் தாயாகவும் இறைவியாகவும் வீற்றிருப்பவள் அன்னை பராசக்தி. சேதனம், அசேதனமாகிய எல்லாப் படித்தரங்களிலும் இருக்கின்ற பொக்கிஷங்களை அவற்றின் பாங்குகளுக்கேற்ப அன்னை பாதுகாத்து வருகின்றாள். அவளுடைய அத்தகைய

ஆட்சி முறையை எண்ணிப் பார்ப்பது அவளுக்குரிய நல்ல வந்தனை வழிபாடாகிறது.

**चतुरङ्गबलेश्वरी — சதுரங்க பலேச்வரீ** ६९१

ரத, கஜ, துரக, பதாதி எனக் கூறப்பெறும் நான்கு விதச் சேனைகளுக்குத் தலைவியாக இருப்பவள்.

நல்ல அரசாங்கம் ஒன்றுக்குச் செல்வம் இன்றியமையாத பொருளாக அமைந்திருப்பது போன்று நால்வகைச் சேனைகளும் இன்றியமையாத அங்கங்களாக அமைந்திருக்கின்றன. இன்றைக்குச் சமுதாயத்தில் நல்லவர்களுக்கும் கெட்டவர்களுக்கு மிடையில் போராட்டம் புதியதொரு வடிவெடுத்திருக்கிறது. நிலப் படை, நீர்ப்படை, விமானப்படை என்று மூன்று படைகளாக இன்றைய சேனையின் பலம் திகழ்கிறது. உருண்டோடும் கோட்டைக்கு நிகரான எந்திரத்தினுள் அமர்ந்துகொண்டு போர்வீரன் ஒருவன் பழங்காலத்துச் சதுரங்க சேனையை அறவே துடைத்துத் தள்ளவல்லவனாயிருக்கின்றான். கோட்டைக்கு நிகரான யுத்தக் கப்பல்கள் கடல் கடந்துசென்று போர்புரிய வல்லவைகளாகயிருக்கின்றன. ஆகாயத்தில் பறந்துசென்று எதிரிகளின் ராஜ்யங்களைச் சிறிது நேரத்தில் சாம்பலாக்கிவிடக் கூடிய திறமை விமானப் படைக்கு உள்ளது. எல்லாக் காலங்களிலும் உள்ள எல்லா விதமான சேனைகளின் வல்லமைகள் யாவும் ஆதிசக்தியாகிய அம்பிகையிடமிருந்தே வடிவெடுத்து வந்தவைகளாம்.

**साम्राज्यदायिनी — ஸாம்ராஜ்ய தாயினீ** ६९२

பேராட்சியைத் தருபவள்.

பிரபஞ்சத்தின் நடைமுறையை அன்னை பராசக்தி ஒழுங்காகச் செய்து வருகிறாள். அப்பேரமைப்பு அவளுடைய பக்தர்களனைவருக்கும் சொந்தமாகின்றது. பக்தன் ஒருவன் தனக்குரிய வாழ்வை முறையாகவும் ஒழுங்காகவும் நடாத்தி வருவானாகில் அவன் தன்னளவில் சாம்ராஜ்யத்தைப் பெற்றவனாகிறான். செவ்வனே நிர்வகிக்கப்பட்டு வரும் அவனுடைய குடும்பமும், திறமையாகவும் ஒற்றுமையாகவும் நடைபெற்றுவரும் கிராம நிர்வாகமும் சாம்ராஜ்யங்கள் ஆகின்றன. தன் நாட்டைச் சீருடனும் சிறப்புடனும் ஆண்டுவரும் மன்னன் ஒருவனுடைய ஆட்சிமுறையைச்

சாம்ராஜ்யம் எனலாம். சிறிய அளவில் ஆனாலும் சரி, பெரிய அளவில் ஆனாலும் சரி ஆட்சித்திறன் வாய்க்கப்பெற்றிருப்பவன் நிறை மனிதனாகிறான். பரிபூரணமாகப் பாரமார்த்திக வாழ்வில் ஈடுபடுபவனுக்கே இத்தகைய மேலாம் பாங்கு வாய்க்கிறது. பக்தன் ஒருவனுக்கு அவனுடைய உபாசனா மூர்த்தியின் விபூதிகளெல்லாம் சொந்தமாகின்றன. அம்பிகை அகிலாண்டங்களுக்கும் சக்கரவர்த்தினியாக இருந்து ஒழுங்குப்பாட்டை நிலை நிறுத்தி வருகின்றாள். அத்தகைய பரமேஸ்வரிக்குப் பக்தர்களாக இருப்பவர்கள் தத்தம் மனப்பான்மைக்கு ஏற்ப ஆளுந்திறமை வாய்க்கப் பெறுவதில் அதிசயம் ஒன்றுமில்லை. இகம், பரம் ஆகிய எல்லா நிலைகளிலும் அம்பிகையின் உபாசகனுக்கு மேன்மை வாய்க்கிறது என்பது கோட்பாடு.

## सत्यसन्धा — ஸத்ய ஸந்தா ६९३

ஆணை பிறழாதவள்.

மகிமைகளோடு கூடிப் பிறப்பெடுக்கின்ற அவதார மூர்த்திகளுக்குச் சத்திய சங்கல்பன் என்னும் பொருத்தமான பெயர் அமைவதுண்டு. சொன்ன சொல்லினின்று சான்றோர் ஒருபொழுதும் பிசகமாட்டார்கள்.அயோத்திவாசிகள் அனைவரும் ஸ்ரீ ராமனை அவனுக்குரிய ராஜ்யத்தை ஏற்றுக்கொள்ளும்படி வேண்டினார்கள். அன்னவர்களுக்கு ஸ்ரீ ராமன் கொடுத்த விடையில் அவனுடைய பண்பாடு அமைந்திருக்கிறது. சூரியன் தன் பிரகாசத்தை இழக்கலாம்; சமுத்திரம் நீரில்லாது வற்றிப் போகலாம்; இமாசலத்தில் உறைபனி இல்லாது போகலாம்; ஆனால் தன் தந்தையைச் சத்திய சங்கல்பன் ஆக்குதல்பொருட்டுப் பதினான்கு வருஷகாலம் வன வாசம் செய்வதாகத் தான் கொடுத்த வாக்குறுதியினின்றும் இம்மியளவும் பிசகமாட்டேன் என்றான் ஸ்ரீ ராமன். ஒரு மானுடன் சத்தியத்தைச் சிக்கெனப் பிடிப்பதற்கு நிகரான தபசு இல்லை. சத்தியத்தை உறுதியாகக் கடைப்பிடிக்கின்றவன் பிரம்மசொரூபமாகின்றான். சத்தியம் காக்கின்ற பெருமக்கள் எல்லாரும் பராசக்தியின் சொரூபங்களாகின்றனர். பரப்பிரம்மத்திற்கு அன்னியமல்லாத அவளுடைய ஆணைக்கு அடிபணிகின்றவர்கள் எல்லாரும் அவள் சொரூபத்தில் இடம்பெறுகின்றனர்.

**सागरमेखला** — ஸாகர மேகலா ६९४

கடலை ஒட்டியாணமாக அணிந்திருப்பவள்.

நிலவுலகைத் தன் மேனியாகக் கொண்டிருப்பவளாகிய அம்பிகை கடலை ஒட்டியாணமாக உடைத்திருப்பது பொருத்த மானது. பிரபஞ்சம் முழுவதையும் அம்பிகையின் சொரூபமாகக் கருதுவதில் பெருநலன் உண்டு. த்ருக் ஆகிய ஜீவாத்மன் எத் தகைய பரிபாகம் அடைந்திருக்கிருனோ அத்தகைய காட்சியை அவன் புற உலகில் காண்கிருன். மனது திருந்தியமைவதற்கு ஏற்ப உலகின் காட்சியும் திருந்தியமைகிறது. முற்றிலும் மாசற்றதாகிவிட்ட மனதுக்கு அகம், புறம் ஆகிய எங்கும் பரா சக்தியின் சான்னித்தியமே காட்சியளிக்கின்றது. தென்படுகின்ற யாவையும் அம்பிகையின் சொரூபங்களாகப் பாவிப்பது மனதைத் திருத்தியமைக்க உற்ற உபாயமாகிறது. உண்மையில் தோற்றத் தில் உள்ள யாவும் அன்னையின் சொரூபங்களே என்று கருது வதன் மூலம் ஒருவன் நல்ல ஆத்ம சாதகனுகலாம் என்பது இந் நாமத்தின் மூலம் தெளிவாகிறது.

**दीक्षिता** — தீக்ஷிதா ६९५

ஞான தீட்சை அளிப்பவள்.

ஒரு ஜீவாத்மனுடைய பரிபாகத்துக்கேற்ற மந்த்ரத்தை அம் பிகை அவன் உள்ளத்தினுள்ளே வீற்றிருந்துகொண்டு விளக்கி யருள்கின்ருள். கிருஷி சாஸ்திரத்தில் பயிற்சி பெற்ற நிபுணன் எந்த நிலம் எத்தகைய சாகுபடிக்குப் பொருந்தியது என்று கண்டுகொண்டு முறையாகச் சாகுபடி செய்து நல்ல ஊதியம் பெறுகிருன். அந்தக் கிருஷி நிபுணனுடைய பாங்குக்கேற்றது மந்த்ர தீட்சை. ஒவ்வொரு ஜீவாத்மனும் ஒவ்வோர் ஓசை வடி வினன் என்பது இயற்கைத் தத்துவம். ஜடப்பொருள், சேதனப் பொருள் ஆகிய யாவுக்கும் உற்ற ஓசை உண்டு. பதமும் அதன் அர்த்தமும் சேர்ந்து பதார்த்தமாகிறது. ஓசையின் புறத் தோற் றமே பிரபஞ்சத்தில் யாவுமாக அமைந்துள்ளது. ஓர் ஆத்ம சாத கனுடைய அமைப்பு எத்தகைய ஓசையை உடைத்திருக்கிறதோ அவ்வோசையைச் செப்பனிடுவதற்கு வந்து வாய்க்கின்ற சப்தமே அவனுக்குப் பொருத்தமான மந்த்ரமாகிறது. தத்தம் சம்பிரதா

யங்களுக்கேற்ற மந்த்ரங்களைத் தீட்சை பண்ணி வைக்கும் சமயாச்சாரியர்கள் இக்கோட்பாட்டை அறிந்துகொள்ளமாட்டார்கள். உலகில் அரியதிலும் அரியதாக அமைந்திருக்கும் தீர்க்க தரிசிகளுக்கு இது நன்கு விளங்குகிறது. ஆதலால் ஆத்ம சாதகர்கள் நம் உள்ளத்தில் வீற்றிருக்கின்ற அம்பிகையிடம் பேரார்வத்துடன் சரண்புகுதல் வேண்டும். அம்பிகை உபாசனை வலுப்பதற்கேற்ப அவனுக்கு அந்தக்கரண சுத்தி உண்டாகின்றது. சுத்தியடைந்த அந்தக்கரணத்தில் அம்பிகையின் அருள் மந்த்ரமாக எதிரொலிக்கிறது. அனாஹத தொனியின் ஒரு கூறு அந்த ஒலி ஆகும். அந்தந்த ஆத்ம சாதகனுக்கேற்ற மந்த்ரம் மனதில் எதிரொலிக்கும்படி செய்பவள் அம்பிகை. அவளுடைய அருள் பிழை போவதில்லை. சாதகனுடைய முன்னேற்றத்துக்கு ஏற்றவாறே அது வந்தமைகிறது. ஆதலால் அவளுக்கு தீக்ஷிதா என்னும் பொருத்தமான நாமம் வந்தமைந்துள்ளது.

**दैत्यशमनी —தைத்ய சமனீ** ६१६

தைத்யர்களைத் துடைத்துத் தள்ளுபவள்.

துஷ்டத்தனமே வடிவெடுத்திருப்பது அசுரர்களுடைய பாங்கு. துன்மார்க்கத்தில் செல்லும் அவர்களுக்குப் பொழுதுபோக்கு மன்னுயிர்களைப் பெருந்துன்பத்தில் ஆழ்த்துதலாம். நல்லார்கள் பலருக்குப் பாதகம் பண்ணுவதன் வாயிலாக அசுரர்கள் இன்புற்றிருக்கிறார்கள். நல்லார்கள் பெரும்பாலும் அரக்கர்களை அடக்கியாளவோ அவர்கள் கையிலிருந்து மீளவோ முடியாமல் வேதனைகளைச் சகித்துக்கொண்டு நன்னெறியில் நிலைநிற்கின்றனர். அம்பிகை தக்க காலத்தில் அத்தகைய அசுரர்களைச் சம்ஹாரம் செய்து ஒதுக்குகிறாள்.

ஜீவர்களுடைய மனதில் நலனுக்கும் கேட்டிற்கும் ஓயாத போராட்டம் நிகழ்ந்து வருகிறது. சன்மார்க்கத்தில் செல்லும் ஆத்ம சாதகன் முறையாக மந்த்ரத்தை உச்சரித்து வருவதால் தன் கெட்ட இயல்புகளை அதிவிரைவில் ஒதுக்கித் தள்ளுகிறான். அகத்திலும் புறத்திலும் ஆதிக்கம் செலுத்தி வரும் அசுரத்தனம் இவ்வாறு ஒழித்துத் தள்ளப்படுகிறது. அம்பிகையைச் சரண் புகுபவர்களுக்கு தம் அசுர இயல்பை ஒதுக்குவது மிக எளிது

கிறது. சர்வகாலமும் இத்தகைய நிகழ்ச்சி நடைபெற்று வருவதால் அம்பிகை தைத்ய சமனீ என்று போற்றப்பெறுகிறாள்.

**सर्वलोकवशंकरी — ஸர்வலோக வசங்கரீ ௬௯௭**

உலகங்களனைத்தையும் தன்வசமாக்குபவள்.

இயக்குகின்ற பிரகாரம் இயங்கும் எந்திரம் ஒன்றுக்கும் இச்சா சுதந்திரம் இல்லை. ஜீவகோடிகள் அனைத்தும் இச்சா சுதந்திரம் படைத்திருப்பவைகளாகக் காட்சி கொடுக்கின்றன. ஸ்தாவர, ஜங்கமங்களாகிய உயிர்வகைகளனைத்தும் தத்தம் போக்கில் தோன்றி இருந்து ஒடுங்குகின்றன என்று தோன்றுகிறது. உண்மையில் இத்தனைகோடி உயிர்வகைகளுக்கும் பூரண இச்சா சுதந்திரம் என்பது கிடையாது. மனிதர்கள் தமக்குத் தாமே உண்டு பண்ணிக் கொண்டுள்ள கட்டுமானங்களும் தெய்வாதீனமாக அமைந்துள்ள கட்டுமானங்களும் உள்ளன. ஒரு மனிதன் தன்னந்தனியாக இருக்கின்றபொழுது தான் விரும்பியவாறு உடையணிந்திருக்கவும் உடையில்லாது நிர்வாணமாயிருக்கவும் அவனுக்கு உரிமையுண்டு. ஆனால் சமுதாயத்தில் பழகுகின்றபொழுது நியதிப்படி உடையணிந்திருக்க அவன் கடமைப்பட்டிருக்கிறான்.

ஜனன மரணம் ஆகிய செயல்கள் மனிதன் விரும்பியவாறு நிகழ்வது இல்லை. அவை தெய்வாதீனமாக நிகழ்கின்றன. மனிதன் தனக்குத்தானே உற்றார் உறவினர்களை அமைத்துக் கொள்ள முடியாது. தெய்வாதீனமாக அமைந்துள்ள சுற்றத்தினரோடு ஒட்டி உறவாட அவன் கடமைப்பட்டிருக்கிறான். அவ்வாறு உயிர்களனைத்துக்கும் இயற்கையாக அமைந்துள்ள சூழ்நிலைகளை முறையாகப் பயன்படுத்தும்படி இயற்கை தூண்டுகிறது. அன்னை பராசக்தி வகுத்து வைத்துள்ள வாழ்க்கை முறையினின்று பிசகுவது அதர்மம். அவ்வாறு பிசகும்பொழுதெல்லாம் உயிர்வகைகள் துன்பத்திற்காளாகி நல்வாழ்வில் தூண்டப்பெறுகின்றன. அம்பிகையின் ஆட்சிமுறைக்கு உட்பட்டு உயிர்களனைத்தும் படிப்படியாக மேல்நிலை எய்தி வருகின்றன.

ஞானிகளுடைய உள்ளத்தில் உதிக்கின்ற இச்சைகளும் அன்னை பராசக்தியின் பிரபஞ்சப் பெரும் திட்டமும் ஒன்றைபொன்று ஒத்திருக்கின்றன. ஏனென்றால் அகங்காரமும் மமகார

மும் அறவே ஒதுக்கப்பட்டுள்ள அவர்களின் உள்ளத்தில் அம்பிகையின் அருள் ஒன்றே இலங்கிக்கொண்டிருக்கின்றது. அம்பிகையின் திட்டம் எதுவோ அதுமட்டுமே ஞானியர்களுடைய உள்ளத்தில் உருவெடுக்கிறது. அம்பிகையின் முறைபிறழாத பெருந்திட்டத்துக்கு உட்பட்டு வாழ்ந்து வருவது சிறந்த வழிபாடாகிறது.

**सर्वार्थदात्री** — ஸர்வார்த்த தாத்ரீ ௬௯௮

எல்லாவிதமான புருஷார்த்தங்களையும் நிறைவேற்றுபவள்.

தர்மம், அர்த்தம், காமம், மோட்சம் என்று உறுதிப் பொருள்களாகிய புருஷார்த்தங்கள் நான்கு உள்ளன. கட்டுகின்ற வீடு ஒன்றுக்கு அஸ்திவாரம் ஆதாரமாயிருப்பது போன்று ஏனைய மூன்று புருஷார்த்தங்களுக்கும் தர்மம் ஆதாரமாக இருக்கிறது. பிரபஞ்சம் முழுவதும் தர்ம சொரூபம். பஞ்சபூதங்களுக்கும் ஏற்ற தர்மங்கள் உள்ளன. மனிதனின் தர்மம் உயிர்களை ஓம்புதல். தரத்தில் மேலே போகப்போக மனிதனுடைய தர்மமும் உயர்ந்ததாகிறது. தர்மத்தினின்று மனிதன் பிசகலாகாது.

தர்மத்திற்கு முரண்படாத முறைகளைக் கையாண்டு பொருள் திரட்ட மனிதன் கடமைப்பட்டிருக்கிறான். அதை முறையாகப் பயன்படுத்தவும் அவன் கடமைப்பட்டுள்ளான். நல்வழியில் செல்வத்தைத் தேடி அதை நல்வழியில் செலவழித்துக்கொண்டிருப்பவன் வாழ்க்கைத் தத்துவத்தை அறிந்தவனாகிறான்.

இன்புற்றிருப்பது வாழ்க்கையின் குறிக்கோள். சிற்றுயிர்கள் வரம்புக்குட்பட்ட பாங்கில் இன்பத்தை அனுபவிக்கின்றன. இன்புறுதலில் வரம்புக்கு மீறிச் செல்லும் மனிதன் துன்பத்திற்காளாகிறான். அன்னை பராசக்தி அருள்கூர்ந்து வழங்கும் பக்தி என்னும் இன்பத்தை ஏற்கின்ற முறையை மனிதன் கற்றுக்கொள்ளவேண்டும். முறைமாறி இன்பத்தை நாடுகிறவன் அல்லற்பட்டே ஆகவேண்டும்.

பிறவிகள் பல எடுத்துப் பிரபஞ்ச வாழ்க்கையின் பாங்குகளையெல்லாம் உள்ளபடி அறிந்துகொள்கின்றவர்கள் மோக்ஷத்தை நாடுகிறார்கள். பரத்தினின்று பிரபஞ்ச வாழ்க்கைக்குக் கீழிறங்கி

வந்துள்ள ஜீவர்களின் யதார்த்த இருப்பிடம் பரவஸ்துவே. பிர பஞ்ச வாழ்வில் சலிப்புத் தட்டுகின்றபொழுது பண்பட்டுள்ள மனிதர்கள் விடுதலையை நாடுகிறார்கள். எல்லாப் படித்தரங்களி லும் உள்ள எல்லாவிதமான மக்களும் புருஷார்த்தங்கள் நான்கின் பொருட்டு அன்னையைச் சார்ந்திருக்கக் கடமைப்பட்டுள்ளனர். அம்பிகையும் கிருபை கூர்ந்து அவர்களுக்குத் தேவையாய் இருக் கின்ற புருஷார்த்தங்களை வழங்கி வருகின்றாள்.

**सावित्री — ஸாவித்ரீ** ६९९

ஸாவித்ரீ வடிவத்திலிருப்பவள்.

சவிதா என்னும் சொல் சிவனாரைக் குறிக்கிறது. அவர் சக்தி சொருபமாகக் கருதப்படும் பொழுது சாவித்ரீ என்னும் பெயர் அவருக்கு வாய்க்கிறது. பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கும் பர தேவதை என்று இச்சொல் பொருள்படுகின்றது.

சூரியனைக் குறிக்கும் சவித்ரு என்னும் சொல்லுக்குப் பெண் பால் சாவித்ரீ ஆகின்றது. சூரிய தேவதையாய் இலங்கும் அம்பிகை உயிர்களுக்கு வெளிச்சத்தையும் வெப்பத்தையும் கொடுத்து அவற்றை ஓம்பி வருகின்றாள். சூரிய ஒளி உயிர்களுக்கு எவ்வளவு இன்றியமையாதது என்று சொல்லாமலே விளங்கு கிறது. வெப்பமில்லாது போனால் உயிர்களனைத்தும் மடிந்து போம். இக்கோட்பாட்டை சாவித்திரி என்னும் சொல் விளக்கு கிறது.

**सच्चिदानन्दरूपिणी — ஸச்சிதானந்த ரூபிணீ** ७००

மெய்ப்பொருள் வடிவினளாய், அறிவு வடிவின ளாய், இன்பவடிவினளாய் இருப்பவள்.

மனிதன் உயிர்வாழ்ந்திருக்க உதவும் உணவுக்கு அமருதம் எனப் பெயர். சாவை ஒதுக்குதல் என்று அப்பதம் பொருள்படு கிறது. அழிந்துபட்டுப் போக எவ்வுயிரும் விரும்புவதில்லை. உணவை உண்டு செமித்து உடல் மயம் ஆக்குதற்கேற்ப மரணம் ஒதுக்கப்படுகிறது. உயிர்கள் யாவும் மரணமிலாப் பெருநிலை யைத் தத்தம் போக்கில் நாடுகின்றன. சதா நிலை மாறியமைந்து கொண்டிருப்பது பிரகிருதியின் பாங்காதலால் அதன் கூறுகிய

பழைய தேகத்தைக் களைந்து புதிய தேகத்தை உண்டுபண்ணிக் கொள்வதன் மூலம் உயிர்கள் யாவும் தம் ஸத் சொரூபத்தை நிலை நாட்டி வருகின்றன. அன்னை பராசக்தி அகிலமெங்கும் தன் மேனியைச் சதா புதுப்பித்துக் கொண்டிருப்பதன் வாயிலாகத் தன் ஸத் சொரூபத்தை நிலை நாட்டுகிறாள்.

உயிர்கள் யாவும் அறிவை வளர்க்க முயலுகின்றன. பருவத்துக்கேற்ற பிரகாரம் இடம் மாறிப்போவதன் வாயிலாகப் பறவைகள் தம் அறிவை வெளிப்படுத்துகின்றன. மானுட வர்க்கம் தன் அறிவை நன்கு பயன்படுத்தி வாழ்வில் முன்னேறி வருகிறது. ஆக, இத்தனை வித உயிர்வகைகளாக இலங்கும் அம்பிகை அறிவு மயமானவள் என்பது வெளியாகிறது.

துன்பத்தைத் தவிர்க்கவும் இன்பத்தை வளர்க்கவும் செய்வது எல்லா உயிர்களின் நோக்கமாக இருந்துவருகின்றது. இன்பத்துக்கு இடைஞ்சல் வருகிற இடத்து அந்த இடைஞ்சலை அவை நன்கு வெல்லுகின்றன. ஆனந்தத்தில் வைத்துள்ள பற்றுதலின் விளைவு அது. சிறப்பாக மனிதன் எது ஆனந்தத்தை நல்குகிறதோ அதைப் பற்றிப் பிடிக்கிறான். பிரபஞ்சத்தில் மிகைபடப் பற்றுதல் வைத்தால் அது துன்பமாக முடிவுறும் என்பதை மனிதன் நாளடைவில் அறிய வருகிறான். ஆகவே பிரபஞ்சத்தினின்று நிரந்தரமாகப் பேரின்பத்தைப் பெற மனிதன் முயலுகின்றான். வாய்த்த ஒவ்வோர் இன்பமும் படிப்படியாகக் கைநழுவிப் போய்விடுவதல்லாமல் அதுவே துன்பமாகவும் வடிவெடுத்திருப்பதை அவன் காண்கிறான். பஞ்சேந்திரியங்களின் மூலமாகப் பெறும் இன்பம் அதிவிரைவில் துன்பமாக மாறுகின்றது. கருவி கரணங்களையெல்லாம் ஒதுக்கி வைக்கின்ற இடத்து உதிக்கின்ற நிலையான இன்பம் அம்பிகையின் நிஜ சொரூபமாகிறது. சத்சித் ஆனந்த ரூபிணியாயுள்ள அம்பிகை தன் மகிமையைப் பிரபஞ்சத்தில் எல்லா உயிர்களின் வாயிலாகவும், எல்லாப் படித்தரங்களிலும் விளக்கி வருகின்றாள்.

**देशकालापरिच्छिन्ना—தேச கால அபரிச்சின்னா** ௭௦௧

தேசம், காலம ஆகியவைகளின் அளவைக்கு உட்படாதவள்.

பூமி, சூரியன் இரண்டுக்கும் இடையிலுள்ள தூரத்தைத் தேசம் அல்லது இடம் என்று இயம்புகிறோம். ஸ்தூலப்பொருள்கள் இல்லாதவிடத்து இடத்தை அளக்கமுடியாது. இரண்டு நிகழ்ச்சிகளுக்கு இடையிலுள்ள நேரம் காலம் எனப்படுகிறது. முந்நூற்று அறுபத்தைந்து நாட்களில் பூமி சூரியனை ஒருமுறை வட்டமிடுகிறது. நிகழ்ச்சியால் இங்ஙனம் காலம் அளக்கப்படுகிறது.

தேச, கால மயமாக இருப்பது பிரபஞ்சம். அம்பிகை இடத்திலோ காலத்திலோ அடங்கியவள் அல்லள். எனவே அவள் பிரபஞ்சத்துக்கு அப்பாற்பட்டவளாகின்றாள். இடத்திலும் காலத்திலும் அடங்கியிருப்பவைகள் அழிந்துபட்டுப்போகும் பாங்குடையவைகள். காலம் அவைகளை எடுத்து விழுங்குகிறது. அப்படி விழுங்கப்படுகின்றபொழுது ஸ்தூலப்பொருள்கள் தம் வடிவங்களை இழக்கின்றன. அற்புதமாகத் தென்படும் அண்டங்களனைத்தும் பிரளயத்தில் ஒடுங்கிப் போகின்றன. எனவே அவை அநித்தியமானவை. அம்பிகையோ வடிவத்தில் கட்டுண்டிருப்பவள் அல்லள். காலக்கிரமத்தில் மாறுபாடு அடைகின்றவள் அல்லள். ஆதலால் அவள் தேச கால அபரிச்சின்னா எனப் போற்றப் பெறுகிறாள்.

**सर्वगा — ஸர்வகா** ௭௦௨

நீக்கமற நிறைந்திருப்பவள்.

அகண்டமாக விரிந்து ஓடும் இடம் அம்பிகையின் சொருபத்தில் ஒடுங்கிப் போகிறது. தேசமயமாய் உள்ள பிரபஞ்சம் அவளிடத்தில் ஒடுங்கிப் போவதால் அவள் பிரபஞ்சத்துக்கு அப்பால் எங்கும் நிறைபொருளாய் இருக்கிறாள். தோன்றியிருப்பவைகள், தோன்றாதிருப்பவைகள் ஆகிய யாவும் அவளுடைய சான்னித்தியத்தில் ஒடுங்கிக்கிடக்கின்றன. இடத்தில் அம்பிகை கட்டுண்டிருப்பவள் அல்லள். கடவுள் என்னும் பரவஸ்து தோன்றியுள்ள யாவையும் கடந்திருக்கிறது. அவைகளுக்குள்ளும் நீக்கமற அது ஊடுருவிப் பாய்ந்துள்ளது. சாதகன் ஒருவன் பரம்பொருளாகிய அம்பிகையைத் தேடி அங்குமிங்கும் அலைவதில் பொருளில்லை. அவன் தானே அம்பிகையின் சொருபத்தில்

அடங்கப் பெற்றிருக்கிருன். தனக்கு உள்ளும் புறமும் வியாபக மாயிருக்கும் சர்வகா ஆகிய அம்பிகையின் சான்னித்தியத்தை உணர்வது நல்ல வழிபாடு ஆகிறது.

**सर्वमोहिनी** — ஸர்வ மோஹினீ ௭௦௩

அனைவரையும் மோகம் அடையச் செய்பவள்.

ஒரு பொருளை வேருெரு பொருளாகக் காண்பது மோகம். இருண்டு வருகிற நேரத்தில் சுருண்டு கிடக்கிற கயிற்றைப் பாம் பாகப் பொருள்படுத்துவது மோகத்துக்குச் சான்ருகிறது. யாண் டும் உள்ளபடி இருக்கும் பரவஸ்துவைப் பிரபஞ்ச சம்பந்தமான பலப்பல பொருள்களாகப் பொருள்படுத்துவது மோகம். அநித் தியமான பிரபஞ்ச வாழ்வை நித்தியமானதென்றும் அதினின்று வருகின்ற இன்ப துன்பங்களை மெய்யானவைகளென்றும் மோகத் தில் கட்டுண்டிருப்பவர்கள் கருதுகின்றனர். ஜீவகோடிகளனைத் தையும் அவ்வாறு மோகத்தில் மயங்கியிருக்கச் செய்தல் மோஹினியாகிய அம்பிகையின் விளையாட்டு. எண்ணிறந்த பிறவிகளைக் கடந்து மேல் நிலைக்கு வருகின்ற ஜீவாத்மன் ஒரு பிறவியில் தனக்கு வாய்த்திருக்கின்ற உற்ருர் உறவினர்களை யாண்டும் தனக்குச் சொந்தமானவர்கள் என்று மயங்கியிருப்பது மோகம் ஆகும். உறங்குகின்ற வேளையில் அபேதத்தில் லயமா யிருக்கின்ற மாந்தர் ஜாக்ரதாவஸ்தையில் பிறப்பில் உயர்ந்தவர், தாழ்ந்தவர் எனப்பாகுபடுத்துவது மோகம். மெய்ப்பொருளாகிய பரவஸ்துவை மறந்து பொய்ப்பொருள்களை அல்லும் பகலும் ஜீவர் கள் தேடி அலைந்துகொண்டிருக்கின்றனர். அப்படித் தேடிப்பெறும் பொருள்கள் எல்லாம் பயனற்றவையாகவும் நிலையற்றவையாக வும் இருப்பதை ஜீவாத்மன் காண்கின்ருன். அகப்படுகின்ற ஒவ்வொரு பொருளையும் அவன் வேண்டாம் என்று ஒதுக்கித் தள்ளுகிருன். விவேகம் வாய்க்கப்பெற்ற சில ஜீவாத்மாக்கள் இந்த மோகத்தினின்று தங்களை விடுவிக்கவேண்டுமென்று அம்பிகையிடம் பிரார்த்தனை பண்ணுகிருர்கள். அப்படிப் பிரார்த்தனை பண்ணும் பரியந்தம் அவர்களை மோகத்திலேயே அம்பிகை ஆழ்த்தி வைத்திருக்கிருள். கடைசியில் அவர்களை மோகத்தினின்று விடுவிப்பவளும் அவளே. இத்தகைய மோகன

சக்திக்கு இருப்பிடமாக அம்பிகை இருப்பதால் அவள் ஸர்வ மோகினீ என ஆராதிக்கப்படுகிறாள்.

**सरस्वती — ஸரஸ்வதீ** ௭௦௪

கலைமகளாக இலங்குபவள்.

மோகத்தில் மயங்கிக் கிடக்கும் ஜீவாத்மாக்கள் படிப்படியாகப் பண்பாடு அடைந்து மேல் நிலைக்கு வர உற்ற உபாயங்களாகவும் அம்பிகை அமைந்திருக்கிறாள். கலைகளை வளர்ப்பதன் வாயிலாகப் பிரபஞ்சத்தில் கட்டுண்டிருக்கின்ற ஜீவர்கள் படிப்படியாக மேல் நிலைக்கு வருகிறார்கள். கலைகளின் துணைகொண்டு மாயப் பிரபஞ்சத்தின் மகிமைகள் நன்கு அறியப்படுகின்றன. அவ்வாறு கலைகளை வளர்த்து வருவதன் மூலம் பிரபஞ்ச அதீதத்துக்கு மானுடன் செல்கிறான்.

மேலாம் இயல்புகளையும் உணர்வுகளையும் ஊட்டவல்லவைகளாகக் காவியம், ஓவியம், ஆடல், பாடல் ஆகிய லலித கலைகள் இருக்கின்றன. நாணல் குழல் ஒன்றின் மூலம் கண்ணன் கிளப்பிய ஓசையின் மகிமையைக்கொண்டு அவன் உயிர்வகைகளை அபேத நிலைக்கு எடுத்துச் சென்றான். இவ்வுலக வாழ்க்கையை இனிதாக்குவதற்கும் அதற்கப்பால் செல்வதற்கும் கலை பயன்படுகிறது என்பதை அவன் நிரூபித்தான். கலைக் களஞ்சியமாக உள்ள சரஸ்வதி ஸதா கற்றுக்கொண்டே இருக்கின்றாள். மேன்மையடைய முயலும் ஜீவாத்மாக்களுக்கு அவள் முன்மாதிரியாக இலங்குகின்றாள். கலைகளை வளர்ப்பதற்கேற்பப் பிரபஞ்ச வாழ்வு மேன்மையுறுவதாகிறது. சரஸ்வதியை வழுத்துதற்கேற்ப வாக்குத் தெளிவு உண்டாகிறது. கலைமகளிடம் உள்ள கலைகள் யாவும் ஜீவாத்மாக்களின் உள்ளத்தில் புதைந்து கிடக்கின்றன. அவற்றைத் தோற்றத்துக்குக்கொண்டு வருவதே சரஸ்வதி உபாசனையாகிறது. அதன் மூலம் சாதகர்கள் பிரபஞ்ச அதீதத்திற்குச் செல்வது சாத்தியமாகின்றது.

**शास्त्रमयी — சாஸ்த்ரமயீ** ௭௦௫

சாஸ்திரங்கள் அல்லது நூல்களாக வடிவெடுத்திருப்பவள்.

வெவ்வேறு சமயங்களுக்குரிய கொள்கைளும் கோட்பாடு களும் சாஸ்திரங்கள் எனப்படுகின்றன. இறைவனல் இயற்றப் பட்டுள்ள சாஸ்திரம் இயற்கை. எந்த நூல்களெல்லாம் இயற் கையின் நடைமுறைக்கு ஒத்திருக்கின்றனவோ அவை யாவும் மெய் நூல்களாகின்றன. இயற்கையை முறையாக ஆராய ஆராய அதன் உட்பொருள் விளங்குகிறது. எழுதி வைக்கப்பட்டுள்ள சாஸ்திரங்களை ஆராய்வதன் வாயிலாகவும், இயற்கையெனும் சாஸ்திரத்தை ஆராய்வதன் வாயிலாகவும் நாம் அறிவை வளர்க் கிறோம். நம் பகுத்தறிவைப் பயன்படுத்தி இயற்கையோடு முரண்படுகின்ற சாஸ்திரப் பகுதிகளை ஒதுக்குதல் வேண்டும். இயற்கையே முடிந்த பிரமாணமாக அமைகிறது. மனிதனுடைய மனதில் எழுகின்ற எழுச்சிகள் அகம் என்றும், பிரபஞ்சத்தின் அமைப்புகள் யாவும் புறம் என்றும் கூறப்படுகின்றன. இவ் விரண்டு கூறுகளும் சேர்ந்து இயற்கையாகின்றன. அகம் எப்படி அமைந்துள்ளதோ அப்படியே புறம் புலப்படுகின்றது என்பது ஆன்றோர் அனுபவம். புறத்தை முற்றிலும் செப்பனிட முடியாது. அகத்தைச் செப்பனிடுவது மனிதனுக்கு மிக எளிது. சாஸ்திரங் களின் வாயிலாக அகத்தைத் திருத்தியமைக்கலாம். அச்செய லுக்கு அம்பிகை ஸதா அனுக்ரஹம் செய்துகொண்டிருக்கிறாள்.

சாஸ்திரங்களை ஆராய்கின்றவர்கள் மெய்ப்பொருளை ஆராய் கின்றவர்களாக அமைகின்றனர். அன்னவர்களுக்கு இயற்கைத் தாய் என்றைக்கும் வழிகாட்டியாக அமைந்திருக்கிறாள். அவ ளுடைய அனுக்ரஹத்தைச் சார்ந்திருந்து சாஸ்திர ஆராய்ச்சி பண்ணுகின்றவர்கள் மெய்ஞ்ஞானிகள் ஆகின்றார்கள். ஆகையி னல் சாஸ்த்ரமயீ என்று அன்னை பராசக்தி போற்றப்பெறுவது முற்றிலும் பொருத்தமானது.

**गुहाम्बा — குகாம்பா ௭௦௬**

முருகனுடைய தாயாக இலங்குபவள்.

மனிதனுடைய இருதயமாகிய குஹையின்கண் வசிப்பவள் என்று இந்நாமம் பொருள்படுகிறது. அம்பிகையைப் போற்று தற்கு மனிதன் வேறு எங்கும் தேடி அலையவேண்டிய அவசிய மில்லை. ஜீவர்கள் எல்லாருடைய உள்ளங்களிலும் அம்பிகை வீற்றிருக்கின்றாள். 'என் உள்ளம் கவர் கள்வன்' என்பது ஞான

சம்பந்தர் வாக்கு. அன்னையின் இருப்பிடமாகத் தன் உள்ளத்தை அறியவருகிற ஆத்மசாதகன் பாக்கியவானுகிருன். தன்னுடைய உடலமைப்பையே அம்பிகையின் ஆலயமாகக் கருதும் உணர்வி னின்று தெய்விகமனைத்தும் உருவெடுப்பது திண்ணம்.

மலையில் உள்ள குகையில் புற உலகின் சந்தடி ஏதும் இல்லை. அத்தகைய பொருத்தமான புறவுலகச் சூழ்நிலையில் புரியும் சாதனங்கள் ஆத்மசாதகனை விரைவில் முன்னேற்றமடையச் செய்கின்றன.

## गुह्यरूपिणी — குஹ்யரூபிணீ ௭0௭

விளங்காத வடிவத்திலிருப்பவள்.

சாதாரண அறிவுக்கு எட்டாததாக இருப்பது குஹ்யம் ஆகிறது. நீரானது கட்புலனாகாத ஆவி வடிவத்தில் இருக்கின்ற பொழுது அதன் அமைப்பு குஹ்யமானது. நுகர்ச்சிக்கு எட்டாத ஒன்று குஹ்ய ரூபத்திலிருக்கிறது. கடலின் மேற்பரப்பு அலை வடிவெடுத்து உருண்டோடுகிறது. அதன் அடிப்பகுதியோ அசைவற்றிருக்கிறது. அது கட்புலனாகாத குஹ்யநிலையில் இருக்கிறது என்லாம். அம்பாளுடைய சைதன்ய சொரூபம் அதற்கு நிகரானது. ஞானம் வாய்க்கப் பெருதவர்களுக்கு அது குஹ்யம். தோற்றத்துக்கு வந்துள்ள அதன் பகுதி மிக மிகச் சிறியதாகவும் தோற்றத்துக்கு வராது குஹ்யமாக அமைந்துள்ள சுத்த சைதன்ய சொரூபம் அளப்பரியதாகவும் உள்ளன. இதுவே குஹ்யரூபிணீ என்னும் நாமத்தின் உட்பொருளாம்.

## सर्वोपाधिविनिर्मुक्ता — ஸர்வ உபாதி வினிர்முக்தா ௭0௮

எல்லாவிதமான உபாதிகளினின்றும் விலகியிருப்பவள்.

ஆவியாக உள்ள ஜலத்திற்கு உபாதி ஏதும் இல்லாததால் அதை விளக்க முடியாது. உறைபனி, மூடுபனி போன்ற அதன் வடிவங்களெல்லாம் அதற்குரிய உபாதிகள் ஆகின்றன. மழை நீர், ஆற்றுநீர், குளத்துநீர் என்றும் அது பல உபாதிகளை எடுக்கிறது. பிரபஞ்சத்திலுள்ள அனைத்துமாகக் தன்னைத் தோற்றுவித்துக் கொண்டிருப்பது அம்பிகைக்குரிய உபாதியாகும். அசேதனப் பொருள்களாகவும் சேதனப் பொருள்களாகவும் அவள்

பரிணமித்திருக்கின்ருள். சிற்றுயிர்கள் உபாதி வேற்றுமையை முன்னிட்டுப் பேருயிர்களாக வடிவெடுக்கின்றன.

எத்தனைகோடி ஜீவர்கள் உள்ளனரோ அத்தனை கோடி மனப்பான்மைகள் உள்ளன. அவை யாவும் மனதினுடைய உபாதிகள் எனப்படுகின்றன. பரிணமத்தில் மகோன்னத நிலைக்கு வந்துள்ள மானுடன் சில உபாதிகளிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள முடிவதில்லை. அந்த உபாதிகள் தனக்கு இருப்பது முற்றிலும் அவசியம் என அவன் மயக்கம் கொண்டிருக்கிருன். தான் கற்றவன் என்றும் மேலான வருணத்தைச் சேர்ந்தவன் என்றும் உபாதிகள் பல்வேறு விதமாக அமைந்துள்ளன. இவை யாவுக்கும் மேலாக தான் ஆத்ம சாதகன் என்னும் உபாதி மனிதனுக்கு வந்தமைகிறது. கங்காஜலம் என்னும் உபாதி மற்ற ஜலங்களுக்கெல்லாம் மேலானதாயினும் உபாதி என்கின்ற முறையில் அது இடைஞ்சலாகவே உள்ளது. இங்ஙனம் ஆத்மசாதகன் ஒருவன் வரவழைத்துக்கொண்டுள்ள மேலான உபாதியையும் கடந்து உபாதி ரகிதனுக வேண்டும். அப்பொழுதுதான் அவன் சுத்த சைதன்யத்தில் லயமாகத் தகுதி உடையவனுகின்ருன். அன்னை பராசக்தி தானே எல்லாவிதமான உபாதிகளினின்றும் விலகியவளாக இருந்துகொண்டு ஆத்மசாதகர்களைக் கிருபை கூர்ந்து அந்நிலைக்குக் கொண்டு வருகின்ருள்.

**सदाशिवपतिव्रता — ஸதாசிவபதிவ்ரதா ௭௦௯**

சதாசிவத்தின் வாழ்க்கைத் துணைவியாக இருப்பவள்.

உலக நிலையில் கற்பரசி ஒருத்தி சர்வகாலமும் தன் கணவனுக்குச் சேவை செய்வதையே வாழ்க்கை நெறியாகக் கொண்டு தன்னை அவனிடம் முற்றிலும் ஒப்படைக்கிருள். கணவனும் மனைவியும் வடிவத்தில் இருவரெனினும் அவர்களுக்கிடையே கருத்து வேறுபாடு இல்லை. அங்ஙனம் உள்ள அன்னவர்களின் பாங்குகளைச் சரியாக அறிந்துகொண்டால் பரமசிவனுக்கு எங்ஙனம் அன்னை பராசக்தி பதிவிரதை ஆகின்ருள் என்பது ஓரளவு புலனுகும். அம்பிகை இறைவனுடைய இயல்பிலே ஒன்றுபட்டவளாய் இருந்து கொண்டு இறைவனுடைய திட்டங்களை நிறைவேற்றுகின்ருள்.

பாரமார்த்திகத் தத்துவத்தின்படி பரப்பிரம்மமும் அதனிடத்து அமைந்துள்ள சக்தியும் அத்வைதமாய் இரண்டற்ற நிலையில் இலங்கிக்கொண்டிருக்கின்றன. சூரியன் வேறு, சூரியப்பிரகாசம் வேறு அல்ல. சதாசிவத்துக்கும், அன்னை பராசக்திக்கும் இடையில் உள்ள இணக்கம் அத்தகையதாம். சக்தியினின்று சிவத்தைப் பிரிக்க முயன்றால் சிவம் சவமாகப் போகிறது. சக்தி தேவியோ ஆதரவு ஏதும் அற்றவளாக வெறும் சூனியமாகப் போகின்றாள். சிவத்துக்குப் புறம்பாகச் சிவனுடைய மகிமைகளுக்கு இருப்பிடம் ஏதும் இல்லை. சிவத்திடமிருந்து சிவ மகிமைகளைப் பிரித்தெடுக்க முடியாது. சிவத்தையே சதா சார்ந்து இருப்பதால் அம்பிகை பேராதரவு வாய்க்கப்பெற்றவளாக இருக்கின்றாள். அம்பிகையின் அற்புதமான மகிமைகளை முன்னிட்டுச் சிவனார், சோபைகள் அனைத்தும் அமையப்பெற்றவராக இருக்கின்றார். மெய்ப்பொருளின் சொரூப தியானத்திற்கு ஏற்ப இந்நாமம் பொருள் பொதிந்ததாக விளங்குகிறது.

**सम्प्रदायेश्वरी — ஸம்ப்ரதாயேச்வரீ** ௭௰

சம்பிரதாயத்திற்கு ஈஸ்வரியாக இருப்பவள்.

மேலான கொள்கைளும் கோட்பாடுகளும், ஐதிகங்களும் குடும்ப தர்மங்களிலும் குரு சிஷ்ய சம்பிரதாயங்களிலும் சர்வகாலமும் காப்பாற்றி வரப்படுகின்றன. அவைகளை உறுதியாகக் கடைப்பிடிக்கும் அளவு சமுதாயம் மேன்மையுற்று மிளிர்கிறது. தகிக்கும் தன்மை தீயிடமிருந்து மறைந்து பட்டுப்போனால் அது தன் பெருமையை இழந்து விடுகின்றது. உயிர்வகைகளுக்கும் ஏற்ற வாழ்க்கை முறைகள் இருக்கின்றன. மனிதனுடைய புண்புக்கும், ஸ்தானத்துக்கும் ஏற்றபடி சுதர்மங்கள் பல இருக்கின்றன. மக்கள் தத் தமக்குரிய சுதர்மத்தைக் காக்கக் கடமைப்பட்டிருக்கின்றனர். மனிதன் பண்பாட்டில் மேல்நிலைக்கு வர வர அவனுடைய சுதர்மமும் மேலானதாகிறது. தன் சுதர்மத்தில் இருந்து பிசகுவதற்கு ஏற்ப மனிதன் கீழ்நிலை எய்துகிறான். அன்னைபராசக்தி மானுட சமுதாயங்களின் சம்பிரதாயங்களை எல்லாம் இனிது காத்து வருகின்றாள். தர்மத்தினின்று பிசகும் சமுதாயங்கள்காலக்கிரமத்தில் அழிந்துபட்டுப் போகின்றன. தகுதியற்ற எதையும் அம்பிகை மேல்நிலையில் வைப்பதில்லை. தான் படைத்

துள்ள தகுதிக்கு ஏற்ற ஸ்தானத்தை மனிதன் பெறுகிறான். பண்பாட்டுக்கு ஏற்ற ஸ்தானம் என்னும் சம்பிரதாயத்தினின்று யாரும் தப்பித்துக்கொள்ள முடியாது. ஈஸ்வரியின் ஆதிக்கத்தை இது நன்கு விளக்குகிறது. அன்னை பராசக்தி அந்தந்த உயிர்களுக்குரிய ஸ்தானங்களில் அவைகளை வைத்து நெறி பிறழாமல் ஆட்சி புரிவதால் அவள் சம்பிரதாயேச்வரீ என்று இயம்பப்படுகிறாள்.

**साधु — ஸாது** ७११

பொருத்தமான பாங்குடையவள். 711

எங்கெந்தப் பொருள் எத்தகைய தன்மை வாய்ந்துள்ளதோ அதை அவள் உள்ளபடி விளக்குகின்றாள். ஒன்றுக்கும் உதவாது பூமியில் ஆங்காங்கு கிடக்கும் கட்டிகளும் கல் எனப்படுகின்றன. மரகதம் போன்ற ரத்தினமும் கல் எனப்படுகிறது. அதனதன் பாங்கை ஒவ்வொன்றும் தானே காத்து வருகின்றது. வேறு எந்த வியாக்கியானமும் எந்தப் பொருளுக்கும் தர வேண்டிய அவசியம் இல்லை. அன்னை பராசக்தி இயற்கையில் யாவுமாய் இருந்து அதனதன் பாங்கை அப்படியப்படியே அற்புதமாக விளக்கி வருகிறாள் என்பது இந்நாமத்தின் கருத்து.

**ई — ஈ** ७१२

ஈ என்னும் எழுத்து வடிவினள். 712

ஈ என்னும் எழுத்து சக்தி சொருபத்துக்கு இருப்பிடமாயுள்ளது. இந்த எழுத்து துரியத்தைக் குறிக்கிறது. நனவு, கனவு, உறக்கம் ஆகிய அவஸ்தைகள் மாறி மாறி அமையும் தன்மையுடையனவாய் இருக்கின்றன. அத்தகைய மாறுபாடு துரியத்தில் இல்லை. துரியம் என்னும் சொல் மெய்ப்பொருளாகிய பரப்பிரம்மத்தைக் குறிக்கிறது. ஈ என்னும் உயிரெழுத்து இக்கோட்பாட்டை விளக்குகின்றது.

அம்பிகை தானே அகிலாண்டமெங்கும் தர்மமாக இலங்குகின்றாள் என்பதையும் இவ்வெழுத்து சுட்டிக் காட்டுகிறது. காமம் என்பது மேல் நிலை, கீழ் நிலை ஆகிய இரண்டு நிலைகளிலும் உள்ள ஆசையைக் குறிக்கிறது. காமம் என்னும் நெறி உயிர் வகைகளை உயர்நிலைக்குத் தூண்டுகிற சக்தியாம். மேல் நிலையை

அடையவேண்டும் என்று உயிர்கள் கொள்ளும் விருப்பமே காமம் எனப்படுகின்றது. வீடுபேறு அல்லது முக்தி அடையும்வரையில் எந்த உயிரும் இடைவழியில் திருப்தியுற்று நிற்பதில்லை. ஸ்தாவர ஜங்கமங்களாக இலங்குகின்ற உயிர்கள் யாவும் மேல்நிலை அடையவே முயன்று வருகின்றன. தான் எய்தியுள்ள நிலைக்கு அடுத்த படியிலிருக்கும் மேல்நிலையை எட்டினால் தனக்குப் பரம திருப்தி உண்டாகும் என்று மானுடன் ஒருவன் மனக்கோட்டை கட்டுகிறான். ஆனால் அந்நிலைக்கு வந்த பிறகு தனக்கு அது போதவில்லை என்று அறிய வருகிறான். 'ஆசைக்கு ஓர் அளவில்லை' என்னும் கோட்பாடு இதனால் தான் வந்துள்ளது. ஆசைகளில் உச்சநிலையில் இருப்பது அருள் தாகம். அருள்தாகம் கொண்டிருப்பவன் இந்த ஜன்மத்திலேயே மோட்ச சாம்ராஜ்யத்தைப் பெறுவான். இத்தகைய ஆசையை அதிகப்படுத்த வேண்டும் என்று அம்பிகையிடம் பிரார்த்திக்க வேண்டும். ஈ என்னும் ஓசையில் இக்கோட்பாடு அடங்கியுள்ளது.

**गुरुमण्डलरूपिणी — குருமண்டலரூபிணீ** ७१३

வாழையடி வாழையாக வந்துள்ள குருமார்களின் வடிவத்தில் இருப்பவள். 713

சிவபெருமானிடமிருந்து அனுக்ரஹம் பெற்ற நந்தீஸ்வரன் முதல் முடிவில்லாது குரு சிஷ்ய பரம்பரை எக்காலத்திலும் வந்து கொண்டிருப்பதாக ஐதிகம். உயிர்த் தத்துவம் ஓர் உயிரினின்று இன்னோர் உயிராக உத்பவிப்பதற்கு நிகராகச் சர்வகாலமும் ஆத்ம போதம் குரு சிஷ்ய பரம்பரையிலேயே நிகழ்ந்து வருகின்றது. எரிகிற தீபத்திலிருந்து மற்றொரு தீபத்தை ஏற்றுவதற்கு ஒப்பாக இதைச் சொல்லலாம். அம்பிகையினுடைய அனுக்ரஹத்தால் இந்தத் தொடர்பு யாண்டும் காப்பாற்றப்பட்டு வருகிறது.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் ஆத்ம சைதன்யத்தை அன்னை பராசக்தி தன் உள்ளத்தினுள்ளிருந்து தானே அனுக்ரஹம் பண்ண வேண்டும் என்று பிரார்த்தித்தார். அவ்வாறே அம்பிகையும் அவருக்கு அருள் வழங்கினாள். அதன் பிறகு பல சம்பிரதாயங்களைச் சேர்ந்த ஞான குருமார்கள் தத்தம் சம்பிரதாயத்துக்குரிய

மார்க்கங்களை அவருக்குக் காட்டியருளினர். அவை யாவும் தாம் அம்பிகையிடமிருந்து பெற்ற அனுபூதியின்கண் கொண்டு சேர்த்ததை அறிய வந்தார் ஸ்ரீ ராமகிருஷ்ணர். ஆர்வத்தோடு அம்பிகையை நாடும் ஆத்ம சாதகர்களுக்கு அம்பிகையின் அனுக்ரஹம் தங்கு தடையின்றி வந்தமைகிறது. மூர்த்திகளை முகாமையாக வைத்துக்கொண்டோ பரிபாகமடைந்துள்ள சாதகனின் மனதின் வாயிலாகவோ ஞானத்தை நல்குவது அவளுடைய பாங்காகும். ஏட்டுக் கல்வி இதற்கு உதவ மாட்டாது. யாண்டும் இது குரு சிஷ்ய இணக்கத்தாலேயே நிறைவேறி வருகிறது.

**कुलोत्तीर्णा — குலோத்தீர்ணு** ௭௧௪

குலத்துக்கு அப்பால் இருப்பவள். 714

மனம் முதலிய அந்தக்கரணங்களும் சுவை முதலிய புறக்கரணங்களும் குலம் என்னும் பதத்துக்குப் பொருளாகின்றன. பிரபஞ்சத்தைப் பொருள்படுத்த உதவும் அவை ஆத்ம சைதன்யத்தைக் கிரஹிக்க உதவமாட்டா. சைதன்யமாக உள்ள அம்பிகை கருவிகரணங்களுக்கு அப்பாற்பட்டவள்.

அந்தக் கருவிகரணங்களை நியாசம் பண்ணினல் சொரூப தியானத்துக்கு அவை ஓரளவு உதவுகின்றன. ஐம்பொறிகளையும் அம்பிகை வழிபாட்டுக்கென்றே பயன்படுத்தினல் அவற்றின் செயல்கள் மேன்மையுறுகின்றன. காண்பதையெல்லாம் கடவுள் மயமாகக் கருதுதல் நியாசம். அம்பிகையின் ஆராதனைக்கே பயன் படுத்தப்படும் அந்தக்கரணங்கள் தெளிவுறுகின்றன. சுத்தியடைந்துவரும் அவையெல்லாம் ஓய்ந்துபோன பிறகு அம்பிகையின் சான்னித்தியமே எஞ்சி நிற்கிறது. 'கருவி கரணங்கள் ஓய்ந்த தொண்டர்களிடத்தோ நீ வீற்றிருப்பது' என்னும் ஆப்த வாக்கியத்திற்கொப்ப கருவி கரணங்களுக்கு எட்டாது அப்பாற்பட்டவளாக இலங்கும் அம்பிகை குலோத்தீர்ணு என்று போற்றப் பெறுவது பொருத்தமானது.

**भगाराध्या — பகாராத்யா** ௭௧௫

சூரியமண்டலத்தில் ஆராதிக்கப்படுபவள். 715

பகா என்றால் தோற்றுவிப்பவள் என்று பொருள். எனவேதான் ஸவித்ரு பகவதி சாவித்திரி என்னும் பெயர் பெறுகிறுள்.

சூரியமண்டலம் உலகமனைத்தையும் தோற்றத்துக்குக் கொண்டு வருகிறது. வெளிச்சம், வெப்பம் ஆகியவற்றால் உலகம் முழுவதற்கும் அது உயிரூட்டுகிறது. யாண்டும் இருந்தபடி இருக்கும் சூரிய தேவதை பரப்பிரம்மத்தின் பிரத்தியக்ஷ சொரூபமாகிறாள். அத்தகைய பேராற்றலும் பேரொளியும் வாய்க்கப்பெற்றுள்ள தேவியை அந்தக்கரணத்தில் ஆவாஹனம் பண்ணி ஆராதிப்பது நல்ல வழிபாடாகிறது. அந்தக்கரணத்தில் பிறர் அறியாது நடைபெறுவதால் அது ரகசியமான வழிபாடாகின்றது.

சிவசக்தியின் கூட்டுறவால் தோற்றத்துக்கு வந்துள்ள ஜகத்தும், தோற்றத்துக்கு அப்பாலுள்ள பரநிலையும் குறிக்கப்படுகின்றன. அம்பிகை வழிபாட்டில் அவளுடைய தோற்றநிலை, தோன்றா நிலை ஆகிய யாவும் அடங்கியுள்ளன. பக ஆராத்யத்தில் இத்தனை கோட்பாடுகளும் இடம்பெற்றுள்ளன.

**माया — மாயா** ௭௧௬

மாயையின் வடிவினளாய் இருப்பவள். 716

வெளிப்படையாய்த் தோற்றத்திலிருப்பதை மறைத்துவைக்கும் பாங்குடையவள் மாயா சக்தி. மாயமானாக வடிவெடுத்து வந்த மாரீசனைப் பார்த்துச் சீதையும் ஸ்ரீராமனும் மயங்கிப்போயினர். இலட்சுமணன் எச்சரிக்கை செய்த பிறகும் அவ்வடிவத்தை அவர்கள் மான் என்றே பொருள்படுத்தினார்கள். எவ்வளவு விவேகம் படைத்திருக்கும் மானுடனும் மாயைக்கு அடிமைப்படுகிறான் என்பது இதனால் தெளிவாகிறது.

சொப்பனாவஸ்தையில் இல்லாததை யெல்லாம் தன் மனப் பான்மைக்கேற்றபடி இருப்பதாகக் கற்பித்துக் கொள்ளும் மாயைக்கு மானுடன் ஒவ்வொருவனும் ஆட்படுகிறான். ஒரு கணப்பொழுதுக்கு முன்பு இருந்து ஒரு கணப்பொழுதுக்குப் பின்பு இல்லாமல் போவது மாயை. ஓயாது வடிவம் மாறியமைந்துகொண்டிருப்பதால் இப்பிரபஞ்சம் மாயை எனப்படுகிறது. பிறந்தது முதற்கொண்டு க்ஷணந்தோறும் பூதங்களின் போக்குவரவை முன்னிட்டு நம் உடலும் சதா மாறியமைந்து கொண்டிருக்கிறது. ஆயினும் மாயாகாரியமாகிய அதைச் சதம்

என எண்ணி அதில் நம்பிக்கை வைப்பது மாயையின் விளையாட்டாம்.

மாயா தேவியாய் இலங்குகின்ற அம்பிகையின் துணை கொண்டே நாம் நம்மை மாயையின் மயக்கத்தினின்று விடுவித்துக் கொள்ளவேண்டும்.

**मधुमती — மதுமதீ** ௭௧௭

தேனோடு கலந்திருப்பவள். 717

சத்து நிறைந்த மேலான உணவு வகைகளுள் சிறந்ததாகிய தேன் உடலுக்கும் உள்ளத்துக்கும் பிராணனுக்கும் பெரிதும் பயன்படுகிறது. அதில் எப்பகுதியும் மலமாகக் கழிக்கப்படுவதில்லை. அத்தகைய மது மயமாயிருப்பவள் அம்பிகை. பரா வித்தைக்கு மதுவித்தை என்னும் பெயரும் அமைந்துள்ளது. மது என்னும் சொல் பரம்பொருளாகிய பிரமத்தையே குறிக்கின்றது. இகம், பரம் ஆகிய இரண்டிலும் மேன்மையளிப்பவள் அன்னை பராசக்தி. இகத்துக்கு இன்றியமையாத சம்பத்துக்களையெல்லாம் அவள் பக்தர்களுக்குத் தாராளமாக வழங்குவதால் அவள் மது வடிவினள் எனப்படுகிறாள். ஜீவர்களின் முடிவான குறிக்கோளாகிய பரம்பொருளை அடைவதில் இனிமையும் மகிமையும் சேர்ந்து அமைந்திருக்கின்றன. ஆதலால் அம்பிகை மதுமதீ என்று போற்றப்படுகின்றாள்.

**मही — மஹீ** ௭௧௮

பூமி வடிவத்தில் இருப்பவள். 718

இம்மையிலும் மறுமையிலும் அன்னை பராசக்திக்குப் புறம்பாக ஏதும் இல்லை. அவ்வனைத்தினுள் மிக ஸ்தூலமாயிருக்கும் பூமி ஜீவராசிகளனைத்துக்கும் இருப்பிடமாகின்றது. பூமியில் முக்கால் பங்காக இருக்கும் சமுத்திரங்களையெல்லாம் தாங்கிக் கொண்டிருப்பதும் பூமி. எனவே நீர்வாழ்வன அனைத்துக்கும் நிலவுலகமே இருப்பிடமாகின்றது. வானத்தில் சஞ்சரிக்கும் பறவையினங்கள் யாவும் ஓய்வு எடுத்துக்கொள்ளும் பொருட்டு நிலத்தில் வந்து தங்குகின்றன. அன்னை பராசக்தியே பூமியாகப் பரிணமித்து உயிர்வகைகளை ஓம்பி வருகின்றாள்.

விதவிதமான பாங்குகளில் தன்னை வெட்டிப் பாழ்படுத்து கின்றவர்களையெல்லாம் பிரதி தீங்கேதுவும் செய்யாது பூமித்தாய் பொறுத்துக்கொண்டிருக்கின்றாள். தன்னிடத்து வாழ்ந்துகொண் டிருக்கும் உயிர்வகைகள் யாவுக்கும் அவள் நலனையே வழங்கி வருகின்றாள். ஜீவர்களுக்கு யாண்டும் நலனே செய்து வருவது அம்பிகையின் இயல்பாம்

பரத்தை அடைவதற்கான சாதனங்கள் பூலோக வாழ்வில் நடைபெற்று வருகின்றன. மேலாம் நிலை உயிர்களுக்கு இப்பூமி யில் அமைவதால் இது புண்ணிய பூமியாகின்றது. பூமி வடிவி லிருக்கும் இயற்கைத்தாய் ஜீவர்களைப்பரமாத்மாவோடு கொண்டு சேர்க்கின்றாள். இத்தகைய நலன்களையெல்லாம் பூமி வடிவி லிருந்து அன்னை பராசக்தி உயிர்களுக்குச் செய்துவருகின்றாள்.

**गणाम्बा — கணாம்பா** ७१९

கணங்களுக்குத் தாயார். **719**

சிவனாரின் கணங்கள் பக்தியின் விளைவாகப் பித்தர்கள் போன்றும், பேயர்கள் போன்றும், பாலர்கள் போன்றும் இருக்கிறார்கள். ஆற்றல் மிகப்படைத்த அன்னவர்களுக்கு வீர பத்திரன் தலையானவனாக இருக்கிறான். இவர்களனைவருக்கும் சிவனார் தந்தையாய் இருப்பது போன்று அம்பிகை தாயாய் இருந்து அவர்களைச் சிவ சேவையிலும், சிவ பக்தியிலும், சிவ ஞானத்திலும் ஈடுபடுத்துகிறாள். கருணாகர முகம்கொண்டு அம் பிகை அவர்களை யெல்லாம் பேணி வருகின்றாள்.

இந்தக் கணங்களுக்கெல்லாம் தலைவனாகிய கணபதிக்கு அம் பிகை தாயாயிருப்பதால் அவளுக்குக் கணாம்பா என்னும் பெயர் வந்துள்ளது. நல்வழியில் செல்பவர்களுக்கு உதவிபுரிவதும் வழி பிறழ்ந்து போகின்றவர்களுக்கு முட்டுக்கட்டை போடுவதும் கண பதியின் கடமை. ஆதலால் அவன் விக்னேஸ்வரன் ஆகிறான். எதற்குத் தடைபோடுவது, எதற்குத் தடையை நீக்குவது என் னும் கோட்பாடுகளை யெல்லாம் தன் தாயாரிடமிருந்து அவன் கற் றுக்கொள்கிறான். அவனை முறையாகப் பேணுவதன் வாயிலாகப் பிரபஞ்சத்தின் நடைமுறையையே அம்பிகை ஒழுங்குப்பாட்டில் வைத்திருக்கிறாள். ஆதலால் அவள் கணாம்பா என்று போற்றப் பெறுகிறாள்.

**गुह्यकाराध्या — குஹ்யகாராத்யா** ௭௨௦

குஹ்யக்காரர்களின் ஆசைகளையெல்லாம் நிறைவேற்றி வைப்பவள். 720

தேவகணங்களில் குஹ்யக்காரர்கள் எனப்படுபவர்கள் தங்களை விளம்பரம் பண்ணிக்கொள்ளாது யாண்டும் பின்னணியிலேயே இருக்கின்றனர். குபேரனுடைய பணிவிடைக்காரர்களுக்கும் இப்பெயர் வந்தமைந்துள்ளது. இந்தக் குஹ்யகணங்களின் பிரதிநிதிகளாகப் பணம் திரட்டும் கூட்டத்தார் உலகில் இருக்கின்றனர். தங்கள் செல்வம் மேன்மேலும் பெருகவேண்டும் என்று அவர்கள் அம்பிகையிடம் பிரார்த்தனை பண்ணுகின்றனர். தங்கள் சேமிப்பை அவர்கள் யாண்டும் ரகசியமாகவே வைத்திருப்பார்கள். வாழ்க்கையில் யார் எதைக் குறிக்கோளாகக் கொண்டிருக்கிறார்களோ அதை அவர்களுக்கு அம்பிகை ஆதரவுடன் நல்கி உதவுகிறாள். எங்தெந்த உயிர் எத்தகைய முறையைக் கையாண்டு ஆத்மபரிபாகம் அடைய வேண்டுமோ அந்தந்த முறைகளுக்கெல்லாம் அன்னை உதவிபுரிகின்றாள். பொருள் ஈட்டுதலிலேயே கண்ணும் கருத்துமாயுள்ள ஜீவகோடிகளின் ஆசையும் நிறைவேறப் பெறவேண்டும். அது பொருளற்ற ஆசை என்னும் விவேகம் ஒரு காலத்தில் அவர்களுக்கு வரும் வரையில் அம்பிகை அன்னவர்களின் ஆசையை நிறைவேற்றிக்கொண்டே இருக்கிறாள். ஆதலால் அவள் குஹ்யகாராத்யா என்னும் பெயர் பெற்றுள்ளாள்.

**कोमलाङ्गी — கோமளாங்கீ** ௭௨௧

மெல்லிய அவயவங்களை உடையவள். 721

சரீரத்தின் அவயவம் ஒவ்வொன்றும் மிருதுவாகவும், பிரீதிகரமானதாகவும், மங்களம் பொருந்தியதாகவும் அமைந்திருப்பது மேன்மைக்கு அறிகுறியாம். பிரபஞ்சத்தில் உள்ள யாவும் அன்னை பராசக்தியின் அவயவங்களாக அமைந்துள்ளன. அவற்றுள் கோமளமாக இருப்பவை வசீகரத்தை உண்டு பண்ணுகின்றன. பிரபஞ்சத்தில் இருப்பவைகளுள் கவர்ச்சிகரமானவைகள் பல இருக்கின்றன. அத்தகைய அமைப்பு ஆத்மசாதகனுக்கு மேலாம் போதத்தை ஊட்டுகிறது. கடவுள் சிந்தனையை வளர்ப்பதற்கு ஏதுவானவை யாவும் பிரீதிகரமானவையாகும். அவற்

றில் மனம் லயமாவது ஒருவகை அம்பிகை வழிபாடாகிறது. ஆதலால் அவளுக்குக் கோமளாங்கீ என்னும் நாமம் வந்துள்ளது.

**गुरुप्रिया** —குருப்ரியா ७२२

குருவுக்குப் பிரியமானவள். 722

அறிவிலும், ஆற்றலிலும், வயதிலும், தியாகத்திலும் மூத்த வன் குரு என்று மற்றவர்களால் ஆராதிக்கப்படுகின்ருன். அத்த கைய ஸ்தானத்தில் இருக்கும் சிவனுருக்குப் பிரியமானவள் அம்பிகை. தானும் பரமசிவனுரிடம் அதிகப்பிரியம் உள்ளவளாக அம்பிகை இருக்கின்ருள். பெரியவர்களுக்கெல்லாம் பெரியவரா யிருக்கும் மகாதேவனுக்கு நிகரான மூர்த்தி இல்லை. சக்தியின் சொரூபங்களில் மகாதேவிக்கு நிகரான மூர்த்தி இல்லை. பெரிய தைப் பெரியதே பாராட்டவல்லதாகிறது. போற்றுதற்குரிய பெரிய நிலையிலிருப்பது சிவசக்தி. இதை முன்னிட்டே அம்பி கைக்குக் குருப்ரியா என்னும் பெயர் வந்துள்ளது.

**स्वतन्त्रा** — ஸ்வதந்த்ரா ७२३

முற்றிலும் தன்னையே சார்ந்திருப்பவள். 723

புற உலகினின்று எத்தகைய ஏவலோ துணையோ அம்பி கைக்குத் தேவையில்லை பிரபஞ்சத்தை ஒழுங்காக நடத்துதல் என்னும் செயலை அவள் குறைபாடு ஏதுமில்லாது நிறைவேற்றி வருகிருள். 'ஏவா மக்கள் மூவா மருந்து' என்பது கோட்பாடு. செய்கின்ற ஒவ்வொரு சிறு செயலுக்கும் பிறருடைய ஆணை யையோ போதனையையோ எதிர்பார்த்திருப்பவர்கள் வாழ்க் கைக்கு உதவமாட்டார்கள். என்ன சூழ்நிலையில் எத்தகைய செயலைச் செய்ய வேண்டும் என்று யூகித்துப் பார்த்து முயற்சி யில் ஈடுபடுபவர்களுக்கு ஸ்வதந்த்ரம் தானுக வந்தமைகிறது.

வழிபாட்டு முறையை எங்ஙனம் கொண்டு செலுத்த வேண்டு மென்று பரமேஸ்வரன் பரமேஸ்வரிக்குப் புகட்டிய பகுதிக்கு ஆகமம் என்று பெயர். அம்பிகை ஈசனுருக்கு எடுத்துப் புகட்டிய பகுதிக்கு நிகமம் என்று பெயர். நிகமமும் ஆகமமும் ஒன்றுக் கொன்று நிகராக இருப்பதால் அம்பிகை ஸ்வதந்தரா என்று போற்றப்பெறுகிருள்.

அம்பிகையின் வழிபாட்டு முறைகளுள் ஒன்ருகிய தந்த்ர சாதனம் வைதிக மார்க்கத்தினின்று முற்றிலும் மாறுபடுகிறது. வாமாச்சாரத்தை அம்பிகை தன் பக்தர்களுள் ஒரு சிலருக்குத் தானே புகட்டியருளியிருப்பதால் அவள் ஸ்வதந்த்ரா என்னும் பெயர் பெற்றவளாகின்ருள்.

**सर्वतन्त्रेशी — ஸர்வதந்த்ரேசீ** ७२४

தந்த்ரங்கள் யாவுக்கும் தலைவியாயிருப்பவள். 724

தந்த்ர சாதனங்கள் பசுபாவம், வீரபாவம், திவ்யபாவம் ஆகிய மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. ஆரம்ப தசையிலிருக்கும் பசுபாவம் தக்ஷிணசாரத்தோடு முற்றிலும் ஒத்திருக்கிறது. வீரபாவத்தை அனுஷ்டிப்பதற்கு ஸ்மசானம் ஏற்ற இடமாக அமைந்திருக்கிறது. அமாவாசை நள்ளிரவு அதற்கேற்ற நேரம். சாதகனைத் தவிர வேறு எந்த மானுடனும் அங்கு இருக்கலாகாது. விபரீதமான பொருள்கள் வழிபாட்டுக்குரிய பொருள்களாகின்றன. அந்தச் சாதனத்துக்கு ஏற்ற மந்த்ரமும் அலாதியானது. இவற்றை முறையாகக் கையாளுபவன் பயத்தை வெல்லுகின்ருன்.

திவ்யபாவத்தில் கட்டழகு வாய்ந்த மங்கை வழிபாட்டுக்குரிய பொருளாகின்ருள். இந்தச் சாதனத்தில் ஈடுபடுகின்றவனிடத்துக் காம உணர்வு சிறிதளவாவது தலையெடுக்குமாளுல் அவனுக்கு உடனே புத்தி பேதலித்து விடுகின்றது. ஆனல் இந்தச் சாதனங்களை வெற்றிகரமாகப் பூர்த்திபண்ணுபவனுக்கு அம்பிகையின் அருள் அக்கணமே வாய்க்கிறது. இத்தகைய கடினமான சாதனங்களுக்கெல்லாம் தலைவியாயிருக்கும் அம்பிகை ஸர்வ தந்த்ரேசீ என்னும் நாமம் படைத்துள்ளாள்.

**दक्षिणामूर्त्तिरूपिणी — தக்ஷிணமூர்த்திரூபிணீ** ७२५

தக்ஷிணமூர்த்தியின் வடிவத்திலிருப்பவள். 725

கல்லால விருக்ஷத்தின்கீழ் வலக்கையில் சின்முத்திரை தாங்கியவராக மௌனமுற்றுத் தென்முகமாக அமர்ந்திருக்கிருர் சிவனர். சொல்லைக்கொண்டு அவரைச் சித்தரிக்க முடியாது. பரவஸ்துவாகிய அவர் பிரபஞ்சத்துக்கெல்லாம் அப்பாற்பட்ட

வர். முடிந்த நிலையாகிய இவ்வுபதேசத்தைப் புகட்டுகின்ற அவர் மூர்த்திகளனைவருக்கும் முன்மாதிரியாயிருக்கிறார்.

மக்களில் பெரும்பான்மையோர் பிறருக்குப் புகட்டுவது ஒன்றாகவும் தாங்கள் பழகுவது மற்றொன்றாகவும் இருக்கும். தான் எதைப் புகட்டுகிறானோ அதன் வடிவத்தில் அவன் இலங்கவேண்டும். தான் சீலத்தில் சிறந்தவனாயிருப்பானாகில் தன் பாங்கைப் பற்றி அவன் ஒன்றும் பேசவேண்டியதில்லை. அவனுடைய ஒழுக்கமே அவன் பாங்குக்கு விளக்கமாகிறது. போதனையில் பெரும் பகுதி அனர்த்தமாய்ப் போவதற்குக் காரணம் அது வாழ்க்கையோடு சம்பந்தப்படாதிருப்பதேயாம். சிவனார் மௌனமாயிருந்து மௌனத்தின் சிறப்பைப் போதிக்கிறார்.

மனம் உள்முகமாகச் சென்று பரத்தில் ஒடுங்குமளவு பேச்சுக் குறைகிறது; அருள் சக்தி ஓங்குகிறது. சிவசொரூபம் நாதத்துக்கு அப்பாற்பட்டது. சொல் ஆங்கு எட்டுவதில்லை. சிவனார் அந்நிலையில் இருந்தபடி ஜீவகோடிகளைக் கவர்ந்திழுக்கிறார். பண்பட்டுள்ள ஒரு சிலரே அந்தப் போதனையைக் கிரகித்து அதன் மயமாகின்றனர். பல பிறவிகளில் பெற்ற அனுபவத்தின் விளைவாக அவர்கள் விருத்தர்களாக இலங்குகின்றனர். குரு மூர்த்தியான சிவனார் யாண்டும் காலாதீதத்திலிருப்பதால் ஆயுள் அவரைப் பாதிப்பதில்லை. இப்பெரும் போதனையைச் சிவனாரின் செம்பாதியாகிய அம்பிகையும் தான் தோற்றுவித்துள்ள பெரு மக்களுக்குப் புகட்டியருள்கிறாள். ஆதலால் அவளுக்குத் தக்ஷிணா மூர்த்தி ரூபிணி என்னும் பெயர் வந்துள்ளது.

**सनकादि समाराध्या — ஸனகாதி ஸமாராத்யா** ७२६

ஸனகன் முதலிய சான்றோர்களால் இனிது ஆராதிக்கப்படுகின்றவள். 726

ஸனகன், ஸனந்தனன், ஸனாதனன், ஸனத் குமாரன் ஆகிய நால்வரும் பிரம்மதேவனின் மானச புத்திரர்கள். மஹரிஷிகளாகிய அவர்கள் யோகத்தின் உச்சநிலையை எட்டியவர்கள்; நிறை நிலையிலேயே பிறப்பெடுத்தவர்கள். காலமெல்லாம் அவர்கள் நிவிருத்தியிலேயே நிலைத்திருப்பவர்கள். ஜகத் முழுவதற்கும் குருவாக உள்ள சிவனார் பரிபூரண நிலையடைந்துள்ள அந்நால்வருக்கும் குருவாகின்றார். காலாதீதத்தில் இருக்கும் சிவனார்

யாண்டும் இளமையில் திளைத்திருக்கிறார். அவருடைய சிஷ்யர்களோ மானஸீகமாகவே உலக அனுபவங்களையெல்லாம் பெற்று விருத்தர்களாக இலங்குகின்றார்கள்; அனைத்து உயிர்களுடைய சொரூபமாகிய அம்பிகை அண்டகோடிகளுக்கெல்லாம் அப்பாற் பட்டவளாயிருக்கின்றாள். அத்தகைய மேலாம் மூர்த்தியை நால்வரும் சர்வகாலமும் உபாசித்துக்கொண்டு இருக்கிறார்கள். அவ்வுபாசனையின் விளைவாகவே அவர்கள் அனுபவத்தில் விருத்தர்களாக விளங்குகின்றனர். அம்பிகையை வழிபடுகின்றவர்கள் அந்த நால்வரையும் முன்மாதிரியாக வைத்துக்கொள்வது முறை என்பதை ஸனகாதி ஸமாராத்யா என்னும் இந்நாமம் விளக்குகிறது.

**शिवज्ञान प्रदायिनी** — சிவஞான ப்ரதாயினீ ७२७

சிவஞானத்தை நன்கு எடுத்து வழங்குபவள். 727

யாரும் புகட்டாமலேயே தன் தாய் யார் என்று பிறந்த குழந்தை அறிந்துகொள்கிறது. தன்னைச் சரண்புகுகின்றவர்களின் தகைமைக்கு ஏற்பத் தாயானவள் வரத்தை வழங்குகின்றாள். ஸ்மசானகாளி நான்கு கரங்களை உடையவளாயிருக்கிறாள். இடக்கரங்களால் மக்களைக் கொன்று அவள் அவர்களைப் பிறவிக் கடலில் ஆழ்த்துகின்றாள். பல பிறவிகள் எடுத்து அதன் மூலம் பயிற்சி பெற்றவர்கள் அம்பிகையைச் சார்தற்கேற்ப அச்சத்தை அகற்றுகிறார்கள். அம்பிகையின் அபயகரம் அதற்கு அறிகுறியாயுள்ளது. கீழே சவம் போன்று படுத்திருக்கும் சிவமூர்த்தியை அம்பிகையின் அடுத்த கரம் சுட்டிக் காட்டுகிறது. முற்றிலும் பக்குவமடைந்தவர்கள் அம்பிகையின் அருளால் சிவத்திடம் அனுப்பப்பெறுகிறார்கள். சிவனை அடைவதற்கு நிகரான வரம் வேறில்லை. சிவனை அடையப் பெறுகிறவர்கள் சிவ ஞானத்தையும் அடையப் பெறுகிறார்கள். கிருபை கூர்ந்து அதை அம்பிகை நல்கி வருவதால் அவள் சிவஞானப்ரதாயினீ என்னும் நாமம் படைத்துள்ளாள்.

**चित्कला** — சித்கலா ७२८

ஞானத்தை அடிப்படையாகக் கொண்ட 728
கலைகள் மயமாய் இருப்பவள்.

பரப்பிரம்மமும் அன்னை பராசக்தியும் மூலநிலையில் சச்சி தானந்த சொரூபமாய் உள்ளனர். கருவிகரணங்களுக்கு எட்டாத அப்பெருநிலை தன்னில் தானாய் இருக்கும் பேரறிவுப் பரமானந்த நிலையாகும். அப்பேரறிவின் ஒரு பகுதி ஜீவாத்மாக்களின் பொருட்டுக் கலைகள் பலவாகத் திகழ்கின்றது. சூரிய ஒளியில் அடங்கியுள்ள ஏழு நிறங்கள் சூரியனின் சித்கலைகளாகின்றன. சூரிய ஒளி இல்லாவிட்டால் ஏழு கிரணங்கள் தென்படமாட்டா. அதே பாங்கில் கலைமயமாக இருக்கிற அறிவுக்கு ஆதாரமாகச் சித் சொரூபம் இருக்கிறது. பாடுதல், பேசுதல், ஓவியம் தீட்டு தல் போன்ற கலைகளை உருவாக்குவது அறிவின் செயல். அக் கலைகளை ரசிப்பதற்கு மூல அறிவாகிய சித்சொரூபம் தன்மய மாயிருக்கிறது. பேசும் திறமை கலை மயமான அறிவு. அவ்வாறு கிளம்பி வரும் சாதாரண அறிவைத் தன்மயமாயுள்ள பேரறிவு தொடக்கி வைத்துப் பின்பு அதைத் தானே ரசிக்கிறது. ஓவிய மாக வடிவெடுத்துள்ளது ஓவியன் ஒருவனுடைய கலை. எட்ட நின்றுகொண்டு தான் வரைந்த ஓவியத்தை ரசிக்கவும் ஆராயவும் செய்யும் பகுதி அவனிடத்துள்ள சித்சொரூபம்.

சிதாகாசமாக யாண்டும் வீற்றிருப்பவள் அம்பிகை. அவள் உண்டாக்கிய அண்டங்களுக்கெல்லாம் ஆதாரமாயிருப்பது அவளுடைய சித்சொரூபம். இன்னிசையும், மொழியும், அவள் படைத்துள்ள கலைகள். அவளுடைய சித்சொரூபம் அவற்றிற்கு ஆதாரமாய் உள்ளது. இங்ஙனம் சித்கலைமயமாக அம்பிகை இருந்துகொண்டு பிரபஞ்சத்தில் வடிவெடுத்துள்ள எண்ணிறந்த கலைகளுக்கு ஆதாரமாயும் ஆதேயமாயும் இருந்து வருகிறாள் என்பதை இந்நாமம் விளக்குகிறது.

## आनन्द कलिका — ஆனந்த கலிகா ७२९

ஆனந்தத்தின் கிளைகளாக உத்பவிப்பவள். 729

சின்மயமாக உள்ள அம்பிகை ஆனந்த மயமாகவும் உள் ளாள். பிரபஞ்சம் முழுவதும் திளைத்திருக்கும் ஆனந்தங்கள் அத்தனைக்கும் பேரானந்த மயமாயுள்ள பராசக்தியே மூலகார ணம். ஆனந்தம் பிரம்மம் என்பது உபநிஷத வாக்கு.

சர்க்கரையை வெவ்வேறு பண்டங்களுடன் சேர்ப்பதன் வாயிலாக அதன் சுவைக்குப் பலப்பல பாங்குகளைத் தருவது

சாத்தியம், சர்க்கரை கலந்த பானங்கள் விதவிதமாக ருசிக்கின்றன. கண் என்னும் இந்திரியத்தைக்கொண்டு வடிவங்களைக் கண்டு மகிழ்ந்திருத்தல் என்னும் ஆனந்தம் பலவாக விரிவடைகின்றது. பேரானந்த சொரூபிணியாக இலங்குகின்ற அம்பிகை பிரபஞ்சமெங்கும் இந்திரியங்கள் மூலமாக நுகரும் இன்பங்களாக அரும்பிக்கொண்டிருக்கிறாள்.

**प्रेमरूपा** — பிரேமரூபா ௭௩௦

பேரன்பு வடிவினள். 730

பிரபஞ்சம் முழுவதும் அன்பே வடிவெடுத்திருககிறது. சந்திரன், சூரியன், பூமி ஆகிய கிரகங்களுக்கிடையில் உள்ள ஆகர்ஷண சக்தியும் அன்பின் தோற்றமேயாம். விலங்குகளும், குட்டிகளும் அன்பு சொரூபமாக இலங்குகின்றன. அன்பின் விளைவாகவே மானுட வாழ்வு இனிது நிகழ்ந்து வருகிறது. இத்தகைய அன்பு தூய அன்பாக மாறும்பொழுது அதைத் தொடர்ந்து தெய்விகம் திகழ்கின்றது. தூய அன்பில் போட்டிக்கும் பொறாமைக்கும் இடமில்லை. அன்பு அச்சத்தை அகற்றுகிறது. மேல் நிலைக்கு வந்துள்ள அன்பு மரணத்தைத் துணிந்து எதிர்க்கிறது. அன்பு தியாக சொரூபம். பக்தன் தன்னிடமுள்ள அனைத்தையும் தன் வழிபடு தெய்வத்திடம் சமர்ப்பிக்கிறான். அதனிடமிருந்து எதையும் அந்தப் பக்தன் கேட்பதில்லை. ஜீவாத்மனின் ஜீவ வியக்தி பிரேமை வடிவான பேரன்பில் கரைந்து போகிறது. கடலினுள் நீராடப் புகுந்த உப்புப் பொம்மை தானும் கடல் மயமாவது போன்று பக்தன் தானே தெய்வ சொரூபமாக மாறியமைகிறான். கோபிமார்களனைவரும் பக்தியின் விளைவாகக் கண்ணன் மயமாகவே மாறிவிட்டனர். சித்தமலம் அறுவித்துச் சிவமாக்குவதற்கு மேல் ஜீவன் அடையவேண்டிய பேறு ஏதுமில்லை. உள்ளன்பு மயமாக உள்ள பக்தன் பிரேம பக்தியின் விளைவாகப் பரம்பொருள் மயமாகி அதில் லயிக்கிறான். இத்தகைய பேரன்பு மயமாயுள்ள அம்பிகை பிரேமரூபா என இயம்பப் பெறுகிறாள்.

**प्रियंकरी** — ப்ரியம்கரீ ௭௩௧

பிரியத்தை உண்டுபண்ணுபவள். 731

ஆனந்த சொரூபமாயுள்ள ஆத்மா பிரபஞ்சங்களோடு தன்னை இணைத்துக்கொள்ளும்போது ஜீவாத்மன் என்னும் பெயர் பெறுகின்றது. பிரபஞ்சத்தில் உள்ள இன்பத்தை ஏற்றுத் துன்பத்தைத் தவிர்த்திருக்க ஜீவாத்மன் முயலுகிறான். அதற்குப் பஞ்சேந்திரியங்கள் உதவியாயிருக்கின்றன. ஜீவாத்மன் நா என்னும் இந்திரியத்தைக்கொண்டு உணவை ஆராய்ச்சி பண்ணிப் பொருந்துகின்ற உணவைப் பிரியத்துடன் உண்கிறான். காது என்னும் கருவியைக்கொண்டு தனக்குப் பயன்படும் செய்தியைத் திருப்தியுடன் வாங்கிக்கொள்கிறான். பொருந்தாத உணவு வகைகளைப் பிரியத்துடன் அவன் ஏற்றுக்கொள்வதில்லை. தனக்குப் பயன்படாத செய்திகளை அவன் விலக்கி வைக்கிறான். அதே பாங்கில் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்து இந்திரியங்களும் பிரபஞ்சத்தில் அமைந்துள்ள இன்பதுன்பங்களாகிய கூறுகளைப் பாகுபடுத்த வல்லவையாயிருக்கின்றன. ஐந்து வாயில்களாக இருக்கும் அந்த இந்திரியங்களின் உதவியால் புறவுலகுடன் ஜீவாத்மன் ப்ரீதிகரமான இணக்கம் வைத்து இன்புற்றிருக்க விரும்புகிறான். அதற்கு உறுதுணையாயிருப்பவள் அன்னை பராசக்தி. ஆதலால் அவள் ப்ரியம்கரீ என்று போற்றப் பெறுகிறாள்.

**नाम पारायण प्रीता — நாம பாராயண ப்ரீதா** ७३२

நாமங்களைக் கருத்தோடு சொல்வதில் விருப்பம் உடையவள். 732

இயற்கையில் உள்ள ஒவ்வோர் ஓசைக்கும் ஒரு பொருள் உண்டு. அதைப் பற்றிய ஆராய்ச்சி அகண்டாகாரத்தில் விரிந்தோடும். ஆத்ம சாதனத்தில் ஈடுபடுகின்ற மனிதன் நாம உச்சாரணை சம்பந்தமாக என்ன செய்ய வேண்டும் என்பதைப் பரமஹம்சதேவர் ஓர் உபமானத்தின் வாயிலாக விளக்குகிறார்.

மதுபானக் கடைக்குச் செல்லும் குடிகாரன் ஒருவனுக்கு ஒரு சிறு கோப்பை மது அருந்தினாலே போதை வந்து அவன் தலை திருகிவிடும். பீப்பாய் பீப்பாயாக உள்ள மதுபானங்களை அவன் கணக்கிட வேண்டிய அவசியம் என்ன? பரம்பொருளுடைய அனுக்ரஹம் அவனுடைய சொரூபத்தின் ஒரு கிரணத்தின் மூல

மாக வந்தால் போதுமானது. பரவஸ்துவின் விபூதிகளை ஆயிரமாயிரம் நாமங்களைக் கொண்டு ஆராய்ச்சி பண்ணுவது எதற்காக?

கணக்கற்ற நாமங்களின் உட்கருத்துக்களை ஆராய்வதில் அலைமோதித்திரிவது வீண்பொழுது போக்குவதாகும். விவேகம் படைத்துள்ள ஆத்ம சாதகன் மரத்திலுள்ள கனியை அருந்துவதற்குப் பதிலாக அதிலுள்ள இலைகளை எண்ணிக்கொண்டிருக்க மாட்டான். அம்பிகையின் நாமங்களுள் தனக்கு விளங்குகின்றவற்றை மட்டும் எடுத்துக்கொண்டு அதில் தன் மனதை அவன் லயிக்கச் செய்வதன் மூலம் திண்ணமாக உய்வடையலாம். அச்செயலில் அம்பிகையும் ப்ரீதியடைந்திருப்பாள் என்பது இந்நாமத்தின் உட்பொருள்.

## नन्दिविद्या — நந்தி வித்யா ७३३

நந்திகேஸ்வரரால் உபாசிக்கப்பட்ட வித்யா ரூபமாக இருப்பவள். 733

அம்பிகைக்குரிய கணக்கற்ற நாமங்களுள் நந்திகேஸ்வரர் தமக்கு இஷ்டமான ஒன்றைப் பொறுக்கி எடுத்தார். அதில் தீவிரமாகக் கருத்தைச் செலுத்தி சாதனத்தில் அவர் விரைந்து மேலே சென்றார். அதனால் அவர் ஜன்மசாபல்யம் அடைந்தார். நல்ல உபாசகர்களுக்கு நந்திகேஸ்வரர் முன்மாதிரியாகத் திகழ்கின்றார்.

## नटेश्वरी — நடேச்வரீ ७३४

நடேசுவரருடைய சக்தி சொரூபமாய் இருப்பவள். 734

சக்தியும் சிவமும் ஒன்றே. சிவ உபாசகர்களுக்கு நடனேசுவரராக இலங்கும் மெய்ப்பொருள் சக்தி உபாசகர்களுக்கு நடனேசுவரியாக இலங்குகின்றது.

அம்பிகையின் நடனத்தின் விளைவாக அண்டங்கள் ஒழுங்காக இயங்கி வருகின்றன. நடனத்துக்கு ஏற்ற பாங்கில் இசையும், இசைக்கேற்ற ராகமும், தாளமும் வந்தமைகின்றன. அண்டங்களின் சலனத்தால் அற்புதமான ஓசைகள் கிளம்புகின்றன. அந்த ஓசைகளின் ஒழுங்குப்பாட்டில் ராகங்கள் உருவெடுக்

கின்றன. அண்டங்கள் வடிவெடுப்பதும் ஒடுங்குவதும் காலக் கிரமத்தை அனுசரித்திருப்பதால் தாளம் தவறுவதில்லை. அண்டங்களின் நடைமுறைகளை ரசிப்பது நடனேசுவரியின் மகிமையை ரசிப்பதாகிறது. அம்பிகையின் ஸ்தூல அமைப்பில் இத்தகைய மகிமைகளெல்லாம் அமைந்துள்ளன என்று ஓர்ந்து அனுபவிப்பது அம்பிகைக்குரிய நல்ல ஆராதனையாகிறது.

**मिथ्याजगत् अधिष्ठाना — மித்யா ஜகத் அதிஷ்டானா** ७३५

தோன்றி ஒடுங்கும் ஜகத்துக்கு அதிஷ்டான தேவதையாக அமைந்திருப்பவள். 735

ஒன்றுமில்லாத சூனியத்தைப் பொய் என்று சொல்லலாம். உள்ளதை இல்லை என்று இயம்புவது தத்துவமாகாது. ஜகத் என்னும் சொல்லின் அடிச்சொல் 'கச்' என்பதாம். ஜகத் ஆனது சதா மாறியமைந்துகொண்டிருக்கிறது என்பது பொருள். ஜகத் என்னும் சொல்லுக்கு நிகரான இயற்கை என்னும் தமிழ்ச் சொல் சதா இயங்கிக்கொண்டிருக்கும் வஸ்துவைக் குறிக்கிறது. ஜகத்தாகிய இயற்கைக்கு அதிஷ்டான தேவதையாக அன்னை பராசக்தி இலங்குகின்றாள்.

**मुक्तिदा — முக்திதா** ७३६

மோக்ஷத்தைக் கொடுப்பவள். 736

இயற்கையின்கண் வெவ்வேறு விதங்களில் கட்டுண்டு கிடக்கும் உயிர்கள் யாவும் தளையினின்று தப்பித்துக்கொள்ள முயலுகின்றன. பிறந்தவுடன் பசியும் தாகமும் உயிரைப் பந்தப்படுத்துகின்றன. அழுகையின் வாயிலாக அவ்வுணர்வை அது வெளிப்படுத்துகிறது. அப்போதைக்கப்போது உண்ண உணவும் பருகப் பானமும் கொடுத்துப் பசி, தாகம் என்னும் பந்தத்தினின்று உயிர் அவ்வப்போது விடுவிக்கப்படுகிறது. ஆனால் அது நிரந்தரமான விடுதலை அன்று. இருந்த இடத்திலேயே அசையாது கிடப்பது ஒருவிதப் பந்தம். கை, கால்களை அசைத்துக் கட்டினின்று தன்னை விடுவித்துக்கொள்ள அது முயலுகிறது. தன் முயற்சியில் ஓரளவு வெற்றியையும் அது பெறுகிறது. இங்ஙனம் ஆயுள்காலம் முழுவதும் ஒன்றன்பின் ஒன்றாக வந்து உபத்திரவப்படுத்துகின்ற விக்கினங்களினின்று தன்னை விடுவித்துக்கொள்ள ஒவ்வொரு

ஜீவனும் முயலுகின்றது. முக்தி நாட்டம் என்று அந்த முயற்சி மொழியப்படுகிறது. பல ஜன்மங்களில் தடைகளினின்று தங்களை விடுவித்துக்கொள்ள எல்லா ஜீவர்களும் பாடுபட்டுக்கொண்டே இருக்கின்றன. அன்னையின் அருளால் இடைஞ்சல்களினின்று மீளுதற்கான வல்லமை ஒவ்வோர் உயிருக்கும் வாய்க்கிறது. மற்று, புதிய விக்கினங்கள் வடிவெடுத்துக்கொண்டே இருக்கின்றன. அவற்றையும் ஓரளவு சமாளிப்பது முக்தியின் அறிகுறியாம். மாயப்பிரபஞ்சத்தில் கட்டுண்டு கிடக்கின்ற காலமெல்லாம் ஜீவாத்மனுக்கு விக்கினங்களினின்றும், பாசங்களினின்றும் நிரந்தர விமோசனமில்லை என்னும் பேருண்மையைப் பல பிறவிகளுக்குப் பிறகு பண்பாடடைந்த மனிதன் அறிய வருகின்றான். அவனுடைய தகுதிக்கு ஏற்ப இயற்கையென்னும் பிறவிப் பெருங் கடலினின்று அவனை மீட்டெடுத்து முக்தி என்னும் பேறதனைக் கொடுத்தருள்கின்றாள் அன்னை பராசக்தி. அம்பிகையைச் சார்ந்திருந்து சம்சாரக்கடலினின்று தங்களை விடுவித்துக்கொள்ள முயலுகின்றவர்களுக்கு அன்னையின் அருள் வேண்டியவாறு கிடைக்கின்றது என்பது இந்நாமத்தின் பொருளாம்.

## मुक्तिरूपिणी — முக்திரூபிணீ ७३७

முக்தியே வடிவெடுத்திருப்பவள். 737

கால, தேச, நிமித்தமாகக் காட்சி கொடுத்துக்கொண்டிருக்கும் இயற்கையாக வடிவெடுத்திருப்பவள் அம்பிகை. ஜீவாத்மாக்கள் இயற்கையில் கட்டுண்டிருப்பதும் அவளுடைய விளையாட்டு. கட்டை அவிழ்த்துக்கொண்டு உயிர்கள் விடுதலை அடைய முயலுவதும் அவளுடைய விளையாட்டு.

பிறந்த குழந்தை தன் தாயை அடையாளம் தெரிந்துகொண்டு அவள் மடியில் இனிது வசித்திருக்கின்றது. தான் விரும்புகின்ற ஒரு பொருளை நாடி அது நகர்ந்து செல்லக் கற்றுக்கொள்கின்றது. அதற்கு நேரும் தடையினின்று தன்னை விடுவித்துக்கொள்ள அக் குழந்தை முயலுவது முக்தி நாட்டத்துக்கு முதல் அறிகுறியாகிறது. குழந்தை வளர வளர அது பூணும் நாட்டங்களுக்குத் தடைகள் பல உண்டாகின்றன. அங்ஙனம் ஜீவர்களின் இச்சா சுதந்திரத்துக்கு இடுக்கண் வரும்பொழுதெல்லாம் அதினின்று தங்களை விடுவித்துக்கொள்ள அவை முயலுவது முக்தி நாட்டமாம்.

மனிதனுல் பிடித்து அடைத்து வைக்கப்பட்டிருக்கும் விலங்குகளும், பறவைகளும் சுதந்திர வாழ்வையே விரும்புகின்றன. பந்தத்திலிருந்து விடுபடுவதே அவைகளின் நோக்கமாகின்றது. கட்டினின்று தம்மை விடுவித்துக்கொள்கின்றபொழுது அவை அடையும் மகிழ்ச்சி வெளிப்படையாக விளங்குகிறது. முக்தியை நாட விரும்புகின்றவர்கள் மற்றவர்களுக்கு எவ்விதத்திலும் பந்தத்தை விளைவிப்பது பொருந்தாது. பிறருக்கு வழங்குகின்ற விணைப்பயனே தனக்கும் வந்து அமையும் என்னும் உண்மையைப் பிறரைப் பந்தப்படுத்த விழைபவன் உணர்ந்துகொள்ள வேண்டும். பிறருக்குச் சுதந்திரம் வழங்குவதற்கேற்பத் தனக்கும் சுதந்திரம் வந்து வாய்க்கின்றது. முக்தியடைதலே ஜீவர்களின் குறிக்கோள் என்பது தேற்றம்.

எல்லாப் படித்தரங்களிலும் உள்ள உயிர்கள் யாவும் தத்தம் அறியாமையினுலேயே தத்தமக்குப் பந்தபாசத்தை விளைவித்துக்கொள்கின்றன. அக்ஞானம் அகலுதற்கேற்பப் பந்தமும் தாஞகை மறைந்துபட்டுப் போகின்றது மனிதன் தன் தேகத்தைத் தன் மயமாகக் கருதி இடைஞ்சல்களில் அகப்பட்டுக்கொண்டு திணறுகின்ருன். ஜனன, மரணமாகிய பிறவிச் சக்கரத்தில் மனிதன் அகப்பட்டுக்கொண்டிருப்பதும் அக்ஞானத்தின் விளைவு வாழ்க்கையில் நேரும் வெற்றி தோல்வி, பெருமை சிறுமை, புகழ்ச்சி இகழ்ச்சி ஆகியவைகளையெல்லாம் ஆத்மாவுக்கு உரியவை என்று ஏற்றுக்கொள்வது அக்ஞானம். 'ஏற்பது இகழ்ச்சி' என்பது கோட்பாடு. தான் ஆத்மசொருபம் என்னும் ஞானேதயம் வாய்க்குங்கால் மனிதன் இயற்கைத் தளைகள் அனைத்தினின்றும் தன்னை விடுவித்துக்கொண்டு முக்தியடைகிருன். இதுவே பிரபஞ்ச வாழ்க்கையின் திட்டமாயிருப்பதால் அம்பிகை முக்திருபிணீ என்று பாராட்டப் பெறுகிருள்.

**लास्यप्रिया — லாஸ்யப்ரியா** ७३८

ஆடலில் பிரியம் உள்ளவள். 738

தாயின் மடிமீது துள்ளித் துள்ளிக் குதித்து விளையாடும் குழந்தை ஒன்று தன் ஆனந்தத்தை ஆடல் மூலமாக வெளிப்படுத்துகிறது. உலகெங்கிலும் உள்ள மக்கள் யாவரும் இன்புற்றிருக்கின்றபொழுது ஒய்யாரமாக ஆடித் தங்கள் இன்பத்தை

வெளிப்படுத்துகின்றனர். விலங்குகளும் பறவைகளும் தத்தம் போக்கில் ஆடி மகிழ்வுற்றிருக்கின்றன. உள்ளத்தில் ஊற்றெடுக்கும் இன்பத்தை உடலின் அசைவால் வெளிப்படுத்துவது நாட்டியம் என்னும் கலையாகவே வடிவெடுத்திருக்கிறது. அவ்வாறு பெண்பாலர்கள் புரிகின்ற நர்த்தனத்திற்கு லாஸ்யம் என்று பெயர். உடலின் அசைவுகளெல்லாம் கலைமயமாக வேண்டும் என்பது இதன் கோட்பாடு. எண்ணிறந்த கோளங்கள் வெவ்வேறு பாங்குகளில் இயங்குகின்றன. அன்னை பராசக்தி அவ்வாறு அண்டங்களை இயக்குவதினின்று அவளுடைய மகிமையொன்று தெளிவாகின்றது. அவளுடைய ஆனந்த சொரூபம் அவளுடைய ஸ்தூல மேனியாகிய பிரபஞ்சத்தின் ஒழுங்குப்பாடான இயக்கத்தின் மூலம் விளக்கப்படுவதால் அவளுக்கு லாஸ்யப்ரியா என்னும் நாமம் வாய்த்துள்ளது.

**लयकरी — லயகரீ** ७३९

ஒடுக்கத்தை உண்டுபண்ணுபவள். 739

புறவுலகங்களனைத்தும் சேர்ந்து அண்டம் என்றும் மானுட அமைப்பு பிண்டம் என்றும் பெயர் பெறுகின்றன. இரண்டிற்குமிடையில் நடைமுறைகளில் பொருத்தம் இருக்கிறது. மனதை அடக்கிவைப்பதற்கேற்ப மனிதன் மேன்மையுறுகிறான். தன் நிஜ சொரூபமாகிய ஆத்ம சைதன்யத்தில் மனிதனுடைய மனது ஆழ்ந்து மூழ்கியிருக்குமானால் அச்செயல் லயம் எனப்படுகிறது. மேன்மையடைய விரும்புகின்ற அனைவரும் தியானத்தின் வாயிலாக மனதை அடக்கி ஒடுக்கி வைக்கக் கடமைப்பட்டுள்ளனர்.

ராகம், தாளம், பாவம், நிருத்தியம் இவற்றுக்கிடையில் ஒழுங்குப்பாடு அமையுமிடத்து அது தலைசிறந்த லலிதகலை ஆகிறது. மனிதனை மகோன்னத நிலைக்கு எடுத்துச் செல்ல வல்லது அத்தகைய லயம். அண்டங்களின் இயக்கத்திலும் அவை உண்டுபண்ணும் ஓசையிலும் ஒவ்வொரு செயலுக்கும் உரிய கால அளவையும் முற்றிலும் ஒத்திருப்பதைக் காண்கிறோம். அதன் விளைவாக ஒலிக்கின்ற அனாஹத தொனியைக் கேட்க ஆத்மசாதகன் ஒருவன் வல்லவனானால் அது அவனுக்கு ஓர் அரிய அருள் விருந்தாகிறது. தேவியின் திருநடனத்தையோ, தில்லைத்தாண்ட

வத்தையோ அவன் அப்பொழுது அனுபூதியில் அறிந்து திளைத்திருக்கிறான். பண்பட்ட சித்தத்துக்கு எட்டுகிற பிரபஞ்ச இயக்கம் தேவியின் திருநடனம் என இயம்பப்படுகிறது. உயிர்வகைகள் அடைந்துள்ள அறிவும், ஆனந்தமும் ஒன்றுகூடித் தில்லைத் திருத்தாண்டவமாகின்றன. இவையிரண்டும் ஒன்றையொன்று சார்ந்திருக்கின்றன. ஞானிகளும், பக்தர்களும், யோகிகளும் அகத்திலும், புறத்திலும் இத்தகைய ஒழுங்குப்பாட்டை அனுபவ பூர்வமாகக் காண்கின்றனர். ஒழுங்குப்பாடு இருக்குமிடத்து அதைத் தொடர்ந்து ஆனந்தம் பொழிவதை யாண்டும் நாம் காண்கிறோம். லயகரியாக அம்பிகை இருந்துகொண்டு அகத்திலும் புறத்திலும் ஒடுக்கத்தையும் ஒழுங்குப்பாட்டையும் அமைத்துவருகின்றாள். ஆதலால் ஆனந்தமாக அச்செயல் விளங்கி வருகின்றது.

## लज्जा — லஜ்ஜா ७४०

நாணமே வடிவெடுத்திருப்பவள். 740

சிறு சிறு செயல்களில் முன்னீடு படைத்திருப்பது பண்பின்மைக்கு அறிகுறியாகும். ஆழ்கடல் அமைதியே வடிவெடுத்திருக்கிறது. அதன் மேல் பரப்போ அலை வடிவெடுத்துச் சுருண்டோடிக் கொண்டிருக்கிறது. நிலையின்மைக்கு அறிகுறியாக அலைவீசுதலும் யாண்டும் நிலைத்திருப்பதற்கு அறிகுறியாக கடலின் ஆழ்ந்த பகுதியும் உள்ளன. முன்னீடு ஏதும் இல்லாது பின்னணியில் இருப்பது பெண்பாலர்க்குரிய பண்பாடுகளில் ஒன்று. அண்டகோடிகள் அனைத்துக்கும் மூலகாரணமாயிருக்கும் மூலப்பிரகிருதித்தாய் யாண்டும்அடக்கத்துடனும் நாணத்துடனும் தன்னைப் பின்னணியில் வைத்திருப்பது அவளுடைய பேராற்றலுக்கு அறிகுறியாகும். அன்னை பராசக்தியை உபாசிப்பவர்கள் எந்த விதத்திலும் தங்களை விளம்பரப்படுத்திக் கொள்ளலாகாது. அன்னவர்களை மேன்மைப்படுத்துகின்ற பாங்கில் மற்றவர்கள் அவர்களை விளம்பரப்படுத்தினாலும் அதைக் குறித்து அவர்கள் மகிழ்வுறலாகாது. அத்தகைய சந்தர்ப்பத்தில் நாணமே வடிவெடுத்தவர்களாக அவர்கள் இருக்கவேண்டும். அத்தகைய மனப்பான்மை படைத்தவர்களே அன்னையின் ஆராதனைக்குத் தகுதி வாய்ந்தவர்கள் ஆகிறார்கள்.

**रम्भादिवन्दिता** — ரம்பாதிவந்திதா ७४१

*ரம்பை முதலிய அப்ஸர மாதுக்களால் வணங்கப்படுகிறவள்.* 741

விண்ணவர்களுக்கு மூப்பு இல்லாததுபோல் விண்ணவர்களை மகிழ்விப்பவர்களான ரம்பை முதலிய பெண்பாலர்களுக்கும் மூப்பு இல்லை. யாண்டும் இன்புற்றிருப்பதற்கு ஏற்ற இடமாகிய சொர்க்கத்தில் வாழ்ந்திருப்பவர்களுக்குச் சலிப்புத்தட்டாத பாங்கில் ஆடல், பாடல்கள் மூலம் மகிழ்வூட்டும் திறமை அவர்களுக் குண்டு. ஆத்ம சாதனம் புரிகின்ற மேலோர்களிடத்து மனச் சோர்வு உண்டாவதில்லை. 'சந்ததமும் இளமையோடிருக்கலாம்' என்னும் கோட்பாடு அவர்களுக்குப் பொருந்தியதாகிறது. அவர்கள் சரீரம் என்னும் உணர்வைத் தாண்டியிருப்பதே அதற்குக் காரணமாகும். ரம்பை முதலிய தேவலோகக் கன்னியர்களிடத்து இத்தகைய மேலான மனநிலை இருப்பதை ஆத்ம சாதகர்கள் அறிந்திருத்தல் வேண்டும். அப்பொழுது தாங்களும் ஓரளவு தேகாத்ம புத்தியைத் தாண்டிப் பாரமார்த்திகப் பெருநிலையில் திளைத்திருக்கலாம் என்னும் கோட்பாட்டை ரம்பை முதலானவர்கள் புரிந்துவருகின்ற அம்பிகை வழிபாட்டின் வாயிலாக விளக்குகின்றனர்.

**भवदावसुधावृष्टिः** — பவதாவசுதாவ்ருஷ்டி: ७४२

*பிறவி என்னும் காட்டுத் தீயை அணைப்பதற் கேற்ற அருள் மழையாயிருப்பவள்.* 742

இன்பம், துன்பம் ஆகிய இரண்டும் சேர்ந்து அமைந்திருப்பது பிரபஞ்ச வாழ்வு. இவ்வுலகம் நல்குகின்ற ஒவ்வோர் இன்பத்திலும் துன்பம் சேர்ந்தே அமைந்திருக்கிறது என்னும் உலக அனுபவம் காலாந்தரத்தில் இன்பத்தையே நாடிநிற்கும் உயிர் வகைகளுக்கு ஏற்படுகின்றது. துன்பம் கலவாத இன்பத்தை அதற்குப் பொருத்தமற்ற இவ்வுலகத்தில் அவ்வுயிர்கள் தேடுகின்றன. இதனுள் வந்து துன்பத்துக்கு இலக்கான பின்பே உயிர் வகைகள் இவ்வுண்மையை அறிகின்றன. பின்பு அவை துன்பத்தைத் தவிர்க்க முயலுகின்றன. பக்தி வாய்க்கப் பெற்றிருக்கின்ற மக்கள் துன்பத்தினின்று தங்களை விடுவித்துக்கொள்ள

அன்னை பராசக்தியிடம் பரிந்து பிரார்த்திக்கின்றனர். அவள் கிருபைகூர்ந்து அமிர்த மழையைப் பொழிந்து தன்னை ஆராதிக்கின்றவர்களைக் காப்பாற்றுகின்றாள் என்பது இந்நாமத்தின் கருத்து.

**पापारण्यदवानला** — பாபாரண்யதவானலா ७४३

பாபம் என்னும் அடவிக்கு காட்டுத் தீயாய் இருப்பவள். 743

புண்ணியமும் பாவமும் இணைபிரியாதவைகள். புண்ணியக் கருமங்கள் எனக்கருதப்பட்டு இவ்வையகத்தில் செய்யப்படுகின்ற வினைகளில் துயரமும் அடங்கியிருப்பது வெளிப்படை. வழிபாட்டுக்குரிய இடத்தைக் கூட்டிச் சுத்தப்படுத்தும் செயல் புண்ணியக் கிருத்தியமாயினும் ஆங்குள்ள ஜீவ ஜந்துக்கள் அச்செயலால் துன்பத்திற்காளாகின்றன. வழிபாட்டிற்காக ஒருவன் புஷ்பங்களையும், பச்சிலைகளையும் கொய்யும்பொழுது தான் ஸ்தாவர உலகுக்கு விளைவிக்கின்ற துன்பத்தை அவன் அறிவதில்லை. இங்ஙனம் எல்லாக் கிருத்தியங்களிலும் நலனும், கேடும் சேர்ந்தே அமைகின்றன. நல்வினையில் ஈடுபடுகின்றவன் தன்னையறியாது தீவினையிலும் ஈடுபடுவதன்றல் வரும் துயரத்தைத் துடைப்பதற்கு அன்னையின் அருள் ஒன்றே உற்ற உபாயமாகிறது. காட்டுத் தீயானது தீங்கை விளைவிப்பது போன்று தென்பட்டாலும் இலை, சருகு முதலியன தீயில் வெந்து சாம்பலானபிறகு அடுத்து வருகின்ற மழையின் விளைவாகச் செழிப்புற்ற வளர்ச்சி மரம், செடி, கொடிகளுக்கு உண்டாகிறது. காட்டுத் தீ போன்றிருக்கும் அன்னையின் அருள் தவிர்க்க முடியாது வாய்க்கின்ற தீச்செயல்களின் தோஷத்தைத் துடைத்துத் தள்ளுகிறது என்பது இந்நாமத்தின் உட்பொருள்.

**दौर्भाग्यतूलवातूला** — தௌர்பாக்கியதூலவாதூலா ७४४

தௌர்பாக்கியமாயிருக்கின்ற பஞ்சுப் பொதியைச் சிதறடிக்கும் சூறுவளிக் காற்றாக இருப்பவள். 744

சௌபாக்கியத்தைத் தொடர்ந்து தௌர்பாக்கியம் வருவது இவ்வுலக வாழ்க்கையைப் பற்றிய விருத்தாந்தமாகும். வாழ்வில்

முன்னேற்றம் என்னும் சௌபாக்கியத்தைத் தொடர்ந்து க்ஷீண தசை என்னும் தௌர்பாக்கியம் வருகிறது பிறப்பு என்னும் சௌபாக்கியத்தைத் தொடர்ந்து இறப்பென்னும் தௌர்பாக்கியம் வருகின்றது.

யௌவனத்தைத் தொடர்ந்து முதுமை என்னும் தௌர் பாக்கியம் வந்தமைகிறது. இத்தகைய தௌர்பாக்கியங்களெல்லாம் வாழ்வின் பிற்பகுதிகளில் பஞ்சு மூட்டை போன்று குவிந்திருந்து மனிதனுக்கு இன்னலை விளைவிக்கின்றன. அந்த இன்னலை அகற்றுதற்கு உற்ற உபாயமாயிருப்பது அன்னையின் அருளென்னும் புயல் காற்ரும். புயல் காற்றிலே அகப்பட்டுக்கொள்கின்ற பஞ்சானது இருக்குமிடம் தெரியாது அப்புறப்படுத்தப்படுகின்றது. அன்னை பராசக்தியின் அருளுக்குப் பாத்திரமாகியவனுக்குத் தௌர்பாக்கியம் என்னும் கேடு இல்லை என்பது இந்நாமத்தின் பொருள்.

**जराध्वान्तरविप्रभा** — ஜராத்வாந்தரவிப்ரபா ७४५

ஜரை அல்லது முதுமை என்கின்ற இருளை 745
அகற்றுதற்குரிய சூரியப்பிரகாசம் போன்றிருப்பவள்.

இளமையில் இவ்வுலக வாழ்வு சுவர்க்க வாழ்வாகக் காட்சி கொடுக்கிறது. சூழ்நிலைகள் யாவும் அனுகூலம் நிறைந்தவையாகத் தென்படுகின்றன. ஆதலால் மானுடன் ஆர்வத்தோடு அதனுள் பிரவேசிக்கிருன். வாழ்க்கையின் பிற்பகுதியில் விருத்தாப்பியம் விரைந்து வந்துகொண்டிருக்கின்றபொழுது உலகின் காட்சி மனிதனுக்கு விரைவில் மாறியமைகிறது. அனுகூலமாய் இருந்தவைகள் யாவும் இப்பொழுது பிரதிகூலமானவைகளாகப் புலப்படுகின்றன. இன்பத்திற்கேதுவான இகலோக வாழ்வில் துன்பம் புதைந்து கிடக்கிறது. அத்தகைய துன்பத்தைத் துடைப்பதற்கு இவ்வுலக வைபவங்கள் ஒருபொழுதும் உதவமாட்டா. முதுமையில் துன்பத்துக்கே இருப்பிடமாயிருக்கின்ற இகலோக வாழ்வு என்னும் காரிருளை அறவே அகற்றுதற்கு உற்ற உபாயமாயிருப்பது அம்பிகையின் அருள் என்னும் சூரியப் பிரபையாம். ஆதலால் யாண்டும் அன்னையின் அருளை நாடியிருக்கும் ஆத்ம சாதகன் இவ்விஷய விபத்துக்களினின்று தன்னை விடுவித்துக்கொள்கிருன்.

**भाग्याब्धिचन्द्रिका — பாக்யாப்தி சந்திரிகா** ७४६

பாக்கியம் என்னும் சமுத்திரத்தைப் பொங்கச் செய்யும் சந்திர வெளிச்சமாய் இருப்பவள். 746

'உடைமையும் வறுமையும் ஒருவழி நில்லா' என்பது கோட்பாடு. பிரபஞ்ச வாழ்வில் சௌபாக்கியமும் தௌர்பாக்கியமும் மாறி மாறி வந்துகொண்டே இருக்கின்றன.

சந்திரனுடைய உதயத்தை அனுசரித்து நாள்தோறும் சமுத்திரமட்டமானது மேலே கிளம்புவதும் தணிவதுமாக அமைகிறது. பௌர்ணமியன்றும் அமாவாசையன்றும் சமுத்திரத்தில் நீர்மட்டம் உச்சநிலைக்கு வருகிறது. இது ஈர்ப்புச் சக்தியினுடைய விளைவு. பௌர்ணமியன்று பூமியில் அதிக வெளிச்சம் படிகின்றது. பராசக்தியின் அனுக்கிரஹம் என்னும் சந்திரிகை வாய்க்குங்கால் அன்னையின் குழந்தைகளாகிய ஆத்மசாதகர்களுக்கு நலன்களனைத்தும் நன்கு வந்து வாய்க்கின்றன; தீமைகளனைத்தும் அறவே ஒதுக்கப்படுகின்றன.

இயற்கையின் சோபை சந்திர வெளிச்சத்தில் உச்சநிலை பெறுகின்றது. தணுப்பும் இனிமையும் வாய்க்கப் பெற்ற சந்திரவெளிச்சம் பரமானந்தமாகப் பரிணமிக்கிறது. அன்னை பராசக்தியின் திருவருள் நிறைநிலாவின் வெளிச்சத்துக்கு நிகரானது. அதில் ஆக்கமும் ஆனந்தமும் ஒன்று சேர்ந்து மிளிர்கின்றன. எல்லா உயிர்களும் ஆனந்தத்தை உலகில் இருந்து பெறுதற்கு முயலுகின்றன. உலகியல் ஆனந்தத்துக்குத் துன்பம் என்னும் விலைகொடுத்தாக வேண்டும். அம்பிகையின் அருளால் கிடைப்பது பேரானந்தம். அதில் துன்பத்துக்குச் சிறிதேனும் இடமில்லை. அதன் வாயிலாகச் சிரேயஸ் என்னும் சிறப்பும் மேல்நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறது. அன்னையின் அருளுக்கு இலக்காகின்றவர்கள் அடையும் பேறு இதுவாம். இவ்வரிய கருத்து இந்நாமத்தில் அடங்கியுள்ளது.

**भक्तचित्तकेकिघनाघना — பக்தசித்தகேகிகனகனா** ७४७

பக்தர்களுடைய உள்ளங்களாகிய மயில்களுக்கு உவகையைக் கொடுக்கும் கார்மேக வடிவினள். 747

கார்மேகத்தைக் கண்டவுடன் மயிலுக்கு மகிழ்வு மிக உண்டாகி அது தோகையை விரித்துக்கொண்டு ஆனந்தத் தாண்டவமாடுகின்றது. அந்த மயிலுக்கு நிகராகிய பக்தர்களின் மனம் அம்பிகையின் அருளாகிய கார்மேகத்தைப் பார்த்துப் பரமானந்தத்தில் மூழ்கியுள்ளது. மயிலுக்கு ஆனந்த மூட்டுவது புறத்தில் உள்ள காட்சி. பக்தனுக்கு ஆனந்தப் பரவசமூட்டுவது அகத்திலுள்ள அம்பிகையின் அதிசயச் செயல்களையும் மகிமைகளையும் பற்றிய எண்ணமாம்.

அம்பிகையின் விபூதிகளை ஆராய்வதற்கேற்பப் பக்தர்கள் ஆனந்தப்பரவசம் அடைகின்றனர். காலமெல்லாம் மனம் தெய்வத்தின் மகிமையில் மூழ்கிப் பரவசமடைந்திருப்பது சிறந்த ஆத்மசாதனமாகின்றது.

**रोगपर्वतदम्भोलिः — ரோகபர்வத தம்போலி: ७४८**

நோய் என்னும் மலைக்கு வஜ்ராயுதமாய் இருப்பவள். 748

அசைக்க முடியாத பாங்குள்ள மலையை வஜ்ராயுதத்தைக் கொண்டு தகர்த்துவிடலாம். ஜீவாத்மனைப் பிடித்துள்ள பிறவிப் பிணி இருக்கும் பரியந்தம் அவன் ஜனன மரணமாகிய நோய் வாய்ப்பட்டவனாக இருக்கிறான்.

நிர்மாணிக்கப்பட்ட ஆயுதங்களுள் தலைசிறந்ததாயிருப்பது வஜ்ராயுதம். பிறந்தது முதற்கொண்டு நைஷ்டிக பிரம்மச்சரியத்திலும் தவத்திலும் ஈடுபட்டிருந்த ததீசி மஹரிஷியின் அஸ்திகளால் அமைக்கப்பட்ட வஜ்ராயுதத்தைக்கொண்டுதான் தேவேந்திரன் அசுரர்களை முறியடித்தான் என்பது ஐதிகம். பிறவிப் பிணி என்னும் மலையை வஜ்ராயுதம் என்னும் மேலாம் இயல்பு துடைத்துத் தள்ளுகிறது. நைஷ்டிக பிரம்மச்சரியத்திலும் தவத்திலும் தன்னை ஈடுபடுத்தும் ஒருவனிடம் அத்தகைய மேலாம் தெய்விக இயல்பு வடிவெடுக்கிறது. மரணம் என்னும் பெருநோயை அகற்றுதற்கு உற்ற உபாயமாய் அமைந்திருப்பது வஜ்ராயுதம். அத்தகைய பேராற்றல் வாய்க்கப்பெற்ற ஆத்மசாதகன் மலைக்கு நிகரான பிறவிப்பிணியை அகற்ற வல்லவனாகிறான் என்பது இந்நாமத்தின் உட்பொருளாம்.

**मृत्युदारुकुठारिका** — ம்ருத்யுதாரு குடாரிகா ७४९

மரணம் என்னும் மரத்தை வெட்டுகிற கோடரி போன்றவள். 749

மரணம் பலதரப்பட்ட துக்கங்களோடு கூடியிருக்கிறது. அக்ஞானத்தின் விளைவு மரணம். அது ஆத்மாவை அணுகாது. மரணத்தின் சகாக்களாகிய துக்கங்களும் ஆத்மாவை அணுகா. ஆனந்த சொருபமாயும் அமிர்த சொருபமாயும் உள்ள ஆத்மாவானது தன்னைத் தேகமாகக் கருதிக் கொள்வது அக்ஞானம். இத்தகைய அக்ஞானமே துயரங்களனைத்துக்கும் மூலகாரணமாகிறது. ஞானம் கோடரிக்கு நிகரானது. கோடரியைக் கொண்டு மரத்தை வெட்டுவது போன்று ஞானவாள் கொண்டு அக்ஞானப் புதரைக் களைதல் வேண்டும். அம்பிகையின் சொருபத்தை உள்ளபடி அறிதல் ஞானமாகும். அம்பிகையை உள்ளபடி அறிந்துகொள்கின்ற ஞானிக்கு மரணமும் அதைச் சார்ந்திருக்கின்ற துயரங்களும் இல்லை; எவ்விதமான பயமும் இல்லை. ஆதலால் முற்றிலும் அம்பிகையைச் சார்ந்திருந்து பரஞானம் அடையப்பெற்று மரணம் என்னும் மரத்தை அகற்றுதல் வேண்டும் என்பது இந்நாமத்தின் பொருள்.

**महेश्वरी** — மஹேச்வரீ ७५०

பேர் இறைவி. 750

அகிலாண்டகோடி பிரம்மாண்ட நாயகியின் திட்டம் ஒரே பாங்குடையதாம். மானுட சரீரமாகிய பிண்டத்திலும் அண்டத்திலும் அமைப்பும் நடைமுறையும் ஒரே தன்மையனவாய் இருக்கின்றன. நுண்ணியதிலும் நுண்ணியதான பரம அணுவிலும் அதே திட்டம் அமைந்துள்ளது. எங்கும் வியாபகமாயுள்ள அண்டம் முழுதும் மக்களின் கண்ணுக்குப் புலப்படாது. பெரியதிலும் பெரியதை மனிதன் காண முடியாதது போன்று அணுவைக் காண்பதற்கும் அவனுடைய கண் உதவாது. பிண்டம் அல்லது மானுட அமைப்பை அவன் நன்கு காணலாம்.

அம்பிகையின் அகிலாண்ட ஆட்சிமுறை ஞானிகளுக்குத் தெற்றென விளங்குகிறது. பக்தி பூர்வமான யூகத்தைக்கொண்டு ஓரளவு நாம் அதை அறிந்து கொள்ளலாம். இம்மியளவும் நெறி

பிறழாத பேரமைப்பை அண்டங்கள் யாவும் பெற்றிருக்கின்றன. அவைகளின் ஆட்சி முறையை அம்பிகை இனிது நடாத்தி வருகின்ருள்.

அம்பிகையின் சொருப லட்சணம் ஸத் சித் ஆனந்தமாகும். எடுத்துக்கொண்ட செயல் ஒன்றைத் திறம்படச் செய்து முடிப்பது தடஸ்த இலட்சணமாம். அத்தகைய செயலின் வாயிலாக ஒருவன் தன் வல்லமையை வெளிப்படுத்துகிருன். அண்டகோடிகளை அம்பிகை ஒழுங்காக ஆண்டு வருவது அவளுடைய தடஸ்த லட்சணமாகிறது. அந்த ஆட்சி முறையைப் பாராட்டுவது அவளுடைய வழிபாட்டுக்கு ஒப்பாகிறது. ஆட்சிமுறையின் ஒழுங்குப் பாட்டைச் சதா மனனம் பண்ணுவது நல்ல வழிபாடாகிறது. அம்பிகையின் பக்தர்கள் அவளுடைய ஆட்சியைப் போற்றுவதன் வாயிலாக அவளுக்கு வந்தனை வழிபாடுகளைச் செலுத்துவார்களாக!

**महाकाली** — மஹா காலீ ௭௫௧

காலசொரூபிணியாயிருப்பவள். 751

அகண்டாகாரத்தில் விரிந்தோடும் காலத்தின் பாங்கை ஆராய்ந்து பார்த்தால் அது கடவுளின் கூருக அமைகின்றது. காலம் முழுவதையும் யாருமே காணமுடியாது. கறுப்பு நிறம் படைத்துள்ள அம்பிகை திக்குகளையே ஆடையாக அணிந்திருக்கிருள். எங்கும் வியாபகமாயுள்ள அவள் திகம்பரீ என அழைக்கப்பெறுகிருள். மானுடத் தலைகளை மாலையாக அணிந்திருப்பதால் அவள் முண்டமாலினீ எனப் பெயர் பெறுகிருள். வயதில் எல்லாப் படித்தரங்களிலுமுள்ள உயிர் வகைகளை அவள் யாண்டும் எடுத்து விழுங்கிக்கொண்டே இருக்கிருள். இது காலத்தின் செயல் ஆதலால் அவளுக்குக் காலீ என்னும் பெயர் வந்தமைகிறது.

மஹாகாளியின் முகவிலாசத்தில் பயமுறுத்தும் பாங்கும் அனுக்ரஹம் செய்யும் பாங்கும் ஒன்று கூடுகின்றன. முரண்படுகின்ற இந்த இரண்டு செயல்களையும் அவள் தனக்குச் சொந்தமாக வைத்திருக்கிருள். ஒவ்வொரு ஜீவனுக்கும் காலவரையறை வகுத்து வைக்கப்பட்டிருக்கிறது. அந்தக் காலத்தை நன்கு பயன்

படுத்துவது அம்பிகை வழிபாட்டுக்கு நிகர் என்பதை ஆத்ம சாத கர்கள் அறிந்திருக்கவேண்டும். அப்படிக் காலத்தை நல்வழியில் பயன்படுத்துகின்றவர்களுக்கு அனுக்ரஹமூர்த்தியாகவும் வீண் பொழுது போக்குபவர்களைத் துன்புறுத்தும் மூர்த்தியாகவும் அம் பிகை இலங்குகின்றாள். துன்பத்தின் வாயிலாகவும், பீதியின் வாயிலாகவும் முறைவழுவிப் போகின்றவர்களுக்கு அவள் தண் டனை வழங்கிப் பாடம் புகட்டுகிறாள். இங்ஙனம் முரண்படுகின்ற இரண்டு கூறுகள் அம்பிகையின் முகவிலாசத்தில் மிளிர்வது அவளுடைய மகிமையாம்.

அனந்தங்கோடி ஜீவர்கள் மூலம் நிகழ்கின்ற செயல்களனைத் தும் அம்பிகையின் செயல்களாம். அண்டத்தின் நடைமுறையில் நல்ல செயல்களும் கெட்ட செயல்களும் பொருத்தமான பாங்கில் இடம்பெற்றுள்ளன. அகங்கரித்து வினையாற்றுபவனுக்கு வினை யின் கொடுமை அதிகரிக்கிறது. தன்மூலம் நிகழ்கின்ற நிகழ்ச்சி கள் யாவும் அம்பிகையின் செயல்கள் எனக் கருதுபவன் இயல் பாகவே நல்வழிக்கு வருவதால் அவனுடைய அகங்காரம் தேய் கிறது. திகம்பரியாகிய அம்பிகை இடுப்பில் மானுடக் கரங்களைக் கோத்துக் கட்டியிருப்பதன் வாயிலாக இக்கோட்பாடு விளக்கப் பெறுகிறது

தன் நான்கு கரங்களுள் ஒன்றில் அம்பிகை வாளை ஏந்திக் கொண்டிருக்கின்றாள்; இன்னொரு கரத்தில் வெட்டிய தலையின் முடியைப் பிடித்துக்கொண்டிருக்கின்றாள். முறை தவறி நடப்ப வர்களுக்கு அம்பிகையின் தண்டனை அப்போதைக்கப்போதே வந்து வாய்க்கிறது என்பதை இரத்தம் தோய்ந்துள்ள வாளும் தலையும் விளக்குகின்றன. தவறு செய்துவிட்டுத் தப்பி விட்டதா கப் பலர் இறுமாப்புக்கொள்கின்றனர். தவறு செய்யும்பொழுதே பயம் உள்ளத்தைத் தாக்குகின்றது. சஞ்சலம் குடிபுகுந்த உள் ளத்துடனிருக்கும் அறிவிலி உபத்திரவம் தொடங்கிவிட்டது என் பதை அறிந்து கொள்வதில்லை. அசாந்தி அன்னவனுக்கு ஓயாத தண்டனையாகிறது.

அன்னையின் வலக்கரங்கள் இரண்டும் அவளுடைய சீரிய பாங்கிற்கு விளக்கமாக வந்து அமைந்துள்ளன. மேலே இருக்கும் கரம் அபயகரமாக விளங்குகிறது. நேரான வாழ்க்கை வாழ்ப

வனும் அன்னையின் திட்டத்தைச் சார்ந்து இருப்பவனும் அஞ்சு தற்கு ஒன்றும் இல்லை என்னும் கோட்பாடு இந்தக் கரத்தில் அமைந்துள்ளது. அடுத்த கரம் வரம் தரும் கரமாக விளங்குகிறது. அம்பிகைக்கு ஆதாரமாய் உள்ள சிவனாரிடம் அத்தகைய நன்மகனை அவள் கொண்டு சேர்க்கிறாள். இதற்கு நிகரான வரம் இல்லை. இது மஹாகாலியின் ஒப்பற்ற செயலாம்.

## महाग्रासा — மஹாக்ராஸா ७५२

நழுவவிடாத பெரும்பிடியை உடையவள். 752

தோற்றத்துக்கு வந்துள்ள அண்டங்களனைத்தும் ஒன்றோடொன்று சம்பந்தப்படாதவை போன்று தென்படுகின்றன. சூரிய மண்டலத்தில் பூமி, செவ்வாய், புதன், வியாழன் முதலிய கிரகங்கள் தனித்தனியாக இயங்கி வருகின்றன. ஆயினும் அவைகளின் இயக்கங்கள் சூரியனுடைய ஈர்ப்புச் சக்தியில் கட்டுண்டிருக்கின்றன. எந்தக் கிரகமாவது நெறி வழுவித் தன் போக்கில் போக முடியாது. அங்ஙனம் கிரகங்களை அவற்றிற்குரிய பாதையில் முறையாக இயங்கும்படி செய்வது இயற்கைத் தாயின் ஆகர்ஷண சக்தியாக அமைந்திருக்கிறது. இப்படி அண்டங்களனைத்தும் அவளுடைய பிடிப்பில் அடங்கியிருக்கின்றன. பிரளய காலத்தில், அவைகளை ஒடுக்குவதும் அவளுக்கு விளையாட்டுப் போன்று அமைந்திருக்கிறது. பூச்சிகளை எடுத்து விழுங்குவது பல்லிக்கு எவ்வளவு எளிதோ அவ்வளவு எளிதில் அண்டங்கள் யாவற்றையும் ஒரு நொடிப்பொழுதில் எடுத்து விழுங்க வல்லவளாக அம்பிகை இருக்கின்றாள். அவைகளைத் தோற்றத்தில் வைத்திருப்பதும் தோற்றத்தில் இல்லாது தன்னகத்து ஒடுக்கி வைப்பதும் அவளுடைய திருவுளப் பாங்கின் போக்காம். அம்பிகையின் வல்லமைக்கு இச்செயல் நல்லதோர் எடுத்துக்காட்டு ஆகிறது.

## महाशना — மஹாசனா ७५३

பேருண்டி உண்பவள். 753

உண்ணும் உணவு ஜீரணமாகாவிட்டால் உண்ணும் மனிதனுக்கு அது ஆபத்தாக முடியும். தான் எதை ஜீரணம் பண்ண முடியுமோ அதை மட்டும் ஒருவன் ஆகாரமாக எடுத்துக்கொள்ள

வேண்டும். சேதனம், அசேதனம் ஆகிய பிரபஞ்சப் பொருள்கள் யாவும் அன்னை பராசக்திக்குப் பொருத்தமான உணவுகளாக அமைந்திருக்கின்றன. அம்பிகையின் கண் விழிப்பில் அண்டங்கள் தோற்றத்துக்கு வருகின்றன. அவள் கண்மூடினால் அவை யாவும் அவளிடத்து ஒடுங்கிப் போகின்றன. உணவு உண்பவனுடன் அவன் உண்கின்ற உணவு அமைப்பில் ஒத்திருக்கிறது. வளர்ந்து விளைபொருளாகும் நெற்பயிரில் உள்ள அரிசியை உண்ணத் தகுந்தவனாக மனிதன் இருக்கிறான். அந்த விளைபொருளில் வேறு எதையும் உண்ண அவனுக்கு இயலாது. வைக்கோலைக் கால் நடைகள் உணவாக ஏற்றுக்கொள்கின்றன அந்தந்த உடலமைப் புக்கேற்ற உணவு என்னும் கோட்பாடு இதில் அடங்கியிருக் கிறது. இக்கோட்பாட்டின்படி அண்டகோடிகளனைத்தும் அன் னைக்கேற்ற உணவாக அவளுடைய சொரூபத்தில் ஒடுங்குகின் றன; மீண்டும் தோற்றத்துக்கு வருகின்றன. அண்டங்களுக்கும் அன்னைக்கும் உள்ள தொடர்பு இச்செயலின் மூலம் நன்கு வெளி யாகிறது.

## अपर्णा — அபர்ணா ௭௫௪

கடமைப்படாதவள். 754

தாயின் பராமரிப்பு இல்லாவிட்டால் குழந்தை வளரமுடி யாது. குழந்தையைப் பேண அவள் கடமைப்பட்டிருக்கிறாள். அன்னை பராசக்தியின் குழந்தைகளாகிய ஜீவகோடிகள் அனைத் துக்கும் உணவூட்டி அவைகளை முறையாக வளர்க்க அவள் கடமைப்பட்டிருக்கிறாள். அச்செயல் புரிவதில் அவளுக்கு யாதொரு சிரமமும் இல்லை. ஏராளமாகப் பாலை உடைத்திருக் கின்ற பசுவானது கன்றுக்கு வேண்டிய அளவு பாலைக்கொடுக் கிறது. மக்களுக்கும் அது தாராளமாகப் பாலை எடுத்து வழங்கு கிறது. ஏராளமாகத் தீனியைத் தின்றுவிட்டு மக்களுக்குப் பால் ஏதும் தர அப்பசுவுக்கு இயலாது போனால் மக்களுக்கு அது கடன்பட்டதாகிறது. அத்தகைய பரிதாபகரமான நிலை யாருக் குமே ஒவ்வாது. காமதேனுவுக்கு நிகராக அன்னை பராசக்தி தன் னிடமிருந்து தோன்றி வந்துள்ள உயிர் வகைகள் அனைத்துக்கும் வேண்டியவாறு உணவைக் கொடுத்து உதவுவதால் அவள் அபர்ணாவாக இலங்குகின்றாள்.

பர்ணம் என்ருல் இலை. ஓர் இலையையும்கூட உணவாக ஏற்றுக்கொள்ளாது பார்வதி தேவி கடும் தவம் புரிந்ததன் விளைவாக சிவத்துக்கு உரியவள் ஆனுள்: அதன்மூலமாகத் தன் குழந்தைகளுக்கு அவள் பாடம் புகட்டிக்கொண்டிருக்கின்ருள். சிவனை அடைவதற்கு நிகரான அரிய செயல் எதையேனும் சாதிக்க விரும்பும் மனிதன் ஒருவன் அதற்கேற்ற தியாகத்தையும் தபசையும் கையாண்டாக வேண்டும். பெற விரும்பும் பொருள் எவ்வளவு பெரியதோ அதற்கேற்ற பெரு முயற்சி இருக்கவேண்டும் என்பது இந்நாமத்தின் உட்பொருளாம்.

**चण्डिका — சண்டிகா** ७५५

சினந்துகொள்பவள் 755

செல்லமாக வளர்க்கப்படும் குழந்தை ஒன்று களியாட்டத்தில் வரம்பு கடந்து போகிறது. அப்பொழுது சினந்து கொள்ளும் பாங்குடையவளாகத் தாய் இருக்கவேண்டும். சினத்தின் மூலம் பொருந்தாத அச்செயலுக்கு ஆட்சேபம் வராவிட்டால் அக்குழந்தை கெட்டுப் போவது திண்ணம். அன்னை பராசக்தி ஜீவகோடிகள் அனைத்தையும் பேணி வருகிருள். எந்தெந்த ஜீவனிடத்து எந்தெந்த வேளையில் எத்தகைய தடையைப் போட வேண்டுமோ அதை நெறி பிறழாது அகிலாண்ட நாயகி இயற்றி வருகிருள். பூகம்பமாகவும், புயல் காற்ருகவும், காட்டுத் தீயாகவும் அம்பிகையின் கோபம் பலப்பல வடிவெடுக்கிறது. ஜலப் பிரளயத்துக்கு நிகராக அபரிமிதமாக மழை பொழிவதும், மழைபெய்யாது பொய்த்துப் போய்ப் பஞ்சம் வருவதும் அம்பிகையின் கோபத்தால் நிகழ்கின்றன. அவளுடைய கோபம் கொள்ளை நோயாக வடிவெடுத்து எண்ணிறந்த உயிர்களைத் துடைத்துத் தள்ளுகிறது. நாடுகளுக்கிடையில் போராட்டம் மூண்டு கணக்கற்ற பேர் போரில் மடிந்து போவதற்கும் அவளுடைய கோபமே காரணம். மானுடன் ஒருவனுக்கு நோய் நொடி, கஷ்ட நஷ்டம் வருமானுல் அது ஒரு போக்கில் அன்னையின் கோபமாகிறது. இங்ஙனம் அன்னை சூழ்நிலைக்கேற்றவாறு சினந்துகொண்டு உலகின் நடைமுறையைத் திருத்தியமைத்து வருகிருள். இதுவே சண்டிகா என்னும் நாமத்தின் உட்பொருளாம்.

**चण्डमुण्डासुरनिषूदिनी — சண்டமுண்டாஸுர நிஷூதினி**

சண்டன், முண்டன் என்னும் அசுரர்களைச் சம்ஹாரம் செய்தவள். 756

அன்னையின் சொருபமாகிய இயற்கையின்கண் நலன்கள் இருப்பது போன்று கேடுகளும் உள. கேடுகளிலிருந்து விலகி இருந்து நலனிலே உறுதி பெறுவது வாழ்க்கையின் குறிக்கோள். வரம்புக்குட்பட்ட காமமும் கோபமும் வாழ்க்கைக்கு இன்றியமையாதவையாகின்றன. வரம்பை மீறுமிடத்து அவை வாழ்க்கைக்குப் பெரும் தீங்கை உண்டு பண்ணுகின்றன. இங்ஙனம் பெரும் தீங்கை விளைவிக்கின்ற பிரகிருதிகள் புராண பூர்வமாகச் சண்டன் முண்டன் என்னும் அசுரர்களாகிறார்கள். உயிர் வாழ்விற்கு இன்றியமையாத உணவை அளந்தெடுத்து உண்பது அவசியம். மிகைபட உண்டால் அந்த உணவே வயிற்றினுள் புகுந்து நமக்கு விரோதியாகிறது.

இயற்கைத் தாயின் அமைப்பில் வடிவெடுத்துள்ள விருப்பு வெறுப்பு என்னும் இரண்டு மனநிலைகள் அசுரர்களாகக் கருதப்படுகின்றன. ஆத்ம சாதகன் செய்யவேண்டிய அந்தக் கரண சுத்தியின் புறத்தோற்றமாகச் சண்டமுண்டாஸுர நிஷூதம் அமைந்திருக்கிறது. காமத்தையும் குரோதத்தையும் வென்றவன் தன் நிஜ சொருபத்தில் நிலைபெற்றவனாகிறான். காமமும் குரோதமும் இணைபிரியாதிருப்பது போன்று சண்டன், முண்டன் ஆகிய இரண்டு அசுரர்களும் இணைபிரியாதிருந்து மக்களுக்கு இடுக்கண் செய்கின்றனர். அன்னவர்களை அழித்துத் தள்ளும் அரியபெரிய செயலை அம்பிகை செய்து வருகிறாள். அன்னையை ஆராதிப்பவர்கள் தங்கள் உள்ளத்தில் மறைந்திருக்கின்ற சண்டனையும் முண்டனையும் சம்ஹாரம் செய்தல் வேண்டும்.

**क्षराक्षरात्मिका — க்ஷராக்ஷராத்மிகா** ௭௫௭

கேடுற்றவை, கேடற்றவை ஆகிய பொருள்களின் வடிவில் இருப்பவள். 757

தோன்றி, இருந்து, ஒடுங்குகின்ற பொருள் க்ஷரம் எனப்படுகிறது. இயற்கையில் எங்குத் திருப்பி எப்பொருளைப் பார்த்தாலும் அதில் புதிய வடிவம் உண்டாவதும், உண்டாகிற வடிவம்

சிறிது காலம் நிலைத்திருப்பதும் பிறகு அந்த வடிவத்தை இழந்து அது தோன்றா நிலைக்குப் போவதும் அதனுடைய பாங்காக இருந்து வருகிறது. இருபத்து நான்கு தத்துவங்களை உடைய பிரகிருதியானது சர்வ காலமும் மாறியமைந்து கொண்டே இருக்கிறது. அந்தப் பிரகிருதிக்கு ஆதாரமாயிருப்பது எங்கும் நிறைந்திருப்பதால் அது அசைவதில்லை. இயங்குகின்ற பிரகிருதியினூடு ஊடுருவியிருக்கும் அது பிரகிருதிக்கப்பாலும் இருக்கிறது. நித்தியப் பொருளாகிய அது அக்ஷரம் எனப் பெறுகிறது. ஒவ்வோர் உயிரிடத்தும் மாறியமையும் உடல் தத்துவமும் யாண்டும் இருந்தபடி இருக்கின்ற ஆத்ம தத்துவமும் சேர்ந்து அமைந்துள்ளன. யாண்டும் மாறியமைகின்ற பொருளுக்கு மாறாதிருப்பது ஆதாரம் ஆகின்றது. மாறியமையும் பாங்குடைய நான்கு பூதங்களுக்கும் மாறியமையாத ஆகாசம் ஆதாரமாயிருக்கிறது. இந்த ஆகாசம் சிதாகாசமாகுமிடத்து அது அக்ஷரப் பிரம்மமாக அமைகின்றது. அசையாத கீழ்ப்பகுதியாகவும் அலையெடுத்து விளையாடும் மேல் பகுதியாகவும் எங்ஙனம் கடல் விளங்குகின்றதோ அங்ஙனம் அன்னை பராசக்தி க்ஷரமாயுள்ள பிரகிருதி தத்துவமாகவும் அக்ஷரமாக உள்ள ஆத்ம தத்துவமாகவும் இலங்கிக்கொண்டிருக்கிறாள் என்பது இந்நாமத்தின் கருத்து.

## सर्वलोकेशी — ஸர்வலோகேசீ ७५८

உலகம் அனைத்துக்கும் அரசியாயிருப்பவள். 758

ஈஸ்வரீ என்பது அம்பிகைக்கு அமைந்துள்ள மற்றொரு பெயர். வரம்பை மீறிப் போகின்றவர்களை அடக்கியாளுதல், தன் ஆட்சியில் உள்ள அனைவருக்கும் ஆதரவளித்தல் ஆகிய செயல்கள் ஈஸ்வரிக்கு உரியவை ஆகும். உலக நடைமுறையில் ஒழுங்குப்பாடும் நீதியும் அமைந்துள்ளன. அம்பிகைக்குரிய மற்றொரு நாமம் கோல்வளையாள் என்பதாம். அவளுடைய ஆட்சி முறையில் செங்கோல் பிசகுவதில்லை. யாரெல்லாம் எப்பொழுதெல்லாம் நெறி பிறழ்கிறார்களோ அவர்களுக்கெல்லாம் அப்போதைக்கப்போது அவர்தம் நெஞ்சகத்தில் நிலைத்திருந்துகொண்டு மனவேதனையை வரவழைக்கின்றாள். மனவேதனைப்படாத கல்நெஞ்சக்காரர்களுக்குத் தக்க தருணத்தில் தேகத்துக்குரிய தண்டனை வருகின்றது. இங்ஙனம் அன்னையின் நீதி என்றைக்கும்

பிசகாது உலகெங்கும் நிகழ்ந்து வருகிறது. உயிர்வகைகள் யாவும் வெவ்வேறு பாங்குகளில் காப்பாற்றி வைக்கப்படுகின்றன. அன்னை பராசக்தி உலகங்களனைத்துக்கும் ஈஸ்வரியாக அமர்ந்துகொண்டு தவறாத தன் ஆட்சியில் ஆதரவு கொடுப்பதை முறையாக நடாத்தி வருகிறாள்.

**विश्वधारिणी** — விச்வதாரிணீ ௭௫௯

பிரபஞ்சத்தைத் தாங்குபவள். 759

மண்ணுலகில் வசித்துவரும் அனந்தங்கோடி உயிர்வகைகளுக்கு ஏற்ற பாதுகாப்பு முறைகள் வியப்புக்குரியனவாம். பெற்றோர்களாக இருந்துகொண்டு பிறப்பெடுத்துள்ள சின்னஞ் சிறு உயிர்வகைகளைக் காப்பாற்றி வருவது அன்னை பராசக்தியின் ஆதரவேயாம். பூதங்கள் ஒன்றோடொன்று முரண்படாது பிரபஞ்ச வாழ்க்கையை நல்ல பாங்கில் வைத்திருப்பது அன்னையின் ஆதரவாம். கோளங்கள் ஒன்றோடொன்று மோதிக்கொள்ளாது இனிது இயங்கி வருவது அன்னையின் ஆதரவேயாம். இங்ஙனம் பிரபஞ்சத்தின் அமைப்பில் மிக நுண்ணியதிலிருந்து மிகப் பெரியது வரையில் எந்தப் பகுதியை ஆராய்ந்து பார்த்தாலும் அன்னையின் ஆதரவு புலனாகிறது. ஆகவே விசுவம் முழுவதும் அன்னை பராசக்தியினால் நல்ல பாங்கில் தாங்கி வைக்கப்படுகிறது என்பதற்கு அத்தாட்சி விசுவத்தின் கண்ணே உள்ளது.

**त्रिवर्गदात्री** — த்ரிவர்கதாத்ரீ ௭௬௦

உயிர் வாழ்க்கைக்குரிய உறுதிப் பொருள்கள் மூன்றை வழங்குபவள். 760

தர்மம், அர்த்தம், காமம், மோட்சம் என்னும் உறுதிப் பொருள்கள் நான்கினுள் முதல் மூன்றுமே சிறப்பாக இந்த நாமத்தில் அடங்கியிருக்கின்றன. நான்காவது உறுதிப்பொருளாகிய மோட்சத்தைப் பெறுவது முற்றிலும் பண்பாடடைந்துள்ள மக்களுள் ஒரு சிலருக்கே உரியதாம். தர்மம், அர்த்தம், காமம் என்பவை உயிர்வகைகள் அனைத்துக்கும் பொதுவானவை. ஒவ்வோர் உயிர்வகையும் தன் பாங்குக்கேற்றபடி அறநெறியைப் பின்பற்றுகிறது. சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். ஓர் இனத்தைச் சேர்ந்த பறவைகள் சோலை ஒன்றில் ஏராளமாகக்

கூடி வாழ்ந்திருக்கின்றன. அவற்றுடன் ஏனைய இனத்துப் பறவைகள் வம்புச் சண்டைக்குப் போகமாட்டா. அந்தந்தச் சூழ்நிலையில் அந்தந்த உயிர்வகைகள் நெறி பிறழாது வாழ்ந்து வருகின்றன. மண்ணுலக வாழ்வுக்குத் தேவையான உணவே பொருள் எனப்படுகிறது. ஒரு புஷ்பத்தில் அமர்ந்து தேன் சேகரிக்கும் தேனீ ஒன்றுடன் மற்றோர் ஈ சண்டைக்குப் போகாது. எல்லா விதமான உயிர்களுக்கும் ஏற்ற உணவை அம்பிகை நல்கிக் கொண்டே இருக்கின்றாள். தேவையான உணவை அவை பெற்றுக்கொண்டே இருக்கின்றன. இன்புற்றிருப்பது உயிர் களனைத்துக்கும் சொந்தமாயுள்ள பேறாகும். ஆங்காங்கு வாழ்ந்து வருகின்ற வெவ்வேறு விதமான உயிர்வகைகள் தத்தம் போக்கில் இன்புற்றிருக்கின்றன. எனவே அம்பிகையைத் த்ரிவர்கதாத்ரீ எனப் போற்றுவது முற்றிலும் பொருத்தமானது.

**सुभगा — ஸுபகா** **७६१**

ஞானம், வைராக்கியம், வீர்யம், ஐசுவரியம், **761**
ஸ்ரீ, கீர்த்தி ஆகிய ஆறு தெய்வ சம்பத்துக்களை உடையவள்.

ஷட்குண சம்பத்துக்குரியவளாகிய அன்னை பராசக்தி பகவதி எனப்படுகிறாள். இனிமையும், மேன்மையும், சீர்மையும் அந்தந்தத் தெய்விகச் சம்பத்துக்களில் அமைந்திருப்பதால் அவள் சுபகா என இயம்பப் பெறுகிறாள்.

சூரியனுக்குப் பகன் என்னும் பெயர் அமைந்திருக்கிறது. அதனிடத்துள்ள பிரகாசம் நலன்கள் யாவும் நிரம்பப்பெற்றுள்ளது. அத்தகைய சூரியப் பிரகாசமாக இருந்துகொண்டு அம்பிகை சங்கரனுக்கும் நாராயணனுக்கும் மகிமைகளை வழங்கிக்கொண்டிருக்கிறாள். பிரபஞ்சம் எங்குமுள்ள சரம், அசரம் ஆகிய யாவும் பெற்றுள்ள மகிமைகள் அன்னை பராசக்தியிடமிருந்து வந்துள்ளவைகளாம்.

ஐந்து வயதுச் சிறுமி ஒருத்தி பகா எனப்பெயர் பெறுகிறாள். சின்னஞ்சிறு வயதில் அவளிடம் தெய்விகப்பெற்றியே பொலிந்து கொண்டிருப்பதால் அச்சிறுமி சுபகா என இயம்பப்பெறுகிறாள். எல்லாவிதமான மகிமைகளோடு கூடிய ஐந்து வயதுள்ள சிறுமியாக அம்பிகை அமைந்துள்ளாள் என்பது கோட்பாடு.

**त्र्यम्बका — த்ரயம்பகா** ७६२
மூன்று கண்களை உடையவள். 762

சூரியன், சந்திரன், அக்னி ஆகிய மூன்றும் அம்பிகைக்குக் கண்களாக அமைந்திருக்கின்றன. இவை மூன்றின் வெளிச்சம் இல்லாதவிடத்து ஜீவாத்மாக்களுடைய கண்கள் செயலற்றுப் போகின்றன. கண்கள் செயல்புரிவதற்கு இந்த மூன்று தேவதை களின் பிரகாசம் அவசியமாகிறது. ஆதலால் இவைகளைத் தன் நேத்திரங்களாக அம்பிகை உடைத்திருப்பதில் பொருள் மிகப் புதைந்திருக்கிறது.

திரிமூர்த்திகளாகிய பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகியவர் களுக்கு அன்னை என்னும் ஸ்தானத்தை அம்பிகை பெற்றிருப்ப தால் அவள் த்ரயம்பகா என்று அழைக்கப்படுகின்றாள்.

**त्रिगुणात्मिका — த்ரிகுணாத்மிகா** ७६३
முக்குண வடிவினள். 763

மண்ணினின்று மட்பாண்டங்களனைத்தும் அமையப்பெறு வது போன்று பிரபஞ்சம் முழுவதும் சத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்களால் ஆக்கப்பெற்றது. அன்னை பராசக்தி தானே இம்மூன்று குணங்கள் மயமாக அமைந்துள்ளாள். ஆதலால் அம்பிகை வேறு, பிரபஞ்சம் வேறு அன்று. பஞ்சேந்திரியங்கள் மூலமாகப் பிரபஞ்சம் நமக்குப் புலப்படுகின்றது. எனவே நாம் யாண்டும் அம்பிகையின் சன்னிதியில் இருந்துகொண்டு அம் பிகையையே தரிசித்துக்கொண்டும், அவளுடைய ஆதரவில் வளர்ந்துகொண்டும் வருகிறோம். முக்குணமயமாயுள்ள அன்னை பராசக்தியின் சொரூபத்தில் ஜீவகோடிகளனைத்தும் அடங்கி யிருக்கின்றன.

இவ்வுலகமாகிய காட்டில் உள்ள சத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய திருடர்கள் மனிதனுடைய ஆத்ம ஞானம் என்னும் பொரு ளைக் கவர்ந்துகொள்கின்றனர். ரஜஸ், தமஸ் ஆகிய குணங்கள் மனிதனை உலகப் பந்தத்தில் கட்டுப்படுத்துகின்றன. சத்வகுணம் அந்தப் பந்தத்திலிருந்து அவனை விடுவிக்கின்றது. நாம் அயர்ந்து உறங்குகின்றபொழுது உணர்ச்சியற்ற, ஜடமயமான தமோகுணத்

தில் மூழ்கியிருக்கின்றோம். நித்திரையினிடத்துத் தெய்விகமான இணக்கம் பூண்டு நித்திரையைச் சிறிது சிறிதாகக் குறைப்பது அம்பிகையின் வழிபாடாகிறது. கறுப்பு நிறமான தமோகுணத்தைப் படிப்படியாக வென்று ரஜோகுணத்துக்கு ஆத்ம சாதகன் வரவேண்டும். திறமையுடன் மேலான செயல்களைப் புரிவதும் நடமாட்டங்கள் யாவும் ரஜோகுணத்தில் அடங்குகின்றன. சிரத்தையுடன் முறையாக வினையாற்றுபவன் பண்பாட்டில் மேலே வருகிறான்.

பண்புடன் செய்கின்ற செயல்கள் யாவும் ஞானத் தெளிவை உண்டுபண்ணுகின்றன. செயல் புரிவதற்கிடையிலும் நடுநிலை பிறழாதிருப்பது சத்வகுணத்தின் பாங்கு. முறையாக ரஜோ குணத்தைப் பயன்படுத்துவதன்மூலம் ஒருவன் சத்வ குணத்தை எட்டலாம்.

இயங்காது தரையில் கிடக்கும் பம்பரம் தமோகுணமயமானது. தடதடவென்று சுழல்கின்ற பம்பரம் ரஜோகுணமயமானது. சுழல்கின்ற நிலையிலும் அசைவற்றிருப்பது போன்று காட்சிகொடுத்துக்கொண்டு சுழல்கின்ற பம்பரம் சத்வ குணமயமானது. ஆத்ம பரிபாகத்தில் மேல் நிலைக்கு வந்துள்ள சத்வ குணம் நிரம்பிய மனிதனின் வாழ்வு இடையறாத வழிபாடாகின்றது. உலகத்தோடு நாம் வைக்கின்ற இணக்கமே உண்மையான கடவுள் வழிபாடாகிறது. தோன்றியுள்ள அனைத்துமாய் அம்பிகை இருப்பதால் உயிர்களனைத்திடத்தும் முறையான நல்லிணக்கம் வைத்துப் பழகுதலே தலை சிறந்த ஆராதனையாகிறது.

கோயிலில் மூர்த்தியாகப் பிரதிஷ்டை பண்ணப்பட்டிருப்பதைக் கல்லாகவோ, செம்பாகவோ காணாமல் நாம் அதைக் கடவுள் மயமாகக் கண்டு பழகுகிறோம்; பிறகு இருந்த இடத்திலிருந்து கொண்டு கை கூப்பி நாலாபக்கமும் வணங்குகின்றோம். காண்பதையெல்லாம் கடவுள் மயமாகக் காணுதல் வேண்டும் என்பது அதன் உட்கருத்து. முக்குணமயமாயுள்ள அம்பிகை பிரபஞ்ச மயமாகக் காட்சி கொடுத்து நம்மைப் பண்படுத்துகிறாள். அவளுடைய பண்பாட்டுக்கு உட்பட்டிருப்பவர்கள் எல்லாரும் நல்ல ஆத்ம சாதகர்களாகிறார்கள்.

**स्वर्गापवर्गदा — ஸ்வர்க அபவர்கதா** ७६४

சொர்க்கத்தையும் நித்தியானந்தத்தையும் 764
வழங்க வல்லவள்.

பூலோக வாழ்க்கையில் ஒவ்வொரு சுகத்தையும் தொடர்ந்து துக்கம் வருகிறது. துன்பம் கலவாத இன்பத்தைச் சொர்க்க லோக இன்பம் என்கிறோம். இவ்விரண்டு வித இன்பங்களும் வினைப்பயன்களாக வாய்க்கின்றன. பூலோகத்தில் உயிர்களை ஊத்தும் துய்க்கும் இன்பத்தைத் தொடர்ந்து துன்பம் வருகிறது என்னும் உண்மை மண்ணுலக வாழ்வை முறையாக ஆராய்ந்து பார்க்கின்றவர்களுக்கு விளங்குகிறது. யாண்டும் தங்குத் தடையற்ற இன்பத்தைத் துய்த்துவரும் விண்ணுலக வாசிகளும் தம் புண்ணியம் என்னும் நல்வினைப் பயன் முடிவுற்றதும் மீண்டும் மண்ணுலகில் பிறந்தாக வேண்டும். ஆக, இம்மை, மறுமை ஆகிய இரண்டு உலகங்களிலும் தேகம் எடுத்தவர்கள் பெறுகின்ற இன்பத்துக்கு முடிவு உண்டு. அன்னையின் அருளால் உயிர்களுக்கு வந்து வாய்க்கும் இந்த நிலையற்ற இன்பத்துக்கு மேலாகப் பேரின்பம் என்பதொன்று உண்டு. பிரம்மஞானத்தின் விளைவாக அதை அடையப்பெறுகின்ற ஞானி யாண்டும் பிரம்மானந்தத்திலேயே திளைத்திருக்கிறான். இன்பதுன்பமயமான பிறவிப் பிணியில் அவன் அகப்பட்டுக்கொள்வதில்லை. நிலையற்ற இன்பத்தையும் நிலையுற்ற இன்பத்தையும் நல்குபவள் என்பது இந்நாமத்தின் உட்பொருளாம்.

**शुद्धा — சுத்தா** ७६५

யாண்டும் தூயவளாய் இருப்பவள். 765

உலக வாழ்வில் ஈடுபட்டுள்ள உயிர்கள் மாசற்றிருப்பதும் மாசுபடிந்திருப்பதும் ஆகிய இரண்டு நிலைகளில் மாறி மாறி இடம்பெற்று வருகின்றன. புறத்திலுள்ள பொருள்களால் பாதிக்கப்பட்டு நாம் புனிதத்தை இழக்கிறோம். ஒருபொருள் அல்லது ஓர் உயிர் புனிதத்தை இழப்பதற்கு தனக்குப் புறம்பான பொருள் அல்லது சூழ்நிலையோடு இணக்கம் கொள்ளவேண்டும். சான்றொன்று எடுத்துக்கொள்வோம். புனிதமானவை என்று கருதப்படும் பசுவின் பாலையும் கங்கா ஜலத்தையும் ஒன்றாகச்

சேர்த்தால் அவை இரண்டும் தம் தூய்மையை இழக்கின்றன. மக்களாகிய நாம் நம்முடைய அக்ஞானம் காரணமாகத் தூய்மையை இழக்கிறோம். அறியாமையின் விளைவாக ஆத்மசொரூப மாகிய நாம் பிரகிருதியோடு நம்மை இணைத்துக்கொள்வதால் சுத்தத்தைக் கைவிட்டவர்களாக இருந்து வருகிறோம். யாண்டும் தன்மயமாயிருக்கிற அன்னை பராசக்தியை மலினப்படுத்துதற்கு இரண்டாவது பொருள் இல்லை. அவள் எப்போதும் சுத்தமாகவும், குற்றமற்றவளாகவும், மாசு படியாதவளாகவும், அருள் நிறைந்தவளாகவும் விளங்கி வருகிறாள். அவளுடைய இப்பெரு நிலையைத் தியானிப்பது நல்ல ஆத்ம சாதனமாகிறது.

### जपापुष्पनिभाकृति — ஜபாபுஷ்பநிபாக்ருதி ७६६

செம்பருத்திப் புஷ்பத்துக்கு நிகரான நிறத்தை உடையவள். 766

அன்னை பராசக்தி தானே இவ்வுலகாக இலங்கி வருகின்றாள். அன்னை பராசக்தியின் சொரூபங்களாக அமைந்துள்ள வஸ்துக்களுள் மலர்களிடத்துத் தனி மகிமையொன்றைக் காணலாம். இன்று மலர்ந்திருக்கும் அவை நாளை வாடிப்போகின்றன. அன்றலர்ந்த பூக்களைக்கொண்டே நாம் பராசக்தியை வழுத்துகின்றோம். கவிஞர்களும் ஞானிகளும் மலரில் தெய்விகத்தைக் கண்டு மகிழ்ந்திருக்கின்றனர். ஆத்ம சாதகர்கள் செக்கச் செவேலென விளங்கும் செம்பருத்தி போன்ற மலரிலே மனதைச் செலுத்திப் பழகுவார்களேயானால் மனப்பரிபாகமும், ஆத்மானந்தமும் இயல்பாகவே அவர்களுக்கு உண்டாகும். மலர்தூவி அம்பிகையை வழிபடுகின்றவர்கள் அம்மலரிலேயே அவளுடைய சான்னித்தியத்தை உணர்வார்களானால் வழிபாட்டில் அவர்கள் விரைந்து மேலோங்குவார்கள்.

### ओजोवती — ஓஜோவதீ ७६७

ஓஜஸ் என்னும் அருள் ஒளியை உடையவள். 767

நேர்மையான வாழ்க்கை வாழ்ந்து வருபவர்களுக்குப் பொலிவு தானாக வந்து வாய்க்கிறது இப்பொலிவானது உடலின்கண் ஒளிர்ந்து கொண்டிருக்குமானால் அது தேஜஸ் என்னும் பெயர் பெறுகிறது. இதே பொலிவு உள்ளத்தினுள் தெளிவை

யும் பிரகாசத்தையும் உண்டுபண்ணுமானல் அதற்கு ஓஜஸ் என்னும் பெயர் வருகிறது. நெறியற்றவர்களிடத்தும் உடல் திட்பத்தையும் பொலிவையும் காணலாம். நேர்மையான வாழ்வு வாழ்கின்றவர்களுக்கே அகத்தெளிவும் அருள் ஜோதியும் வாய்க்கின்றன. ஓஜஸின் விளைவாக அருள் திட்பமும், ஞான வல்லமையும், எண்ணியது எண்ணியாங்கு செய்து சாதிக்கும் தளராத திட்பமும் தாமாக வந்தமைகின்றன. அத்தகைய மேலான ஓஜஸ் மயமாக அன்னை பராசக்தி இலங்குகின்ருள்.

**द्युतिधरा — த்யுதிதரா** ௭௬௮

*பிரகாசத்தை உடையவள்.* 768

அன்னை பராசக்தி தானே உலகனைத்துமாய் விளங்குவதால் உலகில் அமைந்துள்ள பொருள்களனைத்திலும் பிரகாசம் பொலிந்து கொண்டிருக்கிறது. பூமியில் விளைந்துள்ள பல்வேறு நிறங்களுடைய கற்களை எடுத்து முறையாகத் தேய்த்து நயப்படுத்தினல் அவற்றின் மேல் படியும் சூரிய வெளிச்சம் அக்கற்களுக்குரிய நிறங்களாகிய சிவப்பு, பச்சை, மஞ்சள், நீலம் முதலிய நிறங்களுடன் மிளிர்வதைக் காணலாம். இச்சிறப்பு விளைந்த மரப் பலகைகளிலும் தங்கம், வெள்ளி, தாமிரம் போன்ற வெவ்வேறு நிறங்களை உடைய உலோகங்களிலும் அமைந்திருக்கிறது. காலை வேளையில் புஷ்பங்களின் மீது படிந்திருக்கும் பனித்துளி ஒன்றின் மீது சூரிய கிரணம் படிகின்றபொழுது அதில் விதவிதமான நிறங்கள் ஒளிர்கின்றன. இவையாவும் அம்பிகையிடம் அமைந்துள்ள பிரகாசத்தின் புறத்தோற்றங்களாம்.

**यज्ञरूपा — யக்ஞரூபா** ௭௬௯

*வேள்வி வடிவினள்.* 769

சக்தி, சிவம், விஷ்ணு ஆகிய மூர்த்திகள் யக்ஞ சொரூபிகளாக இலங்குகின்றனர். பிரஜாபதி தாம் படைத்த பிரஜைகளோடு யக்ஞத்தையும் படைத்தார். பிரஜைகள் முன்னேற்றமடைவதற்கு யக்ஞம் ஒன்றே உற்ற உபாயம் என்று அவர் இயம்பினர். வேள்வித் தீ மூட்டிச் செய்யப்படும் கிரியைகள் கர்ம காண்ட முறைப்படி யக்ஞமாகக் கருதப்படுகின்றன. தீயில் தகனமாகின்றவை அழிந்துபட்டுப் போகாமல் சூட்சும நிலை எய்து

கின்றன. காற்ருேடு கலந்து அவை உடனுக்குடன் ஸ்தாவரங்களுக்கு உணவாகின்றன. பயன்படாது கீழ்நிலையில் கிடப்பவற்றை மேல்நிலைக்கு மாற்றியமைக்க வல்லது அக்னி.

உடல் எடுத்துள்ள ஜங்கமங்களனைத்தும் ஐம்பொறிகளைப் பயன்படுத்திப் பிரபஞ்சம் நல்குகின்ற இன்பத்தைத் துய்த்து வருகின்றன. அவ்வாறு இயற்கை வழங்குகின்ற இன்பம் அதி விரைவில் துன்பமாக மாறியமைகின்றது. எனவே அவ் உயிர் வகைகள் பிறவிப் பெருங் கடலில் உழன்று வருகின்றன. ஆனல் இதே ஐம்பொறிகளைக் கடவுள் வழிபாட்டுக்காகவென்று நாம் பயன்படுத்தலாம். உடலின் உள்ளே இருக்கும் வைஸ்வானர அக்னியை ஞானக்னியாகக்கருதி அதனிடத்து உணவை ஆஹுதியாகப் படைக்கிறவன் நல்ல யக்ஞ மூர்த்தியாகிறான். பார்க்கும் பொருள்களையெல்லாம் கடவுள் மயமாகக் காண்கின்றபொழுது அவைகளிடத்துள்ள நலன்களும் கேடுகளும் தெய்விகத்திட்டத்தில் அடங்குகின்றன. எது நமக்குக் கெட்டதாகத் தோன்றுகிறதோ அதன் மூலமாகவும் உயிர்களின் முன்னேற்றத்துக்கான சூழ்நிலைகளை இறைவன் அமைத்து வைக்கிறார் என்பது வெளியாகிறது. காது கொடுத்துக் கேட்பனவற்றையும் ஸ்பரிசஉணர்ச்சி உண்டுபண்ணுபவற்றையும் மோப்பச் சக்தியையும் தேவாராதனையாகமாற்றியமைக்கலாம். உலக நடைமுறைக்குரிய கிரியைகளைத் தெய்விகம் வாய்ந்தவைகளாக மாற்றியமைப்பது யக்ஞம் எனப்படுகிறது. கடவுள் வழிபாட்டுக்கென்று மனிதன் ஒருவன் மலர் கொய்வானாகில் அது யக்ஞமாகிறது. ஆத்ம போதத்தை வளர்க்கும் கர்மங்கள் யாவும் பரம்பொருளின் விபூதிகளை விளக்குவதால் அவை யக்ஞம் ஆகின்றன. யக்ஞமயமாக அம்பிகை இருப்பதால் தங்களை யக்ஞ மூர்த்திகளாகத் திருத்தியமைத்துக் கொள்ளும் தெய்வப்பெற்றி வாய்க்கப்பெற்ற நன்மக்களே கடவுள் வழிபாட்டுக்குத் தகுதி உடையவர்களாகிறார்கள் என்னும் கருத்து இந்நாமத்தில் அடங்கியுள்ளது.

**प्रियव्रता — ப்ரியவ்ரதா** ௭௭௦

*விரதங்கள் எடுப்பதில் மகிழ்ந்திருப்பவள்.* 770

உலகப்பொருள்களில் பற்று வைத்திருக்கின்ற மனிதன் ஒன்றன்பின் ஒன்ருக அப்பற்றுதல்களை ஒதுக்கித் தள்ளவேண்டும்.

அப்பொழுது அவன் மானுட ஜன்மத்தை முறையாகப் பயன் படுத்தியவனுகிறான். நிர்ப்பந்தத்தை முன்னிட்டு விரதம் எடுத்துக் கொள்வது பொருந்தாது. மக்கள் மகிழ்வோடு தாங்கள் பற்றுதல் வைத்துள்ள பொருள்களை ஒதுக்கித் தள்ளும்போது விரதத்தின் உட்பொருள் அனுஷ்டிக்கப்படுகிறது. ஆனல் உலகப்பற்றில் அழுந்திக்கிடக்கின்றவர்கள் தங்களுக்கு ஒவ்வாத பாகற்காய், வேப்பம் பழம் ஆகிய பண்டங்களைத் தியாகம் பண்ணுவதாகப் போலி விரதம் எடுத்துக் கொள்கின்றனர். அவர்கள் தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்பவர்களாகின்றனர்.

சத்திய விரதத்தில் பெருமகிழ்வு பூண்டிருந்த இராமன், தர்ம மார்க்கத்திலிருந்து பிசகாதிருந்த யுதிஷ்டிரன் ஆகிய மூர்த்திகளே அன்னையின் மகிமையை உள்ளபடி அறிந்துகொள்ள வல்லவர் களாகிறார்கள். நல்ல விரதங்கள் எடுப்பதில் அம்பிகை பேருக்க மும் பரம திருப்தியும் உடையவளாயிருக்கின்றாள். அவளுடைய பாங்குக்கொப்ப விரதம் எடுத்துக்கொள்கின்றவர்களே அவளு டைய வழிபாட்டுக்குத் தகுதியுடையவர்களாகின்றனர். அன்னவர் களே அவளுடைய அருளுக்குப் பாத்திரமாகின்றார்கள்.

**दुराराध्या — துராராத்யா** ७७१

ஆராதனைக்கு அரியவளாயிருப்பவள். 771

ஐம்பொறிகளுக்கு அடிமைப்பட்டிருப்பவர்கள் மனம்போன போக்கில் எல்லாம் போய்க்கொண்டிருக்கின்றனர். அந்தக்கரண மாகிய மனதை அடக்கியாளத் தெரியாதவர்களும், புறக்கரணங் களாகிய மெய், வாய், விழி, நாசி, செவி ஆகிய ஐம்பொறிகளுக்கு அடிமைப்பட்டிருக்கிறவர்களும் மானுட ஜன்மத்தைச் சரியாகப் பயன்படுத்துபவர்களாகமாட்டார்கள். வடிவத்தில் அன்னவர் கள் மக்கள் எனினும் பாங்கில் அவர்கள் மக்களாகமாட்டார்கள். கருவிகரணங்களை அடக்கியாளுதற்கேற்ப மக்கள் மேன்மக்களா கின்றனர். அப்படியல்லாது அக்கருவிகரணங்களுக்கு அடிமைப் பட்டிருப்பவர்கள் கீழோராகின்றனர். அன்னவர்களை மாக்கள் என் றும் இயம்பலாம். பரிபாகத்தில் பண்படாதிருப்பவர்கள் அன்னை பராசக்தியைச் சரியாக வழிபடமாட்டார்கள். அத்தகையவர் களுக்கு அன்னையின் ஆராதனை மிகக் கடினமாக இருக்கிறது. தன்னடக்கம் பழகுகிறவர்கள் இக்கீழ்மையினின்று விலகிப் படிப்

படியாக மேல் நிலைக்கு வருதல் வேண்டும். அப்படி வந்தான பிறகே அன்னையின் ஆராதனை எளிதாக நிறைவேறுகிறது.

**दुराधर्षा — துராதர்ஷா** ७७२

யாராலும் வெல்ல முடியாதவள். 772

மஹாசக்தியாகவும் பராசக்தியாகவும் யாண்டும் இலங்கிக் கொண்டிருக்கும் அம்பிகையின் பேரமைப்பில் வடிவெடுத்துள்ள அரக்கர்களை அடக்கியாள மக்களில் யாருக்கும் இயலவில்லை. முரட்டுத்தனமும் கொடூரத்தனமும் வாய்ந்த தங்களை யாரும் வெல்ல முடியாது என்று அந்த அரக்கர்கள் செருக்குற்று இருந்தனர். எந்தப் பராசக்தியிடமிருந்து தங்களுடைய ஆற்றல்களைப் பெற்றார்களோ அந்தப் பராசக்தியையே அடிபணியச் செய்ய முடியும் என்ற ஆணவம் பூண்டவர்களாக அரக்கர்கள் ஆதிக்கம் செலுத்தி வந்தனர். தக்க தருணத்தில் அவர்களைத் தோற்கடித்து அன்னை அடக்கியாண்டாள். அன்னையின் ஆட்சி மீது ஆக்கிரமிப்புச் செய்ய யாருக்குமே இயலாது. அவளுடைய அருளை நாடுபவர்கள் பாக்கியவான்கள். அவளுடைய அருளையும் ஆதிக்கத்தையும் புறக்கணிக்க முயலுபவர்கள் தோல்வியுறுவது திண்ணம்.

**पाटलीकुसुमप्रिया — பாடலீகுஸுமப்ரியா** ७७३

பாதிரிப் புஷ்பத்தில் பிரியம் உள்ளவள். 773

பாதிரிப் புஷ்பம் வெளுத்த சிவப்பு நிறம் உடையதாயிருக்கும். சிவனுக்கு இது மிகப் பிரியமானது என்பது ஐதிகம். சிவனுக்குப் பிரியமாயுள்ள புஷ்பம் அம்பிகைக்கும் பிரியமானது என்பது சொல்லாமலே விளங்குகிறது.

**महती — மஹதீ** ७७४

மிகப் பெரியவள். 774

அண்டகோடிகளனைத்தும் ஜீவகோடிகளனைத்தும் அன்னையிடமிருந்தே தோற்றத்துக்கு வந்திருப்பதால் அன்னை அவை யாவற்றுக்கும் மிக்காளாகவும் பெரியவளாகவும் இருப்பது இயல்பு. தகுதி வாய்ந்த புஷ்பங்கள் பல ஒரு விருக்ஷத்தினின்று தோன்றுகின்றன. அப்புஷ்பங்களுக்குக் காரணமாயிருப்பது

மரம். யாண்டும் காரியத்திலும் மிக்கது காரணம். பிரபஞ்சத்தில் அமைந்துள்ள மதிப்பிட முடியாத பொருள்கள் யாவற்றுக்கும் மூலகாரணமாய் இருப்பவள் அம்பிகை. வண்ணத்தில் பெரிய தாய் இருப்பது ஆகாசம். தோற்றத்துக்கு வந்துள்ள பூதங்கள் அனைத்தும் எங்கும் வியாபித்துள்ள ஆகாசத்தினின்று வந்தவைகள். அளப்பரிய அந்த மகா ஆகாசமே அன்னையிடமிருந்து தோற்றத்துக்கு வந்துள்ளது.

நாரதர் பயன்படுத்துகின்ற வீணைக்கும் மஹதீ என்னும் பெயர் அமைந்திருக்கிறது. யாண்டும் பரவஸ்துவின் மகிமையைப் போற்றிப் பாராட்டுவதற்கு உபகரணமாக இந்த வீணை அமைந்திருப்பதால் அதனிடத்தும் தெய்விகப் பெருமை அமைந்திருப்பது தேற்றம். இந்த வீணையின் சொரூபமாகவும் அன்னை பராசக்தி யாண்டும் இலங்கிக்கொண்டிருக்கிறாள்.

**मेरुनिलया — மேருநிலயா** ७७५

மேருமலையைத் தன் வாசஸ்தலமாகக்கொண்டிருப்பவள். 775

மானுட அமைப்பில் உள்ள மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரம், அனாஹதம், விசுத்தம், ஆக்ஞை, சஹஸ்ராரம் என்னும் ஏழு ஞானபூமிகளுள் உச்சந்தலையில் இருக்கும் சஹஸ்ராரமே முதன்மை பெறுகிறது. அதில் சிவமும் சக்தியும் அபேத நிலையில் வீற்றிருக்கின்றனர். மேரு, சுமேரு, பொன்மலை ஆகியவை ஏழாவது ஞானபூமிக்கு அமைந்துள்ள ஏனைய நாமங்களாகின்றன.

கயிலாயகிரிக்கும் வடக்கே அமைந்துள்ள மேருமலை உருக்கிய தங்கம் போன்று பொன்மயமாகப் பிரகாசித்துக்கொண்டிருக்கிறது. அதன் மூன்று உச்சிகளின்மீது சிருஷ்டிகர்த்தாவாகிய பிரம்மதேவனும், விஷ்ணுவும், ருத்திரனும் வீற்றிருக்கிறார்கள். அவற்றுக்கு நடுவே மிக உயரத்தில் நான்காவது உச்சியில் அம்பாள் தன் ஸ்ரீநகரத்தில் வீற்றிருக்கிறாள் என்பது ஐதிகம்.

பண்டாசுரனோடு போர்புரிந்து அவனைத் தோற்கடித்தாள் அம்பிகை. அதன் பிறகு அம்பிகைக்கும் காமேஸ்வரருக்கும் பொருத்தமான வாசஸ்தலம் அமைக்கத் தேவர்கள் எல்லாரும்

ஒன்றுகூடி ஆலோசித்தனர். தேவசிற்பியாகிய விஸ்வகர்மாவையும் அசுர சிற்பியாகிய மயனையும் கொண்டு இவ்வாசஸ்தலம் அமைக்கப்பெற்றது என்பது மற்றொரு கோட்பாடு.

**मन्दारकुसुमप्रिया — மந்தாரகுஸுமப்ப்ரியா ७७६**

மந்தாரப் புஷ்பத்தில் விருப்பம் உள்ளவள். 776

மந்தாரப் புஷ்பம் வெள்ளெருக்கு எனவும் பெயர் பெறுகின்றது. அதில் பிரியம் மிக வைத்திருப்பவள் அம்பிகை.

**वीराराध्या — வீராராத்யா ७७७**

வீரர்களால் போற்றப்படுகிறவள். 777

எவன் ஒருவன் ஆண்மையும் வலிவும் மிகப்படைத்திருக்கின்றானோ அவனே மக்களுள் காளை எனப் போற்றப் பெறுகிறான். அத்தகையவன் தர்மத்தையே எங்கும் நிலைநாட்ட முற்படுவானாகில் அவன் வீரன் எனப் பாராட்டப்படுகிறான். வலிவு மிகப்படைத்தவன் மேலும் வலிவைப் பெற என்ன செய்யவேண்டும் என்பதைப் பிறரால் ஓதப் பெறாது தானே அறிந்துகொள்கிறான். ஆற்றல்கள் அனைத்துக்கும் உறைவிடமாகிய அம்பிகையை அவன் இயல்பாகவே சரண் அடைகின்றான். அம்பிகையிடமிருந்து அதிக வீரியத்தை அவன் மேலும் மேலும் பெறுகிறான். அப்படிப் பெற்ற வீரியத்தைத் தர்ம ஸ்தாபனத்தின் பொருட்டே அவன் பயன்படுத்துகிறான். அத்தகைய பெருமகனால் அம்பிகை போற்றப்படுவதால் வீர ஆராத்யா என்னும் பெயர் அவளுக்கு வாய்க்கிறது.

**विराड्रूपा — விராட்ரூபா ७७८**

ஸ்தூலமாய்த் தென்படுகின்ற பிரபஞ்சம் அனைத்துமாய் வடிவெடுத்திருப்பவள். 778

ஊனக்கண்கொண்டு நாம் காணும் பிரபஞ்சமாக அன்னை வடிவெடுத்துள்ளாள். எல்லாப் படித்தரங்களிலும் யாண்டும் காட்சிக்குரிய எல்லாமாய் அவள் இலங்குகின்றாள். காண்பதற்கு அவளைத் தவிர வேறு ஒன்றுமில்லை. அவளுடைய பாங்கை அறிந்துகொள்ளாதவர்களே தரிசனத்தின்பொருட்டு அவளைத் தேடியலைகின்றனர். உள்ளபடி அவளைப் பொருள்படுத்த நாம்

அறிந்துகொள்வோமானல் நாம் அனைவரும் அவளுடைய மடியிலேயே அன்புடன் பாதுகாத்து வளர்க்கப்படுகிறோம் என்பது விளங்கும். கடவுளைக் காண், அவரைத் தேடி அலையாதே என்பது கோட்பாடு. பக்தியிலும் ஞானத்திலும் நாம் ஊறியிருப்போமானல் அப்பொழுது அவளுடைய விராட் சொருபத்தை உள்ளபடி கண்டு அதில் திளைத்திருக்க நமக்குச் சாத்தியமாகின்றது. மீன் எங்ஙனம் நீரினுள் வசித்து அதில் விருத்தியடைந்து வருகின்றதோ அதே விதத்தில் அன்னையின் அருளால் அன்னையினிடத்திலேயே நாம் நிலைபெற்றிருந்து அவளால் பேணப்பட்டு வருகிறோம்.

நல்லதாகவும் பொல்லாததாகவும் நாம் பொருள்படுத்துவதெல்லாம் நம் பேதமையினலேயாம். பொல்லாததாகத் தென்படும் வடிவங்களின் வாயிலாகவும் அன்னையின் சான்னித்தியம் அரியபெரிய காரியங்களைச் சாதிக்கிறது. இவ்வுண்மையைப் புத்தியோகம் பூண்டு காண்போமாகில் நாம் பாக்கியவான்கள் ஆகிறோம். அம்பிகையின் விராட் ரூபமும் அர்ஜுனன் பார்த்த கிருஷ்ணனுடைய விஸ்வ ரூபமும் ஒன்றேயாம். கடல் எவ்வாறு எப்பொழுதும் இருந்தபடி இருக்கிறதோ அவ்வாறு பரவுஸ்துவின் விராட்ரூபம் யாண்டும் உளது. ஞானக்கண் அமையப்பெற்றவன் அதன் பாங்கை உள்ளபடி காண வல்லவனாகின்றான். பிரபஞ்சத்தோற்றமாகிய அன்னையின் ஸ்தூலவடிவ விராட்ரூபம் தன்னளவில் யாண்டும் இருந்து வருகிறது.

**विरजाः — விரஜா:** ७७९

பாபமில்லாதவள். 779

பாபத்தின் விளைவாக ஜீவாத்மன் தன்னைப் பரமாத்மனுக்கு அன்னியமானவன் எனக்கருதிக்கொள்கிறான். நீரினுடைய நீர்மையில் துளி ஜலம் வேறு, கடல் வேறு அன்று. துளி என்னும் உபாதி தான் வேறு, கடல் நீர் வேறு எனக்கருதும்படித் தூண்டுகிறது. நீரினுடைய நிஜநிலைக்கு இடைஞ்சலாயிருப்பது துளி என்னும் பான்மை. தனக்குச் சொந்தமல்லாத ஒரு பான்மையைச் சொந்தமாகக் கருதிக்கொள்வது பாபம். ஆத்மாவைப் பிறப்பு இறப்பு உடைய கர்மி என்று கூறுவது பாபம். ஜீவாத்மனைத் தாற்காலிகமாகப் பாதிக்கின்ற பாபம் ஏதும் அகிலாண்ட நாயகி

யாகிய அன்னையை அணுகமாட்டாது. சூரியனிடத்தில் எங்ஙனம் இருள் இல்லையோ அங்ஙனம் அன்னை பராசக்தியிடம் ரஜஸ் என்னும் இருளுக்கு இடமில்லை. குறைநிலையில் இருக்கின்ற மனிதனுக்கு ரஜஸ் என்று பொருள்படும் ஆசை உண்டு. அனைத்தையும் அடையப்பெற்றிருப்பவனுக்கு ஆசை ஏதும் இல்லை. அன்னை பராசக்தி ஆசைக்கு அடிமைப்பட்டுத் தேடவேண்டியது ஒன்றுமில்லை. ஆதலால் அவள் விரஜா என்று பாராட்டப்பெறுகிறாள்.

ஒரிஸா மாகாணத்தில் உள்ள விரஜா என்னும் க்ஷேத்திரத்துக்கு அதிஷ்டான தெய்வமாயிருப்பவள் விரஜா என்னும் நாமம் படைத்திருக்கிறாள்.

**विश्वतोमुखी** —விச்வதோமுகீ ௭௮௦

எல்லாப் பக்கங்களிலும் முகத்தை உடையவள். 780

பக்தன் ஒருவன் அம்பிகையின் சான்னித்தியத்தில் இருப்பதற்கு எந்தத்திக்கை நோக்கி அமர்ந்து அவன் தியானம் பண்ண வேண்டும் என்னும் கேள்விக்கு இடமில்லை. திக்கனைத்தும் அவள் சொரூபம். நீக்கமற எங்கும் நிறைந்துள்ள அம்பிகையின் சான்னித்தியத்தை ஆத்ம சாதகன் எங்கும் நிறைபொருளாகக் காண்கிறான்.

**प्रत्यग्रूपा** — ப்ரத்யக்ரூபா ௭௮௧

உள்ளத்தினுள்ளே காட்சி கொடுக்கும் வடிவத்தை உடையவள். 781

கட்புலனாகாதபடி எதிரில் இருக்கும் வடிவங்களை மறைக்கின்ற திரை போன்ற பொருள்களை ஒதுக்கித்தள்ளுதற்குப் பிரத்யக் என்னும் பதம் கையாளப்படுகிறது. காண்போனுடைய அகக் காட்சியினின்று அம்பிகையை மறைத்துவைப்பதற்குப் பிரத்யக் ஏதுமில்லை. ஆதலால் ஆத்ம சாதகனுடைய அந்தர்முகக் காட்சியில் அன்னை பராசக்தி யாண்டும் இருந்துவருகிறாள். அந்தர்முகக் காட்சிக்கு எதிரிடையாயிருப்பது பராங்முகக் காட்சி. ஏகதேசம் பண்பாடு அடைந்திருப்பவர்களுக்குப் பிரத்யக் ரூபம் சதா விளங்கிக்கொண்டிருக்கிறது. பராங்முக ரூபம் பரிபாகத்தை முன்னிட்டு விளங்குவதாகவோ விளங்காததாகவோ இருக்கிறது.

நிறைஞானம் அடையப் பெற்றவனுக்கு அந்தர்முக ரூபா, பராங் முக ரூபா ஆகிய இரண்டையும் தாண்டிய நிலை வந்தமைகிறது.

சாதன தசையிலிருப்பவன் புறக்காட்சியில் பஞ்சேந்திரியங் கள் மூலமாகக் கருத்தைச் செலுத்தாது உள்நோக்கத்திலேயே கருத்தைச் செலுத்தவேண்டும் என்னும் கோட்பாடு இந்நாமத்தில் அடங்கியிருக்கிறது.

**पराकाशा** — பராகாசா ७८२

ஒப்புயர்வற்ற சித் ஆகாசசொரூபமாயிருப்பவள். 782

பிரபஞ்ச மயமாயிருக்கின்ற ஜடாகாசம் பஞ்சபூதங்களுள் முதலிடம் பெறுகிறது. அகண்டாகாரத்தில் விரிந்தோடும் ஜடா காசத்தில் அண்டங்களும் பகிரண்டங்களும் அடங்கியிருக்கின் றன. இதே ஜடாகாசத்தைச் சித் ஆகாசம் அல்லது பரப்பிரம்ம சொரூபமாக நிறை ஞானி காண்கிறான். வியவகாரதசையில் ஆகாசம் என்னும் சொல்லும் வ்யோமன் என்னும் சொல்லும் ஜடாகாசம் என்னும் ஒரே பொருளைக் குறிக்கின்றன. பாரமார்த் திக நிலையில் அவை சுயப்பிரகாசம் உடைய சிதாகாசத்தைக் குறிக்கின்றன. இருக்கின்ற அனைத்தும் அந்தப் பூரணத்தில் இடம்பெறுகின்றன.

**प्राणदा** — ப்ராணதா ७८३

பிராணனைக் கொடுப்பவள். 783

ஜீவாத்மனிடத்துப் பிராணன் என்னும் உயிர்த் தத்துவம் நிலைபெற்றிருக்கும் வரையில் அவன் உயிர் வாழ்ந்திருக்கிறான். பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன் என்னும் பஞ்சப் பிராணன்களாக அந்த உயிர்த்தத்துவம் வடிவெடுத்து உடலெங்கும் வியாபித்திருக்கிறது. ஞான இந்திரியங்கள் ஐந்து, கர்ம இந்திரியங்கள் ஐந்து, மனம் ஆகிய பதினொரு இந்திரியங் களுக்கும் செயல் புரிவதற்கு விசை தரவல்லதாகப் பிராணன் இருக்கிறது. எரிகின்ற தீபத்தின் ஒளிப்பிழம்பை வளர்ப்பதற்கு எண்ணெய் மூலகாரணமாக இருக்கிறது. ஜட உலகில் மூச்சு விட்டு உயிர் வாழ்ந்திருப்பவைகளாகிய பிராணிகளுக்குக் காற்று அவசியம். அவையனைத்துக்கும் பிராணவாயுவின் வாயிலாக அன்னை உயிரை வழங்கி வருகிறாள். அதே விதத்தில் மனிதன்

உயிர் வாழ்ந்திருப்பதற்கு அன்னை பராசக்தி ஆதரவு அளிப்பதால் அவள் ப்ராணதா என்னும் நாமம் படைத்துள்ளாள்.

**प्राणरूपिणी — ப்ராணரூபிணீ ௭௮௪**

பிராணன் வடிவத்திலிருப்பவள். 784

பிராணன் என்னும் பதம் பரப்பிரம்மத்தைக் குறிக்கிறது. பிராணன் என்று சொல்லுவதும் பூரணன் என்று சொல்லுவதும் ஒரே பொருளைக் குறிக்கின்றன. பிராணன் என்னும் பதம் காமேஸ்வரி முதலான நித்தியமாயுள்ள தேவதைகளைக் குறிக்கிறது.

**मार्ताण्डभैरवाराध्या — மார்த்தாண்ட பைரவ ஆராத்யா ௭௮௫**

மார்த்தாண்ட பைரவரால் ஆராதிக்கப் படுகிறவள். 785

சிவனுரைச் சூழ்ந்திருக்கும் கணங்களுக்குப் பைரவர்கள் என்றும் அம்பிகையைச் சூழ்ந்துள்ள பாங்கிமார்களுக்குப் பைரவிகள் என்றும் பெயர்கள் வந்துள்ளன.

அம்பிகையின் இருப்பிடமாகிய ஸ்ரீ புரத்தில் உள்ள மார்த்தாண்டன் என்னும் பைரவன் தீவிரமான தேவியின் உபாசகன். அந்தப் பைரவனுடைய செயல் அலாதி போக்குள்ளது என்பது ஐதிகம். அம்பிகையின் உபாசகர்களிடம் விரோதம் பண்ணிக் கொள்கிறவர்களை மார்த்தாண்ட பைரவன் தண்டிக்கிறுன். பெரும்பாலும் அவன் வழங்குகின்ற தண்டனை கண்களை இழக்கும்படி செய்தலாம். மார்த்தாண்டன் என்னும் சொல் சூரியனைக் குறிக்கிறது. உலகில் உள்ள காரிருளை உதயமாகி வருகின்ற சூரியன் அகற்றுதற்கு நிகராக ஆத்ம சாதகர்களுடைய உள்ளத்தை மூடியுள்ள அக்ஞான இருளை மார்த்தாண்ட பைரவன் அகற்றி வைக்கிறுன்.

**मन्त्रिणीन्यस्तराज्यधूः — மந்த்ரிணீன்யஸ்த ராஜ்யதூ: ௭௮௬**

மந்த்ரிணியிடத்தில் வைக்கப்பட்டுள்ள ராஜ்ய பாரத்தோடு இருப்பவள். 786

அகிலாண்டங்களை ஆளுதலில் லலிதாம்பிகைக்கு அடுத்த ஸ்தானத்தில் இருப்பவளாகிய மந்த்ரிணீயிடம் அம்பிகை தன் ராஜ்ய பரிபாலனப் பொறுப்பை ஒப்படைத்திருக்கிறுள். உள்ளன்

போடும் பக்தி பூர்வமாகவும் அம்பிகை உபாசனை பண்ணுகின்ற வர்களுக்குத் துணைபுரியும் பாங்கில் மந்த்ரிணீ அமைந்துள்ளாள்.

**त्रिपुरेशी — த்ரிபுரேசீ** ७८७

திரிபுரத்துக்குத் தலைவியாயிருப்பவள். 787

ஸ்ரீ சக்கரத்தில் உள்ள புரங்களில் ஒன்பதாவதாக இருப்பது சர்வாஸா பரிபூரகா என்னும் பெயர் பெறுகிறது. பதினறு இதழ்களை உடைய அந்த ஸ்தானத்திற்கு அதிஷ்டான தேவதை யாயிருப்பவள் த்ரீபுரேசீ. இது சமய சம்பந்தமான அத்யாத்மிகத் தத்துவ விளக்கமாகும்.

அகிலாண்டங்களையும் தன் இருப்பிடமாகக்கொண்டு அன்னை பராசக்தி ஆட்சி புரிந்து வருகின்ருள். புறத்திலிருக்கும் பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம் ஆகிய மூவுலகங்களையும் அன்னை பராசக்தி முறையாகப் பரிபாலித்து வருகிருள். பிண்ட சொரூப மாகிய மானுட அமைப்பில் உள்ள மூன்று புரங்களையும் மூன்று விதமான அவஸ்தைகளில் இருந்துகொண்டு மானுடன் பயன் படுத்தி வருகிருன். ஜாக்ரத அவஸ்தை, சொப்பன அவஸ்தை, சுஷுப்தி அவஸ்தை என அம்மூன்று மனநிலைகளும் பெயர் பெறு கின்றன. இந்த அவஸ்தைகளில் மாறி மாறி வாழ்ந்து வரும் மனிதன் அவற்றுக்கு அதிபதி ஆகமாட்டான். ஜாக்ரதாவஸ்தை யின் மிகச் சிறிய பகுதிமட்டுமே அவனுடைய' ஆணைக்கு உட் பட்டதாயிருக்கிறது. திட்டம் போட்டு ஜாக்ரதாவஸ்தையில் சில காரியங்களை நிகழ்த்துவது போன்று மனிதன் திட்டம் வகித்துச் சொப்பனம் காணமுடியாது. மனேவிகாரங்கள் தம்போக்கில் உருவெடுத்துக் காட்சிக்கு வருகின்றன. அங்கு வாய்க்கின்ற நலன், கேடுகளுக்கு அவன் கர்த்தா ஆகமாட்டான். சுஷுப்தி அவஸ்தையில் மானுட வியக்தி மறைந்துபட்டுப் போகிறது. சுஷுப்தி அவஸ்தையில் கல்விமான், கல்லாதவன், ஏழை, பணக் காரன் என்னும் பாகுபாடுகளெல்லாம் இல்லை. தூங்குகின்ற மேன்மகன் ஒருவன் முன்னிலையில் அவனுக்கு ஒவ்வாதவன் பண் ணும் நிந்தனையையும், பகடியையும் தூங்குகிறவன் அறியமுடி யாத அஞ்ஞான நிலையில் இருக்கிருன். இங்ஙனம் அவனுக்கு விருப்பமானவர்கள் போற்றிப் பாராட்டுவதையும் அவன் அறிந்து

கொள்வதில்லை. இந்த மூன்று அவஸ்தைகளுக்கும் ஈசுவரியாக இருக்கும் அம்பிகையை முறையாகப் போற்றி அவளுடைய அனுக்ரஹத்தைப் பெறுதற்கேற்ப ஆத்ம சாதகன் ஜாக்ரதாவஸ் தையில் எண்ணியதை எண்ணியாங்கு நிறைவேற்றவும், தன் பண் புக்கு ஒத்துள்ள சொப்பனவஸ்தையைப் பெறவும், சுஷுப்தி அவஸ்தையில் படிப்படியாக யோக நித்திரையில் நிலைபெறவும் தேவையாயுள்ள இச்சா சுதந்திரத்தைப் பெறுகிறான்.

**जयत्सेना — ஜயத்ஸேனா ७८८**

வெற்றியுடன் கூடிய சேனைகளை உடையவள். 788

பிரபஞ்ச வாழ்க்கையை ஓர் ஓயாத போராட்டமாகப் பொருள் படுத்தலாம். இப்போராட்டம் பெரிதும் நலன், கேடு ஆகிய இருபான்மைகளுக்கிடையில் ஏற்பட்டுள்ள முரண்பாடா கும். நலனை நிலைநாட்ட முயலுபவர்கள் ஒரு கூட்டத்தார் உள் ளனர். அதற்கு இன்னல் விளைவித்து நலனைப் பாழ்படுத்தும் மற்றொரு கூட்டத்தார் இருக்கின்றனர். உலகில் யாண்டும் இத் தகைய போராட்டத்தைக் காணலாம். நலனை நிலைநாட்டுதல் எளிதன்று. நல்வழியில் எடுத்துக்கொள்ளும் ஒவ்வொரு முயற் சிக்கும் முட்டுக்கட்டைகள் வருகின்றன. அவைகளைச் சமாளிப்ப தற்கு நல்வழியில் செல்பவர்களின் நம்பிக்கை தீவிரமாக இருக்க வேண்டும். நல்வழியினின்று நல்லார் எக்காரணத்தை முன்னிட் டும் பிசகலாகாது. முட்டுக்கட்டைகள் மலைக்கு நிகராக வந்து எதிர்த்து நின்றாலும் அவைகளைச் சமாளிப்பதிலேயே நல்லவர்கள் கண்ணும் கருத்துமாக இருக்கவேண்டும். அம்பிகையின் சேனை களாகிய நல்லார்கள் எடுத்துக்கொள்கின்ற நல்ல இயக்கங்களுக் குத் தடைகளும் விக்கினங்களும் சதா வந்துகொண்டே இருக்கும். ஆயினும் பொறுமையோடு முயற்சி பண்ணிக்கொண்டிருந்தால் இறுதியில் நலன் வெற்றியடையும். இதுவே அம்பிகைக்குரிய இந்த நாமத்தின் உட்கருத்தாம்,

**निस्त्रैगुण्या — நிஸ்த்ரை குண்யா ७८९**

முக்குணங்களுக்கு அப்பாற்பட்டவள். 789

பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம் ஆகிய மூன்று உல கங்களும் சத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்களால் ஆக்கப்

பெற்றவைகளாய் இருக்கின்றன. இயற்கைத் தாயினிடத் திருந்தே இம்மூன்று குணங்களும் தோன்றி வந்தவைகள் எனினும் அவள் இக்குணங்களில் கட்டுப்படாதவளாக இலங்குகின்றாள். சத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய குணங்களுக்குரிய நிறங்கள் முறையே வெண்மை, சிவப்பு, கருமை. நிறமற்ற நீராவியினின்று வடிவெடுக்கும் வெண்மேகம் சூரியகிரணம் படியும்பொழுது செம்மேகமாகவும், மழையாகப் பொழிவதற்கு முன்பு கார்மேகமாகவும் தென்படுகிறது. திரிவுபட்ட நிலையில் அது மூன்று நிறங்களுடன் மிளிர்கிறது. மூன்று குணங்கள் மயமாகத் தன்னைத் திரிபுபடுத்திக் கொள்கின்றபொழுது பிரபஞ்சமாகக் காட்சி கொடுக்கும் அம்பிகை முக்குணங்களை ஓர்மைப்படுத்தியவிடத்து அவற்றுக்கு அப்பாற்பட்டவளாக இருக்கிறாள். பிரபஞ்சமாகத் தென்பட்டுக் கொண்டிருப்பதற்கிடையிலும் உண்மையில் அவள் அதில் கட்டுப் படாதவள்.

மானுட சரீரம் பிரகிருதி தத்துவமாகவும் அதில் வீற்றிருக்கும் ஜீவாத்மா புருஷ தத்துவமாகவும் அமைந்திருக்கின்றன. தன்னை யாண்டும் உடல்மயமாக உணர்கின்றவன் பிரகிருதியில் கட்டுண்டவனாகின்றான். உடலில் வாழ்ந்திருப்பதற்கிடையில் உடல் உணர்ச்சியை ஒதுக்கி வைப்பது மனிதனுக்குச் சாத்தியம். எப்போதெல்லாம் ஆத்ம சாதகன் உடல் உணர்ச்சியை ஒதுக்கி வைத்துவிட்டு ஆத்ம போதத்தில் திளைத்திருக்கிறானோ அப்போதெல்லாம் அவன் பரம்பொருளுக்கு உரியவனாக இருக்கின்றான். தான் உடல் என்னும் எண்ணத்தை வருவித்துக்கொள்ளுகின்ற பொழுது அவன் பிரகிருதியில் கட்டுண்டவன் ஆகின்றான். தனக்குச் சொந்தமாயுள்ள முக்குணங்களில் அம்பிகை கட்டுப்படாதிருப்பதை முன்மாதிரியாக வைத்துக்கொண்டு ஆத்ம சாதகன் தேகாத்ம புத்தியைத் தாண்டியவனாக இருந்து பழகுவானாகில் அது நல்ல ஆத்ம சாதனமாகிறது.

**परापरा — பரா அபரா** ௭௯௦

பரவஸ்துவாகவும் அபரமாகிய பிரபஞ்ச வடிவினளாகவும் இருப்பவள். 790

ஒரு பொருள் ஏககாலத்தில் மேலானதாகவும் கீழானதாகவும் இருக்க முடியும். ஹிமாசலத்தில் யாண்டும் உறைபனி மய

மாய் இருக்கின்ற சிகரப்பகுதி இருக்கின்றது. கோடைகாலத்தில் செழிப்புற்றிருந்து மக்களுடைய ஜீவனத்துக்கு நன்கு பயன்படுகின்ற நடுப் பகுதி இருக்கிறது. அப்பகுதி பனிக்காலத்தில் மக்களுக்குப் பயன்படமாட்டாது. அம்மலையின் அடிப்பகுதி யாண்டும் மக்கள் வசிப்பதற்கும் சாகுபடி பண்ணுவதற்கும் பொருத்தமானதாக அமைந்திருக்கிறது. இங்ஙனம் ஒரே மலையில் மூன்று பகுதிகள் மூன்று பாங்குகளோடு கூடியவைகளாக இருக்கின்றன.

அன்னை பராசக்தி பிரபஞ்ச அதீத நிலையில் இருக்கின்ற பொழுது நிர்க்குணப்பிரம்மம் என்றும், குண அதீதம் என்றும், நாத அதீதம் என்றும் பெயர் பெறுகின்றாள். பரவஸ்துவாகிய அவள் முக்குணமாக விகாரப்படும் போது சகுணப் பிரம்மம் என்றும், மூலப் பிரகிருதி என்றும், ஈசுவரி என்றும் பாராட்டப்பெறுகிறாள். அவள் முற்றிலும் முக்குணமயமாகப் பரிணமிக்கின்ற பொழுது பிரபஞ்சமாக இலங்குகின்றாள். விதையினின்று அடிமரம், கிளை, இலை, காய், கனி முதலியன பரிணமிப்பது போன்று ஒரே பரவஸ்து இகமாகவும் பரமாகவும் இலங்கிக் கொண்டிருக்கிறது. நெடுந்தூரத்துக் கப்பால் இருக்கும் பரமாகவும் பக்கத்திலிருக்கும் அபரமாகவும் அது திகழ்கின்றது. நீர் விஷயமாகிற பாங்கிலும் நீராவி நிர்விஷய வஸ்துவாகவும் அமைகின்றன. இந்திரியங்களுக்கும் அந்தக்கரணத்துக்கும் எட்டுவது அபரம் என்றும் இந்திரியங்களுக்கு எட்டாதது பரம் என்றும் பெயர் பெறுகின்றன.

நாதமயமாயிருக்கின்ற வஸ்து பிரணவம் என்றும் உச்சரிப்பைத் தாண்டியுள்ள நிலையில் அமாத்ரப்பிரணவம் என்றும் பரவஸ்து இயம்பப்பெறுகிறது. மந்த்ரங்களை ஜபிப்பதிலும் பரா ஜபம், அபரா ஜபம் என்று இருவகை உண்டு. நா அசையாது மனம் மட்டும் மந்த்ரத்தை எண்ணிக்கொண்டிருப்பது பராஜபம்; ஓசையைக் கிளப்புமிடத்து அது அபரா ஜபம். பரம்பொருளாகவும் இகமாகவும் இலங்கும் அம்பிகையின் சொருபத்தில் இத்தனை விதமான மகிமைகள் இடம்பெறுகின்றன.

**सत्यज्ञानानन्दरूपा — ஸத்ய ஞானானந்த ரூபா** ७९१

ஸத்யமாகவும், ஞானமாகவும், ஆனந்தமாகவும் வடிவெடுத்திருப்பவள் 791

எது ஒரு காலத்தில் இருந்து இன்னொரு காலத்தில் இல்லாது மறைந்துபட்டுப் போகிறதோ அது ஸத் ஆகாது. கால, தேச நிமித்தத்தை முன்னிட்டு இருக்கவும் மறையவும் செய்கின்ற பொருள் ஸத்ய மாகாது. ஒவ்வோர் உயிரும் தன் இருப்பை நிலைநாட்டுதல் பொருட்டு உணவைத் தேடியலைகின்றன. ஜீவகோடிகள் அனைத்தும் யாண்டும் ஸத் ஆக இருக்க விரும்புகின்றன. அது அன்னை பராசக்தியின் ஸத் சொரூபத்துக்கு விளக்கமாகிறது.

தன் போக்கில் அறிவைப் பெற முயலும் உயிரென்று தான் அறிவு மயமானது என்று நிரூபிக்கிறது. வெளிச்சம் வரும் திசையை நோக்கிச் செடிகள் கிளைகளைப் பரப்புகின்றன. ஸ்தாவரத்திற்கு இருக்கும் ஞானசக்திக்கு இது சான்றாகிறது. ஜங்கமம் ஒவ்வொன்றினிடத்தும் அதன் தரத்துக்கேற்ற அறிவு அமைந்திருக்கிறது. புலனறிவைப் பெறுவதற்கு உயிர்கள் முயலுகின்றன. மனிதன் புலனறிவைக் கடந்த நிலையில் அறிவைப்பெற முயலுகின்றான். முற்றிலும் சேதன நிலையை அடையப்பெறுபவன் ஞானி ஆகின்றான். அறிவை வளர்ப்பதில் உச்ச நிலையை அடைந்திருப்பவன் மனிதன். ஞானமயமாக அம்பிகை ஜீவகோடிகள் அனைத்திடத்தும் இலங்குகின்றாள்.

ஆனந்தத்தை நாடுவது உயிர்களனைத்துக்கும் பொதுவானது. பொருத்தமான சூழ்நிலையில் ஸ்தாவரங்கள் ஆனந்தமயமாக நிலைத்திருக்கின்றன. மேல் நிலைக்கு வரவர ஜங்கமங்களின் ஆனந்த நாட்டம் தெளிவுற்று விளங்குகிறது. ஆனந்தத்தை நாடுதலில் மனிதன் மேன்மையுற்று மிளிர்கிறான். மனிதன் தியானத்தில் பெறும் ஆனந்தம் பேரானந்தமாகிறது. யோகி அப் பேரானந்த நிலையில் யாண்டும் இருக்கிறான். அன்னை பராசக்தி ஸத், சித், ஆனந்த சொரூபிணியாக இலங்கிக்கொண்டிருக்கிறாள். அவளிடத்திருந்து தோன்றி வந்துள்ள ஜீவகோடிகளனைத்தும் அதே ஸத், சித், ஆனந்த சொரூபமாக நிலைத்திருக்க முயலுகின்றன என்பது அன்னையின் மகிமைக்கு விளக்கமாம்.

**सामरस्यपरायणा — ஸாமரஸ்ய பராயணா ७९२**

சிவனும் சக்தியும் ஒன்றுகூடி இருக்கும் கூட்டுறவில் இருவரும் சம அந்தஸ்து பெற்றுள்ளனர். அர்த்த நாரீசுவரன் என்பது

சிவனுருக்கு அமைந்துள்ள நாமமாகும். அம்மையைக் குறித்து இயற்றப்பெறும் வழிபாடு அப்பனுக்கும் உரியதாகிறது. அம்மையப்பனுக்கு இடையில் ஒருவருடைய பங்கு மிகைப்பட்டும் மற்றவருடைய பங்கு குறைப்பட்டும் இருக்கும் பாகுபாடு இல்லை.

வண்டியில் பூட்டப்பெற்ற இரண்டு காளைகள் வண்ணத்திலும் பாங்கிலும் ஒரே பாங்குடையவைகளாக இருக்குமாகில் அவ்வண்டியை ஓட்டிச் செல்வதில் சிரமம் ஒன்றும் இல்லை. வடிவத்திலோ பாரம் இழுக்கும் வல்லமையிலோ இரண்டு காளைகளுக்கும் இடையில் தாரதம்மியம் இருக்குமாகில் இரண்டு காளைகளுக்கும் அதனால் திண்டாட்டம் ஏற்படும். வண்டிக்காரனுக்கும் இடைஞ்சல் மிக உண்டாகும். அதே பாங்கில் குடும்பத்தை நடாத்துகின்ற கணவனுக்கும் மனைவிக்குமிடையில் கருத்து வேறுபாடோ வாழ்க்கைமுறையில் வித்தியாசமோ நிர்வாகத்திறமையில் உயர்வுதாழ்வோ இருந்தால் குடும்ப வாழ்வு நன்கு நடைபெறாது. இடைஞ்சல்களும் சண்டை சச்சரவுகளும் நிகழ்வது சாத்தியம். அண்டநாயகனைப் போன்றும், நாயகியைப் போன்றும் குடும்பங்களுக்கிடையில் சமரசம் ஏற்படுமானால் அது அவர்களுக்கு வாய்த்த பாக்கியமாகின்றது.

**कपर्दिनी — கபர்தினீ** ७९३

*கபர்தன் என்று பெயர் தாங்கியுள்ள சிவனுருடைய பத்தினியாயிருப்பவள்.* 793

ஆகாய கங்கை சிவனுருக்கு அமைந்துள்ள கற்றை ஜடைகளுக்கிடையில் வீழ்ந்து இங்குமங்கும் சுற்றியலைந்து பிறகு பூலோக கங்கையாக ஹிமாசலத்தினின்று வெளியே கிளம்பி வருகின்றாள். சிவனுரின் மகிமைகளனைத்தையும் பெற்றுள்ள அந்த ஜடாபாரத்தில் தோய்வதனால் கங்கைக்குத் தூய்மை வருகின்றது ஜாடிகளில் அடைத்து வைக்கப்பட்டுள்ள கங்காஜலம் பல வருஷங்களானாலும் கெட்டுப் போவதில்லை. சிவனுரோடு தொடர்பு கொள்ளும் ஜடப்பொருள்கள், சேதனப் பொருள்கள் ஆகிய அனைத்தும் தூய்மை அடைகின்றன. அதே விதத்தில் அம்பிகையைச் சார்ந்திருக்கும் ஜீவகோடிகளனைத்தும் புனிதமடை

கின்றன. அன்னை பராசக்தியிடத்திருக்கும் இந்த மகிமை ஆத்ம சாதகர்களுக்கு வாய்ப்பதற்கு அரிய பெரிய பேருகும்.

**कलामाला — கலாமாலா** ७९४

*கலைகளை மாலையாக அணிந்திருப்பவள்.* 794

பண்பாடுகள் பலப்பல துறைகளில் அமைந்திருக்கின்றன. ஒய்யாரமாக நடப்பது ஒருவிதக் கலையாகும். பலப்பல நோக்கங்களுடன் பலப்பல பாங்குகளில் நடந்து போவது கலையாகின்றது. பல பிரிவுகளும் கலைகளும் அமையப்பெற்ற ஆடல், நாட்டியம் எனப் பெயர்பெறுகிறது. நடனம் என்னும் அற்புதமான கலையின் வாயிலாக உள்ளத்திலிருக்கும் மகிழ்வு, சோர்வு, வியப்பு, ஏமாற்றம் முதலியன விளக்கப்படுகின்றன. சிவனுர் நடராஜா என்னும் பெயர் படைத்திருக்கிருர். பேசுதல், பாடுதல் ஆகிய செயல்களிலும், வடிவங்கள் அமைப்பது, ஓவியம் தீட்டுவது ஆகிய துறைகளிலும் பலப்பல பண்பாடுகள் அமைந்துள்ளன. இவை எல்லாவற்றையும் தொகுத்துப் பொதுவாகக் கலைஞானங்கள் அறுபத்து நான்கு என்கிறோம். உண்மையில் கலைகளின் எண்ணிக்கை அறுபத்து நான்கில் அடங்கமாட்டாது. எல்லாவிதமான கலைகளையும் இயற்கைத் தாயினிடத்தில் காணலாம். இயற்கையின் ஒவ்வொரு பகுதியும் ஒரு கலைக்கு விளக்கமாக அமைந்திருக்கிறது. இதை முறையாக ஆராய்ந்து ரசிப்பதே அன்னையின் வழிபாடாகிறது. மனிதன் கற்றுள்ள கலைகள் அனைத்தையும் அன்னையின் வழிபாட்டுக்குப் பயன்படுத்துவது உசிதம்.

**कामदुघ् — காமதுக்** ७९५

*காமங்கள் எல்லாவற்றையும் நிறைவேற்றுபவள்.* 795

புருஷார்த்தங்கள் தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்னும் நான்கு வகைப்படுகின்றன. காமம் என்பது விரும்பியதை விரும்பியவாறு பெறுதலாம். விரும்பியதைச் சற்று ஏறத்தாழ விரும்பியவாறு அடையப் பெறுவதால்தான் உயிர்வகைகளுக்கு வாழ்வில் பற்றுதல் வந்துள்ளது. விரும்பியதை அடையப்பெருவிட்டால் வாழ்க்கையில் சலிப்புத்தட்டும். அன்னையின் அருளால் எண்ணியதை எண்ணியாங்கு எய்தி இன்புற்றிருப்பதே உயிர்வகைகளின் பாங்கு.

காமதுக் என்பது சொர்க்கத்திலுள்ள தெய்வீகப் பசுவாகிய காமதேனு என்று பொருள்படுகிறது. இதன் தலை மானுடப் பெண் ஒருத்தியின் தலையாகவும், மேனி முழுவதும் ஒரு பசுவுக்குரிய பாங்கிலும் உள்ளன. பறவைக்குரிய அகன்ற சிறகுகளும் அந்தப் பசுவுக்கு அமைந்திருக்கின்றன. இயற்கையின் போக்கில் ஆராய்ந்தால் மானுடன், விலங்கு, பறவை ஆகிய மூன்றுவகை உயிர்களும் சுகஜீவனத்துக்கு ஒன்றையொன்று சார்ந்திருக்கின்றன. உயிர்வகைகள் பரஸ்பரம் துணைபுரிந்து கொண்டால் உலக வாழ்க்கையை நிறைவாழ்வாக்கலாம் என்னும் கோட்பாட்டைக் காமதேனுவின் மேனி விளக்குகிறது.

நேர்மையாக முயன்றால் இயற்கைத் தாயிடமிருந்து மானுடன் வேண்டியவைகளையெல்லாம் வேண்டியவாறு அடையப்பெறலாம். மனிதன் எடுத்துக் கொள்கின்ற நேர்மையான முயற்சியே காமதேனு என்னும் பெயர் பெறுகிறது. வாழ்வைச் செல்வம் நிறைந்த நிறைவாழ்வாகப் பூர்த்தி பண்ணுவதற்கு மனிதன் எடுத்துக்கொள்ளும் தீவிர முயற்சிகளனைத்தும் தெய்வ வழிபாடு ஆகின்றன. சோம்பித் திரிபவனுக்கு இவ்வுலகமும் இல்லை, வேறு எவ்வுலகமும் இல்லை. ஊக்கமே வடிவெடுத்திருப்பவன் யாண்டும் விரும்பியவைகளையெல்லாம் ஏராளமாகப் பெறலாம் என்னும் கோட்பாடு அம்பிகை படைத்துள்ள காமதுக் என்னும் நாமத்தில் அடங்கியிருக்கிறது.

**कामरूपिणी** — காமரூபிணீ ७९६

காமேஸ்வர வடிவத்தில் இருப்பவள். 796

காமேஸ்வரராகிய சிவபெருமான் நிறத்திலும், கட்டழகிலும், வயதிலும், ஆபரணங்கள் பூண்டு இருப்பதிலும், சின்னங்களையும், ஆயுதங்களையும் உடைத்திருப்பதிலும் மேலாம் கோட்பாடுகள் புதைந்திருக்கின்றன. அம்பிகையும் அதே வடிவினளாக அமைந்திருக்கிறாள். நிறைவாழ்வுக்குப் பால் வேற்றுமை இடைஞ்சல் ஆகாது. எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியர் திண்ணியராகப் பெறின் என்னும் கோட்பாடே உருவெடுத்து மிளிர்பவள் அன்னை பராசக்தி. அனந்தங்கோடி உயிர் வகைகளாக அன்னை பராசக்தி மிளிர்ந்து கொண்டிருக்கிறாள். அத்தனை வடிவங்கள் வாயிலாக எண்ணிக்கையில் அடங்காத ஆசைகளை

அவள் நிறைவேற்றுகிறாள். ஆத்ம சாதகன் ஒருவன் நல்லதையே விரும்பி அதன் பொருட்டு நேர்மையாக முயற்சிகள் எடுத்துக் கொள்ளவேண்டும். பொறுமையாக அவன் பாடுபட்டு வருவதை அம்பிகையின் வழிபாடாகக் கருதவேண்டும். இப்பாங்குகளை முறையாக நிறைவேற்றுபவன் காமரூபிணியின் நல்ல செல்வனா கிறான்.

**कलानिधिः — கலாநிதி:** ௭௯௭

ஜீவகோடிகளனைத்தையும் தன் செல்வமாக உடைத்திருப்பவள். 797

கலைகள் என்பதற்கு ஜீவர்கள் என்பது ஒரு பொருள். நேர்மை வாய்ந்துள்ள அரசன் ஒருவனுக்குச் செல்வமாக அமைந் திருப்பது அவனுடைய குடிமக்கள். அகிலாண்டங்களிலும் எத் தனை எத்தனை கோடி ஜீவன்கள் எத்தனை எத்தனை வடிவங்களி லும் பண்புகளிலும் அமைந்திருக்கின்றனவோ அவை யாவும் அம்பிகைக்குரிய பொக்கிஷங்களாம்.

இன்பம் நல்கும் கலைகள் சந்திர கலைகள் என்னும் நாமம் பெறுகின்றன. அவை பதினாறு பாகைகளை உடையவைகளாக இருக்கின்றன. அப்பாகைகள் யாவும் அம்பிகைக்குரிய நிதியாம். யக்ஞங்கள் நடைபெறுகின்றபொழுது நிகழ்த்துகின்ற கர்மங் களெல்லாம் அம்பிகைக்குரிய ஆஹுதிகளாக ஹோமாக்னியில் படைக்கப்படுகின்றன. அந்தப் புண்ணிய கர்மங்கள் யாவும் கலைகள் என்னும் பெயர் பெறுகின்றன. எண்ணிக்கையில் அடங்காதவைகளாக அவை விரிந்துகொண்டே போகின்றன. அவை யாவும் பரஞானத்தில் பூர்த்தியடைகின்றன. அத்தகைய பெறுதற்கரிய நிதியை உடைத்திருப்பவள் அம்பிகை.

**काव्य कला — காவ்ய கலா** ௭௯௮

கவிதைகளை இயற்றும் கலை வடிவத்தில் இருப்பவள். 798

மொழி அமைப்பில் கவிதை உச்சநிலை பெறுகிறது. ஒவ் வொரு மொழியிலும் இருக்கும் கவிதையே அந்த மொழிக்குச் சிறப்பை நல்குகிறது. கவிதையில் இயல், இசை, கூத்து என்

னும் மூன்று பகுதிகள் இருக்கின்றன. நல்ல கவிதையைப் பயன் படுத்தும் உரைநடையில் உறுதிப்பாடும், தெளிவும் தென்படு கின்றன. அதே கவிதையை ராகம், தாளத்தோடு கூடிய இசை யாகப் பயன்படுத்தும் பொழுது அது உருகாத நெஞ்சத்தையும் உருக்க வல்லதாகிறது. அது அம்பிகையின் அனுக்ரஹத்தினல் வாய்த்தது எனலாம். வாழ்வு என்னும் முடிவில்லாத நாடகத் தைச் சபாபதியாகிய சிவனர் நிறைவேற்றி வருகிறர். அவரு டைய கூத்தை உள்ளபடி விளக்குவதற்கு மொழிகளில் உள்ள கவிதைகள் நன்கு பயன்படுகின்றன. எல்லா விதத்திலும் மக்களுக்கு உயிர் ஊட்டி வருகின்ற குறையேதும் இல்லாத கவிதை கவிஞர்களுக்கு அமைவது அம்பிகையின் அனுக்ரஹத்தி னலேயாம். ஆகையினல் அவளுக்கு அமைந்திருக்கிற காவ்யகலா என்னும் நாமம் முற்றிலும் பொருத்தமானது.

**रसज्ञा — ரஸஞ்ஞா** ७९९

வெவ்வேறு பாங்குகளை ரசிக்கும் இயல்புடை யவள். 799

சூழ்நிலைகளையும் நிகழ்ச்சிகளையும் முன்னிட்டு விதவிதமான பாங்குகள் உள்ளத்தில் உருவெடுக்கின்றன. அவைகளை ரதி, ஹாசம், சோகம், குரோதம், உற்சாகம், பயம், ஜுகுப்ஸை, விஸ்மயம், ஸமம் ஆகிய நவரஸங்களாகப் பாகுபடுத்துவது ஐதிகம். தலைவன் தலைவிக்கிடையில் உள்ள அன்பு ரதி எனவும் நகைப்புக்குரிய விஷயம் ஹாசம் எனவும் பெயர் பெறுகின்றன. சோகம் விசனத்தையும், குரோதம் சினத்தையும் குறிக்கின்றன. உற்சாகம் என்பது வீரியத்தோடு கூடிய பராக்கிரமம். பயம் என்பது ஆபத்தினல் வருகின்ற அச்சம். பாராட்டத் தகாத நிகழ்ச்சியைக் குறித்து உள்ளத்தில் எழுகின்ற அருவருப்பு ஜுகுப்ஸை எனப்படுகிறது. எதிர்பார்ப்பதற்கு மேல் நிகழ்ந்த அற்புதத்தைக் குறித்து வியப்படைதல் விஸ்மயம் ஆகின்றது. ஸமம் என்பது எல்லாச் சந்தர்ப்பங்களிலும் மனம் அமைதியுற்றி ருத்தலாம். ரஸம் என்பதில் தெய்வீகப்பெற்றி புதைந்திருக்கிறது. பரம்பொருள் நிச்சயமாகவே ரஸமாக வடிவெடுக்கிறது என்று சுருதி இயம்புகிறது. எனவே அம்பிகை ரஸங்களின் பாங்குகளை நன்கு அறிந்திருக்கிறுள் என்று சொல்வது பொருத்தமானது.

**रसशेवधिः — ரஸசேவதி:** ८०० 800

*பிரம்ம சொரூபமாயுள்ள அமிர்தத்தின் களஞ்சியமாயிருப்பவள்.*

ரஸம் என்னும் சொல் பரவஸ்துவாகிய பிரம்மத்தைக் குறிக்கிறது. தங்கத்தினுல் ஆகிய நகை தங்கமயமாய் இருப்பது போன்று மூலப்பொருளாகிய பரவஸ்துவே பிரபஞ்சமாகக் காட்சி கொடுத்துக் கொண்டிருக்கிறது. பிரபஞ்சத்தின் ஒவ்வொரு பகுதியிலும் கவர்ச்சிகரமான பாங்கு அமைந்திருப்பது வெளிப்படை. ரஸம் என்பது ஒவ்வொரு பொருளிலும் இருக்கின்ற மேலான பாங்காகிறது. ஒன்றுக்கும் உதவாத பாலைவனத்திலும் அதற்கேற்ற பாங்கு பொலிந்துகொண்டிருக்கிறது. பரதேவதையாகிய அம்பிகையின் போற்றுதற்குரிய மகிமைகளெல்லாம் வெவ்வேறு பாங்கில் விளங்கிக்கொண்டிருக்கின்றன. அந்தந்தப் பாங்கை அம்பிகையின் ரஸம் அல்லது மகிமையாகப் பாராட்டுவது நல்ல வழிபாடாம். எனவே பிரபஞ்சம் முழுதுமே அம்பிகையின் சோபைக்கு இருப்பிடமாகிறது. இந்தப் பாங்கில் அனைத்துடனும் இணக்கம் வைப்பது நல்ல தெய்வ வழிபாடாம்.

**पुष्टा — புஷ்டா** ८०१ 801

*புஷ்டியோடு கூடியிருப்பவள்.*

இயற்கையில் செழுமையுடன் பொலிந்துகொண்டிருப்பது எதுவோ அது புஷ்டி மிக வாய்க்கப்பெற்றதாயிருக்கிறது. செழிப்புடன் வளர்ந்திருக்கும் மரம், செடி, கொடிகள் புஷ்டி மிக வாய்க்கப்பெற்றவைகளாம். சுறுசுறுப்பாகவும் கலகலப்புடனும் வாழ்ந்துவரும் பறவைகள் புஷ்டி மிக வாய்க்கப்பெற்றவைகள். கொழுத்து மினுமினுப்புடனிருக்கும் மேனி படைத்துள்ள விலங்குகளிடத்துப் புஷ்டி வேண்டியவாறு தென்படுகிறது. திடகாத்திரத்துடனிருக்கும் மக்களுக்கிடையிலும் இதே புஷ்டி நன்கு புலனுகிறது. ஆக, பிறந்து வளர்ந்து வரும் ஜீவகோடிகளனைத்தும் மேன்மையுற்று வளர்ந்து வருவது அம்பிகையின் மகிமையாம். எங்கெல்லாம் புஷ்டியின் மேலாம் தரத்தை மனிதன் காண்கின்றுனே ஆங்கெல்லாம் அம்பிகையின் சான்னித்தியத்தை அவன் காணுதல் வேண்டும். அப்படிச் செய்வது அகிலாண்டேசுவரிக்குச் செலுத்துகின்ற நல்ல வழிபாடாகிறது.

**पुरातना — புராதனு** ८०२

தொன்மையானவைகள் அனைத்துக்கும் தொன்மையானவள். 802

மிகப் பூர்வீகமான இப்பிரபஞ்சத்தைத் தொல்லுலகம் என்கிறோம். இயற்கையின்கண் உள்ள பழம் பெருமைகளை ஆராய்ந்து கொண்டே போனால் அது காலத்தையும் கடந்து அப்பால் போகிறது. அனைத்தையும் எடுத்து விழுங்க வல்லது காலம் என்றால் அந்தக் காலத்தையும் எடுத்து விழுங்க வல்ல மகிமை படைத்தவளாக அம்பிகை இருக்கின்றாள். அம்பிகைக்கு முந்தியது ஒன்றுமில்லை. அனைத்துக்கும் மூத்தவளாகவும், முந்தியவளாகவும் அவள் இலங்கிக்கொண்டிருக்கிறாள். இக்கோட்பாட்டைச் சிந்தனை பண்ணுவது நல்ல வழிபாடாகிறது.

**पूज्या — பூஜ்யா** ८०३

போற்றுதலுக்கு உரியவள். 803

பரவஸ்துவைப் 'பூமிமேல் புகழத் தக்க பொருளே என்று ஒருவர் போற்றுகிறார். பெரிய பொருள் ஒன்றைப் போற்றுதல் மாந்தரிடத்து இயல்பாக அமைந்துள்ள மேன்மையாம். திருப்தி கரமான சமாதானத்தை நாடிப் பாண்டவர்களின் பிரதிநிதியாகக் கண்ணபிரான் விராட நகரினின்று ஹஸ்தினபுரம் சென்றார். சபை நடுவில் அவருக்கு மரியாதை ஏதும் காட்டலாகாது என்று கௌரவர்கள் முடிபு செய்திருந்தார்கள். ஆனால் அவர் கௌரவர்களின் சபாமண்டபத்தினுள் பிரவேசித்ததும் அனைவரும் ஏகோபித்து எழுந்து நின்று வந்தனை வழிபாடு செலுத்தினர். துரியோதனன் கூட அந்த நிகழ்ச்சிக்கு விலக்காகவில்லை. போற்றுதற்குரியதைப் போற்றாதிருக்க மனிதனுக்கு இயலாது. ஆங்காங்குப் பலப்பல பொருள்களிலும் உயிர்வகைகளிலும் மிளிர்ந்துகொண்டிருக்கும் அம்பிகையின் சந்நிதான மகிமையைப் பார்த்தவுடனே மனிதன் தன்னை மறந்து அதற்கு வந்தனை வழிபாடு செலுத்துகிறான். ஆக, எதனிடத்துப் போற்றுதற்குரிய மகிமை அமைந்திருக்கிறதோ அதனிடத்து அம்பிகையின் சான்னித்தியம் விசேஷமாக வீற்றிருக்கிறது என்று அறிந்துகொள்ளவேண்டும்.

**पुष्करा — புஷ்கரா** ௮௦௪

ஜீவர்களுக்குப் புஷ்டியைக் கொடுப்பவள். 804

தான் படைத்துள்ள ஜீவகோடிகள் அனைத்துக்கும் பர தேவதை உணவூட்டிப் போஷித்து வளர்த்து வருகிறாள். மக்கள் நிலையில் உள்ள உயிர்வகைகள் உணவூட்டப் பெறுதலில் வியப் பொன்றும் இல்லை. சிற்றுயிர்களும் தத்தம் போக்கில் உணவூட் டப்பெற்று வளர்ச்சியடைந்து வருவதுதான் வியப்புக்குரிய விஷய மாகும். காஷ்மீரத்தில் உறைபனிக்கட்டிப் பிரதேசத்தில் அமர நாத சிவஸ்தலம் இருக்கிறது. அங்கிருக்கும் சிவலிங்கமும் பனிக் கட்டி மயம். பனிக்காலத்தில் உறைபனியைத் தவிர வேறு எதையும் ஆங்குக் காணமுடியாது. சிவலிங்கம் அமைந்துள்ள குகையில் வசித்துவரும் புறாக்களுக்கு எங்கிருந்து எப்படி உணவு கிடைக்கிறது என்பதை யாருமே அறிந்துகொள்ள முடியாது. இனிது வாழ்ந்து வரும் வகையில் அவற்றையும் அன்னை போஷித்து வருகின்றாள்.

செல்வத்தை வளர்ப்பவள் என்றும் இந்நாமம் பொருள்படு கிறது. ஒவ்வோர் உயிரும் தனக்கேற்ற பாங்கில் செல்வத்தை வளர்த்து வருகிறது. அன்னை பராசக்தியின் அருளால் இச்செயல் இனிது நடைபெற்று வருகின்றது.

**पुष्करेक्षणा — புஷ்கரேக்ஷணா** ௮௦௫

தாமரை இதழ்போன்ற அழகிய கண்களை உடையவள். 805

உயிர் வகைகள் படைத்திருக்கும் அகன்ற அழகான கண் களைத் தாமரை இதழுடன் ஒப்பிடுவது ஐதிகம்.

பிரளய காலத்தில் ஜலத்தின்மீது ஆல் இலையில் யோக நித்திரையிலிருந்த பரமனுக்கு அன்பு கலந்த அன்னையின் கண்கள் காவல் இருந்து வந்தன என்பது கொள்கை.

**परम् ज्योतिः — பரம் ஜ்யோதி:** ௮௦௬

மேன்மை தங்கிய ஜோதி வடிவினளாயிருப் பவள். 806

ஜோதி மயமாய் உள்ள சூரியன், சந்திரன், அக்னி, நட்சத்திரம், மின்னல் ஆகியவை பிரளய காலத்தில் தங்கள் ஜோதியை இழந்து விடுகின்றன. பரதேவதையின் ஜோதி கால, தேச, நிமித்தத்துக்கு அப்பாற்பட்டது. அது யாண்டும் தன்மயமாய் உள்ளது. அதனுடைய அழகுக்கு அது தானே ஒப்பாகிறது. அத்தகைய பரஞ்ஜோதி மயமாக அம்பிகை இலங்குகின்றாள்.

**परन्धाम — பரந்தாம** ८०७

ஒப்புயர்வற்ற இருப்பிடமாய் இருப்பவள். 807

தாமம் என்னும் சொல் பிரகாசத்தைக் குறிக்கிறது. ஜடப் பொருள்களில் சேதனம் தூங்கிக்கொண்டிருப்பதால் அதனிடத்துப் பிரகாசம் ஏதுமில்லை. உயிர்த் தத்துவமாக அது பரிணமித்து வருவதற்கேற்பப் பிரகாசமும் அதனிடத்துத் தெளிவடைந்து வருகிறது. பிரகிருதித் தத்துவங்களையெல்லாம் தாண்டி அப்பால் இருக்கின்ற பரதேவதை ஒப்புயர்வற்ற பிரகாசமாக இலங்குகின்றாள்.

தாமம் என்பதற்கு இருப்பிடம் என்பது ஒரு பொருள். பஞ்ச பூதங்களுள் ஏனைய நான்கு பூதங்களுக்கும் இருப்பிடமாயிருப்பது ஆகாசம். அதே ஆகாசம் தனக்குத் தானே இருப்பிடமாயுள்ளது. அதே பாங்கில் வாழ்ந்து வரும் ஜீவகோடிகளுக்கும் அண்டகோடிகளுக்கும் இருப்பிடமாயிருக்கின்றாள் அம்பிகை. அவை யாவற்றையும் பிரளய காலத்தில் தன்னகத்து ஒடுக்கிக் கொள்கின்ற பொழுது அவள் தனக்குத் தானே இருப்பிடமாக இருந்து வருகிறாள்.

**परमाणुः — பரமாணு:** ८०८

நுண்ணியதிலும் நுண்ணியதாயிருப்பவள். 808

மகத்யாவுக்கும் மகத் ஆகவும், அணுவுக்கு அணுவாகவும், அப்பாலுக்கு அப்பாலுமாய் அமைந்திருப்பது பரவஸ்து. பெரிய பொருள் ஒன்றின் மிகச் சிறிய படம் அந்தப் பொருளின் சோபையை நன்கு எடுத்துக்காட்டுகிறது. அகிலாண்டம் எங்குமுள்ள பெரிய பொருளில் பேரமைப்பே பரம அணுவில் அமைந்திருப்பதாக நவீன பௌதிக சாஸ்திரமும் இயம்புகிறது. பெரிய பொருள் ஒன்றுக்கு எவ்வண்ணத்திலிருப்பினும் எச்செயலைச்

செய்வதும் சாத்தியம் என்பது இதினின்று வெளியாகிறது. பெரியதில் பெரியதாய் இருப்பதும் சிறியதில் சிறியதாய் இருப்பதும் கட்டில் அடங்குவதில்லை. மிகச் சூட்சுமமாயிருக்கும் ஆகாச தத்துவம் எங்கும் வியாபகமாயுள்ளது. சூட்சுமமாயிருப்பதால் அது மலினப்படுவதுமில்லை. பரமாணு என இயம்பப்பெறுகிற பர தேவதையாகிய அம்பிகையை விடச் சூட்சுமமான பொருள் வேறு ஏதுமில்லை. அனைத்துக்கும் ஆதாரமாய் இருக்கும் அப்பொருளை வேறு எதுவும் மலினப்படுத்த முடியாது. அதி சூட்சுமமாய் இருப்பது ஆற்றல் மிக வாய்க்கப்பெற்றதாகவும் உள்ளது. அம்பிகைக்குரிய சக்தி வாய்ந்த பரமாணு என்னும் மந்த்ரத்தைச் சாதகன் இடையருது சொல்கின்றபொழுது அக்ஞானத்தோடு கூடிய மனது அகண்டாகாரத்திற்கப்பால் சாதகனை எடுத்துச் செல்ல வல்லதாகிறது. அம்பிகையை அணுவுக்கு அணுவாகப் பாவிக்கின்றபொழுது ஆத்ம சாதகனுடைய சித்த விருத்திகள் யாவும் ஒடுங்கிப் போகின்றன: ஜீவன் பிரம்ம சொரூபம் ஆகிருன். மனதை லயப்படுத்தி பிரம்மத்துடன் ஐக்கியமாவதற்கு அம்பிகையின் இந்நாமம் நன்கு உதவுகிறது.

**परात्परा — பராத்பரா** ८०९

அனைத்துக்கும் அப்பாற்பட்டவள். 809

பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் ஆகிய மும்மூர்த்திகள் சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் என்னும் மூன்று அரிய பெரிய கிருத்தியங்களைச் செய்து வருகிருர்கள். பரம்பொருள்களாகக் கருதப்படும் அந்த மூர்த்திகளுக்கும் அப்பாற்பட்டவளாக அம்பிகை இருப்பதால் அவள் பராத்பரா எனப்படுகிருள்.

பிரம்மதேவனுடைய ஆயுள் பரா அல்லது அளவையிலடங்காதது ஆகிறது. மானுடன் கணக்கிடும் வருஷங்கள் ஐம்பத்திரண்டு கோடி சேர்ந்து ஒரு சதுர்யுகம் ஆகின்றன. பிரம்மாவுக்கு ஆயிரம் சதுர்யுகம் ஒரு பகலாகவும் ஆயிரம் சதுர்யுகம் ஓர் இரவாகவும் உள்ளன. இந்த இரண்டும் சேர்ந்து அவருக்கு ஒரு நாள். இங்ஙனம் முன்னூற்றறுபத்தைந்து நாட்கள் ஆனல் அவருக்கு ஒரு வருஷம். அந்தக் கணக்குப்படி பிரம்மதேவன் நூறு வருஷம் வாழ்ந்தபின் கிரம முக்திக்குப் போகிருர். இதை

யெல்லாம் எண்ணிப்பார்க்கின்றபொழுது மனம் காலாதீதத்தில் லயமாகிறது. ஆத்ம சாதகன் மன அதீதத்தில் போவதற்கு அம்பிகையைப் பராத்பரா எனப் பாவனை பண்ணுவது ஓர் உபாயமாகிறது.

**पाशहस्ता — பாசஹஸ்தா** ८१० 810

*பாசத்தைக் கையில் ஏந்தியிருப்பவள்.*

பாசம் என்பது ஏதேனும் ஒரு பொருளைப் பிடித்துக் கட்டி வைப்பதற்கு உதவும் கயிறும். பாசம் என்னும் இந்த ஆயுதத்தை அம்பிகை ஒரு கரத்தில் உடைத்திருக்கிருள். பிரபஞ்ச வாழ்வு இனிது நடைபெறுவதற்குப் பாசம் அல்லது பற்றுதல் முற்றிலும் அவசியமாகிறது. பறவை இனம், விலங்கு இனம், மானுட இனம் ஆகியவைகளில் தாய்க்கும் சேய்க்கும் இடையில் நெருங்கிய பந்தபாசம் இருக்கிறது. பரிணமித்து வருகின்ற உயிர்வகைகள் அனைத்தும் பாசத்தை ஆதாரமாகக் கொண்டே முன்னேற்றமடைந்து வருகின்றன. ஒவ்வொரு படித்தரத்திலும் தேவை ஏற்படும்பொழுது இந்தப் பாசம் நீங்குவதையும் பார்க்கிறோம். தன்னைத்தானே காப்பாற்றிக்கொள்ளும் பரிபக்குவம் குஞ்சுக்கு வந்தால் தாய்க்கோழி தன் பாசத்தை அகற்றிக் குஞ்சை விரட்டி ஓட்டுகிறது. மானுடனாக வடிவெடுத்திருக்கும் ஜீவாத்மன் பிரபஞ்ச வாழ்க்கையினின்று பெறவேண்டிய அனுபவங்களையெல்லாம் பெற்றான பிறகு அப்பிரபஞ்சவாழ்வினின்று தன்னைப் பிரித்தெடுத்துக் கொள்ள வேண்டும். அனுபவ பூர்வமாக இக்கோட்பாட்டை அறிந்துகொள்ளும் வகையில் பிறவிப் பெருங்கடலில் மானுடன் உழன்றுகொண்டே இருக்கிறான். நான்கு ஆச்ரமங்களுள் சந்நியாச ஆச்ரமத்தை ஏற்றுக்கொள்வது பண்பட்ட மானுடனுடைய குறிக்கோளாகிறது. இவ்வுலக வாழ்வு நிலையுற்றது எனக் கருதி இதில் பற்றுவைக்கும் பரியந்தம் அவன் சந்நியாச ஆச்ரமத்தை ஏற்கமாட்டான். இது நிலையற்றது என அனுபவபூர்வமாக அறிந்துகொண்ட பிறகு அவனை யாரும் பிரபஞ்ச வாழ்வில் பந்தப்படுத்தி வைக்கமுடியாது.

**पाशहन्त्री — பாசஹந்த்ரீ** ८११ 811

*பாசங்களை நாசம் பண்ணுபவள்.*

மாயப் பிரபஞ்சத்தின் பாசத்தினின்று பக்குவமடைந்த ஜீவாத்மனைப் பிரித்தெடுத்துத் தன் சொரூபத்தில் ஒன்றுபடுத்து கிற மேலாம் கிருத்தியத்தை அம்பிகை செய்து சாதிக்கிறாள். பிரபஞ்ச வாழ்வில் அந்தந்த படித்தரங்களில் உள்ள ஜீவாத்மாக் கள் பாசத்தினின்று விலகுவது பிரபஞ்சத்திலேயே இன்னும் மேலான நிலைக்குப் பரிணமித்துப் போதல் பொருட்டேயாம். ஸ்தாவரங்களாய் உள்ள உயிர்கள் நிலத்தில் கட்டுண்டு கிடக் கின்றன. அப்பொழுது வேர்கள் வாயிலாகவும் கிளைகள் வாயி லாகவும் அவை விரிவடைய முயலுகின்றன. அந்த முயற்சியின் விளைவாக அவை ஜங்கம உயிர்களாகப் பரிணமிக்கின்றன. நிலைத்திணை இயங்கு திணையாக மேலோங்குகிறது. இயங்கு திணையில் புழு, பூச்சி, ஈ வகைகளாக இருப்பவை பறவைகளா கப் பரிணமிக்கின்றன. கீழான நிலையில் உள்ள பாசங்களை நாசம் பண்ணியே அவை மேலான நிலைக்கு வருகின்றன. பாசங் களை நாசம் பண்ணியதன் மூலம் மேல்நிலையின் உச்சிக்கு மானு டன் வந்திருக்கிறான்.

**परमन्त्र विभेदिनी — பரமந்த்ர விபேதினீ** ௮௧௨

எதிரிகளின் திட்டத்தைப் பாழ்படுத்துபவள். 812

அம்பிகை உபாசகர்களுக்கு எதிரிகளின் வாயிலாகக் கஷ்ட நஷ்டங்கள் பல உண்டாகின்றன. அத்தகைய சோதனைகளை யெல்லாம் அமைதியாகச் சகித்துக்கொண்டு அம்பிகை உபாசனை யிலேயே ஆழ்ந்து மூழ்கியிருப்பவர்களுடைய கஷ்ட நஷ்டங்களை அம்பிகை அகற்றி வைக்கிறாள். சாதகன் ஒருவன் இடைஞ்சல்களை யும் இன்னல்களையும் சகித்துப் பழகக் கடமைப்பட்டிருக்கிறான். சகித்தல் என்னும் தெய்வீகப்பெற்றியைச் சாதகனுக்கு ஊட்டுதல் பொருட்டே எதிரிகள் வடிவத்திலும் அம்பிகை இலங்குகின்றாள். சகிப்புத் திறனைச் சாதகன் பெற்றான பிறகு அவன் எதிரிகளைச் சமாளிக்க வல்லவனாகிறான்.

ஏவல் அல்லது செய்வினை என்னும் அபிச்சார வித்தையைப் பயன்படுத்தி இயற்கையின் நடைமுறைக்கு ஒவ்வாத சில உபத் திரவங்களை ஒருவன் மீது ஒருவன் ஏவுவது சாத்தியமாகிறது. அவற்றை முறியடிப்பதற்கான மந்த்ரங்களும் இருக்கின்றன.

ஆத்ம சாதகன் அவற்றை அறிந்துகொள்ள வேண்டிய அவசியம் இல்லை. அவன் அன்னையை முற்றிலும் சரணடைந்திருப்பானுகில் அவனுக்குக் கேடு விளைவிப்பதற்கென்றே ஏவப்பட்டுள்ள மந்த்ரம் மறைமுகமாக அவனுக்கு நலன் விளைவிப்பதாக மாறியமைகிறது. தன் பக்தனுக்குக் கேடாய்வருபவைகளை எல்லாம் நலனுக மாற்றியமைக்கும் கருணை அம்பிகையிடம் இருக்கிறது என்னும் கோட்பாட்டை இந்நாமம் விளக்குகிறது.

**मूर्ता** — மூர்தா ८१३

வடிவத்தோடு இருப்பவள். 813

வடிவம் ஒன்றுக்கு உபாதான காரணமாக இருப்பவை பஞ்ச பூதங்கள். மனிதன் பஞ்சபூதங்களால் அமைக்கப்பெற்றவனுக இருக்கிறான். பிரபஞ்சமும் அதே பாங்கில் பஞ்சபூதங்களால் ஆக்கப்பெற்றது. பிரபஞ்சத்தில் உள்ள வடிவங்கள் அனைத்தும் அன்னையின் வடிவங்களாகின்றன. அவளுடைய காட்சியைப் பெறுவதற்கு அவன் இங்குமங்கும் தேடியலைய வேண்டிய அவசியமில்லை. ஆத்ம சாதகன் இதை ஞாபகத்தில் வைத்துக்கொள்வானுகில் வழிபாட்டுக்கு ஒரு மூர்த்தியை நாடி அவன் அலையவேண்டியதில்லை. அனைத்தையும் அன்னையின் வடிவங்கள் என ஓர்தற்கு ஏற்ப சாதகனுடைய பேதபுத்தி அடிபட்டுப்போய் அவன் சாதனத்தில் விரைந்து முன்னேற்றமடைகிறான்.

இவ்வுண்மையை அறிந்து கொள்ளாதவர்கள் அம்பிகைக்கு ஏதேதோ உலோகங்களால் வடிவம் அமைத்து வைத்துக்கொண்டு அதில்தான் அம்பிகை இலங்குகின்றாள் என்னும் மயக்கத்துக்கு உள்ளாகின்றார்கள். கோயிலில் சன்னதியில் நின்று மூர்த்தியின் வாயிலாக அம்பிகையை வழுத்துபவர்கள் நின்றபடி வட்டமிட்டுக்கொண்டு எல்லாத் திசைகளிலும் வந்தனை வழிபாட்டைச் செலுத்துவதன் உட்கருத்தை அறிந்துகொள்ளவேண்டும். கட்புலனுகும் வடிவங்கள் அனைத்தும் அம்பிகையின் வடிவங்களே என்னும் மனப்பான்மையை வரவழைத்துக்கொண்டால் அது நல்ல வழிபாடாகிறது.

**अमूर्ता** — அமூர்தா ८१४

வடிவங்கள் இல்லாதவள். 814

பஞ்சபூதங்களால் ஆகிய பிரபஞ்சம் ஸ்தூல நிலைக்கு வருவதற்கேற்ப வடிவம் எடுக்கும் செயல் வெளிப்படையாகிறது. ஐந்தாவது பூதமாகிய பிருதிவி அல்லது மண் வடிவமற்ற நிலையில் இருக்க இயலாது. அதைவிட ஓரளவு சூட்சுமமான நீரின்கண் ரூபமும் அரூபமும் சேர்ந்தே இருக்கின்றன. ஆற்றுநீர், மழைநீர் போன்று திரவப் பதார்த்தமாகவும் உறைபனி போன்று கடினப் பதார்த்தமாகவும், வெப்பத்தால் ஆவியாகவும் நீர் பல வடிவங்கள் எடுத்துக்கொள்கிறது. நீரைவிடச் சூட்சுமமான நெருப்புக்குச் சொந்த வடிவம் இல்லையாயினும் கலந்துள்ள பொருளுக்கு ஏற்பப் பெயரளவில் அது வடிவம் எடுக்கின்றது. காற்றுக்கும் ஆகாசத்துக்கும் ரூபமில்லை. இந்தப் பூதங்களைக்கொண்டு அம்பிகையின் ரூபம் படைத்துள்ள பகுதியையும் ரூபத்தைக் கடந்துள்ள பகுதியையும் கிரகிப்பது நமக்கு எளிதாகிறது. மக்கள் அன்பு வடிவினர்களாகவும் வெறுப்பு வடிவினர்களாகவும் இருப்பது நமக்கு விளங்குகிறது. விருப்புக்கும் வெறுப்புக்கும் வடிவம் இல்லையெனினும் வடிவங்களின் வாயிலாக அந்தப்பாங்குகளில் உள்ள அம்பிகையை நாம் அறிந்துகொள்கிறோம். அறிவும், அன்பும், ஆனந்தமும் அமூர்த்தங்கள் எனினும் அம்பிகையின் அந்தச் சொரூபங்களை மூர்த்தம், அமூர்த்தம் ஆகிய இரண்டு நிலைகளில் நாம் அறிந்துகொள்ள முடியும். குறிப்பிட்ட சில இடங்களில் மட்டுமே வாயு இடம்பெற்றுள்ளது. எங்கும் நிறைபொருளாகிய அதிசூட்சுமமான ஆகாச சொரூபமாக அம்பிகை ஒளிர்கின்றாள். அம்பிகையை அமூர்த்தா என்று இயம்புங்கால் அவளுடைய சூட்சும நிலை நமக்கு ஓரளவு விளங்குகிறது. அந்நிலையிலும் ஸ்தூல நிலையிலும் வைத்து அம்பிகையை ஆத்மசாதகர்கள் வழுத்தலாம்.

**अनित्यतृप्ता — அநித்யத்ருப்தா** ௮௧௫

*நிலையற்றவைகளைக்கொண்டு செய்கின்ற உபசாரங்களில் திருப்தி அடைபவள்.* 815

மனிதனுடைய மனது என்றைக்கும் போதவில்லை என்னும் பாங்குடையது. விறகுக் கட்டையைப் போட்டு அக்னியைத் திருப்திப்படுத்த முடியாதது போன்று ஆசையை நிறைவேற்றி மனிதனிடத்துப் போதுமென்ற மனநிலையை உண்டுபண்ண முடி

யாது. ஆசையை நிறைவேற்றுவது ஒரு மடங்கு என்றால் புதிய ஆசைகள் வடிவெடுப்பது பல மடங்காகிறது. மனிதன் ஆசை வைக்கின்ற நிலையற்ற பொருள்களும், பண்புகளும் மாறியமைவ தற்கேற்ப அவனுடைய ஆசையும் புதிய வடிவெடுக்கின்றது. தான் ஆசைப்படும் பொருள்களைக்கொண்டு அம்பிகை வழிபாட்டில் அவன் ஈடுபடுவானாகில் அவைகளை முன்னிட்டு உருவெடுக்கும் ஆசை குறைந்துபட்டுப் போகிறது.

அநித்தியப் பொருளாகிய உணவில் மனிதன் ஆசை மிக வைத்திருக்கிறான். அமிர்த சொரூபமாய் இன்று தென்படும் உணவு அவனுடைய உடலினுள் சென்று நாளை மலமாக மாறுகிறது. இப்படி அழிந்துபட்டுப் போகின்ற உணவைத் தனக்காக என்று ஆயத்தப் படுத்தாது தன் வழிபடு தெய்வமாகிய அம்பிகைக்குப் படைத்தல் பொருட்டு ஆயத்தப்படுத்துவானாகில் உணவின் மீது அவன் வைத்துள்ள ஆசை குறைகிறது. அத்தகைய உணவும் புனிதம் பெறுவதாகிறது. இதே பாங்கில் ஜீவாத்மன் என்னென்ன உலகப்பொருள்களில் ஆசை வைத்திருக்கிறானோ அவை எல்லாவற்றையும் புனிதவதியாகிய அம்பிகையின் ஆராதனைக்காக என்று பயன்படுத்துவானாகில் அவனுடைய ஆசை அடிபட்டுப் போய் ஆனந்தமும் திருப்தியும் ஓங்குகின்றன.

பிரபஞ்சத்திலுள்ள அநித்தியமான பொருள்களையெல்லாம் நாடி நாடி மனிதன் மேலும் மேலும் துயரத்தை வரவழைத்துக் கொள்கிறான். துயரத்துக்கு ஏதுவான இந்த அநித்தியப்பொருள்களையே அம்பிகையின் வழிபாட்டுக்கென்று பயன்படுத்தி ஆத்ம சாதகன் ஒருவன் அடைகின்ற ஆனந்தம் அம்பிகையின் திருப்தி என இயம்பப்படுகிறது. இலை, மலர், நீர் ஆகிய அற்பப் பொருள்களை அன்புடன் அம்பிகைக்குப் படைத்தால் அவள் திருப்தியடைகிறாள். எனவே, நிலையற்ற பிரபஞ்சத்தின் பிரயோஜனம் நிலைபேறு உடைய பரம்பொருளை அடைவதேயாம் என்னும் கோட்பாடு இந்நாமத்தில் அடங்கியிருக்கிறது.

**मुनिमानसहंसिका — முனிமானஸ ஹம்ஸிகா ८१६**

முனிவர்களின் மனதாகிய தடாகத்தில் சஞ்சரிக்கும் அன்னப்பறவையாய் இருப்பவள். 816

தடாகம் ஒன்றில் உள்ள நீர் அழுக்குப் படிந்திருந்தால் கீழே உள்ள தரைமட்டம் தென்படாது. அலைவீசிக்கொண்டிருக்கும் நீரில் பக்கத்திலுள்ள மரங்களின் பிம்பங்களும் வானத்திலிருக்கும் சந்திரனுடைய பிம்பமும் தென்படமாட்டா. தெளிந்த நீரில் அவை நன்கு தென்படுகின்றன. தடாகத்தின் தரைமட்டமும் கண்ணுக்குத் தென்படும். தடாகத்துக்கு ஆதாரமாகத் தரை இருப்பதுபோன்று மனதுக்கு ஆதாரமாக ஆத்மசொரூபம் இருக்கிறது. ஓயாத எண்ணங்கள் என்னும் அலை வீசிக்கொண்டிருப்பதாலும் மனதின்கண் மாசுபடிந்திருப்பதாலும் ஆத்ம சொரூபம் மனிதனுக்கு விளங்குவதில்லை.

மண்ணுலகில் கைலாய கிரிக்குத் தென்புறம் அமைந்துள்ள மானசசரோவரம் என்னும் தடாகம் முனிவர்களின் மாசுபடியாத மனதிற்கு எடுத்துக்காட்டாகிறது. அதில் ஐம்பது அடி அறுபது அடிக்குக் கீழே உள்ள வெள்ளை மணல் தரையை அலை இல்லாத காலை நேரத்தில் காணலாம். கைலாயகிரியின் பிரதி பிம்பமும் அத்தடாகத்தில் நன்கு தென்படும். அதில் விளையாடிக் களித்திருக்கின்ற ஹம்சம் என்னும் பறவைகள் முனிவர்கள் உள்ளத்தில் சான்னித்தியமாகியுள்ள அன்னை பராசக்திக்குப் புறச்சான்றுகளாக அமைந்துள்ளன.

நீக்கமற எங்கும் நிறைந்திருக்கின்ற பரவஸ்துவின் தெளிந்த சான்னித்தியத்தை மாசுபடியாத மனம் படைத்திருக்கும் சான்றோர்கள் உள்ளத்தில் தெளிவுறக் காணலாம். நிலவுலகில் உள்ள பொருள்கள் அனைத்திலும் சமமாகப் படியும் சூரியப் பிரகாசம் பாதரசம் பூசப்பட்ட ஒப்பமான கண்ணாடியில் மற்றொரு சூரியனுக்கு நிகராகப் பிரகாசிப்பதைக் காணலாம். அக்கண்ணாடிக்கு நிகரான முனிவர்களுடைய உள்ளத்தில் அன்னை பராசக்தியின் சான்னித்தியத்தைக் தெளிவாகக் காணலாம் என்னும் கோட்பாடு இந்நாமத்தில் அடங்கியிருக்கிறது.

**सत्यव्रता — ஸத்யவ்ரதா** ८१७

சத்தியத்தினின்று பிசகாதவள். 817

எத்தகைய நிலையிலும் சத்தியத்தினின்று பிசகாதிருப்பது தலைசிறந்த விரதமாகிறது. சத்திய விரதத்தினின்று சிறிதேனும்

பிசகாதிருந்த ஹரிச்சந்திரன் சிவ சாயுஜ்யம் அடைந்தான். பரவஸ்துவானது யாண்டும் இருந்தபடி இருப்பதால் அது சத்தியம். ஒரு காலத்தில் இருந்து இன்னொரு காலத்தில் மறைந்துபட்டுப் போகும் பிரபஞ்சமும் ஜீவாத்மாவும் சத்தியப் பொருள்கள் அல்ல. காரணத்தை அடிப்படையாகக் கொண்ட எப்பொருளும் சத்திய மாகாது. ஓர் இடத்தில் இருந்து மற்றோரிடத்தில் இல்லாமல் போவது சத்தியவஸ்து அன்று. பரவஸ்து ஒன்று அங்கிங்கு எனுதபடி யாண்டும் தன்மயமாய் இலங்குகிறது. பரவஸ்துவைத் தவிர ஏனைய அனைத்தையும் காலம் எடுத்து விழுங்குகிறது. காலத்துக்கு அப்பாற்பட்டதாக இருக்கும் பிரம்மம் ஒன்றே ச்த்தியம். அம்பிகை தானே பிரம்ம சொரூபமாக இலங்கிக் கொண்டிருக்கிறுள்.

சத்தியத்தை முறையாக அநுஷ்டித்து வரும் ஆத்ம சாதகன் இகபரத்துக்குரிய நலன்களனைத்தையும் இனிது அடையப் பெறு கிறுன். உலக நடைமுறையில் திரிகரணங்களும் ஒத்திருப்பது சத்தியவிரதமாகிறது. எந்த எண்ணம் சொல்லாக வடிவெடுத் ததோ அதன் படியே செயலும் அமைதல் வேண்டும். தத்துவ அமைப்புப்படி பிரபஞ்சம் பொய்யானது. பிரபஞ்சப் பற்றை அறவே ஒதுக்கித் தள்ளிவிட்டு மெய்ப்பொருளாகிய பரவஸ்து வினிடத்து எவன் ஒருவன் தன் திரிகரணங்களையும் தீவிரமாகச் செலுத்தி வருகிறுனே அன்னவனே சத்திய விரதம் பூண்டுள்ள ஆத்மசாதகனுகிறுன். பிரம்மம் சத்யம் ஜகத்மித்யை என வாயால் சொல்வதற்கிடையில் ஜகத்தின்கண் பற்று வைத்திருக்கும் மனி தன் தன் திரிகரணங்களுக்கிடையில் முரண்பாட்டை உண்டு பண்ணுபவனுகவும் பிரம்ம ஹத்தி செய்கின்றவனுகவும் இருக் கிறுன். அன்னவன் எந்த விதமான சிரேயஸையும் பெறமாட் டான்.

குலம், கோத்திரத்தைப்பற்றி நன்கு விசாரித்தபோது சத்தியகாமா ஜாபாலன் தாய் சொன்னதை உள்ளபடி இயம் பினுன். தன் தாய் நெறி பிறழ்ந்தவள் என்னும் உண்மையை அவன் மறைக்காது சொன்னதால் அவன் சத்தியத்தில் ஆழ்ந்து ஊறியிருக்கிறுன் என்று குரு அவனைச் சிஷ்யனுக ஏற்றுக்கொண் டார். எல்லாவற்றையும் நிறை நிலையாக்க வல்லது சத்தியம்.

**सत्यरूपा — ஸத்யரூபா** ८१८

சத்திய வடிவத்தில் இருப்பவள். 818

ஒரு காலத்தில் இருந்து மற்றொரு காலத்தில் இல்லாது போவது சத்திய ரூபமாகாது. ஓர் இடத்தில் இருந்து மற்றோரிடத்தில் இல்லாமல் போவது சத்திய ரூபமாகாது. ஒரு காரணத்தை முன்னிட்டு இருந்து மற்றொரு காரணத்தை முன்னிட்டு இல்லாமல் போவதும் சத்திய ரூபமாகாது. சத்திய விரதமே வடிவெடுத்துள்ள ஓர் ஆத்ம சாதகன் முன்னிலையில் சத்தியம் அல்லாததை இயம்ப யாருக்குமே துணிச்சல் வராது. அன்னை பராசக்தியும் சத்தியமும் ஒன்று. அவள் கால, தேச, நிமித்தத்தைக் கடந்துள்ளவள். சத்திய வடிவினளாகிய அவள் எல்லார் உள்ளத்திலும் மனச் சாட்சியாக வீற்றிருக்கிறாள். மனதின் தடுமாற்றத்தை அதற்குச் சாட்சியாக உள்ள மெய்ப்பொருள் உள்ளபடி எடுத்து விளக்குகிறது. பரவஸ்துவின் மகிமையை 'இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க' என்று மாணிக்க வாசகர் மொழிகின்றார். வகுப்பறையில் ஆசிரியர் இருக்கும்பொழுது மாணாக்கர்கள் ஒழுங்காக நடந்து கொள்கிறார்கள். அதே பாங்கில் சத்திய வடிவினளாக அன்னை பராசக்தி எல்லார் உள்ளத்திலும் வீற்றிருப்பதை அறிந்துகொள்கின்ற ஆத்ம சாதகன் அந்தச் சான்னித்தியத்துக்கு ஏற்றவாறு நடந்து கொள்வானாகில் அது நல்ல வழிபாடாகிறது.

**सर्व अन्तर्यामिनी — ஸர்வ அந்தர்யாமினீ** ८१९

எல்லாருடைய அந்தக்கரணங்களையும் ஆள்கின்றவள். 819

பெருங்கூட்டமாகத் தென்படும் மக்கள் யாவரும் தத்தம் காரியங்களைக் கவனிப்பவர்களாக இருக்கின்றனர். மற்றவர்கள் விஷயங்களில் அவர்கள் தலையிடுவதில்லை. அவ்வாறு தலையிட்டாலும் அது அங்கீகரிக்கப்படமாட்டாது. எங்கும் நிறைபொருளாய் இலங்கும் அம்பிகை எல்லாருடைய உள்ளங்களிலும் வீற்றிருந்து ஆட்சி செய்கின்றவளாக இருந்து வருகிறாள். அவளுடைய கடினமான ஆதிக்கத்தை மீறி நடந்துகொள்பவர்களுக்குத் துன்பத்தை நல்கி அவர்களை அவள் சீர்ப்படுத்தி வருகின்

ருள். முறை தவறி நடந்துகொள்கின்ற மனிதனுக்கு மனச்சாட்சியாயிருக்கும் தெய்வம் அனுமதி கொடுப்பதில்லை. அந்தத் தெய்வத்தின் ஆணையைப் புறக்கணிக்கும் பொழுதெல்லாம் அவனுக்குத் துயரம் வருகிறது. அதுவே அவனுக்குத் தண்டனையாக அமைகின்றது. கோல்வளையாள் ஆகிய அன்னை பராசக்தியின் ஆட்சி எக்காரணத்தை முன்னிட்டும் பிசகுவதில்லை.

மணிகள் அனைத்தும் கயிற்றினால் மாலையாகக் கோக்கப்பட்டிருப்பது போன்று அந்தர்யாமினியாக அம்பிகை வீற்றிருக்கும் உயிர்கள் அனைத்தும் நன்கு இணைக்கப்பட்டுள்ளன. அம்பிகையின் சான்னித்தியத்தில் இடம் பெற்றுள்ள உயிர்கள் ஒன்றையொன்று நேசிக்கக் கடமைப்பட்டுள்ளன. ஓர் உயிர் மற்றோர் உயிருக்குத் தீங்கு செய்தால் அது அன்னையின் சான்னித்தியத்தைப் புறக்கணித்ததற்கு நிகராகும். மன்னுயிர்களிடத்து வேற்றுமை பாராட்டி மானுடன் சாதனத்தில் முன்னேற முடியாது. அன்னை பராசக்தியே அகிலாண்டம் எங்கும் உள்ள உயிர்வகைகளாக இலங்குகின்றாள் என்னும் ஐக்கிய உணர்வில் ஊறுகின்ற ஆத்மசாதகன் அன்னையின் அருளுக்குப் பாத்திரமாகின்றான்.

## सती — ஸதீ ८२०

சிவனுடைய பதிவிரதையாயிருப்பவள். 820

சிவமும் சக்தியும் யாண்டும் இணைபிரியாத மூர்த்திகள். தீயினின்று உஷ்ணத்தைப் பிரித்தெடுக்க முடியாதது போன்று அம்பிகையை சிவனுடைய சொரூபத்தினின்று பிரித்தெடுக்க முடியாது. கைகூப்பி வணங்குகின்றபொழுது இருகரங்களும் ஒன்று சேராத இடத்து வழிபாடு நிகழ்வதில்லை. ஆகர்ஷண சக்தியால் எங்ஙனம் அண்டங்கள் ஒன்றோடொன்று நன்கு இணைக்கப்பட்டிருக்கின்றனவோ அங்ஙனம் அன்னை படைத்துள்ள பதிபக்தி யாண்டும் அவளைப் பதிமயமாகப் பிடித்து வைத்திருக்கிறது. தான் பரமனிடம் வைத்துள்ள பராபக்தியை விளக்குவதற்கு எடுத்துள்ள அவதாரங்களுள் தக்ஷப்பிரஜாபதியின் புதல்வி தாக்ஷாயணீ என்பதும் ஒன்றாகும். தன் தந்தையிடம் வைத்திருந்த அன்பை முன்னிட்டுத் தாற்காலிகமாகச் சிவனாரை விட்டுப் பிரிந்ததால் அவள் தன் சரீரத்தையே தியாகம் பண்ண

வேண்டிய நெருக்கடி வந்தது. மனமுவந்து உடலை உகுத்துவிட்டு அவள் தன் இறைவனைச் சென்றடைந்தாள்.

கால, தேச, நிமித்தத்தில் அடிபடாது யாண்டும் இருந்தது இருந்தபடி இருக்கும் ஸத் பொருளாகிய சிவனுருடைய பாங்கு அம்பிகையிடத்தும் இருப்பதால் அவளுக்கு ஸதீ என்னும் நாமம் அமைந்துள்ளது. அவளுடைய மகிமைகளையெல்லாம் ஆழ்ந்து மனனம் பண்ணுவது நல்ல வழிபாடாகும்.

**ब्रह्माणी — பிரஹ்மாணீ** ८२१

*பிரம்மதேவனின் பாங்கைச் சதா உள்ளபடி விளக்கிக் கொண்டிருப்பவள்.* 821

பரவஸ்துவாகிய பிரம்மம் படைத்துள்ள பஞ்சகோசங்களுள் அன்னமயகோசம் ஸ்தூலமானது. உயிராக வடிவெடுதிருப்பது பிராணமயகோசம். மனோமயகோசம் உணர்ச்சியாகவும், விக்ஞானமயகோசம் பாகுபடுத்தும் பாங்காகவும் அமைந்துள்ளன. பரப்பிரம்ம சொரூப்மாக அமைந்திருப்பது ஆனந்தமயகோசம். ஆனந்தமயகோசமாய் இருக்கும் சக்திக்குப் புறம்பாகப் பரவஸ்துவைக் கிரஹிக்க முடியாது.

சதுர்முகப் பிரம்மனின் சக்தியாக வாய்த்திருப்பவள் சரஸ்வதி. அவளுக்குப் புறம்பாயிருந்து கொண்டு, நான்முகக் கடவுள் எதையும் படைக்க முடியாது. இவ்வுண்மையைப் பரமஹம்சதேவர் ஓர் உபமானத்தின் வாயிலாக விளக்குகிறார். உலர்ந்த களிமண்ணைக்கொண்டு பாண்டங்களை வனைய முடியாது. உலர்ந்த களிமண் போன்றவர் படைப்புத் தெய்வம். நீர் ஆக இருப்பது சரஸ்வதி தேவி. எங்ஙனம் களிமண்ணும் நீரும் ஒன்று கூடி வடிவங்களைத் தோற்றுவிக்கின்றனவோ அங்ஙனம் பிரம்மதேவனும் சரஸ்வதி தேவியும் இணைபிரியாது இருந்துகொண்டு அண்டகோடிகளையும் ஜீவகோடிகளையும் வடிவெடுக்கச் செய்கின்றனர். இக்காரணத்தை முன்னிட்டே அம்பிகைக்கும் பிரம்மாணீ என்னும் பெயர் வந்துள்ளது.

**ब्रह्म — பிரஹ்ம** ८२२

*பிரம்ம வடிவத்தில் இருப்பவள்.* 822

மெய்ப்பொருளாகிய பரவஸ்து யாண்டும் உளது. வேறுபாடு ஏதும் அற்ற அது தன் நிலையினின்று இம்மியளவும் பிறழ்வதில்லை. யாண்டும் அது தன்னில் தானாய் உள்ளது. பரிபாகம் அடைந்து வருவதற்கேற்ப ஜீவாத்மன் ஒருவன் பிரம்ம சொரூபத்துக்குரிய பண்புகளையெல்லாம் பெறுகிறான். அந் நிலைகளில் உறுதி பெறுகின்றபொழுது அவன் முக்தியடைகின்றான். சமுத்திரத்தினின்று ஆவியாகி மேலே செல்லும் நீர் வானத்தில் வெவ்வேறு நிலைகளில் இலங்குகிறது. ஹிமாசலத்தில் உறைபனியாக அது கீழே இறங்கி வருகிறது. பிறகு அது உருகிச் சிற்றோடையாக வடிவெடுக்கிறது. அது பெரியஓடையாகவும் சிறு ஆறாகவும் அதன் பிறகு மகா நதியாகவும் மாறியமைகிறது. கடலுக்கு அருகில் வரும்பொழுது அது கடலின் பாங்கைப் பெறுகிறது. கடலுடன் அந்நதி ஒன்றுபட்ட நிலை அபேத நிலையாகிறது. ஆத்ம சாதகன் ஒருவன் அபேதத்தில் நிலைபெறுவதற்கேற்ப அவன் முக்திக்குப் பக்கத்தில் செல்பவன் ஆகிறான். அப்பொழுது அவன் அந்தக்கரண சுத்தி அடையப் பெறுகிறான். பிரஹ்ம என்னும் நாமத்தில் இக்கோட்பாடு அடங்கியிருக்கிறது.

**जननी — ஜனனீ** ८२३

உலகம் அனைத்தையும் உண்டு பண்ணுபவள். **823**

யாண்டும் தன்மயமாய் இருக்கிற மூலப் பிரகிருதி தன்னிடத்திலிருந்து ஆகாசத்தைத் தோற்றுவிக்கிறாள். அவளுடைய பாங்குக்கேற்றபடி ஆகாசமும் அபேதமாக சலனமற்றதாகவும் இருக்கிறது. ஆகாசத்தினின்று வடிவெடுக்கும் வாயுவுக்குச் சலனம் உண்டு. வாயுவினின்று அக்னியும் அக்னியினின்று நீரும் உண்டாகின்றன. அதைத் தொடர்ந்து பிருதிவி அல்லது மண் உரு வெடுக்கிறது. நீர் தோற்றத்துக்கு வரும்பொழுதே உயிர்கள் தோன்றி நிலத்துக்கு வருகின்றன. இங்ஙனம் ஜகத் ஆகவும், ஜீவ கோடிகளாகவும் அம்பிகை தன்னைத் தோற்றுவித்துக் கொள்கிறாள். தன் மனதை அபேத நிலைக்கு எடுத்துச் செல்லும் ஆத்ம சாதகன் ஒரு விதத்தில் அந்தக்கரண சுத்தி அடைகிறான். ஜகத்தையும் ஜீவகோடிகளையும் அம்பிகையின் தோற்றங்களாகக் கருதுவதால் மற்றொரு போக்கில் அவன் அந்தக்கரண சுத்தி அடையப்பெறுகிறான்.

அண்ட சராசரங்களை ஈன்றெடுத்த ஈஸ்வரி யாண்டும் இள மைப் பொலிவோடு இருப்பதுபோன்று அவளை உபாசிக்கும் பக்தன் இந்த மாயப் பிரபஞ்ச வாழ்வில் சிக்காது அவளுடைய அன்பு மயமான திருவடி நிழலில் ஒன்றித்து விடுகிறான். பக்தன் அடையும் பேறு இதுவே.

**बहुरूपा — பஹுரூபா ८२४**

பலவடிவங்களில் இருப்பவள். **824**

பிரபஞ்சத்தில் ஒரே பாங்கில் அமைந்துள்ள இரண்டு பொருள்களைக் காண முடியாது. இரண்டு மணல் மணிகள் கூட ஒரே பாங்கில் அமைந்திருப்பதில்லை. இனி, உயிரோடு கூடி இலங்கும் ஸ்தாவர உலகில் புளியமரம் ஒன்றில் அமைந்துள்ள ஒவ்வோர் இலைக்கும் மற்றவைகளிடமிருந்து பிரித்தெடுத்துக் காட்டக்கூடிய தனி அமைப்பு உண்டு. இங்ஙனம் ஒவ்வொரு பொருளுக்கும் அதனதன் தனி இயல்பு உண்டு. அண்டமெங்கும் உள்ள நடமாடித்திரியும் ஜந்துக்களின் மீது முளைத்திருக்கும் உரோமங்களுள் ஒரே அச்சில் அமைந்துள்ள இரண்டு உரோமங் களைக் காணமுடியாது.

பலப்பல வடிவங்களில் இருக்கும் அம்பிகை அந்தந்த இனத் துக்கேற்ற தனிப் பெயரையும் பெற்றிருக்கிறாள். செடி கொடி கள், பயிர் பச்சைகள், புழுப்பூச்சிகள், விலங்குகள், மக்கள் ஆகிய ஜீவராசிகள் அனைத்திடத்தும் வேற்றுமைகள் இருக்கின்றன. உச்சநிலையை அடைந்திருக்கும் மனிதனின் உடலமைப்பில் மூன்று பிரிவுகள் இருக்கின்றன. அவற்றின் உட்பிரிவுகளோ எண்ணிக் கையில் அடங்காதவைகள். வடிவத்தைப் பார்த்து இம்மனிதன் இன்ன இனத்தைச் சேர்ந்தவன் என்று பாகுபடுத்தலாம். ஆயி னும் முற்றிலும் ஒரே அமைப்பிலுள்ள இரண்டு மனிதர்களை நில வுலகில் எங்குமே காணமுடியாது. இந்த வடிவ வேற்றுமையை முறையாக ஓர்ந்து பார்ப்பதே ஒருவித வழிபாடாகும். இத்தனையு மாய் இலங்கிக் கொண்டிருப்பவள் அம்பிகை. வேதங்களுக் கிடையில் உயர்வு தாழ்வு பாராட்டுபவர்கள் அம்பிகையின் மகி மையை உள்ளபடி அறிந்துகொள்ளமாட்டார்கள்.

தோற்றத்துக்கு அப்பால் உள்ள பாரமார்த்திகப் பெருநிலை யில் அன்னை பராசக்தி சுத்த சைதன்யம் என்னும் ஏக வஸ்து

வாக இலங்குகின்றாள். குணபேதத்தை உண்டுபண்ணிப் பிர கிருதி மயமாக அவள் தன்னைத் தோற்றுவித்துக்கொள்கின்ற பொழுது பஹுரூபா என்னும் நாமம் அவளுக்கு முற்றிலும் பொருத்தமானதேயாம்.

**बुधार्चिता — புதார்சிதா** ८२५

அறிஞர்களால் ஆராதிக்கப்படுகிறவள். 825

ஜடசக்தி நிலையினின்று பரிணமித்து அன்னை பராசக்தி சித் சக்தியின் நிலையை எட்டுகிறாள். அதற்கேற்றபடி சேதனத்திலும் பாகுபாடு உண்டு. கல், புல்நிலையில் உயிர்வகைகள் இருக்கின் றன. புழு, பூச்சி வகைகளில் உயிர்கள் உள்ளன. பறவை, விலங்கு நிலையிலும் உயிர்வகைகள் இருக்கின்றன. மக்களாகப் பிறந்திருக்கிறவர்களிடத்தில் இத்தனை வித அறிவு பேதத்தைக் காணலாம். வடிவத்தை முன்னிலையில் வைத்து உயிர்வகை களைப்போற்றவும் தூற்றவும் செய்கிறோம். இத்தனை வடிவங்களில் இலங்கிக்கொண்டிருக்கும் மூலவஸ்துவை ஆராய்ந்து பாராட்டு பவர் மிகச் சிலர். மிட்டாய்கள் அனைத்தும் ஒரே தித்திப்புப் பண்டத்தினின்று அமைக்கப்பட்டவை என அறிந்துகொள்ளா மல் வடிவத்தை முன்னிட்டுக் குழந்தைகள் ஒரு மிட்டாயை விரும் பவும் மற்றொன்றை வெறுக்கவும் செய்கின்றன. அறிஞன் ஒருவன் நடுநிலை பிறழாதிருந்து எல்லா வடிவங்களிலும் இலங்குகின்ற அம்பிகையைப் பக்தியுடன் போற்றுகின்றான். வடிவங்களுக் கிடையில் பேதம் காண்பது அக்ஞானமாகும். ஞானிகளின் அபேத வழிபாடே நிறைவு பெற்ற வழிபாடாகிறது.

**प्रसवित्री — பிரசவித்ரீ** ८२६

அனைத்தையும் தோற்றுவித்தவள். 826

தோற்றத்தையெல்லாம் கடந்து அதீத நிலையில் இருக்கும் அம்பிகை தோற்றத்துக்கு வந்துள்ள அனைத்துமாகவும் இலங்கு கின்றாள். அப்பொழுது சூக்ஷ்மநிலையிலிருந்து படிப்படியாக ஸ்தூல நிலைக்கு அன்னை உருவெடுத்து வருகிறாள். சூக்ஷ்மமா யுள்ள ஆகாசத்தினின்று வடிவெடுக்கும் ஏனைய நான்கு பூதங் களும் ஸ்தூலநிலைக்கு வருவதால் அவற்றின் வியாபகத்தன்மை அதற்கேற்றாற்போல் மலினப்படுகிறது.

பாக்டீரியா (Bacteria) என்னும் நுண்ணுயிர் நீரிலும் நிலத்திலும் முதன் முதலாக வடிவெடுக்கிறது. அதினின்று ஒன்றன்பின் ஒன்ருகத் தோற்றத்துக்கு வந்துள்ள ஸ்தூல உயிர்வகைகளுள் உச்ச நிலையை எட்டியிருப்பவன் மனிதன். இப்படித் தான் எடுத்துள்ள தோற்றங்களையெல்லாம் ஒதுக்கித் தள்ளி விட்டுத் தன் யதாஸ்தானமாகிய பாரமார்த்திகப் பெருநிலைக்குத் திரும்பிப் போக வல்லவனுயிருப்பவனும் மனிதனே. இங்ஙனம் சராசரம், சேதனம், அசேதனம் ஆகிய பிரபஞ்சப்பொருள்கள் அனைத்துமாய் வடிவெடுத்திருப்பவள் அன்னை பராசக்தி. அக்காரணத்தை முன்னிட்டே அவள் பிரசவத்ரீ என்னும் நாமம் படைத்துள்ளாள்.

**प्रचण्डा — பிரசண்டா** ८२७

ஆணைமிகப் படைத்தவள். 827

ராஜ்யம் ஒன்றைப் படைத்துள்ள பேரரசிக்கு ஆளும் திறமையும் கண்டிக்கும் திறமையும் கோபித்து நடவடிக்கை எடுக்கும் திறமையும் இல்லாது போகுமானல் அந்த ஆட்சி ஒன்றுக்கும் உதவாது. ஆள்பவனிடத்தும், ஆக்ஞாபிப்பவனிடத்தும், ஆச்சாரியனிடத்தும் சினந்துகொள்ளும் தகைமை இருப்பது முற்றிலும் அவசியமாகிறது. சினத்துக்கு அடிமைப்பட்டிருப்பவன் ஆள முடியாது. தேவை ஏற்படும் பொழுது தேவைக்கேற்றவாறு சினத்தை வேண்டுமென்றே வரவழைத்துக் கொள்கின்றவன் காரியங்களை நன்கு நிர்வகிக்கின்ருன். பரப்பிரம்மத்தின் கோபத்துக்கு அஞ்சி இயற்கைத் தேவதைகளாகிய சந்திரன் சூரியன் ஆகியோர் கடமைகளை நன்கு நிறைவேற்றுகின்றனர் என்பது உபநிஷத் வாக்கு. அன்னை பராசக்தியிடம் இத்தகைய கட்டுமானங்களெல்லாம் இருப்பதால் அவள் பிரசண்டா என்று போற்றப்பெறுகிருள்.

**आज्ञा — ஆக்ஞா** ८२८

கட்டளை வடிவமாயிருப்பவள். 828

மஹாராணியாக இலங்கும் அன்னை பராசக்தியின் ஆணையே இயற்கையின் நடைமுறை என்றும் வேதவாக்கு என்றும் பெயர் பெறுகிறது. இன்னதைச் செய், இன்னதைச் செய்யாதே என்னும் வேதவாக்கு அன்னையின் ஆணையாம். மக்களின் ஆணையை

மீறி நடப்பவர்கள் சில வேளைகளில் தண்டனையினின்று தப்பித்துக்கொள்ளலாம். ஆனால் அன்னை பராசக்தியின் ஆணையினின்று பிசகுகின்ற அக்கணத்திலேயே மனிதன் தனக்குத் தானே துன்பத்தை வரவழைத்துக்கொள்கிறான். 'உண்மையையே பேசு' என்னும் வேத வாக்கினின்று பிசகுவதால் வரும் தண்டனை யாது என்பதைப் 'பொய்த்தபின் தன்னெஞ்சே தன்னைச் சுடும்' என்று பொய்யாமொழி எடுத்துப் பகர்கிறது. நெஞ்சத்தில் மனச்சாட்சி மயமாய் இலங்கிக்கொண்டிருக்கும் பரதேவதையின் ஆணையை மீறி நடந்தால் அதற்கேற்ற தண்டனை அக்கணமே வருவதைக் காண்கிறோம். அன்னையின் ஆட்சிமுறை நெறி வழுவாது நடப்பதற்கு இது சான்றாகிறது.

**प्रतिष्ठा — ப்ரதிஷ்டா** ८२९

அனைத்துக்கும் ஆதாரமாய் இருப்பவள். 829

எண்ணிறந்த அலைகள் வீசிக்கொண்டிருக்கும் கடலின் மேற்பகுதியைப் பார்த்துக் கடல் என்று நாம் கருதுகிறோம். ஆனால் கடலின் பெரும்பகுதி காட்சிக்கு இலக்காகாமல் கீழே இருக்கிறது. உருண்டோடி இயங்கிக்கொண்டிருக்கும் மேற்பகுதிக்குக் கீழே இருக்கும் பகுதி ஆதாரமாயிருக்கிறது.

அண்டத்தின் அமைப்புப் பிண்டத்திலும் இருக்கிறது. அதில் இடம் பெற்றிருக்கும் எண்ணரிய ஜீவகோடிகளில் ஏதேனும் ஒரு ஜீவன் பிண்டம் எனப்படுகிறான். மெய்ப்பொருளின் அமைப்பு யாண்டும் ஒரே பாங்குடையது. பிண்டமாக இருக்கும் ஜீவன் ஒருவன் தன் அமைப்பைச் சரியாக அறிந்துகொள்வானாகில் அண்டத்தின் அமைப்பையும் அவன் அறிந்துகொள்கிறான்.

சிசுவாகப் பிரபஞ்சத்தில் தோற்றத்துக்கு வரும் ஜீவாத்மன் நாள்தோறும் வளர்ந்துகொண்டே வருகிறான். ஒரு மனிதனுடைய உடலமைப்பில் ஏழு வருஷங்களுக்கு முன்பிருந்த எந்தப் பகுதியும் இப்பொழுது எஞ்சியில்லை. எனினும் அன்று இருந்த மனிதன் வேறு, இன்று இருக்கும் மனிதன் வேறு என்று ஜீவவியக்தியை அவன் நிராகரிப்பதில்லை. மாறுபாடு அடைந்திருக்கும் உடலமைப்புக்கு ஆதாரமாயிருக்கும் மாறுபாடு அடையாத ஆத்மசொரூபம் பிரதிஷ்டையாக அமைந்திருக்கிறது. அதே போன்று

அண்டங்களனைத்துக்கும் பரதேவதையாயுள்ள அம்பிகையின் நிஜசொரூபம் ஆதாரமாயிருக்கிறது.

**प्रकटा कृती — ப்ரகடா க்ருதீ** ८३०

எல்லாருக்கும் தெளிவுபட விளங்கும் வடிவத்திலிருப்பவள். 830

பிரபஞ்சத்தில் இருக்கும் அனைத்துமாய் அம்பிகை இருப்பதால் எல்லாருடைய காட்சிக்கும் எட்டக்கூடியவளாக அவள் இலங்குகின்றாள். ஸ்தாவர, ஜங்கமமாயுள்ள ஜீவர்கள் அனைவரும் அம்பிகையின் சன்னிதானத்திலேயே இருந்து வருகிறார்கள். அவர்கள் அவளால் நன்கு பேணப்பட்டும் வருகிறார்கள். ஸ்பரிசம் என்னும் ஓர் இந்திரியத்தைக்கொண்டே ஸ்தாவரங்கள் அம்பிகையின் பாங்குகளையும் ஆதரவையும் நன்கு அறிந்து வருகின்றன. செடி, கொடிகள் எல்லாம் வெளிச்சம் வரும் திக்கிலேயே தம் கிளைகளை அனுப்புகின்றன. தங்கள் வாழ்வுக்கு இன்றியமையாத வெளிச்சத்தை நன்கு பயன்படுத்த அவை முயலுகின்றன. அது அன்னையின் சான்னித்தியத்தை உணர்ந்து கொள்ளுதற்கு நிகராம். இங்ஙனம் அண்டங்கள் எங்குமுள்ள உயிர்வகைகள் அனைத்தும் தத்தம் இயல்புக்கேற்பச் சூழ்நிலைகளையும் வாழ்க்கை வசதிகளையும் நன்கு அறிந்துகொள்கின்றன. அதற்கேற்றவாறு தம் வாழ்க்கையையும் அவை இனிது அமைத்து வைக்கின்றன. தாயின் பராமரிப்பைக் குழந்தை அறிந்துகொள்வதற்கு நிகராக அனந்தங்கோடி ஜீவ வகைகள்யாவும் அம்பிகையின் சான்னித்தியத்திலேயே வளர்ந்து மேன்மையுறுவது அன்னையின் மகிமையாம். பராசக்தியின் இந்த மகிமையை இந்நாமம் விளக்குகிறது.

**प्राणेश्वरी — ப்ராணேச்வரீ** ८३१

இந்திரியங்களுக்கெல்லாம் அதிஷ்டான தேவதையாயிருப்பவள் 831

உயிர்த்தத்துவத்தை ஆதாரமாகக் கொண்டு ஒவ்வொரு ஜீவனும் தனக்கு அமைந்துள்ள அந்தக் கரணங்களைப் பயன்படுத்தி வருகிறது. அவை நன்கு இயங்குவதற்கு அம்பிகை தந்தருள்கின்ற வல்லமை பிராணன் எனப்படுகிறது. உயிர்வகை

கள் நிலத்தினின்று அன்னத்தையும், நீரினின்று பானத்தையும், நெருப்பினின்று கதகதப்பையும், காற்றினின்று மூச்சையும் வாங்கி விருத்தி அடைகின்றன. முக்கியப் பிராணன் என்றும், பஞ்சப் பிராணன் என்றும், உப பஞ்சப் பிராணன் என்றும் உயிர்த்தத்துவத்தின் பிரிவுகளுக்கெல்லாம் அதிபதியாய் இருப்பவள் அன்னை பராசக்தி. அவளுடைய சான்னித்தியத்தாலன்றி எந்த உயிரும் நிலைபெற்றிருக்கமாட்டாது. ஆதலால் அவள் ப்ராணேஸ்வரீ என்னும் பொருத்தமான நாமத்தைப் பெற்றிருக்கிறாள்.

**प्राणदात्री — ப்ராண தாத்ரீ** ८३२

உயிரை வழங்குபவள். 832

சரீரத்தில் கதகதப்பு, மூச்சு விடுதல் ஆகிய அறிகுறிகளிலிருந்து உடலில் உயிர் இருக்கிறது என்று யூகிக்கிறோம். பேச்சற்று இருந்தாலும் மயங்கிக் கிடந்தாலும் சுவாசிக்கும் செயல் நிகழ்ந்துகொண்டிருக்குமாகில் மேனியில் கதகதப்பு இருக்குமாகில் அம்மனிதன் உயிருடனிருக்கிறான் என்று தெரிந்து கொள்ளலாம்.

கடும் பனிக்காலத்தில் மரம், செடி, கொடிகளின் இலைகள் யாவும் பட்டுப்போகின்றன. புறத்தோற்றத்தில் அவ்வாறு தென்படினும் அவை ஒரு வித உறக்க நிலையில் உயிர் பெற்றிருக்கின்றன. வசந்தகாலம் வரும்பொழுது வெறும் கவையாகவும், கொம்பாகவும் இருந்தவைகள் தளிர்த்து உயிர்த்தத்துவத்தை விளக்குகின்றன. அதே பனிக்காலத்தில் பூமியினுள் புதைந்து கிடக்கும் பாம்பு, தவளை முதலியன வசந்தகாலம் வரும்பொழுது மேலே வந்து நடமாடுகின்றன. பாறையினின்று வெளியே வராதபடி அடைபட்டுக் கிடக்கும் தேரை உண்டு. இவையாவுக்கும் அந்தந்த நிலையில் அன்னை உயிர்த்தத்துவத்தை ஊட்டி வருவதால் அவள் ப்ராணதாத்ரீ என்னும் பெயர் பெற்றுள்ளாள்.

**पञ्चाशत्पीठरूपिणी — பஞ்சாசத்பீடரூபிணீ** ८३३

ஐம்பது பீடங்கள் ரூபத்தில் இருப்பவள். 833

தன் தந்தை தக்ஷப்பிரஜாபதியின் யாகம் ஒன்றுக்கு அழைப்பில்லாமலேயே போக விரும்பிய சதிதேவிக்குச் சிவனுருடைய ஆமோதிப்புக் கிட்டவில்லை. அழைப்பில்லாத இடத்துக்குத் தாம்

போவதில்லை யென்று அவர் மறுத்துவிட்டார். யாகசாலையில் தான் அன்புடன் வரவேற்கப்படாததைக் குறித்து வருந்திய சதி தேவி தன் உடலை அந்த யாகசாலையிலேயே உகுத்துவிட்டாள். சதி தேவிக்கு நிகழ்ந்த விபத்தைக் குறித்து வருந்திய சிவனார் யாகசாலைக்கு வந்து அந்தச் சவத்தைத் தம் தோளில் தூக்கிப் போட்டுக்கொண்டு தம் சுய அறிவை இழந்தவராக நாலாபக்கமும் அலைந்து திரிந்தார். இந்தச் சங்கடத்தைத் தேவர்கள் மூலம் அறிந்த மஹாவிஷ்ணு அவர் பின்னாலேயே சென்று சதிதேவியின் சவத்தை ஐம்பத்தொரு துண்டுகளாகச் சிதைத்துக்கொண்டு போனார். ஒவ்வொரு துண்டு வீழ்ந்த இடத்திலும் சக்தி தேவியின் புனித க்ஷேத்திரம் ஒன்று வடிவெடுத்தது. ஒவ்வொரு க்ஷேத்திரத்திலும் அம்பிகையின் மகிமையும் சான்னித்தியமும் யாண்டும் மிளிர்ந்துகொண்டிருக்கின்றன. இப்புண்ணிய க்ஷேத்திரங்களுக்குப் பக்தியுடன் யாத்திரை பண்ணுவது அம்பிகைக்குரிய நல்ல வழிபாடு ஆகும்.

ஐம்பத்தொரு க்ஷேத்திரங்களையும் ஐம்பத்தொரு அக்ஷரங்களாக எடுத்துக்கொண்டால் எல்லாவிதமான ஓசை வடிவினளாகவும் அம்பிகை இலங்குகின்றாள் என்னும் கோட்பாடு தத்துவத்துக்கு ஒத்திருக்கிறது.

**विशृङ्खला — விச்ருங்கலா** ८३४

கர்மபந்தம் எதனாலும் பாதிக்கப்படாதவள். 834

ஐந்து பூதங்களுள் நான்கைக் கர்மத்தின் வாயிலாகப் புனிதத்தை இழக்கும்படி செய்யலாம். தூய பூமியை மலம், மூத்திரத்தால் தோஷமுடையதாக்கலாம். நீரைச் சேறுபடியச் செய்து அசுசியாக்கலாம். பிணத்தைப் போட்டு நெருப்பின் தூய்மையைப் பாழாக்கலாம். கரியமில வாயு முதலியவைகளைக் கிளப்பிக் காற்றின் தூய்மையைக் கெடுக்கலாம். ஆனால் எத்தகைய கர்மத்தைக் கொண்டும் ஆகாசத்தை மலினப்படுத்த முடியாது. ஜட ஆகாசத்தின் மகிமையே அத்தகையது என்றால் சித் ஆகாச சொருபிணியாய் உள்ள அம்பிகையை யார்தான் எக்கர்மத்தின் வாயிலாக மலினப்படுத்த முடியும்? பாபம், புண்ணியம் ஆகிய இரு கர்மங்களும் அவளை வந்து தாக்கமாட்டா. பரம்பொருள்

வழிபாடு செய்பவர்களையே இரண்டு வினைகளும் பாதிப்பதில்லை. கர்ம அதீதத்தில் உள்ள அம்பிகையைக் கர்மங்கள் எந்த விதத்திலும் கட்டுப்படுத்த மாட்டா என்பது கோட்பாடு.

### विविक्तस्था — விவிக்தஸ்தா ௮௩௫

ஜனங்கள் இல்லாத இடத்தில் இருப்பவள். 835

இனிது இனிது ஏகாந்தம் இனிது என்னும் கோட்பாடு ஆத்ம சாதகனுக்கு உரியதாகிறது. மக்களுள் பலர் யாண்டும் ஜனக்கூட்டத்தையே நாடுவார்கள். ஆத்ம சாதகன் ஒருவன் தான் இருக்குமிடத்தைப்பற்றி வேறு யாரும் அறிந்துகொள்ள முடியாத சூழ்நிலையில் தன்னந்தனியனாக வசித்து வரும்பொழுது அம்பிகையின் சான்னித்தியத்தை உள்ளே உணர்கிறான். உலகத்தவர்கள் தெய்வ வழிபாட்டையும் கூட மக்கள் கூட்டத்திலேயே செய்து பழகியவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் ஏகாந்த வாசம் பண்ணத் துணியமாட்டார்கள். அது அவர்களுக்குப் பெரும் வேதனையளிப்பதாயிருக்கும். பகிர்முக திருஷ்டியிலேயே மனதைச் செலுத்தி வைத்திருப்பது குறை நிலையாகும். அயர்ந்து உறங்குபவன் அருகில் உறங்குபவர்களுடைய ஞாபகம் அற்றவனாகிறான். அதே பாங்கை ஜாக்ரதாவஸ்தையில் கொண்டுவருவது நல்ல ஆத்ம சாதனமாகும். பன்னிரண்டு வருஷகாலம் ஒருவன் யாருடனும் தொடர்பு வைக்காமல் மனத்தடுமாற்றம் ஏதும் இல்லாமல் இருப்பானாகில் அவன் சித்த புருஷன் ஆகிறான். தன்னந்தனியாக ஏகாந்தவாசம் செய்யும் ஒருவன் தன் மனதின் பரிபக்குவத்தை நன்கு அறிந்துகொள்கிறான். பண்படையாதவன் அத்தகைய சூழ்நிலையினின்று கிளம்பி ஜன சமுதாயத்தை நாடி அதிவிரைவில் ஓடி வருவான். பொருத்தமான சூழ்நிலையொன்றில் ஆத்ம சாதகன் ஒருவன் அன்னை பராசக்தியின் சான்னித்தியத்தைத் தெளிவுற உள்ளத்தினுள் உணர்வானாகில் அவன் சாதனத்தில் நெடுந்தூரம் முன்னேற்றம் அடைந்திருக்கிறான் என்பது வெளியாகிறது. அவ்வாறு உணர்வதற்கு இடையிடையே ஏகாந்தவாசத்தை நாடுவது முற்றிலும் அவசியம். ஏகாந்தத்தில் இனிமை காண்பவன் அம்பிகையின் சான்னித்தியத்தை உணர்வான்.

**वीरमाता — வீரமாதா** ८३६

வீரர்களுக்கு அன்னையாய் இருப்பவள். 836

வாமாச்சாரத்தில் பசுபாவம், திவ்யபாவம், வீரபாவம் என்று மூன்று பகுதிகள் உள்ளன. வீரபாவத்தை முறையே செய்து சாதிப்பவன் எதற்கும் அஞ்சாத வீரனாகிறான். பிரளயத்தில் உலகமே தவிடுபொடியானாலும் அவன் மனம் தளரான். ஆத்மசாதகனுடைய உறுதிப்பாட்டை ஆராய்தற்பொருட்டு அன்னை பராசக்தி தடைகளையும் விக்னங்களையும் வேண்டியவாறு அமைக்கின்றாள். பயங்கர வடிவெடுத்து ஆத்ம சாதகன் குழம்பிப் போகும்படி செய்கிறாள். ஆயினும் அவன் எதற்கும் அஞ்சாமல் தான் கொண்டுள்ள தீர்மானத்தின்படியே தீவிரமாகச் சாதனத்தில் ஈடுபடுகின்றான். எக்காரணத்தை முன்னிட்டும் தான் மேற்கொண்ட இலட்சியத்தினின்று அவன் பிசகுவதில்லை. வஜ்ராயுதத்துக்கு நிகராக அவன் வீரியமே வடிவெடுத்தவனாக விளங்குகின்றான்.

தர்ம யுத்தம் ஒன்றில் மகிழ்வுடனும் ஊக்கத்துடனும் பங்கு கொள்பவன் வீரனாகிறான். தர்மத்தைக் காப்பதிலேயே அவன் கண்ணும் கருத்துமாயிருப்பதனால் அந்த வீரனுக்கு உயிர் வாழ்ந்திருப்பதும் மடிந்து போவதும் ஒன்றேயாம். போர்க்களத்தில் வெட்டுண்டு தன் உடல் கீழே வீழ்வது அவனுடைய கருத்துக்கு வருவதில்லை. அறம் காத்தல் ஒன்றிலேயே அவனுடைய சித்த விருத்தி முழுவதும் ஈடுபட்டிருக்கிறது. அத்தகைய வீராவேசத்துடன் போர்க்களத்தில் மடிகின்றவன் வீர சொர்க்கத்தை அடைகிறான். பிறகு அடுத்த பிறவி எடுக்கும்போது அதே பண்புடன் புதிய உடலை அவன் எடுத்துக்கொள்கிறான். அத்தகைய மாவீரனுக்குத் தாயாய் இருக்கும் அம்பிகை வீரமாதா எனப் போற்றப்படுகிறாள்.

**वियत्प्रसूः — வியத்ப்ரஸூ:** ८३७

ஆகாசத்தை உண்டுபண்ணுபவள். 837

பஞ்ச பூதங்களுள் ஆகாசம் முதலாவதாகிறது. ஆத்ம சொருபத்தின் பாங்குகள் பல அதனிடத்து அமைந்திருக்கின்றன. எங்கும் நிறைபொருளாக இலங்கும் பரமாத்ம தத்துவம் இடத்

தில் கட்டுப்படாததுபோன்று ஆகாசமும் எங்கும் நிறைபொருளாயுள்ளது. அந்த ஆகாசத்தினின்றே ஏனைய நான்கு பூதங்களும் வடிவெடுத்துள்ளன. அந்த நான்கு பூதங்களையும் அறிந்துகொள்வதைப் போன்று ஆகாசத்தை எந்த இந்திரியத்தைக் கொண்டும் பொருள்படுத்த முடியாது. அந்த அளவில் அது ஆத்மாவுக்கு ஒப்பானது. அம்பிகை சித் ஆகாசம்; ஆகாசமோ ஜடப்பொருள். அதைச் சரியாக அறிந்துகொள்ள வல்ல ஆத்ம சாதகன் அடுத்த படியாகச் சிதாகாசத்தை அறியவல்லவனாகிறான். இக்காரணத்தை முன்னிட்டே அம்பிகைக்கு வியத்ப்ரஸூ: என்னும் நாமம் அமைந்துள்ளது.

**मुकुन्दा — முகுந்தா** ८३८

முக்தியைக் கொடுப்பவள். 838

பந்தபாசத்தை உண்டுபண்ணுகின்ற அதே அம்பிகை ஜீவாத்மன் பரிபாகம் அடைந்து வருகின்றபொழுது முக்தியை நல்குகின்றாள். தக்க பருவத்தில் வடிவெடுக்கும் பிஞ்சுகளை மரமானது காம்புகளின் வாயிலாகப் பற்றிப் பிடித்துக்கொண்டிருக்கிறது. அப்பிஞ்சுகள் முதிர்ந்து காய்களாகிப் பக்குவமாகின்றபொழுது அவைகளைப் பற்றிப் பிடிக்கும் காம்புகள் தளர்வுறுகின்றன. அதே பாங்கில் ஜீவாத்மாக்கள் ஆத்ம பரிபாகம் அடையும் வரை அன்னை பராசக்தி உலக வாழ்க்கை முறையில் ஜீவாத்மாக்களைப் பேணி வருகிறாள். உலக வாழ்க்கையில் வைத்திருக்கும் மயக்கம் தெளிவடையும் பொழுது ஜீவாத்மாக்களைப் கட்டிப்பிடிக்கும் தளை தளர்வுறுகிறது. அத்தருணத்தில் முகுந்தாவாக உள்ள அம்பிகை அவர்களைப் பந்தபாசத்தினின்று விடுவித்து முக்தியாம் பெருநிலைக்குக் கொண்டு சேர்க்கிறாள்.

முகுந்தா என்னும் சொல் மஹாவிஷ்ணுவின் சகோதரி எனவும் பொருள்படுகிறது. பரமாத்மா மும்மூர்த்திகளாகத் தன்னைப் பிரித்து வைத்துக்கொள்கின்றபொழுது பரமாத்மாவுக்கு அபின்னமாயிருக்கும் பராசக்தியும் தன்னை மூன்று சொரூபங்களாகப் பிரித்துக் கொள்கிறாள். அவை உமாதேவி, முகுந்தாதேவி, சரஸ்வதிதேவி ஆகியனவாம். துர்க்கா, லக்ஷ்மீ, சரஸ்வதீ மயமாக அன்னை பராசக்தி அமைந்திருக்கிறாள் என்பது ஐதிகம்.

**मुक्तिनिलया — முக்திநிலயா** ௮௩௯

முக்திக்கு இருப்பிடமாய் இருப்பவள். 839

சாலோக்ய, சாமீப்ய, சாரூப்ய, சாயுஜ்ய, கைவல்ய முக்திகள் என நான்காக முக்தியின் படித்தரங்கள் வடிவெடுத்துள்ளன. தூரதேசத்தில் வசித்திருக்கும் பிரசித்தி பெற்றுள்ள பிரமுகன் ஒருவனைக்காண விரும்புபவன் முதலில் அந்நாட்டுக்குச் செல்ல வேண்டும். அச்செயல் சாலோக்யம் ஆகும். அடுத்தபடியாக அப்பிரமுகன் வசித்து வரும் இடத்தை அணுகுவது சாமீப்யம் எனப்படுகிறது. அந்நிலையில் ஜீவாத்மனாகிய அவன் பரமாத்மனாகிய அப்பிரமுகனையே எண்ணிக்கொண்டிருப்பானாகில் வடிவத்தில் அந்தப் பரமாத்மன் மயமாகத் திருந்தி அமைகின்றான். இதற்குச் சாரூப்யம் என்று பெயர். நாடுபவன் நாடப்படும்பொருள் மயமாகவே மாறியமைகிறான். சமுத்திரத்தை எட்டுகின்ற நதி சமுத்திரமயமாக மாறுவதைப் போன்று பரமாத்மனில் ஒன்றுபடுகின்ற ஜீவாத்மன் தன் வியக்தியை இழந்து பரமாத்மன் மயமாக மாறுவது சாயுஜ்யம் எனப் பகரப்பெறுகிறது. இறுதியாகச் சென்றடைதல் என்னும் கோட்பாடும் அடிபட்டுப்போகிறது. பொருள் யாண்டும் தன்மயமாயிருக்கும் அப்பெருநிலைக்குக் கைவல்ய முக்தி என்று பெயர். எல்லா நிலைகளிலும் அன்னை பராசக்தியே ஆதாரமாகவும் ஆதேயமாகவும் இருப்பதால் அவள் முக்தி நிலயா எனப் போற்றப் பெறுகிறாள்.

**मूलविग्रहरूपिणी — மூலவிக்ரஹரூபிணீ** ௮௪௦

அனைத்துக்கும் ஆதிமூலமாய் இருப்பவள். 840

நம் வாழ்க்கைக்கு இன்றியமையாததாகிய நீர் ஆற்று நீர், குளத்து நீர், குட்டை நீர், குழாய் நீர் என்று வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு பெயர் பெற்று விளங்குகிறது. இந்த நீர்வகைகளெல்லாம் மழை நீரின் வெவ்வேறு தோற்றங்களாம். மழை நீரோ கடலினின்று ஆவியாகக் கிளம்பி வானத்திலே வெவ்வேறு விதமான மேகங்களாகச் சஞ்சரித்துப் பின் மழையாகப் பொழிகிறது. இத்தனைவிதமான நீர்வகைகளுக்கு மூலவிக்ரஹமாய் இருப்பது கடல். அதே விதத்தில் பலப்பல வடிவங்களாக இலங்கிக்கொண்டிருக்கும் அன்னை பராசக்தி பாலா, பகளா, ச்யாமா,

சாம்பவீ துர்க்கை, ராஜராஜேச்வரீ என்று பல பெயர்களால் அழைக்கப்பெறுகிருள். இத்தனை விதமான வடிவங்களையெல் லாம் அவள் விளையாட்டாக எடுத்துக்கொள்வதால் அவள் லலிதாம்பிகை ஆகின்ருள். இவையாவும் ஒரே மூர்த்தியின் பலப்பல சொரூபங்கள் என்னும் கோட்பாட்டை மூலவிக்ரஹ ரூபிணீ என்னும் நாமம் விளக்கிக் காட்டுகிறது.

**भावज्ञा — பாவக்ஞா** ८४१

பாவனைகளை அறிபவள். 841

மனதில் உண்டாகும் வெவ்வேறு எண்ணங்களும், உணர்வு களும், முடிவுகளும் பாவங்கள் அல்லது மனநிலைகள் எனப்படு கின்றன. ஒவ்வொரு ஜீவனும் தன் இருப்பைப் புறச் செயல்கள் மயமாகவிளக்குகிறது. மனிதன் பேசுகிருன்; நாய் குரைக்கிறது; கழுதை கத்துகிறது; குதிரை கனைக்கிறது. இங்ஙனம் ஒவ்வொரு ஜீவனும் செய்கின்ற புறச் செயல்கள் அந்தந்த ஜீவனுடைய பாவ னைக்கு விளக்கங்களாகின்றன. ஜீவர்களின் பாவனை செயலாக வடிவெடுக்கும்போது ஸ்வதர்மம் ஆகிறது.

ஆத்ம சாதகன் ஒருவன் தான் படைத்துள்ள உலக வியவ காரங்களையெல்லாம் ஒதுக்கித் தள்ளிவிட்டுப் பராசக்தியின் வழி பாட்டிலேயே தன் கருத்தைச் செலுத்தி வருகிருன். அதற்கேற்ப அவனுடைய பாவனை தெய்வீக பாவனையாகத் திருந்தியமை கிறது. அதைக் குறித்து அன்னை பராசக்தி அகமகிழ்வு அடை கின்ருள். அவனுடைய பாவனையை அவள் மேலும் ஆழ்ந்ததாக்கி அனுக்ரஹம் புரிகின்ருள். உயிர் வகைகளின் எல்லா விதமான பாவனைகளையும் அன்னை பராசக்தி அறிந்து கொண்டிருப்பதால் அவள் பாவக்ஞா என்பப் பகரப் பெறுகிருள்.

**भवरोगघ्नी — பவரோகக்னீ** ८४२

பிறவிப்பிணியை அகற்றுபவள். 842

ஜீவகோடிகள் பிறப்பெடுக்கும் செயல் கணக்கில் அடங்காத தாக விரிவடைந்து போய்க்கொண்டிருக்கிறது. உடல் எடுத்து உலக வாழ்வில் ஈடுபட்டிருக்க உயிர்களனைத்தும் விரும்புகின் றன. எண்ணிக்கையிலடங்காத பிறவிகளின் வாயிலாக அவை பரிணமித்து மேல்நிலைக்கு வருகின்றன. பிறவிகளில் உயர்ந்த

தாகிய மானுட நிலையை எட்டிய பிறகும் அதில் பற்று வைத்து மக்கள் திரும்பத் திரும்பப் பிறந்துகொண்டும் மடிந்துகொண்டும் இருக்கின்றனர். அவர்கள் நாடுகின்ற இன்பத்தை இவ்வுலகம் கொடுத்து உதவுவதாகக் கருதி அத்தகைய வாழ்வில் ஆழ்ந்து மூழ்கி இருக்கின்றனர். துன்பம் கலவாத இன்பம் இம்மண்ணுலகில் இல்லை என்னும் உண்மையை நாளடைவில் அவர்கள் அறிந்துகொள்கின்றனர். பிறகு, இன்பத்தைவிடத் துன்பமே ஈண்டு நிறைந்திருக்கிறது என்று அவர்கள் உணர்கின்றனர். அதன்பிறகே உலகப்பற்று அவர்களிடமிருந்து சிறிது சிறிதாக அகலுகிறது. பற்றுதல் முற்றிலும் அகன்று போகின்ற பரிபாகம் வந்தமைகின்றபொழுது அன்னையிடம் இனிப் பிறவி வேண்டாம் என்று அவர்கள் பிரார்த்தனை பண்ணுகின்றனர். அத்தகைய மனப்பரிபாகம் அடைந்துள்ள ஜீவாத்மாக்களைப் பிறவிப் பிணியினின்று விடுவித்துத் தன்னுடைய நிஜநிலையில் அம்பிகை ஒன்றுபடுத்திக்கொள்கிருள் என்னும் கோட்பாடு இந்நாமத்தில் அடங்கியுள்ளது.

**भवचक्रप्रवर्तिनी** — பவசக்ரப்ரவர்த்தினீ ८४३

பிறவிச் சக்கரத்தைச் சுழற்றுபவள். 843

வாழ்வில் பற்று நீங்கியவர்கள் பிறவியைப் பிணி என்று கருதுகிருர்கள். இக்கோட்பாட்டை மக்களுள் அரிதிலும் அரிதாக யாரோ சிலர்தாம் அறிந்து ஆத்ம பரிபாகம் அடைய முயலுகிருர்கள். அப்படி முயல்கின்ற கணக்கற்றபேர்களுள் அரிதிலும் அரிதாக யாரோ சிலர்தாம் பூரணத்தை எட்டுகின்றனர். ஜீவகோடிகள் ஸ்தாவரங்கள் என்றும் ஜங்கமங்கள் என்றும் பாகுபடுத்தப்படுகின்றன. அவை யாவும் உலக வாழ்வில் பற்றுமிக வைத்துள்ளன. அதற்கேற்ற சூழ்நிலையும் இயற்கையில் அமைந்திருப்பதால்தான் அவை அனைத்தும் இவ்வையக வாழ்வை ஆழ்ந்து பற்றிப் பிடித்திருக்கின்றன. பற்றுதலை நிறைவேற்றுவதற்கு அவையாவும் சதா முயன்று வருகின்றன. ஆசை நிறைவேறும் அளவுக்குப் புதிய ஆசை உள்ளத்தில் உருவெடுக்கிறது. ஆசை உருவெடுப்பதும் அது நிறைவேறப் பெறுவதும் ஒன்று சேர்ந்து பவச்சக்கரம் என இயம்பப் பெறுகின்றன. இச்சக்கரத்தை அன்னை பராசக்தி ஒழுங்காகச் சுழற்றிக்கொண்டே இருக்

கின்ருள். ஆதலால்தான் இப்பிரபஞ்ச வாழ்க்கை மயமாக உயிர்கள் யாவும் இலங்கிவருகின்றன. இயற்கையை முறையாக ஆராய்ந்து பார்க்கின்றவர்களுக்கு இவ்வுண்மை இனிது விளங்குகிறது.

இராமகிருஷ்ண பரமஹம்சர் இவ்வுண்மையை ஓர் உபமானத்தின் மூலம் விளக்குகிருர். தாய் கொடுத்த பொம்மைகளை வைத்து விளையாடிக்கொண்டிருக்கும் குழந்தை ஒன்று விளையாடிச் சலித்துப் போன பிறகு அப்பொம்மைகளைப் புறக்கணித்து விட்டுத் தாயைக் கூவி அழைக்கின்றது. பவச்சக்கரம் இந்த விளையாட்டுக்கு நிகராகிறது. எங்தெந்த உயிர் எங்தெந்த இயக்கத்தில் ஈடுபட விரும்புகிறதோ அந்தச் சூழ்நிலையை அது இனிது அடையப்பெறுகிறது. ஆகையால்தான் பவச்சக்கரம் மிகக் கவர்ச்சிகரமானதாக உயிர்களனைத்துக்கும் தோன்றுகிறது. ஆதியந்தமில்லாது அன்னை பராசக்தியின் அருளால் இனிது இயங்கிவரும் பவச்சக்கரத்தில் உயிர்களனைத்தும் இன்புற்று வாழ்ந்து வருகின்றன என்னும் கோட்பாடு இந்நாமத்தில் அடங்கியிருக்கிறது.

छन्दःसारा — சந்தஸ்ஸாரா ८४४

வேதங்களின் உட்பொருளாகிய உபநிஷதங்களின் வடிவத்தில் இருப்பவள். 844

வேதங்களாகிய விருட்சத்தில் உபநிஷதங்களாகிய கனி தோன்றியுள்ளது. வேதங்கள் பவச்சக்கரம் என்ருல் உபநிஷதங்களைப் பவரோக நிவாரணி எனலாம். பிரவிருத்தி மயமான வேதங்கள் ஐம்புலன்களுக்கு எட்டுகின்ற பிரபஞ்ச சம்பந்தமான விஷயங்களை விளக்குகின்றன. நிவிருத்தி மயமான உபநிஷதங்கள் பஞ்சேந்திரியங்களுக்கு எட்டாத பரம்பொருளைப்பற்றி விளக்குகின்றன. வேதங்களைப் பிரேயஸ் மார்க்கம் என்றும், உபநிஷதங்களைச் சிரேயஸ் மார்க்கம் என்றும் பகரலாம். பிரேயஸில் பக்குவம் அடைந்தவர்களே சிரேயஸுக்குத் தகுதி உடையவர்களாகின்றனர். மரத்தில் தோன்றும் பிஞ்சானது காயாகிப் பின் கனியாகி மரத்தைவிட்டுப் பிரிவதுபோன்று ஆத்ம பரிபாகம் அடையும் வரை மானுடன் இப்பிரபஞ்சம் தருகின்ற பிரேயஸ் மார்க்கத்தில் ஈடுபட்டுப் பயிற்சி பெறுகிருன். அதன் பிறகு சிரேயஸ் மார்க்கத்தில் பிரவேசிக்கிருன். இந்த இரண்டு மார்க்

கங்களுக்கும் அன்னை பராசக்தி முகாமையாயிருக்கிருள். இக் கோட்பாடு சந்தஸ்ஸாரா என்னும் இந்த நாமத்தில் அடங்கி யுள்ளது.

**शास्त्रसारा — சாஸ்த்ர ஸாரா** ८४५

நூல்களின் உட்பொருளாய் இருப்பவள். 845

பரஞானம் அடையப் பெற்றவர்கள் அமைத்து வைத்திருக் கும் கருத்துக்கள் சாஸ்திரம் எனப் பெயர் பெறுகின்றன. அவை களில் இன்னதைச் செய் என்று கூறுவன உடன்பாட்டு முறை யிலும், இன்னதைச் செய்யாதே என்று தடை பண்ணுவன எதிர் மறையிலும் உள்ள கோட்பாடுகளாம். செய்ய வேண்டியதைச் செய்வதன் மூலமாக மனிதன் மேன்மையுறுகிருன். செய்யத் தகாத செயலினின்று விலகியிருப்பதன் மூலமாகவும் அவன் மேன்மையுறுகிருன். அன்னை பராசக்தியானவள் இத்தகைய சாஸ்திரத்தின் சாரமாக அமைந்திருக்கிருள். அன்னையைச் சார்ந் திருக்கும் ஆத்ம சாதகன் ஒருவனுக்குச் சாஸ்திரங்களின் உட் கருத்துக்கள் தாமாகவே விளங்குகின்றன.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர், "தாயே, உன் மகிமைகளை அறிந்துகொள்ள நான் சாஸ்திரங்களை நாடிப் போகேன். பிறர் சொல்லையும் கேட்கமாட்டேன். உன் மகிமைகளை நீயே எனக்கு விளக்கியருள வேண்டும். உன்னை முற்றிலும் சார்ந்திருக்கும் என்னைக் கைவிட்டுவிடாதே" என்று அம்பிகையிடம் பிரார்த்தித் தார். இங்ஙனம் திரிகரண சுத்தியுடன் அவர் விண்ணப்பித்ததன் விளைவாகச் சாஸ்திரம் ஏதும் கற்காத அவர் தாமே சாஸ்திரத் தின் சாரமாக மேலோங்குகின்ருர். அவர் பகர்ந்ததும் செய்ததும் மற்றவர்களுக்குச் சாஸ்திரமாகிறது. அன்னையைச் சரண்புகுதல் சாஸ்திரத்தின் சாரத்தை அறிந்துகொண்டதற்கு ஒப்பாகிறது.

**मन्त्रसारा — மந்த்ர ஸாரா** ८४६

மந்த்ரங்களின் சாரமாயிருப்பவள். 846

அன்னைக்குரிய ஒவ்வொரு நாமத்தின் உட்கருத்தையும் ஆழ்ந்து ஆராய்வது நல்ல வழிபாடாகிறது. சொல்லிய பாட்டின் உட்பொருளை உணர்ந்து சொல்பவர்கள் சிவ சாயுஜ்யம் அடை வார்கள் என்பது ஆன்ருேர் வாக்கு. இங்ஙனம் அன்னையின்

நாமங்களை ஏராளமாக உணர்ந்து ஓதிக்கொண்டு வரவர ஆத்ம சாதகன் மனபரிபாகம் அடைகின்றான்.

வண்ணத்தில் மிகச் சிறியதாக உள்ள விதை முளைத்துப் பெரிய மரமாகின்றபொழுது அது பல பாங்குகளை உடையதாக மிளிர்வதைப் போன்று மந்த்ரம் மனதில் உறுதியையும் தெளிவை யும் ஏற்படுத்துகிறது; மந்த்ர சொரூபமாயிருக்கும் தெய்வத்தின் அனுபூதி ஆத்மசாதகனுக்கு உரியதாகும்படி செய்கிறது. ராம என்னும் மந்த்ரத்தை முறையாகக் கையாண்டு சாதாரண மானு டன் ஒருவன் வால்மீகி மஹரிஷியாக மேலோங்கினன். ராம தத்துவத்தைத் தெளிவாக அவர் விளக்கியதன் வாயிலாக ஆதி காவியமான இராமாயணம் உருவெடுத்தது.

பிரபஞ்சம் முழுவதுக்கும் மந்த்ரமாயிருக்கும் ஓங்காரம் ஸ்தூல வடிவெடுக்கும் பொழுது பிரபஞ்சமாகவும் அதை ஆண்டு வரும் ஈசுவரியாகவும் விரிவடைகிறது. பிரணவத்தைச் சிறிது மாற்றியமைத்தால் அது உமா என்னும் சக்திப் பிரணவமாகிறது. இதை உச்சாரணை செய்வதன் விளைவாகப் பஞ்ச கிருத்திய மய மாயிருக்கும் பரதேவதை சாதகனுக்குச் சொந்தமாகின்றாள். இப் பிரணவத்தோடு கூடிய பஞ்சாட்சர மந்த்ரமாகிய ஓம் நமசிவாய என்பதும், அஷ்டாட்சர மந்த்ரமாகிய ஓம் நமோ நாராயணாய என்பதும் ஆத்ம சாதனத்துக்கு ஏற்ற பீஜங்கள் அல்லது வித்துக் களாகின்றன. ஏதேனும் ஒரு மந்த்ரத்தை ஆத்ம சாதகன் உறுதி யாகவும் ஊக்கத்துடனும் ஆயுட்காலம் முழுவதும் உச்சரிப்பானு கில் அவனுடைய ஜீவவியக்தி திருந்தியமைகிறது. அதன் விளை வாக அந்த மந்த்ரத்தின் சாரமாயிருக்கும் தெய்வத்துக்கு அவன் உரியவனாகின்றான். நாடுகின்றவர்களின் நாட்டத்துக்கு ஏற்ற வாறு அவர்கள் தெய்வ வியக்தியை அடையப் பெறுகின்றனர். இக்கோட்பாடுகள் எல்லாம் மந்த்ரத்தில் இருப்பதால் அன்னை பராசக்தி மந்த்ரஸாரா என இயம்பப்பெறுகிறாள்.

तलोदरी — தலோதரீ ८४७

மெல்லிய இடையை உடையவள். 847

இயற்கையின் பிரதிநிதியாய் இருக்கும் பெண்பாலர் அனை வருக்கும் எடுத்துக்காட்டாய் இருப்பவள் அன்னை பராசக்தி

உலகனைத்தையும் அவள் தன்னகத்துத் தாங்கி வைத்திருக்கிறாள். அங்ஙனம் உலகுக்கு ஆதாரமாயிருப்பதில் அவளுக்குச் சிரமம் ஏதும் இல்லை என்னும் கோட்பாட்டை அவள் படைத்திருக்கின்ற மெல்லிய இடை எடுத்துக்காட்டுகிறது. தலம் என்னும் சொல் வெவ்வேறு படித்தரங்களில் இருக்கின்ற பிரபஞ்சத்தைக் குறிக்கும். அதலம், இதலம், சுதலம், ரஸாதலம் என்பவை அந்தப் படித்தரங்களில் சில. இத்தனை விதமான படித்தரங்கள் இருக்கின்ற உலகு அனைத்தையும் அன்னை தாங்கிக் கொண்டிருக்கிறாள் என்பது கோட்பாடு. இந்த அமைப்பை அமைதியாகச் சிந்தனை பண்ணுவது அன்னையின் வழிபாடாகிறது.

### उदारकीर्ति — உதார கீர்த்தி ௮௪௮

பெரும் புகழுக்கு இருப்பிடமானவள். 848

பிரபஞ்சம் அனைத்துமாய் அம்பிகை இலங்குகிறாள். அப்பிரபஞ்சத்தில் உள்ள ஒவ்வொரு பகுதியும் போற்றுதற்குரிய பகுதியாகவே அமைந்திருக்கிறது. பாலைவனம் போன்ற வெறும் வெளியைப் போற்றுவதற்கு அதில் என்ன இருக்கிறது என்னும் ஐயம் எழலாம். அதன் அமைப்பைக் கவிஞர்கள் மூலம் கேட்கின்ற பொழுதுதான் அதன் அழகு மற்றவர்களுக்கு விளங்கும். தெய்விக சம்பத்துக்களுக்கு இருப்பிடம் என்பது பகவதி என்னும் சொல்லுக்குப் பொருள்: பூமியில் புகழத்தக்க பொருளே என்று பக்தர் ஒருவர் தாம் வழிபடு தெய்வத்தைப் போற்றுகிறார். அத்தகைய மெய்ப்பொருளின் கீர்த்தியே பொருள் சேர்ந்த புகழாகின்றது. கீர்த்திக்கு உரியவளாகிய அன்னை பராசக்தியை உபாசிக்கின்ற ஆத்ம சாதகர்களிடத்துள்ள அக்ஞான இருள் அகன்று ஞான பரிபாகம் ஓங்குகிறது.

### उद्दामवैभवा — உத்தாமவைபவா ௮௪௯

கட்டில் அடங்காத செல்வத்தையும் வல்லமையையும் உடையவள். 849

தாமம் என்பது கயிறு. எது கட்டப்படுகிறதோ அது எல்லையில் அடங்குகிறது. உத்தாமம் என்பது எந்தவிதமான கட்டிலும் அடங்காதது எனப் பொருள்படுகிறது. வைபவம் என்பது வளம் எனவும் வல்லமை எனவும் பொருள்படுகிறது. கட்டி

லடங்காத செல்வத்தையும் வல்லமையையும் அன்னை பராசக்தி படைத்திருக்கிறாள். இயற்கைத் தாயின் திருவிளையாடல்களே அதற்குச் சான்றுகளாகின்றன.

**वर्णरूपिणी** — வர்ணரூபிணீ ௮௫௦

நிறங்களின் வடிவத்தில் இருப்பவள். 850

வர்ணம் என்னும் சொல் அக்ஷரம் எனவும் பொருள்படுகிறது. மொழிகளில் உள்ள ஒவ்வோர் அக்ஷரத்துக்கும் ஒவ்வோர் ஓசை உண்டு. அந்த ஓசைகளின் திரளாகிய ஓங்காரம் நாதப் பிரம்மத்தைக் குறிக்கிறது. நாதப் பிரம்மம் அகிலாண்டங்களுக்கும் அடிப்படை வித்தாக அமைந்திருக்கிறது. காரண நிலையிலோ காரிய நிலையிலோ இயற்கையில் அமைந்திருக்கும் யாவும் அன்னை பராசக்தியின் தோற்றங்களாம்.

வர்ணம் என்பது நிறத்தையும் இனத்தையும் குறிக்கிறது. சூரிய கிரணத்தில் அடங்கியுள்ள ஏழு நிறங்களிலும் எண்ணிறந்த படித்தரங்கள் உள்ளன. இயற்கையின்கண் நாம் காண்கின்ற நிறங்களனைத்தும் அன்னையின் மகிமைகளாக மிளிர்ந்து கொண்டிருக்கின்றன.

உயிர் வகைகள் படைத்துள்ள பரிபாகத்தையும் வருணம் என்னும் சொல் குறிக்கும். மக்களுக்கிடையில் உள்ள பரிபாகங்கள் பிராம்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர வருணங்கள் எனப் பகரப்படுகின்றன. பண்பாட்டில் ஆரம்பதசையிலிருக்கும் உயிர் வகைகள் சூத்திர வருணத்தைச் சேர்ந்தவைகள் என்றும் பண்பாட்டில் உச்சநிலையை அடைந்துள்ள உயிர் வகைகள் பிராம்மண சொரூபங்கள் என்றும் சொல்லப்படுகின்றன. சூத்திர வருணத்தைச் சேர்ந்தவைகளாக வாழ்வைத் தொடங்கும் உயிர்கள் படிப்படியாகப் பரிணமித்து மேல்நிலைக்கு வருகின்றன. வருணங்களையெல்லாம் தாண்டிய நிலையில் பரம்பொருளில் ஒன்றுபடும் ஆத்ம பரிபாகம் சாதகனுக்கு வந்தமைகிறது. ஆகவே உயிர் வகைகளின் இனம், வகுப்பு, பரிபாகம், முன்னேற்றம் ஆகிய யாவும் அன்னையின் சொரூபங்கள் ஆதலால் அவள் வர்ணரூபிணீ எனப் போற்றப்பெறுகிறாள்.

**जन्ममृत्यु जरातप्तजनविश्रान्ति दायिनी ८५१**

**ஜன்ம ம்ருத்யுஜரா தப்த ஜன விச்ராந்தி தாயினீ 851**

பிறப்பு, இறப்பு, முதுமை இவைகளால் தாக்கப்படுகின்ற ஜனங்களுக்கு அமைதி நிலையை நல்குபவள்.

பாலர் வகுப்பில் பயிலும் மாணுக்கன் ஒருவன் ப்டிப்படியாக மேல்நிலைக்கு வந்து கல்விமானகப் பரிணமிக்கிருன். சூத்திர வருணத்தில் வாழ்வைத் தொடங்கும் உயிர் வகைகள் அந்தந்த வகுப்பிற்கேற்ற முயற்சியில் ஈடுபட்டுப் பல பிறவிகளில் பரிபாகம் அடைந்து வருகின்றன. இளமையில் வாழ்வைத் தொடங்கும் உயிர் ஒன்று காளேப் பருவம், முதுமைப் பருவம், மூப்பு ஆகியவை வாயிலாக மேல்நிலைக்குப் போகின்றது. படாதபாடுபட்டு மேல் நிலைக்கு வரும் மாணுக்கர்கள் மேல் வகுப்பைச் சார்ந்தவர்களாகிரூர்கள். அதே விதத்தில் பரிபாகத்தில் மேல்நிலைக்கு வருகின்றவர்கள் வருணத்தில் மேலே வந்தவர்களாகின்றனர். இப்படி மேன்மையடைவதற்குப் பிறப்பு, மூப்பு, இறப்பு ஆகியவை நன்கு பயன்படுகின்றன. அந்தந்த்ப் படித்தரத்திலிருக்கும் ஜீவன் ஆத்ம பரிபாகம் அடைவதற்கேற்ற வர்ண தர்மத்தை நன்கு நிறைவேற்றியாக வேண்டும். முன்னேற்றத்துக்கு முயற்சியைப் போன்று ஓய்வும் இன்றியமையாததாகின்றது. ஹிமாசலத்தில் கேதாரநாத், பத்ரிநாத் யாத்திரைகளில் திண்ணிய உடல் படைத்திருப்பவர்கள் விரைவில் யாத்திரையைப் பூர்த்தி பண்ணுகின்றனர். தளைமையில் பின் தங்கியிருப்பவர்களுக்கு ஓய்வு வேண்டிய அளவு தேவையாகிறது.

அன்னை பராசக்தி அனந்தங்கோடி ஜீவர்களை வர்ணப் பாகுபாட்டின் வாயிலாகவும் முயற்சியின் தரத்திற்கேற்றவாறும் படிப்படியாக முன்னணிக்குக் கொண்டு வருகிருள். முன்னேற்றத்தின் பொருட்டுப் பிறப்பு, மூப்பு, இறப்பு ஆகிய மாறுபாடுகளுக்கு உட்படுவதை ஜீவர்கள் தவிர்க்க முடியாது. அடுத்த முயற்சிக்கு ஆயத்தப் ப்டுத்துதல் பொருட்டு ஓய்வு எடுத்துக்கொள்ளுதலும் வாழ்வில் இன்றியமையாத கூறு ஆகின்றது. இம்முறைகள் யாவற்றையும் கையாண்டு அன்னை பராசக்தி உயிர்களைப் படிப்படியாகப் பக்குவப்படுத்தி வருகிருள் என்பது இந்நாமத்தின் உட்பொருளாகும்.

**सर्वोपनिषदुद्घुष्टा — சர்வோபனுஷத் உத்குஷ்டா** ८५२

உபநிஷதங்கள் அனைத்தாலும் ஒருங்கே போற்றப்படுபவள். 852

வேதங்களின் உச்சநிலையாகிய உபநிஷதங்கள் மறைமுடி என அழைக்கப்படுகின்றன. வேதங்கள் விருட்சங்கள் என்றால் உபநிஷதங்கள் கனிகளாக அமைந்திருக்கின்றன. கர்மகாண்டமாகிய வேதங்கள் பிரபஞ்ச அமைப்புக்கு விளக்கங்களாக அமைந்துள்ளன. ஞானகாண்டமாகிய உபநிஷதங்கள் பிரபஞ்சத்துக்கு அப்பால் இருக்கின்ற பரவஸ்துவை அடைவதற்கு வழிகாட்டிகளாக உள்ளன. யாண்டும் இருக்கும் பரவஸ்து ஸத் எனப்படுகிறது. அது தன்னைத்தானே அறிந்துகொண்டிருப்பதால் சித் எனவும் தன்னில் தானே திருப்தியுற்று இருப்பதால் ஆனந்தம் எனவும் இயம்பப்பெறுகிறது. இது மெய்ப்பொருளின் சொரூப இலக்ஷணம். படைத்தல், காத்தல், துடைத்தல், மறைத்தல், அருளல் ஆகிய பஞ்ச கிருத்தியங்கள் பரம்பொருளின் தடஸ்த இலக்ஷணங்கள் எனப்படுகின்றன. மனம், மொழிக்கு எட்டாத பரம்பொருளைச் சொல்லால் ஏகதேசம் விளக்கியும் விளக்காமலும் இருப்பதால் உபநிஷதங்களின் உட்பொருள் இரகசியம் என இயம்பப் பெறுகிறது. 'முடிந்த பொருளுக்கு விளக்கமாக நான் மௌனமாக இருக்கிறேன்' என்பது கீதை வாக்கியம். 'சொல்லற்கரிய பொருளை ஒரு சொல்லால் உணர்த்தி' என்று சான்றோர் ஒருவர் இயம்புகின்றார். அப்படிச் சொல்லால் சுட்டிக்காட்ட முயலுவது உபநிஷதங்களின் போக்கு ஆகும்.

பரவஸ்துவுக்கு ஆத்மா, பிரக்ஞானம், பிரம்மம் என்று பல பெயர்கள் இருந்தாலும் அதன் சொரூப விளக்கத்தில் உபநிஷதங்களுக்கிடையில் கருத்து வேறுபாடு இல்லை. அவை யாவும் சகுணசொரூபமாயிருக்கும் அம்பிகையின் மகிமையையே பலப் பல விதங்களில் போற்றி வருகின்றன என்பது இந்நாமத்தின் மூலம் விளக்கப்படுகிறது.

**शान्त्यतीत कलात्मिका — சாந்த்யதீத கலாத்மிகா** ८५३

சாந்த்யதீதம் என்னும் கலைவண்ணமாய் இருப்பவள். 853

பஞ்சபூதங்களுள் முதலாவதாகவும் சூட்சுமமாகவும் உள்ள ஆகாச தத்துவத்துக்குரிய கலையாகச் சாந்த்யதீதம் அமைந்துள்ளது. ஓசையற்று யாண்டும் தன்மயமாய் இருக்கும் எங்கும் வியாபகமாயுள்ள ஆகாசத்தின் தன்மாத்திரை ஓசை. ஓசையின் திரளாகிய பிரணவம் மாத்ரப் பிரணவம், அமாத்ரப் பிரணவம் என்னும் இரண்டு கூறுகளாய் அமைந்துள்ளது. அமாத்ரப் பிரணவம் என்பது சலனமற்று, ஓசையற்று இருக்கிறது. தண்ணீரின் தன் மாத்திரை சுவை எனினும் அது தன்னளவில் சுவையற்று இருக்கிறது. ஆயினும் ஏனைய சுவைகளை எடுத்துக் காட்ட வல்லதாய் நீர் அமைந்திருக்கிறது. அதே பாங்கில் ஆகாசத்தின் தன்மாத்திரை சப்தம் எனினும் அது தன்னளவில் நிசப்தமாய் இருக்கிறது. ஏனைய பூதங்களின் கூட்டுறவால் ஏற்படும் சலனத்தை முன்னிட்டு அதனிடத்து ஓசை உருவெடுக்கிறது. அந்த ஓசையின் தொகையே மாத்ரப் பிரணவமாகிறது. ஓசையை உண்டுபண்ணிச் சாந்தத்தைக் கலைக்கலாம். ஓசையற்ற நிலையில் உள்ள சாந்தத்தை யாருமே கலைக்க முடியாது. எனவே, அமாத்ரப் பிரணவமும் சாந்த நிலையும் ஒன்றேயாம். பிரபஞ்சத்துக்கு அப்பால் இருக்கும் அது சாந்த்யதீதம் எனப்படுகிறது.

தன் ஜீவபோதத்தை ஒதுக்குமிடத்து ஜீவாத்மன் ஒருவன் சாந்த்யதீத நிலையை அடைகிறான். சமுத்திரத்தில் வீழ்ந்த மழைத்துளி சமுத்திரத்தில் ஒன்றுபடுதற்கு நிகராக அவன் பரமாத்மனில் இரண்டற்றவனாகின்றான். அத்தகைய ஓசை, ஒலியை எல்லாம் கடந்த அத்வைத நிலையில் பரதேவதையாகிய அம்பிகை யாண்டும் இலங்குகின்றாள். அவளை உபாசிப்பது முடிந்த கலையாகிறது. அக்கலையின் வாயிலாக ஜீவாத்மன் பரதத்துவத்தில் ஒன்றுபடுவது சாத்தியம் என்னும் கோட்பாடு இந்நாமத்தில் அடங்கியுள்ளது.

**गम्भीरा — கம்பீரா** ௮௫௪

அளப்பரியவள். 854

புறத்தே தென்படும் வெட்டவெளி அகண்டாகாரத்தில் விரிந்து ஓடுகிறது. உள்ளத்தின் உள்ளே இருக்கும் வெட்ட வெளியும் அகண்டாகாரத்தில் விரிந்து கொண்டு போகிறது.

எவ்வளவு தான் ஆழ்ந்து மூழ்கினாலும் அந்த ஆழத்துக்கு முடிவில்லை. ஆக, அகம் புறம் என்றது அகண்டாகாரப் பெருவெளியே யாண்டும் நிறைந்திருக்கிறது. இதில் அந்தக்கரணத்தை விரிவடையச் செய்து கொண்டு அம்பிகையின் நாமத்தை ஜபம் செய்தால் அந்த நாமத்துக்கு அலாதியான வீரியம் வந்தமைகிறது. அப்படி உச்சரிக்கும் ஆத்ம சாதகன் அதிவிரைவில் தெய்வீகத்தில் திளைத்தவனாகிறான். கம்பீரா என்னும் நாமத்தில் இந்த அரிய கோட்பாடு அடங்கியுள்ளது.

**गगनान्तस्था — ககனாந்தஸ்தா** ८५५

வெட்டவெளியின் மத்தியில் இருப்பவள். 855

தன் அமைப்பை ஓர் உருவத்தில் அமைத்துக்கொள்ளும் மானுடன் அதன் எல்லையுள் அடங்கிய இன்ப துன்பங்களுக்கு ஆளாகிறான். அதற்கு மாறாக அவன் தன் அந்தக்கரணத்தை அகம், புறம் என்றதபடி அகண்டாகாரத்தில் விரிவடையப் பண்ணுகின்ற அளவுக்கு அவன் துன்பத்தினின்று விடுதலை அடைகிறான். எஞ்சி நிற்கும் எல்லை மருவாத பேரின்ப சொருபிணியாக அம்பிகை இலங்குகின்றாள். ஆத்ம சாதகன் தனக்குத் தானே கற்பித்துக் கொள்கின்ற இன்பதுன்பங்கள் பொருளற்றவை. அவற்றைப் பொருளுற்றவையாகப் பாவித்து மனோ விகாரமடைவது அக்ஞானத்தின் விளைவாம். கண்டமாயுள்ள பிரபஞ்சத்தில் கட்டுண்டு கிடப்பது அக்ஞானத்தை வளர்க்கிறது. பிரபஞ்சப் பற்றுதலிலிருந்து மனதை விலக்கி எடுக்கவேண்டும். அகண்டாகார வெட்டவெளியில் வீற்றிருக்கின்ற அன்னை பராசக்தியின் உபாசனை ஒன்றே இவ்வுலக சம்பந்தமான இன்ப துன்பங்களைத் துடைத்துத்தள்ளுவதற்கு உற்ற உபாயமாம்.

**गर्विता — கர்விதா** ८५६

தற்பெருமையோடு கூடியிருப்பவள். 856

பல காரணங்களை முன்னிட்டு மனிதனுக்குக் கர்வம் வருகின்றது. நல்ல வமிசத்திலே தான் பிறந்திருப்பதாகக் கருதி மானுடன் ஒருவன் அகந்தை பூணுகிறான். தான் பிறந்திருக்கும் நாட்டை முன்னிட்டு இன்னொருவன் அகந்தை கொள்கிறான். தான் படைத்திருக்கும் மேனி அழகை அல்லது செல்வத்தை முன்னிட்டு

மற்றொருவன் செருக்கடைகிறான். தன் ஆற்றலை முகாமையாக வைத்துக்கொண்டு வேறு ஒருவன் வீண் கர்வம் படைத்தவனாகிறான். தன் அறிவை அடிப்படையாக வைத்துக்கொண்டு இன்னொருவன் அகந்தை பூணுகிறான். தனக்கு வாய்த்துள்ள பதவி அதிகாரம், நட்பு ஆகியவை குறித்தும் ஒருவனிடம் அகங்காரம் உண்டாகிறது. இவை எல்லாவற்றுக்கும் மூலகாரணமாய் இருப்பவள் அன்னை பராசக்தி என்று அறிகின்றவன் பாக்கியவான். அகிலாண்ட கோடிகளை ஈன்றெடுத்துள்ள அம்பிகை தன் பேரமைப்பில் திருப்தி அடைந்திருக்கிறாள். அந்தத் திருப்தியே கர்வம் என இயம்பப் பெறுகிறது. மனிதன் பூணுகின்ற கர்வம் நீர்க்குமிழி போன்று நிலையற்றதாகிறது. அன்னை பராசக்தியின் கர்வம் நிரந்தரமானது. ஆத்மசாதகன் ஒருவன் எக்காரணத்தை முன்னிட்டாவது தனக்குக் கர்வம் உண்டாகுமானால் அதை அம்பிகைக்குரியதாக ஒப்படைக்கவேண்டும். அப்படிப்பட்டவன் நல்ல சாதகன் ஆகிறான். அத்தகையவன் உள்ளத்தினுள் ஓர் ஒப்பற்ற தெய்வீக மனப்பான்மையை வரவழைத்துக்கொள்ள வேண்டும். அன்னையின் அருளால் அந்த அரிய பெரிய காரியம் தன்மூலம் நிறைவேறியது எனத் திருப்தியடைவது கர்வம் அடைவதற்கு நிகர். அத்தகைய திருப்திகரமான மனப்பான்மையுடன் தான் சாதித்ததை அன்னையிடம் ஒப்படைப்பது முறை. அதன்மூலம் சாதகன் மேலும் மேலும் முன்னேற்றமடைகிறான்.

**गानलोलुपा** — கானலோலுபா ८५७

இசையில் மனதைச் செலுத்துபவள். 857

ஒழுங்குப்பாடுடன் அமையும் ஓசைக்கு இசை என்று பெயர். பறவையிடத்தும், மனிதனிடத்தும் இசையில் பண்பாட்டைப் பெரிதும் காணலாம். மற்ற ஜந்துக்கள் யாவும் இன்னிசைக்கு வசப்படுகின்றன. கண்ணனின் குழலோசையைக் கேட்டு ஜீவ ஜந்துக்கள் அனைத்தும் தம் ஜீவபோதத்தை மறந்து அபேத நிலையில் கண்ணன் எதிரே வந்து சேர்ந்தன. கானத்தின் மகிமை அச்செயலின் மூலம் வெளியாகிறது. லலித கலைகளில் ஒன்றான கானம் முறையாக அமையுமிடத்து அதன் விளைவாக மனம் குவிகிறது. குவிந்த மனம் மனாதீதத்தை எட்டவும் அது துணைபுரிகிறது. ஜீவர் தளிடத்துள்ள தெய்விக இயல்பை நினைவூட்டும்

கலைகளுள் கானம் உச்சநிலை பெறுகிறது. உயிர்களனைத்துக்கும் நலன் வழங்க வல்லது எதுவோ அது இயல்பாக அன்னை பராசக்திக்குப் பிரியமானதேயாம். ஆதலால் இன்னிசையில் வல்லமை ஆத்மசாதகன் ஒருவனிடம் அமைந்திருக்குமானால் அதை அவன் அம்பிகை வழிபாட்டுக்கு நன்கு பயன்படுத்தலாம்.

பக்திக்கு அன்னியமாயுள்ள இன்னிசை எவ்வளவு சிறப்பு வாய்ந்ததாய் இருந்தாலும் ஆத்ம சாதகன் அதில் கருத்தைச் செலுத்துதல் ஆகாது. பக்திப் பரவசத்தோடு கூடிய கானத்தை அம்பிகைக்குப் பிரியமானதென்று உணர்ந்து ஆத்ம சாதகன் நன்கு பயன்படுத்த வேண்டும்.

**कल्पना रहिता — கல்பனா ரஹிதா** ८५८

கற்பனை ஏதும் இல்லாதவள். 858

மனிதன் காண்கின்ற கனவு அவனுடைய சொந்தக் கற்பனையாம். அவனுடைய மனோவிகாரத்துக்குப் புறம்பாக அவன் காண்கின்ற சொப்பன உலகம் இல்லவேயில்லை. நனவிலே மனிதன் படைத்திருக்கிற பாங்குகள் யாவும் கனவிலும் தோன்றுவதால் ஒருவனுடைய பாங்கு எத்தகையது என்று அவன் காணும் கனவே எடுத்துக் காட்டுகிறது. இனி, நனவில் காண்பவைகளும் மனதின் கற்பனைகளேயாம். நல்ல மனம் படைத்திருப்பவனுக்கு நனவிலும் கனவிலும் நல்ல கற்பனைகளே வடிவெடுக்கின்றன. ஆத்ம சாதகன் நல்ல சித்த விருத்திகள் அல்லது நல்ல கற்பனைகள் உள்ளத்தில் உருவெடுக்கும்படி செய்தால் அவை கெட்ட கற்பனைகளை ஒதுக்கித் தள்ளுகின்றன. நல்ல கற்பனைகள் படைத்திருப்பவன் அம்பிகை உபாசனைக்கு முற்றிலும் தகுதி உடையவனாகிறான். உபாசனை தீவிரமாக வாய்க்குமிடத்து மனோநாசம் தானாக வந்தமைகிறது. எண்ணங்கள் ஒடுங்கிய நிலை கல்பனா ரஹிதம் எனப்படுகிறது. அந்நிலையை அடைகின்ற ஆத்ம சாதகன் சுத்தசைதன்யமாயுள்ள அன்னை பராசக்தியோடு ஒன்றுபடுகிறான். பிரபஞ்சம் என்னும் கற்பனைக்கு அப்பால் அன்னை பராசக்தி யாண்டும் சுத்த சைதன்யமாகவே இலங்கிக்கொண்டிருக்கிறாள். அந்நிலையை அடைகின்ற ஆத்ம சாதகனுக்கே அவளுடைய நிஜநிலை நன்கு விளங்குகிறது.

மனதிலுள்ள விகாரங்கள் ஒழிந்துபோனல் பிரபஞ்சக் காட்சி மறைந்து போகிறது; சைதன்யமே எஞ்சி நிற்கிறது.

**काष्ठा — காஷ்டா** ௮௫௯

வேதாந்தத்தின் உட்பொருளாயிருப்பவள் 859

சிவனர் எட்டு வடிவங்களில் சிறப்புற்று இலங்குகின்ருர். அவற்றுள் பீமன் என்பது ஆகாச வடிவத்தைக் குறிக்கிறது. பீமனய் இலங்குகின்ற சிவனருக்குப் பத்தினியாய் இருப்பவள் காஷ்டா என்பது புராண வரலாறு.

தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபடும்பொழுது அதன் பொருள் விரிவடைந்து கொண்டே போகிறது. அதனல் மனம் குழப்ப மடைதல் வேண்டாம் என்பதைப் பரமஹம்ச தேவர் ஓர் உபமானத்தின் மூலம் விளக்குகிருர். ஆற்று மணலில் ஊற்று ஒன்றைத் தோண்டினல் அதில் நீர் தேங்கி நிற்கிறது. அதைக் கலக்காது எடுத்துப் பருகித் தாக ச்ாந்தி செய்துகொள்வது உசிதம். தத்துவ விசாரம் பண்ணுபவர்கள் சேறு படிந்த நீர் போன்று குழம்பிய கருத்துக்களை உடையவர்களாய் இருக்கின்ருர்கள். அவர்களுடைய வேதாந்தம் அஜீர்ணவேதாந்தம் ஆகும். குழம்பியிருக்கும் அளவுக்கு அன்னவர்கள் வேதாந்த விசாரத்தில் நெறி வழுவிப் போனவர்களாகின்ருர்கள். காஷ்டாவாக இலங்கும் அம்பிகை வேதாந்தத்தின் உட்பொருளை அனைவரும் அறிந்துகொள்ளக் கூடிய உண்மைத் தத்துவமாக இருக்கின்ருள்.

பரவஸ்துவை இரண்டொரு சொற்களில் ஐயம் திரிபறத் தெளிவுபடுத்துமிடத்து அது மகாவாக்கியமாகிறது. பிரக்ஞானம் பிரம்மம்; ஆனந்தம் பிரம்மம் என்பவை மகாவாக்கியங்கள். தங்கு தடையற்ற பேரின்ப சொரூபிணியாக அன்னை பராசக்தி இலங்குகின்ருள். தான் இருப்பதைத் தானே அறியும் பேரறிவு அல்லது பிரக்ஞானம் என்பது பரவஸ்துவுக்கு முடிவான விளக்கம். இந்த விளக்க மயமாக இருக்கும் அம்பிகை காஷ்டா எனக் கூறப் பெறுகிருள். அன்னை பராசக்தியை அடையப் பெறும் ஆத்ம சாதகன் தெளிந்த அறிவினனுகவும் தூய அன்புருவமாகவும் மாறியமைகிருன். இந்நாமத்தின் வாயிலாக இவ்வுண்மையை அன்னை பராசக்தி உறுதிப்படுத்துகிருள்.

**अकान्ता — அகாந்தா** ८६०

பாபத்தைப் போக்குபவள், 860

மனிதன் புரிகின்ற ஒவ்வொரு பாபச் செயலும் அகம் எனப் படுகிறது. அதற்கு அடிப்படையாயிருப்பது அக்ஞானம். அவன் அடையும் துன்பத்திற்கும் மூலகாரணம் அக்ஞானம். தூங்கும் பொழுது பொருந்தாத கனவு கண்டு மனிதன் பெரும்துயரத் துக்கு ஆளாகிறான். தூக்கத்தினின்று அவனை விழிப்பு நிலைக்குக் கொண்டுவந்தால் அத்துன்பத்தையெல்லாம் விரட்டியோட்ட அது உற்ற உபாயமாகிறது. விழித்துக்கொண்ட உடனே தான் மருண்டுபோனதன் காரணத்தை அவன் தானே அறிகின்றான். மனிதன் சுத்த சைதன்யத்தினின்று பிசகும்பொழுதெல்லாம் அவன் நெறி பிறழ்ந்தவனாகின்றான். எனவே, அவன் பாபச் செயலுக்கு உட்படுகின்றான். அன்னவன் பேரானந்தத்தினின்று பிசகும்பொழுதெல்லாம் அச்ஞானத்தை வருவித்துக்கொள்கிறான். அன்னை பராசக்தி அகாந்தாவாக இருந்துகொண்டு அக்குறை நிலையை நிறைநிலையாக மாற்றியமைக்கிறாள் என்பது இந்நாமத் தின் பொருள்.

**कान्तार्ध विग्रहा — காந்தார்த விக்ரஹா** ८६१

சிவனுருடைய சொருபத்தின் செம்பாதி வடி வினளாய் இலங்குபவள். 861

சிவனுரை மாது ஒரு பாகம் ஆனவன் என்றும் அர்த்தநாரீசு வரன் என்றும் போற்றுகிறோம். புருஷதத்துவம், பிரகிருதி தத்துவம் ஆகிய இரண்டும் சேர்ந்தது அந்த வடிவம். பிறந்த குழந்தையை உடனடியாக உதவி கொடுத்துப் பேணுபவள் தாய். தாயின் துணைகொண்டு குழந்தை தன் தந்தையை அறியவரு கிறது. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்பது வாழ்க் கைத் தத்துவம். அன்னை தந்தைக்கு மிக்காளாக இருக்கின்றாள். அன்னையிலாச் சேய் சரியான பாங்கில் உருவெடுப்பதில்லை. குழந்தை சரியான பாங்கில் வளர்ந்து வருவதற்குத் தாயும் தந்தை யும் உறுதுணையாகின்றனர். இதில் தாயே முதலிடம் பெறு கிறாள். 'அகிலாண்டகோடி ஈன்ற அன்னையே' என்று உயிர் களைப் பேணி வருகின்ற அம்பிகை போற்றப் பெறுகிறாள். தன்

கணவனுகிய சிவனுரிடத்து அவள் வைத்துள்ள பேரன்பை முன்னிட்டே இந்த மகிமைகள் யாவும் அவளுக்கு வந்து அமைந்துள்ளன.

**कार्यकारण निर्मुक्ता — கார்யகாரண நிர்முக்தா** ८६२
*வினேவும் அதற்கு முகாமையும் ஆகிய* 862
*நிலேகளுக்கு அப்பாலிருப்பவள்.*

பிரபஞ்சத்தில் அனைத்தும் காரண காரியமாக இலங்கிக்கொண்டிருக்கின்றன. தாய்தந்தையர்க்குப் பிள்ளையாய்ப் பிறந்திருப்பவன் தாய் தந்தையரின் வாழ்வின் விளேவாக அல்லது காரியமாக வடிவெடுத்துள்ளான். அவன் தக்க பருவத்தில் இல்வாழ்வு வாழ்ந்து தன்னைத் தொடர்ந்து வரும் சந்தானத்திற்குக் காரணமாக இலங்குகின்ருன். இங்ஙனம் ஆதியந்தமில்லாத காரண காரியமாகப் பிரபஞ்சம் விளங்குகின்றது.

மனிதன் ஒருவன் சிறுவனுய் இருந்தபொழுது அவன் உடலமைப்பு அதற்கேற்றவாறு மாறியமைந்திருக்கிறது. அவனுக்கு வயது ஆக ஆக அவன் சரீரமும் மாறியமைந்து கொண்டே வருகிறது. ஆனல் அவனுடைய சரீரத்தில் வீற்றிருக்கும் ஆத்ம சைதன்யத்திற்கு அத்தகைய மாறுபாடுகள் இல்லே. அது யாண்டும் தன்மயமாய் உள்ளது. காரண காரியங்கள் யாவும் பிரகிருதியின் கூறுகள். அந்தப் பிரகிருதிக்கு ஆதாரமாயிருக்கும் ஆத்ம சைதன்யம் எந்த விதமான மாறுபாடும் அடையப்பெருமல் தன்மயமாயிருப்பதே வியஷ்டியாயிருக்கும் ஜீவாத்மனைப் பற்றிய உண்மை. சமஷ்டியாக உள்ள அம்பிகையைப் பற்றிய உண்மையும் இதுவேயாம். அண்டத்திலிருப்பதெல்லாம் பிண்டத்திலும் இருக்கிறது. எல்லாப்படித்தரங்களிலும் அமைப்பானது ஒரே பாங்குடையது. பிரகிருதிக்கு அப்பாற்பட்ட ஆத்ம சைதன்யமே பிரகிருதிக்கு ஆதாரமாகவும் உள்ளது. காரண காரிய மயமாயுள்ள பிரகிருதியிடமிருந்து யாண்டும் விலகியதாக ஆத்ம சைதன்யம் உள்ளது. எனவே, காரணகாரிய நிர்முக்தா என்னும் நாமம் அம்பிகைக்கு அமைந்துள்ளது. ஆத்ம சாதகன் காரணகாரியமயமாயுள்ள தன் தேகத்தில் கருத்தைச் செலுத்தாமல் யாண்டும் நித்திய முக்தனுயுள்ள ஆத்ம சைதன்யமே தன் நிஜசொரூபம்

என்னும் எண்ணத்தில் நிலைபெற்றிருப்பது அம்பிகைக்குரிய நலை சிறந்த வழிபாடாகிறது.

**कामकेलितरङ्गिता — காமகேலிதரங்கிதா ८६३**

காமேசுவரருக்கும், அம்பிகைக்கும் இடையி 863
லுள்ள விளையாட்டின் விளைவாகச் சேதன அசேதன மாய் உள்ள அண்டங்கள் என்னும் அலைகளைச் சதா தோற்றுவித்துக் கொண்டிருப்பவள்.

தடாகத்தில் அலைகள் உருவெடுத்துக் கொண்டிருப்பது போன்று உள்ளத்தில் எண்ணங்கள் உதித்துக்கொண்டிருக்கின் றன. அவை உல்லாசம், காமம் என இருவகைப்படுகின்றன. புறத்திலுள்ள ஏதேனும் ஒரு பொருளையோ, பண்பையோ பெற வேண்டும் என்று எழுகின்ற சித்த விருத்திக்குக் காமம் என் பது பெயர். ஆசையின் விளைவாகக் காமங்கள் உருவெடுக்கின் றன. அவை நிறைவேறுகின்றபொழுது இன்பமும் தோல்வி யுறுகின்றபொழுது துன்பமும் உண்டாகின்றன. அகமகிழ்வின் விளைவாக வருகின்ற சித்த விருத்தியில் குறையேதும் இல்லை. அத்தகைய உல்லாசத்தில் துன்பம் எதற்கும் இடமில்லை. காமத்தை வெல்லுதலே ஜீவாத்மன் ஒருவனுடைய வாழ்வின் முடிவான குறிக்கோள். அறவே காமத்தை அகற்றி ஆத்மசொரு பத்தில் நிலைத்திருப்பவன் நிறைஞானியாகிறான்.

சிவனாரிடம் இருக்கும் காமம் உல்லாசத்திற்கு நிகரானது. நிறைபொருளாகிய அவர் ஆசைப்படுவதற்கு அவசியமில்லை. கோடிக்கணக்கான காமங்கள் சர்வேசுவரனுடைய விசுவ மனதி லிருந்து வடிவெடுத்து வந்துகொண்டிருக்கின்றன. ஆயினும் அவ ருடைய நிறைவுக்குப் பங்கம் ஏதும் உண்டாவதில்லை. இறைவ னும், இறைவியும் பூணும் அன்புக்குக் கேலி என்று பெயர். அன் பினால் தூண்டப்பட்ட விளையாட்டு என அது பொருள்படுகிறது. காற்றடிக்காதபொழுது கடலில் அலை உண்டாவதில்லை. அலை யற்ற கடல் போன்றது சதாசிவத்தின் பாங்கு. நிறைஞானிகளும் சித்தவிருத்திக்கு அப்பாற்பட்ட அத்தகைய நிலையில் இருக்கின் றார்கள். எந்தவிதமான காமத்துக்கும் அடிமைப்படாமல் இறை வனும், இறைவியும் காமத்தை வரவழைத்து விளையாடுவதன்

வாயிலாக அண்டகோடிகளும் ஜீவகோடிகளும் உருவெடுக்கின்றன. இவ்வுண்மையை இந்நாமம் விளக்குகின்றது.

**कनत्कनकताटङ्का — கனத்கனக தாடங்கா** ८६४

பிரகாசிக்கின்ற தங்கத் தோடுகளை உடையவள். 864

ஆத்மப் பிரகாசத்துக்கு ஓரளவு பொருத்தமான உபமானமாகத் தங்கம் என்னும் உலோகம் பிரகாசம் பொருந்தியதாக உள்ளது. அது சுலபத்தில் மாசுபடியாத பாங்குடையது. அது யாண்டும் மினுமினுத்துக்கொண்டே இருக்கிறது. அதேபோன்று ஆத்மப் பிரகாசத்தை மறைக்க எதற்கும் இயலாது. பிரளய காலத்தில் பிரபஞ்ச சம்பந்தமான அனைத்தும் மறைந்துபட்டுப் போகின்றன. நித்திரையில் நாம் அனுபவிக்கும் காரிருள் மயமானது பிரளயம். ஆயினும் அக்காரிருள் ஆத்மப் பிரகாசத்தை மறைக்க வல்லதன்று. அன்னை பராசக்தி யாண்டும் ஆத்மப் பிரகாசமே வடிவெடுத்தவள் என்னும் கோட்பாடு இந்நாமத்தில் அடங்கியிருக்கிறது.

**लीलाविग्रहधारिणी — லீலாவிக்ரஹதாரிணீ** ८६५

விளையாட்டாக உடலங்களை எடுத்திருப்பவள். 865

பிரபஞ்சத்தில் க்ஷரம், அக்ஷரம், சேதனம், அசேதனம் ஆகிய வடிவங்கள் யாவும் அகிலாண்டகோடி பிரமாண்ட நாயகி அம்பிகையின் வடிவங்களாம். பூமியின்கண் முக்கால் பாகத்துக்கு வியாபகமாயிருக்கும் நீரானது உறைபனி, மூடுபனி, மஞ்சு, நீராவி என்றெல்லாம் வடிவெடுத்துள்ளது. அவ்வாறு பல வடிவங்களில் இலங்குவதற்கு ஜலம் என்னும் பூதத்துக்குச் சிரமம் ஏதும் இல்லை. புல் முதல் பிரம்மா பரியந்தம் உள்ள அத்தனைகோடி ஜீவர்களாக வடிவெடுத்துள்ள அம்பிகைக்கும் சிரமம் ஏதும் இல்லை. விளையாட்டாக இவை யாவற்றையும் அவள் செய்து சாதிக்கிறாள். இவ்வுண்மையை உள்ளபடி அறிகின்ற ஆத்ம சாதகர்கள் தோன்றியுள்ள ஜீவகோடிகள் அனைத்தையும் அம்பிகையின் சொரூபங்களாகவே கருதிப் போற்றுவார்கள். அதன் வாயிலாகச் சாதகனுடைய மனது அதிவிரைவில் அகண்டாகாரத்துக்கு விரிந்தோட வல்லதாகிறது.

**अजाया — அஜாயா** ८६६

பிறப்பெடுக்காதவள். 866

பரந்த கடல் நீரானது அனந்தங்கோடி அலைகளாக உருவெடுத்து உருண்டோடி விளையாடுகிறது. நீர்மட்டத்திலிருந்து பார்க்கும்பொழுது இக்காட்சி புலனாகிறது. பின்பு விமானத்தில் ஊர்ந்து வானத்தில் மிக மேலே இருந்து பார்த்தால் நீர்ப்பரப்பு ஒரே சமனாகத் தென்படுகிறது. அலையின் தோற்றம் எதையும் மிக உயரத்தில் இருப்பவர்கள் காண்பதில்லை. அன்னை பராசக்தியைப் பிரபஞ்சமயமாக நாம் பொருள்படுத்துகின்றபொழுது அவள் இத்தனை கோடி உயிர்களாக வடிவெடுத்து விளையாடுகிறாள். அதே பராசக்தியைத் தன் மயமாகப் பார்க்குமிடத்து அவள் பிறப்பு, இறப்பு ஆகிய விகாரங்களையெல்லாம் கடந்துள்ள பரதேவதையாக இலங்குகின்றாள். தங்கம் யாண்டும் தங்கமாகவே இலங்குகிறது. அதைக்கொண்டு அமைக்கின்ற நகைகளுக்கு எண்ணிறந்த வடிவங்கள் இருக்கின்றன. அவற்றை முன்னிட்டுத் தங்கம் எவ்விதத்திலும் பாதிக்கப்படுவதில்லை. அன்னை பராசக்தியின் நிஜநிலை அத்தகையதாம்.

**क्षयविनिर्मुक्ता — க்ஷயவிநிர்முக்தா** ८६७

மரணமில்லாதவள். 867

இயற்கையை உள்ளபடி ஆராய்ந்து பார்த்தால் அதற்கு அழிவில்லை என்பது வெளியாகிறது. சூடான கற்பாறையின் மீது ஒரு சொட்டுத் தண்ணீர் விட்டால் அது சிறிது நேரத்தில் இருக்குமிடம் தெரியாது மறைந்துபட்டுப் போகிறது. உண்மையில் அது சூனியமாகவில்லை; ஆவியாக மாறிவிட்டது. கட்புலனாகா விட்டாலும் அது அழிந்துபட்டுப் போகவில்லை. காற்றில் கலந்துள்ள நீராவி மேகமாக வடிவெடுக்கிறது. பிறகு, அது மழையாக மாறி மண்ணுலகில் வந்து வீழ்கிறது. தோற்றத்தில் உள்ள நிலை, தோன்றா நிலை ஆகிய இரண்டு நிலைகளில் நீரானது மாறி மாறி அமைந்துகொண்டிருக்கிறது. இவ்வுண்மை பிரபஞ்சம் முழுவதுக்கும் உரியதாம். தோற்றம், இருப்பு, மறைவு ஆகிய மூன்றும் பிரபஞ்சத்துக்கு இருந்தாலும் அது அழிந்துபட்டுப் போவதில்லை. பிரபஞ்சமயமாகக் காட்சிகொடுக்கும் அன்னை

பராசக்தி வெறும் தோற்றத்தளவில் கட்புலனுவதும் மறைந்து பட்டுப் போவதும் ஆகிய செயல்களில் ஈடுபட்டிருக்கிருள். உண்மையில் அவள் யாண்டும் தன்மயமாயிருக்கிருள். அவளுடைய ஓர் அம்சமாகிய ஜீவாத்மனுக்கும் இவ்வுண்மை பொருந்தியதாகிறது. தோற்றம், வளர்ச்சி, தேய்வு, மறைவு ஆகிய விகாரங்கள் யாவும் நாமரூபத்துக்கு உண்டு; ஜீவாத்மனுக்கு இல்லை. அன்னை பராசக்திக்குரிய மரணமிலப் பெருநிலையை ஆத்மசாதனத்தில் ஈடுபடும் ஜீவாத்மன் ஒருவன் தனக்குத்தானே அமைத்துக்கொள்ள முடியும். தான் எடுத்துள்ள தேகத்தில் கருத்து வைக்காது தன் சொருபத்திலேயே நிலைத்திருக்கப் பழகுவானுகில் அவன் மரணமிலாப் பெருநிலையை அனுபூதியின் வாயிலாக அறிந்துகொள்ள வல்லவனுகிருன்.

**मुग्धा — முக்தா ८६८**

கட்டழகே வடிவெடுத்தவள். 868

பிரபஞ்சத்தில் உள்ள பொருள் ஒன்று ஸ்தூல வடிவெடுத்துத் தோன்றவும் சூட்சும வடிவெடுத்து மறையவும் செய்கின்றது. ஆவியாக மாறும் நீர் கட்புலனுவதில்லை. அது மிக எளிதில் வெண்மேகமாகவும், கார்மேகமாகவும் மாறியமைந்து தன் அழகை வெளிப்படுத்துகிறது. உறைபனியாக வடிவெடுக்கும்பொழுது புஷ்ப விருஷ்டியாகவும், ஹிமாசலத்தில் வானளாவும் உறைபனிக் கட்டியாகவும், அருவியின் வாயிலாகவும், பெருக்கெடுத்தோடும் நதியின் வாயிலாகவும் அது தன் அழகை வெளிப்படுத்துகிறது. தோற்றத்துக்கு வந்துள்ள பிரபஞ்சம் முழுவதிலும் அழகு தாண்டவமாடுகிறது.

சின்னஞ் சிறு குழந்தைகள் அகங்கார, மமகாரமற்ற நிலையில் தெய்விகப் பொலிவுடன் திகழ்கின்றன. அந்தத் தூய அழகு உள்ளத்தைக் கொள்ளைகொண்டு போகிறது. சிரமம் ஏதுமின்றி அழகை உயிர்வகைகளனைத்தும் பாராட்டுகின்றன. அது உண்மையில் பரதேவதையின்கண் செலுத்துகின்ற ஆராதனையாம். கண்ணனுடைய அழகில் ஜீவர்கள் எல்லாரும் தம் ஜீவ வியக்திகளை மறந்துவிட்டுச் சொக்கியிருந்தனர் என்பது ஐதிகம். அம்பிகையின் பேரழகே பிரபஞ்சமெங்கும் பலப்பல பாங்குகளில் வெளியாகிக்கொண்டிருக்கிறது. அத்தகைய அழகில் ஆத்ம

சாதகன் ஒருவன் தன்னை மறந்து ஈடுபட்டிருப்பானாகில் அது அம்பிகையின் வழிபாடாகிறது.

**क्षिप्रप्रसादिनी க்ஷிப்ரப்ரஸாதினீ** ८६९

அதிவிரைவில் அனுக்ரஹம் செய்பவள். 869

நெடுநாள் மூடப்பட்டுக் காரிருள் சூழ்ந்த அறை ஒன்றினுள் தீப் வெளிச்சம் வரும்பொழுது இருள் அக்கணமே அகன்று போகிறது. அம்பிகையின் அருளைப் பெறுவதும் அதற்கு நிகராகிறது. சாதகன் ஒருவன் தன்னைத் தகுதி உடையவனாக மாற்றியமைத்துக்கொள்ளும்பொழுது அவன் அம்பிகையின் அனுக்ரஹத்துக்குப் பாத்திரமாகிறான். நெடுங்காலம், குறுகியகாலம் என்பதெல்லாம் மனதின் கற்பனையாம். தன்னை மாற்றியமைக்கும் செயல் ஒரு நொடிப்பொழுதில் நிகழலாம்; சாதனம் புரிந்துவருகின்ற பல பிறவிகளுக்குப் பிறகும் நிகழலாம்.

நெறிபிறழாது நல்வாழ்வு வாழ்ந்துவரும் மானுடன் ஒருவன் தன் கனவில் ஆழ்ந்து ஆத்மசாதனத்தில் ஈடுபட்டிருந்தபொழுது அவனுடைய பூஜா பாத்திரங்களைத் திருடர்கள் அபகரித்துச் சென்றனர். வழக்குத் தொடுத்து அவர்களிடமிருந்து அவற்றை மீட்டெடுத்தான். சில ஆண்டுகளாக மழைபெய்யாது அவன் வழிபாட்டுக்கு இடைஞ்சலை உண்டுபண்ணியது. நாஸ்திகர்களும் சூனியவாதிகளும் கடவுள் வழிபாடு மூடநம்பிக்கை என்று சிறிது காலம் அவனுடன் வாதாடினர்.

பிறகு, அவன் சாதனத்தில் ஈடுபட முடியாதபடி நோய்வாய்ப்பட்டான். மிகவும் சிரமப்பட்டுத் தன்னை நோயினின்று அவன் விடுவித்துக்கொண்டான். நல்லார்களின் கூட்டுறவால் அவன் ஆத்மசாதனத்தில் பெரிதும் முன்னேற்றமடைந்து வந்தான். இவ்வாறு அரை மணி நேரத்தில் நல்லும் கேடும் வாய்ந்த பல அனுபவங்களைப் பெற்ற அவன் கனவினின்று விழித்துக்கொண்டான். உடனே அவனுக்கு ஞானம் உதயமாகியது; அவன் அன்னையின் அருளுக்குப் பாத்திரமானான். க்ஷிப்ரம் என்பதும் யுகாந்தரம் என்பதும் வெறும் மனநிலைகளே என்னும் உண்மை அவன் உள்ளத்தில் உதயமானது. எக்கணத்தில் வேண்டுமானாலும் ஆத்மபோதம் பெறலாம் என்னும் பேருண்மை இந்நாமத்தின் மூலம் விளக்கப் பெறுகிறது.

**अन्तर्मुख समाराध्या** அந்தர்முக ஸமாராத்யா ௮௭௦

மனதை உள்முகமாகத் திருப்பி நன்கு ஆராதிக் 870
கப்படுபவள்.

பஞ்சேந்திரியங்கள் வாயிலாக மனம் யாண்டும் புறத்திலேயே போய்க்கொண்டிருக்கும் இயல்புடையது. புறத்திலுள்ள பொருள்களே கண்ணுக்குப் புலனாகின்றன. மனிதன் தன் காதுகளின் உதவியால் புறவுலக ஓசைகளையே கேட்கிறான். இதே பாங்கில் ஐந்து இந்திரியங்களும் புறவுலகுடன் தொடர்புகொள்ளுதற்கே அமைந்துள்ளன. மனது தன்னுள்ளேயே அம்பிகையின் வடிவத்தையே கிரஹிக்க முயலுகின்றபொழுது ஐம்பொறிகளுக்கும் அலுவல் ஏதும் இல்லை. காதின் துணையின்றியே அம்பிகைக்குரிய மந்திரத்தை மனம் தனக்குத்தானே ஓதிக்கொள்கிறது. மானசீக பூஜையில் சமர்ப்பிக்கப்படும் பொருள்கள் அனைத்தும், வழிபாடு அனைத்தும் புற இந்திரியங்களின் துணையில்லாமலேயே நன்கு நிகழ்கின்றன. இத்தகைய மானசீக பூஜை உச்சநிலை எய்துங்கால் 'பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க நெறி நின்றார் நீடு வாழ்வார்' என்னும் கோட்பாடு நன்கு நிறைவேறுகிறது. நீடுவாழ்தல் என்பது அழியாப்பொருளாகிய அம்பிகையின் தரிசனம் எனப் பொருள்படுகிறது. அன்னையின் வழிபாட்டை மேலான நிலைக்குக் கொண்டுபோகிறவர்கள் புறக்கரணங்களை ஒதுக்கி வைத்துவிட்டு அந்தக்கரணத்தை உறுதிப்படுத்தவும், தெளிவுபடுத்தவும் வேண்டும். அது பூர்த்தியாகும் இடத்து 'ஓயாதே உள்குவார் உள்ளிருக்கும் உள்ளானை' என்னும் ஆப்தமொழி நல்ல அனுபூதியாக வடிவெடுக்கிறது.

**बहिर्मुखसुदुर्लभा** — பஹிர்முகஸுதுர்லபா ௮௭௧

புறக்கரணங்களைப் பயன்படுத்திப் பண்ணு 871
கின்ற ஆராதனைகளின் வாயிலாக அரிதாக அண்டயப்பெறுபவள்.

மூலப்பொருளாகிய சிவசக்தியை அறிவது அண்டங்களனைத்தையும் அறிந்து கொள்வதற்கு நிகர். கருவிக்கரணங்களையொடுக்கி அந்தர்முகதிருஷ்டியில் சென்ற கணபதி அதிவிரைவில் பலனடைந்தான். கருவி கரணங்களைப் பராட்டத்துக்கென்று

பயன்படுத்திய முருகனுக்கு அதிகச் சிரமமும் கால தாமதமும் ஏற்பட்டன. இக்கோட்பாடு எக்காலத்திலும் எல்லாச் சாதகர்களுக்கும் பொதுவானது. எனவே, பரம்பொருள் நாட்டம் பூணுகின்றவர்கள் புறக்கருவி கரணங்களை ஒதுக்கித் தீவிரமாக அந்தர்முக நாட்டத்தில் ஆழ்ந்து செல்வது சாலச் சிறந்தது.

**त्रयी — த்ரய்யீ** ८७२

ரிக், யஜுர், சாமம், என்னும் மூன்று வேதங்களின் வடிவத்தில் இருப்பவள். 872

இந்த மூன்று வேதங்களும் இயற்கையின் நடைமுறையை உயிர்களனைத்தும் காண்கின்றவாறு விளக்குகின்றன. அதர்வண வேதத்தில் இயற்கைக்குரிய அசாதாரணமான வல்லமைகள் பல விளக்கப்படுகின்றன. அவைகளை அறிந்துகொள்வதும் கையாள்வதும் எல்லாருக்கும் சாத்தியப்படாது. அந்த வாமாச்சார முறைகளைப் பெரும்பான்மையோர் புறக்கணிக்கின்றனர். எனவே அவை அடங்கியுள்ள அதர்வண வேதம் ஈண்டுப் புறக்கணிக்கப் பட்டுள்ளது. தக்ஷிணச்சாரம் எல்லார்க்கும் பொதுவானது; பாராட்டுதற்குரியது. முறை தவறிக் கையாண்டால் கேடு மிகத் தரும் வாமாச்சாரத்தை வெற்றிகரமாகச் சாதித்த பரமஹம்ச தேவர் தம் சிஷ்யர்கள் யாருமே அதைக் கையாளவேண்டாம் என்று எச்சரிக்கை செய்திருக்கிறார். ஆதலால் அப்படி ஒரு மார்க்கம் இருக்கிறது என்பது எல்லாருக்கும் தெரிய வேண்டியது அவசியமில்லை என்னும் கருத்தை அடிப்படையாகக் கொண்டு இந்நாமத்தில் அம்பிகை மூன்று வேதங்கள் மயமாக இலங்குகின்றாள் என இயம்பப்பெறுகிறது.

**त्रिवर्ग निलया — த்ரிவர்க்கநிலயா** ८७३

முப்பால் மயமாக இருப்பவள். 873

நான்கு புருஷார்த்தங்களுள் தர்மம், அர்த்தம், காமம் மூன்றும் த்ரிவர்க்கங்கள் எனப்படுகின்றன. அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றும் சாதனத்துக்குரியவை என்றும் வீடு பேறு சாத்தியம் என்றும் நூலோர் பொருள்படுத்துகின்றனர். சாதனத்தை முறையாகக் கையாளுகின்றவன் அதன் விளைவாக வரும்

சாத்தியத்தை அடைந்தேயாக வேண்டும். வாழ்வாங்கு வாழ்வது திரிவர்க்கத்தை முறையாகக் கடைப்பிடிப்பதாகும். அறநெறி பிறழாது வாழ்ந்து வருகின்றவன் இவ்வுலகுக்கு ஏதுவான பொருளை முறையான பாங்கில் பெறுகிறான். இவ்வுலகுக்குரிய ஆசைகளையும் முறையாக நிறைவேற்றுகிறான். நன்னெறியில் நிலைத்திருக்கும் அவன் பிரபஞ்சப் பொருள்கள் நிலையற்றவை என்றும் பாரமார்த்திகப் பண்புக்கு உதவாதவை என்றும் அறிய வருகிறான். அதேபாங்கில் சரீர சம்பந்தமான சுகங்களனைத்தும் கருவிகரணங்கள் வாயிலாக நுகரப்படுகின்றன. அங்ஙனம் பெறும் சுகங்கள் யாவும் இறுதியில் துக்கமாக வடிவெடுக்கின்றன. பொருளும் போகமும் நிரந்தரமானவை அல்ல என்னும் உண்மையை நீண்டகால வாழ்க்கைக்குப் பின் சாதனத்தின் மூலம் மனிதன் அறிகிறான். அவனுக்கு விரக்தி தானாக வந்தமைகிறது. திரிவர்க்கங்களின் வாயிலாகப் பண்பாடடைந்தவன் மோக்ஷத்தைப் பெறுவது திண்ணம் என்பதை இந்நாமம் விளக்குகிறது.

**त्रिस्था — த்ரிஸ்தா** ௮௭௪

மூன்றினுள் இருப்பவள். 874

இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய காலத்திரயத்தில் அம்பிகை இருக்கிறாள். இறந்த காலம் அகண்டாகாரத்தில் முடிவில்லாது பின்னோக்கிப் போய்க்கொண்டே இருக்கிறது. ஒவ்வொரு க்ஷணமும் நிகழ்காலமாகவே இருந்துவருகிறது. நிகழ்காலம் ஆத்ம சாக்ஷாத்காரத்துக்கு நிகராக யாண்டும் இருந்து வருகிறது. இனி வர இருக்கும் காலமும் முடிவில்லாது முன்னோக்கிப் போய்க்கொண்டே இருக்கிறது. இறந்த காலத்துக்குத் துவக்கம் இல்லாதது போன்று எதிர்காலத்துக்கு முடிவு இல்லை. ஆதியந்தமில்லாது அகண்டாகாரக் காலசொரூபமாக அம்பிகை இருந்து வருகின்றாள்.

இளமைப்பருவம், காளைப்பருவம், முதுமைப்பருவம் என்னும் மூன்று பருவங்களாக மானுட வாழ்க்கை அமைந்துள்ளது. பகல், இரவு, சந்தியா வேளை ஆகிய மூன்று வேளைகள் மயமாக ஒரு நாள் வடிவெடுக்கிறது. இவை யாவுமாக அம்பிகை இலங்குகின்றாள்.

**त्रिपुर मालिनी — த்ரிபுர மாலினீ** ८७५

த்ரிபுர மாலினீ என்னும் பெயர் தாங்கியுள்ள அன்னை பராசக்தியின் சொரூபமாயிருப்பவள். 875

பிரபஞ்சத்தின் அமைப்பை உள்ளபடி விளக்கிக் காட்டும் ஸ்ரீ சக்கரத்தில் உள்ள ஒவ்வொரு முக்கோணமும் ஒவ்வொரு மும்மைக்கும் இருப்பிடமாகிறது. காலதேச நிமித்தம் ஆகிய மும்மைகள் யாவற்றுக்கும் அதிஷ்டான தெய்வமாயிருக்கும் அன்னை பராசக்தி த்ரிபுர மாலினீ என்னும் நாமத்தைப் பெற்றுள்ளாள். அன்னை பராசக்திக்குப் புறம்பாகப் பிரபஞ்சத்தில் ஏதுமில்லை என்பது இதன் அடிப்படைக் கோட்பாடாம்.

**निरामया — நிராமயா** ८७६

நோயற்றவள். 876

ஸ்தாவர ஜங்கமமாயுள்ள எல்லா உயிர்களுக்கும் ஏற்ற உடல்கள் இருக்கின்றன. சரீரங்கள் எண்ணிக்கையில் அடங்காது அகண்டாகாரத்தில் விரிந்தோடிக்கொண்டிருக்கின்றன. முற்றிலும் ஒரே பாங்கில் அமைந்துள்ள இரண்டு மானுட சரீரங்களை மண்ணுலகில் காண முடியாது. அந்தந்த இனத்தைச் சேர்ந்த வடிவங்களை ஒன்றோடொன்று சீர்தூக்கிப் பார்த்தால் நிறைநிலையில் அவற்றுக்கிடையில் குறைபாடு உண்டு. அதுவே நோய்வாய்ப்பட்ட நிலை அல்லது ஆமயம் எனப்படுகிறது வட்ட வடிவமாய் உள்ள பூமியில் ஆங்காங்கு மலையும் மடுவும் அமைந்து மேடு பள்ளங்கள் காணப்படுகின்றன. குறைபாடாகத் தோன்றும் அவை இல்லாவிட்டால் நதிகள் வடிவெடுக்கமாட்டா. உலக வாழ்வு நிறை வேறுது. பிரபஞ்சத்தில் வடிவெடுத்துள்ள அனைத்திடத்தும் குறைபாடு உண்டு. இவை யாவற்றின் தொகையாக இருக்கின்ற அன்னை பராசக்தியின் விசுவ சொருபமே நிராமயமானது.

பிறப்பெடுத்திருப்பது குறைநிலையை நிறை நிலையாக மாற்றுதல் பொருட்டேயாம். பிறவிப்பிணி என்பது நோய்வாய்ப்பட்டுள்ள நிலை. அந்நோயை நீக்குவதற்குத்தான் ஒவ்வோர் உயிரும் அதனதன் போக்கில் முயன்று வருகிறது. இத்தகைய முயற்சியே பிரபஞ்ச வாழ்வு ஆகிறது. நோய்வாய்ப்பட்டுள்ள ஜீவர்களின் தொகையாக இலங்கும் அம்பிகை நோய் ஏதுமின்றி நிரா

மயமாக இருப்பதுதான் பேரதிசயமாகும். அவள் விளையாட்டாக நிகழ்த்துகின்ற பஞ்ச கிருத்தியங்கள் அவளுடைய குறையில்லா நிறை நிலையை விளக்குகின்றன. ஜீவன் ஒருவன் பிறவிப்பிணி என்னும் நோயாளியாகப் பிறக்கிறான். அப்பிறப்பை உண்டு பண்ணும் அன்னை பராசக்தி யாண்டும் நோயற்ற நிறைநிலையிலேயே இலங்கி வருகிறாள். பிறந்த ஜீவன் வளர்ந்து வரத் திணறுகிறான். அவனுக்கு வளர்ச்சியைத் தருவது அன்னையின் விளையாட்டாம். ஜீவாத்மன் மரணத்தைக் குறித்துத் திணறுகிறான். ஆனால் மரணம் போன்று தென்படுகின்ற அந்தச் செயலின் வாயிலாக அந்த ஜீவனைப் புதுப்பித்தல் என்னும் அரிய செயலை அன்னை விளையாட்டாக நிறைவேற்றுகிறாள். இங்ஙனம் வாழ்வு என்னும் பிணிக்கு உட்பட்டவைகளாக உயிர்களனைத்தும் அமைந்திருக்கும்பொழுது அவைகளனைத்துக்கும் மூலப்பொருளாய் உள்ள அன்னை பராசக்தி யாண்டும் நிராமயமாய், நிறைபொருளாய் அமைந்திருப்பது அவளுடைய மகிமையாம்.

**निरालम्बा — நிராலம்பா** ௮௭௭

பற்றுக்கோடு இல்லாதவள். 877

எல்லையில் அடங்கியுள்ள பொருள்கள் ஏதேனும் ஒன்றை ஆதாரமாகக்கொண்டு அமைந்துள்ளன. நீர் வாழ்பவைகளுக்கு நீர் ஆதாரமாய் உள்ளது. வெட்ட வெளியில் மிதந்துகொண்டிருக்கும் பூமி முதலிய கோளங்களுக்கு ஆகர்ஷண சக்தி ஆதாரமாயிருக்கிறது. பஞ்ச பூதங்களுள் ஆகாசம் ஒன்று மட்டும் தாங்கிப் பிடிக்கும் பிறபொருள் ஏதும் இன்றித் தன்மயமாயிருக்கிறது. மற்ற நான்கு பூதங்களுக்கும் ஆகாசம் ஆதாரமாய் இருக்கிறது. எங்கும் நிறைபொருளுக்குப் போக்கும் வரவும் புணர்வும் தேவையில்லை. நிராலம்பமாய் அமைந்திருக்கும் ஜட ஆகாசம் பிரளய காலத்தில் அன்னை பராசக்தி என்னும் சிதாகாசத்தில் ஒடுங்குகிறது. யாண்டும் தன்மயமாய் நிலைத்திருக்கும் சிதாகாசத்துக்குச் சைதன்யம், பிரக்ஞானம், துரியம் என்னும் வேறு பெயர்கள் உள்ளன. அண்ட சராசரங்கள் அனைத்தும் பிரக்ஞானத்தில் தோன்றி, பிரக்ஞானத்தில் நிலைத்திருந்து பிரக்ஞானத்திலேயே ஒடுங்குகின்றன. திரையின்கண் தோற்றத்துக்கு வந்து நிலைபெற்று இருந்து ஒடுங்கும் திரைப்படங்களுக்கு ஆதாரமாயிருக்கும் திரை யாண்டும்

தன்மயமாய் இருக்கிறது. அங்ஙனம் தோன்றி, இருந்து, ஒடுங்கும் ஜடாகாசத்துக்கு ஆதாரமாகச் சிதாகாசம் ஆகிய அம்பிகை இலங்குகின்றாள். சிதாகாசமே சிதம்பரம் எனப்படுகிறது. அனைத்தையும் தன்னகத்தே அடக்கிக்கொண்டு அகண்டமாயுள்ள சிதாகாசத்துக்கு ஆதாரம் வேறு ஒன்றும் தேவையில்லை. ஆக, நிராலம்பா என்னும் அன்னையின் நாமம் தியானத்துக்கு உரியதாம்.

**स्वात्मारामा — ஸ்வாத்மாராமா** ௮௭௮

தன்னில் தான் திருப்தியடைந்திருப்பவள். 878

நிலைக்கண்ணாடியில் தென்படும் தன் வடிவத்தில் மனதைச் செலுத்துவதில் மாது ஒருத்தி மகிழ்வுறுகிறாள். தான் பாடும் பாடலில் திருப்தியடைந்தவனாகப் பாடகன் ஒருவன் இருக்கின்றான். அவரவர் சமைத்துக்கொள்ளும் உணவு அவரவர்க்குப் பரம திருப்தியாய் உள்ளது. இவை யாவும் ஸ்வாத்மாராமா என்னும் ஆத்மத் திருப்திக்கு ஏகதேசம் சான்றுகளாகின்றன.

ஜாக்ரதாவஸ்தையில் ஜீவகோடிகளனைத்தும் புறத்தே கண்டு மகிழ்கின்ற பிரபஞ்சங்கள் யாவும் அன்னை பராசக்தி மகிழ்வுடன் தோற்றுவித்தவைகளாம். அந்தந்த ஜீவன் சொப்பனாவஸ்தையில் காணும் காட்சிகள் யாவும் அந்தந்த ஜீவனுடைய மனது தனக்குத் தானே சிருஷ்டித்துக் கொண்டவைகளாம். அன்னை பராசக்தியும் அவளுடைய அம்சங்களாகிய ஜீவகோடிகளும் அகத்திலிருக்கும் பாங்கைப் புறத்தில் தோற்றுவித்து மகிழ்வடைவது முடிவில்லாது நிகழ்ந்து வருகின்ற விளையாட்டாம்.

உயிர்கள் யாவும் சுஷுப்தி அவஸ்தையில் தம் ஜீவவியக்தியையும் தாம் கண்டு வருகின்ற ஜகத்தையும் மறந்துவிடுகின்றன. அவற்றைப் பொருள்படுத்தும் ஆத்ம சைதன்யம்மட்டும் மறைந்துபட்டுப் போவதில்லை. எல்லா ஜீவர்களும் கனவற்ற உறக்கத்தில் அனுபவித்து வரும் ஆத்ம திருப்தியே ஸ்வாத்மாராமா என்பதற்கு எடுத்துக்காட்டாகிறது. ஜீவகோடிகள் அனைத்தின் தொகையாக இருக்கும் பிரம்மதேவனுக்கும் அவனுக்கு மூலப் பொருளாயிருக்கும் பரவஸ்துவுக்கும் இவ்வுண்மை பொருந்துகிறது. ஸ்வாத்மாராமா என்னும் தன்னில் தானாய்த் திருப்தியடைந்திருக்கும் நிலை ஜீவர்களுக்கும் அவர்கள் யாவருக்கும் மூலப்

பொருளாயிருக்கும் பரவஸ்துவாகிய அம்பிகைக்கும் பொருத்த மானதாயிருப்பதால் இந்நாமமும் தியானத்துக்குரியதாகிறது.

**सुधा स्रुतिः —ஸுதா ஸ்ருதி:** ८७९

அமிர்த தாரையின் வடிவெடுத்திருப்பவள். 879

முறையாகப் பிரம்மச்சரிய விரதம் காக்கின்ற நைஷ்டிகப் பிரம்மச்சாரி ஒருவனின் சரீரத்தில் மூலாதாரத்தில் உறங்கிக் கொண்டிருக்கும் குண்டலினி சக்தி நன்கு போஷிக்கப்பெற்று ஆத்மபோதமடைந்து எழுந்திருக்கிறது. அது மானுடனின் உச் சந்தலையில் இருக்கும் சஹஸ்ராரம் என்னும் ஏழாவது ஞான பூமியை அடையும்பொழுது அமிர்ததாரை வடிகின்றது. அதில் ஒரு துளியையாவது ரசிக்கின்ற யோகி நெடுங்காலம் சரீரம் அழிந்துபட்டுப் போகாது சமாதி நிலையில் இருக்கிறான். அத் தகைய பரமானந்தப் பெருவெள்ளமாய் அம்பிகை இருக்கிறாள். இது அத்யாத்ம தத்துவம்.

பிரபஞ்சம் முழுதுக்கும் வெப்பத்தையும் வெளிச்சத்தையும் கொடுத்துச் சூரியன் அதைப் போஷித்து வருகிறது. அத்தகைய போஷணைக்கு உறுதிப்பாட்டையும் இனிமையையும் வழங்க வல் லது சந்திர வெளிச்சம். பகலெல்லாம் சூரிய வெளிச்சம் உலகுக் குப் பயன்படுகிறது. சந்திர வெளிச்சமோ மாதத்தில் பதினைந்து இரவுகளுக்கு மட்டும் உலகுக்கு இனிமையையும் சுவையையும் வழங்குகிறது. அத்தகைய இரவில் பொழியும் ரசமாகவும் அம்பிகை இலங்கி வருகிறாள் என்பது இந்நாமத்தின் பொருள்.

**संसार पङ्कनिर्मग्न समुद्धरण पण्डिता** ८८०

**ஸம்ஸார பங்கநிர்மக்ன ஸமுத்தரண பண்டிதா** 880

ஸம்சாரமாகிற சேற்றில் மூழ்கியிருப்பவனை உய்விப் பதில் சாமர்த்தியம் உடையவள்.

முடிவில்லாத பாங்கில் பிறப்பும் இறப்பும் உயிர்வகைகளுக்கு ஓயாது வந்தமைந்துகொண்டிருக்கின்றன. பிறப்பில் பற்று வைத்திருக்கும் உயிர்கள் இறப்பைத் தவிர்க்க முடியாது. பகலைத் தொடர்ந்து இரவு வருவது போன்று பிறப்பைத் தொடர்ந்து மரணம் வருகிறது. பிறவி தோறும் உயிர்கள் பிரபஞ்சத்தைப்

பயன்படுத்தித் தங்களைச் செப்பனிட்டுக்கொள்கின்றன. சிற்றுயிர்கள் பேருயிர்களாகப் பரிணமிக்கின்றன. பரிணமத்தின் உச்சநிலையில் விவேகத்துடன்கூடிய மானுடன் இருக்கிறான். இவ்வையகத்தினின்று கிடைக்கும் இன்பத்துக்கு ஏற்ற அளவு துன்பமும் வருகின்றது. துன்பம் கலவாத இன்பம் இம்மையில் இல்லை. இதை அறிந்துகொள்ளுதற்கேற்ப வையக வாழ்வாகிய ஸம்சார சாகரத்தில் வைத்துள்ள பற்றுதல் நீங்குகிறது. பற்றுதல் அடியோடு நீங்குமிடத்து ஏற்படும் பரநாட்டம் அருள்தாகம் என்று பெயர் பெறுகிறது. இவ்வையக வாழ்வு வேண்டாம் என்று கதறிப்பதறி அழுது முறையிடுகின்ற ஜீவாத்மாக்களை அம்பிகை முக்தியாம் கரைசேர்க்கின்றாள். 'வல்வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே' என்று மாணிக்கவாசகர் மொழிகின்றார். பிறப்பு இறப்பில் பற்றில்லாத பாக்கியவான்கள் பிறவிப் பெருங்கடலின் பெரும்பகுதியைக் கடந்தவர்களாகின்றனர். ஜீவர்கள் அனைவரும் காலாந்தரத்தில் இத்தகைய விடுதலை வேட்கையைப் பெறுவது திண்ணம்.

**यज्ञप्रिया — யக்ஞப்ரியா** ८८१

யக்ஞம் பண்ணுகிறவர்களிடத்து அன்பு வைக்கின்றவள். 881

பிரபஞ்சப்பற்று நீங்கியதற்கு அறிகுறியாக ஆத்ம சாதகன் ஒருவன் யக்ஞமூர்த்தியாக மாறியமைய வேண்டும். அங்ஙனம் மாறியமைவது மனப்பரிபாகத்தின் விளைவாம். மக்களுள் சுயநலம் படைத்துத் தனக்கென்றே வாழ்ந்திருப்பவன் கீழோன். தன் ஆற்றல்களனைத்தையும் அன்னை பராசக்தியின் வழிபாட்டுக்கென்றே பயன்படுத்தித் தான்புரிகின்ற செயல்களையெல்லாம் அம்பிகையின் வழிபாட்டுக்கென்றும் ஆருயிர்களின் சேவைக்கென்றும் சமர்ப்பிப்பவன் யக்ஞமூர்த்தியாகின்றான். வாழ்நாளை வீணாக்காது உலகுக்குப் பயன்படும் பணிவிடைகளில் தன் ஜீவிதத்தைப் பயன்படுத்துகின்றவனிடத்து அன்னை பராசக்தி பிரியம் வைக்கின்றாள். அப்படிப் பண்பாடடைந்துள்ள ஜீவாத்மனைப் பிறவிப் பெருங்கடலினின்று மீட்டெடுப்பதில் அருள்சுரந்த பாங்கில் அவள் கருத்தைச் செலுத்துகின்றாள் என்பது இந்நாமத்தின் உட்பொருள்.

**यज्ञकर्त्री — யக்ஞகர்த்ரீ** ८८२

யக்ஞங்களுக்கெல்லாம் கர்த்தாவாயிருக்கின்ற சிவனுருக்கு அபின்னமாயிருப்பவள். 882

சூரியனும் சூரியப் பிரகாசமும் ஒன்ருயிருப்பது போன்று யாகங்களுக்கு அதிஷ்டான தெய்வமாயிருக்கின்ற சிவனும் அவருடைய சக்தியாகிய அம்பிகையும் சொரூபத்தில் ஒன்ரும். செயல், பொருள், பதவி ஆகியவற்றுக்கு உரிமை பாராட்டுவது அக்ஞானத்தில் உழலும் உலகத்தவர் போக்கு ஆகிறது. முறை யாக யக்ஞம் பண்ணுகிற ஒருவனிடத்து இத்தகைய குறைகளைக் காண முடியாது. நிகழ்கின்ற யக்ஞக் கிருத்தியங்கள் யாவும் இறைவனருளால் நிகழ்கின்றன என்னும் எண்ணத்தில் அன்ன வன் மூழ்கியிருக்கிருன். பழுக்கக் காய்ச்சிய இரும்பின் உரு வத்தை மாற்றி அமைப்பது சம்மட்டி என்ருலும், அச்செயல் சம்மட்டியால் அடிக்கும் கொல்லனுக்கே உரியதாகின்றது. ஞானப் பரிபாகம் அடைந்துள்ள யக்ஞ மூர்த்தி கொல்லன் கையில் சம்மட்டி இருப்பதற்கு நிகராகத் தன்னை இறைவன் கையில் அமைந்துள்ள கருவியாக மட்டும் வைத்துக்கொள்கிருன். யான், எனது என்னும் அகங்காரம், மமகாரம் அவன் உள்ளத்தில் சிறிதும் இல்லை. ஜீவபோதம் அவன் உள்ளத்தினின்று அறவே அகன்று போயிருப்பதால் பரபோதம் மட்டும் அவ்வடிவத்தில் நிலைத்திருக்கிறது. இத்தகைய பாரமார்த்திகப் பெருநிலை அம் பிகையின் அருளால் அவனுக்கு வந்து வாய்க்கிறது. முறையாக யக்ஞக்கிருத்தியம் நிகழ்கின்றவிடத்து ஆங்கு யக்ஞ சொரூபமா யுள்ள அம்பிகையின் சான்னித்தியத்தையே ஆத்ம சாதகர்கள் காண்கிருர்கள். இதுவே மெய்க்காட்சியாகிறது. ஆதலால் அம்பிகையை யக்ஞகர்த்ரீ எனக் கூறுவது மிகவும் பொருத்த மானது.

**यजमानस्वरूपिणी — யஜமான ஸ்வரூபிணீ** ८८३

வேள்வி வேட்பவனுடைய வடிவத்தில் இருப்பவள். 883

யக்ஞம் பண்ணுகின்றவன் யக்ஞமூர்த்தியாகிருன். ஏதே னும் ஒரு செயல், பதவி அல்லது ஸ்தாபனத்துக்குத் தலைவனாய்

இருப்பவன் எஜமானன் என்று அழைக்கப் பெறுவது வெறும் உபசாரத்துக்கேயாம். தன் செல்வங்களையும் நலன்களையும் பொது உடைமையாக்குகின்றவனே உண்மையில் யக்ஞகர்த்தா வாகின்றான். அது தியாகத்தின் விளைவு. அற்றது பற்றெனில் உற்றது வீடு என்பது மறைமொழி. உலகப்பற்று முற்றிலும் நீங்கப்பெற்றவன் ஆத்மப் பரிபாகம் அடைந்தவனாகிறான். அவனுடைய உள்ளமே இறைவனுக்கு உகந்த ஆலயமாகிறது. இறைவனுடைய சான்னித்தியத்தையும் மகிமைகளையும் திரிகரண சுத்தியோடு வேள்வி வேட்பவனிடத்துக் காணலாம். தகுதி வாய்ந்த உண்மை யஜமானனிடத்து அன்னை பராசக்தியின் சான்னித்தியத்தைக் காணலாம் என்பது இந்நாமத்தின் உட்கருத்து.

**धर्म आधारा** — தர்ம ஆதாரா ௮௮௪

தர்மத்துக்கு ஆதாரமாயிருப்பவள். 884

தர்மமும் அதற்கு ஆதாரமாயிருக்கும் அன்னை பராசக்தியும் ஒன்றேயாம். சேதன, அசேதன சொரூபமாகப் பிரபஞ்சம் முழுவதும் அமைந்திருக்கின்றது. அசேதன மயமாய் உள்ள பஞ்ச பூதங்களுக்கும் ஏற்ற தர்மங்கள் உள்ளன. உதாரணமாக, தகிப்பது அல்லது சுட்டெரிப்பது நெருப்பின் தர்மம். ஸ்பரிச உணர்ச்சி ஒன்றைமட்டும் அடிப்படையாகக் கொண்டிருப்பது ஸ்தாவர உலகம். எறும்பு வகைகள் ஸ்பரிசம், மோப்பம், சுவை ஆகிய பொறிகளைப் பெற்று நிறைநிலையில் சமுதாய வாழ்வு வாழ்ந்து வருகின்றன. பொது நலனுக்காக வாழ்வது உயிர்வகைகளின் தர்மமாகும். ஐந்து இந்திரியங்களை உடைய தேனீ அருமையான பாங்கில் சமுதாய வாழ்வு வாழ்ந்து வருகிறது. தூய வாழ்வும், ஆட்சிமுறையும் இவ்வுயிர் வகைகளிடத்துப் பன்மடங்கு மேலோங்கியுள்ளன.

ஐந்து இந்திரியங்களுக்கும் மேல் பகுத்தறிவைப் பெற்றுள்ள மனிதர்களுள் அரக்க இயல்பு, மானுட இயல்பு, தெய்விக இயல்பு ஆகிய மூன்று பாங்குகளையும் காணலாம். பூவுலகில் தர்மராஜன் என அழைக்கப்பெறுபவன் பாண்டவர்களில் முதல்வனாகிய யுதிஷ்டிரன் ஒருவனேயாவான். அவன் தர்மத்தின் பாங்குகள் அனைத்துக்கும் உறைவிடமாயிருந்தான். தன் தம்பிமார்கள் நால்வரும் திரௌபதியும் சொர்க்கத்திற்குப் போய்க்கொண்டிருக்

கும் வழியில் வீழ்ந்து விட்டனர். அவர்களின் கதி என்னவாயிற்று என்று அறிந்துகொள்ளாது அவன் தான் மட்டும் சுவர்க்கத்துக்குப் போவது பொருந்தாது என்று கருதினன். தன்னுடன் விமானத்தில் ஏற முயன்ற நாயை ஒதுக்கித் தள்ளி விட்டு யுதிஷ்டிரன் மட்டும் சொர்க்கத்திற்கு வரலாம் என்று இந்திரன் இயம்பிய போதும் யுதிஷ்டிரன் மறுத்துவிட்டான். அவனுடைய தர்ம அனுஷ்டானம் எல்லாரும் பாராட்டுதற்குரியதாய் இருந்தது.

இங்ஙனம் தர்மத்தின் பலதரப்பட்ட கூறுகளுக்கும் அன்னை பராசக்தி ஆதாரமாக இலங்குகின்றாள்.

**धनाध्यक्षा** — தனாத்யக்ஷா ८८५

செல்வத்துக்குத் தலைவியாய் இருப்பவள். 885

உணவு, உடை, உறைவிடம் ஆகிய வாழ்க்கைக்கு முற்றிலும் தேவைப்படும் பொருள்கள் எல்லாம் செல்வம் எனப்படுகின்றன. 'பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை' என்பது பொய்யாமொழி. அன்னை பராசக்தியின் கடைக்கண் பார்வைக்கு இலக்காகின்றவர்கள் செல்வம் வாய்க்கப்பெற்ற பெருமக்களாவார்கள். நிலவுலகில் உள்ள பெரும்பகுதி தனத்தை உண்டு பண்ணக் கூடியதாக அமைந்திருப்பது அம்பிகையின் அருளாலேயாம். பூமித்தாய் படைத்திருக்கும் பொன் தாதுக்களையும், ரத்ன வகைகளையும், உலோகங்களையும், எண்ணெய் வகைகளையும் செல்வமாகப் பயன்படுத்த வல்லவர்கள் தனவந்தர்கள் ஆகிறார்கள். நிலத்தின் மேற்பரப்பில் நிலவளம், நீர்வளம், மலைவளம் ஆகியவை தனத்தைப் பெறுவதற்கு ஏதுவானவைகளாக வாய்த்துள்ளன. கால்நடைகளும் மக்களுக்குச் செல்வமாக அமைந்துள்ளன. இவையாவுக்கும் அன்னை பராசக்தி தலைவியாய் இருப்பதால் தன அத்யக்ஷா என அவள் போற்றப்பெறுகிறாள்.

**धनधान्यविवर्धिनी** — தனதான்யவிவர்த்தினீ ८८६

தனத்தையும் தானியத்தையும் வளரச் செய்பவள். 886

தானியமே உண்மையான செல்வமாகிறது. பூர்வீக மக்கள் தங்கம், வெள்ளி ஆகிய தனத்தைக் கையாளாமலேயே நன்கு

வாழ்ந்து வந்தனர். பறவைகளும், விலங்குகளும் தனத்தைப் பொருள்படுத்தாது தானிய வகைகளை நாடி இன்புற்றிருக்கின்றன. நாடெங்கும் உணவுப்பொருள் இல்லாது பஞ்சம் ஏற்பட்டிருக்கின்ற பொழுது தனலெட்சுமியின் அனுக்கிரஹம் ஒன்றுக்கும் உதவமாட்டாது. மூட்டை மூட்டையாகக் குவிந்திருக்கும் தங்க நாணயங்கள் பசியைப் போக்கமாட்டா. தனலெட்மிக்குத் தந்திருக்கும் மதிப்பு கற்பனை அளவிலேயாம்.

துறவியர்களும் சான்றோர்களும் தனலெட்சுமியைப் பொருள் படுத்துவதில்லை. முற்றிலும் பரநாட்டத்தில் ஈடுபட்டிருப்பவர்கள் மேனியின்மீது தங்கம், வெள்ளி ஆகிய எந்த உலோகமும் படுதல் ஆகாது. உலக மக்களோ யாண்டும் தனலெட்மியையே சார்ந்திருக்கின்றனர். நாகரிகமான வாழ்க்கைக்குத் தனம் ஏராளமாகப் பயன்படுகிறது. பிரபஞ்சத்தில் வேண்டியவாறு தனம் குவிந்து கிடக்கிறது. கடலுக்குள்ளே இருக்கும் முத்து, பவளம் ஆகியன தனமாகக் கருதப்படுகின்றன. உயர்ந்த கல் வகைகள் இரத்தினம் என்று பாராட்டப்பெறுகின்றன. இத்தனை விதச் செல்வமயமாக அம்பிகை இலங்கி வருகிறாள். அவளுடைய மகிமைக்கு அளவில்லை. ஆயினும் அவளுடைய சொரூபத்தில் எந்தப் பகுதிக்கு எத்தகைய மதிப்புத் தரவேண்டும் என்பதை ஆத்ம சாதகன் நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

**विप्रप्रिया** — விப்ரப்ப்ரியா ௮௮௭

விப்ரர்களிடத்துப் பிரியம் வைத்திருப்பவள். 887

மக்கள் பிறவியிலேயே மேலோர்களும் கீழோர்களும் ஆவது இயல்பு. மேலோராயிருக்கும் விப்ரர்கள் கல்வியிலும், மனப்பான்மையிலும், வாழ்க்கையிலும் முறையாக மேலோங்கி வருவார்களானால் அவர்கள் இருபிறப்பாளர்கள் எனப்படுகிறார்கள். விப்ரர்கள் நிறைந்துள்ள சமுதாயம் தலைசிறந்ததாகிறது. விப்ரர்களின் எண்ணிக்கை அதிகரிப்பதற்கு ஏற்ப அந்நாட்டில் தெய்வ சம்பத்து அதிகரிக்கிறது. விப்ரர்களின் எண்ணிக்கை குறைந்து வரும் சமுதாயத்தில் அசுர சம்பத்து தலையெடுக்கிறது. விப்ரர்களிடத்து அன்னை பராசக்தி அலாதியாக அன்பு காட்டுவது இயல்பாம். அத்தகைய விப்ரர்களைத் தோற்றுவிப்பதிலேயே

சமுதாயம் கண்ணுங்கருத்துமாய் இருக்க வேண்டும் என்பது கோட்பாடு.

**विप्ररूपा — விப்ரரூபா** ௮௮௮

விப்ரர்களின் வடிவத்தில் இருப்பவள். 888

அசேதனமாகிய ஜடவஸ்து உயிரற்றது. அதிலும் தாரதம்மியம் உள்ளது. தங்கம் மேலானது; இரும்பு கீழானது. உயிர் வகைகளுள் ஸ்தாவரம் எனப்படும் நிலைத்திணை ஜங்கமமாகிய இயங்கு திணையைவிடக் கீழானதாகிறது. ஜங்கமங்களுள் மானுடர்கள் சிறந்தவர்களாகின்றனர். மானுடர்களுள் விப்ரர்கள் மேலோர் ஆகின்றனர். விப்ரர்களாக வடிவெடுத்திருக்கும் பகுதியில் அம்பிகையின் மகிமையை ஏராளமாய்க் காணலாம். வாழ்க்கைக்கு இன்றியமையாத உடலின் அங்கங்களுக்குள்ளும் தாரதம்மியம் உண்டு. காலோ, கையோ இல்லாமல் மனிதன் வாழலாம். ஆனல் தலை இன்றி அவன் வாழமுடியாது. அறிவில்லாதவனுக்கு அங்கங்கள் ஒழுங்காக அமைந்திருந்தாலும் அவன் ஒன்றுக்கும் உதவான். மானுடரின் தலைக்கு நிகராகச் சமுதாயத்தில் விப்ரர்கள் முதன்மை பெறுகிறார்கள். அந்த விப்ரர்களின் சொரூபமாகவே அன்னை பராசக்தியை வைத்து வழுத்துவது முறையாகும்.

**विश्वभ्रमणकारिणी — விச்வப்ரமண காரிணீ** ௮௮௯

அகிலாண்டங்களின் நடைமுறைகளை முறையாகக்கொண்டு செலுத்துபவள். 889

அகண்டாகாரத்தில் விரிந்தோடும் அண்டங்களின் பேரமைப்பில் ஒழுங்குப்பாடு இருக்கிறது. தோன்றா நிலையிலிருந்து அவை தோற்றத்துக்கு வந்துள்ளன. கட்புலனாகாத நீராவியினின்று வெண்மேகம், கார்மேகம் ஆகியன உருவாவதுபோன்று தோன்றா நிலையில் சூட்சுமமாயிருக்கும் அண்டங்கள் வடிவெடுத்துத் தோற்றத்துக்கு வருகின்றன. இந்தச் சிருஷ்டியில் ஓர் ஒழுங்குப்பாடு உள்ளது. தோன்றியுள்ள அண்டங்கள் நிலைபெற்றிருப்பதிலும், பிறகு அவை ஒடுங்கித் தோன்றாநிலை அடைவதிலும் ஒழுங்குப்பாடு மிளிர்கிறது. சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹார மயமாகப் பிரபஞ்சங்கள் யாவும் அமைந்திருக்கின்றன. அவற்றில் அமைந்துள்ள

மகிமைகளே அன்னை பராசக்தியின் அற்புதத்துக்கு எடுத்துக் காட்டுகளாகின்றன. எனவே அண்டங்கள் யாவற்றின் நடை முறைகளை ஒழுங்காக ஆராய்ச்சி பண்ணுவதே ஒருவித ஆராதனை யாகிறது.

**विश्वग्रासा — விச்வக்ராஸா** ८९०

*அண்டங்கள் யாவற்றையும் எடுத்து விழுங்கு பவள்.* 890

மணலில் வீடுகட்டும் குழந்தைகள் மணலைக்கொண்டே உணவை ஆயத்தப்படுத்துகின்றன. அதை மற்றக் குழந்தை களுக்குப் படைக்கின்றன. விளையாட்டு முடிந்தான பிறகு அதற்கு ஏதுவாயிருந்த மணல் வீடு, மணல் உணவு ஆகியவைகளை உதைத்துத் தள்ளிவிட்டுக் குழந்தைகள் தம் பெற்றோரிடம் ஓடு கின்றன. இதை விடச் சுலபமான முறையில் அன்னை பராசக்தி அண்டங்கள் யாவற்றையும் எடுத்து விழுங்குகின்றாள். நாம் ஜாக்ரதாவஸ்தையில் உலக வியவகாரங்களை ஏராளமாகச் செய் கின்றோம். உறங்கும் வேளை வரும்போது அவற்றையெல்லாம் மனத்தகத்தே ஒடுக்குகின்றோம். மறுபடியும் விழிக்கும்பொழுது அதே வியவகாரங்களின் தொடர்பைக் கொண்டுசெலுத்துகிறோம். அதே பாங்கில் அகிலாண்டகோடி பிரம்மாண்ட நாயகியான அம்பிகை பிரளய காலத்தில் அவை யாவற்றையும் தன்னகத்தே ஒடுக்கிக்கொள்கின்றாள். அச்செயலைச் சரியாக எண்ணிப் பார்ப் பவர்களுக்கு உலகப்பற்று தானாகக் குறைந்து போகின்றது.

**विद्रुमाभा — வித்ருமாபா** ८९१

*பவளம் போன்ற எழிலோடு கூடியிருப்பவள்.* 891

அன்னையின் சிவப்பு நிறம் புஷ்பங்களின் நிறத்துடனும் பவளத்தின் நிறத்துடனும் ஒப்பிடப்படுகிறது. நேர் சூரியப் பிரகாசத்தோடு தொடர்பு கொள்ளும் புஷ்பங்களுக்குரிய நிறங் கள் தாமாக எளிதில் வந்து அமைவது இயல்பு. சூரிய வெளிச்சம் எட்டாத சமுத்திரத்தின் ஆழத்தில் இருக்கும் பவளம் சிவப்பு நிறமாயிருப்பது அரிதிலும் அரிதாம். அம்பிகையிடம் இயல்பாய் அமைந்துள்ள மகிமைக்குப் பவளத்தின் நிறம் எடுத்துக்காட்டாய் அமைந்திருக்கிறது.

வித் த்ரும: என்றால் ஞானவெளிச்சம் என்று பொருள். அம்பிகை ஞான வெளிச்சத்தின் ஒளியை உடையவள். விதை முளைத்து வருகின்றபொழுது விருக்ஷத்தின் பாங்குகளனைத்தும் மீண்டும் தோற்றத்துக்கு வருகின்றன. ஞானப் பிரகாசம் தலை முறை தலைமுறையாகக் காப்பாற்றப்படுகிறது. சுவை நிறைந்த பழம் தரும் மரம் ஒன்று பட்டுப்போனால் அதே பாங்குடைய ஏனைய விருக்ஷங்கள் தோன்றி நல்ல பழங்களை உண்டுபண்ணி இயற்கையின் போக்கைக் காப்பாற்றுகின்றன. ஞானப் பெருக்கும் அத்தகையதேயாம். இங்ஙனம் இயற்கையின் நடைமுறையின் வாயிலாக அம்பிகை தன் மகிமைகள் யாவற்றையும் காப்பாற்றி வருகிறாள் என்னும் பொருளும் இந்நாமத்தில் அமைந்துள்ளது.

**வைஷ்ணவீ — வைஷ்ணவீ** ८९२

விஷ்ணுவுக்குரிய சக்தி வடிவத்தில் இருப்பவள். 892

உஷ்ணத்தைத் தீயினின்று பிரித்தெடுக்க முடியாதது போன்று லட்சுமி தேவியைத் திருமாலிடமிருந்து பிரிக்க முடியாது. பிரபஞ்சம் முழுவதும் திருமகள் சொரூபமாக அமைந்துள்ளது. அதில் பயன்படாத பகுதி எங்குமே இல்லை. கன்னியாகுமரி மாவட்டத்தில் கடற்கரையோரத்தில் கருநிறமுள்ள மணல் தரையில் கயிறு திரித்து அதை ஜெர்மனி நாட்டிற்கு ஏற்றுமதி பண்ணினார்கள். ஆங்கிருந்த பௌதிக விஞ்ஞானிகள் அம்மணலிலிருந்து வாழ்விற்குப் பயன்படுகின்ற அரிய பெரிய பொருள்களைப் பிரித்தெடுத்தனர். இது திருமகளின் திருவிளையாடலே என்பது தெளிவாகிறது. காக்கும் தெய்வமாகிய திருமாலிடத்துப் பிரியாது பொலிந்துகொண்டிருக்கும் திருமகளின் அருளால் தொட்டதையெல்லாம் பொன்னாக்கும் அறிவை இக்காலத்திய பௌதிக விஞ்ஞானிகள் பெற்றுள்ளனர். பிரபஞ்சத்தில் உள்ள அனைத்தையும் மக்களுக்கு நன்கு பயன்படும் மேலாம் பொருள்களாக மாற்றியமைப்பது சாத்தியம். வெறுமனே அமர்ந்து கொண்டு தனக்குச் செல்வம் தரவேண்டுமென்று திருமகளிடம் விண்ணப்பிக்கின்றவன் சரியான உபாசகன் ஆகமாட்டான். பிரபஞ்சம் எங்கும் நிறைந்து கிடக்கும் பொருள்களையெல்லாம் எடுத்து அவற்றை நல்ல பாங்கில் பயன்படுத்தத் தெரிந்துகொண்டவனே லட்சுமிதேவியின் உண்மையான உபாசகனாகிறான்.

**विष्णुरूपिणी — விஷ்ணுரூபிணீ** ८९३

விஷ்ணு வடிவத்திலிருப்பவள். 893

பார்வதி பரமேஸ்வரன் திருமணத்தில் தம் சகோதரியாகிய அம்பிகையை மஹாவிஷ்ணு சிவபெருமானுக்கு மணம் முடித்துக் கொடுக்கிருர். பொருள் ஒன்று. அதை ஆண்பாலாகவும் பெண் பாலாகவும் கருதுவது மரபு. எனவே அம்பிகையை விஷ்ணு ரூபிணீ எனப் பகர்வது பொருத்தமானது. தங்கையானவள் சங்கு, சக்கரம், கதை ஆகிய தன் தமையனுடைய ஆயுதங்களைக் கையாண்டு பிரபஞ்சத்தின் நடைமுறைகளை நன்கு பரிபாலித்து வருகின்ருள் என்பது ஐதிகம்.

**अयोनी— அயோனீ** ८९४

எதனிடத்திருந்தும் உதித்து வராத பாங்குடையவள். 894

எப்பொருள் அல்லது எவ்வுயிர் புதிதாகத் தோற்றத்துக்கு வருகிறதோ அவ்வுயிர் எப்படி எங்கிருந்து வந்தது என்னும் கேள்வி எழுகிறது. ஆனல் சிவமாகவும் சக்தியாகவும் இருக்கிற பொருளுக்குத் துவக்கமில்லை, பிறப்பில்லை. யாண்டும் அப்பொருள் இருந்தது இருந்தபடி இருக்கிறது. தோற்றத்துக்கு வரும் பொருள் ஒன்றுக்கு முடிவு உண்டு. பரவஸ்துவுக்கோ தோற்றம், ஒடுக்கம், பிறப்பு, இறப்பு ஆகியவை இல்லை. அது அனுதி அனந்தமாக யாண்டும் இருந்து வருகின்ற நித்திய வஸ்து. அயோனி என்பது தனி இருப்பிடம் ஒன்று அமையப்பெருதது என்று பொருள்படுகிறது. எங்கும் நிறைபொருளாக அம்பிகை யாண்டும் இருந்து வருகிருள். காலத்தைக் கடந்தவளாகவும் காரணகாரியங்களுக்கு அப்பாற்பட்டவளாகவும் நீக்கமற எங்கும் நிறைபொருளாக விளங்கும் அன்னை பராசக்தியைப்பற்றிய இக் கோட்பாடு தியானத்துக்குரியது.

**योनिनिलया — யோனி நிலயா** ८९५

தோற்றத்துக்கு வந்துள்ள அனைத்துக்கும் இருப்பிடமாய் இருப்பவள். 895

அண்டங்கள், ஜீவகோடிகளனைத்தும் பிரளயகாலத்தில் அம்பிகையினிடத்து ஒடுங்கிப் போகின்றன. சிருஷ்டிக்காலத்

தில் அவை யாவும் அம்பிகையிடமிருந்தே தோற்றத்துக்கு வருகின்றன. அவைகள் அனைத்துக்கும் பிறப்பிடமாகவும் ஒடுங்குமிடமாகவும் அம்பிகை இருக்கின்றாள்.

படக்காட்சியில் தென்படுகின்ற படங்கள் அனைத்துக்கும் ஆதாரமாயிருக்கும் திரைப்படக்காட்சி முடிவுறுகின்றபொழுதும் தன்மயமாய் இருக்கிறது. அந்தத் திரைக்கு நிகர் அம்பிகை. அதில் தோன்றியிருந்து ஒடுங்கும் படங்களுக்கு ஜீவகோடிகளும் அண்டகோடிகளும் நிகராகின்றன. அவைகளின் வரவையும் போக்கையும் முன்னிட்டு அம்பிகையிடம் எந்தவிதமான மாறுதலும் உண்டாவதில்லை. அவள் யாண்டும் இருந்தது இருந்தபடியே இருக்கின்றாள்.

**कूटस्था — கூடஸ்தா** ८९६

அக்ஞான மயமான பிரபஞ்சத்துக்கு 896
இருப்பிடமாய் இருப்பவள்.

ஜீவாத்மாக்களின் நிஜசொருபமாகிய ஆனந்தப்பெருநிலையை அம்பிகை அவர்களிடமிருந்து மறைத்து வைத்திருக்கிறாள். அதனால் தான் பிறவிப்பெருங்கடல் நிகழ்ந்துகொண்டே இருக்கிறது. அக்ஞானம் என்னும் மயக்கம் இருந்தால்தான் பிரபஞ்சத்தின் தோற்றமும், இருப்பும் முறையாக நிகழ்வனவாகின்றன. கூடம் என்பது மலையுச்சி எனப்பொருள்படுகிறது. பிரபஞ்ச நடைமுறை என்னும் காற்றடிக்கும் பொழுது மலையில் உள்ள மரம், செடி, கொடிகள் எல்லாம் அசைகின்றன. மேலே உள்ள மலைச்சிகரம் அசையாதிருக்கின்றது. பிரபஞ்சம் யாவும் நிலைமாறிக்கொண்டிருப்பதற்கிடையில் அவையாவுக்கும் ஆதாரமாய் இருக்கும் அம்பிகை அசையாது தன்மயமாய் இருக்கின்றாள்.

கூடம் என்னும் சொல் அண்டகோடிகள், ஜீவகோடிகள் ஆகியவற்றின் இருப்பிடம் எனப் பொருள்படுகிறது. கூடம் என்பது கொல்லனுடைய உலைக்களத்தையும் குறிக்கிறது. கொல்லன் இரும்புத் துண்டுகளைச் சம்மட்டியால் எவ்வளவு அடித்தபோதிலும் அவை உருமாறுவது போன்று கூடம் மாறியமைவதில்லை. அம்பிகையின்மீது பிரபஞ்ச வியவகாரங்கள் எவ்வளவு வந்து மோதினாலும் அவள் தன் பாரமார்த்திகப் பெரு

நிலையினின்றும் இம்மியளவும் பிசகுவது இல்லை. இக்காரணங்களை முன்னிட்டு அன்னை பராசக்தி கூடஸ்தா என இயம்பப் பெறுகிறாள்.

**कुलरूपिणी** — குலரூபிணீ ८९७

குலத்தின் வடிவத்தில் இருப்பவள். 897

குலம் என்னும் சொல் கூட்டம் என்று பொருள்படுகிறது. பிரபஞ்சத்தில் உள்ள அனைத்துமாய் அவள் இலங்கிக்கொண்டு இருக்கிறாள்.

**वीरगोष्ठीप्रिया** — வீரகோஷ்டீப்ரியா ८९८

வீரர்களுடைய கூட்டத்தில் விருப்பம் வைத்திருப்பவள். 898

பண்பாடு அடைந்து வருதற்கேற்பச் சாதாரண மனிதன் வீரனாகப் பரிணமிக்கிறான். அவன் செயல்களனைத்தும் தர்மத்துக்கு ஒத்தவைகளாகின்றன. நல்ல கிருத்தியங்களுக்கு விக்னங்கள் வருவதைக் குறித்துத் தளர்வுறுபவன் வீரனாகமாட்டான். அவற்றைச் செய்துகொண்டிருப்பதற்கிடையில் சந்தேகமோ மனத்தளர்வோ கொள்ளாமல் விடா முயற்சியுடன் இருப்பவன் திண்ணியனாகிறான். சோதனைகள் அதிகரிக்கும் அளவுக்கு உள்ளத்தில் சிரத்தையும் உருவெடுக்கவேண்டும். அத்தகைய தளரா மனப்பான்மை படைத்திருப்பவனே பெருவாழ்வுக்குத் தகுதி உடையவனாகிறான்.

அம்பிகையிடம் பக்தி பூண்டு அவளுக்கென்றே அரும்பணிகள் ஆற்றி வருபவன் அவளுடைய அன்புக்கு இலக்காகிறான். அம்பிகையின் மகிமைகளைக் குறித்து வீரர்கள் பலர் கூடியிருந்து ஊக்கத்தோடும் வீராவேசத்தோடும் பேசிக்கொள்கிறார்கள். அம்பிகையின் ஆராதனையை அவர்கள் மிக விமரிசையுடன் நிறைவேற்றுவது அம்பிகைக்கு மகிழ்வூட்டுகிறது. அம்பிகையைக் குறித்து ஆழ்ந்து தியானத்தில் மூழ்கியிருப்பவர்களின் செயல்களையும் அம்பிகை மகிழ்வுடன் ஆதரிக்கின்றாள். ஒரே இலட்சியமுடைய பலர் சேர்ந்துள்ள திருக்கூட்டம் பெருகி வருவதும் அவளுக்குப் பெருமகிழ்வூட்டுகிறது. ஆத்ம சாதகன் ஒருவன்

ஆர்வத்துடன் நல்லார் கூட்டத்தை வளர்த்துவரக் கடமைப்பட்டிருக்கிறான் என்பது இந்நாமத்தின் கருத்து.

**वीरा — வீரா** ८९९

வீரியமே வடிவெடுத்திருப்பவள். 899

எங்கு எவ்வுயிரிடத்துப் பராக்கிரமத்தையும் பெரு வாழ்வையும் பார்க்கின்றோமோ ஆங்கு அம்பிகையின் சான்னித்தியம் மிளிர்கிறது என்பது வெளிப்படை. அம்பிகை தன் மகிமைகளையெல்லாம் பலப்பல மூர்த்திகளின் வாயிலாக வெளிப்படுத்துகிறாள். நிறை நிலையை எட்டிய மாது ஒருத்தி பாராட்டுதற்குரிய கணவனையும் ஒழுக்கம் நிறைந்த செல்வர்களையும் உடைத்திருப்பாளாகில் அன்னவள் ஒரு வீரமாது ஆகிறாள். அந்த மாதரசிகளின் தொகையாக லலிதாம்பிகை இருக்கிறாள். சதாசிவனைத் தன் கணவனாகவும் அறிவுக்கு உறைவிடமாகிய கணபதியையும் ஆற்றலுக்கு உறைவிடமாகிய குமரனையும் பிள்ளைகளாகவும் பெற்றுள்ள சிறப்பு அம்பிகைக்கு உண்டு. அறிவும் ஆற்றலும் ஒன்று கூடி மிளிரும் இடத்தில் அம்பிகையின் வீர சான்னித்தியம் திகழ்கிறது. வீரத்தைப் போற்றுபவன் தானே வீரனாக மாறியமைகிறான். பிரபஞ்ச அமைப்பிலே அன்னை பராசக்தி படைத்துள்ள பெரிய திட்டம் இதுவாம்.

**नैष्कर्म्या — நைஷ்கர்ம்யா** ९००

நிராசையில் நிலைத்திருந்து வினையாற்றுபவள். 900

ஜீவகோடிகள் அனைத்தும் ஆசைக்கு அடிமைப்பட்டுச் செயல்களில் உழன்று வருகின்றன. வினையைத் தவிர்ப்பது எவ்வுயிர்க்கும் சாத்தியப்படாது. வினை நிறைவேறுதற்கேற்பக் கீழ்நிலையில் உள்ள வாழ்வு மேல்நிலையை நோக்கிப் போகிறது. மற்ற உயிர்களைவிடப் பன்மடங்கு அதிகமாக ஆசைக்கு அடிமைப்பட்டிருப்பவன் மனிதன். ஓர் ஆசை நிறைவேறுவதற்கு முன்பு மற்றோர் ஆசை அவன் உள்ளத்தில் உருவெடுக்கிறது. வேண்டியவாறு விறகுக்கட்டைகளைப் போட்டு எரிக்கின்ற தீயை எங்ஙனம் திருப்திப்படுத்த முடியாதோ அங்ஙனம் ஆசைகளுக்கு அடிமைப்பட்ட பாங்கில் அவைகளைநிறைவேற்றுவதன் வாயிலாக அவ்வாசைகளை ஒழித்துத் தள்ளுவது மனிதனுக்கு இயலாது. ஆசை அகலுவதன்

வாயிலாகத்தான் அகமகிழ்வு உண்டாகிறது என்னும் உண்மையை நீண்ட ஆராய்ச்சிக்குப் பிறகு மனிதன் அறிந்துகொள்கிறான். எனவே அவன் நிராசையில் நிலைநிற்க முயலுகிறான்.

அம்பிகைக்காகக் கர்மம் புரிகிறவன் பரமபக்தனும் போற்றுதற்குரிய வீரனும் ஆகிறான். அந்த வினைத்தளையில் அவன் கட்டுண்டவன் ஆவதில்லை. விச்ராந்தியே வடிவெடுத்தவனாக அவன் மிளிர்கிறான். மனத்தெளிவடைகின்ற அவன் அன்னையின் மகிமையை உள்ளபடி அறிந்துகொள்ள வல்லவனாகிறான். அணு முதல் அண்டம்வரையில் எல்லாப் பகுதிகளிலும் சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம், திரோதானம், அனுக்ரஹம் ஆகிய ஐந்து கிருத்தியங்களும் அம்பிகையின் ஆதிக்கத்தில் நிகழ்ந்துகொண்டே இருக்கின்றன. ஆயினும் அவற்றில் அம்பிகை கட்டுண்பதில்லை. இக்கோட்பாட்டை வாழ்வில் கடைப்பிடிப்பவனே நல்ல யோகி ஆகிறான். அம்பிகையின் அருளுக்கும் அவன் பாத்திரமாகிறான். செயலற்றுச் சும்மா கிடப்பவன் வாழ்க்கைத் தத்துவத்தை அறிந்தவனல்லன். ஆசைக்கு அடிமைப்பட்டுப் படாடோபத்துடன் செயல்கள் பலவற்றைப் புரிபவனும் வாழ்க்கைத் தத்துவத்தை அறியமாட்டான். செயல் புரிந்துகொண்டிருப்பதற்கிடையிலும் தன் சொரூபத்தில் நிலைத்திருக்கும் சாதகனே மானிடப் பிறவியின் சிறப்பை உணர்ந்து செயற்கரிய செயல்கள் பலவற்றைச் செய்து சாதிக்கிறான். அவனே நைஷ்கர்ம சித்தியாகிய கர்ம அதீதத்தில் நிலைத்திருக்கிறான்.

**नादरूपिणी** — நாதரூபிணீ ९०१

ஓசை வடிவினள். 901

பிரணவம் அல்லது ஓங்காரம் பிரபஞ்சமாக வடிவெடுத்துள்ளது. செவிக்கு எட்டும் பகுதி மாத்ரப் பிரணவம் என்றும் செவிக்கு எட்டாத பகுதி அமாத்ரப் பிரணவம் என்றும் பெயர் பெறுகின்றன. தோற்றத்துக்கு வந்துள்ள பிரபஞ்சம் மாத்ரப் பிரணவத்தின் விளைவு. தோற்றத்துக்கு அப்பாலுள்ள பரவஸ்து சொல்லுக்கு எட்டாதது. மரமாகிய காரியத்துக்கு வித்து காரணமாயிருப்பது போன்று பிரபஞ்சமாகிய காரியத்துக்கு நாதம் காரணம். சொல்லுக்கு எட்டுகின்ற பகுதியும் எட்டாத பகுதியும் ஒரே வஸ்துவின் இரண்டு கூறுகளாம். சொல்லுக்கு எட்டுகின்ற

பகுதி நாதப்பிரம்மம் எனப்படுகிறது. நாதமானது வித்தாக இருந்து பிரபஞ்சத்தைத் தோற்றத்துக்குக் கொண்டு வருகிறது. இந்த நாதத்தின் வெவ்வேறு கூறுகளாகப் பிரபஞ்சத்திலுள்ள யாவும் அமைந்திருக்கின்றன. அவைகளுக்குப் பதார்த்தம் என்பது பொதுப் பெயர். பதமும் அதனுடைய விளக்கமும் என அது இயம்பப்படுகிறது. விதைக்கேற்றபடி மரம் உண்டாவது போன்று சொல்லுக்கேற்ற ஸ்தூலப் பொருள் உண்டாகிறது. ஒவ்வொரு ஜீவனும் ஓசை வடிவினன். அத்தகைய ஜீவன் அம்பிகைக்கு அமைந்துள்ள ஏதேனும் ஒரு நாமத்தை முறையாக உச்சரிப்பானாகில் அவனுடைய மன அமைப்பு அதற்கேற்றவாறு திருந்தியமைகிறது. இதுவே மனிதனுக்கு அமைந்துள்ள பெரிய பேறும்.

**विज्ञानकलना — விக்ஞானகலனா** ९०२

பரஞானத்தை உண்டுபண்ணுபவள். 902

ஒரு நாட்டின் பண்புகளையெல்லாம் புத்தகங்களின் வாயிலாகப் படித்து நன்கு யூகிக்கலாம். அதன் விளைவாக அந்த நாட்டைப் பற்றிப் பெரிய சொற்பொழிவுகளை வேண்டியவாறு நிகழ்த்தலாம். விஷயங்களைப் பற்றிய அறிவைப் பெறுவதும் பயன்படுத்துவதும் வெறும் கலைஞானத்தின் விளைவாம். ஏட்டுச் சுரக்காய் கறிக்கு உதவாது என்பது பழமொழி. அந்த நாட்டை நேரில் சென்று பார்ப்பதன் விளைவாக வருகின்ற ஞானத் தெளிவுக்கு விக்ஞானம் என்று பெயர். இது பிரபஞ்ச சம்பந்தமான கல்வியாகிறது.

கடவுளைப் பற்றிச் சாஸ்திரங்கள் மூலமாக அறிந்துகொள்வது ஞானம். சாதனங்கள் புரிந்து மனத்தெளிவடைந்து ஞானக் கண் பெற்றுக் கடவுளைச் சுவானுபூதியில் அறிந்துகொள்வது விக்ஞானம். ஞானம் விக்ஞானமாக வடிவெடுப்பதே சாதனத்தின் குறிக்கோளாகும். ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் இதைக் குறித்து ஓர் உபமானத்தின் மூலம் விளக்குகிறார். பசுவின் பாலைப் பற்றிப் பலர் கேட்டிருக்கிறார்கள். அப்படிக் கேட்பதை விடக் கண்ணால் பாலைப் பார்ப்பது சிறந்தது. பாலைக் கையாள்வது அதனினும் சிறந்தது. எல்லாவற்றுக்கும் மேலானது பாலைப் பருகிச் சுவைத்தலாம். பரம்பொருளைச் சுவானுபூதியில் அறிந்து கொள்வது பாலைச் சுவைப்பதற்கு நிகர். அங்ஙனம் சுவானுபூதி

யில் அறிந்துகொள்கின்றவன் வாழ்க்கைச் சம்பந்தமான ஐயங்களைத் தாண்டியவனாகிறான் நதி கடலைப் போய்ச் சேர்வதற்கு நிகராக விக்ஞானியானவன் தன் பிறப்பிடமாகிய பரம்பொருளைச் சென்றடைந்தவனாகிறான்.

कल्या — கல்யா ९०३

கலைகளில் வல்லவள். 903

சிருஷ்டி முழுவதிலும் ஒழுங்குப்பாட்டைக் காணலாம். இந்த ஒழுங்குப்பாடுதான் கலை எனப்படுகிறது. சிற்றுயிர்களும் பேருயிர்களும் விளையாட்டுக் கலைகளில் தீவிரமாக ஈடுபடுகின்றன. இயற்கையின் நடைமுறையே ஓர் ஒழுங்குப்பாடு நிறைந்த விளையாட்டாகக் காட்சி தருகிறது. கலைஞானம் மேல்நிலைக்குப் போகப்போக அதனிடத்துத் தெய்விகம் திகழ்கிறது. சாமர்த்தியமாகச் செயலைச் செய்வது கலையின் விளக்கமாம். முறையாகப் பேசும் கலையின்மூலம் மக்களுடைய போக்கையே திருத்தியமைக்கலாம். இயற்கை முழுவதும் மிளிரும் மங்களம் அன்னை பராசக்தியின் சான்னித்தியத்துக்கு அறிகுறியாம். அம்பிகையின் விபூதிகள் இத்தனை விதங்களில் வெளியாகிக் கொண்டிருப்பதால் அவள் கலைகள் அனைத்துக்கும் உறைவிடம் எனப் போற்றப் பெறுகிறாள்.

विदग्धा — விதக்தா ९०४

திறமை மிக வாய்க்கப் பெற்றவள். 904

இயற்கையின் நடைமுறையில் அன்னை பராசக்தி அரிய பெரிய செயல்களை மிக எளிதில் செய்து சாதிக்கிறாள். கட்புலனாகாத நீராவி கடலினின்று கிளம்பி வானத்தில் மேலே போகும்பொழுது வெண்மேகமாகவும் கார்மேகமாகவும் வடிவெடுத்து ஒன்றோடொன்று மோதுவதால் அளப்பரிய மின்சக்தி உண்டாகின்றது. பூகம்பத்தின் வாயிலாக நில உலகின் அமைப்பையே நொடிப்பொழுதில் இயற்கைத்தாய் மாற்றியமைக்கின்றாள். உயிர்த் தத்துவம் நிரம்பிய சிறு எறும்புகள் ஒன்று சேர்ந்து அவைகளைவிடப் பன்மடங்கு வண்ணத்தில் பெரிய தின்பண்டங்களை எளிதில் தூக்கிச் செல்கின்றன. நூற்றுக் கணக்கான மனிதர்கள் ஆகாய விமானத்தில் ஏறித் தூரத்தில் இருக்கின்ற மற்

றொரு நாட்டிற்கு அதிவிரைவில் செல்ல வல்லவர்களாகின்றனர். இவை யாவும் அம்பிகையின் மகிமைகளேயாம்.

இரண வைத்தியத்தின் மூலம் அழிந்துகொண்டிருக்கும் உயிர் ஒன்றுக்குப் புத்துயிர் தருவதும் அதைப் போன்ற நுண்ணிய செயல்களும் அம்பிகையின் திறமையை வெளிப்படுத்துகின்றன. இங்ஙனம் செயற்கரிய செயல்கள் பலவற்றை அன்னை பராசக்தி சர்வகாலமும் நிகழ்த்தி வருகின்றாள். எனவே அவள் விதக்தா எனப் போற்றப்படுகிறாள்.

**बैन्दवासना — பைந்தவாஸனா** ९०५

பைந்தவம் என்னும் ஸ்தானத்தை ஆசனமாகக் கொண்டிருப்பவள். 905

மனிதனின் நெற்றியிலே புருவத்துக்குச் சற்று மேலும் ஆக்ஞைச் சக்கரத்துக்குச் சற்றுக் கீழும் உள்ள ஸ்தானத்துக்குப் பைந்தவம் என்று பெயர். ஆனந்தத்துக்கு இருப்பிடமாகிய அதன்கண் அம்பிகை எழுந்தருளியுள்ளாள். அவளுடைய சன்னிதான விசேஷத்தால் சாதனத்தில் ஈடுபடும் ஒருவன் பரமானந்தம் துய்க்கிறான். ஜீவர்களிடம் காமரசத்தையும் அன்னை பராசக்தி வளர்த்து வருகின்றாள். ஆக, இகபரத்துக்கு உரிய இன்பங்கள் அனைத்துக்கும் இருப்பிடமாய்ப் பைந்தவாசனம் அமைந்துள்ளது.

ஸ்ரீசக்கரத்தில் அமைந்துள்ள ஒரு பகுதி பைந்தவம் எனப் பெயர் பெற்றுள்ளது. இயற்கையாக அமைந்துள்ள பிரபஞ்சமே உண்மையான ஸ்ரீசக்கரம். எங்கெல்லாம் ஆனந்தம் மிளிர்கின்றதோ ஆங்கெல்லாம் அன்னை பராசக்தியின் சான்னித்தியம் தானாக விளங்குகிறது. மனிதனுக்கு அமைந்திருக்கின்ற ஸ்ரீ சக்கரமாகிய உடலின்கண் சதா ஆனந்தம் மிளிர்ந்து கொண்டிருக்குமாகில் அத்தகைய உடல் வாழ்க்கையே சரியான அன்னையின் வழிபாடு ஆகிறது.

**तत्त्वाधिका — தத்வாதிகா** ९०६

தத்துவங்கள் அனைத்துக்கும் அப்பாற்பட்டவள். 906

இயற்கையின் கூறுகள் அனைத்தும் தத்துவங்கள் எனப்படுகின்றன. சாங்கிய தர்சனப் பிரகாரம் பூதங்கள் ஐந்து, அவற்றின்

தன்மாத்திரைகள் ஐந்து, ஞனேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து, சித்தம், மனம், புத்தி, அகங்காரம் என்னும் அந்தக் கரணங்கள் நான்கு ஆகிய இருபத்து நான்கும் பிரகிருதியின் கூறுகளாகும். சேதனமயமான புருஷதத்துவம் இருபத்தைந்தாவது தத்துவம். இது ஜீவாத்மன். இந்த தத்துவங்களுக்கு எல்லாம் அம்பிகை அப்பாற்பட்டவள்.

**तत्त्वमयी — தத்வமயீ** ९०७

தத்துவங்களின் வடிவத்தில் இருப்பவள். 907

பிரகிருதி தத்துவங்கள் ஜடமயமானவை. ஆத்ம தத்துவம் சேதனம். சிவமும், சக்தியும் பெயரளவில் இரண்டு தத்துவங்களாயினும் உண்மையில் பொருள் ஒன்று.

**तत्त्वमर्थस्वरूपिणी — தத்வம் அர்த்த ஸ்வரூபிணீ** ९०८

சிவனுக்கும் ஜீவனுக்கும் உள்ள இணக்கமயமாக அமைந்திருப்பவள். 908

தத் என்னும் பதம் பரவஸ்துவையும் த்வம் என்னும் பதம் ஜீவாத்மனையும் குறிக்கின்றன. அஸி என்னும் பதம் பரவஸ்துவுக்கும் ஜீவாத்மனுக்கும் உள்ள இணக்கத்தைக் குறிக்கிறது. இது மஹாவாக்கியமாகும்.

**सामगानप्रिया — ஸாமகானப்ப்ரியா** ९०९

ஸாமகானத்தில் பிரியம் வைத்திருப்பவள். 909

முற்றிலும் இன்னிசைக்கு ஒத்துள்ள சாம வேதத்தைச் சுரத்துடன் ஓதுவது முறை. அதை மிகைப்படுத்துதலும், குறைப்பதும் ஒவ்வாது. கானம் யாண்டும் கருத்துக்கு உட்பட்டதாயிருக்க வேண்டும். அந்தந்தப் பகுதிக்கேற்ற சுரம் முறையாக அமைந்திருக்கிறது. சான்று ஒன்றின் மூலம் இதை விளக்கலாம். பெரிய உத்தியோகம் வகிக்கும் அதிகாரி ஒருவனுக்கு உடல் காப்பாளனாக நியமிக்கப்பட்ட ஒருவன் அந்த அதிகாரியைவிடப் பகட்டான உடை அணிவது வழக்கம். அவனையே அதிகாரி என்று பாமரர்கள் விஷயம் தெரியாமல் பொருள்படுத்திக்கொள்வார்கள். அதிகாரியின் நிலையில் வேதங்களும் உடல் காப்பாளனுடைய நிலையில் இன்னிசைகளும் அமைந்துள்ளன. இசையின் ஆலாப

லத்தில் வேதத்தின் உட்பொருள் மூழ்கிப் போகலாகாது. சந்தஸ் என்னும் முறையைக் கொண்டு வேதம் ஓதுதலில் இன்னிசையை அளவுபடுத்தி வைத்திருக்கின்றனர். சங்கீத வித்துவான் ஒருவன் தன் இன்னிசைத் திறமையை வேதம் ஓதுவதில் காட்ட முடியாது.

சாம வேதத்தில் அமைந்துள்ள சந்தஸ் அற்புதமானது. கானத்தின் மகிமை சாமவேதம் ஓதுவதில் உச்சநிலைக்கு வந்திருக்கிறது. பேச்சில் பொருள் அழகும் சொல் அழகும் சேர்ந்திருப்பதற்கு நிகராகச் சாமகானம் பண்ணுகின்றபொழுது மேலான கருத்தும் இன்னிசையின் சிறப்பும் ஒன்று சேர்ந்து மிளிர்கின்றன. கண்ணனுடைய குழலோசை உயிர்களனைத்தையும் அவன் மயமாக்கியதற்கு நிகராகச் சாமகானத்தைக் கேட்கும் உயிர்களையெல்லாம் அது தன்மயமாக்குகிறது. அன்னை பராசக்தி அனந்தங்கோடி உயிர்வகைகளாக இலங்குகின்றாள். அவை யாவும் சாம கானத்தைக் கேட்டு மகிழ்வுறுகின்றன என்றால் அன்னை பராசக்தியே சாம கானத்தில் பிரியம் மிக வைத்திருக்கிறாள் என்பது வெளிப்படை.

**सौम्या — ஸௌம்யா** ९१०

ஸோம யாகத்துக்குத் தகுதி வாய்ந்தவள். 910

ஸோம யாகத்தில் யஜமானன் தனக்குரிய அனைத்தையும் தெய்வத்துக்கு உரியவைகளாக்குகிறான். அவன் சொத்துக்களனைத்தும் பொது நலனுக்கென்றே படைக்கப்படுகின்றன. இந்தப் பாங்கில் அகங்கார மமகாரத்தை ஒதுக்கித் தள்ளுபவன் அம்பிகைக்குரிய செல்வனாகிறான். அவள் அத்தகையவன்மீது தன் பூரண அனுக்ரஹத்தைப் பொழிகிறாள். சுயநலத்தியாகம் ஓங்குகின்ற இடத்திலெல்லாம் அம்பிகையின் சான்னித்தியம் மிளிர்கிறது என்பது கோட்பாடு.

**सदाशिव कुटुम्बिनी — சதாசிவ குடும்பினீ** ९११

சதாசிவனுருடன் கூடிக் குடும்ப வாழ்க்கை நடாத்துபவள். 911

அகிலாண்டங்களுக்கும் அன்னை பராசக்தி தாயாகவும், சிவனார் தந்தையாகவும் இலங்கி வருகிறார்கள். ஆத்ம சாதகன்

ஒருவன் இணைபிரியாத சிவசக்திமயமாக உலகைக் கண்டு பழகு வானுகில் அது நல்ல ஆத்ம சாதனமாகிறது.

**सव्यापसव्य मार्गस्था — ஸவ்யஅபஸவ்ய மார்கஸ்தா ९१२**

இடம், வலம் ஆகிய இரண்டுவித மார்க்கங் 912
களுக்கும் தலைவியாய் இருப்பவள்.

பிரபஞ்ச வாழ்க்கைக்கு இன்றியமையாத சௌபாக்கியங் களை அன்னை பராசக்தி தன் பக்தர்களுக்குத் தாராளமாக எடுத்து வழங்குகின்ருள். அவைகள் அந்தப் பக்தர்களிடம் நிலைத்திருக்கும்படி பாதுகாப்பையும் அவள் தருகின்ருள். எல்லா வற்றுக்கும் மேலாக அவையனைத்தையும் நன்கு பயன்படுத்திப் பக்தர்கள் முன்னேற்றம் அடைவதற்கான வழிகளையும் அவள் வகுத்து வைக்கிருள்.

இயற்கையின் உதவியைக்கொண்டு பராசக்தியின் வழிபாட் டில் ஈடுபடுவது வாமாசாரம் (ஸவ்யம்) எனப்படுகிறது. இதில் வெற்றியடைபவன் அன்னையின் அருளுக்கு அக்கணமே பாத்திர மாகிருன். ஆனல் வழிபாட்டு முறையில் பிழை ஏதும் நேருமானல் அவனுக்குப் பைத்தியம் பிடிக்கும் அல்லது அவன் மடிந்து பட்டுப் போவான்.

ஞான காண்டத்தை அனுஷ்டிக்கின்றவர்கள் பிரபஞ்ச வாழ் வினின்று தங்களை விடுவித்துக்கொள்ள முயலுகின்றனர். நிலை யற்ற வாழ்வு தங்கள் வினைப்பயன்களை முடிவிற்குக்கொண்டு வரு வதற்குமட்டும் பயன்படுகின்றது என்று கருதி உலகப்பற்றை அவர்கள் ஒதுக்கித் தள்ளுகின்றனர். கடவுள் வழிபாட்டில் ஞான மும், பக்தியும் வேண்டுமென்று அவர்கள் பிரார்த்திக்கிருர்கள். உடல் நலன்களையும், பந்த பாசங்களையும் அவர்கள் புறக்கணிக் கும் இம் மார்க்கம் அபஸவ்விய (தக்ஷிண) மார்க்கம். தக்ஷிணசாரம் அனுஷ்டிப்பதற்கு மிகவும் சுலபமானது. மனிதனுக்கு உடல் வளர்ச்சி தானுக வந்தமைவதற்கு நிகராக வாழ்வாங்கு வாழ்பவ னுக்கு ஆத்மீக வளர்ச்சியும் தானுக வந்தமைகிறது.

ஒன்றோடொன்று முரண்படும் இரண்டு மார்க்கங்களுக்கும் கிருபை கூர்ந்து அன்னை ஆதரவளித்து வருகிருள். அந்தந்த நிலையில் இருப்பவர்களுக்கு அவரவர் மனப் பரிபாகத்துக்கு ஏற்ற

வழிபாட்டுமுறை அவசியமாகிறது. தீவிரமாக எந்த மார்க்கத்தில் சென்றாலும் மனிதன் மேன்மையுறுகிறான்.

**सर्वापद्विनिवारिणी — ஸர்வாபத்விநிவாரிணீ** ९१३

எல்லா விதமான ஆபத்துக்களினின்றும் உயிர்வகைகளைக் காப்பாற்றுபவள். 913

வாழ்வின் எல்லாப் படித்தரங்களிலும் ஆபத்து நிறைந்துள்ளது. பூமியில் போடப் பட்ட வித்து மிக ஆழமாகப் போனால் முளைத்து மேலே வராது. தரைக்கு மேல் இருந்தால் அது பாழ் பட்டுப்போம். தண்ணீர் பாய்ச்சுதல் மிகுதியாய்ப் போனாலும் குறைந்தாலும் அது அழிந்துபோம். இத்தனை விதமான ஆபத்துக்களைச் சமாளித்து அது வளர்ந்து வருவது அன்னையின் அருளாலேயாம்.

இனி, ஜங்கமமாயுள்ள உயிர்வகைகளுக்கும் மனிதனுக்கும் அமைந்துள்ள கேடுகளுக்கும் தடைகளுக்கும் அளவில்லை. அப்போதைக்கப்போது தேவையாய் இருக்கும் நன்னெறிகளை வழங்கி அக்ஞானத்தின் விளைவாக மனிதனுக்கு ஏற்படும் பிறப்பு, இறப்பு ஆகிய நோய்களைக் களைந்து அவனைத் தன்மயமாக்கும் அரிய செயலிலும் அம்பிகை ஈடுபடுகின்றாள். பிறப்பெடுப்பது முதல் இறந்துபோவதுவரை வாழ்வானது துக்கம் நிறைந்ததாய் இருக்கிறது. அப்படித் துன்பம் வந்து வாய்க்கின்றபொழுது அம்பிகையைச் சார்ந்திருந்து பழகுதல் வேண்டும். அப்படிச் சார்ந்திருப்பவர்கள் எல்லாவிதமான கேடுகளினின்றும் தங்களை விடுவித்துக்கொள்கிறார்கள். ஆக, ஸர்வ துக்க நிவாரணியாய் அன்னை பராசக்தி இலங்குகின்றாள்.

**स्वस्था — ஸ்வஸ்தா** ९१४

தன்னில் தானாய் இருப்பவள். 914

சத், சித், ஆனந்த சொரூபிணியாக அன்னை பராசக்தி இலங்குகின்றாள். சூரியனிடத்து இருள் இல்லாதது போன்று அம்பிகையினிடத்து அவளுக்கு அன்னியமான வேறு ஏதும் இடம் பெறமாட்டாது. ஜீவர்கள் தங்கள் வாழ்வில் அடைதற்குக் குறிக்கோளாய் இருப்பது அவர்களுடைய நிஜசொரூபமாகிய ஆத்மாவேயாம். பூரணப்பொருளாகிய அது எதையும் சார்ந்திருப்ப

தில்லை. எதுவும் அதை மலினப்படுத்துவதுமில்லை. ஒப்புயர்வற்ற இப்பெருநிலையும் அம்பிகையும் ஒன்றே. அன்னையை வழிபடுபவர்கள் அவளுடைய பெருநிலையைத் தாங்களும் அடையப்பெறுகிறார்கள்.

**स्वभावमधुरा** — ஸ்வபாவமதுரா ९१५

இயல்பாகவே எல்லாராலும் விரும்பப்படுகின்றவள். 915

மூலநிலையை விட்டுப் பிசகாதிருக்கும் குழந்தையை அனைவரும் நேசிக்கின்றனர். பிரபஞ்ச விகாரங்கள் ஏதும் பாதிக்காத அக்குழந்தையின் நிலையிலேயே அன்னை பராசக்தி யாண்டும் நிலைத்திருக்கிறாள். இரும்புத்துண்டுகளைக் காந்தக்கல் கவர்ந்திழுப்பது போன்று பராசக்தியின் இனிய சுபாவமானது உயிர்களனைத்தையும் தன்பால் கவர்ந்திழுக்கிறது.

அந்தந்த உயிருக்கு அதனதன் தாய் மகிழ்வை ஊட்டுகின்றாள். அத்தனைவிதமான தாய்மார்களின் சொருபத்தில் இருக்கும் அன்னை பராசக்தியிடம் ஜீவகோடிகளனைத்தும் இணக்கம் பூணுதலில் வியப்பு ஏதும் இல்லை. ஒரு ஜீவனுக்கு அமைந்துள்ள மன அமைப்பு அவனுக்குரிய உபாதியாகிறது. தம் உபாதியோடு ஒத்திருக்கின்ற மக்களை நேசிப்பதும் ஒவ்வாதவர்களை வெறுப்பதும் ஜீவர்களின் இயல்பு. ஆனால் அம்பிகையோ நல்லார்க்கும் பொல்லார்க்கும் பொதுவாக நலன் தரும் நல்லியல்பு படைத்தவளாகவே இலங்கி வருகின்றாள்.

ஆத்ம ஞானம் ஓங்கப் பெறும் ஞானிகளிடத்து ஓஜஸ் என்னும் உள்ளொளியைப் பெருக்குவதில் அவள் பெருமகிழ்வடைகிறாள். இனிமை ததும்பும் தன் பேரிணக்கத்தால் அருவருப்புக்குரிய ஸ்வபாவமுடையவர்களையும் நல்லவர்களாக அம்பிகை திருத்தியமைக்கிறாள். பசு தன்னிடம் ஓடிவருகின்ற கன்றுக்குட்டியை இனிது ஏற்றுக்கொள்வதற்கு நிகராக அன்னை பராசக்தியிடம் பேரன்பு பூண்டவர்களாக விரைந்து வரும் பக்தர்களை மகிழ்வுடன் அவள் தனக்குச் சொந்தமானவர்களாக ஏற்றுக்கொள்கிறாள் என்னும் உண்மை இந்நாமத்தின் வாயிலாக விளக்கப்படுகிறது.

**धीरा — தீரா** ९१६

பாண்டித்தியம் உடையவள். 916

ஊசிப்புல் போன்ற பாண்டித்தியம் என்றும் வஜ்ராயுதம் போன்ற பாண்டித்தியம் என்றும் பாண்டித்தியத்தில் இருவகைகள் உள்ளன. சில நுண்ணறிவாளர்கள் ஊசிப்புல்லுக்கு நிகராக மிகமிகக் கூர்மை வாய்ந்த பண்டிதர்களாக விளங்குகின்றனர். ஆயினும் இலேசான காகிதத்தைக்கூடப் பொத்துக்கொண்டு போகும் வல்லமை ஊசிப்புல்லினிடத்து இல்லை. அங்ஙனம் ஏட்டுக் கல்வி படைத்தவர்கள் உயர்ந்த கோட்பாடுகளை வாழ்க்கையில் நடைமுறைக்குக் கொண்டுவர இயலாது. பாலில் ஊறவைத்த நெற்பொரிபோன்று அவர்கள் வதவத சொதசொத என்று வெறுமனே வாழ்ந்திருக்கிறார்கள்.

தீராவாகிய அம்பிகையின் பாண்டித்தியம் உறுதிப்பாட்டில் வஜ்ராயுதத்துக்கு நிகரானது. கூர்மையில் க்ஷவரக்கத்தியைப் போன்றும் உறுதிப்பாட்டில் விறகு பிளக்கும் கோடரி போன்றும் வஜ்ராயுதம் உள்ளது. எல்லாச் சந்தர்ப்பங்களிலும் எல்லாக் காரியங்களுக்கும் வஜ்ராயுதம் பயன்படுவதற்கு நிகராக அம்பிகையின் நுண்ணறிவும் உறுதிப்பாடும் அமைந்திருக்கின்றன. அம்பிகை உபாசகர்கள் தாங்களே தீரர்களாகிறார்கள். நன்கு வினையாற்றவல்லவர்களாகவும் சாஸ்திரங்களில் அடங்கியுள்ள மேலாம் கருத்துக்களைக் குழந்தைகளுக்கும் விளங்கும்படி தெளிவுபடுத்த வல்லவர்களாகவும் அவர்கள் இருக்கிறார்கள். அன்னை பராசக்தியை உபாசிப்பதனால் வரும் நன்மை இதுவேயாம்.

**धीरसमर्चिता — தீர ஸமர்ச்சிதா** ९१७

உறுதிப்பாடு படைத்துள்ள பண்டிதர்களால் 917
நன்கு ஆராதிக்கப்படுபவள்.

கிணறு வெட்ட முற்படும் ஒருவன் இடத்தை அடிக்கடி மாற்றிக்கொள்வதன் வாயிலாகத் தன் ஆற்றலையும் காலத்தையும் வீணாக்குகிறான். உறுதிப்பாடற்ற ஏட்டுக்கல்வியாளன் அவனுக்கு நிகராகிறான். மற்றொரு மனிதன் நீர் அகப்படும் இடத்தை மற்றவர்களுடைய அபிப்பிராயத்தையும் கேட்டுத் தானும் யோசித்துப் பார்த்து நிர்ணயித்து ஒரே இடத்தில் ஆழமாக வெட்டுகிறான்

தன் முயற்சியில் அவன் வெற்றியும் அடைகிருன். தீரனுயுள்ள உறுதிப்பாடு படைத்த பண்டிதன் அத்தகையவன். அன்னையின் வழிபாட்டில் அவன் தீவிரமாக ஈடுபடுகிருன். அருளுக்கு இன்னும் பாத்திரமாகவில்லை என்று அவன் தளர்வுறுவதில்லை. தாய் எவ்வளவு பராமுகமாயிருந்தாலும் குழந்தையானது விடாப்பிடியாகத் தன் தாயை நச்சுவதற்கு நிகராக அவன் அம்பிகையை விடாமுயற்சியுடன் வழிபடுகிருன். அதில் அவன் முறை வழுவாது ஈடுபடுகின்ருன்.

தன் ஜீவிதத்தின் வாயிலாக 'முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்' என்னும் கோட்பாட்டை அன்னையின் அருளுக்குப் பாத்திரமான பக்தர்கள் விளக்கியுள்ளனர். மன உறுதிப்பாடுடன் அம்பிகையின் ஆராதனையில் நாம் தீவிரமாக ஈடுபடுதல் வேண்டும் என்பது இந்நாமத்தின் மூலம் விளக்கப்படுகிறது.

**चैतन्यार्घ्यसमाराध्या — சைதன்யார்க்ய ஸமாராத்யா ९१८**

ஆத்ம சொருபத்தின் வாயிலாக நன்கு ஆராதிக்கப்படுகிறவள். 918

ஜடப்பொருள் படிப்படியாகப் பரிணமித்துச் சேதனமாவது இயற்கையின் திட்டம். சிற்றுயிர் பேருயிராகப் பரிணமிப்பதற்கேற்ப அதன் உடலமைப்பிலும் மேலாம் பாங்கு தானுக வந்தமைகிறது. அது உண்ணும் உணவிலும் மேலான பாங்கு வந்தமைகிறது. அரிசியை மக்கள் உணவாக ஏற்றுக்கொள்கின்றனர். வைக்கோல் கால்நடைகளுக்கு உணவாகப் பயன்படுகிறது. மக்கிப்போன நெல்உமி மண்ணுக்கு எருவாகிறது. பரிணமத்தில் மேல்நிலைக்கு வந்துள்ள மனிதனே கிரியா விசேஷகளுடன் கடவுளை வழிபடுகிருன். திரவிய மயமாகிய யக்ஞத்தில் பத்ரம், புஷ்பம், சந்தனம் முதலியன வழிபாட்டுக்குரியவைகளாக அமைகின்றன. ஆரம்ப சாதகன் இயற்கையின்கண் உள்ள இத்தகைய தூய பொருள்களை வழிபாட்டில் பயன்படுத்துகிருன். மேலாம் நிலையை எட்டுகின்றபொழுது மனத்தகத்து உதிக்கும் மேலாம் எண்ணங்களே மானச பூஜைக்கு உரியன ஆகின்றன. திரவிய யக்ஞத்தை விட ஞான யக்ஞம் மேலானது. எதை வழுத்துகின்ருனே அதன் மயமாக மனிதன் மாறி அமைகிருன். தன்னை ஆத்ம

சொரூபமாகக் கருதிப் பரமாத்மனிடத்துத் தன்னை லயப்படுத்து தற்கு நிகரான வழிபாடு இல்லை. அதுவே முடிந்த நோக்கமாகிறது.

தாய்க்கும் சேய்க்கும் உள்ள தூய இணக்கம் ஆத்ம சொருபத்தில் திளைத்திருப்பதற்கு நிகராகிறது. தாய்ப்பாலை பருகித் தாயுடன் குழந்தை பூணும் இணக்கம் திரவிய யக்ஞத்துக்கு நிகர். உடலைத் தான் என்று கருதி அகங்கரிக்கும் நிலைக்கு அப்பாலுள்ள குழந்தையோடு தாய் தன் தேக உணர்ச்சியையும் தாண்டிய நிலையில் இருந்துகொண்டு பேரிணக்கம் பூணுகிறுள். இது ஆத்மாவில் ஆத்ம சொருபம் திளைத்திருப்பதற்கு நிகராகிறது.

கிரியா விசேஷங்களுடன் செய்யும் வழிபாட்டில் கையாளப் படும் தூய மலர் தூய எண்ணத்துக்கும், பத்ரம் அழகுக்கும், சந்தனம் பிராண தத்துவத்துக்கும், அரிசி ஜீவ தத்துவத்துக்கும் சின்னங்களாகின்றன. மானச பூஜையில் இவையாவும் எண்ணங்களாக மாறியமைகின்றன. ஆத்ம போதம் உருவெடுக்கும் பொழுது இத்தகைய பொருள்களுக்கும் எண்ணங்களுக்கும் அவசியமில்லை. சொருபம் தன்னில் தானே திளைத்திருக்கிறது. கடலை எட்டிய நதி தன் குறியை அடைந்தாயிற்று. அதே பாங்கில் ஆத்ம சாதகன் உபாதிகள் அற்றவனுகவும் ஜீவ போதத்தைத் தாண்டியவனுகவும் பரபோதத்தில் திளைத்திருப்பவனுகவும் திருந்தி அமைகிறுன். ஆங்கு பரமாத்மா—ஜீவாத்மா பேதம் இல்லை. அகண்டாகாரமாக அங்கிலை விளங்குகிறது. ஆத்ம சாதகன் தான் வழிபடும் அன்னை பராசக்தியிடம் இங்ஙனம் தன்னை ஒப்படைக்கிறுன். ஆதலால் தான் அவள் சைதன்யார்க்ய ஸமாராத்யா எனப் போற்றப்பெறுகிறுள்.

**चैतन्यकुसुमप्रिया** — சைதன்யகுஸுமப்ரியா ९१९

பேரறிவு என்னும் மலரிலே பிரியம் வைக்கின்றவள். 919

சைதன்யம் என்ருல் எல்லோருக்கும் எளிதில் விளங்குவதில்லை. எல்லாவிதமான வழிபாட்டிலும் புஷ்பம் முக்கியமான இடம் பெறுகிறது. அதன் பாங்கை ஓரளவு அறிந்துகொள்வது சாமானிய மனிதனுக்கும் சாத்தியமாகிறது. உயிர்வகைகளின்

மலர்ந்துள்ள நிலைக்கு விளக்கமாக மலர் அமைந்திருக்கிறது. கண்களைக் கவர்வதாக உள்ள மலரில் மணம் கமழுகிறது. உணவு வகைகளுள் உச்சநிலையில் உள்ள தேனுக்குப் பிறப்பிடம் மலர். ஸ்பரிச உணர்ச்சியின் வாயிலாகவும் மலர் மனிதனுக்கு மகிழ் வூட்டுகிறது. மலர்களைப் போற்றுவதைக் காதால் கேட்டு மனி தன் இன்புறுகிறான். இவ்வாறு ஐம்பொறிகளுக்கும் அருள் விருந்தாய் அமைந்திருப்பது மலர். ஐம்பொறிகளுக்குத் தன் மாத்திரையை வழங்கும் ஆத்ம சொரூபத்தின் புறச் சின்னமாக மலர் அமைந்துள்ளது. ஈசனுடைய மகிமைக்கு விளக்கமாயிருப் பது புஷ்பம். ஆனந்தத்தை யாண்டும் புதுப்பிக்க வல்லதாய் இருப்பது மலர். சைதன்யமும் ஆனந்தமும் ஒன்றே. ஆக சைதன்ய குஸுமம் என்பது தோற்றத்துக்கு அப்பாலுள்ள சைதன்யத்துக்கும் பொருந்துகிறது; தோற்றத்துக்கு வந்துள்ள மலருக்கும் பொருந்துகிறது. கட்புலனாகின்ற மலரின் வாயிலாகக் கட்புலனாகாத ஆத்ம சொரூபத்தை அறிந்துகொள்ளலாம்.

வானவெளியில் பாயும் சூரிய கிரணத்தை நேரே காணமுடி யாது. அது மேகத்தின் வழியாகப் பாய்ந்து ஏழு நிறங்களாகச் சிதறடைகின்ற பொழுது அவற்றைக் காணமுடிகின்றது. மூல நிலையாகிய சூரிய கிரணத்துக்கு நிகர் ஆத்ம சைதன்யம். அது சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் தன்மாத்திரைகளா கத் தோற்றத்துக்கு வந்துள்ளது. இந்தஐந்துவிதத் தன்மாத்திரை களுக்கும் இருப்பிடமாயிருப்பது புஷ்பம்.

இயற்கையில் ஆனந்தத்தை ஊட்டுவதெல்லாம் ஆத்மாவின் புறத்தோற்றமாம். பிரபஞ்சம் முழுவதும் சைதன்யத்தின் தோற் றம். அங்ஙனம் தோன்றிவந்தவைகளுள் உயிர்கள் அனைத்துக் கும் இன்பமூட்டும் தகைமை மலருக்கு உண்டு. ஆதலால்தான் அன்னை பராசக்தி சைதன்ய குஸுமப்ரியா என்று போற்றப் பெறுகிறாள்.

**सदोदिता — ஸதோதிதா** ९२०

இடையறாது தோன்றிக்கொண்டிருப்பவள். 920

வழிபாட்டுக்கு உதவுகின்ற மலர் நாள்தோறும் புதிதுபுதி தாக மலர்ந்து கொண்டே இருக்கிறது. அதன் மலர்ச்சியை

ஸதோதிதா என்று சொல்வது பொருந்தும். சூரியனை க்ஷணந் தோறும் உதயமாகும் ஞானவெளிச்சம் எனலாம். அதற்கு இருப்பிடம் அன்னை பராசக்தி. கருவி கரணங்கள் ஓய்ந்த தொண்டர்களின் உள்ளம் அன்னைக்கு யாண்டும் இருப்பிடமாய் உள்ளது. நிலவுலகில் எங்காவது ஒரு பகுதியில் சூரியன் உதய மாகிக்கொண்டே இருக்கிறது. அதேபாங்கில் சைதன்யமாயிருக் கும் அன்னை பராசக்தி பக்தர்களுடைய உள்ளத்தில் சர்வகால மும் உதித்துக்கொண்டே இருக்கின்றாள். அவள் நித்திய ஜாக்கிரதாவஸ்தையில் இருக்கிறாள் என்று மொழிவது மரபு. தைலதாரை போன்று உள்ளத்தில் இடையீடின்றிச் சர்வகாலமும் பரம்பொருளை எண்ணுகின்ற பக்தனும் சைதன்ய சொரூபமாக இலங்குகின்றான். அதுவே பெறுதற்கரிய பேறாகிறது. இந்த நாமம் முற்றிலும் தியானத்துக்குரியதாம்.

**सदातुष्टा — ஸதா துஷ்டா** ९२१

எப்பொழுதும் சந்தோஷமாய் இருப்பவள். 921

உயிர் வகைகள் யாண்டும் ஏதேதோ தேவைகளை நிறை வேற்றுவதற்காகக் காலமெல்லாம் முயன்றுகொண்டிருக்கின்றன. ஓர் ஆசை நிறைவேறப் பெறுவதற்கு முன்பே மற்றோர் ஆசை மனதில் முன்னணியில் வந்து நிற்கிறது. ஆதலால் மனிதன் எப் பொழுதுமே அல்லலிலும் அதிருப்தியிலும் அலைகின்றான். அகண்டாகாரத்தில் விரிவடைந்து எல்லையில் அடங்காதவளா கிய அன்னை பராசக்தியோ பூரணி. நிறைபொருளாக அவள் யாண்டும் இலங்குகின்றாள். அவளுக்கு அன்னியமாக வேறு வஸ்து இல்லை. எனவே அவள் சந்துஷ்டியுடனும் பரம திருப்தி யுடனும் வீற்றிருக்கின்றாள்.

சுஷுப்தி அவஸ்தையாகிய அயர்ந்த உறக்கத்தில் ஆசை வடிவத்தில் உள்ள மனது ஒடுங்கிக் கிடக்கிறது. பரமானந்தத் தில் மனிதன் அப்பொழுது திளைத்திருக்கிறான். அன்னையின் சொரூபத்தில் ஒன்றுபட்டிருக்கின்றான். நிராசையும் நிறைவு நிலையும் ஒன்றே. அதே நிலையை ஒருவன் ஜாக்ரதாதவஸ்தை யிலும் கொண்டு வருவானாகில் ஸதா துஷ்டா என்னும் நாமத்தின் உட்பொருளை உள்ளபடி அவன் அறிகின்றான்.

துன்பப் பட்டுக்கொண்டிருப்பவனும் பொருளற்ற அகமகிழ்வில் உழன்று கொண்டிருப்பவனுக்கும் யோகம் கை கூடாது. அஷ்டாங்க யோகத்தில் இரண்டாவது அங்கமான இயமத்தில் சந்தோஷம் என்னும் நியதி இடம் பெற்றுள்ளது. யாண்டும் அமைதியும் இனிமையும் கூடிய மகிழ்வில் நிலைத்திருப்பவனுக்கே யோகம் கை கூடுகிறது என்பது அதன் பொருள். இக்கோட்பாட்டை அன்னை பராசக்தி ஸந்துஷ்டாவாக இருந்து நிரூபித்துக் காட்டுகிறாள். ஆத்ம சாதகர்கள் மனதை இந்த பாங்கில் வைத்திருப்பது அவசியம்.

**तरुणादित्य पाटला — தருணாதித்ய பாடலா** ९२२

நண்பகல் சூரியனைப் போன்று சிறிது சிவப்போடு கூடிய வெள்ளை நிறம் படைத்தவள். 922

இயற்கையின் வெவ்வேறு பகுதிகளில் வெவ்வேறு நிறங்கள் மிளிர்கின்றன. அம்பிகையின் கிருத்தியங்களே உலக நடைமுறைகளாக அமைந்துள்ளன. அன்னை பராசக்தி மகாகாளியாக வடிவெடுக்கும்பொழுது அவளுடைய நிறம் கறுப்பு. காரிருளில் தாங்கள் இருப்பதை மட்டும் மக்கள் ஒருவாறு உணர்கிறார்கள்; அவர்களுக்குப் புறத்தில் ஒன்றும் விளங்குவதில்லை. மறைந்து பட்டுப்போன இறந்த காலம் மீண்டும் காட்சிக்கு வருவதில்லை. நிகழ்காலம் மட்டும் ஏகதேசம் புலனாகிறது. எனவே காலமயமாயிருக்கும் காளி கருநிறமாயிருப்பது பொருத்தமானதே.

அகண்டத்தில் விரிந்தோடும் வெட்டவெளியும் கரைகாணாக் கடலும் நீலநிறமாய் இருக்கின்றன. அதே போன்று எங்கும் வியாபகமாயுள்ள அம்பிகை நீலநிறம் படைத்திருக்கிறாள். அனுக்ரஹ மூர்த்தியாயிருக்கும்பொழுது அவள் பொன்னார் மேனியளாகப் பொலிகின்றாள். பரிபக்குவம் அடைந்துள்ள சாதகர்கள் அன்னை பராசக்தியின் ஜோதியில் ஒன்றுபடுகின்றனர். இயற்கையின்கண் உள்ள பாங்குகளை எல்லாம் கடந்துள்ள ஆத்மஜோதிக்கு அறிகுறியாக நண்பகல் ஞாயிறு வாரிக்கொட்டும் வெளிச்சமாக அம்பிகை இலங்குவது பொருத்தமானது.

தருண ஆதித்யம் என்பது நண்பகல் சூரியனுக்கும் பால சூரியனுக்கும் இடையிலுள்ள வெண்ணிறமான சூரியனைக் குறிக்

கிறது. அது சுத்த சத்துவத்தின் சின்னம். சுத்த சத்துவத்தை அடையப்பெற்றவர்களே குணதீதத்துக்குப் போகத் தகுதியுடையவர்களாகிறார்கள். தியான அவஸ்தையில் சாதகர்கள் அன்னை பராசக்தி நண்பகல் சூரியன்போன்று பிரகாசித்துக்கொண்டிருப்பதாகத் தங்கள் ஹிருதயக் கமலத்தில் பாவிப்பது பொருந்தும்.

**दक्षिणादक्षिणाराध्या — தக்ஷிணுதக்ஷிணுராத்யா** ९२३

தக்ஷிணமார்க்கம், வாமாச்சாரம் ஆகியவற்றின் 923
வாயிலாக ஆராதிக்கப்படுபவள்.

வேதத்திலும் ஆகமத்திலும் விளக்கப்பெற்றுள்ள தக்ஷிண மார்க்கம் சமயங்கள் அனைத்துக்கும் பொதுவானது. ஐம்பொறிகளை வெல்வதற்கேற்ப மனிதன் சாதனத்தில் மேல்நிலைக்கு வருகிறான். திரிகரணசுத்தி பெற்ற மனிதன் உயிர்கள் அனைத்தையும் அன்புடன் நேசிக்கிறான். சுயநலத்தை ஒதுக்குமளவு அவன் மேன்மை அடைகிறான்; பரஞானத்துக்கு அவன் தகுதி உடையவனாகிறான். அவன் அம்பிகையிடம் பூணுகிற பக்தி பராபக்தி எனப்படுகிறது.

தக்ஷிணச்சாரத்தில் பொருந்ாதவை என ஒதுக்கிவைக்கப்படும் பிணம், ஸ்மசானம் போன்றவை வாமாச்சாரத்தில் புனிதமானவைகளாகக் கருதி அங்கீகரிக்கப்படுகின்றன. அதில் சாந்த பாவம், வீரபாவம், திவ்யபாவம் என்று மூன்று பகுதிகள் உள்ளன. அவற்றுள் வீரபாவமும், திவ்வியபாவமும் தக்ஷிணசாரத்தோடு முற்றிலும் முரண்பட்டவை. வீரபாவத்தில் வெற்றியடைபவன் அபயத்தில் நிலைபெற்றவனாகிறான். காம வாசனையை முற்றிலும் நீக்கிய தூயமனம் படைத்தவன் திவ்விய பாவத்தில் வெற்றியடைகிறான்; அன்னையின் அருளுக்குப் பாத்திரமாகிறான்.

தக்ஷிணச்சாரம், வாமாச்சாரம் ஆகிய இரண்டு நெறிகளின் வாயிலாகவும் அடைகின்ற குறிக்கோள் ஒன்றேயாம். எனவே, அம்பிகைக்கு இந்நாமம் பொருத்தமாக அமைந்துள்ளது.

**दरस्मेर मुखाम्बुजा — தரஸ்மேர முகாம்புஜா** ९२४

ஆபத்துக்கேதுவான சூழ்நிலையிலும் புன்னகை 924
பூத்த தாமரை முகம் படைத்திருப்பவள்.

ஆபத்துக் காலத்தில் உள்ளத்தில் உள்ள குழப்பத்தைப் புறத்தில் முகம் நன்கு விளக்கிக் காட்டுகிறது. மாந்தர் படைத்துள்ள முகமலர்ச்சியும் புன்னகையும் பறந்தோடி விடும். அன்னை பராசக்தியோ எக்காரணத்தை முன்னிட்டாவது தான் படைத்துள்ள புன்முறுவலினின்று பிறழ்வதில்லை. ஆபத்து என்னும் சோதனைக்குரிய சூழ்நிலை, காலத்திலும் இடத்திலும் கட்டுண்டு கிடக்கும் எல்லையில் அடங்கிய உடலைப் படைத்துள்ள ஜீவர்களுக்கு உண்டு. அன்னவர்கள் நெருக்கடியின் விளைவு தங்களுக்குக் கேடாய் முடியும் என்பதை அறிய வருகிறார்கள். எனவே பொருந்தாத சூழ்நிலையில் பயப்படுவது உடல் எடுத்துள்ள உயிர்களின் போக்காகும். அன்னை பராசக்தியோ எல்லையில் அடங்காத அகண்ட வஸ்துவாக இலங்குகிறாள். குளம் ஒன்றின் ஜலத்தைக் கலக்கிச் சேறுபடியச் செய்யலாம். ஆனால் கடலைக் கலக்க யாருக்குமே இயலாது. அகண்டாகாரத்தில் விரிந்தோடும் அன்னை பராசக்தியின் பாங்கைப் பாழ்படுத்தவோ மாற்றியமைக்கவோ யாருக்குமே இயலாது. பண்டாசுரன் போன்ற கொடியவர்களைத் துடைத்துத் தள்ளும் தறுவாயிலும் அன்னையின் முகத்தில் திகழும் புன்னகை சிறிதளவும் மாறுவதில்லை. அற்ப மனம் படைத்திருப்பவர்கள் ஆபத்துக்கு அஞ்சுகின்றனர். ஆதலால் அவர்கள் முகம் கோணுகிறது. அகண்டாகாரத்தில் மனதை வியாபகப்படுத்துபவர்களுக்கோ அன்னையின் இனிய புன்முறுவல், முகவிலாசம் தானாக வந்தமைகிறது.

**कौलिनीकेवला — கௌலினீ கேவலா ९२५**

கௌலதர்மத்தையும் பரஞானத்தையும் உடையவள். 925

ஒரு நாட்டின் பண்பையும் பரிபாகத்தையும் காத்து வைத்திருப்பவர்கள் அந்நாட்டுக்குரிய குலதர்மத்தினின்று பிறழாது புனித வாழ்க்கை வாழ்ந்துவரும் பெண்களாம். கௌல மார்க்கத்தினின்று பிசகாதிருக்கும் மாதரசிகளைப் பார்ப்பது அன்னை பராசக்தியின் தரிசனத்துக்கு நிகர். அன்னவர்களின் எண்ணிக்கை சமுதாயத்தில் அதிகரிப்பதற்கேற்ப நாட்டில் சீலமும் நல்வாழ்வும் அதிகரிக்கின்றன. தூயபாரமார்த்திகப் பெருவாழ்வு வாழ்பவர்களே பரஞானத்துக்குத் தகுதி உடையவர்களாகிறார்

கள். கேவலம் என்னும் பதம் ஒப்புயர்வற்றது எனவும், சீர் தூக்க முடியாதது எனவும், விளக்குதற்கு அரியது எனவும், இரண்டற்றது எனவும் பொருள்படுகிறது. ஸதாசிவத்தோடு அபின்னமாயிருக்கும் பரதேவதையாகிய அம்பிகைக்கு இந்தப் பதம் முற்றிலும் பொருத்தமானது. பிரபஞ்சத்தின் பாங்குகள் அனைத்தும் அம்பிகையின் அகண்டநிலையில் ஒடுங்கிப் போகின்றன. முக்குணங்களும், கால தேச நிமித்தமும் ஆங்கு இல்லை. மனதினின்று உபாதிகளனைத்தையும் ஒதுக்கித் தள்ளிய ஆத்ம சாதகனுக்கே அம்பிகையின் இந்த மகிமை ஒருவாறு விளங்குகிறது. நிர்க்குண, நிருபாதிக சொருபத்தைச் சார விரும்பும் சாதகன் இந்நாமத்தின் உட்பொருளை ஆழ்ந்து தியானிக்க வேண்டும்.

**अनर्घ्यकैवल्यपददायिनी — அனர்க்யகைவல்யபததாயினீ ९२६**

மதிப்புப் போடமுடியாத பரஞானத்தை நல்குபவள். 926

நீர்த்துளி ஒன்று நிலத்திலே பலப்பல இடங்களில் வீழ்ந்தும், மீண்டும் ஆவியாகியும் படாதபாடுபடுகிறது. கடலில் விழும் நீர்த்துளியின் நிலையோ ஒப்புயர்வற்றதாகும். ஜீவாத்மன் பிரபஞ்சவாழ்வில் மேலானவைகளும் கீழானவைகளுமான உபாதிகளுக்கு உட்பட்டவனாய்ப் பிறவிக் கடலில் அலைந்து திரிகிறான். அவன் பரத்துக்குரியவனாகத் திருவருளின் துணைகொண்டு திருந்தியமைவானாகில் அவன் பெறும் பேறு ஒப்புயர்வற்றதாம். திருவாதவூரர் 'நாயினுக்குத் தவிசு இட்டு' என்று இயம்புகின்றார். கீழ்மையில் இருக்கும் மனிதன் பராசக்தியின் அருளால் சான்றோர் கூட்டத்தைச் சேர்ந்திருக்கும் தகுதி வாய்க்கப்பெறுவானாகில் அது பெரிய பேறாகும். பரத்திலே லயம் ஆகும் பாங்கைப் பெறுவானாகில் அதற்குமேல் அவன் அடையவேண்டிய உயர்ந்த நிலை ஏதுமில்லை.

பிரபஞ்ச வாழ்வில் உழன்று கிடக்கும் பக்தர்களைக் கிருபை கூர்ந்து அம்பிகை தனக்குரியவர்களாக மீட்டெடுத்துக்கொள்கிறாள். அச்செயலுக்கு இலக்காகும் ஆத்ம சாதகன் பாக்கியவானாகிறான். இது அன்னையின் திருவருளாம்.

**स्तोत्रप्रिया — ஸ்தோத்ரப்ரியா** ९२७

வணங்குவதில் விருப்பம் உடையவள். 927

வணங்குகிற ஒருவன் தனக்குத் தேவையானதை நாடுவது ஒருவகை வழிபாடு. இக்காமிய வழிபாட்டுக்கு மட்டும் உரியவர்களாக மக்களுள் பெரும்பான்மையோர் இருக்கின்றனர். கடவுளின் மகிமைகளை அறிந்து அவைகளை ரசிப்பது நிஷ்காமிய வழிபாடாகிறது.

குழந்தை ஒன்று தாயிடம் இன்னது வேண்டும் என்று கேட்பது காமிய வேண்டுதலாயினும் அதில் குற்றமில்லை. உலகனைத்தையும் ஈன்றெடுத்துள்ள அன்னை பராசக்தி தன் செல்வர்களுக்கும் செல்வியர்களுக்கும் தேவையானதைத் தந்தருளக் கடமைப்பட்டிருக்கிறாள். நச்சினார்க்கினியன் என்று இறைவன் போற்றப்படுகிறார். தன் குழந்தைகள் எதன் பொருட்டாவது தன்னை உபத்திரவப்படுத்துவதை முன்னிட்டுத் தாய் சலித்துக்கொள்வதில்லை. அதை இன்பமாக அவள் பொருட்படுத்துகிறாள். கேட்கும் குழந்தைகளிடத்தும் அதைக் கரவாது வழங்கும் தாயினிடத்தும் அன்பு வளர்கிறது. ஸ்தோத்திரம் பண்ணுவதால் அம்பிகையினிடத்து அன்பு வளர்ந்துகொண்டே போகிறது.

**स्तुतिमती — ஸ்துதிமதீ** ९२८

போற்றுதலுக்குரியவள். 928

பண்பாட்டிலும், ஆற்றலிலும், செயலிலும் உச்சநிலையில் இருப்பவள் அம்பிகை. பிரபஞ்சம் அனைத்தும் அவளுடைய கூறு கிறது. தெய்வீகப் பண்புகளில் அவளுக்கு மிக்கார் யாருமில்லை. பூமியில் புகழத்தக்க பொருளாக அன்னை பராசக்தி இலங்குகிறாள். தகுதியற்ற மூர்த்தியைப் பாராட்டுவது பொருள் சேராத புகழாகும். அதைப் பொருளற்றது என்று ஒதுக்குவதுமுறை. சத்தியத்தையே பேச ஆத்மசாதகன் கடமைப்பட்டிருக்கிறான். சத்தியத்தை எண்ணுவதன் வாயிலாகவும் இயம்புவதன் வாயிலாகவும் ஆத்மசாதகனுக்கு அந்தக்கரண சுத்தி உண்டாகிறது. தூயதாகத் திருந்தியமைந்த மனமே ஞானக்கண்ணாக வடிவெடுக்கிறது. நன்றாக விளங்குள்ள மேல் ஒன்றை மினுக்கிட்டால் முகத்தின் பிம்பத்தை அதில் காணலாம். அதே பாங்கில் வாய்மையின்

வாயிலாக மனம் தெளிவடைகிறது. தெளிந்த மனதில் தத்துவம் உள்ளபடி விளங்குகிறது. அன்னை பராசக்தியைப் போற்று வதன்மூலம் சாதகன் சத்திய விரதத்தில் நிலைபெற்றவனாகிறான். உள்ளன்போடும் உள்ளக் கசிவோடும் சாதகன் அம்பிகையைப் போற்றுவானாகில் பண்பாட்டில் அவன் விரைந்து முன்னேறு கிறான். இம்மேன்மைகளெல்லாம் அம்பிகையிடம் மிளிர்வதை உள்ளபடி எடுத்து இயம்புகிறவன் அவைகளைத் தானே அடை யப்பெற்றவனாகிறான். எனவே, அன்னை பராசக்தியின் மகிமை களைப் பாராட்டிப் போற்றுவது தலைசிறந்த ஆத்ம சாதனமா கிறது.

**श्रुतिसंस्तुतवैभवा — ச்ருதி ஸம்ஸ்துதவைபவா** ९२९

வித்யா சொரூபமான வேதமயமாய் மிளிர்பவள். 929

பிரபஞ்சத்தின் அமைப்பை உள்ளபடி அறிந்துகொள்வது அறிவு அல்லது வித்தை ஆகிறது. அகிலாண்டங்களின் ஒவ் வொரு பகுதியிலும் அன்னை பராசக்தியின் மகிமைகளே மிளிர்ந்து கொண்டிருக்கின்றன. அவற்றை உள்ளபடி ஓர்ந்து உணர்தல் அம்பிகையின் அனுபூதியைப் பெறுவதற்கு நிகராகிறது. சிறு வெல்லத்துண்டு ஒன்றை ரசிப்பதிலேயே தன் உயிரைக்கொடுக் கின்ற பாங்கில் எறும்பு ஒன்று மூழ்கியிருக்கிறது. உயிர்களனைத் துக்கும் இது பொருந்தும். ஏதேனும் ஓர் இந்திரியத்தின் வாயி லாக அன்னையின் மகிமைகளை உணர்ந்துகொள்ளும் ஜீவாத்மன் அன்னை பராசக்தியின் மகிமைகளிலேயே சொக்கியிருக்கிறான். இங்ஙனம் ஐந்து இந்திரியங்களும் அன்னையின் விபூதிகளை ரசித்து அவைகளில் லயப்படுவதற்குப் பயன்படுகின்றன. இந்திரியங் களுக்கப்பால் தூய அறிவைக்கொண்டு அன்னையின் மகிமைகளை அறிவது ஒப்புயர்வற்ற பேரனுபவமாம்.

**मनस्विनी — மனஸ்வினீ** ९३०

மனதைத் தனக்கே உரியதாய் வைத்திருப் பவள். 930

இன்ப துன்பங்களை உணரும் வல்லமை பெற்றுள்ள மனம் பேருயிர்களிடத்துத் தோற்றத்துக்கு வருகிறது. இன்பத்தை

நாடவும் துன்பத்தைத் தவிர்க்கவும் முயன்று வரும் உயிர்கள் அனைத்தும் தம் சுவாதீனத்தை இழந்து விட்டுப் பராதீனத்துக்கு ஆளாகின்றனர். இன்பம் தருகிற பகுதிக்கு உயிர் ஒன்று அடிமைப்படுகிறது. நெருக்கடி ஒன்றில் இச்செயல் வெறுப்பாக மாறியமைகிறது. துன்பம் தருபவைகளை வெறுக்கின்ற பாங்கில் உயிர்கள் பராதீனமாகின்றன. விருப்பு வெறுப்பினின்று விலகியிருப்பவர்களே முக்த புருஷர்கள் ஆகிறார்கள். 'யாதனின் யாதனின் நீங்கியான் நோதல் அதனின் அதனின் இலன்' என்பது மறைமொழி. இன்ப துன்பங்களால் தூண்டப்படும் உயிர்வகைகள் பிரபஞ்ச வாழ்க்கையில் சதா அல்லல்பட்டுக்கொண்டே இருக்கின்றன. அன்னை பராசக்திக்கோ பிரபஞ்சத்தில் எதனிடத்தும் விருப்பு வெறுப்பில்லை. தன் மனதுக்குத் தானே இறைவியாக அம்பிகை யாண்டும் இலங்கிக்கொண்டிருக்கிறாள்.

**मानवती — மானவதீ** **९३१**

பரந்த மனம் உடையவள். **931**

மனதை உடையவன் மனிதன். மனிதர்களின் பரிபாகத்துக்கேற்ற பலவிதமான மனப் பாங்குகளைக் காணலாம். மனதைப் பண்படுத்துதற்கேற்ப மனிதன் தரத்தில் மேலோங்குகிறான். மக்களுக்கிடையில் பிணக்கு வந்து விட்டால் அவர்கள் தம் பெருந்தன்மையை இழக்கிறார்கள். ஆனால் அம்பிகை எல்லாரிடத்திலும் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் மேன்மை படைத்தவளாகவே இருக்கிறாள். தன்னுடன் ஒத்திருப்பவர்களுக்கு ஆதரவும், ஒவ்வாதவர்களுக்கு இடைஞ்சலும் செய்வது மனிதன் போக்கு. அம்பிகையோ நல்லார், பொல்லார் ஆகிய அனைவருக்கும் ஒரே பாங்கில் ஆதரவு தருகிறாள்.

சான்றோர் செல்லும் செந்நெறியைப் பின்பற்றுவது மற்றவர்களின் கடமை ஆகிறது. சான்றோர்களுக்கே எவ்வழியில் செல்வது என்னும் தயக்கம் உண்டாகும்பொழுது பராசக்தியைச் சிந்தனை பண்ணினால் இன்ன போக்கில் நடந்துகொள்ள வேண்டும் என்னும் ஆணை உள்ளத்தினுள் உதிக்கிறது. அன்னையின் அந்த உத்தரவு ஒரு நாளும் பொய்யாகாது. யாண்டும் மேன்மை வந்தமைவது அன்னையின் மகிமையாம்.

**महेशी — மஹேசீ** ९३२

மஹேசுவரனுடைய சொரூபத்தில் இருப்பவள். 932

சுத்த சைதன்ய சொரூபிணியாகவே அம்பிகை யாண்டும் மிளிர்கின்ருள் என்னும் கோட்பாட்டைப் பிரபஞ்சத்தின் தோற்றம் ஆத்ம சாதகனுடைய உள்ளத்தில் பதிவு பண்ணுகிறது.

**मङ्गलाकृतिः — மங்களாக்ருதி:** ९३३

மங்களகரமான வடிவங்களில் இலங்குபவள். 933

உலகங்கள் அனைத்துமாகவும் உயிர்கள் அனைத்துமாகவும் இருப்பவள் அம்பிகை. புறத்தில் அன்னையின் வடிவங்களே காட்சி கொடுக்க வேண்டுமானல் சாதகர்கள் தங்கள் அகத்திலே அவளுடைய சான்னித்தியத்தை உணரவல்லவர்களாக வேண்டும். எனவே, அமங்களமானது எதுவுமே அவனுக்கு இல்லை. தங்கத்தால் செய்யப்பட்ட நகைகள் யாவும் தங்கமயமாய் இருப்பது போன்று பிரபஞ்சம் முழுவதும் பக்தன் ஒருவனுக்கு அம்பிகையின் சொரூபமேயாம். உலக வாழ்க்கையில் உழல்வதற்கிடையில் மங்களம், அமங்களம் என்று முரண்படும் இரண்டு காட்சிகள் உள்ளன. மற்று, அன்னையின் அருளுக்குப் பாத்திரமாகும் சாதகனுக்கோ காட்சி தரும் அனைத்தும் அன்னையின் சொரூபங்களாம். அத்தகைய பாங்கில் மனம் திருந்தி அமையப்பெறுகின்றவர்களே நல்ல ஆத்ம சாதகர்கள். அன்னவர்களே பிரபஞ்சத்தில் உள்ள அனைத்தையும் அம்பிகையின் மங்களமான 'வடிவங்களாகக் காணும் பரிபாகத்தைப் பெறுகின்ருர்கள்.

**विश्वमाता — விச்வமாதா** ९३४

அண்டங்கள் அனைத்துக்கும் தாயாய் இருப்பவள். 934

அம்மையப்பனை இலங்குகின்ற பொருள் உயிர்களனைத்துக்கும் தாயாக இருந்து பெற்றெடுத்துப் பேணி வருவது பாராட்டுதற்குரிய பெரிய செயலாம். பிரபஞ்சத்தில் எந்த உயிர்வகையை ஆராய்ந்து பார்த்தாலும் பராசக்தியானவள் விசுவமாதாவாக வடிவெடுத்து உயிர்வகைகளைப் பேணி வருவது போற்றுதற்குரிய பெரிய செயலாம்.

**जगद्धात्री** — **ஜகத்தாத்ரீ** ९३५

உலகனைத்தையும் தாங்கியிருப்பவள். 935

வெட்டவெளியில் எண்ணிக்கையிலடங்காத கோளங்கள் உலாவிக்கொண்டிருக்கின்றன. அவைகளின் நடமாட்டத்தில் ஓர் ஒழுங்குப்பாடு தென்படுகிறது. ஆகர்ஷணசக்தி என்பது அன்னையின் அருளாகிய புறத்தோற்றமாம். பூமி தன்னைத்தானே சுற்றிக்கொண்டு சூரியனையும் சுற்றி வருகிறது. நாம் வாழும் நிலவுலகம் முந்நூற்று அறுபத்தைந்தே கால் நாட்களில் அது சூரியனை ஒரு தடவை பிரதக்ஷணம் பண்ணுகிறது. சந்திரன் பூமியைச் சுற்றி வருவதற்கு ஒரு மாதம் எடுத்துக்கொள்கிறது. இந்தப் பாங்கில் அண்டங்கள் அனைத்தும் ஒழுங்காக இயங்கி வருகின்றன. அவளை ஜகத்தைத் தாங்குபவள் என்பதில் பொருள்மிகப் புதைந்து இருக்கிறது.

**विशालाक्षी** — **விசாலாக்ஷீ** ९३६

அகன்ற கண்களை உடையவள். 936

காசி க்ஷேத்திரத்தின் கண் எழுந்தருளியிருப்பவள் அன்னை விசாலாக்ஷீ. அன்னையின் கண் பார்வைக்கு எட்டாதது உலகில் ஏதுமில்லை. அண்டங்கள் அனைத்தும் அவள் கண்காணிப்பிலேயே இருந்து வருகின்றன. பிரளய காலத்தில் அவை யாவும் தோற்றத்தில் இல்லாது மறைந்துபட்டுப் போகின்றன. அன்னையின் மேற்பார்வையே அச்செயலுக்கும் பிரமாணம். ஜகத்தின் தோற்றம், இருப்பு, ஒடுக்கம் ஆகிய அனைத்தையும் அன்னை பார்த்துக்கொண்டே இருக்கிறாள். ஆகையால் விசாலாக்ஷி எனப் பெயர் பெறுகின்றாள்.

**विरागिणी** — **விராகிணீ** ९३७

வைராக்கியமே வடிவெடுத்தவள். 937

தன்னிடத்தில் இல்லாத ஒன்றைப் பெறவேண்டும் என்று ஆசைப்படுவது ராகம். புதிதாக அகப்பட்டபொருள் ஒன்றில் பற்றுதல் வைப்பது ராகம். அன்னை பராசக்திக்கு அன்னியமாகப் பிரபஞ்சத்தில் ஏதுவும் இல்லை. தன்னிடத்தில் இல்லாத ஒன்றைப் பெறவேண்டும் என்பதும் அவ்வம்பிகைக்கு இல்லை; புதிய

தாகப் பெறுவதற்கும் ஏதும் இல்லை. எனவே பற்றுதல் வைத்தல் என்னும் செயலுக்கும் அம்பிகைக்கும் வெகுதூரம்.

**प्रगल्भा — ப்ரகல்பா** ९३८

துணிச்சல்மிக வாய்க்கப்பெற்றவள். 938

மனிதர்களின் மன அமைப்பில் தாரதம்மியம் உண்டு. அதற்கேற்ப மக்களுக்கிடையில் உயர்வும் தாழ்வும் வந்தமைகின்றன. மனிதனிடத்துப் புதைந்துள்ள அளப்பரிய ஆற்றலை வளர்ப்பது வாழ்வின் குறிக்கோள். துணிச்சல் என்பது மனதில் அமைந்துள்ள தெய்விக சம்பத்தாம்.

தைரியம் படைத்திருப்பவன் தூக்கி விளையாற்றுகிறான். அவனுடைய துணிச்சலின் முன்னிலையில் எதிரியின் முயற்சி பயனற்றதாய்ப் போகிறது. தெய்விக சம்பத்தாகிய தைரியத்தை வளர்ப்பது தலைசிறந்த அம்பிகை வழிபாடாம்.

**परमोदारा — பரமோதாரா** ९३९

மேலான மகிழ்வை ஊட்டுபவள். 939

இயற்கையின்கண் எல்லா இடங்களிலும் அம்பிகையின் பேரருள் பொலிகின்றது. ஜீவர்களின் முயற்சிக்கேற்பக் காரியம் கைகூடுகிறது. அன்னையின் அருள் இருக்கும்பரியந்தம் அதை அடையப்பெற்ற மாந்தரும் மகிழ்வுற்று இருக்கின்றனர். மற்ற உயிர்வகைகளும் பிரபஞ்சம் எங்கும் இன்புற்று வாழ்ந்து வருவதைக் காணலாம். உயிர்கள் அனைத்தும் இவ்வையக வாழ்வில் பரமதிருப்தி அடைந்திருக்கின்றன. இடையிடையே இடைஞ்சல்களும் துன்பங்களும் உயிர்களுக்கிடையில் வந்தமைகின்றன என்றாலும் அந்த இன்னாத சூழ்நிலை விரைவில் மறைந்துபட்டுப் போகிறது. ஆனந்தமும் திருப்தியும் இனிமையும் எங்கும் காட்சி கொடுத்து வருகின்றன. அன்னையைச் சார்ந்திருக்கும் காலமெல்லாம் உயிர்வகைகள் பரம உதாரர்களாக வாழ்ந்து வருவது திண்ணம்.

**परामोदा — பராமோதா** ९४०

நறுமணத்துக்கும் கீர்த்திக்கும் இருப்பிடமாய் உள்ளவள். 940

'புஷ்பத்தில் நான் நறுமணமாய் இருக்கிறேன்' என்று கீதையில் கிருஷ்ணபரமாத்மா கூறுகிறார். இது அம்பிகைக்கும் பொருத்தமானதே. அவளுடைய விபூதிகள் அனைத்தும் பிரபஞ்சமெங்கும் வியாபித்திருக்கின்றன. மணம் என்பது மண்ணின் தன்மாத்திரை ஆகும். துர்நாற்றம் எடுக்கக்கூடிய கெட்ட வஸ்துக்களை மண்ணில் புதைத்து வைத்தாலும் காலக்கிரமத்தில் அது நறுமணமாகத் திகழ்கிறது. இது அம்பிகையின் மகிமையாம். நறுமணத்தை நுகர்வதும் ஒருவித வழிபாடாகிறது. ஆலயங்களில் சாம்பிராணி தூபம் போடும்பொழுது அதை நுகர்வதால் அம்பிகையிடம் பக்தி ஓங்குகிறது.

**मनोमयी — மனோமயீ** ९४१

மனதாக வடிவெடுத்திருப்பவள். 941

ஜீவாத்மன் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்து ஞானேந்திரியங்களின் வாயிலாகப் புறவுலகை அறிந்து கொள்கின்றான். அவற்றின் செயல்களுக்கெல்லாம் மனம் முதற் காரணமாயிருக்கிறது. இந்திரியங்களைப் பயன்படுத்துவதில் உயிர்களுக்கிடையில் வேற்றுமை மிக உண்டு. சிற்றுயிர்களிடம் மனது இன்பதுன்பங்களையும் அனுகூலமான, பிரதிகூலமான சூழ்நிலைகளையும் அறிந்துகொள்ளுதற்கு மட்டும் பயன்படுகிறது. மனிதர்களைப் பொறுத்தவரை ஒவ்வொருவனுக்கும் ஒவ்வொரு வித மனப்பாங்கு உண்டு. கசப்புடைய பண்டங்களை வெறுப்பது பொதுவாக மக்களுடைய இயல்பு. மற்று, தித்திப்புப் பண்டங்களை வெறுப்பவர்களும் இருக்கிறார்கள்.

இருட்டு நேரத்தில் பாதையோரத்தில் தென்பட்ட வடிவம் ஒன்றை ஒரு திருடன் போலீஸ்காரனாகவும், போலீஸ்காரன் திருடனாகவும் பொருள்படுத்தினர். பயங்கொள்ளி ஒருவன் அதைப் பேயோ பிசாசோ என்று கருதினான். உண்மையில் அது மரக்கட்டை அதைப் பலர் பலவிதமாக வியாக்யானம் செய்தது அவரவர் மனப்பான்மைக் கேற்றபடியேயாம்.

உடல் வாழ்க்கை என்னும் கோட்டைக்குள்ளிருக்கும் ஜீவாத்மன் மனம் என்னும் மடக்குப் பாலத்தைப் பயன்படுத்திப் புற உலகுடன் தொடர்புகொள்கிறான். உறக்கத்தின் வாயிலாக மனம்

உள்ளே ஒடுங்கிவிடுமாகில் புறவுலகம் இருந்தும் உறங்குபவனுக்கு அது மறைந்துபட்டுப்போகிறது. மனதின் பாங்கு இத்தகைய தாம். அணிந்துகொள்ளும் கண்ணுடியின் நிறத்துக்கு ஏற்ருற்போல் புறவுலகம் தென்படுவதற்கு நிகராக மனது எத்தகையதோ அத்தகையவனுக மனிதன் அமைகிருன்.

மனம் திருந்தியமைவதற்கேற்பத் தென்படுகின்ற உலகமும் மனிதனுடைய காட்சியில் மாறியமைகின்றது. மானுடன் ஒருவனுக்குப் புறவுலம் எத்தகைய காட்சி அளிக்கின்றதோ அதுவே அவன் தன் மனதின் கண் அடைந்துள்ள பரிபாகமாம். அற்புதமான மனம் என்னும் இக்கருவியைத் திருத்தியமைப்பது மனிதனின் குறிக்கோளாம். அவனுக்கு மனோமயமாயுள்ள அம்பிகை முன் மாதிரியாக அமைந்துள்ளாள். தூய மனம் ஆசாபாசங்களுக்கு அடிமைப்படுவதில்லை. விருப்பும் வெறுப்பும் தூய மனதுக்கு இல்லை. சோம்பலையும் சோகத்தையும் அதனிடத்துக் காண முடியாது. ஸ்படிகம் போன்று யாண்டும் தெளிந்த நிலையில் நல்ல மனம் இருக்கிறது. பொருத்தமாக அமைக்கப்பட்ட தராசு உள்ளபடி எடையைக் காட்டுவதுபோன்று நல்ல மனம் புறப்பொருள்களை ஐயம், திரிபு அற உள்ளபடி விளக்கிக் காட்டுகிறது. தூய மனம் படைத்தவளாக அன்னை பராசக்தி இருந்துகொண்டு மக்கள் தங்கள் மனதைப் பண்படுத்தும் வழியைக் காட்டியருள்கின்ருள். ஆதலால் அவள் மனோமயி என்று போற்றப்பெறுகிருள்.

**व्योमकेशी — வ்யோமகேசீ** ९४२

வ்யோமகேசனுகிய சிவனுருடைய சக்தி சொரூபமாயிருப்பவள். 942

சொரூபத்தில் ஒன்ருகச் சக்தியும் சிவனும் அமைந்துள்ளனர். அகிலாண்டங்கள் அனைத்தின் சொரூபமாக அன்னை பராசக்தி இருப்பதால் அவள் யாண்டும் விஸ்வ வடிவத்தில் இலங்குகின்ருள். அதற்கு மூலப்பொருள்களாகப் பஞ்ச பூதங்கள் அமைந்துள்ளன. அவற்றுள் ஆகாசம் நீக்கமற எங்கும் வியாபகமாயுள்ளது. சூட்சுமமாகிய அது அம்பிகையின் கூந்தலாகக் கருதப்படுகிறது. விசுவரூபம் படைத்துள்ள சொரூபமாக அம்பி

கையைக் கருதும்பொழுது ஆகாசம் அவளுக்குக் கூந்தலாகிறது. மண் அவளுடைய திருவடியாக அமைகின்றது. அம்பிகையே யாவுமாய் இலங்குவதால் ஆத்ம சாதகனுக்குப் புலனுகின்ற பொருள்கள் அனைத்தையும் அம்பிகையின் சொரூபமாகப் பாவிப்பது நல்ல ஆத்ம சாதனமாகிறது.

**विमानस्था** — விமானஸ்தா ९४३

விமானத்தில் வீற்றிருப்பவள். 943

ஜீவாத்மாக்களின் சரீரங்கள் விமானங்களாகப் பயன்பட்டு வருகின்றன. அவை எல்லாவற்றிலும் அன்னை பராசக்தி வீற்றிருந்துகொண்டு அந்த ஜீவனுடைய பிரபஞ்ச வாழ்விற்கு அதிஷ்டான தெய்வமாக இலங்கி வருகின்ருள். இக்கோட்பாட்டைக் கருத்தில் ஏற்றுக்கொள்ளும் ஆத்ம சாதகனின் பொறுப்பு மிகப் பெரியது. அவனுடைய சரீரம் அவனுக்குச் சொந்தமானதன்று. ஜீவர்கள் பண்பாடு அடைதற் பொருட்டு அவர்களை ஒவ்வொரு சரீரத்திலும் தாற்காலிகமாக வாழ்ந்திருக்க அன்னை பராசக்தி அனுமதித்திருக்கிருள். அன்னை பராசக்திக்குரிய விமானம் அவனிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. தூய நிலையில் அதைக் காப்பாற்றி வைப்பது அவன் கடமை. அதன் மூலமாகத் தான் நிறைவேற்றுபவைகளையெல்லாம் அம்பிகையின் கிருத்தியங்கள் என்று அவன் கருதவேண்டும். அந்தச் சாதனத்தில் உறுதி பெறுதற்கேற்ப அகங்காரமும் மமகாரமும் அவனைவிட்டு அகன்று போகின்றன.

விசேஷமாகப் பக்தர்களைப் பாதுகாப்பதில் கருத்துடையவளாக அம்பிகை இருக்கின்ருள். இவ்வாறு விமானம் என்னும் சொல் பொருள்படுகிறது. பக்தர்களைக் காப்பாற்றுவது அம்பிகையின் கடமையாகிறது. அகங்கார மமகாரமற்ற குழந்தைகளைப் பராமரிப்பது தாயின் பொறுப்பாகிறது. தன் பக்தர்களைக் காப்பாற்றுவதில் அம்பிகை தனிக் கருத்துச் செலுத்துகின்ருள். திருநாவுக்கரசர், பிரஹ்லாதன் போன்ற பக்தர்கள் எத்தனையோ இன்னல்களுக்கு உட்பட்டார்கள். அவற்றை இடைஞ்சல்களாக அவர்கள் கருதவில்லை. ஏனென்ருல் அவர்கள் மனம் பரநாட்டத்திலேயே முற்றிலும் லயித்திருந்தது. அத்தகைய அனன்ய பக்தி

வாய்க்கப்பெற்றவர்களுக்குக் கேடு வராது காப்பாற்றுவது அன்னையின் பொறுப்பாயிற்று. அன்னையின் இப்பொறுப்பு காலத்தைக் கடந்துள்ள ஓர் அருள் நிலையாம்.

மானம் என்பது மனதில் வியவகாரச் செயல் ஆகும். விமானம் என்பது பிரகிருதி சம்பந்தமான வியவகாரங்கள் அனைத்துக்கும் அப்பாற்பட்டது. அது மனதற்ற பரப்பிரம்ம போதமாகிறது. பிரபஞ்சத்தின் செயல்களுக்கெல்லாம் அப்பாற்பட்ட பாரமார்த்திகப் பெருநிலையில் நன்கு வீற்றிருக்கிருள் அம்பிகை. தன் மனதை அம்பிகையின் அருளால் ஒதுக்கித் தள்ளி விட்டு இந்த அதீத நிலையை அடைவது தீவிர ஆத்ம சாதகனுக்குச் சாத்தியம் என்பது இந்நாமத்தின் கருத்து.

**वज्रिणी — வஜ்ரிணீ** ९४४

வஜ்ராயுதத்தை உடையவள். 944

'ஆயுதங்களுள் நான் வஜ்ராயுதமாய் இருக்கிறேன்' என்று கீதையில் கிருஷ்ணபரமாத்மா பகர்கிருர். மனிதன் தன்னை மேலோனுகத் திருத்தியமைத்துக் கொள்ளும் செயலுக்குச் சின்னமாய் வஜ்ராயுதம் உள்ளது. மனிதன் பண்பாட்டில் மேலோங்கி நிறை மனிதன் ஆகின்றபொழுது அவன் வஜ்ராயுதமாகத் திருந்தியமைகிருன்.

தேவர்கள் எல்லாரும் அசுரர்களிடம் பெரிதும் தோல்வியடைந்து வந்தபொழுது பிரம்மதேவனின் கூற்றுப்படி அவர்கள் பிறவியிலிருந்தே பிரம்மச்சரிய விரதத்தினின்று பிறழாதிருந்த ததீசி மஹரிஷி மனமுவந்து அளித்த அவருடைய சரீரத்தின் எலும்பைக்கொண்டு வஜ்ராயுதத்தை அமைத்துக்கொண்டனர். அசுரர்களைத் தோற்கடிக்க அந்த ஆயுதம் ஒன்றே உற்ற உபாயமாயிற்று. பிறவியிலிருந்தே நைஷ்டிக பிரம்மச்சாரியாக ஒருவன் வாழ்ந்து வருவானுகில் அலாதியான தெய்வீக ஆற்றல்கள் அவனிடத்து வடிவெடுக்கின்றன. உலகிலுள்ள கேடுகள் பலவற்றை அகற்றுவது பண்பாடே வடிவெடுத்துள்ள அன்னவனுக்குச் சாத்தியமாகிறது. சீலத்திலும் ஒழுக்கத்திலும் மேலோனுவதற்கு ஏற்ப ஒருவன் தீமைகளைத் தகர்த்துத் தள்ளும் வஜ்ராயுதமாகத் திருந்தியமைகிருன்.

வஜ்ராயுதம் கூர்மையில் க்ஷவரக்கத்திக்கும் வலிமையில் கோடரிக்கும் நிகரானது. எக்காரணத்தை முன்னிட்டும் அதன் கூர்மை மழுங்கிப் போவதில்லை. அதே போன்று பண்பட்ட மானுடன் தன் தூய்மையினின்று யாண்டும் பிசகாதிருக்கிறான். வாழ்க்கை சம்பந்தமான நுட்பங்களையெல்லாம் அன்னவன் அறிந்துகொள்கிறான்; கஷ்டமான செயல்களையும் விளையாட்டுப் போன்று செய்து சாதிக்கிறான். வாழ்வாங்கு வாழ்வதன் விளைவாக ஒருவன் தன்னை வஜ்ராயுதமாகத் திருத்தியமைத்துக் கொள்ள முடியும். வஜ்ராயுதம் போன்ற பெருமக்களே சமுதாயத்தில் உள்ள கேடுகளை அகற்றவல்லவர்களாகின்றனர். வஜ்ராயுதமயமாய் இலங்கும் அம்பிகையின் திட்டம் மக்களை அறிவும் வல்லமையும் வாய்ந்த மேலோர்களாகத் திருத்தியமைப்பதேயாம். பராசக்தி உபாசனையை மக்கள் முறையாகச் செய்தல் வேண்டும். அப்பொழுது அவர்கள் ததீசி மஹரிஷி போன்று தவ சிரேஷ்டர்களாகத் திருந்தியமைவார்கள் என்னும் தத்துவத்தை வஜ்ரிணீயாகிய அம்பிகை விளக்கி வருகின்றாள்.

**वामकेश्वरी** — வாமகேச்வரீ ९४५

வாமகேச்வரம் என்னும் தந்தர சாதனத்தின் அதிஷ்டான தேவதையாயிருப்பவள். 945

மக்களுக்குப் பொருந்தாத வழிபாட்டு முறை எனக் கருதப்படும் வாமாசாரத்தையும் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் வெற்றிகரமாக அனுஷ்டித்திருக்கிறார். அவர் அனுஷ்டித்த ஒவ்வொரு மார்க்கத்திற்கும் ஏற்ற குரு தெய்வாதீனமாகத் தாமாகவே பரமஹம்சருக்கு வந்து வாய்த்தனர். வாமாச்சார அனுஷ்டானத்தில் சாந்த பாவம், வீர பாவம், திவ்விய பாவம் என்னும் மூன்று முறைகள் உள்ளன. அவற்றுள் வீர பாவமும், திவ்விய பாவமும் முற்றிலும் வாமாச்சாரத்துக்கு உரியன. இரண்டு ஆசாரங்களுக்கும் பொதுவானது சாந்த பாவம். அம்பிகையின் திருவருளால் அமைந்துள்ள சாதன வகைகளுள் வாமாச்சாரமும் ஒன்று என்பதை உலகுக்கு எடுத்துக்காட்டும் வகையில் அன்னை பராசக்தி தம்மைக் கருவியாக வைத்துக்கொண்டு வாமாச்சாரத்தை நிறைவேற்றி வைத்தாள் என்பது ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய கருத்து. ஆயினும் தம் சிஷ்யர்களுள் யாரும் அதைக் கையாளலாகாது

என்று அவர் தடை செய்து விட்டார். ஒரு வீட்டிற்கு அமைந்துள்ள புழைக்கடைக்கு நிகரானது வாமாச்சாரம் என்று அவர் கருதினர்.

வாமகேச்வரம் என்னும் நூல் விரிவாக இந்த அனுஷ்டானத்தை விளக்குகிறது. ஆகலால் அன்னை பராசக்தி தானே அந்தச் சாஸ்திர மயமாக அமைந்திருக்கிருள் என்பது இந்நாமத்தின் கருத்து.

**पञ्चयज्ञप्रिया** — பஞ்ச யக்ஞப்ரியா ९४६

ஐம்பெரும் வேள்விகளில் விருப்பம் உடையவள். 946

பிரஜைகள் முன்னேற்றம் அடைவதற்காக அவர்களைப் படைத்த பிரஜாபதி யக்ஞத்தையும் சிருஷ்டி பண்ணினர். பிறர்க்கென வாழ்பவனே த்விஜன் அல்லது இரு பிறப்பாளனுகிருன். தனக்கென வாழ்பவன் மக்களுள் அதமன் ஆவான்.

தேவயச்ஞம், ரிஷியக்ஞம், பித்ருயக்ஞம், நரயக்ஞம், பூதயக்ஞம் என்பவை பஞ்சமஹா யக்ஞங்களாகின்றன. தியானம், ஜபம், போற்றுதல் ஆகியவற்றின் வாயிலாகக் கடவுள் வழிபாடு பண்ணுவது தேவயக்ஞம். மனது எளிதில் துருப்பிடிக்கும் தாமிரப் பாத்திரம் போன்றது. முறையாகக் கடவுள் வழிபாட்டை நாள்தோறும் செய்யாவிட்டால் மனம் துருப்பிடித்துப் போகும்.

தீர்க்கதரிசிகளும் சான்ருேர்களும் ரிஷிகள் என அழைக்கப் பெறுகின்றனர். அவர்கள் இயற்றியுள்ள நூல்களில் கடவுள் தத்துவமும் பெருவாழ்வுக்குரிய தத்துவமும் புதைந்துள்ளன. அந்த மேலான நூல்களைப் பக்தியோடும் சிரத்தையோடும் வாசிப்பதால் மனம் மேன்மையில் ஊறி வளர்கிறது. இதுவே ரிஷியக்ஞமாகும். இதற்குப் பிரம்ம யக்ஞம் என்றும் ஒரு பெயருண்டு. பிரம்மதேவன் நல்லார்களின் வாயிலாக உலகுக்கு நலனை வழங்கி வருகிருன்.

பெற்ருேரைப் பேணுதல் பித்ரு யக்ஞம் ஆகிறது. குஞ்சுகள் பறக்கக் கற்றுக்கொண்டவுடன் தாய்ப்பறவையிடமிருந்து பிரிந்துபோகின்றன. மக்கள் அங்ஙனம் செய்யலாகாது. காயத்தால் பெற்ருேர்களுக்குப் பணிவிடை செய்ய வேண்டும். மரணத்தின் வாயிலாக உடல் மறைந்துபட்டுப்போன தாயும் தந்தையும்

எந்த உலகில் இருந்தாலும் அவர்கள் நலமுற்று இருப்பார்களாக என்று எண்ணுகின்ற நல்ல எண்ணமும் பித்ரு யக்ஞம் எனப் பெயர் பெறுகிறது.

நரயக்ஞம் என்பது மானுட சேவையாம். மனிதனை மனிதன் கண்ணியப்படுத்தக் கடமைப்பட்டிருக்கிறான். பிறரைப் பெருமைப் படுத்துபவன் தானே பெருமைக்குரியவனாகிறான். நரர்களை நாராயண சொரூபங்களாகக் கருதி அவர்களுக்குப் பணிவிடை பண்ணவும் அவர்களை முன்னணிக்குக் கொண்டுவரவும் மேல்நிலையில் உள்ளவர்கள் கடமைப்பட்டிருக்கிறார்கள். பரமஹம்சதேவர் தீண்டத் தகாதவர்கள் என்று கருதப்பட்ட சேரி மக்களை அம்பிகையின் குழந்தைகளாக எண்ணிப் பணிவிடை பண்ணினார். அவர்களுக்காகக் காந்தியடிகள் தம் இன்னுயிரையும் தியாகம் செய்தார். அப்பெருமக்கள் காட்டியுள்ள நன்னெறியை நாமும் கடைப்பிடிக்கவேண்டும்.

மனித இனம், விலங்கு இனம், பறவை இனம் ஆகியவை வாழ்க்கையில் ஒன்றோடொன்று இணைந்திருக்கின்றன. ஆகையால் எவ்வுயிர்க்கும் மனிதன் தீங்கு செய்யலாகாது. கால்நடைகளை மக்களுக்கு நிகராகக் கருதி நன்கு பேணவேண்டும். இது பூத யக்ஞம் ஆகும்.

இந்த ஐம்பெரும் வேள்விகளை முறையாக நிறைவேற்றுதல் அன்னை பராசக்தியின் சீரிய வழிபாடாகிறது.

**पञ्चप्रेत मञ्चाधिशायिनी — பஞ்சப்ரேத மஞ்சாதிசாயினீ ९४७**

ஐந்து பிரேதங்களாலாகிய பீடத்தில் வீற்றிருப்பவள். 947

பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், ஈசானன் ஆகிய நான்கு மூர்த்திகள் கால்களாகவும் சதாசிவம் பலகையாகவும் அமைந்துள்ள பீடத்தில் அம்பிகை வீற்றிருக்கின்றாள். ஆத்ம சாதகன் ஒருவன் தன் இயல்பிற்கு ஏற்ப மூர்த்திகள் யாரேனும் ஒருவரை தன் இஷ்ட தேவதையாகப் பாவித்துக்கொள்ளலாம். அதனிடத்து அலாதிப் பற்றுதல் வருவது முற்றிலும் அவசியம்.

குழந்தைப் பருவத்திலிருக்கும் ஆத்ம சாதகன் முதலில் புராணங்களைப் படிக்கக் கடமைப்பட்டிருக்கிறான். வளர்ந்து

வரும் குழந்தை ஒன்றுக்கு முதல் மூர்த்தியாய் இருப்பவள் தாய். தாய்ப்பற்று இன்னதென்று அறியாத அனாதைக் குழந்தைக்கு மேலாம் பண்புகள் வந்து அமையமாட்டா. தாய்ப்பற்று ஒன்றே ஏனையப் பற்றுதல்களுக்கும் பண்புகளுக்கும் மூல காரணமாகிறது. ஆரம்ப சாதகன் தன் வழிபடு தெய்வத்திடம் வைக்கின்ற பற்றுதல் குழந்தை பூணும் தாய்ப்பற்றுதலுக்கு நிகரானது. அந்தப் பற்றுதலைப் பெரிதாக்குதல் பொருட்டே ஒவ்வொரு புராணமும் தான் எடுத்துக்கொண்ட மூர்த்தியை மற்றத் தேவர்களுக்கெல்லாம் மேலானவர் என்று சிலாகித்துச் சொல்கிறது.

பஞ்ச மூர்த்திகளைப் பராசக்திக்குப் புறம்பானவர்களாக வைத்துக்கொண்டால் அவர்கள் பிரேதத்துக்கு நிகராகின்றனர். மின் விளக்கு, மின் விசிறி, மின் ஒலி பெருக்கி, மின் அடுப்பு, மின் ரெப்ரிஜிரேட்டர் ஆகிய ஐந்து கருவிகளுக்கும் மின் விசையானது ஒரே இடத்திலிருந்து வருகிறது. விசை வராவிட்டால் அவை ஐந்தும் செயலற்றுப் போகின்றன. ஆத்ம சைதன்யமாக இலங்கும் அன்னை பராசக்தி ஐந்து மூர்த்திகளுடன் ஐந்துவித மகிமைகள் வாய்க்கப்பெற்றவளாக மிளிர்கிருள். சக்தியிடமிருந்து பிரியும் சிவம் சவமாகப் போகிறது.

சக்திக்கு உள்ள சிறப்பைச் சாதகன் அறிந்துகொள்ளும் பொருட்டு அமைந்துள்ள இந்நாமத்தின் உட்பொருளைத் தியானிப்பதற்கேற்ப சாதகனிடத்து சைதன்யம் ஓங்குகிறது.

## पञ्चमी — பஞ்சமீ ९४८

ஸதாசிவத்தின் சக்தி சொரூபமாக உள்ளவள். 948

ஆதிசக்தியும் முழுமுதற் பொருளும் ஒன்றே. தக்ஷிணாச்சார ஐதிகப்படி பஞ்ச கோசங்கள், பஞ்சப் பிராணன்கள், பஞ்சேந்திரியங்கள், பஞ்சயக்ஞங்கள் ஆகியவைகளாகவும் அன்னை பராசக்தி அமைந்திருக்கிருள் என்பது தேற்றம்.

## पञ्चभूतेशी — பஞ்சபூதேசீ ९४९

ஐம்பூதங்களின் தலைவியாயிருப்பவள். 949

அன்னை பராசக்தி பிரபஞ்சமாகத் தோன்றி வரும்பொழுது தானே ஐம்பூதங்களாக வடிவெடுக்கின்ருள்; அவைகளைத் தானே ஆண்டும் வருகிருள். சக்தியும் சிவமும் ஒன்று. செயல்படுகிற

பகுதி சக்தி எனவும் அதற்கு ஆதாரமாய் இருக்கும் பகுதி சிவம் எனவும் இயம்பப்படுகின்றன. ஆதாரமற்ற ஆதேயமும் ஆதேய மில்லாத ஆதாரமும் பொருளற்றவை.

காஞ்சியில் மண்ணலும், திருவானைக்கோவிலில் நீராலும், திருவண்ணமலையில் நெருப்பாலும், காளஹஸ்தியில் காற்ருலும், சிதம்பரத்தில் ஆகாசத்தாலும் வடிவெடுத்துள்ளனவாகச் சிவ லிங்கங்கள் அமைந்துள்ளன. அம்பிகைக்குப் புறம்பாகப் பிர கிருதி ஏதுமில்லை. புலப்படுகின்ற அனைத்தையும் பரதேவதை மயமாகப் பாவித்து வணங்குதல் உசிதம்.

பொருள் ஒன்ருகவும் வடிவங்கள் இரண்டாகவும் அமைந் துள்ள மஹாவிஷ்ணுவும் பராசக்தியும் தமையனும் தங்கையுமாக இலங்குகின்றனர். அம்பிகை தன் தமையனல் பஞ்சரத்னமாலை யொன்று அணிவிக்கப் பெற்றிருக்கிருள். பவளம், மாணிக்கம், மரகதம், இந்திர நீலம், வைரம் ஆகியவற்றைக்கொண்டு அம் மாலை அமைந்துள்ளது. இவை ஐந்தும் பஞ்ச பூதங்களினின்று தோன்றிவந்துள்ளன. இக்காரணத்தை முன்னிட்டும் அம்பிகைக் குப் பஞ்சபூதேசீ என்னும் பெயர் வந்துள்ளது.

**पञ्चसङ्ख्योपचारिणी — பஞ்சஸங்க்யோபசாரிணீ** ९५०

ஐந்துவிதமான திரவியங்களைக்கொண்டு உபசரிக்கப்படுகிறவள். 950

அன்னை பராசக்தி வழிபாட்டுக்கு மிக எளியவளாகின்ருள்; 'அவளருளாலே அவள் தாள் வணங்கி' என்று இயம்புவது பொருத்தமானது. இயற்கையில் அகப்படுகின்ற தூய்மையான ஏதேனும் ஐந்து பொருள்களைத் தேர்ந்தெடுத்து வைத்துக் கொண்டு அவளை வணங்கலாம். சந்தனம், புஷ்பம், சாம்பிராணி தூபம், தீபம், படைத்தற்குரிய தூய்மையான நைவேத்திய உணவு ஆகியவற்றைச் சேகரிப்பது எல்லாருக்கும் சாத்தியம். பக்தி நிறைந்த தூய மனதுடன் அவைகளை ஆயத்தப்படுத்தி அம்பிகையை ஆராதிக்கவேண்டும் என்பது இந்நாமத்தின் உட்கருத்து.

**शाश्वती — சாச்வதீ** ९५१

யாண்டும் நிலைத்திருப்பவள். 951

அம்பிகை ஒரு காலத்தில் இருந்து இன்னொரு காலத்தில் மறைந்துபட்டுப் போகிறவள் அல்லள். காலாதீதத்தில் அவள் நிலைத்திருக்கிருள். அவள் ஓரிடத்தில் இருந்து மற்றோரிடத்தில் இல்லாது போகின்றவளும் அல்லள். ஓரிடத்தில் தோன்றும் இந்த்ர தனுஸாகிய வானவில் அங்கேயே மறைந்துபட்டுப் போகிறது. அன்னை பராசக்தியோ நீக்கமற எங்கும் நிறைந்திருப்பவள். தன் சொரூபத்தினின்று சிறிதளவும் பிசகாதவள். அகிலப் பிரபஞ்சமும் மாயா காரியமாக ஒரு காரணத்தை முன்னிட்டுத் தோன்றி மற்ற ஒரு காரணத்தை முன்னிட்டுப் பின் மாயமாய் மறைந்துபோகிறது. அன்னை பராசக்தி எப்பொழுதும் சொரூபத்திலேயே எவ்விதமான மாறுதலும் இல்லாது சாசுவதமாக இருந்து வருகிருள்.

**शाश्वतैश्वर्या** — சாத்வத ஐச்வர்யா ९५२

யாண்டும் எதனிடத்தும் ஆதிக்கம் செலுத்துபவள். 952

ஆளும் தன்மைக்கும் ஏராளமாகப் பொருள் படைத்திருப்பதற்கும் ஐச்வரியம் என்னும் நாமம் அமைந்துள்ளது. உலகனைத்தையும் ஈன்றெடுத்து அன்புடன் வளர்த்துவரும் அம்பிகையின் ஆதிக்கமும் ஆட்சி முறையும் நெறி பிறழாது எங்கும் நடைபெற்று வருகின்றன. ஆட்டு இடையன் ஒருவன் தான் மேய்க்கும் ஆடுகளை நரி, சிறுத்தை முதலியவற்றினின்று எச்சரிக்கையாய்ப் பாதுகாத்து வருவது போன்று அன்னை பராசக்தி உயிர்வகைகளுக்கிடையில் உள் பிணக்கும் பிறர் எதிர்ப்பும் வராதபடி பாதுகாக்கின்ருள். முறை வழுவுகின்றவர்களுக்கு ஏற்ற தண்டனை விதிக்கப்படுகின்றது. உலகத்தவர்களுடைய ஆட்சி முறையில் அதிகார வர்க்கத்துக்குத் தெரியாத பாங்கில் நெறி வழுவி நடத்தல் சாத்தியம்; தண்டனையினின்று தப்பித்துக்கொள்ளவும் முடியும். அம்பிகையின் ஆட்சி முறையில் நெறி வழுவுவதற்கேற்ற தண்டனை அப்போதைக்கப்போதே விதிக்கப்படுகிறது. யாருக்கும் தெரியாமல் நெருப்பில் கை வைத்தால் அது சுடுவதினின்று தப்பித்துக்கொள்ள முடியாது. அதே தீயைக்கொண்டு நல்லுணவும் சமைக்கலாம். அன்னையின் ஆட்சிமுறையில் தீய செயலுக்கு

ஏற்ற தண்டனையைச் சரிவர விளங்கிக் கொள்ளாதவன் மேலும் கீழ்மையில் மூழ்குகிறான்.

பிரபஞ்சத்தில் அமைந்திருக்கும் அனைத்தும் அன்னை பரா சக்திக்கே சொந்தம். ஒரு கணப்பொழுதில் அரசனை ஆண்டியாக்கவும் ஆண்டியைத்தூக்கி அரசன் நிலையில் வைப்பதும் அவளுக்கு விளையாட்டாக வந்தமைகின்றன. அண்டங்களைத் தோற்றுவிப்பதும் துடைத்துத் தள்ளுவதும் அம்பிகையின் லீலைகளாம். அன்னையின் ஐச்வரிய மகிமையைக் குறித்து ஆத்ம சாதகன் மயங்குவதில்லை. அதில் கருத்தும் செலுத்த அவன் முயலுவதில்லை. தனக்கும் அம்பிகைக்கும் உள்ள பிரியாத இணக்கத்தில் மட்டும் அவன் கவனம் செலுத்துகிறான். அவளுடைய முறை பிறழாத ஆதிக்கத்தை அன்னவன் நன்கு அறிந்து கொள்கிறான் என்பது இந்நாமத்தின் கருத்து.

**शर्मदा — சர்மதா ९५३**

இன்பத்தைத் தருபவள். 953

எல்லா உயிர்வகைகளுக்கும் அவ்வப்போது தேவையாயிருக்கும் இன்பத்தை அம்பிகை தந்தருள்கின்றாள்.

**शम्भुमोहिनी — சம்புமோஹினீ ९५४**

சிவனாரை மோகமடையச் செய்பவள். 954

சம்பு என்றால் உயிர்களுக்கு நலன் செய்பவன் என்று பொருள். தவம்புரிந்து ஐம்பொறிகளையும் வென்றான பிறகே அவர் அம்பிகையை மணந்துகொண்டார். அத்தகைய ஜிதேந்திரியனுக்கே இடையிடையே மோகம் என்னும் காற்றடிக்கிறது என்றால் ஜீவர்களின் கதியைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. ஜகன் மோகினியாயிருந்து கொண்டு அம்பிகை உயிர்களைக் காம வலையில் கட்டிவைத்திருக்கிறாள். பரமனை அடைய விரும்பும் உயிர்கள் காமதகனம் என்னும் அரிய பெரிய செயலைச் செய்தாக வேண்டும். அதற்காக முமுக்ஷுக்களாக இருக்கின்ற ஜீவர்கள் அன்னையைச் சரண்புகுதல் வேண்டும். நிராசையில் நிலை நிற்பது வரங்களிலெல்லாம் தலை சிறந்ததாகிறது. காமநோயை அகற்றியவனே நிறை மனிதனாகிறான்.

**धरा — தரா** ९५५

மண்ணுலக மயமாய் இருப்பவள். 955

நமக்கெல்லாம் இருப்பிடமாய் அமைந்திருப்பது இம்மண்ணுலகம். நமக்குப் புலனுகும் மகிமைகள் அனைத்தும் அம்பிகையின் விபூதிகளேயாம். மண்ணுலகை முறையாகவும் முறைதவறியும் பயன்படுத்துகின்ற மக்கள் இருக்கிருர்கள். இருதரத்தாரையும் அது ஒரே பாங்கில் தாங்கி வருகிறது.

**धरसुता — தரஸுதா** ९५६

ஹிமவானின் செல்வியாயிருப்பவள். 956

ஹிமவான் நிலவுலகுக்கு அழகைத் தரும் திலகமாய் இருக்கிருன். ஸ்தாவரங்களுள் தாம் ஹிமாலயமாக இருப்பதாக ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா இயம்புகிருர். ஹிமவானுடைய செல்வியாகப் பிறந்த அம்பிகை ஹைமவதீ என்னும் பெயர் பெற்றுள்ளாள். ஸ்தூலமாகவும் கடைசியானதாகவும் இருப்பது மண் என்னும் பூதம். சிருஷ்டியில் மேலானது, கீழானது என்னும் வேறுபாடு பரநோக்கோடு பார்ப்பவர்களுக்கு இல்லை. பராசக்தியே மண்ணினின்று வடிவெடுத்து வந்திருக்கிருள். 'உலகனைத்தும் ஆனுய் நீயே' என்னும் நிறைமொழிக்கு இலக்காக அமைந்திருப்பவள் பார்வதி தேவி. அவளே அனைத்துமாய் இலங்கிக்கொண்டிருக்கிருள். இந்த எண்ணத்தில் ஊறி இருப்பவர்கள் நிலமகளுக்கேற்ற நன்மக்களாகப் பரிணமிக்கிருர்கள்.

**धन्या — தன்யா** ९५७

எண்ணியது எண்ணியாங்கு எய்தப்பெறுபவள். 957

உயிர்வகைகளின் ஆசைகளுள் மேலானவையும் கீழானவையும் உள்ளன. கீழான ஆசைகளை நிறைவேற்றிக்கொள்வதன் வாயிலாக மனிதன் கீழ்மையுறுகிருன். மேலாம் நோக்கங்களை அடிப்படையாகக்கொண்டு முயன்று வருபவர்களுக்கெல்லாம் அன்னை பராசக்தி தர்மத்திற்கு ஒத்துள்ள நலனை வழங்குகின்ருள். அம்பிகைக்குச் சொந்தமில்லாதது எதுவும் பிரபஞ்சத்தில் இல்லை. தான் உடைத்திருப்பவைகளிடத்து அவள் திருப்தியுற்றிருக்கிருள்.

விரைவில் வெற்றிகாண விரும்புபவர்கள் தனத்தை நாடுவதில் முறைதவறி நடந்துகொள்கின்றனர். அவர்களுக்கு வாய்க்கும் ஊதியம் விரைவில் அழிந்துபட்டுப் போகிறது. அன்னையின் அனுக்ரஹம் அவர்களுக்குக் கிடைப்பதில்லை. முறையாக முயலுபவர்களுக்கு அவள் சிறிது சிறிதாகச் செல்வத்தைக் கொடுத்து அதைக் காப்பாற்றுதற்கான முறைமையையும் வழங்கியருள்கின்ருள். நல்லார்க்கு யோகத்தை வழங்கவல்ல யோகினியாக அம்பிகை இலங்குகின்ருள். நெறியில் ஒழுங்குப்பாடு இருக்குமிடத்து மனதில் திருப்தியும் அமைதியும் உண்டாகின்றன. குறியை அடையப்பெற்ருன பிறகும் திருப்தியும் அமைதியும் நிலவுகின்றன. தொடுத்த கர்மங்கள் மங்களகரமாக நிறைவேறுகின்றன.

நேர்மையான வாழ்வு வாழ்கின்றவன் இவ்வையகத்தை விட்டு அமைதியாக மறுமையடைகிருன். இறுதிக்காலத்தில் மனத்திருப்தியுடன் தியான மூர்த்தியாக இருந்துகொண்டு உடலை உகுத்தல் தலைசிறந்த பேருகிறது. அன்னையின் பக்தர்களுக்கு இந்த அரியபேறு வாய்க்கிறது. மறுபிறப்புக்கு ஏதுவாயுள்ள ஆசை ஏதும் அவர்களிடம் உருவெடுப்பதில்லை. அந்திய காலத்தில் அன்னையின் திவ்விய சொரூபத்திலேயே அவர்களின் உள்ளம் ஒடுங்குகிறது. இப்பெருநிலையை ஆத்மசாதகர்களுக்கு எடுத்து வழங்கும் அம்பிகைக்குத் தன்யா என்னும் மங்களகரமான நாமம் அமைந்திருக்கிறது.

**धर्मिणी — தர்மிணீ** ९५८

தர்மமே வடிவெடுத்திருப்பவள். 958

அக்கினியில் உஷ்ணம் இருப்பது போன்று அம்பிகையிடம் தர்மம் மிளிர்ந்துகொண்டிருக்கிறது. பிரபஞ்ச நடைமுறைக்கு ஆதாரமாயிருப்பது தர்மம். ஜடப்பொருளிடத்தும் அதற்கேற்ற தர்மம் அமைந்திருக்கிறது. நீரின் தர்மம் நனைப்பது. காற்றின் தர்மம் உலர்த்துவது. இங்ஙனம் ஒவ்வொரு பொருளும் அதன் தர்மத்தை முறையாக நிறைவேற்றுவதால் பிரபஞ்ச நடைமுறை ஒழுங்காக நிகழ்ந்து வருகிறது. உயிர்களின் தர்மம் தங்களுக்கு அமைந்துள்ள வாழ்க்கையை நன்கு நடாத்துதலேயாம். மாணக்கன் ஒருவனுடைய தர்மம் கல்வி கற்பது. ஆசிரியன் ஒருவனுடைய தர்மம் பாடம் புகட்டுவது. இதை எளிதில் அறிந்து

கொள்ள முடிகிறது. தர்மத்துக்கு இருப்பிடமாக மிளிர்ந்தவர் பீஷ்மர். அவருடைய வாழ்வில் முரண்பாடுகள் ஏராளமாக உள்ளன. கெட்டவனாகிய துரியோதனனுக்குச் சேனாபதியாக இருந்து பாண்டவர்கள் பக்கம் இருந்த நல்லவர்கள் பலரை அவர் மாய்த்துத் தள்ளினார். ஆயினும் அவர் தர்மத்தை விட்டுப் பிசகாததால் ஆன்றோர்கள் அவரைப் பாராட்டுகின்றனர். ஆக, தர்ம மயமாய் இருக்கின்ற பராசக்தியின் மகிமை ஒரு சிறுவன் மூலமாகவும் மிளிர்கிறது. பீஷ்மர் போன்ற அறிந்துகொள்ளுதற்கு மிகக் கடினமாக இருக்கும் மூர்த்தியின் வாயிலாகவும் மிளிர்கிறது.

**धर्मवर्धिनी — தர்மவர்தினீ** ९५९

தர்மத்தை வளர்ப்பவள். 959

பக்தர்களுடைய உள்ளத்தில் அம்பிகை பேரன்பை ஊட்டுகிறாள். உயிர்வகைகள் தத்தம் தூய்மையினின்று பிசகாதிருக்கும்படி அவள் காத்து வருகின்றாள். மாந்தர்க்கிடையில் நல்லொழுக்கத்தையும் நல்லியல்பையும் அவள் ஊட்டி வருகின்றாள். அன்னையை வழுத்துதற்கு ஏற்பப் பக்தர்களுடைய உள்ளத்தில் பேரன்பை மேலும் மேலும் அவள் வளர்த்து வருகின்றாள். மேலும் ஆத்மசாதகர்களிடம் அடக்கம், ஒழுக்கம் முதலிய தெய்விகச் சம்பத்துக்கள் விருத்தியடையும்படி அம்பிகை அனுக்ரஹம் செய்கின்றாள்.

**लोकातीता — லோகாதீதா** ९६०

உலகங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டவள். 960

பாதாள லோகம், பூலோகம், புவர்லோகம், ஸ்வர்க்கம் என்று உயிர்வகைகளின் ஸ்தானங்கள் பாகுபடுத்தப்படுகின்றன. புழு, பூச்சி போன்ற சிற்றுயிர்கள் வாழ்ந்துவரும் பகுதியை நரகம் என்றோ பாதாளம் என்றோ நாம் பொருள்படுத்தலாம். அவைகளும் தம் இயல்புகளுக்கேற்றவாறு இன்புற்றுள்ளன. நில உலக வாழ்வை மேம்படச் செய்வதில் மக்கள் சர்வகாலமும் முயன்று வருகிறார்கள். விண்ணுலக வாழ்வு என்பது நம் கற்பனையில் அமைந்துள்ளது. மண்ணுலகில் மேன்மையுற்று வாழ்கின்றவர்களை விண்ணுலகத்தவர் என்று இயம்புவதில் இழுக்கு

ஏதும் இல்லை. எல்லாப் படித்தரங்களிலும் வெவ்வேறு வகைப் பட்ட ஜீவர்களின் வாசஸ்தலங்களை உலகங்கள் என இயம்பு கிறோம். அன்னை பராசக்தி தன் சிறிய சொருபத்தின் வாயிலாக இவை யாவற்றிலும் வியாபித்திருப்பது மட்டுமின்றி இவை யாவற்றையும் கடந்தும் இருக்கிறாள். ஜீவகோடிகள் அனைத்தின் வாசஸ்தலங்களாகவும் அவைகளுக்கு அப்பால் உள்ள பாரமார்த் திகப் பெருநிலையில் திளைத்திருப்பவளாகவும் அம்பிகை இலங்கு கின்றாள். ஆத்மசாதகர்களின் தியானத்துக்கு இப்பதம் முற்றி லும் பொருத்தமானது.

**गुणातीता — குணாதீதா ९६१**

குணங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டவள். 961

சத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணமயமாய் இருப்பது பிரபஞ்சம். அவற்றில் கட்டுண்டு கிடப்பவர்கள் ஜீவர்கள் எனப் படுகின்றனர். அன்னை பராசக்தி ஏக காலத்தில் முக்குணமய மாகவும் அவற்றுக்கு அப்பாற்பட்டவளாகவும் இருக்கிறாள்.

தமோகுணத்தில் கட்டுண்டிருப்பவர் கீழோர். ரஜோகுணத் தில் இருப்பவர்கள் இடைத்தரமானவர்கள். சத்துவ குணத்தில் இருப்பவர்கள் மேலோர். அவர்கள் குணாதீதத்தை அடைவது வாழ்வின் குறிக்கோளாகிறது. அதன் பொருட்டு அவர்கள் குணாதீத மயமாய் உள்ள அம்பிகையைப் போற்றுவது அவசியம்.

**सर्वातीता — ஸர்வாதீதா ९६२**

யாவற்றையும் கடந்தவள். 962

அறிவுத்திறமை வாய்ந்த அம்பிகை பிரபஞ்சத்துக்கு அப்பாற் பட்டவள். பிரபஞ்சத்தைப் பார்க்கும் நம் கண்களை நாம் பார்க்க முடியாதது போன்று அன்னை பராசக்தி அனைத்துக்கும் ஆதார மாகவும் அனைத்தையும் காண்பவளாகவும் இருக்கிறாள். காண் பவளாகிய அவளைக் காணப்படுபொருள்கள் அறியமாட்டா. அந்தக்கரணசுத்தி அடைவதற்கு ஏற்ப ஆத்மசாதகர்கள் அவளைப் பற்றி ஓரளவு அறிந்துகொள்கிறார்கள். முற்றிலும் அவளை அறிந்துகொள்ள எந்த ஞானிக்கும் இயலாது.

**समात्मिका — சமாத்மிகா ९६३**

யாண்டும் தன்மயமாய் இருப்பவள். 963

ஆதேயம் என்று சொல்லப்படுகின்ற பிரபஞ்சத்தில் உள்ள அனைத்துக்கும் ஆதாரமாயிருக்கும் அம்பிகை தன் நிஜசொருபத்தினின்று இம்மியளவும் பிசகுவதில்லை. சாந்தம், இனிமை, ஆனந்தம் ஆகியவை அவளுடைய கூறுகளாம். திரைப்படக் காட்சிக்கு ஒருமைப்பாட்டையும், ஒழுங்குப்பாட்டையும் தருவது அதற்கு ஆதாரமாயுள்ள திரை. தீப்பற்றி எரிவது போன்ற காட்சியால் திரை எரிந்துபட்டுப்போவதில்லை. யாண்டும் தன்மயமாயிருக்கும் பராசக்தியின் உறுதிப்பாட்டின்மீது உலகங்கள் யாவும் தோன்றி, இருந்து, ஒடுங்குகின்றன. தோற்றத்துக்கு வந்துள்ள உயிர்கள் அம்பிகையின் பாங்குகளாகிய ஆனந்தம், அமைதி, இன்பம் ஆகியவற்றை நாடுதற்கேற்ப மேன்மையடைகின்றன. பிரகிருதியின் கூறுகளில் கட்டுண்டிருக்கும்வரை அவை துன்புற்று அலைகின்றன. ஜீவகோடிகள் அனைத்துக்கும் ஆதாரமாயிருக்கும் சமாத்மிகாவாகிய அன்னையைச் சார்ந்திருப்பதே வாழ்வின் குறிக்கோளாகிறது.

**बन्धूककुसुमप्रख्या** — பந்தூக குஸும ப்ரக்யா ९६४

பந்தூகப் புஷ்பத்தின் சிவப்பு நிறம் உடையவள். 964

நிறங்கள் அனைத்தும் அம்பிகையின் சொருபங்களே. அவற்றுள் சிவப்பு நிறம் சிறப்பாக எடுத்துப் பகரப்பெறுகிறது. பிரபஞ்சம் எங்கும் உள்ள செயல்கள் அனைத்தும் அம்பிகையின் செயல்களாம். செயல்களைப் பண்புடன் செய்து முடிப்பதற்கு ரஜோகுணத்தின் பாங்கு இன்றியமையாதது. ரஜோகுணத்தின் நிறம் சிவப்பு. ஆதலால் அம்பிகையின் மேனி சிவப்பு நிறமானது எனச் சிலாகித்துச் சொல்லப்படுகிறது.

**बाला** — பாலா ९६५

விளையாட்டுப் பருவத்திலிருக்கும் சிறுமியாய் உள்ளவள். 965

இயற்கையும் அம்பிகையும் சொருபத்தில் ஒன்றே. இயற்கையானது தொல்லுலகமாய் இருந்து வருகிறது எனினும் அதனிடத்து யாண்டும் இளமையைக் காண்கிறோம். காலத்தையே ஆபரணமாக அணிந்திருக்கும் அம்பிகை காலத்தைக் கடந்துள்ள சிறுமியாகச் சர்வகாலமும் இலங்கி வருகின்றாள்.

சிறுமி ஒருத்தியின் விளையாட்டில் யாண்டும் இனிமை ததும்பு கிறது. விருப்பையும் வெறுப்பையும் அடையப்பெறாத தூயநிலை யில் இருந்துகொண்டு அவள் விளையாடுகிறாள். அதைப் பார்ப்ப வர்களும் சிறிது நேரம் தங்கள் இன்ப துன்ப மயமான வியவகா ரங்களை ஒதுக்கித்தள்ளிவிட்டு மன அமைப்பில் அச்சிறுமியின் பாங்கைப் பெறுகின்றனர். பிரபஞ்சத்திற்கு அப்பாற்பட்ட பர மானந்தப் பெருநிலை அவர்களுக்குச் சிரமமின்றி தானாக வந்தமை கிறது.

## लीला विनोदिनी — லீலாவிநோதினீ ९६६

லீலைகளால் மகிழ்வடைகின்றவள். 966

லீலை என்பது விளையாட்டு. மணலைக் கொண்டு சிறுமிகள் வீடு கட்டி விருந்தினரை வரவழைத்து மணல் மயமாயுள்ள அன்னபானம் முதலியன வழங்கி உபசரிக்கின்றனர். பிறகு விளையாட்டுக்கு ஏதுவாயிருந்த வீடு முதலியவற்றை விளையாட் டாக அவர்கள் துடைத்துத் தள்ளுகின்றனர். மணலை முகாமை யாகக்கொண்டு சிறுமிகள் தங்களுக்குத் தாங்களே இத்தனைவித மான விநோதங்களை உண்டு பண்ணிக்கொண்டனர். அன்னை பராசக்தியும் அதே பாங்கில் ஆனந்தமயீ ஆக யாண்டும் இருந்து வருகின்றாள். அவளுடைய குழந்தைகளாகிய உயிர் வகைகளும் ஆனந்தத்தில் திளைத்திருக்கின்றன. இப்பிரபஞ்ச வாழ்வு அந்த ஆனந்தத்தை உறுதிப்படுத்துவதற்கு உதவுகிறது. அம்பிகை நித்திய லீலையில் ஈடுபட்டிருக்கின்றாள். ஜீவகோடிகளுக்கு இன் பமும் துன்பமும் மாறி மாறி அமைகின்றன. அவை படுகின்ற துன்பத்தைப் பார்ப்பதிலும் அம்பிகைக்கு மகிழ்வேற்படுகின்றது. பெற்றதாய் ஒருத்தி சிறிது நேரம் மறைந்திருந்து தன்னைத் தேடி யலையும் குழந்தையின் துயரத்தில் மகிழ்வடைகிறாள். வேறு யாருக்கும் அந்த ஆனந்தத்தின் ஒப்புயர்வற்ற சிறப்பு விளங்காது. லீலாவிநோதினியாயிருக்கின்ற அம்பிகையும் தன் குழந்தைகளுக் குத் துயரத்தைக் கொடுத்து அதைப் பார்த்து மகிழ்வடைகிறாள். தன் குழந்தைகளின் துயரம் வரம்பு கடந்துபோக அவள் அனு மதிப்பதில்லை. தன்னை நாடி அழும் குழந்தைகளுக்குக் கண் துடைத்து ஆறுதல் அளிக்கின்றாள். 'வினையேன் அழுதால் உன் னைப் பெறலாமே' என்பது மாணிக்கவாசகர் வாக்கு.

இரண்டு நாய்க்குட்டிகள் ஒன்றையொன்று கடித்துச் சண்டை போட்டுக் கொள்வது அவைகளுக்குப் பெரிய போராட்டம். அதை வேடிக்கை பார்க்கும் சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் அது லீலா விநோதமாம். மண்ணுலகில் அமைந்துள்ள பெரிய பெரிய சாம்ராஜ்யங்கள் ஒன்றோடொன்று கடும்போர் நிகழ்த்துகின்றன. உலகிற்கு நாசகாரிகளாக அமையும் அப் போராட்டங்கள் அம்பிகைக்கு வெறும் விநோதங்களேயாம். நாய்க்குட்டிகளின் சண்டைக்கும் சாம்ராஜ்யங்களின் போராட்டத்துக்கும் இடையில் எந்தவிதமான வேற்றுமையும் அவள் காண்பதில்லை. ஆதலால் அவள் லீலாவிநோதினீ என்னும் பெயர் பெற்றுள்ளாள்.

**सुमङ्गली — ஸுமங்கலீ** ९६७

யாண்டும் நலன் தரும் மூர்த்தியாய் இருப்பவள். 967

கணவனுடன் இனிது வாழ்ந்து வருபவள் சுமங்கலீ என்று நடைமுறையில் இயம்பப் பெறுகிறாள். சக்தியும் சிவமும் அத்வைத வஸ்து. சக்தியின் லீலை வேண்டியவாறு விளக்கத்துக்கு இடம் தருகிறது. பரப்பிரம்ம சொரூபம் சொல்லால் விளக்க முடியாதது. நலன், கேடு ஆகிய இரண்டும் நிரம்பப் பெற்றது சக்தியின் லீலை. பரமன் நன்றுடையான், தீதிலான் என இயம்பப் பெறுகிறான். சக்தியின் விளையாட்டில் யாண்டும் நலனே நிறைந்திருக்கிறது. பாம்பு ஒன்று சிவனார் மேனியில் இருப்பது அவருக்கு அலங்காரம். அதே பாம்பு ஒருவனைத் தீண்டினால் அது அவனுக்குக் கேடாய் முடிகிறது. கேடாக இருக்கும் பகுதிகளனைத்தையும் சக்தியோடு சம்பந்தப்படுத்திப் பொருள்படுத்த ஆத்ம சாதகன் கடமைப்பட்டுள்ளான். இறுதியில் தன்னையும் அம்பிகையோடு இணைத்துக்கொள்வானாகில் கேடுகளாகத் தென்பட்டவைகள் யாவும் மங்களகரமாக அவனுக்குக் காட்சி தருகின்றன.

பிரபஞ்சம் முழுவதையும் அம்பிகையின் சொருபமாகப் பார்ப்போமாகில் அதில் தென்படும் யாவும் மங்களகரமாகவே இருக்கின்றன. நோய் வாய்ப்படுவதன் வாயிலாக ஜீவர்கள் பண்பாடடைகின்றன. மரணம் அந்த ஜீவனைப் புதுப்பித்துக் கொண்டிருக்கிறது. குறைபாடான காட்சி காண்பவனுக்கு உலகில் தீங்கு ஏராளமாகத் தென்படுகிறது. பக்தர்களும் ஞானி

களும் உலகை அன்னையின் சொரூபமாகக் காண்பதனல் அதில் நலனே நிறைந்திருக்கிறது. எனவே, அன்னையைச் சுமங்கலீ எனப் பொருள்படுத்துவது முற்றிலும் பொருத்தமானது.

**सुखकरी — ஸுககரீ** ९६८

சுகத்தை உண்டுபண்ணுபவள். 968

மீன் ஒன்று நீருக்குள் சுகஜீவனம் பண்ணிக்கொண்டிருக்கிறது. நிலத்தில் அதற்கு என்னதான் வசதி செய்து கொடுத்தாலும் அச் சூழ்நிலை அதற்கு ஒத்துக்கொள்ளாது. அது ஏதேனும் ஒரு விதத்தில் நீரைச் சென்றடைந்தாக வேண்டும். அந்தந்த ஜீவனுடைய வாழ்க்கை முறைக்கேற்ற சூழ்நிலை அதற்கு இன்றியமையாதது. அத்தகைய வாய்ப்பைப் பராசக்தி பிரபஞ்சம் முழுவதிலும் அமைத்து வைத்திருக்கிருள். அன்னையின் சிருஷ்டியில் உள்ள அனந்தங்கோடி ஜீவர்களும் சுகத்தையே நாடுகின்றன. சுகத்தில் திளைத்திருப்பது உயிர் வகைகளின் மூலநிலையாம்.

இப்பிரபஞ்சத்தில் உயிர் வகைகளுக்கு நிரந்தரமான சுகம் வந்தமைவதில்லை. சுகம், துக்கம் ஆகிய இரண்டும் மாறி மாறி வருவது இயற்கையின் பாங்காம். தரையில் கிடந்து திண்டாடும் மீன் ஒன்றுக்குச் சதுப்பு நிலம் அகப்பட்டால் அதில் தாற்காலிகமாக ஒரு சிறிதளவு இன்பத்தையும் அமைதியையும் அந்த மீன் பெறுகிறது. அதன் உடலைப் பாதியளவு நனைப்பதற்கேற்ற ஆழமில்லாத நீர்ப்பகுதியில் அந்த மீன் அதிகத் திருப்தி அடைகிறது. உடல் முழுவதையும் நனைப்பதற்கேற்ற நீர் நிலையில் அந்த மீனுக்குப் புது உயிர் வந்ததைப் போல் இருக்கிறது. இன்னும் ஆழமான நீர் நிலை அகப்பட்டால் அதை நாடி மீன் ஓடுகிறது. ஆழ்கடல் போன்ற நீர் நிலையில் அந்த மீன் முற்றிலும் திருப்தி அடைந்திருக்கிறது.

அகப்படுகின்ற வசதிக்கேற்றவாறு தாற்காலிகமாகத் திருப்தியுற்றிருக்கும் உயிர்வகைகள் சூழ்நிலையைத் திருத்தியமைக்கச் சதா முயன்று கொண்டிருக்கின்றன. சிற்றுயிர் பேருயிராகப் பரிணமிப்பது அம்முயற்சியாலேயாம். அதற்கான சூழ்நிலையை இயற்கைத்தாய் தந்தருள்கின்றாள். பிரபஞ்சத்தின்

திட்டம் துக்க நிவர்த்தி, சுகப் பிராப்தியாம். உயிர் வகைகளின் முயற்சிக்கு ஏற்றவாறு துக்க நிவர்த்தி வந்து வாய்க்கிறது. அன்னை பராசக்தியை அணுகுதற்கேற்ப ஜீவாத்மனுக்கு ஓரளவு நிலைத்த சுகம் வாய்க்கிறது. தன்னை அம்பிகையுடன் ஐக்கியப் படுத்திக்கொள்கிறவனுக்கு நிரந்தரமான துக்க நிவர்த்தியும் சுகப் பிராப்தியும் வந்தமைகின்றன. இதுவே வாழ்க்கையின் குறிக் கோளாம். அன்னை பராசக்தி உயிர்களுக்கு சுகத்தை நல்கு வதன் வாயிலாக இப்பெரிய திட்டத்தை நிறைவேற்றி வருகின்றாள்.

**सुवेषाढ्या — ஸுவேஷாட்யா ९६९**

மங்களகரமான அலங்காரங்களை உடையவள். **969**

அழகு அன்னைக்குரிய சொரூப லக்ஷணமாம். அழகில் வசப் படுவது உயிர்களின் பாங்காகும். இயற்கையில் ஆங்காங்கு தன் அழகையே அம்பிகை வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறாள். அழகில் பல படித்தரங்கள் இருக்கின்றன. வடிவம், நடையுடை பாவனை, சீலம், செயல் ஆகிய யாவற்றிலும் அழகு பொழிந்து கொண்டிருப்பது அம்பிகையின் மகிமையாகும். அழகைப் புறப் பொருள்களைக் கொண்டு மேலும் அலங்கரிக்கலாம்.

அழகான ஒருவன் கந்தைத்துணி உடுத்திக்கொண்டால் அவ னுடைய அழகு கீழ்நிலைக்கு வருகிறது. நேர்த்தியான உடையோ அவன் அழகை மிகுதிப்படுத்துகிறது. அம்பிகையின் வடிவத் துக்குக் கவர்ச்சிகரமான ஆடை அணிவித்து அவளை அலங்கரிப் பது பக்தி சாதனத்துக்கு முதற்படியாகிறது. அவ்வடிவத்தில் எழுந்தருளப் பண்ணியிருக்கும் அவளுக்கு ஆபரணங்கள் சூட்டு தலும் பொருத்தமானதே. வரம்பு கடந்து நகைகளை அணிந்து கொண்டு ஒரு சிலர் தம் வடிவத்தை ஆபாசப்படுத்துகின்றனர். அழகுணர்ச்சி (Aesthetic taste) என்னும் பண்பாட்டின்படி அளந் தெடுத்தே ஆபரணங்களை அணிவித்தல் வேண்டும். மக்களுக் கிடையில் இந்த அழகுணர்வு முற்றிலும் திருந்தியமைய வேண்டும்.

ஆலயத்தில் அம்பிகையின் விக்ரஹத்துக்கு நாள்தோறும் பூமாலை அணிவிப்பது ஆத்ம சாதனங்களுள் ஒன்றாகும். அந்தந்த

வடிவத்துக்கேற்றவாறு பூமாலைகளைப் பொருத்தமாக அமைப்பது அவசியம். அதை யாண்டும் வாடாத நிலையில் வைத்திருக்க வேண்டும். பூமாலை மனதின் எழிலுக்கும் மகிழ்ச்சிக்கும் அறிகுறியாகிறது. மாலையினுடைய பாங்கும் யாண்டும் புத்தம் புதியதாயிருக்கவேண்டும்.

சந்தனம், குங்குமம் ஆகியவற்றை மேனியின்மீது பூசி அலங்கரிப்பது மற்றொரு முறையாகும். திரவியங்களைப் பூசுவதிலும் நாம் அழகுணர்ச்சியைக் கையாளவேண்டும். பண்புடனும் பாங்குடனும் புறப்பொருள்களைக் கொண்டு அம்பிகையின் மூர்த்தியை அலங்கரிப்பதில் கலைஞானம் முன்னணியில் வந்து நிற்பது அவசியம். கலைகள் அனைத்தையும் வழிபாட்டுக்குப் பயன்படுத்துவது பண்புக்கும் பக்திக்கும் அறிகுறியாம்.

**सुवासिनी — ஸுவாஸினீ** ९७०

கணவனை விட்டுப் பிரியாதவள். 970

கணவனோடு கூடியிருப்பவள் சதவா என்றும் கணவனில்லாதவள் விதவா என்றும் அழைக்கப்பெறுகிறார்கள். சிவனாருடைய செம்பாதி வடிவில் அன்னை பராசக்தி இருந்து வருகிறாள். அதை முன்னிட்டு சிவனார் அர்த்தநாரீசுவரன் என்னும் பெயர் பெறுகிறார். இவர்கள் யாண்டும் நித்திய வஸ்துவாக உள்ளனர். பிரளய காலத்தில் இவர்களிருவரும் இணைபிரியாதிருந்தாலும் தோற்றத்தில் சிறு வேறுபாடு உள்ளது. ஆலயங்களில் அம்பிகை சிவனாருடன் ஒன்றுபடுகின்ற நிலையில் இரவுப் பொழுதில் உறங்குகின்றாள். சிவனும் சக்தியும் அபின்னம் என்னும் கோட்பாட்டுக்கு இது விளக்கமாகிறது. யாண்டும் உண்ணாது, உறங்காது இருக்கின்ற பொருள் இரவில் சயனிக்கப் போவதாகச் செய்யப்படும் சடங்கின் தாத்பர்யம் இதுவே.

சிவத்துக்கு அபின்னமாய் இருக்கும் அம்பிகை மங்களகரமான மூர்த்தியாய் இலங்குகின்றாள். தத்துவ பூர்வமாக, சொருபத்தில் ஒன்று, விளக்குகின்ற பாங்கில் இரண்டு மூர்த்திகளாக அவர்கள் கருதப்படுகின்றனர். அக்னியும் உஷ்ணமும் பிரிக்க முடியாதவை போன்று அன்னை பராசக்தி யாண்டும் சிவ சொருபமாக இலங்கி வருகின்றாள் என்பது இந்நாமத்தின் பொருள்.

**सुवासिन्यर्चन प्रीता — ஸுவாஸின்யர்ச்சன ப்ரீதா** ९७१

ஸ்வாஸினிகளின் ஆராதனையால் மகிழ்வடை கிறவள். 971

தன் கணவனுடன் இனிது வாழ்ந்திருக்கும் மாது ஸுவாஸினீ என்னும் பெயர் பெறுகிறாள். வாழ்வு என்பது உயிர்வகைகளுக்கு அமைந்துள்ள நல்ல வாய்ப்பாம். ஒவ்வோர் உயிரும் பரிணமித்து மேல் நிலைக்குப் போக முயலுகின்றன. அதற்கு உறுதுணையா யிருப்பது அம்பிகையின் திட்டம். அதுவே இயற்கையின் நடை முறையும் ஆகிறது. நல்லியல்பு படைத்துள்ள மாது தன் கண வனின் குறிப்பறிந்து நடந்து கொள்கிறாள். அவளுடைய முக விலாசத்தில் தெய்விகம் திகழ்வது வெளிப்படை. இயற்கையின் கண் தென்படும் நடைமுறைகள் எல்லாம் அம்பிகையின் திருவுளப்பாங்கின்படி நிகழ்வனவாம். அவற்றுள் முக்கியமான இடம் பெறுவது கணவனும் மனைவியும் சேர்ந்து நல்வாழ்வு வாழ் வதாம்.

அத்தகைய நல்லியல்பு படைத்த மாதர்கள் செய்கின்ற வழி பாட்டை அம்பிகை மகிழ்வுடன் ஏற்றுக்கொள்கிறாள். நல்லியல் பும் நல்வாழ்வும் சேர்ந்து அமைந்துள்ள இயற்கையின் பகுதிகள் அனைத்திலும் தெய்விகம் திகழ்ந்து கொண்டிருக்கிறது.

**आशोभना — ஆசோபனா** ९७२

அழகோடு கூடிய தெய்விகத்தை நிறைநிலையில் உடைத்திருப்பவள். 972

இயற்கையின் நடைமுறையில் ஒழுங்குப்பாடும் மங்களமும் நிறைந்துள்ளன. புறத்தில் உள்ள அழகு, அகத்தில் உள்ள சீலத் தினின்று வெளியாகும் அழகு என்று அழகானது இரண்டு பாங்கு கள் படைத்துள்ளது. சீலத்தினின்று பொலிகின்ற அழகே மெய்ப்பொருளிடமிருந்து வரும் மேலான அழகாம்.

இயற்கையிடமிருந்து யாண்டும் வெளிப்பட்டுக்கொண்டிருக் கும் அழகு அன்னையின் சான்னித்தியத்திற்குப் புறச்சான்றாம். மெய்ப்பொருள்தான் இயற்கைத் தாயாக இலங்கிக்கொண்டிருக் கிறது. அதன்கண் உயிர்கள் வாழ்ந்துவருவதே அன்னையின் அருளுக்கு அத்தாட்சியாகிறது. அதினின்று வாழ்வுக்குரிய நலன்

அனைத்தையும் பெற்று இனிது வாழ்ந்திருப்பது உயிர்களின் பாங்கு. நீரினுள் இனிது வாழ்ந்திருக்கும் மீன் எங்கேனும் நீர் இருக்கிறதா என்று கேட்பதைப் போன்று கடவுள் உண்டா என்னும் கேள்வி பொருந்தாத ஒன்றாகிறது. பட்டப்பகலுக்கு நிகரானது இயற்கையில் திகழ்ந்துகொண்டிருக்கும் அம்பிகையின் சான்னித்தியம். எனவே, அவள் ஆசோபனா என்று போற்றப் பெறுகிறாள்.

**शुद्धमानसा** — சுத்தமானஸா ९७३

தூய உள்ளம் படைத்தவள். 973

மனதின் துணையால் அகத்திலும் புறத்திலும் உள்ளவை நுகரப்படுகின்றன. 'இந்திரியங்களுள் நான் மனதாயிருக்கிறேன்' என்று கிருஷ்ணபரமாத்மா இயம்புகின்றார். ஐந்து இந்திரியங்களுக்கும் ஆதிக்கம் தருவது மனது. அரிய விஷயங்களைக் கேட்டுக்கொண்டிருக்கும் மனிதனுடைய மனது எங்கேயோ அலைந்துகொண்டிருக்குமாயில் கேட்டதன் உட்பொருள் அவனுக்கு விளங்காது. மனது ஒவ்வோர் இந்திரியத்துடனும் இணைந்து செயல் புரிகின்றவிடத்தே அந்த இந்திரியத்தின் வாயிலாக மனிதன் அடைய வேண்டிய பயனை அடையப் பெறுகிறான்.

எத்தனை மனிதர்களோ அத்தனைவித மனம் உண்டு என்பது கோட்பாடு. கண்ணாடியின் நிறத்துக்கேற்றாற்போல் புறவுலகம் தென்படுகிறது. மேடுபள்ளமாயிருக்கும் கண்ணாடியைப் போட்டுக்கொண்டு புறவுலகைப் பார்த்தால் பொருள்கள் எல்லாம் கோணலாகத் தென்படும். மனதின் பாங்குக்கேற்பப் புறவுலக் காட்சி மனிதனுக்கு வந்தமைகிறது. கெட்ட மனம் உடையவனுக்கு உலகம் முழுவதும் கேடுடையதாகவும் நல்ல மனம் உடையவனுக்கு உலகம் நலன் நிறைந்ததாகவும் தென்படுகிறது. பயிற்சியின்மூலம் கெட்ட மனதை நல்ல மனதாகத் திருத்தியமைப்பது வாழ்வின் குறிக்கோள். மனது திருந்தி வருவதற்கு ஏற்பப் புறவுலகக் காட்சி மேலானதாகத் திருந்தியமைகிறது. பிரபஞ்சமாகக் காட்சி கொடுத்துக்கொண்டிருப்பது உண்மையில் பராசக்தியே. மனம் திருந்தியமைகின்றவர்களுக்கு இவ்வுண்மை புலனாகிறது. தான் சுத்த மனமுடையவளாயிருந்து அம்பிகை உயிர்வகைகளுக்கு இவ்வரிய பாடத்தைப் புகட்டி வருகின்றாள்.

மனம் முற்றிலும் திருந்தி அமையப் பெறுபவன் யோகியாகிறான், அன்னை பராசக்தியின் திவ்வியக் காட்சியையே அவன் காண்கிறான்.

**बिन्दुतर्पणसन्तुष्टा — பிந்து தர்ப்பண ஸந்துஷ்டா ९७४**

நல்ல பொருள் பிறர் நலனுக்காகப் படைக்கப் படும் செயலால் மகிழ்வடைபவள். 974

இயற்கையில் சேதனம், அசேதனம் ஆகிய யாவும் தத்தம் போக்கில் பரிபாகம் அடைந்து வருகின்றன. பரிபாகம் அடைந்து வரும் ஸ்தாவரம் ஒன்று நல்ல விதையாக வடிவெடுக்கிறது. தன்னைப் பிரம்மச்சரிய விரதத்தில் காத்துக்கொள்வதே மனிதன் செய்கின்ற செயல்களுள் தலைசிறந்ததாகிறது. 'காப்பது விரதம்' என்பது கோட்பாடு. பீஷ்மாச்சாரியனுக்கு மேல் பண்பாட்டில் மேல்நிலைக்குப் போனவர்கள் யாரும் இல்லை. தன்னிடத்திருந்த எதையும் கேட்பவர் யாராயிருந்தாலும் கரவாது எடுத்து வழங்குவது தன்னைத்தான் முற்றிலும் காத்துக்கொண்ட பீஷ்மனுடைய கொள்கையாயிருந்தது. அதற்குத் தர்ப்பணம் என்று பெயர். பீஷ்மன் கையாண்ட திட்டம் உண்மையில் பராசக்தியின் திட்டமாகிறது. எனவே, பீஷ்மன் ஒப்புயர்வற்ற பெரிய மூர்த்தியானான். சரீரம் எடுத்துள்ள மானுடன் எச்செயல்களைச் செய்தால் மகோன்னத நிலையை அடைகிறான் என்பதற்குப் பீஷ்மன் ஆதர்ச புருஷனாக இலங்கி வருகின்றான். இத்திட்டம் உயிர்வகைகள் அனைத்திடத்தும் நிறைவேறி வருகின்றன.

தோன்றியுள்ள அனைத்தும் பண்பாடடைந்து மற்றவர்களுக்குப் பயன்பட்டு வருவதில் அம்பிகை பெருமகிழ்வு அடைகிறாள். அன்னையின் இவ்வரிய செயலை அறிந்து பக்தன் ஒருவன் பிறருக்குப் பயன்பட்டு வருகிற பெருவாழ்வு வாழ்வானாகில் அது ஒப்பற்ற அன்னையின் வழிபாடாகும்.

**पूर्वजा — பூர்வஜா ९७५**

எல்லாவற்றுக்கும் முன்பு தோன்றியவள். 975

மூலப் பிரகிருதியினின்று தோன்றிவரும் யாவும் அதிலேயே ஒடுங்குகின்றன. பிரகிருதி முக்குண மயமானது. மூலப் பிரகிருதி வடிவெடுக்கும்பொழுது முக்குணத்தின் தாரதம்மியமாக இத்தனை

உயிர் வகைகள் தோன்றி வருகின்றன. தமோகுணம் மிகுந்திருப்பது ஜடப்பொருளாகிறது. ஸ்தாவர, ஜங்கமங்கள் ரஜோ குணமயமாய் உள்ளன. முற்றிலும் சத்துவகுண்ம் ஓங்கியுள்ள உயிர் சேதனமயமாய் இருக்கின்றது. புல் முதல் பிரம்ம ஞானி வரை உள்ள அனைத்தும் மூலப் பிரகிருதியிடமிருந்து தோன்றியவைகளேயாம்.

குழந்தையைப் பெற்றெடுக்கும் தாய் அதைச் சான்றோனாக வளர்த்துப் பெரும் மகிழ்ச்சியடைகிறாள். அண்டத்தில் உள்ள உயிர்களனைத்தையும் தோற்றுவித்து அவற்றையெல்லாம் சேதன மயமாக்கிச் சிவனிடத்து ஒப்புவிக்கின்ற செயலை அன்னை பராசக்தி செய்து வருகின்றாள். தோற்றத்தில் உள்ள பிரபஞ்சம், தோன்றாநிலையில் உள்ள பிரபஞ்சம் ஆகிய இரண்டுக்கும் மூலப் பிரகிருதி காரணமாய் இருக்கின்றது. சலனமற்ற நிலையில் இருக்கும் அது சலனமடையும் பொழுது சிருஷ்டி தொடங்குகிறது. தோன்றி மறையும் பிரபஞ்சத்துக்கு அடிப்படையாய் இருக்கும் சக்தி மூலப்பிரகிருதியாகிறது. பரம்பொருளிடத்திருந்து மூலப் பிரகிருதி தோன்றிவந்து உயிர்களனைத்தையும் பின்படுத்தி வருவதால் எல்லாவற்றுக்கும் முன்பு தோன்றிய ஆதி சக்தி என்று அதை நாம் போற்றுகின்றோம். அன்னை பராசக்தி ஆதி சக்தியாய் இருக்கும் இத்தத்துவத்தை நாம் உணர்கின்ற அளவு அது சிறந்த அம்பிகை வழிபாடாகிறது.

## त्रिपुराम्बिका — த்ரிபுராம்பிகா ९७६

மூன்று சரீரங்கள் மயமாகவும் மூன்று அவஸ்தைகள் மயமாகவும் அம்பிகை விளங்கிவருகிறாள் என்பதை நாம் அறிந்து வருகின்றபொழுது அது ஒப்பற்ற அம்பிகை வழிபாடாகிறது.

## दशमुद्रासमाराध्या — தசமுத்ரா ஸமாராத்யா ९७७

பத்து முத்திரைகளைக்கொண்டு நன்கு ஆராதிக்கப்படுகிறவள். 977

கை விரல்களைக்கொண்டு தெரிவிக்கும் அறிகுறிகளுக்கு முத்திரை என்று பெயர். கைகளைத் தக்க முறையில் திருத்தியமைப்பதன் வாயிலாக முத்திரைகள் வடிவெடுக்கின்றன. வழிபடும்பொழுது ஆத்மசாதகனிடத்து உண்டாகிற உணர்ச்சியின்

விளைவாக அவன் கைகள் வடிவங்களை எடுக்கின்றன. அவை யாவும் அவனுடைய மனப்பான்மைக் கேற்ற பிரகாரம் இயல் பாய் அமைந்துள்ள முத்திரைகளாம்.

தகுதி வாய்ந்தவர்களிடமிருந்து முத்திரைகளின் அமைப்பை அறிந்துகொண்ட பிறகு அவற்றை ஆராதனையில் பயன்படுத்த வேண்டும். அவற்றில் பிழை ஏற்பட்டால் அம்பிகை சினந்து கொள்வாள் என்னும் எச்சரிக்கை ஆதரவற்றது. தூய மனப் பான்மைதான் முத்திரைகளைவிடச் சாலச் சிறந்தது. சிரத்தை யுடன் செய்யப்படுகின்ற ஆராதனை எப்படியிருந்தாலும் அது அம்பிகைக்கு உகந்ததாம்.

**त्रिपुराश्रीवशंकरी** — த்ரிபுராஸ்ரீவசம்கரீ ௯௭௮

திரிபுராஸ்ரீயைத் தன் வசப்படுத்தி வைத் திருப்பவள். 978

இப்பிரபஞ்சம் இயற்கையாய் அமைந்திருக்கின்ற ஸ்ரீ சக்க ரம். கணித பூர்வமாக வரையப்பட்டுள்ள ஸ்ரீ சக்கரம் ஒரு நாட் டின் இயற்கை அமைப்பை விளக்குதற்கென்று அமைந்துள்ள தேசப்படத்தை ஒத்ததாம். தேசப்படத்தினும் சிறந்தது தேச அமைப்பு. அறிஞர்களால் வரையப்பட்டுள்ள ஸ்ரீ சக்கரத்தை விடப் பிரபஞ்சம் உயர்ந்ததாம். இயற்கையின் நடைமுறையை முற்றிலும் அனுசரிப்பதே ஸ்ரீ சக்கர வழிபாடாம். வரைந்த படத்தை அலங்கரித்து விதவிதமான உபகரணங்களுடன் வழி பாடு செய்வது அன்னையின் ஆராதனை ஆகாது. அன்னை பரா சக்தியுடன் தூய இணக்கம் வைத்துத் தீவிரமாக லோக ஹிதத் துக்காக என்று செய்யப்படும் கர்மங்கள் அனைத்தும் ஸ்ரீ சக்கரத் தின் மூலம் செய்யப்படும் வழிபாடாகின்றன.

**ज्ञानमुद्रा** — ஞானமுத்ரா ௯௭௯

ஞானத்தால் அடையப் பெறுகிறவள். 979

ஞான முத்திரையாகிய சின்முத்திரையை உலகக் குருவாகிய சிவனார் தாம் எடுத்துள்ள தக்ஷிணா மூர்த்தி வடிவத்தின் வலகை கையில் தாங்கியவராகக் காட்சி தருகிறார். கட்டைவிரல் நுனி யும் ஆள்காட்டி விரல் நுனியும் ஒட்டியிருக்கின்றன; மற்ற மூன்று விரல்களும் பிரிந்து நிற்கின்றன. இதுவே சின்முத்திரையாகிறது.

பரவஸ்துவுக்குக் கட்டைவிரலும், ஜீவாத்மனுக்கு ஆள்காட்டி விரலும் சின்னங்களாகின்றன. கால தேச நிமித்தம் ஆகிய மூன்றும் மனோகற்பிதத்தால் வந்துள்ளன. மனமற்ற இடத்து அவை மறைந்துபட்டுப் போகின்றன. அவை மூன்று குணங்களுக்கும் சின்னங்களாய் உள்ளன.

சமயச் சார்பில் சின்முத்திரைக்கு இன்னொரு விளக்கம் தரப்படுகிறது. மாயை, கன்மம், அகங்காரம் என்னும் மும்மலங்களில் ஜீவாத்மன் உழல்கின்றான். அவற்றினின்று தன்னைப் பிரித்தெடுத்துக்கொண்டு அவன் பரத்தைச் சாரப் பெரும் முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும். இவ்வாறு முயலுவதன் வாயிலாக ஜீவாத்மன் பரமாத்மனோடு ஒன்றுபடுகிறான்.

**ज्ञानगम्या** — ஞான கம்யா ௯௮௦

ஞானத்தினால் அடையப்பெறுபவள். 980

ஞானம் ஓங்குதற்கேற்ப ஜீவாத்மன் தன் ஜீவபோதத்தைத் துடைத்துவிட்டுப் பரபோதத்தை வளர்க்க வல்லவனாகிறான். தூங்கிக்கொண்டிருக்கும் மனிதன் ஒருவன் கனவில் பெரும் துன்பத்திற்காளாகி வருந்துகிறான். கனவு நிலையினின்று நனவு நிலைக்கு அவனைத் தட்டி எழுப்பி அவன் துயரப்பட்டது வெறும் கனவு என்று தெளிவுறுத்தவேண்டும். கனவு நிலை அக்ஞானமாகிறது. அதைத் துடைத்துத் தள்ளும் ஞானம் நனவு நிலையாகிறது. பிரபஞ்ச வாழ்வும் நீண்டதொரு கனவே. ஜீவாத்மன் ஒருவன் கணக்கற்ற பிறவிகளில் இப்பிரபஞ்சத்தைச் சார்ந்திருக்கிறான். பிரபஞ்சமோ அக்ஞானத்தின் தோற்றம். அங்ஙனம் அக்ஞானத்தில் இருந்துகொண்டு பரம்பொருளை வழிபடுவதாகக் கனவு காண்பதும் ஒருவித அக்ஞானமாகும். பரம்பொருளை அனுபூதியில் அறிவதே பரஞானம்.

**ज्ञानज्ञेयस्वरूपिणी** — ஞானஜ்ஞேயஸ்வரூபிணீ ௯௮௧

அறிவாகவும் அறியப்படுபொருளாகவும் இருப்பவள். 981

மூல நிலையில் பேரறிவு சொரூபமாக அம்பிகை இருக்கிறாள். அது பிரக்ஞானம் அல்லது சுத்த சைதன்யம் என்று சொல்லப்படுகிறது. அந்தந்த ஜீவனுடைய அந்தக்கரணத்தில் அது பிரதி

பிரதிபிக்கின்ற பொழுது புத்தி எனப்படுகிறது. புத்தியை விளக்கு வதில் உயிருக்கு உயிர் வித்தியாசப்படுகிறது. மூலநிலையில் உள்ள அறிவோ முற்றிலும் தன்மயமானது. அதில் பேதம் ஏதும் இல்லை. ஜீவன் படைத்துள்ள அறிவாக அது கீழ்நிலைக்கு வருகின்ற பொழுது வேற்றுமையும் அங்குத் தோற்றத்துக்கு வருகிறது.

பேதம் நிறைந்துள்ள பிரகிருதியாக வடிவெடுத்திருப்பவள் அம்பிகை. ஆங்காங்குள்ள பேதங்களை அறிந்துகொள்ளும் அறிவாக இருப்பவளும் அவளே. இங்ஙனம் உலக வியவகாரங்களுக் கேற்ற ஞானமாகவும் ஞேயமாகவும் அவள் இலங்குகின்றாள். இவ்வுண்மையை அறிந்து சூழ்நிலைக்கு ஏற்ற பிரகாரம் வாழ்வைக் கொண்டு செலுத்துவது அம்பிகை வழிபாடாகிறது.

**योनिमुद्रा — யோனிமுத்ரா** ९८२

யோனியின் வடிவில் இலங்குபவள். 982

அம்பிகையிடமிருந்தே அண்டங்கள் அனைத்தும் வடிவெடுத் துள்ளன. அவை யாவற்றுக்கும் அவள் யோனி அல்லது பிறப் பிடமாகிறாள். கைவிரலைக் கொண்டு அமைக்கப்படும் முத்திரை கள் மூலம் கருத்துக்கள் விளக்கப்படுகின்றன. அம்பிகை படைத் துள்ள யோனி முத்திரை பிரபஞ்சத்தின் தோற்றத்துக்கு அறிகுறி யாக உள்ளது. விரல்கள் மூலம் காட்டப்படும் கருத்துக்கள் பரந்த பாங்குடையனவாம். மொழியில் குறள் எனப்படும் அமைப்பு சில சொற்களில் பெரிய கருத்துக்களைக் கூறுவதற்கு அது நிகரா கிறது. ஆத்ம சாதகன் புரிகின்ற கிரியா விசேஷங்களோடு கூடிய வழிபாட்டில் முத்திரைகள் முக்கியமான இடம் பெறுகின்றன. அவற்றுள் யோனி முத்திரையின் புனிதத்தை அறிகின்றவன் அன்னை பராசக்தியின் வழிபாட்டுக்குத் தகுதி வாய்ந்த சாதகனு கிறான் என்பது இந்நாமத்தின் கருத்தாம்.

**त्रिखण्डेशी — த்ரிகண்டேசீ** ९८३

மூன்று கண்டங்களுக்கும் ஈசுவரியாக இருப்பவள். 983

அம்பிகை வழிபாட்டுக்கு இன்றியமையாத பத்து முத்திரை களுள் முக்கியமானதாகவும் கடைசியானதாகவும் இருப்பது த்ரிகண்டா முத்திரை. இது மஹாயோனி முத்திரை எனப்படு

கிறது. சூரியன், சந்திரன், அக்னி ஆகிய மூன்று கண்டங்களுக்கும் அன்னை பரமேசுவரி இறைவியாக இலங்குகின்றாள். வாழ்க்கைக்கு இன்றியமையாத வெளிச்சத்தைத் தருவனவாக இவை மூன்றும் அமைந்துள்ளன. எனவே, அன்னையின் வழிபாட்டில் இவை முக்கியமான இடம் பெற்று வருகின்றன.

**त्रिगुणा — த்ரிகுணா** ९८४

மூன்று குணங்களாய் வடிவெடுத்திருப்பவள். 984

ஸத்வம், ரஜஸ், தமஸ் என்பவை முக்குணங்களாகின்றன. பிரபஞ்சம் முழுவதும் முக்குணமயமானது. மூன்று அச்சில் படம் ஒன்றுக்குத் தேவையான நிறங்களையும் அமைப்பையும் அதன் மீது ஏற்றி விடலாம். பிரபஞ்சத்தில் மூன்று குணங்களுக்கப்பால் எந்தப் பகுதியையும் காண முடியாது. சேதனமயமான உயிர்களாக இலங்கும் ஸத்வகுணம் வெண்ணிறமானது. சிகப்பு நிற ரஜோகுணம் சேதன அசேதன நடவடிக்கைகளாக இலங்குகின்றது. செயலற்றுக் கிடப்பது கறுப்பு நிறமான தமோகுணம்.

சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் ஆகிய முத்தொழிகளின் மயமாகப் பிரபஞ்சம் உள்ளது. அவற்றுக்கு ஆதாரமாக ஸத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்கள் அமைந்துள்ளன. ரஜோ குணம் சிருஷ்டிக்கும், ஸத்வ குணம் ஸ்திதிக்கும், தமோகுணம் சம்ஹாரத்துக்கும் அடிப்படையாய் உள்ளன. முக்குண ஸகிதமாயிருக்கும் புருஷத்தத்துவத்துக்கு ஈசுவரன் என்றும் சகுணப் பிரம்மம் என்றும் பகவான் என்றும் பகவதி என்றும் பெயர்கள் தரப்பட்டுள்ளன. இத்தகைய சகுணப் பிரம்ம உபாசனையினின்று ஆத்ம சாதகன் நிர்க்குணப் பிரம்மத்தை அடையப்பெறுகிறான்.

**अम्बा — அம்பா** ९८५

அகிலாண்டங்களுக்கும் தாயாய் இலங்குபவள். 985

**त्रिकोणगा — த்ரிகோணகா** ९८६

மூன்று கோண வடிவுடையவள். 986

மூன்று கோணங்களுள் பிரபஞ்சத்தின் அமைப்பு முழுவதும் அடங்கியுள்ளது. சத்வம் ரஜஸ் தமஸ் ஆகிய முக்குண மயமாய் இருப்பது ஒருகோணம். ஸ்ருஷ்டி ஸ்திதி, சம்ஹாரம் ஆகிய முத்தொழில் மயமாய் இரண்டாவது கோணம். கால தேச நிமித்த

மாய் இருப்பது மூன்ருவது கோணம். பிரபஞ்சத்தின் விளக்கம் முழுவதும் இம் மூன்று கோணங்களுள் அடங்கி உள்ளன.

**अनघा — அனகா** ९८७

பாபமும் துக்கமும் இல்லாதவள். 987

முறைதவறி நடந்துகொள்பவனைப் பாபி என்கிருேம். அம்பிகையோ யாண்டும் நிறை நிலையிலேயே இலங்குகின்ருள். அதினின்று அவள் பிசகுவதில்லை. ஆதலால் துக்கத்துக்கும் பரதேவதைக்கும் வெகுதூரமாம். சிறிய குளம் ஒன்றை ஆடுமாடுகளைக் குளிப்பாட்டி எளிதில் மலினப்படுத்தி விடலாம். பரந்த நீர்ப்பரப்பில் எத்தனை கால் நடைகளைக் குளிப்பாட்டினுலும் அது மலினப்படுவதில்லை. அதே பாங்கில் அகண்டத்தை எட்டுகின்ற பொருள் ஒன்றில் பொல்லாங்கு எதையும் காணமுடியாது. பொல்லாங்கிற்கு அது உட்படுவதுமில்லை. அகன்ற சொரூபமாய் உள்ள பராசக்தியிடத்து பொல்லங்கு எதையும் காணமுடியாது.

**अद्भुत चारित्रा — அத்புத சாரித்ரா** ९८८

அதிசயிக்கத்தக்க வரலாறுகளை உடையவள். 988

அன்னையின் சொரூபமாகிய பிரபஞ்சத்தின் அமைப்பும் அதில் நிகழ்கின்ற செயல்களும் யாண்டும் வியப்புக்குரியனவாம். உலகில் யுகம் தோறும் தோன்றும் சமுதாயங்களின் செயல்கள் ஆராய்ச்சிக்குரியனவாம். காலக் கிரமத்தில் விரிவடைந்து வருகின்ற கலைகள் அனைத்தும் இயற்கைத் தாயின் மகிமைக்கு விளக்கங்கள் ஆகின்றன. கேட்டைச் சமாளிப்பதும் நலனில் நிலைபெற்றிருப்பதும் இயற்கையின் திட்டமாகிறது. எல்லா உயிர்களும் அன்னையிடமிருந்து வந்திருப்பதால் அந்தந்த உயிருக்கு நலன் தருவதைக் காப்பதும் கேடு உண்டுபண்ணுவதைத் தவிர்ப்பதும் அதன் அதன் செயலாம்.

**वाञ्छितार्थप्रदायिनी — வாஞ்சிதார்த்த ப்ரதாயினீ** ९८९

மக்கள் வேண்டுவதை வழங்குபவள். 989

தம் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளுதற்கே உயிர்கள் யாவும் வடிவெடுத்து மண்ணுலகுக்கு வந்திருக்கின்றன. அந்தந்த உயிரின் இயல்பு, மனப்பான்மை, சூழ்நிலை ஆகியவைகளுக்கேற்ற

வாறு அவையாவும் வேண்டுவன எல்லாம் எல்லையில் அடங்காத வையாம். அவையாவுக்கும் அவற்றின் தேவைக்கேற்றவாறு அன்னை பராசக்தி தாராளமாக எடுத்து வழங்கிக் கொண்டே இருக்கின்றாள். உயிர்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் அவைகளின் வாழ்வுக்கேற்றவாறு அன்னை பராசக்தி தானே பொருத்தமானவைகளைப் பிரபஞ்சம் எங்கும் அமைத்து வைத் திருக்கின்றாள். ஆகவே, உடலைப் பேணுவதில் தொடங்கி முற்றி லும் ஆத்ம பரிபாகம் அடையும் பரியந்தம் ஜீவர்களுக்குத் தேவையான யாவற்றையும் அன்னை பராசக்தி சர்வகாலமும் வழங்கி வருகின்றாள்.

**अभ्यासातिशयज्ञाता — அப்யாஸாதிசயஞாதா ९९०**

அப்யாசத்தின் பெருக்கினால் நன்கு அறியப் படுகிறவள். 990

ஜீவர்கள் யாவரும் தாங்கள் வாழ்ந்து வரும் சூழ்நிலைகளைப் பற்றி அதிகம் தெரிந்துகொள்ள விரும்புவதற்கேற்றவாறு அவர் களுக்குத் தேவையான நல்லனவையும் சூழ்நிலை வசதியையும் நல்லறிவையும் அம்பிகை வழங்கி வருகிறாள்.

பௌதிக விஞ்ஞானத்துறையில் மக்கள் எடுத்துக்கொள்ளும் முயற்சிக்கு ஏற்றவாறு பிரபஞ்சத்தைப் பற்றிய ஞானம் விரிவடைந்து கொண்டே போகிறது. பிரபஞ்சப் பொருள்களைப் பயன்படுத்தும் முறைகளும் விரிவடைகின்றன. எத்துறையி லாவது எப்பொருளுக்காவது பஞ்சம் வந்துவிடாது என்பதே அந்த விஞ்ஞானிகளின் முடிவாம். ஒரு பொருள் மற்றொரு பொரு ளாக மாறியிருந்து பிரபஞ்சத்தில் இடம் பெறுகிறது. அது அழிந்துபட்டுப் போவதில்லை. கற்பாறையாக அமைந்து கிடக் கும் பொருளினின்று அற்புதமான கம்பளங்கள் செய்யலாம் என்று நவீன மனிதன் செய்து காட்டியிருக்கிறான்.

இவ்வுண்மை பர ஞானத்துக்கும் பொருந்தும். அம்பிகையின் அருளால் பர ஞானத்துக்கு நிகரானதும் எளிதில் அடையக் கூடிய தும் வேறெதுவும் இல்லை என்பதைக் குறித்து இக்காலத் தீர்க்க தரிசிகள் உறுதி கூறுகின்றார்கள். எல்லாத் துறைகளிலும் முயற் சிக்கேற்றவாறு ஜீவர்கள் முன்னேற்றம் அடைந்து வருகிறார்கள்.

அதற்கேற்ற உதவியையும் பராசக்தி கருணை கூர்ந்து நல்கி வருகின்றாள் என்பது இந்நாமத்தின் உட்பொருளாம்.

**षडध्वातीतरूपिणी — ஷடத்வாதீத ரூபிணீ ९९१**

ஆறு மார்க்கங்களுக்கும் அப்பாற்பட்டவள். 991

ஷண்மதங்கள் சைவம், சாக்தம், வைஷ்ணவம், காணபத்யம், கௌமாரம், சௌரம் என்பனவாம். இவை யாவும் வேதாந்தம் என்னும் அடிமரத்தினின்று கிளம்பி வந்துள்ள கிளைகள் எனலாம். ஓர் ஊரினின்று வேறு ஓர் ஊருக்குப் போவதற்கு வண்டி வாகனம் ஏதேனும் ஒன்றைப் பயன்படுத்துகிறோம். அவ்வூரை அடைந்தான பிறகு வண்டிக்கோ வாகனத்துக்கோ தேவையில்லை. அம்பிகையின் அருளால் அவளை அடையப் பெற்றவன் ஆறு சமயங்களுக்கும் அப்பாற்பட்ட பரதேவதையை அடையப்பெற்றவனாகிறான்.

**अव्याजकरुणामूर्तिः — அவ்யாஜ கருணாமூர்த்தி: ९९२**

இயல்பாகவே கருணை வடிவெடுத்தவள். 992

தன் டரிதாபகரமான மனநிலையை ஒருவன் கருணை காட்டுடவனிடம் தெரிவிக்கிறான். அவனும் தன்னால் இயன்ற உதவியைக் கேட்டவனுக்குத் தருகிறான். அன்னை பராசக்தி பக்தனுடைய பாங்கை இயல்பாகவே அறிகிறாள். அவனுக்குத் தேவையானவற்றை அவன் கேட்பதற்கு முன்பே அவள் வழங்குகின்றாள். உறங்குகின்ற குழந்தை விழித்தெழுந்தவுடன் பசியால் அழும் என்று அறிகின்ற தாய் அதற்குத் தேவையான உணவை முன்னதாகவே ஆயத்தப்படுத்தி வைக்கின்றாள். இது அவ்யாஜ கருணைக்கு அறிகுறியாகும். உலகில் பெண்பாலர் அனைவரும் அம்பிகையின் சொரூபங்களே. ஆதலால் தங்களிடத்து இயல்பாகவே அமைந்துள்ள கருணையைத் தங்கள் குழந்தைகளிடத்தும் உற்றார், உறவினர்களிடத்தும் உலகத் தாய்மார்கள்காட்டுகிறார்கள். கருணைக்குப் பாத்திரமாய் இருக்கின்ற நல்லவர்கள் எல்லாருக்குமே அவ்வாறு கருணை காட்டுவது தெய்விக சம்பத்தாகும். அதில் ஊறியிருக்கும் ஆத்ம சாதகர்களுக்கு அம்பிகை தன் கருணையைத் தங்கு தடையின்றித் தாராளமாய் எடுத்து வழங்குகின்றாள். அண்டநாயகியின் பாங்கு இத்தகையதாம்.

**अज्ञानध्वान्तदीपिका — அக்ஞானத்வாந்ததீபிகா** ९९३

அக்ஞான இருளை அகற்றும் தீபத்துக்கு ஒப்பானவள். 993

தெரிந்துள்ள ஒரு பொருளைக் கொண்டு தெரியாததை அறிந்துகொள்ளுதல் அறிவு வளர்ச்சிக்கு உற்ற உபாயமாம். காரிருளில் செய்கின்ற ஒருவனுடைய கைவிளக்கு அருகிலிருக்கும் சிறிது தூரம் மட்டும் ஒளியைப் பாய்ச்சுகிறது. நடந்து செல்பவனுக்கு அதுவே போதுமானது. அவன் நடந்து செல்லச் செல்லப் புதிய இடங்களும் கைவிளக்கின் வெளிச்சத்தால் அவனுக்கு விளங்குகின்றன. அன்னையின் ஞான ஒளி அத்தகையது. ஜீவகோடிகளின் அந்தக்கரணத்துக்குள் பிரக்ஞை என்னும் சுயப் பிரகாசத்துடன் அவள் வீற்றிருக்கிறாள். அந்தப் பேரறிவு மயமான பெரிய பொருளின் துணையைக் கொண்டு உயிர்களனைத்தும் படிப்படியாக முன்னேற்றம் அடைகின்றன. 'யானேதும் அறியாது என் உள்ளத்தினுள் வந்து நல்லனவும் தீயனவும் காட்டாநின்றாய்' என்பது ஆன்றோர் வாக்கு. அம்பிகை மனச்சட்சியாய் இருந்துகொண்டு தீயதை விளக்கிக்காட்டியும் கீழான இயல்புடையவர்கள் அதை ஏற்றுக்கொள்ளாது தீய வழியில் சென்று தங்களுக்குத் தாங்களே உபத்திரவத்தைத் தேடிக்கொள்கின்றனர். ஆனால் முற்றிலும் அன்னையைச் சார்ந்திருப்பவர்கள் அவள் ஓயாது காட்டிவருகின்ற நல்வழியில் செல்வார்களானால் அவர்கள் விரைவில் முன்னேற்றமடைவது சாத்தியம். இக்கோட்பாட்டை ஆத்ம சாதகர்கள் யாண்டும் ஞாபகத்தில் வைத்துக் கொள்வார்களாக.

**आबालगोपविदिता — ஆபாலகோபவிதிதா** ९९४

குழந்தைகளும் இடையர்களும் உட்பட எல்லாரும் எளிதில் அறிந்துகொள்ளக்கூடியவள். 994

சிற்றுயிர்களும் கூடத் தங்கள் வாழ்விற்குத் தேவையாயிருக்கும் இயற்கையின் சூழ்நிலையைப்பற்றிய அறிவைத் தங்கள் போக்கில் பெற்றுள்ளன. கண்ணில்லாச் சிற்றுயிர்களும் தொட்டுணரும் நீண்ட அவயவங்களை உடைத்திருக்கின்றன. அண்டமெங்கும் எல்லாப் படித்தரங்களிலும் இருந்து வரும் உயிர்களனைத்தும் தம் ஆற்றலுக்கேற்றவாறு வாழ்க்கையை வெற்றிகர

மாகக் கொண்டுசெலுத்துகின்றன. அறிவுத்துறையில் மேல் நிலைக்கு வரவர அன்னையின் மகிமையைத் தெளிவுற அறிந்து கொள்ளும் திறமையும் உயிர்களுக்குத் தானாக வந்தமைகிறது. ஆதலால் வாழத் தெரியாமல் திண்டாடுகின்ற உயிர் ஏதும் பிரபஞ்சத்தில் இல்லை. ஆதலால்தான் குழந்தைகளும் இடையர்களும் உட்பட எல்லாரும் அறிந்துகொள்ளும் பாங்குடையவளாக அம்பிகை மிளிர்ந்துகொண்டிருக்கிறாள்.

**सर्वानुल्लङ्घ्यशासना — ஸர்வானுல்லங்க்யசாஸனா** ९९५

யாரும் மீறமுடியாத கட்டளையை உடையவள். **995**

பௌதிக விஞ்ஞானம் இயற்கையின் பாங்குகள் பலவற்றை இன்றைக்கு வென்று வருகிறது. வானவெளியில் சஞ்சரிப்பதும் பயணம் போவதும் இயற்கைத்தாயின் திட்டத்தில் மானுட வர்க்கத்துக்கு இல்லை என்று சிறிது காலத்துக்கு முன்பு மனிதன் நம்பி வந்தான். வெட்டவெளிச் சஞ்சாரத்தை இன்று மனிதன் சர்வ சாதாரணமாய்ச் செய்துவருகிறான். இயற்கையின் கூறுகள் வேறு; அன்னையின் ஆணை வேறு. இயற்கையின் கூறுகளை மனிதன் வேண்டியவாறு மாற்றியமைக்கலாம். மற்று, மனிதனுடைய இன்ப துன்பங்களை மாற்ற அவனுக்கு இம்மியளவும் இயலாது.

பௌதிக விஞ்ஞானம் மனிதனுக்குப் பண்ணுகின்ற பணிவிடைகளின் வாயிலாக அவனுடைய இன்பம் அதிகரிப்பதற்கு ஏற்பத் துன்பமும் அதிகரிக்கின்றது. மனிதன் வேண்டுகின்ற துன்பம் கலவாத இன்பத்தை நல்குவது அம்பிகைக்கே சாத்தியம். அன்னையின் திட்டத்தை மீறி அவன் எதையும் சாதிக்க முடியாது. தேவர்கள் அசுரர்களை வென்றுவிட்டதாகக் கர்வம் பூண்டனர். அப்பொழுது அதிசயமான மூர்த்தி ஒன்று அவர்களுக்கெதிரில் தென்பட்டது. அதை அறிந்துகொள்ளச் சென்ற அக்னி தேவனின் வல்லமை யாது என்று அந்த மூர்த்தி கேட்டது. எதை வேண்டுமென்றாலும் தகித்துச் சாம்பலாக்கும் திறமை தனக்கிருப்பதாக அவன் தெரிவித்தான். ஒரு துரும்பை அவன் எதிரில் போட்டு அதைத் தகிக்கும்படி அந்த மூர்த்தி ஆக்ஞாபித்தது. அதில் தோல்வியடைந்தான் அக்னிதேவன். அத்துரும்பை இடத்தை விட்டு அசைக்க வாயுதேவனுக்கு இயலவில்லை. இங்

னம் இந்திரன் உட்பட எல்லாத் தேவர்களும் தோல்வியடைந்தனர். அந்த மூர்த்தி அழகு வாய்ந்த அன்னை பராசக்தியாய் வடிவெடுத்தது. தானும் பிரம்மமும் ஒன்று என்னும் உண்மையை அவள் தெரிவித்தாள்.

மூர்த்திகள் இரண்டு எனினும் சக்தியும் சிவமும் ஒன்றே. அம்மூலப் பொருளைச் சார்ந்திருப்பது ஒன்றே மனிதன் புரிகின்ற செயல்கள் அனைத்திலும் தலை சிறந்ததாம். அதற்கேற்ப இம்மை மறுமைக்குரிய சம்பத்துக்கள் அனைத்தும் மனிதனுக்கு வந்து வாய்க்கின்றன. அன்னையின் ஆணைக்குப் புறம்பாக ஓர் அணுவையும் அசைக்க மனிதனுக்கு இயலாது என்பது கோட்பாடு.

**श्री चक्रराजनिलया — ஸ்ரீ சக்ரராஜ நிலயா ९९६**

ஸ்ரீ சக்கரத்தில் நன்கு வீற்றிருப்பவள். **996**

பிரபஞ்சத்தின் தொகையே ஸ்ரீ சக்ரமாகிறது. அதற்கு நிகராக ஆன்றோர்களால் வரையப்பட்ட ஸ்ரீ சக்கரம் ஒன்று உள்ளது. ஒரு தேசத்தின் அமைப்பை தேசப் படத்தின் வாயிலாக ஓரளவு அறிந்துகொள்ள முடியும். வரையப்பட்ட ஸ்ரீ சக்கரம் இயற்கை என்னும் அசல் சக்கரத்தை ஓரளவு விளக்குகிறது. ஸ்ரீ சக்கரத்தில் ஒரு திரிகோணம் தன்னளவில் நிறைநிலை எய்தியுள்ளது. அதே முக்கோணம் தன்னைவிடப் பெரிய மற்றொரு திரிகோணத்தின் அம்சமாக அமைந்துள்ளது.

அண்டத்தில் உள்ள ஒவ்வொரு பகுதியும் தன் செயலை இனிது நிறைவேற்றுகிறது. அதற்கிடையில் ஏனைய வடிவங்களின் செயல்களுடன் முரண்படாது அண்டத்திலுள்ள அனைத்தும் இயங்கி வருகின்றன. ஸ்ரீ சக்கரத்தில் வட்டங்கள் ஒன்றனுள் ஒன்று புதைந்திருப்பதன் வாயிலாக ஒவ்வோர் அண்டமும் ஏனைய அண்டங்களோடு பிணங்கிக் கொள்ளாது தன் செயலை நிறைவேற்றி வருவதை விளக்குகின்றது. வரையப்பட்ட ஸ்ரீ சக்கரத்தில் பூஜா முறைப்படி அம்பிகையை ஆவாஹனம் பண்ணுகிறோம். ஆனால் இயற்கை என்னும் ஸ்ரீ சக்கரத்தில் அவள் யாண்டும் இனிது வீற்றிருக்கிறாள். ஆகையால் ஆவாஹனம் பொருளற்றது. இயற்கை முழுவதும் அம்பிகையின்

சொருபமே. இயற்கையோடு சாதகன் வைக்கின்ற இணக்கமே சிறந்த வழிபாடு ஆகிறது. நலத்தைப் பேணுதலும் கேட்டை நிராகரித்தலும் அம்பிகை வழிபாடாம்.

மக்களுள் நல்லவர்களோடும் கெட்டவர்களோடும் சாதகன் ஒருவன் கொள்ளும் நல்லிணக்கம் ஸ்ரீ சக்கரராஜனை வழுத்துதற் குற்ற உபாயமாம். காணப்படுகின்ற யாவும் அம்பிகையின் மயமே யாம் என்னும் உண்மை ஆத்ம சாதகனின் பரிபாகத்துக்கேற்பத் தெளிவாக விளங்குகிறது.

**श्रीमत् त्रिपुरसुन्दरी** — ஸ்ரீமத் த்ரிபுரஸுந்தரீ ९९७

முப்புரங்களையும் அலங்கரித்துக் கொண் 997
டிருப்பவள்.

பூலோகம், புவர்லோகம், சுவர்க்கலோகம் ஆகியன முப்புரங் களாகின்றன. பூலோகத்தில் உள்ள மக்களைவிடப் பரிணமத் தில் சற்றுப் பெரிய நிலைக்கு வந்துள்ள கின்னரர்கள், தேவர் கள் முதலியவர்கள் புவர்லோகத்தில் வசிப்பதாக ஐதிகம் உள்ளது. இந்த இரண்டு உலகத்தவர்களும் நாடுகிற பெரிய நிலை சுவர்லோகமாகும். பூலோகம் இன்பதுன்பம் நிறைந்தது. புவர் லோகத்தில் இன்பம் அதிகம்; துன்பம் குறைவு. சுவர்லோகத் தில் துன்பத்துக்கு இடமில்லை. உலகங்கள் அனைத்தும் கிட்டத் தட்ட திட்டத்தில் ஒன்றாக உள்ளன.

பூலோகத்தில் வேண்டியவாறு சௌந்தர்யம் அமைந்திருப் பது வெளிப்படை. இங்கு எப்பொருளை ஆராய்ந்து பார்த்தாலும் அதனிடத்து அழகு பொலிகிறது. வெறும் பாலைவனம், அமாவாசை இருள் ஆகியனவும் தம் போக்கில் அழகுடன் திகழ் கின்றன. மனிதனுடைய மனதைக் கவரவல்லதெல்லாம் தெய் வீகம் பொருந்தியது எனக் கருதித் தியானம் பண்ணவேண்டும். விவேகத்தின் துணைகொண்டு பார்ப்பவர்களுக்கு அன்னையின் சான்னித்தியத்தைத் தவிர இவ்வுலகில் வேறு எதுவும் இல்லை.

ஜாக்ரதம், சொப்பனம், சுஷுப்தி ஆகிய அவஸ்தைகள் முப் புரங்கள் எனப்படுகின்றன. நல்லுறக்கத்தில் மனிதன் ஆத்ம சொருபத்தில் திளைத்திருக்கிறான். அது கிட்டத்தட்ட ஜடநிலை

போன்றது. இம்மூன்று அவஸ்தைகளுள் அம்பிகை யாண்டும் நிலைத்திருந்து ஜீவர்களுடைய வாழ்க்கைக்கு அழகையும் மங்களத்தையும் தருகின்றாள்.

பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மும்மூர்த்திகளும் திரிமூர்த்தி ஆகின்றனர். திரிமூர்த்தியின் சரீரம் திரிபுரம் என இயம்பப்படுகிறது. பிரபஞ்சம் முழுவதும் ஒன்று சேர்ந்து திரிபுரமாகிறது. எங்கும் நிறைந்துள்ள புவனங்களுக்குச் சோபையை வழங்கிக் கொண்டிருக்கும் அம்பிகை திரிபுரசுந்தரீ எனப் பெயர் பெற்றுள்ளாள்.

**श्री शिवा — ஸ்ரீசிவா** ९९८

சிவனுக்குப் புறம்பாயில்லாத சக்தியாய் இலங்குபவள். 998

சிவம் வேறு சக்தி வேறு அன்று. சிவனுக்குரிய மகிமைகள் அனைத்தும் அம்பிகைக்கும் சொந்தம். ஒரே பொருள் சிவனாகவும் சிவா என்று பெண்பாலாகவும் வைத்து வணங்கப்படுகிறது. பால் வேறுபாட்டைக் கடந்துள்ள ஆத்மாவை ஆணாகவோ பெண்ணாகவோ வைத்து வழிபடுகின்ற ஆத்மசாதகன் பால்வேற்றுமையைத் தாண்டிப் பரத்தில் ஒன்றுபடுகிறான்.

**शिवशक्त्यैक्य रूपिणी — சிவசக்த்யைக்ய ரூபிணீ** ९९९

சிவனும் சக்தியும் ஐக்கியமாயுள்ள வடிவத்தை உடையவள். 999

நாம் உச்சரிக்கும் மொழிகளும், எல்லாவகையான உயிர்களும் சிவசக்தி ஐக்கியத்தின் விளைவாகின்றன. உயிர் எழுத்துக்கள் சிவசொரூபமாகவும் மெய் எழுத்துக்கள் சக்தி சொரூபமாகவும் உள்ளன. உயிரற்ற உடல் பிணமாகக் கருதப்படுகிறது. பிரகிருதி தத்துவம் தனக்குரிய மதிப்பைப் பெறுதற்பொருட்டுப் புருஷ தத்துவத்தைச் சார்ந்திருத்தல் வேண்டும். இது ஓசையைப்பற்றிய கோட்பாடு. உயிர்வகைகள் யாவும் உயிரும் உடலும் பெற்றுள்ளன. ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பிரித்தெடுத்

தால பயன் ஒன்றுமில்லை. எனவே பிரபஞ்சம் எங்குமுள்ள உயிர்கள் சிவசக்தி ஐக்கிய சொருபங்களாம்.

மனிதனிடத்து அமைந்திருக்கும் ஆத்மசொருபம் சிவத்தின் கூறுகிறது. அவன் படைத்துள்ள சரீரம் சக்தியின் கூறு ஆகிறது. அவனுடைய சரீரத்தில் ஸ்தூலசரீரம், சூட்சும சரீரம், காரண சரீரம் என்று மூன்று கூறுகள் உள்ளன. பழுதுபட்டுப்போன ஸ்தூல உடலைக் களைதல் மரணம் எனப்படுகிறது. சூட்சும சரீரத்தையும், காரண சரீரத்தையும் முகாமையாகக்கொண்டு அந்த ஜீவன் தனக்குத் தக்க சந்தர்ப்பம் வாய்க்கின்றபொழுது மற்றொரு ஸ்தூல சரீரத்தை அமைத்துக்கொள்கிறான். எனவே, ஜீவாத்மனுக்கு ஜீவ வியக்தி இருக்கும்வரை அவன் சிவ சக்தியின் ஐக்கியமாகவே இருந்து வருகிறான். என்றைக்கு மனிதன் தன் மூன்று சரீரங்களையும் தாண்டி அப்பால் செல்கின்றானோ அன்றைக்கு அவன் சுத்த சிவம் ஆகின்றான். அப்பொழுது சக்தியின் கூறு சிவத்தில் ஒடுங்கிவிடுகின்றது.

## ललिताम्बिका — லலிதாம்பிகா ௧000

ஸ்ரீ மாதா என்று தொடங்கும் அம்பிகையின் 1000 திருநாமங்கள் லலிதாம்பிகா என முடிவுறுகின்றன.

அண்டகோடிகள், ஜீவகோடிகள் அனைத்தையும் சர்வகாலமும் தோற்றுவித்துக்கொண்டிருப்பவள் அன்னை பராசக்தி. எனவே அவள் ஸ்ரீ மாதா என்னும் பெயர் பெறுகின்றாள். அகண்டமாக விரிந்தோடும் ஜகத்தையும் ஜீவகோடிகளையும் தோற்றுவிப்பதில் அவளுக்குச் சிரமம் ஏதும் இல்லை. விளையாட்டாக அவற்றை உண்டாக்கிக்கொண்டிருக்கும் அவளுக்கு லலிதாம்பிகை என்னும் பெயர் அமைந்திருப்பது பொருத்தமானது. பிரபஞ்சச் செயல்களில் எங்கெல்லாம் லலிதத்தைக் காண்கிறோமோ ஆங்கெல்லாம் அன்னையின் சான்னித்தியம் ஸ்பஷ்டமாக மிளிர்கிறது. தலையில் பெரிய சுமையைக்கொண்டு போகின்ற மனிதன் ஒருவன் அந்தச் சுமையை மறந்துவிட்டு வழியில் சிறுவர்களின் விளையாட்டைச் சிறிது நேரம் நின்று வேடிக்கை பார்த்துவிட்டுப் போகின்றான். அன்னையின் சக்தி அவனிடத்து ஓங்கியிருப்பதால் அவன் தன் காரியத்தை லலிதமாகச் செய்து சாதிக்கிறான்.

பேசுகின்ற மானுடன் ஒருவன் தங்குத் தடையின்றித் தன் கருத்துக்களைத் தெளிவாக எடுத்துக் கூறுகின்றான். அவனுடைய டைய பேச்சில் லலிதம் ததும்புகிறது. கலைமகளின் சான்னித்தியம் அவனுடைய நாவில் குடிகொண்டிருக்கிறது எனலாம்.

கலைகளுள் லலித கலைகள் (Fine Arts) என்பன சில இருக்கின்றன. ஓவியம், காவியம், இசை, நாட்டியம், சிற்பம் போன்றவைகளைச் சிறப்பும் அழகும் நிறைந்த நுண்கலைகள் என்று கூறுகிறோம். பாடுகின்ற பாடகன் ஒருவன் தன் கண்களைப் பிதுக்கிக் கீழே விழும்படி வைத்திருப்பானாகில் அது ' லலித கலை ஆகாது. வாயை விகாரமாகச் சுளித்துக்கொண்டிருந்தாலும் முகத்தை விதவிதமாகக் நீட்டிக்கொண்டும் திணறிக்கொண்டும் பாடினாலும் அது லலித கலை ஆகாது. அவனுடைய முகத்தில் இனிமையும் சாந்தமும் அழகும் சொட்டுதல் வேண்டும். அவனுடைய பாடலிலே ராகம், தாளம் ஆகியன முறையாக அமைந்திருக்குமாகில் அவனுடையது லலித கலையாகிறது. அத்தகைய கலையை ரசிப்பது லலிதாம்பிகையின் வழிபாட்டுக்கு நிகராகிறது.

களிமண்ணினின்று வளைந்து எடுக்கப்படும் வடிவம் ஒன்றின் முகத்தில் கோபம், கருணை, விசனம், மகிழ்ச்சி, பொறாமை, ஏமாற்றம் முதலிய மெய்ப்பாடுகள் விளக்கமாக அமைந்திருக்க வேண்டும். அப்பொழுது அது சிறந்த கலையாகிறது. கல்லினுள் மறைந்திருக்கின்ற தேவதையை வெளிப்படுத்த வல்லவன் அம்பிகையின் அனுக்ரஹத்தைப் பெற்றிருக்கிறான் எனலாம். பொருத்தமான கற்பாறையினின்று தெய்விகம் திகழும் வடிவங்களைச் செதுக்கி எடுப்பது லலிதகலை ஆகிறது. காகிதத்தில் ஒருவன் வரையும் சில கோடுகளைப் பார்த்தவுடன் அது யாருடைய வடிவம் என்று பார்ப்பவர்கள் அறிந்துகொள்கின்றனர். அதுவும் லலித கலையாம். படம் தீட்டும் நிபுணன் வரையும் இயற்கையின் பாங்கு 'இது சித்திரமா அல்லது இயற்கையின் உண்மைச் சொரூபமா' என்று சந்தேகம் கொள்ளுமாறு இருக்குமாயின் அது லலித கலையாம். நடிக்கின்ற நாடகம் நடிப்பா அல்லது உண்மை நிகழ்ச்சியா என்று கண்டுபிடிக்க முடியாவண்ணம் இருந்தால் நடிப்பவன் லலிதகலை படைத்தவனாகிறான் உடல் அசைவில் உணர்ச்சி

ததும்பும் பல கருத்துக்கள் வெளிப்படுமாகில் அது அற்புதமான நடனமாகிறது. இது சிறந்த லலித கலையாம். சிவதாண்டவமே அதற்கு அத்தாட்சியாகிறது. அன்னையின் திரு நடனம் இயற்கையின் நடைமுறைக்கு எடுத்துக்காட்டாகின்றது.

அண்டங்களை உண்டுபண்ணுவதிலும், அவற்றை நிலைத்திருக்கச் செய்வதிலும், ஒடுக்குவதிலும் தன் திறமைகள் அனைத்தையும் காட்டி விளையாட்டுப் போன்று அம்பிகை செய்து சாதிக்கிறாள். எனவே, லலிதாம்பிகை என்று அவளைப் போற்றுவது முற்றிலும் பொருத்தமானது.

---

## ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம் ( திருப்பராய்த்துறை)

வழங்கும்

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

இயற்றிய நூல்களின் விலைப்பட்டியல்

| தலைப்பு | தேவை | விலை |
|---|---|---|
| திருவாசகம் | | 55-00 |
| ஸ்ரீமத் பகவத் கீதை | | 46-00 |
| ஸ்ரீமத் பகவத் கீதை (தெலுங்கில்) | | 70-00 |
| ஸ்ரீ தாயுமான சுவாமி பாடல்கள் | | 17-00 |
| மஹாபாரதம் | | 16-00 |
| இராமாயணம் | | 14-00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்சரி | | 15-00 |
| தினசரி தியானம் | | 11-00 |
| ஞான யோக விளக்கம் | | 25-00 |
| கர்ம யோக விளக்கம் | | 23-00 |
| பக்தியோக விளக்கம் | | 22-00 |
| ராஜயோக விளக்கம் | | 18-00 |
| பரமஹம்சரின் பெருமை | | 20-00 |
| கல்வி | | 17-00 |
| கடவுளின் வடிவங்கள் | | 15-00 |
| தமிழகத்தில் சுவாமி விவேகானந்தர் | | 15-00 |
| விவேகானந்த விவரணம் | | 15-00 |
| விவேகானந்தம் | | 15-00 |
| ஸ்ரீமத் பகவத் கீதை (பாராயண கீதை) | | 15-00 |
| ஸ்ரீ விவேகானந்த ஜீவிதம் | | 14-00 |
| விவேகானந்த உபநிஷதம் | | 12-00 |
| அருள்விருந்து - முதல் பாகம் | | 11-00 |
| அருள்விருந்து - இரண்டாம் பாகம் | | 14-00 |
| சந்தேகம் தெளிதல் - முதல் பாகம் | | 10-00 |
| சந்தேகம் தெளிதல் - இரண்டாம் பாகம் | | 11-00 |
| பராய்த்துறை மேவிய பரமபுருஷர் | | 10-00 |
| எதிர் கால இந்தியா | | 10-00 |
| அகமுக வாழ்வு | | 10-00 |
| சகோதரி நிவேதிதை | | 9-00 |
| விஷ்ணுவின் ஆயிரம் திருநாமங்கள் | | 8-00 |
| சிவனின் ஆயிரம் திருநாமங்கள் | | 7-00 |
| அம்பிகையின் ஆயிரம் திருநாமங்கள் | | 8-00 |
| கணபதியின் ஆயிரம் திருநாமங்கள் | | 8-00 |
| முருகனின் ஆயிரம் திருநர்மங்கள் | | 8-00 |
| சூரிய நாராயணனின் ஆயிரம் திருநாமங்கள் | | 8-00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் ஆயிரம் திருநாமங்கள் | | 8-00 |

| | | |
|---|---|---|
| மாணவர் பாமாலை | | 7-00 |
| கண்ணன் என்னும் கடவுள் | | 7-00 |
| அனுஷ்டான வேதாந்தம் | | 7-00 |
| சுவாமி விவேகானந்தர் | | 7-00 |
| பரிபூரணர் ஸ்ரீ ராமகிருஷ்ணர் | | 8-00 |
| ஆத்மபோதம் | | 8-00 |
| பஜனைப் பாடல்கள் | | 6-00 |
| நவத் திருப்பதிகளும் ஆழ்வார்களின் வரலாறும் | | 8-00 |
| மாணவருக்கு ஒரு சொல் | | 7-00 |
| சந்நியாசி | | 7-00 |
| உலகை உய்வித்த உத்தமன் | | 7-00 |
| முண்டகோபநிஷத் | | 7-00 |
| ஞானரதம் — | | 6-50 |
| விவேகானந்தர் வாழ்விலே . . . | | 6-00 |
| ஸ்ரீசாரதா தேவியாரது சரிதம் | | 6-00 |
| அறம் வளர்த்த நம்பி | | 7-00 |
| ஸப்த ஸ்தான ஸ்தலங்களின் மகிமை | | 4-00 |
| கவிச் சக்கரவர்த்தி கம்பன் | | 3-50 |
| தாயுமானவர் இயற்றிய பராபரக்கண்ணி | | 22-00 |
| தாயுமானவர் இயற்றிய ஆனந்தமானபரம் | | 11-00 |
| தாயுமானவர் இயற்றிய சின்மயானந்த குரு | | 10-00 |
| தாயுமானவர் இயற்றிய சுகவாரி | | 9-00 |
| தாயுமானவர் இயற்றிய மௌனகுரு வணக்கம் | | 9-00 |
| தாயுமானவர் இயற்றிய பரிபூரணானந்தம் | | 7-00 |
| ,, இயற்றிய எங்கும் நிறைகின்ற பொருள் | | 6-00 |
| தாயுமானவர் இயற்றிய பரசிவ வணக்கம் | | 2-00 |
| தாயுமானவர் இயற்றிய மலைவளர் காதலி | | 5-00 |
| ஸ்ரீமத் பகவத் கீதை (முன்னுரை) | | 5-00 |
| காயத்ரீ | | 4-00 |
| திருப்பாவை திருவெம்பாவை | | 4-00 |
| சைவன் யார்? | | 4-00 |
| ஆலய வழிபாடு | | 3-00 |
| சக்தி தத்துவம் | | 3-00 |
| தவப் புதல்வர்கள் | | 5-00 |
| மனிதனது நிஜசொரூபம் | | 2-00 |
| நன்மக்களைப் பெறுதல் | | 5-50 |
| ஆன்றோர் அருள்வாக்கு | | 2-50 |
| பாதுகாபட்டாபிஷேகம் (நாடகம்) | | 7-50 |
| ஹரிச்சந்திரன் ,, | | 7-50 |
| விரத வீரர் பீஷ்மர் ,, | | 5-00 |
| பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி கர்வபங்கம் ,, | | 3-50 |
| தபோபலன் ,, | | 3-50 |

